# இங்கிலந்து தேச
## சரித்திரம்



சுதேசமஹாசர்வகலாசாலை
திருவல்லிக்கேணி, சென்னை.

# இங்கிலந்து தேச

## சரித்திரம்

சுதேச மஹா சர்வகலாசாலை
திருவல்லிக்கேணி, சென்னை.



1929.

# AN APPRECIATION.

I am just in receipt of a copy of the History of England published in Tamil by the Oriental Home University and I have very great pleasure in introducing this treatise to the young scholars. This is a delightful work containing all the intricate ideas expressed in clear and lucid Tamil. To transform the European names of men, women, and places into suitable Tamil garbs is naturally, owing to phonetic defects of Tamil, a very difficult thing. The students should first be made aquainted with the necessary alterations or additions and the public should also be made to approve the plan in practice. This has been taken into consideration and the western names are given in as scientific a manner as possible by making the necessary alterations in the characters. Four letters have been added to the Tamil alphabet in order to arrive at a correct pronunciation of western names and I find that all the changes that have been made can be easily and at a glance understood by the boys. The difficulty of presenting a difficult subject to young students in an intelligible method has been successfully overcome. English History is full of technical terms and particulars in the field of politics, constitution-making, and constitutional development. Parliamentary terms have been put in a language

which is dignified and, at the same time, easily understood. Very often, in Tamil books, words in translations are more obscure than the originals and in fact have to be understood from the originals and that defect is not at all to be found in this translation which is both intelligible and refined.

As regards, the subject matter, it can be easily seen that the book is full of details—far more detailed than the other text books in the market. While it gives larger details, it is at the same time more lucid. The language is simple and elegant. The student can follow the narration of events with ease and pleasure. The maps, charts, and tables are welcome aids. Altogether this attempt to place English History in the hands of the High School students is, it seems, to me, a highly successful one, and the publishers certainly deserve encouragement in such a pioneer attempt. Similar works on every subject are badly needed.

A. S. RAMACHANDRA PUNTH, B.A., L.T.
TRIPLICANE, MADRAS

---

# முன்னுரை.

புண்ணிய பூமியான நமது இந்தியாவில் கடவுள் கண்கூடாய்க் காட்சி கொடுப்பது போன்ற சன்னிதானங்களைக் கொண்ட எத்தனையோ க்ஷேத்திரங்கள் இருக்க, அவைகளது மான்மியங்களையும் ஸ்தலபுராணங்களையும் வெளியிடுவதைவிட்டு, இந்த நாட்டிற்குப்பல்லாயிரம்மயில் தூரத்தில் வடமேற்குதிக்கில் உள்ள சிறியதீவுகளான இங்கிலீஷ்காரர்து நாட்டின் சரித்திரத்தை, இந்த சுதேச மகா சர்வகலாசாலையார் அரும்பாடுபட்டுத் தமிழில் ஆக்கி வெளியிடவேண்டிய அவசியம் என்ன என்ற சந்தேகமும், இதைத் தமிழ் நாட்டார் என்ன காரணத்திற்காகப் படிக்கிறது என்கிற கேள்வியும் பிறப்பது சகஜமே. அதுவன்றி, தற்கால உலகத்தில், ப்2ரான்ஸ், ரஷ்யா, ஜெர்மனி, டர்க்கி, ஜப்பான், சைனு முதலிய இதர நாடுகள் இருக்க, அவைகளது சரித்திரங்களைவிட, முக்கியமாக, நம் நாட்டார் இங்கிலந்து தேச சரித்திரத்திற்கு முதன்மை கொடுத்து, அதை இவ்வளவு அவசரமாயும், அவசியமாயும் படிப்பதற்குரிய நிமித்தம் என்ன என்ற வினவும் எழலாம். ஆகவே, நாம், ஷெ சரித்திரத்தை விவரிக்கத் தொடங்குமுன், மேலே குறிக்கப்பட்ட ஐயங்களுக்கு சுருக்கமாக சமாதானங் கூறுவது நமது கடமையாகிறது.

இரண்டு சிறிய தீவுகளின் தொகுதியான ப்ரிட்டிஷ் தீவுகள் ஐரோப்பாக்கண்டத்தின் வடமேற்கு திக்கில் சுமார் 20 மயில் அகலமுள்ள கடலிற்கு அப்பால் இருப்பவை. அவற்றின் மொத்த விஸ்தீர்ணம் 121,000 சதுரமயில் ஆனுலும், சென்ற 400 வருஷகாலத்தில், அத்தீவுகளின் ஜனங்கள் அவற்றின் விஸ்தீரணத்தைக் காட்டிலும் நூறுமடங்கு பெரியதும், ஐரோப்பாக் கண்டத்தைவிட மூன்று மடங்கு பெரியதும், 13, 800,000 சதுரமயில் விஸ்திரணமுள்ளதுமான பிரம்மாண்டமான ஸாம்ராஜ்யத்தைத் தமது வசப்படுத்திப் மகா சிறந்த மேதாவிகள் என்று உலகத்தோர் அனைவரும் மதித்து, போற்றுமாறு, சகலமான கலைகளிலும், வித்தைகளிலும் தேர்ச் பெற்று, அரசாட்சி புரிவதில் நிபுணர்களாய், நாகரிகத்தில் முதன்மையடைந்தவர்களாய், சூரியன் அவர்களது ஸாம்ராஜ்யத்தில் அஸ்தமிக்

கிறதே இல்லையென்று புகழப்படுவதற்கிணங்க உலகத்தின் எல்லாக் கண்டங்களிலும் தங்களது செங்கோலை நிலைநாட்டி, தங்களது நாடு உலகத்தின் பூபாகத்திற்கே நடுநாயகமாய் அமைந்து விளங்கும்படி செய்து ஒப்புயவர் வற்ற மகோன்னத பதவியில் இருக்கின்றார்களென்றால், தெய்விகமான அத்தகைய பெரும்பேறு திடீரென்று அவர்களுக்குக்கிடைத்தவரலாற்றைப்படித்தறியஆவல்கொள்ளாதவர்களும் இருப்பார்களோ? கவிவாணர்களால், சிரேஷ்டமானதென்று புகழப்பெற்ற இராஜ்யங்கள் யாவற்றிலும், இந்த பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் மகா சிலாக்கியமானது. பண்டைக்காலங்களில் இருந்து விளங்கிய ரோம் ராஜ்யம் விஸ்தீரணத்தில் இந்தஇங்கிலீஷ் ஸாம்ராஜ்யத்தில் எழில் ஒரு பங்கே இருந்தது. மற்றும், டர்க்கி ராஜ்யம், மங்கோல் ராஜ்யம், ஸ்பெயின் ராஜ்யம், சீனர்களின் ராஜ்யம் ஆகிய புராதன ராஜ்யங்கள் இதற்கு சுமார் மூன்றில் ஒரு பங்கேதான் இருந்தன. இப்பொழுதோ, உலகத்தில், இங்கிலீஷ் பாஷைபேசாத இடமும், இங்கிலீஷ்காரர்கள் இராத இடமும், இங்கிலீஷ் கொடி, சமீபத்திலாவது, பறக்காத இடமும், இங்கிலந்தில் வெளிவராத நூதன சாஸ்திர நூல்களும், அத்தீவுகளில் உற்பத்திசெய்யப்படாத நூதன வஸ்துக்களும், அவ் வஸ்துகள் பரவாத இடமும், இங்கிலீஷ் நாட்டின் மேம்பாட்டைக் கண்டு, தமது நாடு அவ்வித நிலைமையில் இல்லையே என்று பொறாமைகொண்டு ஏங்காத நாடுகளும் இல்லையென்றே நாம் துணிந்து கூறலாம். அவ் தீவுகளின் சரித்திரம் உலகத்திலுள்ள மற்ற எல்லா பாஷைகளிலும் எழுதப்பட்டிருப்பதே அதன் தனிமேம்பாட்டிற்குத் தக்க வெளிப்படையான சான்றாகும்; உலகிலுள்ளோர் அனைவரும் மிகுந்தவேட்கையுடன் கற்றுத் தெரிந்துகொள்ளும் இந்தச் சரித்திரத்தை, நம் நாட்டிலுள்ளோர் மற்றவர்களைக் காட்டிலும் அதிக ஊக்கத்துடனும், ஆர்வத்துடனும் படிப்பது இன்றியமையாத கடமை என்பதற்கு இன்னொரு முக்கியமான காரணமுமிருக்கிறது. இடைக்காலத்தில், நமது நாட்டைப் பரிபாலித்த மோகலாயரது ஆட்சி சீர்குலைந்து க்ஷீணதசைக்கு வந்த காலத்தில், இந்நாடு கொள்ளைக்காரரது வசத்தில் அகப்பட்டு விவரிக்கவொண்ணாத துன்பங்களும் துயரமும் அடைந்து பரிதவித்திருந்த நாட்களில் வியாபாரிகளாய் வந்திருந்த இங்கிலீஷ்காரர்கள்

இந்த நாட்டைத் தமது வசப்படுத்தி, இதன் அரசாட்சியை வகித்து மேனாட்டு இராஜீய முறைகளையும், நாகரிக மார்க்கங்களையும் படிப் படியாய் நமது நாட்டில் ஸ்தாபித்து, எல்லா அம்சங்களிலும் நமது நாடு முன்னேற்றத்தையும், நிலைத்த ஒழுங்கான அரசாட்சியையும், க்ஷேமத்தையும்,பாதுகாப்பையும்,சுயமரியாதையையும் அடையும்படி செய்து, இதரநாடுகளுக்கு சமதையாக இதை உயர்த்தி, இன்னமும் நம்மைப் பரிபாலித்து வருகின்றனராதலால், நாம் அவர்களது சரித் திரத்தைப் படிப்பது அத்தியாவசியமானதாக இருக்கிறது.

அதுவன்றி, இங்கிலந்து தேசத்தின் சரித்திரம் கேவலம் ஓர் அரசருக்குப் பின் இன்னொருவர் ஆட்சி புரிந்ததன் விவரங்களும், போர்களின் விவரங்களுமாக மாத்திரம் இல்லை. ஆதிகாலத்துக் கொடுக்கோன்மையிலிருந்து, அந்த நாட்டின் பிரஜைகள் தங்களது அரசருடன் போராடிப் படிப்படியாய் ஜனநாயக தத்துவத்தை அந்த நாட்டில் எப்படி ஸ்தாபித்தார்களென்பதும், அவ்விடத்தில் தற்காலத்தில் ஏற்பட்டுள்ள அதியற்புதமான துரைத்தன அமைப்பு முறை நாளடைவில் எப்படி வளர்ந்து அபிவிருத்தியடைந்தது என் பதும் முக்கியமாக ஷை சரித்திரத்தில் அடங்கி இருக்கின்றன. அவ்விடத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள ஜனப்பிரதிநிதி சபையான பார்லிமென்டின் அமைப்பை அநேகமாய்ப் பின்பற்றியே இதர நாடுகளில் ஜனப்பிரதிநிதி சபைகள் அமைக்கப்பட்டிருப்பதுபற்றி, அது "பார்லிமென்டுகளின் தாய்" என்று புகழ்ச்சியாகக் குறிக்கப் படுகிறது. இப்பொழுது நமது நாட்டின் துரைத்தன அமைப்பும் அதைப் பின்பற்றியே ஏற்படுத்தப்பட்டு வருகிறது. இங்கிலீஷ் காரரது சம்பந்தம் நமக்கு நீடித்திருந்தாலும் இருக்கலாம், அல்லது, இனிவருங்காலத்தில் தெய்வாதீனமாய் அற்றுப்போனாலும் போக லாம். அது அவர்களது திரிகரணசுத்தியான நடத்தையைப் பொருத்ததாயிருக்கிறது. ஆகவே, அதை நாம் விட்டு, அவர்களது நாட்டின் சரித்திரத்தில் அடங்கியுள்ள மகா அரியவையான படிப் பினைகளையே பிரதானமாய்க் கருதி அவைகளை அவசியம் படித்துத் தெரிந்துகொள்ளக் கடமைப்பட்டவர்களாயிருக்கிறோம்.

பொருளிலார்க்கு இவ்வுலகமில்லையென்றும், அருளிலார்க்கு அவ்வுலகமில்லையென்றும் நமது முன்னோர்கள் கூறியிருக்கின்

றனர். நமது நாட்டிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களின் ஸ்தல புராணங்களைப் படித்து, நாம் கடவுளினருளைத் தேடுவதொன் றேமாத்திரம் இருந்துவிடுவது இனி சாத்தியமற்றதாகிவிட்டது. இதர நாடுகளின் இலௌகிகப் போராட்டமும், நாகரிகத்தின் பயனாய் ஏற்பட்ட வர்த்தகக் கொள்ளைகளும், பணப்பஞ்சமும் நாலா பக்கங்களிலும் சமுத்திர வெள்ளம்போலப் பொங்கி நம்மைச்சூழ்ந்து விழுங்கி விடுவதாய் அச்சுறுத்துகின்றன. இந்த நிலைமையில், நாம் பரலோக நாட்டத்தோடு மாத்திரம் இருந்துவிடாமல், இகலோகத் திற்குரிய முயற்சிகளிலும் ஈடுபடவேண்டியது விலக்கமுடியாத நோய்போலாகிவிட்டது. நாம் தற்கால நாகரிகமும், முன்னேற்ற மும் அடைய வேண்டுமானால்,நாம் குழந்தைபோலப் பிறாதுகையில் இருந்து வளர்வதைவிட்டு ஆண்பிள்ளைகளாய் மாறவேண்டுமானால், இங்கிலந்து தேசசரித்தைப்படித்து அதன் நற்போக்கைப் பின்பற்றி நடந்து உய்யவேண்டும். எனவே, நமது தமிழ் மக்கள் இந்தச் சரித் திரத்தைப்படித்தறிந்து கொள்வது முற்றிலும் அவசியமான காரிய மாயிருக்கிறது. இவை நிற்க, எந்த நாட்டின் சரித்திரத்தைப் படித் தாலும்படிப்போருக்குப்பொதுவானசில நன்மைகள் ஏற்படுவதுதிண் ணம்.அவைகளையும்நாம் இந்தச் சரித்திரப்படிப்பினால் அடையலாம்.

அவற்றில் முக்கியமானது உலக அநுபவம். இச்சரித்திரத்தில் அடங்கியுள்ள உலக வாழ்க்கையின் மர்மங்களை உதாரண மூலமாய் நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாமாதலால், இதை நாம் அநு பவஞான நூல் என்பதேகருதவேண்டும்.எவ்விடத்திலும் எப்பொழு தும் ஒரே தன்மைத்தா யமைந்துள்ள பலவகைப்பட்ட மனித ஜாதி யாாது இயல்புகளையும் குணாதிசயங்களையும் நாம் இதில் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெரிந்துகொள்ளுகிறோம். இது நமக்கு எக் காலத்திலும் வழிகாட்டியாயிருந்து, அளவற்ற பலன்களை யளிக்கத் தக்க நீதிகளை உதாரணமூலமாய் எடுத்துக்காட்டும் அநுபவ நீதிச் சுடராயிருக்கிறது. முன்னொரு காலத்தில் சில மாதிரியான சந்தர்ப் பங்களில் நடந்த சம்பவங்களை நாம் தெரிந்துகொண்டால், பிற்காலங் களில் அம்மாதிரியான சந்தர்ப்பங்கள் நேரும்பொழுது,என்னென்ன விஷயங்கள் நிகழும் என்பதை நாம் நிச்சயமாக யூகித்துத் தெரிந்து

கொள்ளலாம். இவ்வாறு, பழையகால அநுபவங்களிலிருந்து வருங் காலத்து சம்பவங்களை முன்னரே யூகித்துக் கொள்வதனல், ஏற்படும் நன்மைகள் அநந்தமானவையென்பது கூறுமலே விளங்கும். சுருங்கக் கூறுமிடத்து, அரசாட்சி முறைகளிலும், மதசம்பந்தமான விஷயங்களிலும், உலக வியவகாரங்களிலும், கல்வித் துறைகளிலும், திரவிய சம்பந்தமான விஷயங்களிலும், மற்றும் ஜனசமூகத்திற்குரிய சாஸ்திரங்களிலும், கைத்தொழில் முறைகளிலும், இராணுவத்துறைகளிலும், உலகத்திலுள்ளோர் அனைவருக்கும், முக்கியமாய் நம்நாட்டாருக்கும், இந்தச் சரித்திரம், கடலில் வழியறியாது தவிக்கும் கப்பல்களை தீபஸ்தம்பத்தின்மீதுள்ள விளக்கு எப்படி வழி காட்டி உய்விக்கிறதோ, அப்படியே பேருதவி புரிவதாயிருக்கிறது.

இது நிற்க, ஒரு தேசத்தின் சரித்திரத்தைப் படித்து, அதில் குறிக்கப்பட்டுள்ள உண்மையான வீரர்களது அரிய செயல்களையும், அவர்கள் தங்களது நாட்டின் பொருட்டு செய்த தியாகங்களையும்' உணர்வதனல், நமக்கு நம்முடைய நாட்டின் மீது ஒருவித தேசாபிமானமும், நம்மவர் என்ற சமூகப் பற்றுதலும் உண்டாவதன்றி, நாமும் நமது நாட்டின் பொருட்டு நமது உடல் பொருளாவிகளைக் கொடுத்தேனும், இதை மற்ற நாடுகளுக்குச் சரியானதாக உயர்த்த வேண்டுமென்ற வீராவேசமும் திடசங்கல்பமும் எழுகின்றன. அழியாப் புகழ்படைத்த வீரர்கள் சம்பந்தப்பட்ட இடங்களைப் பார்க்குந்தோறும் நமக்கு உரோமம் சிலிர்க்கிறது. பழைய சம்பவங்கள் இப்பொழுதே கண்முன் நடப்பன போல நமக்குப் புலனுகின்றன. அவர்களது குணுதிசயங்களும் வீரமும் அகக்கண்ணில் தோன்றத் தோன்ற, நாமும் புத்துயிர் பெற்றவராகிறோம். நமது ஊக்கமும் முயற்சியும் அதிகரிக்கின்றன.

இது நிற்க, நாம் நமது நாட்டை விட்டு, அன்னிய நாடுகளுக்குச் சென்று பிரயாணம் செய்தால், அவ்விடத்தில் ஜனங்களிடம் காணப்படும் நல்ல பழக்க வழக்கங்களைக் காணக்காண, அன்னியரிடத்திலும், அவர்களது பழக்க வழக்கங்களிலும் நமக்குக் காரணமில்லாமல் ஏற்படும் வெறுப்பும் குரோதமும் மறைந்து போவது நிச்சயம். இதர நாட்டாரையும் நாம் நமது நாட்டு ஜனங்கள்

போலவே மதித்து அன்னியோன்னியத் தன்மையை உண்டாக்கிக் கொள்ளவும் இந்த நூல் அரிய சாதனமா யுதவுகிறது. ஒரு நாட்டின் சரித்திரத்தையும், அதன் ஜனங்களின் பழக்க வழக்கங்களையும் தெரிந்து கொள்ளாமல், அந்த நாட்டிற்கு நாம் சென்றால், நாம் துன்பத்திற்கே ஆளாவது நிச்சயம். இனி வருங் காலத்தில் கல்வி, வர்த்தகம், இராஜீயம் முதலான துறைகள் சம்பந்தமாக நம்மவர் இங்கிலண்டு தேசத்திற்குப் போகும் சந்தர்ப்பங்கள் அதிகரிக்குமாதலால், அந்த தேசத்தின் பூர்வ சரித்திரம் எல்லோருக்கும் தெரிந்திருப்பது இன்றியமையாத விஷயம். சரித்திரப் படிப்பினால், நமக்கு இன்னொரு முக்கியமான நன்மையும் உண்டாகிறது. அதாவது, நமக்கு இந்தப் படிப்பு அநேக விதங்களில் மனப் பயிற்சியை உண்டாக்குகிறது. இது முதலாவது, ஞாபக சக்தியைப் பெருக்குகிறது. நாம் எவ்வளவு தவறான வழியில் இச்சரித்திரத்தைப் படித்தாலும், நமது ஞாபகசக்தி அபரிமிதமாகப் பெருகுகிறது.

நமது மானஸிகக் கற்பனாசக்தியையும் இது அதிகப்படுத்துகிறது. நம்முடைய தீர்மானிக்கும் சக்தியையும் வளர்த்துத் திருந்தச் செய்கிறது. வெளிப்பார்வைக்கு எவ்வித சம்பந்தமுமற்றவை போலக் காணப்படும் இரண்டு விஷயங்களின் சம்பந்தா சம்பந்தங்களைக் கண்டுபிடித்தல், நடந்திருக்கும் சம்பவங்களுக்குக் காரணங்களைக் கண்டுபிடித்தல், இரண்டு கக்ஷிகளின் வாதங்களைக் கேட்டு நியாயா நியாயங்களைக் கண்டுபிடித்தல் முதலிய பயிற்சிகள் ஏற்படும்படியான சந்தர்ப்பங்கள் இச்சரித்திரப் படிப்பில் ஏராளமாக இருக்கின்றனவாதலால், அவைகளைப் படிப்பதனால் பகுத்தறியும் திறன் செவ்வைப்படுகிறது.

இவ்வாறு கற்பக விருக்ஷம்போல நமக்கு எண்ணிறந்த நன்மைகளைத் தாவல்லதும், அரசியல் ஞானத்திற்கு ஆணிவேர்போல மூலாதாரமாயிருப்பதுமான இங்கிலந்து தேசத்துச்சரித்திரத்தை, பிரிட்டிஷ் ஆதரவின்கீழ் சுயஆட்சியை அடைய விரும்புவோரான நாம் படித்துத்தெரிந்து கொள்ளவேண்டியதன் அத்யாவசியத் தன்மையை நாம் விஸ்தரித்து வற்புறுத்திக்கூறுவது மிகையாகும்.

# முக்கியக் குறிப்பு.

---

## தமிழ்ப் பாஷைக்கு வேண்டிய சில புதிய எழுத்துக்கள்.

ஸம்ஸ்கிருதம் முதலிய இதர பாஷைகளில், க, ச, ட, த, ப என்ற எழுத்துக்கள் ஒவ்வொன்றுக்கும் நான்கு விதமான ஓசைகளும் நான்கு விதமான வெவ்வேறு எழுத்துக்களும் ஏற்பட்டிருக்கின்றன. அவைகள் கடினமான ஓசை, கடினத்தில் அழுத்தமான ஓசை, மிருதுவான ஓசை, மிருதுவில் அழுத்தமான ஓசை என்று அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் தமிழில் 'க' முதலிய ஷை ஐந்து எழுத்துக்கள் பெரும்பாலும் அழுத்தமாகவே உச்சரிக்கப்படுகின்றன. அவைகளை மிருதுவாக உச்சரிப்பதற்குத் தனியான வேறு எழுத்துக்கள் இல்லை. இங்கிலீஷ் சாஸ்திரங்களில் உபயோகிக்கப்பட்டுள்ள பெயரெழுத்துகள் பலவற்றை நாம் அப்படியே தமிழில் எடுத்தாள நேருமாதலாலும், அவைகளில் ஷை எழுத்துக்கள் மிருதுவாய் உபயோகிக்கப்பட்டிருக்கலாமாதலாலும், நாம் தமிழில் ஷை ஐந்து எழுத்துக்களுக்கும் மிருதுவான எழுத்து ஒவ்வொன்றையாகிலும் ஏற்படுத்திக் கொள்ளாவிடில், தமிழ் உச்சரிப்பு கேட்பதற்கு விகாரமாயிருப்பதோடு, அர்த்த மாறுபாட்டிற்கும் இடம் கொடுக்குமாதலால், வடிவில் அநேகமாய்த் தமிழ் எழுத்துக்களைப் போலவே இருக்கும் கிரந்த எழுத்துக்களிலிருந்து நாம் அடியில் குறிக்கப்படும் ஐந்தெழுத்துக்களை எடுத்து உபயோகிப்போம்:—

| கடினமானது. | மிருதுவானது. |
|---|---|
| க (K) | ഗ (G) |
| ச (S) | ஜ (J) இதுஇப்போதே உபயோகத்தில் இருக்கிறது |
| ட (T) | ഡ (D) |
| த (Th) | ദ (Dh) |
| ப (P) | ബ (B) |

(2) இன்னம் இங்கிலீஷ் பாஷையில் 'எப்' (f) 'ஸெட்' ( ) என்று தமிழில் இல்லாத பிரத்தியேசமான இரண்டு எழுத்துக்கள் இருக்கின்றன. தமிழில் 'ப்' என்ற எழுத்தை நாம் கடினமாய் உச்சரிக்கிறோம். அப்படி உச்சரிக்கையில் இரண்டு உதடுகளை யும் அழுத்தமாய் ஒன்றாகச் சேர்த்து வாயைமூடிப் பிறகு உதடு களைத் திறந்து காற்றை வெளியில் விடுகிறோம்; ஆனால் இந்த 'எப்' (f) என்ற எழுத்தை உச்சரிப்பதற்கு நாம் வாயை மூட வேண்டியதில்லை. இரண்டு உதடுகளையும் சேர்த்துச் சுருக்கி, நடுவில் ஏற்படும் இடைவெளியினால், காற்றை மாத்திரம் வெளி யில் விடவேண்டும். அதை 'ப்' என்ற எழுத்தின் குறுக்கம் என்றே சொல்லவேண்டும். ஆகையால் நாம் எழுதுகையில் 'ப்2' என்ற குறிப்பை உபயோகித்தால், அதை 'எப்' (f) என்று வைத்துக் கொள்ளவேண்டும்.

(3) தமிழில் 'ஸ்' என்ற எழுத்தை நாம் நடுநாவினால் உச்ச ரிக்கிறோம். ஆனால் 'ஸெட்' (z) என்ற எழுத்தை நுனிநாவினால் உச்சரிக்க வேண்டுமாதலால், அதை 'ஸ்' என்ற எழுத்தின் குறுக்க மாக பாவிக்கவேண்டும். நாம் இனி எழுதுகையில் 'ஸ்2' என்ற குறிப்பை உபயோகித்தால் அதை 'ஸெட்' (z) என்று கொள்ள வேண்டும்.

(4) இவையன்றி இன்னம் இங்கிலீஷில் உயிரெழுத்துக்களி லும் அதிகப்படியான ஓர் ஓசை இருக்கிறது. அது 'அ' என்று குறுக்கிச் சொல்வதற்கும், 'ஆ' என்று நீட்டிச் சொல்வதற்கும் நடு மத்தியான ஓசை. ஆடுமாடுகள் 'மா' என்று கத்தும்பொழுது 'ஆ' என்ற நீண்ட ஓசை குறைந்து துவனிக்கிறது. அதை 'ஆ' என்பதன் குறுக்கமென்றே கருதவேண்டும். இனி நாம் எழுது கையில் 'ஆ/2' என்ற குறிப்பை உபயோகித்தால் அது 'ஆ'வின் குறுக்கமென்று கருதவேண்டும்.

மேலே குறிக்கப்பட்ட எப், ஸெட், ஆவின் குறுக்கம் ஆகிய வைகளை இங்கிலீஷ் கற்றவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண் டால், அவை மிக சுலபமாய் மனத்தில் பதிந்துபோம்.

(5) தமிழில் சில எழுத்துக்கள் சொல்லிற்கு முதலில் வருதல் கூடாதென்ற விதி ஏற்பட்டிருக்கிறது. உதாரணமாக, ர, ரு, ரோ என்பவை மொழிக்கு முதலில் வருவதில்லை. ஆனால், இங்கிலீஷில், ரஷ்யா, ருமேனியா, ரோம் என்ற பெயர்களை நாம் அவ்வாறே எழுதுதல் நன்றுதலால், இங்கிலீஷ் முதலிய இதர பாஷைகளிலிருந்து எடுத்தாளப்படும் பெயர்ச்சொற்கள் விஷயத்தில் ஷெ விதியை விலக்கி விடுவதே உசிதமானது.

(6) இன்னொரு முக்கியமான விஷயத்தையும் நாம் கவனித்தல் வேண்டும். இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் "ச்ச" என்ற ஓசையை மொழிக்கு முதலில்கொண்ட பெயரெழுத்துக்களும் வருகின்றன. அதற்கு சமதையான ஓசையுடைய எழுத்து கிரந்தத்தி லிருக்கின்றதானாலும், புதிய எழுத்துக்களை அதிகமாய் எடுத்தாளாமல், கூடியவரையில் குறைப்பதே உசிதமான காரியமென்பதைக் கருதி "ச்ச" என்றே எழுதுவது எளிதாகும். உதாரணமாக ச்சார்ல்ஸ், ச்சார்ட்டிஸ்ட், ச்சேல்ட்டன்ஹாம், ச்சேம்ஸ்போர்ட் என்பவைகளைக் குறிப்பிடலாம்.

(7) பெயர்ச்சொற்களின், உச்சரிப்பு திருத்தமா யிருக்க வேண்டுமென்பதைக் கருதி, இப்புதிய எழுத்துக்களை உபயோகித்திருக்கிறோம். இவை தேவையில்லை என்று கருதுவோர், சாதாரணமாகவே, தமிழ் எழுத்துக்களை உபயோகித்துக் கொள்ளலாம்.



## விஷய அட்டவணை.

## நாம் புதியவையாய்ச் சேர்த்துள்ள மிருதுவான எழுத்துக்களின்

## உயிர் மெய்யெழுத்துக்கள்.



| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஃ |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |

## உலகிலுள்ள பூபாகத்தின் நடுமத்தியில் பிரிட்டிஷ் தீவுகள் இயற்கையிலேயே அமைந்திருக்கும் விதம்



விஸ்தீரணம் (சுமார் அளவு 1000 ச மை)

| | |
|---|---|
| 13 | பிரிட்டிஷ் ராஜ்யம் |
| 8·7 | ரஷ்யா |
| 4·3 | சைனா |
| 4·3 | பிரான்ஸ் |
| 3·8 | அமெரிக்கா ஐக்கிய நாடுகள் |
| 3 3 | ஜெர்மனி |
| ·2 | ஜப்பான் |
| ·2 | துருக்கி |

ஜனத்தொகை கோடிக்கணக்கு

| | |
|---|---|
| ·1 | துருக்கி |
| 8 | ஜப்பான் |
| 8 | ஜெர்மனி |
| 10 | அமெரிக்கா ஐக்கிய நாடுகள் |
| 10 | பிரான்ஸ் |
| 42 | சைனா |
| 20 | ரஷ்யா |
| 45 | பிரிட்டிஷ் ராஜ்யம் |

# இங்கிலந்து தேச சரித்திரம்.

## 1-வது அதிகாரம்

### பண்டைக்கால ஸிரிட்டன் தேசம்.

(1) பண்டைக்காலம் :—நமது தேசத்தைப் பரிபாலித்து வரும் இங்கிலீஷ்காரர்கள் அரசியல் முறைகளில் உலகம் முழுதிற்கும் வழிகாட்டிகளாக இருந்திருக்கிறார்கள். அரசியல் முறைகளில் அவர்கள் அவ்விதமான உன்னதஸ்திதியை யடைந்திருப்பதற்கு அவர்களுடைய பழைய சரித்திரத்தில் நேர்ந்துள்ள பல சம்பவங்களே காரணமா யிருந்திருக்கின்றன. அவர்களுடைய நிகழ்கால நிலைமையை அறியவேண்டுமானால், அவர்களுடைய பழைய சரித்திரத்தைப் படித்துப் பார்ப்பது அவசியமாகிறது. அவர்களுக்குப் பழைய காரணங்களின் பலனாகவே தற்கால மேம்பாடு கிடைத்திருக்கிறது. இதன் உண்மை போகப் போக விளங்கும். ஒவ்வொரு தேசத்தினுடைய தற்கால உயர்வு தாழ்வுகளை சரியாக நாம் தெரிந்துகொள்ள வேண்டுமானால், அந்தந்த தேசத்தினுடைய பூர்வ சரித்திரத்தை நன்றாகப் பயிலவேண்டும். அப்பொழுதுதான் அந்த தேச ஜனங்களுடைய பழக்க வழக்கங்களும் குணங்களும் நாளடைவில் படிப்படியாக மாறி இப்பொழுதைய அமைப்பை அடைந்திருக்கும் பான்மை விளங்கும். ஆதலால், உலகத்தில் உள்ள தேசங்களில் மிக முக்கியமான ஸ்தானத்தை வகித்து, உலகத்தின் எல்லா பாகங்களிலும் அரசிய லதிகாரத்தைப் பெற்றிருக்கும் இங்கிலண்டு தேசத்தினுடைய பெருமையையும் மகிமையையும் உள்ளபடி அறிவதற்கு அந்த தேசத்தினுடைய சரித்திரத்தை நாம் நன்றாகத் தெரிந்துகொள்வது நிரம்பவும் அவசியமான காரியம். நமது தாய் நாடாகிய இந்தியாவின் சரித்திரத்தைப் பார்த்தால், அது இப்பொழு

திற்கு சுமார் 5000 வருஷங்களுக்கு முன்பே ஆரம்பிக்கிறது என்பது தெரியவரும். அதாவது கிரிஸ்து பிறப்பதற்கு 3000 வருஷங்களுக்கு முன்பே இந்தியாவில் வசித்த ஜனங்கள் நாகரிகம் வாய்ந்து அமைதியான வாழ்க்கை நடத்தி வந்தவர்கள். ஆனால், அக்காலத்தில் இங்கிலண்ட் தேசம் எந்த நிலைமையில் இருந்ததென்பதைத் தெரிந்துகொள்ள வகையில்லை. இங்கிலண்ட் தேச சரித்திரம் கிரிஸ்து பிறப்பதற்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்பு முதற்கொண்டு தான் தொடங்குகிறது. அதாவது இக்காலத்திலிருந்து சுமார் 2000 வருஷங்களாகத்தான் அதனுடைய சரித்திரம் தெளிவாகத் தெரிகிறது. அதற்கு முன்பு, அதாவது இந்தியாவில் ஆரியர்களுடைய நாகரிகமும் இராஜ்ஜியங்களும் செழித்தோங்கிய பொழுது, இங்கிலண்ட் தேசம் இருளடைந்திருந்ததென்றே கூறவேண்டும். அப்பொழுது அங்கிருந்த ஜனங்கள் முற்றிலும் அநாகரிகமான காட்டு மனிதர்களாக இருந்திருக்கலாம். ஒரு தேசத்தின் பழைய சரித்திரத்தை அறிவதற்குப் பல சாதனங்கள் உண்டு. அவை யாவற்றிலும் முக்கியமானது, பழையகாலத்து நூல்களே. அவ்வித நூல்கள் அகப்பட்டால் அவைகளைக்கொண்டு அந்த தேச ஜனங்களின் பழைய காலத்துப் பழக்க வழக்கங்கள் எப்படி இருந்தனவென்றும், அவர்களுடைய சமூக வாழ்க்கை எப்படி அமைந்திருந்ததென்றும் யூகித்துத் தெரிந்துகொள்ளலாம். அதுவே நிரம்பவும் சுலபமான வழி. ஆனால் இங்கிலண்ட் தேசத்தின் பழையகால நூல்கள் கிரிஸ்து சகாப்தம் முதற்கொண்டுதான் அகப்படுகின்றன. அக்காலத்திற்கு முன்னால் அங்கிருந்த ஜனங்கள் எழுத்துவாசனை யற்றவர்களாகவே இருந்திருக்க வேண்டுமாதலால், அவர்கள் எவ்விதமான நூல்களையும் எழுதியிருக்க நியாயமில்லை. ஆனாலும் எழுத்துமூலமான நூல்கள் அகப்படாமற் போனாலும், சரித்திராசிரியர்கள் வேறு பல சாதனங்களைக் கொண்டு ஒரு தேச சரித்திரத்தை உற்பத்தி செய்து விடுவார்கள். உதாரணமாக, பூமியின் கீழிருந்து அகப்படும் பழைய ஆயுதங்கள், பாத்திரங்கள், நாணயங்கள் முதலியவற்றை ஆராய்ந்து பார்த்து தேசத்தின் சரித்திரத்தை ஒருவாறு யூகித்துக் கொள்ளலாம். ஷெ சாதனங்களைக்கொண்டு சரித்திராசிரியர்கள் இங்கிலண்ட் தேசத்தின் பண்டைக்காலக் குடிகளைப்பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிறார்

கள். அந்த தேசத்திற்கு அக்காலத்தில் இங்கிலண்ட் என்ற பெயர் ஏற்படவில்லை. இப்பொழுதும்கூட இங்கிலண்ட் தேசமும் அதற்குவடக்கேயுள்ள ஸ்காட்லண்ட் தேசமும் சேர்ந்து ஸிரிட்டன் என்றழைக்கப்படுகின்றன. ஸிரிட்டனும் அதற்கு மேற்கேயுள்ள அயர்லண்ட் தேசமும் சேர்ந்து, ஸிரிட்டிஷ் தீவுகள் என்று குறிக்கப்படுகின்றன. அம்மாதிரியே பழைய காலங்களில் இங்கிலண்ட் தேசம் ஸிரிட்டன் என்ற பெயரையே பெற்றிருந்தது. கிரிஸ்து சகாப்தத்திற்கு வெகு காலத்திற்கு முன்னிருந்தே ஸிரிட்டிஷ் தீவுகளில் ஜனங்கள் வசித்து வந்தார்களென்பது அங்கு பூமியினடியிலிருந்து தோண்டி எடுக்கப்படும் பல கல் ஆயுதங்களிலிருந்தும் கல் கருவிகளிலிருந்தும் தெரிகிறது. ஷை ஆயுதங்களில் சில, நதிகளின் ஓரங்களிலும், மற்றும் சில, பழையகாலத்து மனிதர்கள் வசித்து வந்த குகைகளிலும் அகப்படுகின்றன. ஷை ஆதிகாலக் குடிகள் சாமானிய அறிவைப் பெற்றவர்களாகவே இருந்திருக்க வேண்டும். அவர்களுடைய சந்ததியார் அநேகமாய் க்ஷீணித்துப் போயிருக்கலாம். அவர்கள் வசித்த காலத்திற்குப் பழைய கற்காலம் (Palaeo lithic Age) என்று பெயர்.

அதன்பிறகு பல நூற்றாண்டுகள் கழிந்தபின், ஸிரிட்டன் தேசத்துக் குடிகள் சற்று அதிகமான நாகரிகத்தை அடைந்திருந்ததாகத் தெரிகிறது. ஷை பிற்காலத்துக் குடிகள் தங்களுடைய ஆயுதங்களையும் பண்டங்களையும் கல்லைக்கொண்டே செய்துகொண்டாலும், அந்த ஆயுதங்கள் மிக கவனத்துடனும் அழகாகவும் செய்யப்பட்டன. அவர்கள் எதிரிகளைக் கொல்லுவதற்கேற்ற அம்புகள், கத்திகள், இரம்பங்கள் முதலியவைகளைச்செய்துகொண்டனர். அவர்கள் அதிக உயரமாக இல்லாமலும், கரிய நிறத்தினராகவும் இருந்தனர்; அவர்களுடைய மண்டை நீண்டு குறுகி யிருந்தது. அந்த ஜனங்களைச் சிலர் ஐஸீரியர்கள் (Iberians) என்று குறிக்கிறார்கள்; ஏனெனில் ஐரோப்பாவில் உள்ள ஸ்பெயின் தேசம் அக்காலத்தில் ஐஸீரியா என்றழைக்கப்பட்டது; ஸிரிட்டன் தேசத்துக்குடிகளும் ஐஸீரியா தேசத்து ஜனங்களும் ஒரே இனத்தவர்கள் என்று அவர்கள் கூறுவார்கள். ஸிரிட்டன் தேசத்தில் இருந்த ஐஸீரியர்களின் சந்ததியார்

முற்றிலும் பூண்டற்றுப் போய்விடவில்லை. அவர்கள் வசித்த காலத்திற்கு புதிய கற்காலம் (Neo lithic Age) என்று பெயர்.

(2) கேல்ட் இனத்தவர், அவர்களின் நாகரிகம் :—பிரிட்டன் தேசத்தில் வசித்த ஐபீரியர்களை சிறிது காலத்திற்குப் பின்னால் கேல்ட் என்ற ஓர் இனத்தார் எதிர்த்துத் தாக்கினார்கள். இந்த கெல்ட் இனத்தார் ஆரியர்களுடைய இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பார்வைக்கு ஐபீரியர்களைப்போலக் குள்ளமாகவும் கருப்பாகவும் இல்லாமல் உயரமாகவும், அழகாகவும், உருண்டையான மண்டைகளைப் பெற்றும் இருந்தனர்; அவர்களுடைய தலைமயிர் சிவப்பாகவாவது மஞ்சளாகவாவது இருந்தது; அவர்களுடைய புத்திவன்மையும் அறிவுமுதிர்ச்சியும் அதிசமாயிருந்தன. கெல்ட் இனத்தார்கள் இரண்டுபெரிய கூட்டங்களாக பிரிட்டன் தேசத்திற்குள் வந்தனர். இரண்டாவது கூட்டத்தினருக்கு பிரைதன் இனத்தார் (Brython) என்று பெயர். அப்பெயரிலிருந்தே பிரிட்டன் (Britain) தேசமென்ற பெயர் எற்படலாயிற்று; பிரிட்டன் தேசக்குடிகளும் பிரிட்டன்ஸ் (Britons) என்று குறிக்கப்படலானார்கள். பிரிட்டன் தேசத்தின் தென்பாகமும் கிழக்கு பாகமுமே அதிக செழுமையும் வளமும் உள்ள பிரதேசங்களாகையால் புதிதாக வந்த கூட்டத்தார் இந்த பிரதேசங்களில் குடியேறி, அங்கு எற்கெனவே இருந்த குடிகளை மேற்கிலும் வடக்கிலும் உள்ள மலைகளுக்கும் காடாரம்பங்களுக்கும் துரத்திவிட்டனர். ஆதலால் முதலாக வந்த கெல்ட் கூட்டத்தார் ஐபிரியர்களைத் துரத்தினார்கள்; ஆனால் இரண்டாவதாக வந்த பிரைதன்கள் முதல் கூட்டத்தாரையும் துரத்திவிட்டுத் தாமே செழுமையான பிரதேசங்களில் தங்கிவிட்டார்கள். இவ்வாறு மேற்கிலும் வடக்கிலும் துரத்தப்பட்ட ஐபீரியர்களும் முதலாக வந்த கெல்ட்களும் நாளடைவில் ஒன்றுசேர்ந்து கலப்புற்றுப் போனார்கள். அவர்களுடைய சந்ததியாரை நாம் இன்னும் காணலாம்.

கெல்ட் இனத்தவர் ஓரளவு நாகரிகம் படைத்தவர்கள்; ஏனென்றால் அவர்கள் ஆரியர்களுடைய வம்சத்தைச் சேர்ந்தவர்கள். உதாரணமாக, இறந்துபோன மனிதர்களை மரியாதையாக அடக்கம் செய்யும் வழக்கம் கெல்ட்களுக்குத் தெரிந்திருந்தது. அவர்கள்

வட்ட வடிவமான சிறு கட்டிடங்களைக் கட்டி அவைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு குடும்பத்திற்கெனப் பிரித்துக்கொண்டு, அவைகளில் பிணங்களை அடக்கம் செய்து வந்தார்கள். பிணங்களை அடக்கம் செய்தாலும், அல்லது, பிணங்களை தகனம் செய்து சாம்பலை அடக்கம் செய்தாலும் அவர்கள் கல்லறைகளில் கல்லாலான ஆயுதங்கள், தங்க ஆபரணங்கள், கண்ணாடிகள், கோணலாகவும் சறடுமுரடாகவும் உள்ள மட்பாத்திரங்கள் முதலியவைகளையும் கூட வைப்பது வழக்கம். கெல்ட் இனத்தார் உலோகங்களின் உபயோகத்தையும் அறிந்திருந்தார்கள். அதிலிருந்து அவர்கள் ஆதிகாலக் குடிகளை விட எவ்வளவு முன்னேற்றமடைந்திருந்தனர் என்பதை ஊகித்துக்கொள்ளலாம். இரும்பின் உதவியைக் கொண்டு அவர்கள் தங்களுக்கு அவசியமான ஆயுதங்களைச் செய்துகொண்டார்கள். மேலும் அவர்கள் ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிந்து கொண்டதோடு, கண்ணாடிகளாலான பாண்டங்களில் அதிக ஆசையுடையவர்களாயிருந்தனர். அவர்கள் நிலத்தை உழுது பயிரிடும் முறையையும் கற்று அப்பியசித்து வந்தார்கள்; அவர்களுக்கு முன்னிருந்த ஆதிகாலத்துக் குடிகளோ வேட்டையாடி, அதனால் கிடைத்த உணவையே உட்கொள்ளுவது வழக்கம். இன்னும், கெல்ட் ஜனங்கள், தகரம், காரீயம் முதலியவைகளையும் உபயோகித்து வந்தார்கள். அவர்கள் பொதுவாக, தைரியம் மிகுந்தும், ஆண்மை நிறைந்தும், கம்பீரத் தன்மையைப் பெற்றும் இருந்தார்கள். சண்டை செய்வதில் அவர்களுக்கு இயற்கையாகவே விருப்பம் உண்டு. அழகிய பொருள்களைக்கண்டு அவர்கள் சந்தோஷப்படுவார்கள். கெல்ட் இனத்தார் தனித்தனியான பல பிரிவுகளாகப் பிரிந்து, ஒவ்வொரு பிரிவினரும் ஓர் அரசன் அல்லது தலைவன்கீழ் இருந்து வந்தார்கள்; அபாய சமயங்களில் பல தனிப்பிரிவுகள் ஒரே அரசனுடைய தலைமையின்கீழ் அடங்கியிருந்ததும் உண்டு. ஆனால் அவர்கள் சச்சரவிடும் சுவபாவமுடையவர்களாதலால், தங்கள் சொந்தத் தலைவனிடமின்றி வேறு யாரிடத்திலும் அவர்கள் அதிககாலம் நீடித்து அடங்கியிருக்கமாட்டார்கள். அவர்களில் கனவான்களாக இருப்பவர்களே யுத்தம் செய்யப்போவார்கள். குதிரைகள் பூட்டிய இரதங்களின்மீ தேறிக்கொண்டு, தங்கள் தேகத்தை கெட்டியான கவசங்களால் மூடிக்கொண்டு யுத்தவீரர்கள் வெகு

ஆடம்பரமாகச் சண்டை செய்யச் செல்வார்கள். அவர்களணிந் திருந்த கவசங்கள் பலவகையாக அலங்காரம் செய்யப்பட்டிருக்கும். கத்தி, கோடரி, அம்பு, கேடயம் ஆகியவைகளே அவர்களுடைய ஆயுதங்கள். கெல்ட்கள் பல தேவதைகளைத் தொழுது, அவைகளுக்கு நரபலியும் கொடுத்ததுண்டு. ஜனங்கள் ட்ரூயிட் (Druid) என்ற தமது குருமார்களிடம் அதிக மரியாதை வைத்திருந்தனர்; அக் குருமார்களே அக்காலத்தில் கவிவாணர்களாகவும், வித்துவான்களாக வும், நியாயாதிபதிகளாகவும் இருந்து வந்தார்கள். ஜனங்கள் தங்க ளுடைய ஆடுமாடுகளையே தமது சொத்தாக எண்ணி யிருந்தார்கள். அவர்கள் அநேகமாய்த் தனித்தனியாக தூரதூர இருந்த வீடுகளி லேயே வசித்து வந்தார்கள். ஆனால் யுத்த காலங்களில் பத்திரமாக வசிக்கும் பொருட்டு மண்கோட்டைகளையும் கட்டிக்கொள்வது வழக் கம். அவ்வித மண் கோட்டைகளை அவர்கள் மலைக் குன்றுகளின் மீது கட்டிவைத்து, அதிலிருந்து சுற்றுப்புறப் பிரதேசங்களை சுலப மாக கவனித்துக் கொள்வதற்கு அநுகூலமாகச் செய்து கொள்வார் கள். நதியோரங்கள் எப்பொழுதும் ஈரமாகவும், ஆரோக்கியத்தைக் கெடுக்கக் கூடியவையாகவும், சாகுபடி செய்ய அருகமற்றவை யாயும் இருந்தமையால், அவர்கள் சாதாரணமாக மேட்டுப் பாங்கான நிலங்களிலேயே வசித்து வந்தார்கள். அவர்களிற் சிலர் செம்படவர் களாக இருந்தே காலத்தைக் கழித்தனர். ஒரு கூட்டத்தார் குடி யிருந்த இடத்திற்கும் மற்ற கூட்டத்தாரின் வாசஸ்தலத்திற்கும் அடிக்கடி போக்குவரத்து ஏற்பட்டமையால் அவைகளுக் கிடையில் காட்டுப் பாதைகள் உண்டாயின. கெல்ட் ஸ்திரீகள் தமது தேசத்துப் பாட்டுகளை ஒருவரிடத் தொருவர் வாய்முகமாய்க் கற்றுக் கொள்வார் கள். ட்ரூயிட் என்ற மத குருமார்கள் தேசத்தினுடைய யுத்த வீரர்களைப்பற்றிப் புகழ்ந்து பாடித் தமது முன்னோர்களுடைய சட் டங்களையும் பழக்க வழக்கங்களையும் ஜனங்களுக்கு எடுத்துக் கூறு வார்கள். ஆனால் அக்காலத்தில் புஸ்தகங்கள் கிடையா.

பிரிட்டன் தேசத்தைப் பற்றிய எழுத்து மூலமான ஆதாரம் நமக்கு முதன் முதலில் ஒரு கிரேக்கப் பிரயாணியினுடைய நூல் களிலிருந்து கிடைக்கிறது. கிரிஸ்து பிறப்பதற்கு சுமார் 330 வரு

ஷங்களுக்கு முன்பு பிதியஸ் (Pytheas) என்ற கிரேக்கர் ப்ரிட்டன் தேசத்தின் கிழக் கரையோரமாகப் பிரயாணம் செய்து, தாம் கண்ட விஷயங்களைக் குறித்து வைத்திருக்கிறார். ஆனால், துரதிருஷ்ட வசமாய், அவர் எழுதிய நூல் முழுதும் நமக்குக் கிடைக்கவில்லை. பிதியஸினுடைய பிரயாணத்திற்குப் பிறகு, ப்ரிட்டன் தேசத்திற்கும் மத்தியத்தரைக் கடலோரமாக இருந்த பல நகரங்களுக்கும் வியாபார சம்பந்தமான போக்குவரத்து ஏற்பட்டது. மேலும் அப்பொழுது ஐரோப்பாவில் குடியேறியிருந்த கெல்ட் இனத்தாருக்கும் ப்ரிட்டனில் குடியேறியிருந்த கெல்ட்களுக்கும் சம்பந்தம் ஏற்பட்டது. அதனால் ப்ரிட்டன் தேசத்தின் நாகரிகம் வளர்ந்தது. ப்ரிட்டன் தேசத்துப் பொருள்கள் வெளி தேசங்களில் விற்பனையாயின. பழைய காலங்களில் பிரசித்தி பெற்றிருந்த ஐரோப்பிய தேசங்கள் (கிரீஸ், உரோம், ஈஜிப்ட் முதலியன) ப்ரிட்டன் தேசத்தின் இருப்பை அறிய இடமுண்டாயிற்று. அதுவரையில் ப்ரிட்டன் தேசம் தன்னந்தனியா யிருந்தது பிறகு மாறிப் போயிற்று. ப்ரிட்டன் தேசத்திற்கும் ஐரோப்பாக் கண்டத்திற்கும் நடுவில் ஒரு சிறிய கடல் மட்டுமே இருப்பதனால், போக்குவரத்து சுலபமாகவே நடந்தன. வியாபாரம் பெருகப் பெருக ப்ரிட்டன் தேசத்தில் நாணயங்களும் தோன்றின; நாகரிகமும் வரவர விருத்தி யடைந்தது. பிதியஸ் ப்ரிட்டனுக்குப் பிரயாணம் செய்தபின் ஏறக்குறைய முன்னூறு வருஷங்கள் வரையில் ப்ரிட்டனில் வேறு எவ்வித சம்பவமும் நிகழவில்லை. அதற்குள் ப்ரிட்டன் நாகரிகத்திலும், செழுமையிலும் அதிக துரிதமாய் முன்னேற்ற மடைந்துவிட்டது.

---

## 2-வது அதிகாரம்

---

### பிரிட்டனில் உரோமர்களின் ஆதிக்கம்.

(1) ஸீஸரின் படையெழுச்சிகள்:—ஐரோப்பாவில் பண்டைக் காலத்தில் கிரீஸ் தேசமும், அதன் பிறகு உரோம் இராஜ்ஜியமுமே சிறப்புற்று விளங்கின. உரோம் என்ற சிறு நகரம் ஒரு பெரிய இராஜ்ஜியத்தின் தலைமை நகரமாயிருந்தது. கிறிஸ்து பிறப்பதற்கு முன் ஐரோப்பாவிலுள்ள அநேக தேசங்கள் உரோம் இராஜ்ஜியத்திற்கு உள்பட்டிருந்தன. உரோம் தேசத்தை ஆண்டு வந்த சக்கரவர்த்திகளுள் அதிக கீர்த்திபெற்ற ஜூலியஸ் ஸீஸர் (Julius Caeser) என்ற மகாவீரர் கி. மு. 50 வது வருஷத்தில் அக்காலத்தில் காால் (Gaul) என்றழைக்கப்பட்ட ஐரோப்பாவின் மத்திய பிரதேசத்தையும் தமது வசப்படுத்திக் கொண்டார். காால்தேசத்து ஜனங்களும் பிரிட்டன் தேச ஜனங்களும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களாதலால், காால்தேசத்தை உரோமர்கள் தாக்கியபோது, பிரிட்டன் தேசத்தினர் தமது இனத்தாருக்கு உதவி செய்தனர்; காால் தேசத்தினர் தோற்றுப்போனதும், அங்கிருந்து தப்பியோடிய சிலர் பிரிட்டன் தேசத்தில் வந்து தங்கினார்கள். அதைக் கண்ட ஜூலியஸ் ஸீஸர், அவ்விதம் காால் தேசத்தாருக்கு பிரிட்டன் தேசத்தார் அநுகூலமாய் இருந்த வரையில், அந்த தேசத்தை அடக்கியாளுவது கடினமாக இருக்குமென் றுணர்ந்து, பிரிட்டன் தேசத்தாரை தண்டித்து, அவர்களுக்கு புத்தி கற்பிக்க வேண்டுமென்று எண்ணி கி. மு. 55-வது வருஷத்தில் ஒரு சிறு படையுடன் பிரிட்டன் தேசத்தை எதிர்த்து வந்தார். பிரிட்டன் தேசத்தார் மிக சாமர்த்தியமாக அவரைத் தடுத்தனராயினும், அவரைத் துரத்திவிட முடியவில்லை. ஆனால் ஸீஸர் சில வாரங்கள் பிரிட்டன் தேசத்தில் தங்கியிருந்தாராயினும் அவரால் அதிக வெற்றியடைய முடியவில்லை. அவர் தம்முடன் சொற்ப சேனையையே கொணர்ந்திருந்தமையால்,

தைரியமாக தேசத்திற்குள் செல்ல முடியாமல் கடற்கரையோரமாகவே இருந்து, திரும்பிப் போய்விட நேர்ந்தது. ஆனால் அவர் மறுபடி அதிசீக்கிரத்தில் வேறொரு பெரிய படையைத் திரட்டிக் கொண்டு ஸிரிட்டனை ஜயிப்பதற்கு நிச்சயம் செய்து கொண்டார்.

அதன்படியே அடுத்த வருஷத்தில் (கி. மு. 54-ல்) ஸீஸர் இரண்டாம் முறை ஸிரிட்டனின் மீது படையெடுத்து வந்தார். அப்பொழுது அவர் முன்பு கூட்டிவந்த சேனையைப்போல இருமடங்கு சேனையைத் திரட்டிக் கொணர்ந்திருந்தார். கடற்கரையோரமாகத் தமது பாளையங்களைத் தங்கவைத்து அவர் தைரியமாக உள்நாட்டுப் பிரதேசங்களின் மீது படையெடுத்துச் சென்றார். ஸிரிட்டன் தேசத்தின் தென்பாகத்தை ஆண்டுவந்த கா/2ஸி வெல்லானஸ் (Cassi Vellannus) என்ற வீரர் ஸீஸரை எதிர்த்துத் துரத்த முயன்றார். யுத்தகளத்தில் ஸிரிட்டன் தேசத்து வீரர்களால் உரோமர்களைத் தோற்கடிக்க முடியவில்லை; ஆதலால் ஸீஸர் இன்னும் முன்செல்ல வழியேற்பட்டது. ஆனால் தங்களுடைய இரதங்களின் உதவியைக்கொண்டு ஸிரிட்டன்வீரர்கள் ஸீஸருடைய சேனைக் களத்தைத் தாக்கி ஸீஸருடைய எண்ணம் நிறைவேறாமற் செய்துவிட்டனர். இவ்வாறு கா/2ஸி வெல்லானஸ் ஜயமடையும் சமயத்தில் அவருடைய உள்நாட்டு விரோதிகளிற் சிலர் அவரை வஞ்சித்துவிட்டனர். எந்த தேசத்திலும் இம்மாதிரி சத்துருவோடு சேர்ந்துகொண்டு தாய் நாட்டிற்கு துரோகம் செய்யும் மனிதர்கள் தோன்றுவதுண்டு. ஸிரிட்டன் தேசத்தில் இன்னொரு பகுதியில் வசித்துவந்த ட்ரினோவன்ட்ஸ் (Trinovantes) என்ற கூட்டத்தார் கா/2ஸி வெல்லானஸினிடம் பொறாமை கொண்டு, தாமாகவே சென்று ஸீஸரிடம் சரணாகதி யடைந்துவிட்டார்கள். அந்த நயவஞ்சகத்தைக் கண்ட கா/2ஸி வெல்லானஸும் ஸீஸருடன் சமாதானம் செய்துகொண்டார். ஸிரிட்டன் தேசத்தார் உரோம் இராஜ்ஜியத்திற்குக் கப்பம் கட்ட ஒப்புக்கொண்டார்கள். உடனே ஸீஸர் தமது தேசத்திற்குத் திரும்பினார். ஸீஸர் ஸிரிட்டன் தேசம் முழுவதையும் ஜயித்துவிடவில்லை; ஆனால் அவர் அவர்களுக்கு ஒரு படிப்பினையைக் கற்றுக் கொடுத்து, உரோம் இராஜ்ஜியத்திற்குள் அடங்கிய கால் நாட்டினருக்கு அவர்கள் உதவி செய்யாதபடி தடுத்துவிட்டுச் சென்

ஞர். அவ்வாறு ஸீஸருடைய படையெழுச்சியினுல் பெருத்த பலன்கள் சம்பவிக்காமற் போனுலும், அதனுல் சரித்திராசிரியர்களுக்கு உதவியான நன்மை ஏற்பட்டது. ஸீஸர் பெயர்பெற்ற யுத்தவீரராகவும், மகா சாமர்த்தியசாலியான சக்கரவர்த்தியாகவும் இருந்ததுடன், ஒரு சிறந்த நூலாசிரியராகவும் இருந்தார். அவர் தாம் ஸிரிட்டன் தேசத்தில் கண்ட காட்சிகளையும், அங்கிருந்த ஜனங்களின் குணுதிசயங்களையும்பற்றி விரிவாகத் தம்முடைய நூல்கள் ஒன்றில் எழுதி வைத்திருக்கிருர். ஸிரிட்டன் தேச சரித்திரத்தை எழுதுவதற்கு முற்றிலும் ஆதாரமாயிருந்த எழுத்து மூலமான சாதனங்களுள் ஸீஸருடைய நூலே முதன்மையானது என்று கூறலாம்.

(2) **ஸிரிட்டனில் உரோமர்களின் ஆதிக்கம்:**—ஸீஸரின் படையெழுச்சிகளுக்குப் பின் தொண்ணூறு வருஷகாலம் வரையில் உரோமர்கள் ஸிரிட்டனைத் தாக்குவதற்கு எவ்வித சந்தர்ப்பமும் ஏற்படவில்லை. ஆனுல் உரோமர்களும் ஸிரிட்டன் தேசத்தாரும் ஒருவரையொருவர் தெரிந்துகொண்டதனுல், ஸிரிட்டன் தேசத்தின் வியாபாரம் பெருகியது. ஸீஸருக்குத் தாமாகவே பணிந்த ட்ரினேவன்ட்ஸ் இனத்தார் உரோம் நாகரிகத்தைப் பின்பற்றி நன்மையடைந்து, தென்கிழக்கு பாகம் முழுதையும் தமது வசப்படுத்திக் கொண்டார்கள். அவர்களுடைய அரசர்களில் முக்கியமானவர் க்யூனேபெலினஸ்(Cunobelinus)என்பவர். அந்த அரசருடைய பெயரையே ஸிம்பெலின் (Cymbeline) என்று மாற்றி அந்தப் பெயரைக்கொண்ட நாடகமொன்றை ஷேக்ஸ்பியர் மகாகவி எழுதியிருக்கிருர். அவ்வரசர் பல நாணயங்களை அச்சிட்டு, மிகுந்த பராக்கிரமமடைந்து, கடைசியில் உரோமர்களுடைய ஆதிக்கத்தை விலக்கிவிட்டார். அவருடைய புத்திரர் கா/2ரக்டகஸ்(Caractacus) என்பவரும் தந்தையின் வழியையே பின்பற்றி நடந்தார். அதனுல் ஸிரிட்டன் தேசத்திற்கும் உரோம் தேசத்திற்கும் முன் இருந்த நட்பு குறையத் தொடங்கியது. ஸிரிட்டன் தேசத்தார் உரோமுக்குக் கப்பம் கட்டுவதை நிறுத்திவிட்டார்கள்; கால் தேசத்தாருக்கும் உதவி புரிந்தார்கள்; மற்றும் பல வழிகளிலும் உரோம் இராஜ்ஜியத்

திற்குக் கெடுதல் விளைவித்தார்கள். ஆகவே, மறுபடியும் ஸிரிட்டன் தேசத்தைத் தம் வசப்படுத்தினு லன்றி தமது இராஜ்ஜியத்திற்குத் தீங்கு நேரிடுமென்பதை உரோம் தேச சக்கரவர்த்தியான க்ளாடியஸ் (Claudius) உணர்ந்து கி. பி. 43-வது வருஷத்தில் ஆலஸ் ப்ளாடியஸ் (Aulus Plautius) என்ற தளகர்த்தரை ஒரு சேனையுடன் ஸிரிட்டன் தேசத்திற்கு அனுப்பினுர். ப்ளாடியஸ் வெகு சுலபமாக ஜயமடையத் தொடங்கி, நான்கு வருஷங்களுக்குள் ஸிரிட்டன் தேசத்தின் தெற்கு பாகத்தையும் மத்திய பாகத்தையும் வென்று சுவாதீனப்படுத்திக் கொண்டார். முன்பு ஸீஸர் படையெடுத்து வந்ததற்கும் பின்பு வந்த படையெழுச்சிக்கும் ஒரு வித்தியாசம் இருந்தது. முதல் படையெழுச்சியில் ஸீஸர் வெற்றியடைந்தாலும், அவர் உடனே தமது நாட்டிற்குத் திரும்பிப்போய் விட்டார். ஆனுல் பிற்காலத்தில் உரோம் தளகர்த்தர் ஸிரிட்டனிலேயே தங்கி அதைப் பரிபாலிக்கத் தொடங்கிவிட்டார். ஸீஸர் வெறும் படை யெழுச்சியோடு திருப்தியடைந்து போய்விட்டார்; ஆனுல் இரண்டாவது படையெழுச்சிக்குப்பின் உரோமர்கள் அந்த நாட்டைப் பரிபாலனம் செய்யத் தொடங்கினர். ப்ளாடியஸுக்கு அடுத்தபடியாக வந்த ருவர்னரான ஆஸ்டோரியஸ் ஸ்கேபுலா (Os toriousScapula)என்பவர்ஸிரிட்டனைப்பரிபாலிக்கத்தொடங்கினுர். ஸிரிட்டன் தேசத்தை ஆண்டு வந்த கா/2ரக்டக்ஸ் தமது நாட்டை இழந்து மேற்கிலுள்ள மலைகளில் போய் ஒளிந்துகொண் டிருந்தார். உரோம் தளகர்த்தர் அவரைத் தோற்கடித்துத் துரத்திக் கடைசியில் அவரைச் சிறைப்பிடித்து உரோமுக்கு அனுப்பிவிட்டார். ஆனுல் கா/2ரக்டகஸினுடைய வீரத்தை மெய்ச்சி உரோம் சக்கரவர்த்தியான க்ளாடியஸ் அவரை மரியாதையாக நடத்திவந்தார். அதன் பிறகு வரிசையாக வந்த தளகர்த்தர்கள் ஸிரிட்டன் தேசத்தை ஒவ்வொரு பாகமாக சுவாதீனப் படுத்திக்கொண்டு வந்தார்கள். ஆனுல் ஸிரிட்டன் தேசத்துக் குடிகளில் பலர் உரோம் சேனையை எதிர்த்துக் கொண்டே இருந்தார்கள். முக்கியமாக ஸோடிஸியா (Boadicea) என்ற இராணி தனது தேசத்தை தைரியமாகக் காத்துநின்று கடைசியில் பகைவரின் கையில் அகப்பட விரும்பாமல், விஷத்தைப் பருகி உயிரை மாய்த்துக்கொண்டாள்.

பிரிட்டனைப் பரிபாலித்த உரோம் தளகர்த்தர்களில் ஜூலியஸ் அக்ரிகோலா என்பவர் முக்கியமானவர். அவர் கி.பி. 78 முதல் 85-வது வருஷம் வரையில் பிரிட்டனை ஆண்டுவந்தார். அக்ரிகோலாவினுடைய மருமகனான டாஸிடஸ் (Tacticus) என்பவர் பிரசித்திபெற்ற சரித்திராசிரியர்; அவர் தமது மாமனாரைப் பற்றி விரிவான ஒரு சரித்திரம் எழுதியிருக்கிறார்; அதிலிருந்து அக்காலத்து சம்பவங்கள் நமக்குத் தெளிவாகத் தெரிகின்றன. அக்ரிகோலா முதன் முதலாக பிரிட்டனின் மேற்கு பாகத்தில் இருந்த மலைநாட்டுக் குடிகளை வென்று கீழ்ப்படுத்தி, பிறகு வடக்கே சென்று அந்தப் பிரதேசத்தையும் சுவாதீனப்படுத்திக் கொண்டு, இப்பொழுது யார்க் (York) என்று குறிக்கப்படும் இடத்தில் உரோம் சேனை தங்கியிருப்பதற்காக ஒரு நகரத்தை நிர்மாணித்தார். ஏனென்றால், அவ்விடத்தில் ஒரு சேனையை நிரந்தரமாக நிறுத்திவைத்தால் ஜயிக்கப்பட்ட இனத்தார் மறுபடி கலகம் செய்யாமல் இருப்பார்கள் என்பது அவருடைய கருத்து. அதன்பிறகு அக்ரிகோலா மேலும் வடக்கே சென்று போர்த், க்ளைட் (Forth, Clyde) என்ற நதிகளின் முகத்துவாரங்களைச் சேர்த்து வரிசையாகக் கோட்டைகள் கட்டினார். அதற்கப்பால் இப்பொழுது ஸ்காட்லண்ட் என்று குறிக்கப்படும் தேசத்தில் வசித்த கலிடோனியன்ஸ்(Caledonians)என்ற இனத்தாரை கி.பி.84-ம் வருஷத்தில் ஜயித்து, ஸ்காட்லண்ட் தேசத்தின் வடகடற்கரையோரமாகப் பிரயாணம் செய்து, அயர்லண்ட் தேசத்தின்மீதும் படைபெடுத்துச் செல்ல யோசித்தார். ஆனால் அடுத்த வருஷத்திலேயே அவர் உரோமுக்குத் திரும்பவேண்டியதாயிற்று. அவருக்குப் பின்வந்தவர்கள் அவ்வளவு பராக்கிரமசாலிகள் அல்லர். அக்ரிகோலா தம்முடைய வெற்றிகளினால் மட்டும் கீர்த்தியடைந்தார் என்று எண்ணக் கூடாது; அவர் அரசியல் திறமையும் பெற்றிருந்தார். மேலும் பிரிட்டன் தேசத்தில் அவர் உரோம் நாகரிகத்தைப் பரப்பியதே அவர் செய்த நன்மைகளுள் நிரந்தரமானது. அவரது காலத்திற்குப் பின்னர் பிரிட்டன் தேசத்தில் கனவான்கள் உரோமர்களுடைய

லா/2டின் பாஷையையே பேசி, அவர்களுடைய நடையுடை பாவனைகளையே பின்பற்றலாயினர்.

ஆனாலும் சமயம் வாய்த்தபோதெல்லாம் ஸிரிட்டன் தேசத்தார் கலகம் செய்து தமது சுயாதீனத்தை ஸ்தாபித்துக்கொள்ள முயன்றுவந்தனர். யார்க் என்ற இடத்தில் இருந்த உரோம் சேனையை ஸிரிட்டானியர்கள் தாக்கி வேரறுத்து விட்டனர். ஆதலால் அகிரிகோலாவினுல் ஜயிக்கப்பட்ட வடபாகத்தைப் பரிபாலிப்பது நிரம்பவும் பிரயாசையென்று கண்ட உரோம் சக்கரவர்த்தியான ஹேட்ரியன் (Hadrian) என்பவர் வடபாகத்தை விட்டுவிட்டு அதற்கு இப்பாலிருந்த பிரதேசங்களையே பரிபாலித்து வருவது உத்தமமென்று தீர்மானித்தார். ஆதலால் அவர் கி. பி. 122-ல் உரோமுக்கு உட்பட்ட பிரதேசத்தைத் தெளிவாக நிர்ணயம் செய்யும் பொருட்டு அதனுடைய வட எல்லையில் ஒரு நீண்ட கற்சுவரை எழுப்பிப் பல கோட்டைகளையும் கட்டி வைத்தார். அந்தச் சுவரின் நீளம் சுமார் எழுபது மைல் இருந்தது; அதாவது ஸால்வே (Solway), டைன் (Tyne) என்ற இரண்டு நதிகளின் முகத்துவாரங்களையும் அந்தச் சுவர் ஒன்ருகச் சேர்த்து வைத்தது; அச்சுவரை ஹேட்ரியன் சுவர் என்று குறிப்பது வழக்கம். அந்தச் சுவர் எழுப்பப்பட்ட பின் இப்போது சுமார் பதினெட்டு நூற்றுண்டுகள் ஆனபோதிலும், அதனுடைய சின்னங்கள் இன்றைக்கும் அழியாமல இருந்து வருகின்றன; அதிலிருந்து ஸிரிட்டன் தேசத்தை உரோமர்கள் பரிபாலித்து வந்த பழையகாலம் நமது ஞாபகத்திற்கு வருகிறது. ஹேட்ரியன் அம்மாதிரி தமது இராஜ்ஜிய எல்லையைச் சுருக்கியது ஒரு விஷயத்தில் நல்ல காரியமாகவே முடிந்தது. ஏனென்ருல் அந்த எல்லைக்கு அப்பாலிருந்த இனத்தாரை அடக்குவது மிகவும் கடினமான காரியமாய் விட்ட தாகையால் அவர்களை விட்டுவிட்டு அதற்குத் தெற்கேயுள்ள பிரதேசத்தையாவது நிச்சயமாக ஆண்டு வரலாமென்பது அவருடைய கருத்து. ஆனல் கி. பி. 143-ல் ஸிரிட்டனைப் பரிபாலித்து வந்த உர்ஸிகஸ் (Urbicus) என்ற தளகர்த்தர் தம்முடைய சக்கரவர்த்தியான அன்டோனியஸ் ப்யஸ் (Antonius Pius) என்பவருடைய விருப்பத்தின்படி ஹேட்ரியன் எழுப்பிய சுவரையும் தாண்டி

வடக்கே சென்று, போர்த், க்ளைட் ஆகிய நதிகளின் முகத்து வாரங்களைச் சேர்த்து இன்னொரு சுவர் எழுப்பினார். அதாவது அக்ரிகோலாவினால் ஜயிக்கப்பட்ட பிரதேசம் முழுதையும் பரிபாலிக்க அவர் முயன்றார். ஆனால் அன்டோனியஸ் சுவர் அவ்வளவு முக்கியமான எல்லையாக இல்லை. ஏனெனில் ஹேட்ரியன் சுவருக்கும் அப்பால் உள்ள மலை நாடுகளைத் தமது வசத்தில் வைத்துக் கொள்வது உரோமர்களுக்கு நிரம்பவும் பிரயாசையாக இருந்தது. ஆதலால் நாளடைவில் அவர்கள் ஹேட்ரியன் சுவருக்குத் தென்பக்கத்திலுள்ள பிரதேசங்களிலேயே தமது கவனத்தைச் செலுத்தினார்கள். உரோம் ஆதிக்கத்திற்குட்பட்ட பிரிட்டன் தேசத்திற்கு ஹேட்ரியன் சுவரே சரியான வடக்கு எல்லையாய் இருந்தது.

**(3) உரோம் ஆதிக்கத்தால் பிரிட்டனுக்கு உண்டான நன்மை தீமைகள் :—** அக்ரிகோலா, ஹேட்ரியன் முதலானவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட உரோம் ஆட்சி ஏறக்குறைய முன்னூறு வருஷ காலம் நீடித்து நின்றது. முதலாக பிரிட்டன் முழுதையும் ஒரே பகுதியாக வைத்து அதை உரோம் தேச தளகர்த்தரொருவர் ஆண்டுவந்தார். பிறகு அதே தேசத்தை இரண்டு பிரிவுகளாகவும், பிறகு நான்கு பிரிவுகளாகவும், கடைசியில் ஐந்து பிரிவுகளாகவும் பிரித்து ஆண்டு வந்தனர். ஆனால் அந்த பிரிவுகளினுடைய எல்லைகள் என்னென்ன வென்பது நமக்குப் புலப்படவில்லை. பிரிட்டனில் ஸ்தாபிக்கப்பட்ட உரோம் ஆதிக்கம் முக்கியமாக உரோம் சேனையினுடைய ஆதிக்கமாகவே இருந்தது; அதாவது பிரிட்டன் தேசத்தை எப்பொழுதும் அடக்கித் தமது வசப்படுத்திக் கொண்டிருப்பதற்கு மூன்று பெருத்த சேனைகள் தயாராக இருந்தன. ஒவ்வொரு சேனையிலும் 5000 வீரர்கள் இருந்தனர். மேலும், எல்லைப் புறங்களைப் பாதுகாத்துக்கொள்ள தனியான படைகளும் இருந்து வந்தன. அந்த சேனைவீரர் அநேகமாக உரோமர்களாகவே இருந்தாலும், சில பிரிட்டன் தேச வீரர்களும் உரோம் சக்கரவர்த்தியினுடைய சேனையில் சேர்ந்துகொண்டனர். உரோமினுடைய ஆதிக்கத்தினால் பிரிட்டனுக்கு விளைந்த நன்மைகளுள் முக்கியமானது அங்கு பல இராஸ்தாக்கள் ஏற்பட்டதுதான். அதாவது,

தமது சேனைகளை தேசத்தின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்திற்கு சுலபமாய் நடத்திச் செல்லத் தகுதியான பல இரஸ்தாக்களை உரோமர்கள் உண்டாக்கினர். ஷை இரஸ்தாக்களில் பல கற்கள் பரப்பப்பட் டிருந்தன ; அவைகளின் மூலம் வியாபாரம் நடப்பதும் சௌகரியமா யிருந்தது. அவ்வித இரஸ்தாக்களில் முக்கியமானது வாட்லிங் வீதி (Watling Street) என்பது. அது தேசத்தின் தென் கோடியிலிருந்து வட எல்லை வரைக்கும் நீண்டிருந்தது. அதைத் தவிர மற்ற பல சிறு பாதைகளும் உண்டாக்கப்பட்டிருந்தன. அதற்குமுன் அவ்வளவு நல்ல பாதைகளை ஃபிரிட்டானியர் பார்த்திருந்தது கூட இல்லை. ஷை இரஸ்தாக்கள் இன்றைக்கும் அழியாது இருந்து வருகின்றன. நாகரிக மடைந்திருந்த உரோமர்களின் சம்பந்தத்தால் ஃபிரிட்டனுக்கு ஏற்பட்ட நன்மைகள் பல. மேலே கூறிய இரஸ்தாக்களின் ஓரமாகப் பலநகரங்கள் ஏற்பட்டன; அவைகளைச் சுற்றிலும் மதில் சுவர்களும் உண்டாயின. உரோமின் ஆட்சி இருந்த வரையில் உள்நாட்டுச் சண்டைகள் அநேகமாகக் குறைந்து போயிருந்தமையால், தேசத்தில் அமைதியும் சமாதானமும் ஏற்பட்டன. அதன் பயனாக, பல சீர்திருத்தங்கள் செய்ய இடமுண்டாயிற்று. ஜனங்கள் காடுகளை வெட்டி சம நிலங்களாக்கி, சேற்றுப் பாங்கான பிரதேசங்களைத் தூர்த்து, வியவசாயத்தை அபிவிருத்தி செய்தனர். அதனால் ஐரோப்பா முழுதிற்கும் ஃபிரிட்டன் ஒரு முக்கியமான உற்பத்தி ஸ்தானம் ஆயிற்று. அதற்கு "ஐரோப்பாவின் வடபாகக் களஞ்சியம்" என்ற சிறப்புப் பெயரும் உண்டாயிற்று. இரும்பு, தகரம் முதலிய உலோகங்களிருந்த சுரங்கங்களின் வேலைகள் அபிவிருத்தி யடைந்தன. அழகிய மட்பாத்திரங்களையும் கண்ணாடி சாமான்களையும் செய்தனர். உப்புக் காய்ச்சும் தொழிலும் துவக்கமாயிற்று. உரோம் வியாபாரிகளும், உத்தியோகஸ்தர்களும், சிப்பாயிகளும் தங்களுடைய தாய் பாஷையான லாடின் பாஷையை ஜனங்களினிடையே பரப்பினர் ஃபிரிட்டன் தேசத்து கனவான்கள் அந்த பாஷையைப் பேசி, உரோமர்களைப் போல நடந்துகொள்வதை கௌரவமாக எண்ணினர். இப்பொழுது நமது தேசத்தில் பலர் இங்கிலீஷ் பாஷையைப் பேசி இங்கிலீஷ்காரரைப் போல நடந்துகொள்வதை கௌரவமாக நினைப்பது

போலவே அக்காலத்து ஸிரிட்டானியரும் நினைத்து நடந்து வந்தார்கள். ஆனால் பழைய கேல்டிக் பாஷை முற்றிலும் மறைந்து போய் விடவில்லை. சாமானிய ஜனங்கள் அதையே பேசி வந்தார்கள். இன்னும் கூட இங்கிலண்டின் மேற்கு பாகமான வேல்ஸ் (Wales) மாகாணத்தில் அந்த பாஷை இருந்து வருகிறது.

கிரிஸ்து பிறந்ததற்கு முன்னூறு வருஷகாலத்திற்குப் பிறகு தான் உரோமர்கள் அந்த மதத்தைத் தழுவினார்கள். ஆனால், அதற்கு முன்பே ஸிரிட்டனில் பலர் அந்த மதத்தைத் தழுவி அதற்காகத் தமது உயிரையும் தியாகம் செய்திருந்தனர். ஸிரிட்டனில் கிரிஸ்து மதம் பரவி வேரூன்றிய பிறகு, அங்கிருந்து பல பாதிரிகள் வேறு தேசங்களுக்குச் சென்று, அந்த மதத்தைப் பரப்பினார்கள. அவர்களில் இருவர் முக்கியமானவர்கள். ஸெயின்ட் பா/2ட்ரிக் (Saint Patrick) என்பவர் அயர்லண்டு தேசத்தில் கிரிஸ்து மதத்தைப் பரப்பினவர் ; இன்னும்கூட அயரிஷ்காரர்கள் அவரையே தமது முதல் மத குருவாக வழிபட்டு வருகிறார்கள். ஸெயின்ட் நீனியன் (St. Ninian) என்பவர் வடக்கே சென்று மலைநாடுகளில் இருந்த கா/2லிடோனியன்ஸ் அல்லது பிக்ட்ஸ் (Picts) என்ற இனத்தாரை கிரிஸ்துவர்க ளாக்கினார். இம்மாதிரி, உரோமினுடைய ஆதிக்கத்திற்கு உட்படாத தேசங்களிலும் கிரிஸ்து மதம் பரவி முரட்டு ஜாதியாரை நாகரிகமுடையவர்களாகச் செய்தது.

உரோமினுடைய சம்பந்தத்தால் ஏற்பட்ட நன்மைகளில் இன்னும் சிலவற்றை முக்கியமாகக் கூறலாம். ஸிரிட்டானியர்கள் தம்முடைய பழைய முரட்டு குணத்தையும் சச்சரவுகளையும் விட்டு அமைதியான பிரஜைகளாக வாழத் தொடங்கினார்கள். தேசமெங்கும் பல நகரங்கள் ஏற்பட்டதனால், அவ்விடங்களில் பலர் ஒன்று கூடி வாழ்ந்து, தமது வியவகாரங்களைத் தாமே நிர்வகிக்க வழி உண்டாயிற்று. பல பொதுவான கட்டிடங்களும், நாடகக் கொட்டகைகளும், கோவில்களும், நந்தவனங்களும், நீராடுமிடங்களும் கட்டப்பட்டன. பொதுவாக, ஒரு நாகரிகமடைந்த இராஜ்ஜியத்தின் சுகசௌகரியங்களில் பல ஸிரிட்டனில் தோன்றின. ஆனால் உரோமினுடைய ஆட்சியால் விளைந்த இத்தனை நன்மைகளையும் சூன்ய

மாகச் செய்யக்கூடிய ஒரு பெரிய தீமையும் ஷிரிட்டானியர்களுக்கு விளைந்துவிட்டது. அதாவது, சுமார் முன்னூறு வருஷகாலம் அவர்கள் உரோம் சேனையால் அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு, பராதீனமாக இருக்க நேர்ந்தமையால், தம்முடைய பழைய வீரியத்தையும் தைரியத்தையும் யுத்தப்பழக்கத்தையும் அறவே மறந்து, முற்றிலும் சக்தியற்றவர்கள் ஆய்விட்டார்கள். அது பிறகு அவர்களுக்குப் பெருத்த தீங்காக முடிந்தது. புதிய சத்துருக்கள் தமது தேசத்தை எதிர்த்து வந்தபோது அவர்கள் தம்மைப் பாதுகாத்துக்கொள்ளும் திறமையற்றவர்களாய்த் தோல்வியடைய நேர்ந்தது. பராதீனமாக இருக்கும் தேசங்கள் இவ்வித நிலைமையை யடைவது சர்வ சாதாரணமான விஷயமே.

(4) **உரோம் ஆதிக்கத்தின் முடிவு:**—கிரிஸ்து சகாப்தம் தொடங்கி முன்னூறு ஆண்டுகள் வரையில் உரோம் இராஜ்ஜியம் ஐரோப்பாவில் நிரம்பவும் கீர்த்திபெற்று பிரபல மடைந்திருந்தது. பின்பு அதன் க்ஷீணகாலம் தொடங்கலாயிற்று. அதற்குட்பட்டிருந்த பல பிரதேசங்களில் கலகங்கள் தோன்ற, எங்கும் அமைதியின்மையே மிகுந்துநின்றது. ஆனாலும், மேலும், ஒரு நூற்றாண்டுவரையில் உரோம் இராஜ்ஜியம், சில பிரபலமான சக்கரவர்த்திகளது சாமர்த்தியத்தால் சிதறுண்டு போகாமல் இருந்துவந்தது. உரோமினுடைய சக்தி குறையக் குறைய, ஷிரிட்டன் தேசத்திற்கும் துன்பங்கள் சம்பவித்தன. வடக்கேயிருந்த மதில் சுவர்களையும் பொருட்படுத்தாமல், கா/2லிடோனியன்ஸ் அல்லது பிக்ட்ஸ் என்ற முரட்டு ஜாதியார் ஷிரிட்டினுடைய வடபாகத்தைத் தாக்கி உபத்திரவித்துக்கொண்டே இருந்தனர். மேலும், அப்பொழுது அயர்லண்டில் வசித்துவந்த ஸ்காட் என்ற இனத்தார் ஷிரிட்டனுடைய மேற்குக் கரையைத் தாக்கிப் பல இடங்களை சுவாதீனப்படுத்திக் கொண்டனர். ஷெ துன்பங்கள் போதாவென்று ஜெர்மனியில் இருந்து ஸா/2க்ஸன் (Saxon) என்ற கொள்ளைக் கூட்டத்தார் வந்து தென்பாகத்தைத் தாக்கினார்கள். இம்மாதிரி நாலாபக்கங்களிலும் தாக்குண்ட ஷிரிட்டனைக் காப்பாற்றுவதற்கு உரோமர்கள் தகுந்த முயற்சி எடுத்துக்கொண்டு, புதிய சேனைகளையும் அனுப்பிவைத்தார்கள்; பல கோட்டைகளையும் கட்டினார்கள். ஆனால் அதற்குள்

உரோம் இராஜ்ஜியத்திற்கே பெருத்த அபாயம் நேர்ந்துவிட்டது. ஜெர்மனியில் இருந்த முரட்டு ஜாதிக் கூட்டத்தார்கள் ஐந்தாவது நூற்றுண்டின் துவக்கத்தில் உரோம் நகரத்தையே எதிர்த்தார்கள். தமது தேசத்தைப் பாதுகாக்கும்பொருட்டு உரோம் சக்கரவர்த்தி கி. பி. 410-ம் வருஷத்தில் பிரிட்டனில் இருந்த துருப்புகளைத் தமது தேசத்திற்கு அழைத்துக்கொண்டார். அதன்பிறகு உரோமர்கள் பிரிட்டனுக்குப் பணமோ படையோ அனுப்புவதை நிறுத்திவிட்டார்கள். பிரிட்டானியர்கள் எவ்வளவோ மன்றுடிப் பார்த்தார்கள். உரோமினுடைய உதவி அவர்களுக்குக் கிடைக்காமலேயோ போய்விட்டது.

ஆனல் உரோம் நாகரிகத்தைப் பின்பற்றிய பிரிட்டன் தேசத்து கனவான்கள் பழைய முறையில் தாமே அரசை வகித்து வரலாம் என எண்ணினுர்கள். அவர்களது எண்ணம் பலிக்காமல் போயிற்று. அவர்களிடம் உரோம் ஆதிக்கத்தின் பலனுக, லா/2டின் பாஷையும் புதிய நடையுடை பாவனைகளும் வேரூன்றி யிருந்தனவேயன்றி உரோமர்களுடைய திறமையும் சாமர்த்தியமும் அவர்களிடம் காணப் படவில்லை. மேலும் பழைய சச்சரவுகளும், பரஸ்பர வெறுப்பும், பொரூமையும் மறுபடி கிளம்பி, தேசத்தின் ஒற்றுமையையும், அமைதியையும் அழித்துவிட்டன. தென் பிரிட்டன் மறுபடி பல தனித்த சிறு பிரதேசங்களாகச் சிதறுண்டு, வெவ்வேறு தலைவர்களது வசமாயிற்று. அந்தக் குழப்பம் சத்துருக்களுக்கு அநுகூலமாக முடிந்தது. வடக்கே பிக்ட்ஸ் என்ற கூட்டத்தார் தங்களுடைய கொள்ளைத்தொழிலை எவ்வித இடையூறுமின்றிச் செய்துவந்தனர், அயர்லண்டிலிருந்த ஸ்காட் இனத்தாரும் வடமேற்குக் கடற்கரையோரங்களைப் பிடித்துக்கொண்டு, பிரிட்டனின் வடபாகத்தில் குடியேறி அந்தப் பிரதேசத்திற்கு ஸ்காட்லண்டு என்ற பெயரையும் உண்டாக்கினர். அந்தப் பெயரே இப்பொழுதும் இருந்துவருகிறது. அவ்விரு எதிரிகளையும் தவிர, தெற்கிலிருந்து வந்த ஸா/2க்ஸன் இனத்தாரே அதிக அபாயத்தை உண்டாக்கினர். அவர்கள் கொள்ளையிட்டதுடன் மாத்திரம் நிற்காமல், தங்களுக்கென நிரந்தரமாக தேசங்களை ஆக்கிரமித்துக்கொள்ள முயன்றுவந்தனர். பிரிட்டன் தேசத்தை உரோமர்கள் விட்டுச்சென்ற பின் நாற்பது

வருஷத்திற்கெல்லாம் ஸா/2க்ஸன் படையெழுச்சி ஆரம்பமாயிற்று. அந்தப் படையெழுச்சியை அடுத்த அத்தியாயத்தில் விரிவாக விளக்குவோம். ஸா/2க்ஸன் படையெழுச்சி முடிந்து, பிரிட்டன் அவர்களது வசமாக சுமார் 150 வருஷகாலம் ஆனது. அக்காலத்திற்குள் உரோம் ஆட்சியினால் விளைந்த நன்மைகளில் பல மறைந்துவிட்டன. உரோமர்களால் கட்டப்பட்ட நகரங்கள், உத்தியானவனங்கள், கோவில்கள், பொதுக் கட்டிடங்கள் முதலியவைகளின் சின்னங்களும், பழைய இரஸ்தாக்களும், லா/2டின் பாஷைப் பதங்களுமே உரோம் ஆட்சியின் ஞாபகச் சின்னங்களாய் நிலைத்துநின்றன; ஆனால் ஐரோப்பாவின் வடமேற்கு மூலையில் அநாகரிக நிலைமையில் எவ்விதமான கீர்த்தியுமற்று இருந்துவந்த பிரிட்டன் தேசத்தை மற்ற முக்கிய தேசங்களுடன் சம்பந்தப்படுத்தி நாகரிகம் அடையும்படி செய்தது உரோமினுடைய ஆட்சியே என்பதை நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

---

## 3-வது அதிகாரம்.

---

### பிரிட்டன் தேசத்தில் இங்கிலீஷ்காரர்கள் குடி யேறுதல்.

(1) **இங்கிலீஷ்காரர்களின் பூர்வ சரித்திரம்:**—கிறிஸ்து சகாப்தம் ஐந்தாவது நூற்றாண்டின் மத்தியில் பிரிட்டனில் வந்து குடியேறிய இனத்தாருக்குப் பொதுவாக **ட்யூடன்** (Teuton) வகுப்பார் என்ற பெயர் இருந்து வருகிறது. அவர்கள் மத்திய ஆசியாவிலிருந்த ஆரியர்களின் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறுவார்கள். அவர்கள் வட ஜெர்மனியிலிருந்து பிரிட்டனை நோக்கி வந்தார்கள். அந்த இனத்தார் எல்லோரும் நடையுடைபாவனைகளிலும் பேச்சிலும் ஒரேமாதிரியாக இருந்தார்களானாலும், அவர்களை ஜ்யூட்ஸ், (Jutes), ஸா/2க்ஸன்ஸ், (Saxons), ஆ/2ங்கில்ஸ் (Angles) என்று மூன்று பெரிய வகுப்புகளாய்ப் பிரிக்கலாம். முதலாகக் கூறிய ஜ்யூட் இனத்தாரே பிரிட்டனில் முதலில் குடியேறினார்களானாலும், அவர்கள் அவ்வளவு முக்கியமான பிரிவினரல்லர். அவர்கள் ஐரோப்பாவிலுள்ள ஜட்லண்டு (Jutland) என்ற பிரதேசத்தில்

ருந்து வந்ததாகச் சிலர் கூறுகிறார்கள்; சிலர் அது தவறென்று மறுக்கின்றனர். ஸாக்ஸன் இனத்தார் வடஜெர்மனி முழுதிலும் பரவி, அநேக கூட்டத்தாராய் இருந்து வந்தனர். ஆங்கில்ஸ் என்ற கூட்டத்தாரோ ஸாக்ஸன் இனத்தாரிருந்த இடத்திற்கு வடக்கில், இப்பொழுது ஹால்ஸ்டீன் (Holstein) என்று குறிக்கப்படும் பிரதேசத்திலிருந்து வந்தார்கள். ஆனால் ஆங்கில்ஸ் இனத்தாரில் அநேகமாய் எல்லோரும் பிரிட்டனில் குடியேறிவிட்டமையால், ஜெர்மனியில் அவர்களிருந்த அடையாளமே இல்லாமல் போய் விட்டது.

அவ்வாறு ஜெர்மனியிலிருந்து வந்த மூன்று இனத்தார்களும் நிரம்பவும் பராக்கிரம சாலிகளாகவும் திட காத்திர சரீரிகளாகவும் சண்டை செய்வதில் சாமர்த்திய சாலிகளாகவும் இருந்தனர். அவர்களில் ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஒரு தலைவன் அல்லது சிற்றரசன் இருந்தான். தலைவனுக்குப் பொதுவாக ஆல்டர்மான் (Alderman) என்பது பெயராக இருந்தது. ஒவ்வொரு கூட்டத்தாரும் பிறருடன் ஒன்றுசேராமல் தனியாக இருந்து வந்தார்கள். உரோமர்களுடைய ஆதிக்கத்திற்கு உட்படாமல் அவர்கள் ஒதுங்கியிருந்து விட்டமையால், உரோம் நாகரிகம் அவர்களிடம் பரவ இடமில்லாமல் போயிற்று. மற்ற பல முரட்டு ஜாதிகளை சாந்தப்படுத்திய உரோம் நாகரிகம் அவர்கள் வரையில் எட்டவில்லை. அதனால், அம் மூன்று இனத்தார்களும் கிரிஸ்துவ மதத்தைத் தழுவாமல், தமது பழைய பழக்க வழக்கங்களையே கையாண்டு, வோடன், தார் முதலிய முரட்டு தேவதைகளைப் பூஜித்து வந்தனர். உரோம் நாகரிகத்தை அவர்கள் விரும்பவுமில்லை, மதிக்கவுமில்லை. அதன் பயனாக, அவர்கள் பிரிட்டனில் குடியேறியதும், அங்கு உரோம் அரசாட்சியினால் ஏற்பட்டிருந்த நன்மைகளை யெல்லாம் மாற்றி அழித்து விட முயன்றார்கள். ஐந்தாவது நூற்றாண்டில் ஐரோப்பா முழுதிலும் பரவியிருந்த உரோம் இராஜ்ஜியத்தைப் பல பக்கங்களிலும் பல முரட்டு அநாகரிக ஜாதியார் தாக்கினார்கள். ட்யூடன் என்னும் இனத்தார் பிரிட்டன்மீது படையெடுத்ததும் அப்பெரும் இயக்கத்தைச் சேர்ந்ததே யென்னலாம். ஆனால், பிரிட்ட

ணிலேயே இந்த அநாகரிகக் கூட்டத்தார் உரோம் ஆட்சியினுடைய ஞாபகச் சின்னங்களைப் பெரும்பாலும் அழித்து விட்டனர்.

ப்ரிட்டன் மீது படையெடுத்த இனத்தாரனைவரும் ஒரு பொதுவான பெயரைக் கொண்டிருக்கவில்லை. ஆனால் அவர்களெல்லோரையும் பொதுவாக ஸா/2க்ஸன் இனத்தார் என்று உரோமர்களும் ப்ரிட்டானியரும் குறித்து வந்தனர். ஆனால் அம்மூன்று இனத்தாரும் ப்ரிட்டன் தேசத்தில் ஸ்திரமாகத் தங்கிய பிறகு, அவர்களெல்லோரும் ஆ/2ங்கில்ஸ் என்ற பொதுப் பெயரினால் குறிக்கப்பட்டுப் போயினர். ஷை மூன்று வகுப்புகளிலும் ஆ/2ங்கில்ஸ் வகுப்பே முக்கியமாக இருந்ததாகையால் அந்தப் பெயரையே மற்ற இரு வகுப்பாரும் வைத்துக் கொண்டனரென்றும் கூறலாம். ஆ/3ங்கிள்ஸ் என்ற பதமே இங்கிலீஷ் என மாறியது.சில சமயங்களில் மேற்படி மூன்று இனத்தாரையும் ஆ/2ங்கிலோ—ஸா/2க்ஸன் என்றும் குறிப்பதுண்டு. ஷை இங்கிலீஷ்காரர்கள் — அதாவது ஜ்யூட்ஸ், ஸா/2க்ஸன்ஸ், ஆ!2ங்கில்ஸ் ஆகிய மூன்றும் கலந்த இனத்தார் வசித்த தேசமே இங்கிலண்ட் என்ற பெயரைப்பெற்றது. ஆனால் இப்பொழுது உள்ள இங்கிலீஷ்காரர்கள் யாவரும் மேற்கூறியவர்களுடைய சந்ததியாரல்லர். பிற்காலத்தில் வேறு சில இனத்தாரும் வந்து அவர்களுடன் கலந்து போய் இங்கிலீஷ்காரர் என்றழைக்கப்பட லானார்கள்.

(2) இங்கிலீஷ்காரரின் குடியேற்றம் :— ஷை மூன்று இனத்தாரும் எவ்விதமாக ப்ரிட்டனுக்கு வந்தார்கள் என்பது தெளிவாகத் தெரியவில்லை. அவர்கள் வந்த விதத்தைப்பற்றிப் பல கதைகள் இருக்கின்றன. அவைகளில் எவ்வளவு உண்மை இருக்கிறதென்பது நமக்குத் தெரியாது. அதில் ஒரு வரலாறு பின் வருமாறு. ப்ரிட்டனில் அரசாண்டு வந்த வார்டிஜர்ன் (Vortegern) என்பவர் தம்மை எதிர்த்த பிக்ட்ஸ் இனத்தாரைத் தோற்கடிக்க மாட்டாமல், ஜெர்மனியில் இருந்த ஜ்யூட்களைத் தமக்கு உதவியாக அழைத்தார், அவர் பெருத்த சன்மானம் அளிப்பதாய் வாக்குறுதி செய்ததைக் கண்டு, ஹென்ஜிஸ்ட், ஹொர்ஸா (Hengist, Horsa) என்ற இரு சகோதர வீரர்கள் தமது படையுடன்

வந்து ஸிரிட்டிஷ் அரசருக்கு உதவிபுரிந்தனர். ஆனால், வந்த வேலை முடிந்தபின், அவர்கள் ஊருக்குக் திரும்பாமல், ஸிரிட்டன் தேசத்தின் செழுமையைக் கண்டு அவ்விடத்திலேயே இருந்துவிட நிச்சயித்தனர். அவர்கள் ஸிரிட்டனில் தென்கிழக்கு மூலையிலுள்ள கேன்ட் (Kent) என்ற பிரதேசத்தில் வசித்த சுதேச ஜனங்களைத் துரத்திவிட்டு, அதை ஆக்கிரமித்துக் கொண்டனர். அதனால் கென்ட் மாகாணமே முதல் குடியேற்றப் பிரதேசமாயிற்று. ஹென்ஜிஸ்ட், ஹோர்ஸா என்ற சகோதரர்கள் கென்டை ஆண்டு வந்தனர். பிறகு ஸிரிட்டனுக்குத் தெற்கிலுள்ள வைட்தீவும் (Isle of Wight) ஜ்யூட்களின் வசமாயிற்று. ஜ்யூட் இனத்தார் ஆக்கிரமித்துக் கொண்ட பிரதேசங்கள் மிகச் சிலவே.

ஜ்யூட்களுக்குப் பிறகு ஸாக்ஸன் இனத்தார் வந்து தெற்கிலும் தென் கிழக்கிலும் வியாபித்தனர். முதலாக ஸஸ்ஸெக்ஸ் (Sussex) அல்லது தென் ஸாக்ஸன் மாகாணமும், பிறகு பல வருஷங்கள் கழிய, வெஸ்ஸெக்ஸ் (Wessex) அல்லது மேற்கு ஸாக்ஸன் மாகாணமும் ஸ்தாபிக்கப்பட்டன. அவ்விதமே நாளடைவில் கிழக்குப் பிரதேசத்தில் எஸ்ஸெக்ஸ் (Essex) மாகாணமும், மத்தியில் மிடில்ஸெக்ஸ் (Middlesex) மாகாணமும் உண்டாயின. அவைகள் யாவற்றிலும் வெஸ்ஸெக்ஸே முக்கியமாக அபிவிருத்தி யடைந்து ஸிரிட்டன் தேசமுழுதிற்கும் தலைமை ஸ்தானமாயிற்று. ஸிரிட்டன் தேசத்தின் கிழக்கு, மத்திய, வடபாகங்களில் ஆங்கிலர்கள் வியாபித்தார்கள். எஸ்ஸெக்ஸ் மாகாணத்திற்கு வடக்கில் ஈஸ்ட் (கிழக்கு) ஆங்கிலியா (East Anglia) என்ற பெயர்கொண்ட பிரதேசத்தில் ஒரு பகுதியினர் குடியேறினார்கள். மத்திய பிரதேசத்தில் மேர்ஸியா (Mercia) என்ற மாகாணம் ஏற்பட்டது. மெர்ஸியா என்றால், எல்லைப்புற தேசம் என்று பொருள்படும். வடக்கில் இரு முக்கியமான மாகாணங்களில் அவர்கள் வியாபித்தனர். அவை டேய்ரா (Deira), பேர்னிஸியா (Bernicia) என்றழைக்கப் பட்டன. அவை இரண்டும் சேர்ந்து நார்தம்ஸிரியா (Northumbria) என்று குறிக்கப்படுகின்றன. இம் மூன்று இனத்தாரும் பரவிய பிரதேசங்களைப் பின்வருமாறு பிரிக்கலாம்.

ஜ்யூட்கள்:—கென்ட், வைட்தீவு.

ஸா/2க்ஸன்கள்:—ஸஸ்ஸெக்ஸ், எஸ்ஸெக்ஸ், வெஸ்ஸெக்ஸ்.

ஆ/2ங்ஙிலீஸ்:—ஈஸ்ட் ஆங்கலியா, மெர்ஸியா, நார்தம்ப்ரியா.

(3) ஸ்ரிட்டனிலிருந்த பழைய குடிகளின் கதி:—புதிதாக வந்த இனத்தார்கள் ஸ்ரிட்டனில் நிரந்தரமாகக் குடியேறி நிலைப்பதற்கு ஏறக்குறைய 150 வருஷகாலம் பிடித்தது. உரோமர்களுடைய சேனைத் திறமையையும் யுத்த முறையையும் நன்றாக அறிந்திருந்த ஸ்ரிட்டன்கள் அவர்களை சாமர்த்தியமாக எதிர்த்து வந்தார்கள். மேலும், இங்கிலீஷ் இனத்தார் ஒரே கூட்டமாகச் சேர்ந்து ஒரு தலைவனுக் குட்பட்டு ஒற்றுமையாக இருக்காமல், தனித்தனியான குடும்பங்களாகவும் பிரிவுகளாகவும் பிரிந்திருந்து அவரவரது இச்சைப்படி வந்து குடியேறினார்கள். ஆனால் அவர்கள் புதிய தேசத்தில் குடியேறினாலும் தம்முடைய பழைய பழக்க வழக்கங்களையும் பழைய மதத்தையுமே பின்பற்றி வந்தார்கள். அது ஒரு முக்கியமான விஷயம். ஸ்ரிட்டனில் இருந்த ஆதிக் குடிகள் ஏற்கனவே ஓரளவு நாகரிகமடைந்து, கிறிஸ்து மதத்தைத் தழுவியிருந்தார்கள். ஆனால் மறுபடியும் ஸ்ரிட்டனில் முரட்டு ஜாதியாரும் அநாகரிக மதத்தைப்பின்பற்றியவர்களுமேவந்துநிறைந்துவிட்டனர்.

புதிய கூட்டத்தாரை எதிர்த்து நிற்க மாட்டாமல் ஸ்ரிட்டன் குடிகளிற் பலர் தமது செழிப்பான தேசத்தைத் துறந்து மேற்குப் புறத்திலுள்ள மலைப் பிரதேசங்களுக்குப் போய் அடைக்கலம் புகுந்து, அங்கு சுயேச்சையாய் இருந்து வந்தனர். சிலர் மாத்திரம் புதிய இனத்தாரிடம் அகப்பட்டு, அவருக்கு அடிமைகளாகவோ, அல்லது, சேவகர்களாகவோ இருந்து வேலை செய்து, நாளடைவில் தம்முடைய பழைய பழக்க வழக்கங்களையே மறந்து புதிய இனத்தாருடன் கலந்து போயினர். ஸ்ரிட்டன் முழுதும் பரவியிருந்த கிறிஸ்து மதமும் அடியோடு மறைந்து போய்விட்டது. இங்கிலீஷ்காரர்கள் சென்ற இடமெல்லாம் அவர்கள் தம்முடைய ஸ்தாபனங்களையும் கொள்கைகளையுமே பரப்பினார்கள். மேலும் ஸ்ரிட்டன் தேசத்துப் பழைய குடிகள் ஒற்றுமையாகச் சேர்ந்து புதிய எதிரிகளை எதிர்க்கவில்லை; சிற்சில சமயங்களில் மாத்திரம் சில ஸ்ரிட்டன் வீரர்

கள் வெகு திறமையாகத் தம்முடைய சுயேச்சையை மீண்டும் பெறுவதற்கு பகீரதப் பிரயத்தனம் செய்தார்கள். அவர்களில் முக்கியமானவர் ஆர்தர் என்ற அரசர் (King Arthur). அவரைப்பற்றியும், அவருடைய தோழர்களைப் பற்றியும், அவர்களுடைய வீரச்செயல்களைப் பற்றியும் பல கதைகள் இருக்கின்றன. ஆனால் ஆர்தரைப் போன்ற வீரர்கள் சில சமயங்களில் வெற்றியடைந்தனரானாலும், அவர்களால் புதிய இனத்தாருடைய குடியேற்றத்தைத் தடுக்க முடியவில்லை. ஏனென்றால், முன்னரே கூறியபடி ஸிரிட்டன் குடிகளுக்குள்ளேயே ஒற்றுமை கிடையாது. அவ்விதமே புதிய இனத்தாருக்குள்ளும் ஒற்றுமை இல்லை; புதிய இனத்தாரெல்லோரும் ஒன்றுபட்டு நடந்திருந்தால் ஸிரிட்டன் தேசத்திலிருந்த பழைய குடிகளெல்லோரையும் அடியோடு வேரறுத்து இருப்பார்கள். சுயமதிப்பு மிகுந்த சில ஸிரிட்டானியர்கள் பகைவரின் ஆட்சிக்குட்படுவதைவிட வேறு தேசத்திற்குப் போவதே மேலானதென் றெண்ணி ஐரோப்பாவின் ஒரு பாகத்தில் குடியேற, அந்தப் பாகத்திற்கு ஸிரிட்டனி என்ற பெயர் உண்டாயிற்று. இப்பொழுதும் கூட ஸிரிட்டனி தேசத்தின் ஜனங்கள் பழைய கெல்டிக் பாஷையையே பேசி வருகின்றனர். இம்மாதிரி பலர் வேறுதேசம் சென்றது, இங்கிலீஷ்காரருக்கு சௌகரியமாயிற்று. அவர்கள் சுலபத்தில் தேசத்தைத் தமது வசப்படுத்திக் கொண்டனர்.

மலைநாடுகளில் ஓடி ஒளிந்த ஸிரிட்டன்களை, புதிதாக வந்த இங்கிலீஷ்காரர்கள் வேல்ஷ் (welsh) என்று அழைத்தனர்; அதாவது ஏதோ ஒரு தனித்தபாஷையைப் பேசுகிறவர்கள் அல்லது அன்னியர்கள் என்று அர்த்தம். வெல்ஷ் இனத்தாருடைய தேசத்திற்கு வேல்ஸ் (Wales) என்ற பெயர் நிலைத்துவிட்டது. இப்பொழுது இங்கிலண்டின் பூர்விகக் குடிகள் யார் யார் என்பது விளங்கியிருக்கும். முதலாக ஐஸீரியர்கள் என்பவர் இருந்தனர்; அவரைத் தோற்கடித்து கெல்டிக் இனத்தார் தேசத்தை சுவாதீனப்படுத்திக் கொண்டு அதற்கு ஸிரிட்டன் என்ற பெயரை அளித்தனர். கெல்டிக் இனத்தார் வந்ததும் பழைய ஐஸீரியர்கள் மேற்குப்புறத்திலுள்ள மலைகளுக்குச் சென்று குடியேறினார்கள். பிறகு கெல்டிக் அல்லது ஸிரிட்டானிய இனத்தார் வெகுகாலம் உரோமினுடைய


இங்கிலிஷ் காரர் குடியேறிய
பிரதேசங்கள்
7 வது நூற்றாண்டின் ஆரம்பம்
ஆங்கில்ஸ்
ஸாக்ஸன்
ஜ்யூட்ஸ்
ஸ்காட்ஸ்
பிரிட்டன்ஸ்(வேல்ஸ்)
வேல்ஷ் இனத்தார்
பிக்ட்ஸ் இனத்தார்
பிக்ட்
இனத்தார்
போர்த் நதி
ஐல் அப்
மான்
யார்க்
ஹம்பர் நதி
மத்திய இங்கிலீஷ்
கென்ட்
வைட தீவு

(24-வது பக்கம்)

ஆதிக்கத்திற்குட்பட்டு இருந்தனர். கடைசியாகப் புதிதாக வந்த இங்கிலீஷ்காரரால் துரத்தப்பட்டு, கெல்டிக் இனத்தாரும் மேற்கு மலை நாடுகளில் சென்று நிலைத்தனர். அதாவது அவர்கள் ஐஷீரியர்களை ஒட்டிய இடத்திற்கே பிற்பாடு அவர்களும் துரத்தப்பட்டனர். மேற்கில் சென்று நிலைத்த கெல்டிக் இனத்தாரே வெல்ஷ் இனத்தார் என்று பெயர் பெற்றார்கள். இன்னமும் வேல்ஸ் மாகாணத்தில் அவர்களுடைய சந்ததியாரே இருந்து வருகிறார்கள்; பழைய கெல்டிக் பாஷையே அங்கு இப்பொழுதும் பழக்கத்தில் இருந்து வருகிறது.

வெல்ஷ் இனத்தாருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் நீண்டகாலம் போராட்டம் நடந்துகொண்டிருந்தது. கடைசியில் இங்கிலீஷ்காரர்கள் வெல்ஷ் இனத்தார் குடியேறியிருந்த மேற்குப் பக்கத்தை மூன்று பாகங்களாகப் பிரித்துவிட்டனர். அதனால் வெல்ஷ்காரர்கள் ஒன்றுசேருவது முற்றிலும் அசாத்தியமாயிற்று. ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பம் வரையில் வெல்ஷ்காரர்களே ஷிரிட்டனுடைய மேற்குப் பாதியை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். அது இப்பொழுது மூன்று பிரிவுகள் ஆய்விட்டது. வடக்கே இருந்த பிரிவுக்கு கம்ஷிரியா (Cumbria) என்று பெயர்; நடுவில் இருந்த மாகாணமே இப்பொழுது வேல்ஸ் (wales) எனப்படுகிறது; அப்பொழுது அதற்கு வடவேல்ஸ் என்ற பெயர் இருந்தது; மூன்றாவதாக, தென்மேற்குக் கோடியிலுள்ள த்வீபகல்பம் மேற்குவேல்ஸ் என்றழைக்கப் பட்டது. இம்மாதிரி உரோமர்களுடைய ஆட்சியில் ஒன்றுபட்டிருந்த ஷிரிட்டன் தேசம் இங்கிலீஷ்காரருக்கும் வெல்ஷ்காரருக்குமாகப் பிரிவுபட்டுப் போயிற்று.

ஷிரிட்டனுக்கு வடக்கே பிக்ட்ஸ் என்ற இனத்தார் இருந்ததாக முன்பே குறிப்பிட்டோமல்லவா? அவர்களுடைய தேசத்தையும் அயர்லண்டிலிருந்து வந்த ஸ்காட் இனத்தார் தாக்கி, அங்கு குடியேற, நாளடைவில் மேற்படி இரு இனத்தார்களும் ஒன்றுபட்டுப்போனார்கள். ஒன்பதாவது நூற்றாண்டில் பிக்ட்ஸ் இனத்தாரையும் ஒரே அரசன் பரிபாலிக்கத் தொடங்கினான். ஆகவே, அந்த தேசம் முழுதுமே ஸ்காட்லண்டு என்ற பெயரைப் பெற்றது.

அவ்விதமே ஸிரிட்டன் தேசத்தின் கிழக்குபாகம் இங்கிலண்டு என்றும், மேற்குபாகம் வேல்ஸ் என்றும், ஸிரிட்டனுக்கு மேற்கேயுள்ள தீவு அயர்லண்டு எனவும் அழைக்கப்படலாயின. ஆனால் அவை யாவற்றிலும் இங்கிலண்டு தேசமே முதன்மைபெற்றது. ஏனென்றால் வெல்ஷ்காரர்களும் மற்றவர்களும் தனித்தனிக் கூட்டங்களாகவே நின்றுவிட்டனர். ஆனால் இங்கிலீஷ்காரர்களோ முதலில் பிரிந்திருந்தும், நாளடைவில் ஒன்று சேர்ந்து, கடைசியில் ஒரே தலைவனுக்கு உட்பட்டவாராயினர். வெல்ஷ்காரர்கள் தமது எதிரிகளான இங்கிலீஷ்காரரைவிட அதிக நாகரிகம் படைத்திருந்தாலும், அவர்கள் அரசியல் திறமையையும் ஊக்கத்தையும் பெறவில்லை; அதனால்தான் இங்கிலீஷ்காரர் வெகு சீக்கிரத்தில் தமது அதிகாரத்தை ஸ்தாபித்து விட்டனர். வெல்ஷ்காரர்களுக்குள் நடந்த போராட்டத்தினால் குழப்பமும் அமைதியின்மையும் விரோதமுமே பெருகின; இங்கிலீஷ்காரர்களுக்குள் நடந்த போராட்டத்தினால் ஒற்றுமை விருத்தியடைந்து, ஒரே பொதுவான இராஜ்ஜியம் தோன்ற இடமுண்டாயிற்று. மேலும் நாளடைவில் இங்கிலீஷ்காரர்களும் கிரிஸ்து மதத்தைத் தழுவியபின்னர், அவர்களுக்குள் ஒற்றுமை பலப்பட்டது. ஏனென்றால் பொதுவான மதத்தைத் தழுவுகிறவர்கள் அன்னியோன்னியமாக இருப்பது இயற்கையே. அடுத்த அதிகாரத்தில் அதை விரிவாகக் கூறுவோம்.

---

## 4-வது அதிகாரம்

---

### இங்கிலண்டில் கிரிஸ்துமதம் பரவியது.

(1) **ஏழு இராஜ்ஜியங்கள்:**—ஸிரிட்டனில் குடியேறிய இங்கிலீஷ்காரர்கள் நினைத்தபடியெல்லாம் பல சிறு இராஜ்ஜியங்களை ஸ்தாபித்தனரானாலும், வெகு சீக்கிரத்தில் மேற்படி சிறிய சிறிய இராஜ்ஜியங்களுக்குள் ஒருவித ஐக்கிய உணர்ச்சி தோன்றி விட்டது. அதன் பயனாக, அநேக சிறு பிரதேசங்கள் ஒன்றுபட வழியேற்பட்டது. சாதாரணமாக பராக்கிரமசாலியான ஓர் அரசன்

சமீபத்திலுள்ள சிறிய இராஜ்ஜியங்களைத் தன்னுடைய ஆதிக்கத்திற் குட்படுத்திக் கொள்ளலாம். ஆனால் ஜயிக்கப்பட்ட இராஜ்ஜியங்கள் தம்முடைய தனித் தன்மையை முற்றிலும் இழந்துவிடாமல், தம்மை வெற்றிகொண்ட அரசனுக்குக் கப்பம் கட்டுவதாகவும், அவனைத் தம் தலைவனாக ஒப்புக் கொள்வதாகவும் ஏற்பாடு செய்து கொள்ளலாம். ஆதலால் இங்கிலண்டு முழுதையும் ஒரே சக்கரவர்த்தி ஆளவில்லை யானாலும், ஓர் அரசன் சுயேச்சையான பல சிறு மாகாணங்களுக்குத் தலைமை ஸ்தானத்தை வகித்து வருவது சகஜமாயிற்று. இவ்விதமான தலைமை ஸ்தானம் அடிக்கடி ஒருவனிடமிருந்து இன்னொருவனுக்கு மாறிக்கொண்டே போனாலும் நாளடைவில் தேசம் முழுதும் ஒரு குடையின் கீழ் வருவதற்கு அது வழிகாட்டியதுபோ லாயிற்று. இம்மாதிரி இயக்கங்கள் சில காலம் தோன்ற. ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஏழு தலைமை இராஜ்ஜியங்கள் நிலைத்து நின்றன. அவைகளை இங்கிலீஷில் ஹெப்டார்க்கி (Heptarchy) அதாவது ஏழுவரின் ஆட்சி என்று குறிப்பது வழக்கம். அவ்வேழு இராஜ்ஜியங்களும் பின் வருபவை:—

நார்தம்பிரியா—Northumbria.

மெர்ஸியா—Mercia.

வெஸ்ஸெக்ஸ்—Wessex.

ஈஸ்ட் ஆங்கிலியா—East Anglia.

எஸ்ஸெக்ஸ்—Essex.

கென்ட்--Kent.

ஸஸ்ஸெக்ஸ்—Sussex.

ஆனால் இவ்வேழு இராஜ்ஜியங்களிலும் முதல் மூன்றே முக்கியமானவை ; அம்மூன்றும் மேலே கூறிய வரிசைக் கிரமமாகவே பிரபலமடைந்தன.

முதலாக, வடக்கேயுள்ள நார்தம்பிரியா தலைமை ஸ்தானத்தை வகித்து வந்தது. அது ஆரம்பத்தில் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்திருந்தாலும், ஏதெல்ப்ரித் (Aethelfrith) என்ற அரசர் அவைகளைத் தமது ஆளுகைக் குட்படுத்தினர். அவர் கி. பி. 593

முதல் 617 வரையில் ஆண்டு வந்தார். அவர் வெல்ஷ்களையும் ஸ்காட்களையும் கூட யுத்தம் செய்து தோற்கடித்தார். ஆனால் அவர்களுடன் போராட வேண்டி யிருந்ததால், அவர் இங்கிலண்டின் தென்பாகத்தை வென்று தமது வசப்படுத்த அவகாச மில்லாமல் போயிற்று. ஆனல் வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம் அதற்கு முன்பே பிரசித்தி யடைந்திருந்தது. அந்த இராஜ்ஜியம் விஸ்தீரணத்தில் வரவரப் பெருகி வைட் தீவையும், வெல்ஷ் நாடுகளில் சிலவற்றையும் சேர்த்துக் கொண்டது. முக்கியமாக அங்கு அரசுபுரிந்த ஸீவ்லின் (Ceawlin)—கி. பி. (560-593) என்பவர் அந்த இராஜ்ஜியத்தின் எல்லையை அதிகப்படுத்தினர். நாளடைவில் அந்த வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியமே யாவற்றிற்கும் மேலாக நின்று, இங்கிலண்டு முழுதிற்கும் அதிபதியானதைப் பற்றிப் பின்னல் கூறுவோம். அதற்குப் பிறகு சிறிதுகாலம் கழிய, மெர்ஸியா மாகாணம் ஓங்கத் தலைப்பட்டது. அதை ஆண்டு வந்த அரசர்களுக்குள் பெண்டா (Penda) என்பவர்தான் மிகவும் கீர்த்தி வாய்ந்தவர். அவரது காலத்திற்கு முன் மெர்ஸியா மாகாணம் அவ்வளவு பிரபலமடைந்திருக்கவில்லை. ஆனல் பெண்டா அரசராகி கி. பி. 626 முதல் 655 வரையில் ஆண்டு வந்தபொழுது அது முதன்மை பெற்றுவிட்டது. பெண்டா நிரம்பவும் சாமர்த்தியமாக நடந்துகொண்டு, மேற்கிலும் வடக்கிலும் சில பிரதேசங்களைப் பிடித்துக் கொண்டார். அதன் பயனாக மெர்ஸியா இராஜ்ஜியம் இங்கிலண்டினுடைய மத்திய பாகம் முழுதிலும் பரவிவிட்டது.

மேற்கூறிய மூன்று இராஜ்ஜியங்களுமே முக்கியமானவையாக இருந்தாலும், மற்ற நான்கு மாகாணங்களும், அதாவது, ஈஸ்ட் ஆங்கிலியா, எஸ்ஸெக்ஸ், கென்ட், ஸஸ்ஸெக்ஸ் என்பவை - சிற்சில காலம் சுதந்திரமாக இருந்தன. அவைகளில் ஒவ்வொன்றும் தனித் தனியான எல்லைகளைத் தெளிவாகப் பெற்றிருந்தனவாதலால், வேறு இராஜ்ஜியங்களுக்கு எளிதில் உட்படவில்லை. அந்த நான்கிலும் கூட ஸஸ்ஸெக்ஸ், எஸ்ஸெக்ஸ் ஆகிய இரண்டும் பலஹீனமாகவே இருந்தன. ஆனல் கொஞ்ச காலத்திற்கு கென்ட் இராஜ்ஜியம் ஓங்கியிருந்தது. அப்பொழுது அதை எதல்பர்ட் (Ethelbert) என்பவர் ஆண்டு வந்தார். அவர் முதன் முதலாக

ஐரோப்பாவிலிருந்த அரசர்களுடன் சம்பந்தம் வைத்துக்கொண்டு ஃபிராங்க் தேச மன்னரின் பெண்ணான பேர்தா (Bertha) என்பவளை மணந்து கொண்டார். எதல்பர்ட் காலத்திற்குப் பிறகு ரெட் வால்ட் (Redwald) என்பவர் ஈஸ்ட் ஆங்கிலியா மாகாணத்தை முதன்மை பெறச் செய்தார். மேலிரண்டு அரசர்களுக்கும் ப்ரேட் வால்டா (Bretwalda) அல்லது பிரிட்டானியரின் அதிபதி என்ற பட்டப்பெயர் வழங்கப்பட்டு வந்தது.

(2) கிரிஸ்து மதம் பரவியது :—பிரிட்டனில் ஏற்கனவே கிரிஸ்து மதம் பரவியிருந்த தானாலும், இங்கிலீஷ்காரர்கள் தம்முடைய பழைய மதத்தையே பின்பற்றி வந்தனர். கிரிஸ்து பிறந்து காலமாய் ஆறு நூற்றாண்டுகள் கழிந்தனவானாலும், இங்கிலண்டில் அது நிலைக்கவில்லை. தங்களால் தோற்கடிக்கப்பட்ட பிரிட்டன் தேசத்துப் பழைய குடிமக்களுடைய மதத்தைப் புதிய கூட்டத்தார் வெறுத்தனர்; அவ்விதமே பிரிட்டானியரும் தம்முடைய சிறந்த மதத்தைத் தமது எதிரிகளுக்கு போதிக்க விரும்பவில்லை. ஆனால் வேல்ஸ் மாகாணத்திற்குத் துரத்தப்பட்ட பிரிட்டானியர் தம்முடைய பழைய கிரிஸ்து மதத்தைக் கைவிடவில்லை; அதிலும் முக்கியமாக ஆருவது நூற்றாண்டில் வேல்ஸில் மத ஊக்கம் தலையெடுத்து நின்றது. மத குருமார்கள் பலர் தோன்றினார்கள். அவ்விதமே அயர்லண்ட் தேசத்திலும் பல மகான்கள் தோன்றி மத ஊக்கத்தை அதிகப்படுத்தினார்கள். ஆனால் அதில் ஒரு விசேஷத்தை நாம் கவனிக்க வேண்டும். அக்காலத்தில் கிரிஸ்து மதத்தின் முக்கிய ஸ்தானம் ஐரோப்பாவிலுள்ள உரோம் நகரமாகவே இருந்தது; இப்பொழுதும் அந்த மகிமை அதற்கு இருந்து வருகிறது. ஆனால் பிரிட்டன் தேசம் உரோம் நகரத்திற்கு வெகுதூரத்தில் இருந்தமையாலும், அக்காலங்களில் போக்குவரத்து சாதனங்கள் அதிகமாக இல்லாதபடியாலும், வெல்ஷ்காரர்கள் அநுஷ்டித்து வந்த கிரிஸ்து மதமும், உரோமிலும் மற்ற பிரதேசங்களிலும் பின்பற்றப்பட்ட கிரிஸ்து மதமும் பல விஷயங்களில் வேற்றுமைப்பட்டன. ஆனால் ஐரோப்பா முழுதும் அநேகமாக உரோமினுடைய தலைமையின் கீழேயே இருந்து வந்தது. அதனால் சில

மதச் சடங்குகளைக் கொண்டாடுவதிலும், மடாலயங்களின் நட வடிக்கைகளிலும் வெல்ஷ் அல்லது கெல்டிக் கிரிஸ்து மதமும் உரோம் கிரிஸ்து மதமும் வித்தியாசப்பட்டன.

ஏற்கனவே, கூறியபடி, இங்கிலீஷ்காரர்கள் தங்களால் ஜயிக் கப்பட்ட கெல்ட் அல்லது ஃபிரிட்டானியரிடமிருந்து கிரிஸ்து மதோபதேசத்தைப் பெறவில்லை. அவர்கள் உரோம் கிரிஸ்தவ முறைப்படியே உபதேசம் பெற்றனர். இது எவ்விதம் நடந்தது என்பதை கவனிப்போம். சற்றுமுன்பு கென்ட் மாகாண மன்ன ரான எதல்பெர்ட் என்பவர் ஃபிராங்க் தேசத்துப் பெண்ணான பெர்தா என்பவளை மணந்து கொண்டதாகக் கூறினோமல்லவா. அந்த பெர்தா என்பவள் ஏற்கனவே கிரிஸ்து மதத்தைத் தழுவியவள்; ஆனால் அவளுடைய கணவனோ பழைய அநாகரிக மதத்தைச் சேர்ந்தவன். அவள் கென்ட் தேசத்திற்கு வந்தபொழுது தன் னுடன்கூட ஒரு கிரிஸ்து மத குருவையும் அழைத்து வந்தாள். அவளுடைய உபயோகத்தின் பொருட்டு ஒரு தனியான மாதா கோயிலை எதல்பெர்ட் ஏற்படுத்திக் கொடுத்தார். அது கான்டர்பரி (Canterbury) என்ற இடத்தில் இருந்தது. அதுவே அரச னுடைய தலைமை நகரமாகவும் இருந்தது. ஆனால் தன் மனைவியி னுடைய மதத்தை வெறுக்கா விட்டாலும், எதல்பெர்ட் அதைப் பின்பற்ற வேண்டுமென்ற விருப்பமும் காட்டவில்லை.

ஆனால் அச்சமயத்தில் ஐரோப்பாவில் உரோம் நகரத்தில் இருந்த கிரிஸ்து மதகுருவான (Pope) போப்பினுடைய அதிகாரம் வளர்ந் துகொண்டே வந்தது. எல்லோரும் அவரைக் கடவுளின் பிரதி நிதி என்று எண்ணி மதித்துவந்தனர். எதல்பெர்ட், கென்ட் மாகாண அரசராக இருந்தபோது போப் ஸ்தானத்தை கிரிகரி (Gregory) என்பவர் மேன்மையாக வகித்துவந்தார். அவர் உண்மை யிலேயே தயாளகுணமும், சிரத்தையும், மதப்பற்றும் வாய்ந்தவர். அவர் போப் பதவியை வகித்ததற்கு முன் ஒருநாள் ஒரு சந்தை யில் அழகான சிறுவர்கள் சிலர் அடிமைகளாக விற்கப்படுவதற்காக நிறுத்தி வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு, அவர்கள் ஆங்கிலிஸ் இனத்தைச் சேர்ந்தவர்கள் என அறிந்துகொண்டார். அவர் அப்

பொழுதே அவ்வழகிய சிறுவர்களுடைய தேசத்தில் கிரிஸ்து மதத்தைப் பரவச்செய்யத் தீர்மானம் செய்துகொண்டாராம். ஏற்கனவே அந்த தேசத்தில் இருந்து வந்த கிரிஸ்து மதம் அழிந்து போவதும் அவருக்குச் சம்மதியில்லையாதலால், அவர் இங்கிலண்டில் மறுபடியும் கிரிஸ்து மதத்தை அதிகமாய்ப் பரவச்செய்ய நினைத்து நம்பிக்கைக்குப் பாத்திரராயிருந்த தமது சிஷ்யரான அகஸ்டைன் (Augustine) என்ற மதகுருவையும் இன்னும் சிலரையும் இங்கிலண்ட் தேசத்திற்கு அனுப்பிவைத்தார். அந்தத் திருப்பணியை தைரியமாக ஏற்றுக்கொண்ட அப்பாதிரிமார்கள் கி.பி. 597-ல்கெண்ட் மாகாணத்தில் வந்திறங்கினர். அங்கிருந்த அரசி கிரிஸ்துமதத்தைச் சேர்ந்தவளாதலால், அவர்களுக்கு நல்வரவு கிடைத்தது. அவர்கள் மதோபதேசம் செய்ததை எதல்பெர்ட் அரசரும் தடுக்கவில்லை. கொஞ்சகாலத்திற்குள் அவர்களுடைய உபதேசமும் பரிசுத்தமான குணவொழுக்கங்களும் ஜனங்களுடைய மனதில் நல்ல மதிப்பை உண்டாக்க, அரசரும் பல பிரஜைகளும் கிரிஸ்து மதத்தைத் தழுவலானார்கள். பிறகு கான்டர்பரியில் முதல் மாதாகோவில் ஏற்பட்டது. இன்னமும் கூட இங்கிலண்ட் தேசத்திற்கு கான்டர் பரியே முக்கிய மதகுருவின் ஸ்தானமாக இருந்துவருகிறது. அவ்வாறு இங்கிலண்டில் ஆரம்பமான புதியமதம் விரைவில் பரவத் தொடங்கியது. கெண்டுக்குப் பிறகு எஸ்ஸெக்ஸ் மாகாணத்திலும் மேற்படி புதிய மதம் நிலைத்துப்போயிற்று. பழையகாலம் முதலே முக்கிய நகரமாக இருந்துவந்த லண்டனிலும் ஒரு மடாலயம் ஏற்பட்டது. அடுத்தபடியாக ஈஸ்ட் ஆங்கிலியாவில் இருந்த ரெட்வால்ட் அரசரும் அவருடைய குடிமக்களும் கிரிஸ்தவர்களாக மாறினார்கள். ஆனால் புதிய மதத்தைப் பின்பற்றிய பிறகும் ரெட்வால்ட் பழைய விக்கிரகங்களையும் தேவதைகளையும் வழிபட்டு வந்தார்.

அதன் பிறகு, நார்தம்பர்லியாவும் அவ்விதமே மாறிற்று. அங்கு அரசாண்டுவந்த எட்வின் (Edwin) என்பவர் நிரம்பவும் திறமைவாய்ந்த வீரர். அவர் கெண்ட் அரசனான எதல் பெர்ட்டினுடைய மகளான எதல்பர்கா (Ethelburga) என்பவளை

மணந்தார். அவள் கிரிஸ்து மதத்தினளாதலால், அவள் தன்னுடன்கூட யார்க் நகரத்திற்கு பாலினஸ் (Paulinus) என்ற மதகுருவை அழைத்துச் சென்றாள். அந்த குரு தமது திறமையினால் எட்வினும் மற்றவர்களும் புது மதத்தைத் தழுவச் செய்துவிட்டார். கி.பி. 627-ல் நார்தம்பர்லியாவில் அம்மதம் வேரூன்ற, பாலினஸ் யார்க் நகரத்தில் மடாலயமொன்றை ஸ்தாபித்தார். இவ்விதம் புதியமதம் எவ்வித இடையூறுமின்றிப் பரவலாயிற்று.

ஆனால் இங்கிலண்டில் கிரிஸ்துமத ஞானத்தைப் பரப்பிய அகஸ்டைன் சில வருஷகாலத்திற்குப் பிறகு காலமானார் ; அவருக்குப் பிறகு அவருடைய சிஷ்யரான பாலினஸ் அவ்வேலையைச் செய்துவந்தார்; அகஸ்டைன் நிரம்பவும் திறமையாக நடந்து புதிய மதத்தை இங்கிலண்டில் வேரூன்றச்செய்ததான பேற்றை அடைந்தாரானாலும், அவரை அங்கு அனுப்பிய போப் கிரிகரியோ இன்னும் எத்தனையோ காரியங்களை அவர் செய்துமுடிப்பார் என்று எதிர்பார்த்தார். கிரிகரியோ இங்கிலண்ட் முழுவதையும் கிரிஸ்துமதமயமாக்கி, பழைய கெல்டிக் கிரிஸ்தவர்களுடன் உறவுகொண்டாடி, அந்த தேசம் முழுதிற்கும் இரண்டு முக்கிய மடாலயங்களும் ஏற்படுத்திவிட வேண்டுமென்று எண்ணியிருந்தார். ஆனால் அகஸ்டைன் இங்கிலண்டின் தென்கிழக்கு பாகத்தில் மட்டும் புதியமதத்தைப் பரவச்செய்தார். அவர் கெல்டிக் கிரிஸ்தவர்களுடன் சேர்ந்து ஒரு மகாநாடு கூட்டினாரானாலும், அதனால் அதிக பலன் ஏற்படவில்லை. இருகட்சியாரும் ஒருவரையொருவர் தூஷித்துக்கொண்டும் சபித்துக்கொண்டும் பிரிந்துபோயினர். அவ்வாறு, அகஸ்டைன் உபதேசித்த உரோம் முறையைத் தழுவிய கிரிஸ்து மதமும், பழைய பிரிட்டானியருடைய கெல்டிக் மதமும் பிரிந்தே நின்றன. மேலும் அகஸ்டைன் இறந்தபிறகு கென்ட், எஸ்ஸெக்ஸ் ஆகிய இரண்டு மாகாணங்களிலும் கிரிஸ்துமதம் க்ஷீணித்துப்போயிற்று. கிரிஸ்து மதத்தைத் தழுவிய சாதாரண ஜனங்களால் தமது பழைய பழக்கவழக்கங்களையும் பழைய மூட்டு தேவதைகளையும் உடனே மறந்துவிட முடியவில்லை ; கிரிஸ்துமத குருமார்கள் நிரம்

பவும் சாந்தகுண முடையவர்களாய் இருந்தமையால் இராஜஸ குணம் மிகுதியாய்ப் பெற்றிருந்த இங்கிலீஷ்காரருக்கு அவர்களிடத்தில் மரியாதையும் பக்தியும் தோன்றவில்லை. எனவே, மறுபடி பழைய அநாகரிக மதம் புத்துயிர் பெற்றெழுந்தது. முன்பு மெர்ஸியாவில் பெண்டா என்று ஓர் அரசர் இருந்ததாகக் கூறினேமல்லவா? அவர் பழைய மதத்தை ஸ்தாபிக்கும் கருத்துடன் போர்புரிய ஆயத்தமானர். அப்பொழுது நார்தம்பர்ரியாவை கிரிஸ்து மதத்தைத் தழுவிய எட்வின் ஆண்டுவந்தார். அவ்விரண்டு அரசருக்குள், மதசம்பந்தமான விரோதத்தைத் தவிர, இராஜ்ஜிய சம்பந்தமான பகைமையும் இருந்தது. அவர்கள் ஒருவரையொருவர் நசுக்கிவிட சமயம் பார்த்துக்கொண் டிருந்தனர். மேலும், எட்வின் தமது இராஜ்ஜியத்தைப் பெருக்க எண்ணங்கொண்டு வெல்ஷ் தலைவரான காட்வாலன் (Cadwallon) என்பவரைத் துன்புறுத்தி வந்தார். காட்வாலன் கிரிஸ்தவராயிருந்தாலும், தமது எதிரியின்மீது பழி வாங்கும் பொருட்டு, கிரிஸ்தமத விரோதியான பெண்டாவுடன் சேர்ந்துகொண்டார். அதில் ஒரு விசேஷமிருந்தது. அதற்குமுன் இரண்டு நூற்றுண்டுகளாக இங்கிலீஷ்காரரும் வெல்ஷ்காரரும் ஒருவரிடத்தொருவர் நெருங்காமலேயே இருந்தனர். பிறகு முதன்முதலாக ஒரு வெல்ஷ் தலைவர் இங்கிலீஷ் அரசருடன் சேர்ந்துகொண்டு இன்னெரு இங்கிலீஷ் அரசரோடு போர்புரியலானர். இரண்டு அரசரும் சேர்ந்து, எட்வினை ஹீத்பீல்ட் (Heath field) என்ற இடத்தில் கி.பி. 633-ல் தோற்கடித்துக் கொன்றுவிட்டனர். எட்வின் இறந்தது புதிய மதத்திற்குப் பெரிய நஷ்டமாயிற்று. பாலினஸ் அச்சங்கொண்டு தென் தேசத்திற்கு ஓடிவிட்டார். நார்தம்பர்ரியா மாகாணம் முழுதும் கொள்ளையிடப்பட்டது. ஆனல் கி.பி. 635-ல் ஆஸ்வால்ட் (Oswald) என்பவர் அந்த மாகாணத்திற்கு அரசராய், மறுபடியும் கிரிஸ்துமதம் சிறிதுகாலம் ஓங்கியிருக்கும்படி செய்தார். அவர் கெல்டிக் அரசரானகாட்வாலனையும்தோற்கடித்துபெண்டாவையும் சாமர்த்தியமாக எதிர்த்துவந்தார். ஆனல் ஆஸ்வால்ட் கிரிஸ்தவராயிருந்தாலும், அவர் எட்வின் முதலியவர்களைப் போல, உரோம் பாதிரிகளிடமிருந்து மதோபதேசம் பெறவில்லை. அவர்

அயோனு (Iona) என்ற இடத்தில் ஸ்காட் வர்க்கத்தைச் சேர்ந்த மதகுருமார்களிடமிருந்து உபதேசம் பெற்றிருந்தார். ஆதலால் அவர் பின்பற்றிய முறையும் உரோம் முறையும் சிறிதளவு வித்தியாசப்பட்டன. அவரது காலத்தில் ஸ்காட் முறையை அநுசரித்த குருமார்கள் நார்தம்ப்ரியாவில் மறுபடி கிரிஸ்து மதத்தை ஸ்தாபித்தார்கள். சிறிதுகாலம் கழிய ஆஸ்வால்ட் அரசரும் பெண்டாவினல் கொல்லப்பட்டார். ஆனாலும் பெண்டாவின் முயற்சி பயன்படவில்லை. அவர் இறப்பதற்குமுன் அவரது இராஜ்ஜியத்தில்கூட புதிய மதம் பரவ ஆரம்பித்துவிட்டது. கி.பி. 655-ல் அவர் நார்தம்ப்ரியாவின் மன்னரான ஆஸ்வியூ (Oswiu) என்பவரால் வின்வுட் (Winwood) என்ற இடத்தில் கொல்லப்பட்டார். பெண்டாவின் புத்திரர் அவருக்குப் பிறகு சிம்மாதனமேறி கிரிஸ்து மதத்தைத் தழுவி ஆஸ்வ்யூவினல் அனுப்பப்பட்ட ஸ்காட் மதகுருமார்களை அன்புடன் வரவேற்று அவர்கள் மதோபதேசம் செய்வதற்குரிய சாதனங்களைச் செய்துகொடுத்தார்.

(3) கேல்டிக் முறையும் உரோம் முறையும்:—இதற்குள் மற்ற இராஜ்ஜியங்களும் அநேகமாய்ப் புதிய மதத்தைப் பின்பற்றிவிட்டன. அகஸ்டைன் முதலில் வந்து மதோபதேசம் செய்தபொழுது அவருக்கு சுலபமாக ஜயம் கிடைத்தது; ஆனல் நடுவில் பெண்டா முதலியோரது முயற்சியினல் புதிய மதத்தின் போக்கு சிறிதளவு தடைப்பட்டது; ஆனல் நாளடைவில் கிரிஸ்துமதமே நன்ருக வேரூன்றி, பழைய அநாகரிக மதத்தை அடியோடு மறையச்செய்துவிட்டது. ஆனல் ஒரு விஷயத்தில் மட்டும் இன்னும் சிறிதளவு பிரயாசை இருந்தது. அதாவது இங்கிலண்டின் பற்பல பாகங்கள் பலவிதமாகப் புதிய மதத்தைப் பெற்றிருந்தன. சில மாகாணங்களில் உரோம் பாதிரிமார்களும், சில பிரதேசங்களில் ஸ்காட் பாதிரிமார்களும், வேறு சில இடங்களில் வேறு தேசத்துப் பாதிரிமார்களும் மதோபதேசம் செய்து வந்தனர். அவ்விதம் பிரிட்டன் தேசம் முழுதும் கிரிஸ்து மதம் பரவியதானலும், அதில் ஒற்றுமை என்பது இல்லாமல் போய்விட்டது. வெல்ஷ்காரர்களுக்கும் இங்கிலீஷ்காரர்களுக்கும் நடுவில் அநேக விஷயங்களில் அபிப்பிராய வேற்றுமை இருந்துவந்தது. ஒவ்வொரு

மாகாணத்திலும் ஒரு தனியான மதகுரு ஏற்பட்டார்; அதற்கு தனியான, சுதந்திரமான மடாலயம் ஒன்றும் ஏற்பட்டது. கென்ட் மாகாணத்தில் இருந்த மதகுரு பெயருக்கு மாத்திரம் எல்லோருக்கும் தலைவராய் இருந்தாரேயன்றி, உண்மையில் அவருடைய அதிகாரம் கென்டுக்கு வெளியில் ஒப்புக்கொள்ளப் படவில்லை. இதிலிருந்து, முன்பு கிரிஸ்து மதத்திற்கும் பழைய அநாகரிக மதத்திற்கும் நடந்த போராட்டம் முடிவடைய, அதற்குப் பதிலாக, இரண்டுபட்ட கிரிஸ்து மத சித்தாந்தங்களுக்குள்ளாகவே பெரும் சச்சர வேற்படும்போலத் தோன்றியது. நார்தம்பேரியாவில் அரசாண்டுவந்த ஆஸ்வியூ என்பவர் அதிக மதவுணர்ச்சியில்லாத யுத்த வீரரேயானாலும், அவர் மேற்கூறிய இருமுறைகளுக்கும் சமரஸ உணர்ச்சியை ஏற்படுத்த ஆசைகொண்டு கி.பி. 664-ல் இருகட்சியினரையும் சேர்த்து ஒரு மகாநாடு கூட்டினார். அது விட்பி (Whitby) என்ற இடத்தில் நடந்தமையால், விட்பி மத மகாநாடு அல்லது ஸைனொட் ஆப் விட்பி (Synod of Whitby) எனப்படுகிறது. ஆஸ்வ்யூ அதைக் கூட்டியதன் முக்கிய நோக்கம், இருகட்சியின் வாதங்களையும் கேட்டு தமது கொள்கையை நிச்சயப்படுத்திக் கொள்ளலாம் என்பதே. இருகட்சிகளுக்கும் நடந்த விவாதத்தில் ஈஸ்டர் (Easter) பண்டிகையை எப்பொழுது நடத்துவது என்பதே முக்கிய விஷயமாக இருந்தது. சிலர் கெல்டிக் முறையையும், சிலர் உரோம் முறையையும் ஆதரித்துப் பேசினர்; சிலர் இருமுறைகளுக்கும் மத்தியஸ்தம் செய்ய முயற்சித்தனர். கடைசியாக, ஆஸ்வ்யூ உரோம் முறையையே பின்பற்றத் தீர்மானித்தனர். அதன்பின் கெல்டிக் மதகுருமார்கள் மகாநாட்டிலிருந்து விலகிக்கொண்டனர். சீக்கிரத்தில் ஆஸ்வியூ தமது பராக்கிரமத்தினால் இங்கிலண்டு முழுதும் தம்மையே அநுசரிக்கச்செய்தார். அது பெருத்த நன்மையை யளித்தது. ஏனென்றால், கெல்டிக் முறையை இங்கிலண்டு பின்பற்ற ஆரம்பித்திருந்தால், உரோம் முறையைத் தழுவிய ஐரோப்பாவிற்கும் அதற்கும் சம்பந்தமில்லாமல் போய்விடும். அக்காலத்தில் உரோம் இராஜ்ஜியமே நாகரிகத்திற்கு உறைவிடமாயிருந்ததனால், இங்கிலண்டு தனித்து நின்று, பின்தங்கி யிருக்கும். மேலும் கெல்டிக் மதகுருமார்களில் பலர் மிகு

ந்த மதவுணர்ச்சியுள்ளவர்களாய் இருந்தாலும், அவர்களுக்குள் ஒற்றுமையும், சமரஸப்பான்மையும் இல்லாதிருந்தன. ஆதலால், உரோம் முறையை இங்கிலண்டு பின்பற்றியதனுல், அது ஐரோப்பா கண்டத்துடன் வேற்றுமைப்படாமலும், பின் தங்காமலும் முன்னேற்றமடைந்தது; சிறிது காலத்திற்குள் கெல்டிக் முறையைப் பின்பற்றியவர்களும் அதை விட்டு உரோம் முறையை அநுசரிக்கலாயினர்.

விட்பி மத மகாநாடு முடிந்ததற்கு நான்கு வருஷங்களுக்குப் பின்னர், அதாவது கி.பி. 668-ல், தியடோர் ஆப் டார்ஸஸ் (Theodore of Tarsus) என்பவர் உரோமிலிருந்த போப்பினுல் இங்கிலண்டின் தலைமை மதகுருவாக நியமிக்கப்பட்டார். தியடோர் சமயோசித புத்தியும், தைரியமும், சாமர்த்தியமும் வாய்ந்தவர். அவர் இருபது வருஷகாலத்திற்கதிகம் தலைமை மத குருவாக இருந்தமையால், அதற்குள் இங்கிலண்டின் மதஸ்தாபனத்தை செம்மையாய் ஒழுங்குப்படுத்தி, அது ஊக்கமாக வேலை செய்யும்படி ஏற்பாடு செய்துவைத்தார். முதன்முதலாக கிரிஸ்து மதத்தைத் தோற்றுவித்த பெருமை அகஸ்டைன் என்பவருக்கே உரியதாஞலும், மதஸ்தாபனத்தை நிலைநாட்டி வலுப்படுத்திய பெருமை தியடோருக்கே உரியது. அவர் தேசம் முழுதையும் பல சிறு தொகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு தொகுதிக்கும் ஒவ்வொரு தனி மதகுருவையும் மடாலயத்தையும் ஏற்படுத்தி, அவர்கள் யாவரும் காண்டர்பரியின் தலைமை மதகுருவுக்கு உட்பட்டு நடக்கவேண்டுமென்றும் திட்டம் செய்தார். இன்னமும் காண்டர்பரி மத குருவே மற்ற எல்லோருக்கும் தலைவராய் இருந்துவருகிறுர். மேலும், அவர் கிரிஸ்தவப் பாதிரிமார்களுக்காகப் பல பாடசாலைகளை ஏற்படுத்தி, அவர்களுக்குப் பயிற்சியளித்து வந்தார்; அடிக்கடி எல்லோரையும் வரவழைத்து மகாநாடுகள் கூட்டினுர். அவ்வாறு இங்கிலண்டு தேசம் பல இராஜ்ஜியங்களாய்ப் பிரிந்திருந்தாலும், இங்கிலீஷ் குடிமக்கள் அனைவரும் மதவிஷயத்தில் ஒற்றுமைப்பட்டுப் போயினர். பின்னல் தேசம் முழுதும் ஒரு குடையின்கீழ் உட்படுவதற்கு அது பெருத்த சாதனமாயிருந்தது. தியடோர் தமது முயற்சியில் ஜயமடைவதற்கு நார்தம்பேரியாவின் அரசர்கள் நிரம்பவும் உதவிசெய்தனர்.

தியடோர் கி.பி. 690-ல் மரணமடைந்தார். அவருக்குப் பிறகு இங்கிலண்டின் மதஸ்தாபனம் தீவிரமாக அபிவிருத்தி யடைந்தது. அதன்பின் உரோமிலிருந்து பாதிரிமார்கள் அங்கு வரவேண்டிய அவசியம் இல்லாமல் போயிற்று. இங்கிலீஷ்காரர்களே தமது மத ஸ்தாபனத்தை நிர்வகித்து, எட்டாவது நூற்றாண்டில் ஐரோப்பா முழுதிற்கும் அந்த மதமே ஒரு வழி காட்டியாக உயர்ந்துநிற்கும் படி செய்துவிட்டனர். அவர்களிற் பலர் வெளிதேசங்களுக்கும் சென்று அதைப் பரப்பினர். போனிபேஸ் (Boniface) என்பவர் ஜெர்மனி தேசத்தில் அதைப் பரவச்செய்தார். இங்கிலண்டில் சன்னியாசிகளும் ஆசிரியர்களும் பலர் தோன்றி, உலக விஷயங்களில் சம்பந்தப்படாமல், கலைகளையே அப்பியசித்து, தூயவாழ்க்கை நடத்தி, ஜனங்களுக்கு வாக்கினாலும், செய்கையாலும் உபதேசம் புரிந்து வந்தார்கள். அறிவாளிகளான ஆசிரியர்களிற் பலர் பல நூல்களை எழுதினார்கள். உதாரணமாக, காட்மன் (Caedmon) என்பவர் பல கீதங்களைப் பாடி இங்கிலண்டின் முதற்கவியென்ற கீர்த்தியை யடைந்தார். அவ்விதமே பீட் (Bede) என்ற சன்னியாசி மிகவும் பரிசுத்தமான குணவொழுக்கங்களோடிருந்ததோடு தேச சரித்திர நூல் ஒன்றையும் விஸ்தாரமாக எழுதினார். அவர் இறந்ததருணம் வரையிலும், நூலெழுதும் காரியத்தை விடாமல் அவா செய்து முடித்தார். எக்பர்ட் என்ற சன்னியாசி யார்க் நகரத்தில் இன்னொரு தலைமை மதகுரு ஸ்தானத்தை ஏற்படுத்தினார். ஆனாலும், அவர் காண்டர்பரியின் ஆதிக்கத்திற்கு உட்பட்டே யிருந்தார். அவரது சிஷ்யர் ஒருவர் ஐரோப்பாவிற்குச் சென்று பெரிய வித்துவானென்று பெயர்பெற்றுத் திரும்பினார். இவ்வாறு ஒரு நூற்றாண்டுக்குமுன் அநாகரிகமான மனிதர்களை நிறைந்திருக்கப் பெற்றதான இங்கிலண்ட் தேசம் ஐரோப்பா முழுவதாலும் போற்றப்பட்டு கீர்த்தியடைந்து ஓங்கியது. இங்கிலீஷ்காரர் உரோம் முறையைப் பின்பற்றியது அதற்கு ஒரு முக்கியமான காரணமென்பது நாம் கூறாமலே விளங்கும்.

(4) **மேர்ஸியாவின் அபிவிருத்தியும் சோர்வும்:**—இங்கிலீஷ்காரர்கள் நிலைநிறுத்திய ஏழு இராஜ்ஜியங்களிலும் நார்தம்

ஸிரியா, மெர்ஸியா, வெஸ்ஸெக்ஸ் என்ற மூன்றும் வரிசைக் கிரமமாக பிரபல தசையை யடைந்தனவென்று முன்பே கூறினேமல்லவா ? அவைகளில் நார்தம்ஸிரியா ஏழாவது நூற்றாண்டு வரையில் மகிமை வாய்ந்திருந்தது; கிரிஸ்து மதம் பரவுவதற்கும் அதுவே முக்கிய காரணமாய் நின்றது. ஆனால் ஆஸ்வ்யூ, அவருடைய புத்திரர் ஆகிய இருவரது காலத்திற்குப் பின் அதையாண்ட மன்னர்கள் பலஹீனராக இருந்தமையால், அந்த அரசு க்ஷீணிக்கலாயிற்று. அதற்குத் தெற்கேயுள்ள மெர்ஸியாவோ பெண்டா என்னும் அரசருடைய காலத்திலேயே பிரபல மடைந்திருந்தமையால், அதே எட்டாவது நூற்றாண்டு முழுதும் தலைமை ஸ்தானம் வகித்திருந்தது. அங்கு எதேல்பால்ட் (Ethelbald) என்ற அரசர் கி. பி. 716 முதல் 757 வரையில் அரசு நடாத்தினர். அவ்வளவு நீண்டகாலம் அவர் தம்மை மெர்ஸியாவின் மன்னரென்று கூறிக் கொள்வதில் திருப்தி யடையாமல் தென் இங்கிலண்டின் அரசர் என்று பெயர் வகித்துக் கொண்டார். அவருக்குப் பிறகு ஆபா2 (offa) என்பவர் சிம்மாதனமேறி, பராக்கிரமசாலி (The mighty) என்ற பட்டம் பெற்று கி. பி. 796 வரையில் அரசாட்சி புரிந்தார். அவரது காலத்தில் மெர்ஸியா உன்னத நிலைமையை யடைந்தது. அவர் வடக்கிலும் தெற்கிலும் தமது இராஜ்ஜியத்தைப் பெருக்கி, வெல்ஷ்காரரையும் தோற்கடித்தார். தமது இராஜ்ஜியத்தின் எல்லையை வரையறுத்துத் தெளிவாக்கும் பொருட்டு அவர் வேல்ஸ் மாகாணத்திற்கும் மெர்ஸியாவிற்கும் இடையில் ஓர் அகழியையும் மதில்சுவரையும் உண்டாக்கினர். அது 'ஆபா2வின் அணை' என்று பெயர் பெற்றது. அவர் கென்ட் முதலான மாகாணங்களையும் வென்று, வெஸ்ஸெக்ஸ், நார்தம்ப்ரியா ஆகிய இரண்டிலும் தமது மருமக்களையே பிரதிநிதிகளாக அமர்த்தினர். ஆபா2வைப்போல இங்கிலண்ட் தேசத்தில் அதற்குமுன் எந்த அரசரும் அவ்வளவு திறமையாக ஆட்சி நடத்தவில்லை. ஐரோப்பாவிலுள்ள சக்கரவர்த்திகளிடம் ஆபா2 சிநேகமாகவே இருந்து வந்தார். ஆபா2 போர்புரியும் வேட்கையை அதிகமாய்க் கொண்டவரானலும், மதவுணர்ச்சியும் உடையவராயிருந்தார். அவர் தமது பிரஜைகள் கா/2ன்டர்ஸிரியிலுள்ள தலைமை மத

குருவைப் பணிவது தமக்கு இழிவென் றெண்ணி, தமது இராஜ்ஜியத்திலுள்ள லிச்பீல்டு (Lichfield) என்ற இடத்தில் ஒரு பிரத்தியேகமான தலைமை மத குருவை நியமிக்கும்படி போப்பைத் தூண்டினார். ஏற்கனவே யார்க் நகரத்தில் வேறொரு தலைமை மத குரு இருந்தார். ஆனால் அம்மாதிரி மூன்று தலைமை குருமார்கள் நிலைத்திருந்தால், தேசத்தின் மத ஒற்றுமை சீர்குலைந்து போயிருக்கும். அதிர்ஷ்டவசமாக, ஆபாவின் காலத்திற்குப் பின் அந்த ஏற்பாடு மாறிப் போய்விட்டது. மறுபடி காண்டர்வரியே முதன்மையையடைந்தது.

ஆபாவுக்குப் பின் ஸேனல்ப் (Cenulf) என்பவர் கி. பி. 821 வரையில் ஆண்டுவந்தார். அவருடைய காலத்திற்குப் பின் மெர்ஸியாவின் பெருமை போய்விட்டது. அங்கு அமைதியின்மையும் கலகமுமே நிறைந்து நின்றன. மேலும் அப்பொழுது ஒரு மாகாணம் முக்கிய ஸ்தானத்தை அடைய வேண்டுமானால், அது திறமை வாய்ந்த அரசரைப் பெற்றிருக்க வேண்டியது அவசியமாயிருந்தது. ஆனால் ஓரிடத்திலாவது தொடர்ச்சியாக திறமைசாலிகளான அரசர்கள் தோன்றவில்லை. தகப்பன் பலவானானால், மகன் பலஹீனனாக இருந்தான். ஆனால் மேற்கூறிய இரண்டு மாகாணங்களும் தலைமை வகித்ததனால் ஒரு நன்மை யுண்டாயிற்று. பழைய ஏழு இராஜ்ஜியங்களெல்லாம் மறைந்து மூன்று பெரும் பிரிவுகளாக ஒற்றுமைப்பட்டு நின்றன. அவைகளிலும் முதலிரண்டு மாகாணங்களும் திறனற்றுப் போய்விட்டன. வெஸ்ஸெக்ஸ் மாத்திரமே மிகுதியாய் நின்றது. கடைசியாக அதுவே நிரந்தரமாகத் தலைமை ஸ்தானத்தை அடைந்து, தேசம் முழுவதையும் தனக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டது.

---

# 5-வது அதிகாரம்

## வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம்—ஆல்ப்ரெட்

(1) வெஸ்ஸெக்ஸ் தலையெடுத்தல் :—நார்தம்பரியா மாகாணம் முதன்மை நிலைமையிலிருந்த பொழுதே, வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம் சிறுகச் சிறுக அபிவிருத்தி யடைந்து வந்தது. அது கென்ட், ஸஸ்ஸெக்ஸ் முதலிய சிறு மாகாணங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் கீழ்ப்படுத்திக் கொண்டிருந்தது. அது நார்தம்பரியாவுக்கு வெகு தூரத்தில் இருந்தமையால், தன்னுடைய போக்குக்கு அதிகமான எதிர்ப்பைப் பெறவில்லை. ஆனால் சமீபத்திலுள்ள மெர்ஷியா தலைமைக்கு வந்ததும் அதனுடைய அபிவிருத்திக்கு இடமில்லாமல் போயிற்று. அதன் பாகங்களிற் சிலவற்றை மெர்ஷியாவின் அரசர் பிடித்துக் கொண்டார். ஆனால் அப்பொழுதும்கூட வெல்ஷ்காரர்களுடைய பிரதேசங்களை வெஸ்ஸெக்ஸ் தன்னுடைய ஆட்சியின் கீழ் சேர்த்துக் கொண்டே யிருந்தது. கி. பி. 802-ல் எக்பர்ட் (Egbert) என்பவர் அதனுடைய அரசரானார். அவர் அதற்கு முன்பே ஆபாவினிடம் அடிபட்டு நாட்டைவிட்டு வெளியில் ஓடிவிட்டவர். ஆனால் ஆபா காலமானவுடன், மெர்ஷியாவின் மேம்பாடு குறையத் தொடங்க, எக்பர்ட் மீண்டும் சிம்மாதன மேறுவது சுலபமாயிற்று. அவர் அரசு புரிவதிலும், சமர் செய்வதிலும் திறமை வாய்ந்தவர். அவர் தென்மேற்குக் கோடியிலுள்ள வெல்ஷ்காரர்களை முற்றிலும் வென்று முறியடித்தார். மேலும் கி.பி. 825-ல் அவர் எல்லண்டன் (Ellandune) என்ற இடத்தில் மெர்ஷியாவையும் தோற்கடித்து, அதன் பெருமை முற்றிலும் மறையும்படி செய்துவிட்டார். கென்ட், ஸஸ்ஸெக்ஸ், எஸ்ஸெக்ஸ், ஈஸ்ட் ஆங்க்லியா ஆகிய யாவும் சுலபமாக அவருடைய வசமாய்விட்டன. அவரது சேனையைக் கண்டவுடன் நார்தம்பரியாவும் அடங்கி ஒடுங்கி, அவரது ஆதிக்கத்தை அங்கீகரித்தது ; அதுபோல, வடமேற்கிலிருந்த வெல்ஷ் மாகாணமும் ஜயிக்கப்பட்டது.

இவ்வாறு உண்மையிலேயே இங்கிலண்டு தேச முழுதும் வெஸ் ஸெக்ஸ் இராஜ்ஜியத்திற் குட்பட்டுப் போயிற்று.

அம்மாதிரி மற்ற மாகாணங்களால் அடைய முடியாத பெருமை யையும் அதிகாரப் பதவியையும் வெஸ்ஸெக்ஸ் மாத்திரம் அடைவ தற்குப் பல காரணங்கள் இருந்தன. முதலாவது; வெஸ்ஸெக்ஸில் அரசுபுரிந்த மன்னர்கள் பொதுவாகத் திறமைசாலிகளாகவே இருந் தனர். மற்ற மாகாணங்களிலோ ஒரோர் அரசர் மாத்திரமே சாமர்த் தியசாலியா யிருக்க, அவரது காலத்திற்குப் பின் குழப்பமும் கலக மும் உண்டாவது சகஜமா யிருந்தது. இரண்டாவது; வெஸ்ஸெக்ஸ் மாகாணத்தின் எல்லைகளும் சுற்றுப் புறங்களுமே அதற்கு உதவியா யிருந்தன. அது இங்கிலண்டு தேசத்திற்கு மத்தியில் இருந்தது. அதற்கு நான்கு பக்கங்களிலும் வேறு இராஜ்ஜியங்கள் இருந்தமை யால், அன்னியதேசத்து சத்துருக்களின் உபத்திரவமும் துன்பமும் ஏற்படவில்லை. நார்தம்பேரியாவும் மெர்ஸியாவுமோ அவ்வித மில்லை. வடக்கிலிருந்த பிக்ட் இனத்தாரும், மேற்கிலிருந்த வெல்ஷ்காரரும் அவ்விரண்டு பிரதேசங்களையும் அடிக்கடி தாக்கிக் கொண்டே யிருந்தனர். ஷ முரட்டு இனத் தார்களை எதிர்த்துப் போர்புரிவதிலேயே அந்த மாகாண அர சர்களது காலமெல்லாம் கழிந்துபோயிற்று. மூன்றாவது; வெஸ் ஸெக்ஸ் தலையெடுத்த பொழுது இங்கிலண்டில் மத ஒற்றுமை ஏற் பட்டு ஸ்திரமாக நிலைத்திருந்தது. அதற்குமுன் நார்தம்பேரியா, மெர்ஸியா ஆகிய இவைகளின் அரசர்களும் குடிமக்களும் கிரிஸ்து மதச் சண்டைகளிலும் சச்சரவுகளிலுமே கவனம் செலுத்தவேண்டி யிருந்தது. பெண்டாவும் ஆஸ்வியூவும் போர் புரிந்ததே இதற்கு ஒரு சிறந்த திருஷ்டாந்தமாகும். எட்டாவது நூற்றாண்டின் முடிவில் மதச் சண்டைகள் யாவும் ஒழிய, அமைதி ஏற்பட்டு விட்டது; கெல்டிக் முறையைப் பற்றியும் உரோம் முறையைப் பற்றியும் ஜனங்கள் சச்சரவிட்டுக் கொள்வதும் நின்று போயிற்று. இன்னும் முக்கியமாக, கிரிஸ்து மதத்தின் நற்போதனையால் இங்கிலீஷ்காரர் கள் முன்புபோலின்றி அமைதியையும் சமாதானத்தையும் அதிக மாக விரும்பலானார்கள். போர்புரியும் குணம் ஓரளவு மறைந்திருந் தது. மேலும் ஏற்கனவே மற்ற இரண்டு இராஜ்ஜியங்களின் தலை

மையின் கீழ் இருந்துவந்த குடிமக்களுக்கு ஒரு பொதுவான அரசனால் ஆளப்படுவது விபரீதமாகத் தோன்றவில்லை. அதுவே ஜனங்களுக்கு உகந்ததாகவும் இருந்தது. ஒரே மதத்தையும் ஒரே பழக்க வழக்கங்களையும் அநுசரித்து அன்னியோன்னியமாக வாழ்ந்து வந்த இங்கிலீஷ்காரர் பல சிறு அரசர்களுக் குட்பட்டிருப்பதையும், அதனால் ஏற்படும் உள்நாட்டுச் சண்டைகளையும், அநாவசிய மான மனஸ்தாபங்களையும் நஷ்டங்களையும் அவர்கள் வெறுத்தனர். வெஸ்ஸெக்ஸ் கடைசியாகத் தலைமை வகிக்க ஆரம்பித்ததே அதற்கு ஓர் அநுகூலமாக இருந்தது. ஏனென்றால் அதற்கு முன்பே இங்கிலண்டு ஒரு குடையின்கீழ் ஒன்றுபட்டு வருவதற்கு வழி செய்யப்பட் டிருந்தது. ஆகவே, தன் அரச குலத்தின் மேன்மையாலும், இயற்கையான பல சௌகரியங்களாலும் வெஸ்ஸெக்ஸ் அரசு செழிப்புற்றோங்கி, தேசம் முழுதையும் சுலபத்தில் தனது அதிகாரத்திற்குள் அடக்கிக் கொண்டது.

(2) **டேன் மக்களின் படை யெழுச்சிகள்:**—எக்பர்ட் அரசர் வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தின் மேன்மைக்கு அஸ்திவாரம் போட்டு வெற்றி பெற்றாராலும், அவர் இறப்பதற்கு முன்பே, புதிய புதிய சில துன்பங்கள் தோன்றலாயின. உள்நாட்டுப் பகைவர் எல்லோரையும் அவர் தோற்கடித்துவிட்டா ராலும், அன்னிய தேசங்களிலிருந்து பல முரட்டு ஜாதியார் இங்கிலண்டின்மீது படையெடுத்து, வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தையே சீர்குலைக்கத் தொடங்கினர். முன்பு பிரிட்டனின் பழைய குடிகளுக்கு நேரிட்ட அபாயம் பின்பு இங்கிலீஷ்காரருக்கும் நேரும்போலிருந்தது. முன்பு, இங்கிலண்டில் வந்து குடியேறிய மூன்று இனத்தாரும் பொதுவாக ட்யூடன் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்று குறிப்பிட் டிருக்கிறோம். ட்யூடன் இனத்தார் ஒரு பெரிய சமூகம்; அவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து ஐரோப்பாவில் பல இடங்களில் குடியேறினார்கள். அவர்களுள் ஒரு கூட்டத்தார் ஐந்தாவது நூற்றாண்டுக்கு முன் உரோம் இராஜ்ஜியத்தைச் சீர்குலைத்தனர். அவர்களிற் சிலரே பின்பு இங்கிலண்டு தேசத்தைக் கைப்பற்றி, நாகரிக தசையை அடைந்து விட்டார்கள். ஆனால் ட்யூடன் வர்க்கத்தினர் பலர் ஐரோப்பாவின் வட கோடியிலுள்ள ஸ்காண்டிநேவியா (Scandi-

navia)வில் அப்போதும் பழைய நிலைமையிலேயே இருந்து வந்தனர். ஸ்காண்டிநேவியாவின் ஒரு பாகத்திற்கு நார்வே(Norway) என்று பெயர். அதற்குத் தெற்கில் ஐரோப்பாவில் டேன்மார்க் (Denmark) என்ற த்வீபகல்பம் கடலில் நீட்டிக்கொண் டிருக்கிறது. மேற்கூறிய பிரதேசங்க ளெல்லாம் அக்காலத்தில்—அதாவது ஏழாவது எட்டாவது நூற்றுண்டுகளில்—செழிப்பும் வளமும் அற்ற தரிசு நிலங்களாக இருந்தன. அங்கே குடியேறியிருந்த ட்யூடன்களோ உழுது பயிரிடத் தெரிந்துகொள்ளாதவர்கள். ஆதலால், தமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு அவர்கள் அடிக்கடி கப்பலேறி, ஐரோப்பாவின் தெற்கிலுள்ள செழிப்பான தேசங்களில் புகுந்து கொள்ளையடித்துத் திரும்புவது வழக்கம். அந்த முரட்டு ஜாதியாருக்கு இங்கிலண்டில் டேன் (Dane) இனத்தார் என்றும்—அதாவது டென்மார்க் தேசத்தவர் — ஐரோப்பாவில் நார்த்மேன் (Northmen)—அதாவது வட தேசத்தார்—என்றும் பெயர் வழங்கலாயிற்று. சிலர் அவர்களை நார்ஸ்மேன் (Norsemen)—நார்வேக்காரர்—என்றும் குறிப்பார்கள். டேன் இனத்தார் பிரிட்டன் தேசக் கடற்கரைப் பட்டணங்களில் சுலபமாகப் புகுந்து கொள்ளையிடலானூர்கள். டேன் இனத்தார் பேராசை மிகுந்தவர்களாயும், பயங்கரமான தோற்றமுடையவராயும் இருந்தார்க ளானுலும், யுத்தம் செய்வதில் அசகாய சூரர்களா யிருந்தனர்; எத்தகைய விரோதிகளையும் எளிதில் தோற்கடித்துவிடத் தக்கவர்கள். அவர்கள் கிரிஸ்து மதத்தைத் தழுவாமல் பழைய அநாகரிக தேவதைகளையே வணங்கினுர்கள், கிரிஸ்து மதத்தினரைத் தாக்குவதிலும் அவர்களுடைய ஆலயங்களையும் மடங்களையும் இடித்துத் தகர்ப்பதிலும் அவர்கள் விசேஷ உற்சாகமும் ஆநந்தமும் கொண்டனர். எட்டாவது நூற்றுண்டின் பிற்பகுதியிலேயே அவர்கள் நார்தம்பரியாவின் கடற்கரைப் பட்டணங்களைத் தாக்கி வந்தார்கள். வெஸ்ஸெக்ஸ் மாகாணம் தெற்கில் ஒதுங்கியிருந்ததாகையால் சிறிதுகாலம் வரையில் டேன்மக்களுடைய உபத்திரவத்திற்கு உட்படாமல் நின்றது. ஆனுல் எக்பர்ட் அரசருடைய கடைசிக் காலத்தில் அவர்கள் வெஸ்ஸெக்ஸின் மீதும் படையெடுத்துவரத் தொடங்கினர். எக்பர்ட் அரசனை வெறுத்துவந்த சில வெல்ஷ்காரரும் டேன்மக்களுடன் சேர்ந்து

கொண்டனர். எக்பர்ட் அவ்விரு எதிரிகளையும் தோற்கடித்தாராலும், புதிய சத்துருக்களுடைய பயம் அவருக்கு இருந்து கொண்டே வந்தது.

ஆனால் வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தின் துரதிருஷ்டத்தினால், எக்பர்ட் மன்னர் கி.பி. 839-ல் காலமாய் விட்டார். அவருடைய புத்திரர் எதேல்வுல்ப் (Ethelwulf) என்பவர் சாந்தகுணமும் தெய்வபக்தியும் நிறைந்தவர்; சாதாரண காலங்களில் அவர் திறமையாக அரசு செலுத்தியிருக்கக்கூடும்; ஆனால் டேன்மக்கள்போன்ற சூரர்களை எதிர்த்து நின்று வெஸ்ஸெக்ஸின் மேன்மையைப் பாதுகாக்க அவரால் கூடவில்லை. அவர் சில இடங்களில் டேன்மக்களை ஜெயித்தாராலும், அவர்களது படையெழுச்சிகள் ஓயவில்லை. மேலும் அப்பொழுது இன்னுமொரு விதத்தில் அபாயம் அதிகமாயிற்று. வழக்கமாக டேன்மக்கள் தங்களது யுத்தம் முடிந்தவுடன் கொள்ளையடிக்கப்படும் பொருள்களுடன் தமது நாட்டிற்குச் சென்று குளிர்காலத்தை அங்கு கழித்துவிட்டு மறுவருஷமே திரும்பியும் கொள்ளைக்குப் புறப்படுவார்கள். ஆனால் ஒரு வருஷம் அவர்கள் இங்கிலண்டிலேயே தங்கியிருந்து பார்த்து, தமது குளிர்மிகுந்த தேசத்தைக் காட்டிலும் அது நிரம்பவும் ஹிதமாகவும் ஆரோக்கியமாகவும் இருந்ததைக் கண்டு கொண்டார்கள். பிறகு அவர்களுக்கு முன் இங்கிலீஷ்காரர்கள் செய்ததைப் போலவே, அவர்களும் இங்கிலண்டில் குடியேறத் தலைப்பட்டனர். அதே சமயத்தில், வேறொரு சம்பவமும் அவர்களுடைய ஷ தீர்மானத்தை உறுதிப் படுத்தலாயிற்று. ட்யூடன் இனத்தார் ஸ்காண்டிநேவியாவில் பல சிறிய கூட்டங்களாகப் பிரிந்து சுயேச்சையான காட்டு மிருகங்களைப்போல வாழ்ந்து வந்தனர். ஆனால் நாளடைவில் சில பராக்கிரமசாலிகள் தம்மைவிட பலஹீனர்களாயிருந்தவர்களை வென்று அவர்கள்மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கினார்கள். ஆதிகாலக் குடிகளுக்குள் இவ்வித மாறுபாடுகள் ஏற்படுவது சகஜமே. வெகு சீக்கிரத்தில் நார்வேயிலும் அதையடுத்துள்ள ஸ்வீடனிலும் டென்மார்க்கிலும் ஒவ்வோர் அரசரே தமது தேசம் முழுதையும் ஒரே குடையின்கீழ் பலிபாலிக்கலானார்கள். ஷ அரசர்களுள் முக்கியமானவர் ஹாரால்ட் பேர்ஹேர் (Harold Fairhair) என்பவர். அவர் நார்வேயில் ஆண்டுவந்தார்.

அவருடைய உறுதியான ஆட்சியை அதற்குமுன் சுயேச்சையாயிருந்த நார்வே மக்கள் வெறுத்தனர். ஆனால் அவரை எதிர்ப்பது அசாத்தியமாயிருந்ததாகையால் அவரது கட்டுப்பாட்டிற்கு அடங்கியிருப்பதைவிட வேறு தேசங்களுக்குச் சென்று குடியேறுவதே சிலாக்கியமெனத் தோன்றியது. ஏற்கனவே, ஐரோப்பாவிலும் இங்கிலண்டிலும் கொள்ளையடிக்கச் சென்றபொழுது அந்த தேசங்களின் செழுமையைக் கண்டிருந்தார்களாதலால், அவர்கள் தமது தாய்நாட்டை விட்டு அத்தேசங்களை நோக்கிக் கிளம்பிவிட்டனர். எனவே ஒன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் நார்வேயிலிருந்து பல கூட்டத்தார் ஐரோப்பா முழுதிலும் பரவி அங்கங்கு நிலைத்துக் குடியேறினர். இன்னும் சிலர் தமது தேசத்திற்கு வடமேற்கிலுள்ள குளிர்மிகுந்த பிரதேசங்களான ஐஸ்லண்ட் (Iceland), க்ரீன்லண்ட் (Greenland) முதலிய தீவுகளுக்குச் சென்றனர். க்ரீன்லண்ட் தீவுக்குச் சென்றவர்களிற் சிலர் முதன்முதலாக அமெரிக்காவுக்கும் சென்று, கொலம்பஸ் என்பவர் அதைக் கண்டுபிடிப்பதற்கு ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்பே அதைக் கண்டு பிடித்தனர். வேறு சிலர் பிரிட்டன் தேசத்தின் வடக்கு ஓரங்களிலும் அயர்லண்டிலும் குடியேறி, அங்கு நிலைத்திருந்த கெல்டிக் இனத்தாருடன் சேர்ந்து வாழலாயினர். கடைசியில் பிரிட்டன் தேசத்தின் தென்பாகத்திற்கும் அவர்கள் வரத் தொடங்கி விட்டார்கள். நார்தம்பரியா, மெர்ஸியா முதலிய மாகாணங்கள் பலங்குன்றியிருந்தமையால் புதிய எதிரிகளை எதிர்த்துத் துரத்தமுடியவில்லை. கடைசியில் வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்திலும் டேன்மக்கள் நுழைய ஆரம்பித்தனர். நார்வே மக்களிற் சிலர் ஐரோப்பாவில் கால் மாகாணத்தின் வடகரையில் ஒரு பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். அந்தப் பிரதேசத்திற்கு அதுமுதல் நார்மண்டி ((Normandy) என்று பெயர் வழங்கலாயிற்று.

(3) **ஆல்ப்[2]ரெட் அரசரும் டேன்மக்களும்:**—வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தின் பிரசித்திபெற்ற அரசரான எக்பர்ட் மரணமடைந்ததும், அவருடைய குமாரர் எதல்வுல்ப்2 என்பவர் சிம்மாதன மேறினர். அவரது காலத்தில் டேன்மக்கள் சிறுகச் சிறுக

தேசத்தை ஆக்கிரமித்துக்கொண்டே வந்தார்கள். அவருக்கு நான்கு புத்திரர்கள் இருந்தனர். எதல்பால்ட் (Ethelbald), எதல்பேர்ட் (Ethelbert), எதல்ரேட் (Ethelred) என்ற முதல்மூன்று சகோதரர்களும் ஒருவர் பின்னொருவராய் கி.பி. 871 வரையில் அரசாண்டார்கள். அவர்களில் எவரும் அவ்வளவு கீர்த்தி பெறவில்லை. அவர்களுடைய கடைசி சகோதரரான ஆல்ப்ரெட் கி.பி. 871-ல் சிம்மாதனமேறினர். அவர் நிரம்பவும் கீர்த்திபெற்ற அரசர். அவர் அரசியலை வகித்தவுடன் முதன்முதலாக டேன் மக்களின் உபத்திரவத்தில் கவனம் செலுத்தவேண்டியிருந்தது. ஆல்ப்ரெட் அரசானதற்கு முன்பே டேன்மக்கள் வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தை இடைவிடாமல் எதிர்த்து வந்தனர். கி.பி. 871-ம் வருஷத்தில் வெஸ்ஸெக்ஸ் சேனை ஒன்பது யுத்தங்கள் புரிந்து டேன்மக்களைத் தோற்கடித்தது. ஆனல் சொற்ப காலத்திற்குப் பிறகு மறுபடி சண்டை ஏற்பட்டது. அப்பொழுது ஆல்ப்ரெட் மன்னருக்கு 23 வயதேயானலும், அவர் எதிரிகளைத் தோற்கடித்து வடக்கே ஓட்டிவிட்டார். அதன் பிறகு சில வருஷங்கள் வெஸ்ஸெக்ஸ் அமைதிபெற்றிருந்தது. டேன்மக்கள் மெர்ஷியா மாகாணம் முழுதையும் தமது வசப்படுத்திக் கொண்டனர்.

ஆனல் கி.பி. 878-ம் வருஷத்தில் டேன்சேனை மறுபடியும் வெஸ்ஸெக்ஸின்மீது திடீரென்று படையெடுத்து வந்தது. அந்தச் சேனையை குத்ரம் (Guthrum) என்ற தலைவர் நடத்தி வந்தார். எதிர்பாராவிதமாய் வந்த பெரும் சேனையை ஆல்ப்ரெட் எதிர்க்க முடியவில்லை. அவர்ச்சிப்பன்ஹாம் (Chippenham) என்ற இடத்தில் தங்கியிருக்கையில் டேன்சேனையை எதிர்க்க முடியாமல் ஒடி ஒளிந்துகொள்ள நேர்ந்தது. வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தில் டேன் மக்கள் பூர்த்தியாக வியாபித்துக் கொண்டனர். அவ்வாறு, ஆல்ப்ரெட் ஒளிந்து கொண்டிருந்ததைப் பற்றிப் பல கதைகள் கூறப்படுகின்றன. அவர் ஒரு சமயம் எவருக்கும் தெரியாமல் ஒரு சாதாரண ஏழையின் வீட்டில் தங்கியிருந்தபோது, அவ்வேழையின் மனைவி ஒருநாள் அடுப்பில் ரொட்டியைப் போட்டு, அது தீய்ந்து போகாதபடி பார்த்துக்கொள்ள ஆல்ப்ரெடைக் காவலாக வைத்து

விட்டுச் சென்றாள். ஆனால் அம்மன்னர் தமது இராஜ்ஜியத்தைப் பற்றிய சிந்தனையில் ரொட்டியை மறந்துவிட்டார். அந்த ஸ்திரீ திரும்பிவந்த காலத்தில், அது தீய்ந்து போய்க் கிடந்ததைக்கண்டு அவள் அவரை நிரம்பவும் கோபித்துக் கொண்டாள். ஆனால் ஆல்ப்ரெட் தமது குற்றத்தை யுணர்ந்து வெட்கி மௌனமாயிருந்தார். இது அவருடைய பெருந்தன்மையை விளக்குகிறது. அதன்பிறகு சீக்கிரத்தில் ஆல்ப்ரெட் ஒரு சேனையைச் சேர்த்துக்கொண்டு சென்று எடிங்டன் என்ற இடத்தில் குத்ரம் என்பவரைத் தோற்கடித்தார். குத்ரம் சமாதானம் செய்து கொள்ளத் தயாராயிருந்தார். வெட்மோர் (Wedmore) என்ற இடத்தில் சமாதானம் நடந்தது. அதன்படி டேன்மக்கள் வெஸ்ஸெக்ஸை விட்டுப் போய்விட வேண்டுமென்றும், குத்ரம் கிறிஸ்து மதத்தைத் தழுவவேண்டுமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. மெர்ஷியாவில் சில பாகங்களும் ஆல்ப்ரெட் வசமாயிற்று. இவ்வாறு ஆல்ப்ரெட் சிறு பிராயத்தினரா யிருந்தாலும் நிரம்பவும் பாடுபட்டு வெஸ்ஸெக்ஸைக் காப்பாற்றியதுடன், இங்கிலண்ட் முழுதும் டேன் இராஜ்ஜியம் ஆய்விடுவதையும் தடுத்துவிட்டார். குத்ரம் கிறிஸ்து மதத்தைத் தழுவியது ஒரு பெருத்த நன்மையாயிற்று. ஏனென்றால் புதிய மதத்தின் சாந்தோபதேசத்தினால் அவரது பழைய முரட்டுக் குணம் விலக வழியேற்பட்டது.

கி.பி. 886-ல் மறுபடியும் ஒரு யுத்தம் மூண்டது. அப்பொழுதும் குத்ரம் தோல்வியுற்று சமாதானம் செய்துகொண்டார். அதன்படி இங்கிலண்ட் தேசத்தை ஆல்ப்ரெட், குத்ரம் ஆகியஇருவரும் பிரித்துக் கொண்டனர். முன்பு உரோம் ஆட்சியின் காலத்தில் ஏற்பட்ட வாட்லிங் வீதி நடு எல்லையாயிற்று. வெஸ்ஸெக்ஸ் முழுதும், மெர்ஷியாவில் பாதியும் ஆல்ப்ரெட் வசமாயிற்று. அதற்கு வடக்கே இருந்த பிரதேசங்கள் டேன்மக்களைச் சேர்ந்துவிட்டன. வெல்ஷ்காரரும் ஆல்ப்ரெடினிடம் தாமாகவே அடங்கிஇருந்தனர். இம்மாதிரி ஆல்ப்ரெட் தமது தேசத்தில் பாதியை அன்னியருக்குக் கொடுத்ததன் முக்கிய நோக்கம், அநாவசியமான சண்டை

களை நிறுத்தவேண்டுமென்பதே. தமது பிரஜைகளிடம் அவருக்கு இருந்த அன்பே அவ்விதம் செய்ய அவரைத் தூண்டியது.

தங்களுக்குக் கிடைத்த இராஜ்ஜியத்தை டேன்மக்கள் தமது பழையமுறைப்படியே ஆளத்தொடங்கி அதைச்சிறியபகுதிகளாய்ப் பிரித்துக்கொண்டு தமக்கு அடங்கி வேலை செய்ய இங்கிலீஷ்காரரை வற்புறுத்தினர். டேன் இராஜ்ஜியத்திற்கு டேன்லா (Danelaw) அதாவது டேன்மக்களின் சட்டம் அநுஷ்டானத்திலுள்ள பிரதேசம் என்று பெயர் உண்டாயிற்று. ஆனால் இவ்வாறு டேன்மக்கள் நிலைப்பாகக் குடியேறியதனால், இங்கிலண்டில் பல மாறுபாடுகள் ஏற்பட்டன. அவை என்னவென்று கவனிப்போம். டேன்லா முதலில் தென் இங்கிலண்டிலிருந்து வேறுபட்டு நின்றாலும், அந்த நிலைமை சீக்கிரத்தில் மறைந்துவிட்டது. டேன்மக்களுடைய பாஷையும் பழக்க வழக்கங்களும் இங்கிலீஷ்காரருடையவைகளைப்போல இருந்தன. மேலும் டேன்மக்கள் சீக்கிரத்தில் தமது தலைவனைப் பின்பற்றி கிரிஸ்தவர்களாக மாறினார்கள். அதன் பின்பு இங்கிலீஷ்காரருக்கும் அவர்களுக்கும்ஒருபாசம்உண்டாயிற்று. கொஞ்சம் கொஞ்சமாக டேன்மக்களும் இங்கிலீஷ் பாஷையைப் பேசலானார்கள். இரண்டு தனி இனத்தார் மிக சமீபத்தில் வாழ்ந்து வந்தால் அவர்களுக்குள் கலப்பு ஏற்படுவது இயற்கையே. ஆதலால் வட இங்கிலண்டில் டேன்மக்களும் இங்கிலீஷ்காரரும் அநேகமாய் ஒன்றாய் விட்டனர். அவர்கள் தெற்கே இருந்தகலப்பற்ற இங்கிலீஷ்காரரைவிட சற்று அதிக முரட்டுத்தன்மை வாய்ந்தவராயிருந்தனரானாலும், மற்ற விஷயங்களில் ஏறக்குறைய ஒன்றாகவே இருந்தனர். மேலும் டேன்மக்கள் சண்டையிடுவதில் சமர்த்தர்களாயிருந்தனரானாலும், வெஸ்ஸெக்ஸ் ஜனங்களே அதிக நாகரிகமடைந்தவர்களாயிருந்தனர். இரண்டாவதாக, வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம் ஒரு தலைவனுக்குட்பட்டிருந்ததற்கு மாறாக, டேன்லா பல பிரிவுகளாகப் பிரிந்து ஒற்றுமையின்றி இருந்தது. ஆதலால் ஆல்ப்ரெட் அரசர் மரணமடைவதற்கு முன்பே, அவர் தமது முன்னோர்களது பெருமையை மீண்டும் அடைந்து வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கத்தை நிலைநாட்டினார். பல பிரிவுகளாகப் பிரிந்திருந்த டேன்லாவைக் கொஞ்சம் கொஞ்சமாக ஆல்ப்ரெட் மன்னர் ஜயித்துத் தமது

இராஜ்ஜியத்துடன் சேர்த்துக்கொண்டார். அவ்விதம் டேன்மக்களால் சிதறண்டுபோகும் அபாயத்திலிருந்த வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம் ஆல்ப்ரெடினுடைய திறமையால் அதிக மேம்பாடடைந்து நிலைத்துப்போயிற்று. மேலும், இங்கிலண்டு முழுதும் ஒரே அரசருடைய ஆட்சியின்கீழ் வருவதற்கு ஆல்ப்ரெட் மன்னரே முதன் முதலாக வழிகாட்டினார். ஆனாலும் அவர் நிரம்பவும் அடக்கமாகத் தம்மை 'வெஸ்ஸெக்ஸ் அரசர்' என்றே குறித்து வந்தார்.

(4) **ஆல்ப்ரேடின் மகத்துவம் :—** ஆல்ப்ரெட் அரசருக்கு மகா ஆல்ப்ரெட் என்ற கௌரவப் பட்டம் வழங்கப்பட்டு வருகிறது. ஆனால் அவர் டேன்களுடன் போராடி வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியத்தைக் காப்பாற்றியதால்மாத்திரம் அந்தகௌரவப்பட்டத்தைப் பெறவில்லை. அவர் இன்னும் வேறு எத்தனையோ விஷயங்களில் தேசத்தொண்டு செய்துவந்தார். வேறு எத்தனையோ அரசர்கள் யுத்தம்செய்து வெற்றி பெறுவதில் அவரைவிடத் திறமைசாலிகளா யிருந்தனராஹலும், மாசற்ற குண வொழுக்கங்களும், சூட்சும மான அறிவும் அவரிடமே பூர்த்தியாக நிறைந்திருந்தன. அவர் தைரியமுள்ள வீரராகவும், சிறந்த அரசராகவும், உயர்ந்த வித்துவானுகவும், உத்தம புருஷராகவும் இருந்துவந்தார். அவர் வெளிப்படையாகச் செய்துகாட்டிய காரியங்களைவிட, மௌனமாக அவர் நடத்திக் காட்டிய திருஷ்டாந்தமே அவருக்கு அதிகமான மேம்பாட்டை உண்டாக்கியது. அவருடைய குன்றாத தைரியமும், அபாயத்திலும் கலங்காத மனதும், வணக்கமும், உயர்வான நோக்கங்களும், தூய நடத்தையும், யதார்த்தமான தன்மையும் எல்லோரது மதிப்பையும் அன்பையும் உண்டாக்கிக் கொடுத்தன. அவர் கேவலம் யுத்தம் புரிந்து பகைவரைக் கொன்று புகழ்தேடமுற்படவில்லை; தமது தேசத்தைக் காப்பாற்றுவதற்கு மட்டுமே அவர் யுத்தம் நடத்தினர்; அது முடிந்ததும், தமது இராஜ்ஜியத்தின் வளத்தை எவ்விதத்திலும் பெருக்க முயற்சி செய்துவந்தார். டேன் மக்களுக்குப் பாதி தேசத்தைப் பகிர்ந்து கொடுத்ததிலேயே, அவரது பெருந்தன்மை விளங்கியது; தம்மால் நன்ருகப் பரிபாலிக்கமுடியாத ஒரு பெரிய தேசத்தை வைத்துக்கொண்டு, பகைவர்களை எதிர்த்து வீண் பொல்லாங்கை விலக்கு வாங்குவதைக்

காட்டிலும், ஒரு சிறிய இராஜ்ஜியத்தை வைத்து அமைதியாகச் செங்கோல் செலுத்துவதே அவருக்கு உசிதமாகத் தோன்றியது. அவர் பட்சபாதமின்றியும், நியாயமாகவும் அரசு நடாத்தி ஜனங் களுக்கு அரசாங்கத்தாரிடம் மரியாதையும் இராஜ்ஜிய விஷயங் களில் அக்கரையும் தோன்றுமாறு செய்தார். தேசத்தில் அமைதி ஏற்பட்டவுடனே, அவர் இராணுவபலத்தை அதிகப்படுத்த முயற்சி செய்தார். இராணுவபலம் போதாமையினுலேயே, முன்பு அவர் தமது இராஜ்ஜியத்தை விட்டு ஓடவேண்டியதாயிற்று. மேலும் மறுபடியும் புதிய டேன் மக்கள் படையெடுத்து வரக்கூடும் என்ற பயமும் இருந்துவந்தது. அவரது காலத்தில் ஒவ்வொரு சுதந்திரப் பிரஜையும் யுத்த சமயத்தில் சேனையில் சேர்ந்துகொண்டு சண்டை யிடவேண்டுமென்பது வழக்கம்; ஆதலால் பயிற்சிபெற்ற நிரந் தரமான ஒரு சேனை இல்லாதிருந்தது. அந்தக் குறையை நீக்கும் பொருட்டு ஆல்ப்ரெட் மன்னர் பிரஜைகளில் அரைப்பங்கு ஜனங்கள் எப்பொழுதும் யுத்தத்திற்கு ஆயத்தமாக இருக்கவேண்டு மென்றும், மற்றவர் தம் தம் அலுவல்களை கவனித்துக்கொண்டி ருந்து, அவசியமானபொழுது வந்தால் போதுமென்றும் ஓர் ஏற்பாட்டைச் செய்துவைத்தார். அதன் பயனுக அரைப்பங்கு ஜனங்கள் எப்பொழுதும் போருக்குத் தயாராகவே இருந்துவந்தனர். தேசத்திலிருந்த கோட்டைகளையும் அவர் அதிகப்படுத்தினுர். மேலும், அதுவரையில் இங்கிலண்டில் கப்பற்படையே இல்லா திருந்தது. இங்கிலீஷ்காரர்கள் அங்கு குடியேறியதற்குமுன் கப்ப லோட்டுவதில் திறமை பெற்றிருந்தனராலும், அவர்கள் அந்தப் பழக்கத்தை முற்றிலும் அலட்சியம் செய்து விட்டமையால், டேன்மக்கள் இங்கிலண்டில் காலடிவைப்பதைத் தடுக்கக்கூடாமல் போய்விட்டது. அதையுணர்ந்த ஆல்ப்ரெட் மன்னர் ஒரு கப்பற் படையை உற்பத்தி செய்தார். அது டேன் மக்களுடைய கப்பற் படையைவிடப் பெரியதாயும் அதிக சக்தி வாய்ந்ததாயும் இருந் தது. ஆல்ப்ரெட் காலத்திற்குப்பின் ஒரு நூற்றுண்டுவரையில் வெளியிலிருந்து டேன்மக்கள் எவரும் படையெடுத்துவரவில்லை.

ஆனல் யுத்தசமயத்தில் செய்வது போல சமாதான காலத்திலும் ஆல்ப்ரெட் அரிய முயற்சிகள் செய்துவந்தார். மத்ரம் என்பவர்

போன்ற பலர் யுத்தம் செய்வதில் அவருக்கு நிகராயிருந்தாலும் மற்ற விஷயங்களில் அவருக்கு ஈடு நிற்கவில்லை. தம்மை பிரஜைகளுடைய சேவகனாகவே ஆல்ப்ரெட் கருதினார். பிரஜைகளது அபிவிருத்தியொன்றிலேயே, அவர் கவனம் செலுத்தினார். டேன் மக்களுடன் உக்கிரமான போர்கள் நடந்தபின், வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம் பாழடைந்து விகாரப்பட்டுப் போயிற்று. அத்தகைய பரிதாபகரமான நிலைமையிலிருந்து தமது பிரஜைகளை மீட்க ஆல்ப்ரெட் பகீரதப் பிரயத்தனம் செய்தார். அவர் பழைய சட்டங்களையெல்லாம் திரட்டி ஒன்றுபடுத்தி அவைகளை பகிரங்கப்படுத்தினார். அவர் வியாபாரிகளிடத்திலும் கைத்தொழிலாளரிடத்திலும் சிநேகப் பான்மையாக நடந்துகொண்டு வியாபாரத்தைப் பெருக்கினார். டேன் மக்களால் சூறையாடப்பட்டிருந்த லண்டன் நகரத்தை அவர் மறுபடி புதுப்பித்தார்; பல மாலுமிகளை அயல் நாடுகளுக்கு அனுப்பி அங்கிருந்த புதுமைகளை அறிந்துவரச் செய்தார். மதகுருவான போப்புடனும் மற்ற அரசர்களுடனும் அவர் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருந்தார்; பல ஆலயங்களுக்கும் மடங்களுக்கும் சன்மானங்கள் வழங்கினார். இங்கிலண்டில் டேன் மக்களின் படையெழுச்சியினால், மடாலயங்கள் எல்லாம் இடித்துத் தகர்ப்பட்டுப் போயிருந்தன; மத குருமார்களெல்லோரும் பல துன்பங்களுக்குட்படுத்தப் பட்டனர். அநாகரிகர்களான டேன் மக்களுக்கு, கல்வியின் மேம்பாடு தெரியாதிருந்தமையால், அவர்கள் புஸ்தகங்களையெல்லாம் அழித்துவிட்டனர். இங்கிலண்ட் தேசம் முழுதும் அக்ஞான இருளில் மூழ்கி இருந்தது. ஆல்ப்ரெட் மன்னர் இளமையிலிருந்தே கல்வியில் அதிக ஊக்கம் கொண்டவர். அவர் மடாலயங்களைப் புதிப்பித்துக் கற்றறிந்த பாதிரிமார்களை அவைகளில் நியமித்தார். அவர் லாடின் பாஷை தெரிந்துகொள்ளாதவர்களின் பொருட்டு பல நூல்களை மொழி பெயர்க்கச்செய்து, இங்கிலண்ட் தேசசரித்திர வரலாறு ஒன்றை எழுத ஆரம்பித்தார்.

இவ்வரலாறு பிற்காலத்து நூலாசிரியர்களுக்குப் பெருத்த உதவியாகஇருந்துவருகிறது. அரண்மனையிலேயே பல பாடசாலைகளை ஏற்படுத்தி அன்னிய தேசத்து வித்துவான்கள் பலரையும் அழைத்து வைத்துக்கொண்டார். அத்தகைய வித்துவான்களில் வெல்ஷ் இனத்

தைச்சேர்ந்த அஸ்ஸர் (Asser) என்பவர் அவ்வரசரது ஜீவிய சரித்திரத்தை எழுதினர். அத்தனை ஏற்பாடுகளையும் செய்தபடியே, அவர் தமது அறிவையும் விருத்தி செய்துகொண்டு, கடவுளிடம் பக்தியும் செலுத்திவந்தார். இப்பொழுதிருப்பதுபோல நாகரிகமும் மற்ற சௌகரியங்களும் அதிகமாய் ஏற்படாத அக்காலத்தில் ஓர் அரசர் இத்தனை காரியங்களைச் செய்து முடிப்பது உண்மையில் ஆச்சரியகரமான விஷயமே. அவர் அடிக்கடி வியாதியால் பீடிக்கப்பட்டாராலும், அவரது தேச ஜனங்கள் அவரது செய்கைகளை நன்றியறிதலுடன் பாராட்டாமலிருந்தனராலும், அவர் தமது ஆயுளை நாட்டின் நன்மைக்கே அர்ப்பணம் செய்த சிரேஷ்டராக விளங்கினர். உத்தம புருஷருடைய நற்குணங்கள் யாவும் அவரிடம் பூர்த்தியாக நிறைந்திருந்தன. அவர் ஏழைகளுக்கு உகந்த நண்பராக இருந்தார். அவர் கி. பி. 899-ல் மரணமடைந்தபொழுது வெஸ்ஸெக்ஸ் ஜனங்கள் மிகவும் வருந்தலாயினர். எனவே, அவருக்கு மகா ஆல்ப்ரெட் என்ற பெயர் கிடைத்ததில் விந்தையொன்றுமில்லை. உலகத்தில் அரசாண்ட உத்தமகுண மன்னர்களுள் அவரும் ஒருவரென இன்னமும் இங்கிலீஷ்காரர்கள் அவரை மதித்து கௌரவித்து வருகிறார்கள்.

---

## 6-வது அதிகாரம்.

---

### இங்கிலண்டில் டேன் மக்களின் ஆட்சி.

(1) ஆல்ப்ரெடின் சந்ததியார்:— ஆல்ப்ரெட் இறந்த பிறகு அவருடைய குமாரரான மூத்த எட்வர்ட் (Edward the Elder) சிம்மாதன மேறினர். அவர் தமது தந்தையைப் போலவே யுத்தம் புரிவதில் திறமைசாலியாயிருந்தார். தமது தந்தை ஆரம்பித்த வேலையைப் பூர்த்திசெய்து இங்கிலண்டை ஒரு குடையின் கீழ்க் கொண்டுவருவதற்கு அவர் முயற்சிசெய்யத் தொடங்கினர். அதன்பொருட்டு அவர் பல கோட்டைகளைக் கட்டி, அவைகளிலிருந்துகொண்டு பகைவரை ஜயிக்க எண்ணம் கொண்டார். கூடிய

விரைவில் மெர்ஷியா, ஈஸ்ட் ஆங்கிலியா, நார்தம்பெரியா ஆகிய யாவும் அவரது வசமாய்விட்டன. அவருடைய தவறாத வெற்றிகளைக் கண்ட மற்ற பகைவர்கள் தாமாகவே அவருக்குக் கீழ்ப்படிந்து போயினர். முக்கியமாக அதுவரையில் இங்கிலீஷ்காரர் களை மும்முரமாக எதிர்த்துவந்திருந்த வெல்ஷ்காரர்கள்கூட தாமா கவே எட்வர்ட் மன்னரின் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டனர். அப்பொழுது வேல்ஸ் மாகாணத்தை ஹோவல் (Howel) என்ற இள வரசர் திறமையாக ஆண்டுவந்தார். அவர் எட்வர்ட் மன்னருக் குக் கீழ்ப்பட்டுவிட்டார். கி. பி. 924-ல் எட்வர்ட் மரண மடைந்தபோது, ஏறக்குறைய இங்கிலண்ட் முழுதும் அவரது வச மாயிருந்தது. ஆதலால் அவர் தம்மை வெஸ்ஸெக்ஸ் மன்னர் என்று குறிக்காமல், இங்கிலீஷ்காரரின் அரசர் என்ற பொதுவான பட்டத்தை வகித்துக்கொண்டார். அது முதல் இங்கிலண்ட் தேசம் பல இராஜ்ஜியங்களாகப் பிளந்துபோகாமல் ஓர் இராஜ்ஜிய மாகவே இருந்து வந்திருக்கிறது. வெஸ்ஸெக்ஸ் இராஜ்ஜியம் பரி மாணத்தில் படிப்படியாக விருத்திபடைந்து, தேசம் முழுதையும் தனக்குள் அடக்கிக்கொண்டது. அந்த இயக்கம் ஆல்ப்ரெட் காலத்திலேயே நன்றாக உறுதிப்பட்டு, அவருடைய புத்திரரின் காலத்தில் நிரந்தரமாய் ஊர்ஜிதப்பட்டுப்போயிற்று.

மூத்த எட்வர்டினுடைய மூன்று குமாரர்களும் அவருக் குப்பின் அரசாட்சியை வகித்துவந்தார்கள். மூத்தவரான அதேல் ஸ்டன் (Athelstan) கி. பி. 924முதல் 940வரை அரசுபுரிந்தார். அவர், தகப்பனரைப்போல்வே யுத்த வீரராக இருந்தார். அவர் டேன் மக்களுடைய அரச குலத்தையே அடியோடு வேரறுத்து சக்கரவர்த்தியாக விளங்கினார். அவரது பராக்கிரமம் வெளி தேசங் களில் பரவப் பரவ, அன்னிய அரசர்கள் அவரது சம்பந்தத்தை யும் சிநேகத்தையும் நாடத்தொடங்கினர். அவரது சகோதரிகளை ஐரோப்பாக்கண்டத்தின் சக்கரவர்த்திகள் மணந்துகொண்டனர். அவர் பல சட்டங்களையும் இயற்றியதன்றி மதாபிமானம் நிறைந்த வராயிருந்துவந்தார். ஜனங்களும் அவரைக் கொண்டாடினர். அவ ருக்குப்பிறகு அவருடைய இளைய சகோதரர் எட்மண்ட்

(Edmund) அரசராகி, டேன்களையும் மற்றும் சில பகைவர்களையும் தோற்கடித்துப் பிரசித்தியடைந்தார். ஆனால் ஆறுவருஷகாலம் கழித்து கி. பி. 946-ல், ஒரு தேசப் பிரஷ்டன் அவரைக் கொன்று விட்டான். எட்மண்டினுடைய இரண்டு பிள்ளைகளும் சிறு வர்களாயிருந்தமையால் ஜனங்கள் அவருடைய தம்பியான எட் ரெட் (Edred) என்பவரை சொற்பகாலத்திற்கு அரசாளும்படி செய்தார்கள். எட்ரெட் சிறிதும் பலவானே யல்லரானாலும், நற்குண முடையவராதலால், அறிவாளிகளின் ஆலோசனைப்படி நடந்துவந்தார். அவருக்கு முக்கியமாக டன்ஸ்டன் (Dunstan) என்ற மதகுரு உதவிசெய்தார். டன்ஸ்டன் ஏற்கனவே தமக்குக் கீழ் இருந்த சன்னியாசிகளைச் சீர்திருத்தி தேசத்தில் கீர்த்தி யடைந்திருந்தார். மதவிஷயங்களில் இருந்ததைப் போலவே அவருக்கு இராஜ்ஜிய விஷயங்களை நிர்வகிப்பதிலும் திறமை இருந்தது. அக்காலங்களில் அரசனே ஓர் இராஜ்ஜியத்தின் முக்கிய புருஷனாக இருந்து நேராக யுத்தம் செய்து, இராஜ்ஜிய நிர்வாகத்தையும் நடத்திவர வேண்டியிருந்ததாகையால், பராக்கிரமமில்லாதவனோ, அல்லது, இளம்பிராயத்தினனோ அரசியலை வகித்தால், அந்த இராஜ்ஜியம் அழிவது திண்ணமாக இருந்தது. ஆனால் டன்ஸ்டனுடைய உதவி இருந்தமையால், எட்ரெடின் காலத்தில் வெஸ்ஸெக்ஸ் க்ஷீணிக்காமல் தப்பியது. எட்ரெட் தம்மை 'பிரிட்டன் தேசமன்னர்' என்று கௌரவமாகக் குறித்துக்கொண்டார். ஆனால், பிரிட்டிஷ் தீவுகள் முழுதும் அவருக்கு வசப்படவில்லை. அதிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகிறது. அதாவது, வெஸ்ஸெக்ஸ் மன்னர்களுக்கு பிரிட்டன் முழுதையும் ஜயிக்கவேண்டுமென்ற தீவிரமான அவா இருந்துவந்தது. டன்ஸ்டனுடைய திறமையினால், இங்கிலண்ட் முழுதும் உண்மையில் ஒருவரது ஆளுகையின்கீழ் வந்தது. மேலும், அதற்குள் டேன்லா வில் இருந்த டேன்மக்களும் அநேகமாக இங்கிலீஷ்காரராகவே மாறிவிட்டமையால் டன்ஸ்டனுடைய வேலை சுலபமாயிற்று. ஆனாலும், டன்ஸ்டன் டேன்மக்களின் சட்டங்களையும் பழக்கவழக்கங்களையும் மாற்றாமல், அவர்களை சுதந்திரமாக விட்டுவைத்ததனால்

அவர்களும் குறைகூருமல் இங்கிலீஷ் மன்னருக்குக் கீழ்ப்பட்டு நடக்கலாயினர்'. எட்ரெட் கி.பி. 955-ல் மரண மடைந்தார்.

(2) டன்ஸ்டன் செய்த நன்மைகள் :—எட்ரெட் மன்னருக்குமுன் அரசாண்ட எட்மண்ட் இரண்டு சிறிய குழந்தைகளை வைத்துவிட்டு இறந்தார் என்று குறிப்பிட்டோமல்லவா? அவர்களில் மூத்தவரான எட்வி (Edwy) அப்பொழுது அரசானுர். அவர் தமது யௌவன தசையின் கர்வத்தினுலும் பல கெட்ட நண்பர்களின் தூண்டுதலினுலும் டன்ஸ்டனுடன் சண்டையிட்டு அவரை தேசத்தைவிட்டுத் துரத்திவிட்டார். அது பெரிய மூடத்தனமான காரியம். டன்ஸ்டனுடைய பகைவர்களிற் சிலர் எட்வியினுடைய மனதைக் கலைத்துவிட்டமையால், அவ்வித அபாயம் நேர்ந்தது. அதன் பலனும் கைமேல் கிடைத்தது. ஏனென்ருல், நார்தம்பெரியா, மெர்ஸியா ஆகிய இரண்டு மாகாண ஜனங்களும் கலகம் செய்து எட்வியினுடைய ஆதிக்கத்தைமீறி, அவருடைய தம்பியான எட்கார் (Edgar) என்பவரைத் தம்முடைய அரசராக்கிக் கொண்டனர். எட்கார் நிரம்பவும் புத்திமானுதலால், அவர் டன்ஸ்டனை உடனே திருப்பி யழைத்துக்கொண்டார். எட்வி வெஸ்ஸெக்ஸ் மாகாணத்தை மாத்திரம் நான்கு வருஷ காலம் ஆண்டபடி கி.பி. 959-ல்இறந்தார். அதன்பிறகு எட்கார் இங்கிலண்ட் முழுதிர்கும் அரசானுர். அவரது காலத்தில் இராஜ்ஜிய சம்பந்தமான போரே நேரவில்லையாதலால், அவருக்கு சமாதான எட்கார் (Edgar the Peaceful) என்று பெயர் உண்டாயிற்று. எட்காருக்கு டன்ஸ்டனே முக்கிய மந்திரி ஆய்விட்டார். அவர் காண்டர்பரியின் முக்கிய மதகுரு ஸ்தானத்தை வகித்து, எல்லாத் துறைகளிலும் தேசத்தின் நன்மையை அபிவிருத்திசெய்ய முயற்சித்ததன்றி, யுத்தம் நேரிடாதபடியும் ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டார். அவருடைய ஆலோசனைப்படி நடந்துவந்த எட்காருக்கு வெல்ஷ் சிற்றரசர்களில் சிலரும், ஸ்காட் சிற்றரசர்களில் சிலரும் தாமாகவே அடங்கி நடந்தனர். ஆல்ப்ரெட் ஆரம்பித்த வேலை எட்கார் காலத்தில்பூர்த்தியடைந்தது, இங்கிலண்ட், நிச்சயமாக, ஒரு குடையின்கீழ் வந்துவிட்டது. அவருடைய ஆட்சி கடுமையாகவும் நீதி

யாக்வும் இருந்தது. டன்ஸ்டன் அரசாங்கத்துறையில் நன்மைகள் புரிந்ததன்றி மதசம்பந்தமான பல சீர்திருத்தங்களையும் செய்தார். ஆல்ப்ரெட் எத்தனையோ சீர்திருத்தங்களைச் செய்தாராலும், அக்காலத்தில் மதகுருமார்கள் தூயவாழ்க்கை வாழாமையால், நிலைமை சீர்குலைந்திருந்தது. டன்ஸ்டன் தேசத்தை விட்டுத் துரத்தப்பட்ட பொழுது ஐரோப்பாக் கண்டத்தில் இருந்த மதப்பற்றை கவனித்து வந்திருந்தாராதலால், அவர் தமக்குட்பட்ட மதகுருமார்களும் பரிசுத்தமாக நடந்து அடக்கம், பணிவு, விரக்தி முதலிய குணங்களுடன் ஒழுகவேண்டுமென்று வற்புறுத்தினர். பெயருக்கு மாத்திரம் மத குருவாக இருந்துகொண்டு, உலக சுகங்களை அநுபவித்து வந்தவர்களை அவர் வெறுத்தார். அவர் சமயோசிதமாக வேலைசெய்து மடாலயங்களிடம் ஜனங்களுக்கு கௌரவம் ஏற்படும்படி செய்து வைத்தார். எட்கார் கி.பி. 975-ல் உயிர்துறந்தார். அவரோடு வெஸ்ஸெக்ஸ் இராஜஜியத்தின் பெருமையும் குறைந்துபோயிற்றென்றே கூறவேண்டும். அவருக்கு எட்வர்ட், (Edward) எதல்ரேட் (Ethelred) என்று இரண்டு புத்திரர்கள் இருந்தார்கள். இருவரும் வெவ்வேறு தாய்க்குப் பிறந்தவர்களாதலால் யார் அரசராவது என்ற தர்க்கம் ஏற்பட்டது. டன்ஸ்டன் மூத்தவரான எட்வர்டை சிம்மாதனத்திலமர்த்தினர். ஆனல் அதற்கு முன்னிருந்ததுபோல டன்ஸ்டனுடைய விருப்பம் சுலபத்தில் பலிக்கவில்லை. அவருக்குப் பல பகைவர்கள் உண்டாய்விட்டனர். மேலும் கி. பி. 978-ல் எட்வர்ட் மன்னர் தமது சிறிய தாயின் தூண்டுதலினல் குத்திக் கொல்லப்பட்டார். அந்தப்பரிதாபகரமான சம்பவத்தினல் அவருக்கு 'பிராணத்தியாகம்செய்தபுண்ணியாத்மா எட்வர்ட்' (Edward The Martyr) என்று பெயர் வழங்கலாயிற்று. அதன்பிறகு டன்ஸ்டன் துரைத்தன விஷயங்களில் கலந்துகொள்ளாமல், தனியாகவே விலகிநின்று மதவிஷயங்களில் மாத்திரம் அக்கரையாக நடந்துகொண்டார். அவர் இறப்பதற்கு முன்பே, தாம் செய்திருந்த நல்ல காரியங்களெல்லாம் நாசமானதைக் காண நேர்ந்தது. ஆனல் இங்கிலண்ட் தேச சரித்திரத்தில் டன்ஸ்டன் ஒரு முக்கிய ஸ்தானத்தையும் கௌரவத்தையும் பெற்றவரானர். அவர் அரசராகவோ, யுத்தவீரராகவோ இல்லாமல் போனலும், சிறந்த துரைத்தன நிபுணரென்பதற்கு




(56-வது பக்கம்)

ஐயமே இல்லை. மதவிஷயங்களிலும் துரைத்தன விஷயங்களிலும் ஒரே மாதிரியான நிர்வாக சக்தியை அவர் பெற்றிருந்தது ஆச்சரியகரமானதே. ஆல்ப்ரெட் ஜனங்களுக்குக் கல்வி பயிற்றுவித்து நாகரிக மானவர்களாகச் செய்துவிட எடுத்துக் கொண்ட முயற்சி டன்ஸ்டன் காலத்தில் பூர்த்தியடைந்தது.

(3) **டேன் படையெழுச்சி** :—எட்வர்ட் கொல்லப்பட்ட பிறகு எதல்ரெட் என்பவர் கி.பி. 978 முதல் 1016 வரையில்நீண்ட காலம்ஆட்சிபுரிந்தார். அவரது காலத்தில் இங்கிலண்டில் குழப்பமே தலையெடுத்து நின்றது. அவருக்கு "முன் ஜாக்கிரதையற்ற எதல்ரெட் (Ethelred the Unready)" என்ற இழிவான பட்டப்பெயர் கிடைத்தது. வெஸ்ஸெக்ஸ் அரசகுலத்தினரின் நற்குணங்களில் ஒன்றாவது அவரிடம் காணப்படவில்லை. இயற்கையிலேயே அவர் பொறாமையும், அற்பகுணமும், சந்தேக புத்தியும் உடையவர். தமது இராஜ்ஜியத்தை எவ்விதம் பரிபாலிக்கிற தென்பதையே தெரிந்துகொள்ளாமல் அவர் தேசத்தில் இருந்த கனவான்களையும் குடிமக்களையும் விரோதித்துக் கொண்டார். நாடெங்கும் சண்டைகளும் சச்சரவுகளுமே பெருகலாயின. கெடுதல்கள் எப்பொழுதும் தனித்து வருகிறதில்லை; பலவாகச் சேர்ந்தே வருகிறது வழக்கம். அதற்கிணங்க, இந்தத் திறனற்ற அரசாது காலத்தில் மறுபடியும் டேன்மக்கள் இங்கிலண்டின்மீது படையெடுத்து வரலாயினர். அவர்கள் முன்பு படையெடுத்து வந்து ஆல்ப்ரெட் மன்னரையே கலக்கிவிட்டனர். ஆனாலும் அம்மன்னருடைய சாமர்த்தியத்தினால் அவர்கள் சமாதானம் செய்துகொண்டு இங்கிலண்டில் தங்கினர். இப்பொழுது மறுபடியும் டேன்மக்கள் தமது சொந்த தேசத்தில் பிழைக்க வகையில்லாமையால் அயல் தேசங்களுக்குப் புறப்படலாயினர். எதல்ரெட் அவர்களைத் துரத்திவிட மாட்டாதவராயிருந்தாராலும்ஒரு தந்திரம் செய்தார் கடற்கொள்ளைக்காரருக்குதாராளமான பணம் கொடுத்துவிட்டால்,அவர்கள் திரும்பிப் போய்விடுவார்களென்றெண்ணி,அப்பணத்தைச் சேகரிப்பதற்கு ஒரு புதிய வரியை விதிக்கலானார். அதற்கு டேன்கெல்ட் (Danegeld) அதாவது டேன்மக்களுக்கான பொன் அல்லது வரி என்று பெயர். ஆனால் அவ்வாறு

பணத்தைப்பெற்றுக்கொண்ட டேன்மக்கள் திரும்பிப்போய்விட்டார்களானாலும், அவ்வளவு சுலபமாகப் பணம் கொடுக்கும் தேசத்திற்கு ஒவ்வொரு வருஷமும் தாம் விஜயம் செய்யலாமென்று நினைத்து அவ்வாறே செய்யத்தொடங்கினார்கள். ஆகவே எதல்ரெடினுடைய யுக்தி பெருந்தீங்கை விளைவித்துவிட்டது. ஆனாலும் அதிமேதாவியான அந்த அரசர் இன்னுமொரு விசேஷ யோசனையைச் செய்து நிறைவேற்றிவிட்டார். அதாவது இங்கிலண்டில் இருந்த டேன் மக்கள் எல்லோரையும் ஒரே இரவில் படுகொலை செய்யும்படி உத்தரவிட்டார். அந்தப் படுகொலை கி.பி. 1002-ம் வருஷம் நவம்பர் 13-ம் தேதியன்று நடந்தது. அந்த தினத்தை கிரிஸ்துவர் ஸெயின்ட் ப்ரைஸ் தினம் என்று குறிப்பதனால், அது ஸெயின்ட் ப்ரைஸ் தினப்படுகொலை (Massacre of St. Brice's day) எனப்படுகிறது. அந்தப்படுகொலையைப் பற்றிக் கேள்வியுற்ற டேன் அரசரான ஸ்விஜன் (Swegen) என்பவர் பழிக்குப் பழிவாங்கத் தீர்மானித்தார். அவரது உறவினர் சிலரும் அந்தப் படுகொலைக் குட்பட்டிருந்தனர். முன்பு ஆல்ப்ரெட் காலத்தில் டேன்மக்கள் சிறு சிறு கூட்டமாகவே வந்துகொண்டிருந்தார்கள். இப்பொழுது அவர்களெல்லோருக்கும் ஒரே அரசரே இருந்தமையால் அவ்வரசர் பெரும்படையுடன் இங்கிலண்டை கி. பி. 1003-ல் எதிர்த்தார். எதல்ரெட் அரசரது பாடு திண்டாட்டமாய்விட்டது. டேன்சேனையை எதிர்க்கத் சகுதியான இங்கிலீஷ் படை இல்லை. அதன்பிறகு பத்து வருஷகாலம் மேற்படி எதிரிகள் தேசத்தைச் சூறையாடினார்கள். காண்டர்பரியில் இருந்த தலைமை மதகுருவை அவர்கள் அடித்தே கொன்று போட்டனர். கி. பி. 1013-ல் ஸ்விஜன் மறுபடியும் படையெடுத்துவந்து அநேக பிரதேசங்களை ஜயித்துவிட்டார். எதல்ரெட் ஒன்றையும் செய்யமாட்டாதவராய்த் தமது மனைவியின் தேசமான நார்மண்டி (Normandy)க்கு ஓடிவிட்டார். ஸ்விஜனை எதிர்த்து நிற்பவர் எவருமில்லை. ஆனால் அவர் அடுத்த வருஷமே மரணமடைந்தார்.

ஸ்விஜனுடைய பிள்ளையான கான்யூட் (Canute) என்பவர் திறமைவாய்ந்தவர். அவர் ஸ்விஜனுடைய ஸ்தானத்திற்கு வந்தார். அதற்குள் சிலர் எதல்ரெட் மன்னரைத் திருப்பி யழைத்து,

கான்யூட்டுடன் போர் புரியச் செய்தனர். ஆனால் எதல்ரெட் கி. பி.1016-ல் உயிர் துறந்தார். அவரால் தேசத்திற்கு எவ்வித நன்மையும் செய்ய இயலவில்லை. அவரது ஆட்சியில் துன்பமே அதிகரித்தது. ஆனால் அவருக்குப் பிறகு அரசான எட்மண்ட் (Edmund) என்றவர் சிங்கக்குட்டி போன்ற மகா பராக்கிரமசாலி. அவருக்கு இரும்பையொத்த தேகவன்மையிருந் தமையால் அயர்ன் ஸைட் (Ironside) என்ற பட்டம் கிடைத்தது. கான்யூட், எட்மண்ட் ஆகிய இருவரும் பராக்கிரமத்தில் சமானமாக இருந்தார்கள்; கி. பி. 1016-ம் வருஷம் முழுதும் அவர்களுக்குள் பல போர்கள் நடந்தன. கடைசியாக ஒருவரையொருவர் தோற்கடிக்க முடியாமல் போகவே ஒல்னி (Olney) என்ற இடத்தில் இங்கிலண்டை ஆளுக்குப் பாதியாகப் பிரித்துக் கொள்வதாக இருவரும் சமாதானம் செய்துகொண்டனர். ஆனால் அடுத்த வருஷத்தில் அவ்விளஞ்சிங்கம் மரணமடைய, கான்யூட்டே தேசம் முழுதிற்கும் அரசானார்.

(4) **கான்யூட் மன்னரின் ஆட்சி:**—கொஞ்சகாலம் இங்கிலண்ட் தேசம் டேன் மன்னர்களால் பரிபாலிக்கப்பட்டு வந்தது. கான்யூட் அன்னிய நாட்டினராயிருந்தாலும், அவர் சிறந்த இங்கிலீஷ் அரசர்களுள் ஒருவரென்ற கீர்த்தியைப் பெற்றார். தம்மால் ஜெயிக்கப்பட்ட தேசத்தை அவர் நிரம்பவும் ஒழுங்காயும் காருண்யத்தோடும் பரிபாலித்து வந்ததே அதற்குக் காரணம். அவருடைய ஆட்சியில் எட்கார் காலத்திலிருந்த வளமும் அபிவிருத்தியும் திரும்பவும் ஏற்பட்டன. அவர் இங்கிலண்ட் தேசத்தையும் தமது தாய்நாடான டென்மார்க்கையும் பரிபாலிக்க வேண்டியிருந்தாலும், இங்கிலண்ட் விஷயத்திலேயே அதிக கவனம் செலுத்தத் தொடங்கினார். தம்மால் தோற்கடிக்கப்பட்ட தேசத்தினரை அவர் துன்புறுத்தாமல் அவர்களது பிரியத்திற்கும் நம்பிக்கைக்கும் பாத்திரராய் விட்டார். தம்முடன் இருந்த டேன் படையை அவர் ஊருக்கு அனுப்பிவிட்டு இங்கிலீஷ்காருடைய உதவியைக் கொண்டே அரசாண்டதன்றி, இங்கிலீஷ் அரசகுல இராணியை மணந்து கொண்டார். மேலும் அவர் கிரிஸ்து மதத்

த்தைத் தழுவி மேற்படி மதப் பற்றுள்ளவராக நடந்து வந்தமையால் ஜனங்களுக்கும் அவருக்கும் வேற்றுமை இல்லாமல் போயிற்று. அவர் இங்கிலீஷ்காரர்களை அவர்களுடைய சட்டப்படியும் அவர்களுடைய பழக்க வழக்கங்களின்படியும் பரிபாலித்து வந்தார். கூடிய விரைவில் அவர் நார்வே தேசத்திற்கும் அரசரானார். ஆதலால், உண்மையில் அவர் ஒரு சக்கரவர்த்தியின் பதவியை வகித்து வந்தார். தமது சொந்த தேசத்து முரட்டு ஜனங்களிடம் பல இங்கிலீஷ் பாதிரிமார்களை அனுப்பி அவர்களிடம் நாகரிகம் பரவ ஏற்பாடு செய்தார். அவர் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்து தமது இராஜ்ஜியத்தின் எல்லா பாகங்களையும் பார்த்துவிட்டு வருவார். கிரிஸ்தவர்களுக்கு முக்கிய ஸ்தானமான உரோம் நகரத்திற்கும் அவர் யாத்திரை சென்றிருந்தார். எல்லோரையும் நியாயமாக நடத்தி உயர்வான நோக்கங்களைக் கடைப்பிடித்தொழுகினார். தம்மைச் சுற்றி எப்பொழுதும் ஒரு படையைத் தயாராக வைத்துக் கொண்டிருந்தாராதலால், அவரை எதிர்க்க எவராலும் இயலவில்லை. கான்யூட் இங்கிலண்டு தேசத்தை நான்கு மாகாணங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் எர்ல் (earl) என்ற ஒரு தலைவரை ஏற்படுத்தினார். தாம் அடிக்கடி வெளி தேசங்களுக்குப் போக வேண்டியிருந்தமையால், அப்பொழுது தேசத்தை ஒழுங்காகப் பரிபாலிக்க அநுகூலமாகவே அவர் அந்த ஏற்பாட்டைச் செய்தார். முக்கியமாக வெஸ்ஸெக்ஸ் மாகாணத்திற்கு காட்வின் (Godwin) என்ற தலைவரை ஏற்படுத்தினார். கான்யூட் அந்த ஏற்பாட்டை நல்ல எண்ணத்துடனேயே செய்தாரானாலும், அதனால் பின்னால் அபாயம் விளைந்துவிட்டது. எப்படியென்றால் மாகாணத் தலைவர்களுக்கு அதிகாரம் கிடைத்தவுடனே, அவர்கள் அதை விட்டுவிடாமல் நிரந்தரமாகப் பிடித்துக்கொள்ள வழி தேடலாயினர். முன் போல இங்கிலண்டு தேசம் பல சிறு பாகங்களாகப் பிரிந்து போனமையால், ஒற்றுமை இல்லாது போய்விட்டது.

கான்யூட் கி. பி. 1035-ல் இறந்ததும், அவரது இருகுமாரர்களான ஹாரால்டு ஹேரர்புட், ஹார்தக்நட் (Harold Harefoot; Harthacnut) என்பவர்கள் ஏழு வருஷகாலம் ஆண்டனர்: அவ்விருவரும் ஒன்றுக்கும் உதவாதவர்கள். கி. பி. 1042-ல் டேன் அரச

குலம் க்ஷீணித்துப் போய்விட்டது. அதன் பிறகு எதல்ரேட் அன்ரேவியினுடைய குமாரனான எட்வர்ட் சிம்மாதனமேறினர். அதனால் மறுபடியும் பழைய இங்கிலீஷ் அரசகுலத்திற்கே இராஜ்ஜியாதிகாரம் வந்து சேர்ந்தது.

---

## 7-வது அதிகாரம்.

### நார்மன் படையெழுச்சி.

(1) **நார்மன் தேசத்தாரின் வருகை:** — எதல்ரெட் அன்ரெவி என்பவர் டேன்மக்களால் அடிபட்டு தமது மாமனர் தேசமான நார்மண்டிக்கு ஓடிப்போனர் என்று முன்னமே கூறினேமல்லவா? அவருடைய குமாரரான எட்வர்ட் அவ்விடத்திலேயே வளர்ந்து அந்த தேசத்துப் பழக்க வழக்கங்களையே அநுஷ்டிப்பவரானர். ஆதலால் அவர் இங்கிலீஷ்காரருடைய பழக்க வழக்கங்களையோ பாஷையையோ அதிகமாக அறிந்திருக்கவில்லை. சிம்மாதன மேறியபோதே அவருடைய வயது நாற்பது. அவர் நற்குணமும் மதப்பற்றும் வாய்ந்த படிப்பாளியானலும் துரைத்தன நிர்வாகம் செய்யும் திறமையற்றவர்; பலஹீனர்; குழந்தையின் ஸ்வபாவமுடையவர். அவரால் புதிதாக எதையும் கற்றுக்கொள்ளக் கூடவில்லை; பழைய பழக்க வழக்கங்களையும் மறக்க முடியவில்லை. ஆதலால் அவரது காலத்தில் கா/2ன்யூட்டினல் நியமிக்கப்பட்ட மாகாணத் தலைவர்கள் சுயேச்சையாக நடக்கலானர்கள். எட்வர்ட், வெஸ்ஸெக்ஸிலிருந்த காட்வின் அரசருக்குப் பக்கபலமாக இருந்து தமது பெண்ணையும் அவருக்கு விவாகம்செய்து வைத்தார். சிறிதுகாலம் வரையில் யாவும் சரியாகவே நடைபெற்று வந்தன. எட்வர்ட் மதப்பற்றுள்ளவராதலால் அவருக்கு கன்பெஸர் என்ற பட்டம் பின்னல் கிடைத்தது.

எட்வர்ட் இங்கிலீஷ்காரரை விடத் தமது தாய்நாட்டினரான நார்மன்களிடத்திலேயே அதிக அபிமானமுடையவராயிருந்

தார். ஆதலால் இங்கிலண்டில் சுகமாக ஜீவனம் செய்யலாமென்று பல நார்மன்கள் அங்கு வந்து குவிந்துவிட்டனர். அன்னிய நாட்டு அரசரான கான்யூட் மன்னர் காலத்தில் இங்கிலீஷ்காரர்களுக்கு மாத்திரம் மரியாதை இருந்ததற்கு மாறாக, பழைய அரசகுலம் மீண்டும் ஸ்தாபிக்கப்பட்ட பின் அன்னிய நாட்டாருடைய ஆதிக்கம் இங்கிலண்டில் அதிகரித்துவிடும் போலத் தோன்றியது.

நார்மன தேசத்தாரைப் பற்றி முன்பே கூறியிருக்கிறோம். அதாவது ஏழாவது எட்டாவது நூற்றாண்டுகளில் நார்வே மக்கள் ஐரோப்பாக் கண்டத்தில் குடியேறியபொழுது, அதில் ஒரு பகுதியினர் கால் தேசத்தில் குடியேறி நார்மண்டி என்ற மாகாணத்தில் வியாபித்துப் போயினர். அவர்கள் வெகு சீக்கிரத்தில் ப்ரெஞ்சுக்காரர்களைப் போல மாறி எங்கும் பிரக்கியாதி பெற்றுவிட்டனர். நார்மண்டி மாகாணத்தின் தலைவரான ட்யூக் (Duke) என்பவர் ப்ரெஞ்சு அரசருக்கு உட்பட்டவரானாலும், உண்மையில் மிகவும் பராக்கிரமசாலியாகவும், தமது முரட்டுப் பிரஜைகளை சுலபமாக அடக்கக் கூடியவராகவும் இருந்தார். இங்கிலண்டில் எட்வர்ட் ஆண்டு வந்தபொழுது, நார்மண்டியை அவருடைய உறவினரான வில்லியம் (William) என்பவர் திறமையாகப் பரிபாலித்து வந்தார். எட்வர்ட் எப்பொழுதும் வில்லியத்தினுடைய ஆலோசனைப்படியே நடந்து வந்தார்.

இங்கிலண்டுக்கு வந்த நார்மன்களுக்கு பெரிய உத்தியோகங்களையெல்லாம் யோசனை இல்லாமல் வாரிக்கொடுத்த எட்வர்ட் அரசர் காட்வின் முதலிய இங்கிலீஷ்காரருடைய சொற்படி நடக்கவில்லை. அதைக் கண்ட காட்வின் அன்னிய தேசத்தாரைத் துரத்த முயன்றது பயன்படவில்லை. அவருக்கு இங்கிலீஷ்கார விரோதிகளே பலர் இருந்தனர்; ஆதலால் காட்வினும் அவருடைய குமாரரான ஹாரால்ட் என்பவரும் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டனர். அப்பொழுது வில்லியம் எட்வர்டைக் காணும் பொருட்டு இங்கிலண்டுக்கு வந்தார். அவருக்குச் சிறப்பான வரவேற்பு கிடைத்தது. தமக்குப் பின் வில்லியமே இங்கிலண்டின் அரசராகலாம் என்று அவர் வாக்குறுதி கூடச் செய்தனர் போலும்.

கி. பி. 1053-ல் காட்வினும் அவருடைய குமாரரும் ஒரு படையைத் திரட்டிக்கொண்டு இங்கிலண்டுக்குத் திரும்பி வந்தார்கள். பல இங்கிலீஷ்காரர்கள் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். எட்வர்ட் அவர்களுக்குப் பணிய, நார்மன்கள் தேசத்தைவிட்டு ஓடினர். பெரிய உத்தியோகங்களெல்லாம் மீண்டும் இங்கிலீஷ் காரருக்கே கிடைத்தன. பிறகு சிறிது காலத்தில் காட்வின் உயிர் துறந்தார். ஹாரால்ட் அவருடைய பதவிக்கு வந்தார். அவரும் தைரியமான யுத்த வீரராகவும் சிறந்த இராஜ தந்திரியாகவும் இருந்தமையால் அரசரைத் தமது வசத்தில் வைத்துக் கொண்டிருந்தார். அவர் வேல்ஸ் தேசத்தின் மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றார். அரசரைவிட ஹாரால்ட் அதிக கௌரவமும் மதிப்பும் பெற்றிருந்தார். எட்வர்ட் வரவர துரைத்தன காரியங்களையே கவனிக்காமல் மத விஷயங்களிலேயே கவனம் செலுத்தினர். அவர் ஓர் அழகிய மாதாகோவில் கட்டுவதிலேயே தமது கடைசிக் காலத்தைச் செலவழித்து கி. பி. 1066 ம் வருஷம் ஜனவரியில் இறந்தார். அப்பொழுது தெய்விகமான பல உற்பாதங்கள் காணப்பட்டு, எட்வர்டினுடைய மகிமையை நிரூபித்தனவென்றும் கூறுவர்.

எட்வர்டுக்குப்பிறகு அதுவரையில் உண்மையான அதிகாரம் வகித்துவந்த ஹாரால்ட் சிம்மாதனமேறினர். அதில் ஒரு விசேஷத்தை கவனிக்கவேண்டும். ஹாரால்ட் அரசகுலத்தைச் சேர்ந்தவரல்லர். ஆனாலும் இங்கிலீஷ்காரர்கள் அவரை அங்கீகரித்ததிலிருந்து இராஜ்ஜியமென்பது அரசருடைய சொந்த சொத்து அல்லவென்றும், அது கூடியமட்டில் திறமை வாய்ந்தவருக்கே கிடைக்கும் என்றும் அவர்கள் காண்பித்தனர். மேலும் இங்கிலீஷ் சீமான்கள், அரச குலத்தில் தகுதியானவர் இல்லாமற்போனால் அதைச் சேர்ந்த வேறொருவரை அரசராகத் தேர்ந்தெடுத்து அங்கீகரிக்கும் அதிகாரத்தை தொடக்கத்திலிருந்தே வகித்திருந்தது குறிப்பிடத் தக்க விஷயம். இவ்வாறு அரச குலத்தில் பிறக்காமல் தமது சாமர்த்தியத்தினலேயே கிரீடாதிபதியான ஹாரால்ட் சில விசேஷ கஷ்டங்களுக்குட்பட வேண்டி வந்தது. அப்பொழுது நார்தம்பரியா, மெர்ஸியா ஆகிய இரண்டையும் எட்வின், மார்க்கர்

(Edwin, Morcar) என்ற இரண்டு சகோதரர்கள் பரிபாலித்துவந்தனர். தங்களைப்போன்ற ஒரு மாகாணத் தலைவன் அரசனானதைக் காண, அவர்களுக்குப் பொறாமை ஏற்பட்டது. அவனுக்குக் கீழ்ப்படிவதை அவர்கள் இழிவாகக் கருதினர்.

ஆனால் எட்வர்ட் கன்பெஸருடைய உறவினரான வில்லியம் இங்கிலீஷ் தேசத்தின் அரசராக வேட்கைகொண்டார். அவருக்கு ஏற்கனவே எட்வர்ட் ஒரு வாக்குறுதி செய்து கொடுத்திருந்தார். மேலும் ஹாரால்ட் ஒரு சமயத்தில் வில்லியத்தினிடம் அகப்பட்டுக் கொண்டபொழுது அவர் அரசராகும் விஷயத்தில் உதவி செய்வதாக வாக்குறுதி செய்துகொடுத்தாராம். ஆதலால் அதற்கு மாறாக ஹாரால்ட் தாமே அரசனானதைக் கண்டு வில்லியம் அவரை தண்டிக்க எண்ணம்கொண்டு இங்கிலண்டின் மீது படையெடுக்கத் தீர்மானித்தார். கிறிஸ்துமத குருவான போப் அவரை ஆசீர்வதித்து அனுப்பினர். ஆனால் மேற்கூறியவைகளெல்லாம் உண்மையான சமாதானங்களல்ல. வில்லியம் மிகுந்த பராக்கிரமசாலியாதலால், ஒரு பெரிய இராஜ்ஜியத்தை சம்பாதிக்க வேண்டுமென்பது அவரது தீர்மானம். அதை நிறைவேற்ற, இங்கிலண்ட் தகுதியான நிலைமையில் இருந்தது. ஆதலால் அவர் பெரிய படையைத் திரட்டிக்கொண்டு புறப்பட ஆயத்தமானர்.

(2) **ஹேஸ்டிங்ஸ் யுத்தம் : நார்மன் வெற்றி** :—வில்லியத்தை எதிர்ப்பதற்கு ஆயத்தமாகுமுன்பு, ஹாரால்டுக்கு இன்னொரு துன்பம் நேர்ந்தது. அவருடைய சகோதரர் டாஸ்டிக் (Tostig) என்பவர் சிறிதுகாலம் நார்தம்பிரியாவின் தலைவராக இருந்தார். அவருடைய கொடுமையைப் பொறாத ஜனங்கள் அவரைத் துரத்திவிட்டு மேலே கூறிய மார்க்கர் என்பவரைத் தமது தலைவராக்கிக்கொண்டனர். இப்பொழுது தமது சகோதரர் அரசரானதைக் கேட்ட, டாஸ்டிக் பழைய பதவியை மீண்டும்பெற ஆசைகொண்டு நார்வே அரசரான ஹாரால்ட் ஹார்ட்ரடா (Harold Hardreda) என்பவருடன் சேர்ந்துகொண்டு இங்கிலண்டின் வடபாகத்தின் மீது படையெடுத்து வந்தார். நார்வே அரசர் டாஸ்டிக்குக்கு உதவிசெய்ததன் கருத்து தாமும் கான்யூட் மாதிரி இங்கிலண்ட்

தேசத்தை அரசுபுரியலாம் என்பதுதான். அவர் மகா பயங்கரமான தோற்றமும் அதிக பராக்கிரமமு முடையவர். அவ்விருவரையும் எதிர்க்க மார்க்கர், எட்வின் ஆகிய இரண்டு சகோதரர்களும் சேர்ந்தும், காரியம் பலிக்கவில்லை. ஆகவே, தமது தேசத்தைக் காப்பாற்றும் பொருட்டு ஹாரால்ட் அரசர் தெற்கிலிருந்து வடக்கே ஓடி ஸ்டாம்போர்ட் பாலம் (Stamford Bridge) என்ற இடத்தில் போர்புரிந்து தேசத்துரோகியான தமது சகோதரனையும் நார்வே அரசரையும் கொன்று பூர்த்தியான ஜயம்பெற்று, தம்மிடம் பொருமைகொண்டிருந்த எட்வின், மார்க்கர் ஆகிய இருவரையும் காப்பாற்றினர்.

அவர்கள் வடக்கில் ஏற்பட்ட ஜயத்தைக் கொண்டாடிக்கொண்டிருக்கையில் தெற்கில் வில்லியம் படையுடன் வந்திறங்கிய செய்தி வந்தது. உடனே ஹாரால்ட் அந்தப் பெரிய பகைவரை எதிர்க்க அங்கு விரைந்து சென்றார். ஆனால் எட்வினும், மார்க்கரும் சிறிதும் நன்றிவிசுவாச மற்றவராய், அவரைத் தொடர்ந்துவாராமல் நின்றுவிட்டனர். ஹாரால்ட் தெற்கே போய்ச் சேருமுன் நார்மன் படைகள் தேசத்தைச் சூரையாடிக்கொண்டே ஹேஸ்டிங்ஸ் (Hastings) என்ற நகரத்திற்சருகில் போய் தங்கின. இங்கிலீஷ் சேனை அதற்கருகில் இருந்த ஒரு குன்றின்மேல் ஏறிக்கொண்டது.

1066-ம் வருஷம் அக்டோபர்மீ 14-ம் தேதியன்று இரண்டு சேனைகளுக்கும் யுத்தம் நடந்தது. ஒவ்வொரு சேனையினுடைய யுத்த முறையும் வேறு மாதிரியாக இருந்தது. இங்கிலீஷ்காரரின் சேனையில் காலாட்படைகளே இருந்தன. இங்கிலீஷ் யுத்த வீரர்கள் அழுத்தமான கவச மணிந்து, கோடரி கத்தி முதலிய ஆயுதங்களுடன் நின்று ஒரே இரும்புச் சுவர்போல இடை வெளியே இல்லாமல் முற்றிலும் அடர்ந்து நின்றுகொண்டனர். சேனைக்கு இருபுறங்களிலும், யுத்தம் செய்யவந்த சாதாரண ஜனங்கள் கூடியிருந்தனர். அந்தச் சேனையைச் சிதற அடித்து வெல்வது அசாத்

தியமாகத் தோன்றியது. நார்மன் சேனை குன்றின்கீழ் இருந்து கொண்டு சண்டையிட நேரிட்டதாகையால் அதுவே ஓர் இடையூருக இருந்தது. முதலாக, நார்மன் காலாட்படைகள் தமது அம்புகளை மழையாகச் சொரிந்தனவானுலும், இரும்புக் கவசமணிந்திருந்த இங்கிலீஷ் சேனைக்கு, எவ்விதமான துன்பமும் ஏற்படவில்லை. அதற்குப் பின்னுல் நார்மன் குதிரைப்படை இருந்தது. குதிரைப் படையிலேயே வில்லியம் பூர்த்தியாக நம்பிக்கை வைத்திருந்தார். குதிரை வீரர்கள் இங்கிலீஷ் வீரர்களைப்போலவே கவசமணிந்து நீண்ட ஈட்டிகளைக்கொண்டு யுத்தம் நடத்தினுர்கள்; சிலசமயங்களில் கத்திகளையும் உபயோகித்தனர். ஆனுல் குதிரைப்படை எத்தனையோ தடவைகள் முயன்று பார்த்தும், இரும்புச் சுவர்போல் நின்ற இங்கிலீஷ் சேனையைப் பிளக்க முடியவில்லை. ஆனுல் ஹா|2ரால்டைக் காட்டிலும் வில்லியம் புத்தி நுட்பம் மிகுந்தவர். அவருடைய சேனை அதிகமான பயிற்சி பெற்றிருந்ததுடன் மிகவும் சுலபமாக வேலைசெய்யும் திறமையும் உடையது. இங்கிலீஷ் சேனையோ சுவர்போல நின்றதைத் தவிர வேறு வகையில் திறனற்றிருந்தது. உடனே வில்லியம் ஒரு தந்திரம் செய்தார். இங்கிலீஷ் சேனையைக் கொஞ்சம் கலைத்துவிட்டால், அதை ஜயிப்பது மிகவும் சுலபமெனக் கண்டு அவர் தமது குதிரை வீரர்களைப் பின் வாங்கி ஓடும்படி தூண்டினுர். அதைக் கண்ட இங்கிலீஷ்காரர்கள் எதிரிகள் தோற்று ஓடுகிறுர்களென எண்ணி அவைகளைப் பின் தொடரும் நோக்கத்துடன் தமது இடத்தை விட்டுக் கீழே இறங்கித் தாறுமாருக ஓடிவந்தார்கள். வில்லியம் எதிர்பார்த்தபடியே காரியம் நடக்க, உடனே நார்மன் குதிரை வீரர்கள் திரும்பி இங்கிலீஷ் வீரர்களை மிகவும் சுலபத்தில் அடித்துக் கொன்றுர்கள். சிலர் குன்றின்மீதேறி ஹா|2ரால்டுடன் யுத்தம் செய்தார்கள். ஓர் அம்பு ஹா|2ரால்டினுடைய கண்ணைக் குத்தி அவரைக் கொன்றுவிட்டது. மற்ற பல வீரர்களும் யுத்தகளத்தில் மாண்டுபோயினர். வில்லியம்

பூர்த்தியான ஜயம்பெற்றார். இங்கிலண்டு தேசம் அன்னிய நாட்டு அரசருடைய ஆதிக்கத்திற் குட்படலாயிற்று. அந்த யுத்தத்தை ஸேன்லக் (Senlac) யுத்தம் என்றும் கூறுவதுண்டு. வில்லியத்தினுடைய வெற்றிக்கு அவருடைய பராக்கிரமமும் திறமையுமே முக்கியமான காரணம். மேலும் இங்கிலண்டில் எல்லோரும் ஒற்றுமையாக நடந்துகொள்ளாமல், ஹா/2ரால்டைத் தனியாக விட்டதும் எதிரிகளின் பிரயாசையை சுலபப்படுத்தியது. எட்வின், மார்க்கர் ஆகிய இருவரும் துரோகம் செய்துவிட்டனர். மேலும் ஏற்கனவே, ஒரு யுத்தத்தில் ஜயமடைந்திருந்த இங்கிலீஷ் வீரர்கள் சற்று அசட்டு தைரியங்கொண்டும் யுத்தம் புரிந்திருக்கலாம். எவ்விதத்திலும், வில்லியம் யுத்தகளத்தில் ஜயம்பெற்று தலைமை நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தார். அவரை எதிர்க்க வகையில்லாமையால் இங்கிலீஷ் கனவான்கள் அவரையே அரசராக அங்கீகரித்தனர். கி. பி. 1066-ம்வருஷம் டிஸம்பர்மீ 25ௌ தேதியன்று வில்லியம் முடிசூடினார். அதுமுதல் நார்மன் அரசாட்சி தொடக்கமாயிற்று. வில்லியம் ஜயவீரர் (Conqueror) என்ற பட்டம் பூண்டார். அவருடைய காலம் முதல் இங்கிலண்டில் புதிய சகாப்தம் தொடங்கியது. நார்மன் ஆட்சியால் இங்கிலண்டிற்கு அநேக நன்மைகள் உண்டாயின. அவை என்னென்னவென்பது பின்னால் விளங்கும்.

---

## வெஸ்ஸெக்ஸ் அரசகுல வம்சாவளி.




குறிப்பு:—மேலே குறித்திருக்கும் வருஷங்கள் அரசுபுரிந்த காலத்தைத் தெரிவிக்கின்றன.

1016 முதல் 1042 வரை கான்யூட் ஆரம்பித்த டேன் ஆட்சி நடைபெற்றது.

# 8-வது அதிகாரம்

---

## நார்மன் வெற்றிக்குமுன் இங்கிலீஷ் வாழ்க்கை.

(1) **சமூக அமைப்பு :**—நார்மன் படையெழுச்சிக்கு முன்னால் இங்கிலண்டு தேசம் ஐரோப்பாக் கண்டத்துடன் அதிக சம்பந்தம் வைத்துக்கொள்ளாமல் தனித்து நின்றது. மேலும் தேசத்திற்குள்ளேயே பல பாகங்களுக்குள் அதிகமான போக்குவரத்து ஏற்படாதிருந்தது. பல தனித்தனி கிராமங்களில் ஜனங்கள் வியவசாயம் செய்துகொண்டும் ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டும் சாமானிய வாழ்க்கையி லீடுபட் டிருந்தார்கள். அநேகமாய் ஒவ்வோர் ஊரைச் சுற்றியும் ஓர் உறுதியான வேலி இருந்தது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் அநேகமாக தனியான சொந்த நிலங்கள் இருந்தன. அறுவடையான பின்பு நிலத்தில் ஆடுகள் பேதாபேதமின்றி மேயும். சில தரிசு நிலங்களை கிராமத்தார் பொதுவாக அநுபவித்து வந்தனர். சில தானியங்களைப் பயிரிடுவதிலும் குடியானவர்கள் பழைய முறைகளையே பின்பற்றினர். கெட்டியான கலப்பைகளைக் கொண்டு நிலத்தை உழுது, ஒரு பாகத்தைப் பயிரிடாமல் விட்டு வைப்பார்கள். அடுத்த வருஷம் அந்த பாகத்தைப் பயிரிட்டு வேறொரு பாகத்தை உழாமல் விட்டு வைப்பார்கள். இங்கிலண்டின் தென் கிழக்கு பாகந்தான் நிரம்பவும் செழுமையாக இருந்தது. ஆனால் பொதுவாக தேசத்தில் ஜனத்தொகை குறைவாகவே இருந்தது. போக்குவரத்து சாதனங்கள் அக்காலங்களில் அதிகமாக இல்லையாதலால், ஓரிடத்தில் பஞ்சம் தோன்றினால் வேறிடத்திலிருந்து பண்டங்களைத் தருவிப்பது பிரயாசையாக இருந்தது. பொதுவாக ஜனங்கள் திருப்திகரமாகவே வாழ்ந்து வந்தனர்.

கனவான்களுக்கு நல்ல மதிப்பு இருந்துவந்தது. அவர்களுக்குச் சொந்தமான நிலம் தேசம் முழுதிலும் பல இடங்களில் இருந்தது. எல்லா நிலத்திற்கும் அரசனே உரியவனாகக் கருதப்பட்டான். அரசனுக்கு சேவைசெய்வது ஒரு கௌரவமாகக் கருதப்பட்டது. கனவான்கள் அரசனிடமிருந்து நிலத்தைப் பெற்று, அத்ற்குப் பதிலாக

அவனுக்கு யுத்த சமயத்தில் சகாயம் புரிந்து வந்தனர். துரைத்தன விஷயத்திலும் அவனுக்கு பெரிய மனிதர்கள் ஆலோசனை கூறினர்கள். சிலசமயங்களில் ஷெ கனவான்கள் அதிகபலம் பெற்று அரசனையும் எதிர்க்கக்கூடிய வல்லமையுடையவர்கள் ஆய் விடுவார்கள். அவர்களின்கீழ் பல பண்ணையாட்கள் இருந்துவந்தனர். தமக்கே சொந்தமான நிலத்தைப் பெற்ற குடியானவர்கள்கூட சில சமயங்களில் கடனாளிகளாய் கனவான்களுக்கு உட்பட்டு விடுவார்கள். மிகவும் தாழ்ந்த ஸ்திதியிலுள்ளவர்கள் அடிமைகள்போல நடத்தப்பட்டனர். முக்கியமாக அயர்லண்டு தேசத்தில் அடிமை வியாபாரம் தீவிரமாக நடந்து வந்தது.

வியாபாரம் அபிவிருத்தியடையாத காரணத்தால் அப்பொழுது பட்டணங்கள் அதிகமாக உண்டாகவில்லை. ஆங்காங்கு இருந்த நகரங்களும் முக்கியமான இராணுவ ஸ்தலங்களாக இருந்தனவே யன்றி வியாபார ஸ்தலங்களாக இல்லை. நகரங்களைச்சுற்றி அகழியும் மண்சுவரும் இருந்தன. பகைவர்களுக்கும் திருடருக்கும் அஞ்சிய பல குடியானவர்கள் அவைகளுக்குள் அடைக்கலம் புகுந்தனர். லண்டன் நகரம் அப்பொழுதே பிரசித்தியடைந்திருந்தது; தனவந்தருடைய வீடுகளும் மாத்தாலேயே கட்டப்பட்டு, நவீனகால வசதிகள் எதையும் பெருமல் பார்வைக்கு அழகின்றி இருந்தன. தனவந்தருடைய வீடுகளில் முக்கியமாய் பெரிய கூடங்களிலேயே எல்லோரும் உண்டுகளித்துக் காலங்கழிப்பது வழக்கம். புகைப்போக்கிகள் ஏற்படவில்லை; புகை வெளியில் செல்லும்பொருட்டு கூரையில் துவாரம் விடப்பட்டிருக்கும். கனவான்கள் குதூகலமாகக் காலம் கழித்தனர். குடியும், கூத்தும், வேட்டையும், பாட்டும், வேடிக்கையும் எப்போதும் அவர்களுடைய மனத்தைக் கவர்ந்தன. வெள்ளி கண்ணாடி முதலியவைகளாலான பாத்திரங்களும் பட்டாடைகளும் அவர்களுக்குப் பிரியமானவையா யிருந்தன. ஸ்திரீகள் நூல் நூற்பதிலும் சில்லரை வேலைகள் செய்வதிலும் காலங்கழித்தனர்; பொது ஜனங்கள் கூடுவதற்கேற்ற பெரிய கட்டிடங்கள் இல்லையாதலால், வெளியிலேயே கூட்டங்கள் நடைபெற்றன. மாதா கோயில்கள்கூட மிகச் சிறியவையாய், பழைய முறையில் கட்டப்பட்டிருந்தன.

(2)அரசியல் நிர்வாகம்:—இங்கிலீஷ்காரர்களுடைய சட்டங்கள் சாமானியமாகவே இருந்தன. புதிய சட்டங்கள் உண்டாவது மிக அரிது. சுலபமான குற்றங்களுக்கும் அநேகமாய் அபராதமே விதிக்கப்பட்டது. கொலைக்குற்றம் செய்தவன்கூட கொல்லப்பட்டவனுடைய குடும்பத்திற்குப் பணம் கொடுத்து தப்பித்துக் கொள்ளலாம். இராஜ்ஜியம் பல தொகுதிகளாகப் பிரிந்திருந்தது.

பெரிய தொகுதிகளுக்கு ஷயர் (Shire) என்று பெயர். இன்னமும்கூட அந்தப் பெயரே இருந்துவருகின்றது. ஒவ்வொரு ஷயரும் பல ஜில்லாக்களாகப் பிரிந்திருந்தது. அவைகளுக்கு ஹன்ட்ரெட் (Hundred) என்று பெயர். ஒவ்வொரு ஜில்லாவும் பல பட்டணங்களாகப் பிரிந்திருந்தன. ஒவ்வொரு கிராமத்திற்கும், ஜில்லாவிற்கும் தனியான நீதிஸ்தலங்கள் இருந்தன. அவைகளில் குற்றவாளிகளை தண்டிக்கும்முறை அநாகரிகமாக இருந்தது. குற்றவாளிக்குத் தெரிந்த கனவான்கள் அவன் குற்றம் செய்திருக்க மாட்டானென்று பிரமாணம் செய்தால், அவனை விட்டு விடுவார்கள்; அல்லது, குற்றவாளிக்கு சில பரீட்சைகள் ஏற்படுத்தி சோதிப்பார்கள். உதாரணமாக, பழுக்கக் காய்ந்துள்ள இரும்பைத் தொடும்படியும், அல்லது, தண்ணீரில் மூழ்காமல் மிதக்கும்படியும் சொல்வார்கள். அவன் குற்றமற்றவனாயிருந்தால் கடவுள் அவனைக் காப்பார் என்பது அவர்களுடைய கருத்து. அரசரும் கனவான்களும் தனித்தனியான நீதிஸ்தலங்களை அமைத்துக் கொள்வார்கள். கிராமங்களிலிருந்த நீதிஸ்தலங்களில் கூடும் ஜனங்கள் இராஜ்ஜிய விஷயங்கள் பலவற்றைப்பற்றியும் விவாதம் செய்வார்கள். அரசன் இராஜ்ஜியத்திற்குத் தலைவனாயிருந்து, சகலவிதமான மரியாதைகளையும் பெற்றுவந்தான். அவனது முக்கிய உத்தியோகஸ்தர்களுக்கு ஆல்டர்மான் (Alderman) என்று பெயர். அவர்களே பின்னால் எர்ல் (earl) என்ற பட்டம் பெற்றார்கள். அவர்களுக்குக் கீழ் ஒவ்வொரு ஷயர் தொகுதிக்கும் ஷெரீப் (Sheriff) என்ற உபதலைவர்கள் இருந்தனர். சுதந்திரப் பிரஜைகளிற் பலர் யுத்த சமயங்களில் சேனையில் சேர்ந்து கொள்வார்கள். அக்காலத்தில் அரசியல் நிர்வாகமும் இப்பொழுதிருப்பது போல இவ்வளவு சிக்கலாக இருக்கவில்லை. குற்றம்செய்யும் கனவான்களுடைய நிலம் பறிமுதல் செய்யப்பட்டு, அந்தக்

குற்றத்திற்குப் பரிகாரம் ஏற்பட்டபின் திருப்பிக் கொடுக்கப்படும். ஜன சஞ்சாரமில்லாத பிரதேசங்களில் திருடர் பயம் அதிகமாக இருந்தது. தலைமையான அதிகாரம் அரசனிடமே இருந்தது. அவன் பராக்கிரமசாலியா யிருந்தால், அரசு நடத்துவது சுலபமாக இருந்தது; அவன் பராக்கிரம மற்றவனுயிருந்தால் கனவான்கள் தமது இச்சைப்படி நடந்துகொண்டு கலகமும் குழப்பமும் விளைவித்தனர். அரசனுக்கு ஆலோசனை கூற கனவான்களுடைய சபை ஒன்றிருந்தது. அந்த சபைக்கு விடனேஜிமட் (Witenage not) என்று பெயர். அதில் முக்கிய கனவான்களும், மதகுருமார்களும், அரசனுடைய உறவினரும், சிற்றரசர்களும் ஸ்தானம் வகித்திருந்தனர். அந்தச் சபையினர் அரசனுடைய காரியங்களைப் பொதுவாக அங்கீகாரம் செய்ததோடு புது அரசர்கள் சிம்மாதன மேறுவதற்குத் தமது சம்மதியை யளித்து, பொதுவான அரசியல் விஷயங்களை மேல்பார்வை பார்த்து வந்தனர். ஆனல் அவர்களுக்கு உண்மை யான அதிகாரம் கிடையாது. அரசன் பராக்கிரமசாலியா யிருந்தால், அந்தச் சபையை அசட்டை செய்துவிடலாம். நாட்டில் குழப்பம் ஏற்படும் சமயங்களிலும் அந்தச் சபையினுல் எவ்வித நன்மையும் செய்ய இயலாம லிருந்தது.

(3) மதஸ்தாபனம்: கல்வி:—டன்ஸ்டன் காலத்தில் மதகுருமார்களிடம் ஜனங்களுக்கு மதிப்பும் கௌரவமும் ஏற்பட்டிருந்தன. பல விஷயங்களில் குருமார்கள் ஜனங்களுக்கு நற்புத்தி புகட்டியதோடு வழிகாட்டிகளாகவும்இருந்தனர்.ஆனல் டன்ஸ்டன் காலத்திற்குப் பிறகு மத ஊக்கம் குறைந்து போய்விட்டது. குருமார்கள் மதப்பற்றை விடுத்து இராஜீய விஷயங்களிலேயே அதிக கவனம் செலுத்தி இலௌகிக ஜனங்கள்போல ஒழுகலாயினர். அக்காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் மத உணர்ச்சி வலுத்து நின்றதானுலும், இங்கிலண்டில் மாத்திரம் அது தடைப்பட்டுப் போயிருந்தது. கல்வி கேள்விகளிலும் இங்கிலண்ட் அப்பொழுது முன்னேற்ற மடைந்திருக்கவில்லை. லாடின் பாஷையை அப்பொழுதும் பலர் பேசி வந்தாலும், இங்கிலீஷ் பாஷையும் மெதுவாக விருத்தி யடைந்து வந்தது. ஆல்ப்ரெட் அரசர் பல புஸ்தகங்களை இங்கிலீஷில் மொழி பெயர்த்திருந்தார். டேன்மக்களுடன் பழகியதால்

பழைய பாஷை கொஞ்சம் கொஞ்சமாக மாறுதலடைந்துகொண்டு வந்தது. ஆனால் பொதுவாக இங்கிலண்ட் தேசம் வயோதிகரைப் போலத் தளர்வடைந்து சோர்ந்து போனது போலத் தோன்றியது: அவ்விதமிருந்த தேசத்திற்கு நார்மன் தேசத்தார் ஓர் ஊக்கத்தையும் புதிய வீர்யத்தையும் உண்டாக்கினர். நார்மன் ஆட்சியில் இங்கிலண்ட் அடைந்த பல நன்மைகளுக்குள் அதுவே மிகவும் முக்கியமானது.

---

## 9-வது அதிகாரம்.

---

### ஜயவீரர் வில்லியம்.

(1) **நார்மன் ஆதிக்கம் நிலைபெறுவது:**—ஹேஸ்டிங்ஸ் யுத்தத்தில் வெற்றிபெற்ற வில்லியம் சேனையின் பலத்தால் இங்கிலண்டிற்கு அரசராய் விட்டாலும், அவருக்குப் பல இடுக்கண்கள் நேர்ந்தன. ஆதலால், அவர் பூர்த்தியாகத் தமது ஆதிக்கத்தை ஸ்தாபிப்பதற்கு நான்கு வருஷகாலம் பிடித்தது. ஆனால், வில்லியம் அதிக சாமர்த்தியமும் தந்திரமும் வாய்ந்தவர். அவர் செய்த ஒவ்வொரு செய்கையின் மூலமும் தமது பலத்தையே அதிகப்படுத்திக் கொண்டார். கடைசியில் அவருடைய வம்சமே இங்கிலண்டின் நிர்வாகத்தைப் பரம்பரையாக வகித்து வந்தது. அவர் எவ்வளவு சிறந்த அரசர் என்பது பின்னால் வரும் விருத்தாந்தங்களிலிருந்து நன்கு விளங்கும். அவருடைய பூர்ணமான வெற்றிக்குக் காரணமாயிருந்தது அவருடைய மனோதைரியமே யாகும். கி. பி. 1066-ல் வில்லியம் முடி சூடியதும் எவராலும் அவரை எதிர்க்க முடியாமல் போகவே, தேசம் முழுதும் அமைதி யடைந்திருந்தது. தாமே எட்வர்ட் கன்பெஸருடைய நியாயமான வார்சுதாரர் என அவர் கூறிக்கொண்டார். தமக்கு விரோதமாகப் போர் புரிந்தவர்களுடைய நிலத்தைப் பறிமுதல் செய்து, போரில் தமக்குதவிய நார்மன் வீரர்களுக்குக் கொடுத்துவிட்டார். ஆனால் அவர் தம்மிடம் பகைமை காட்டாத இங்கிலீஷ் ஜனங்களுக்கு எவ்விதமான கெடுதலையும் செய்யவில்லை.

இங்கிலீஷ் சட்டத்தை யொட்டியே அரசு புரிவதாக அவர் வாக்கு றுதி செய்து கொடுத்தார். பழைய உத்தியோகஸ்தர்களை அவர் நீக்கி விடவில்லை. எட்வின், மார்க்கர் ஆகிய இருவரும் தமது பதவிகளை அப்பொழுதும் வகித்து வந்தனர். வில்லியம் செங்கோல் மன்ன ரென்று எல்லோரும் நினைத்திருந்தனர்.

ஆனால், வில்லியம் பட்சபாதமற்ற அரசராக இருந்தாலும், மிக வும் கடுமைகாட்டி அரசு புரிந்தாரென்பதை சீக்கிரத்தில் ஜனங்கள் கண்டு கொண்டனர். பழைய அரசர்களைப் போல பெரிய மனிதர்க ளுடைய இச்சைப்படி யெல்லாம் வில்லியம் நடந்து கொள்ள வில்லை என்பதும் தெரிந்து போயிற்று. எட்வின், மார்க்கர் ஆகிய இருவரது வசத்திலும் பெரிய மாகாணங்கள் இருந்தது வில்லியத் திற்குச் சம்மதியாயில்லை. ஏனென்றால், அவ்வளவு பெரிய மாகா ணங்களுக்குத் தலைவராயிருப்பவர்கள் அரசருடைய பலத்திற்குத் தீங்கு விளைத்துவிடக் கூடும். மேலும் வில்லியத்துடன் வந்த நார்மன் வீரர்கள் எவ்விதமான பிரதி பிரயோஜனத்தையும் அடை யாமல் இருந்தார்கள். அவர்களுக்கு நிலங்களை சன்மானமாகத் தருவது அவசியமாக இருந்தது. கி. பி. 1067-ல் வில்லியம் தமது சொந்த தேசத்திற்குச் சென்றிருந்தபொழுது அவருடைய பிரதிநிதிகள் இங்கிலீஷ்காரர்களைத் துன்புறுத்தினராதலால், அவர்கள் கலகம் செய்யத் தொடங்கினர். வில்லியம் திரும்பிவந்து, உண்மையில் இங்கிலண்ட் முழுதும் தமக்கு உட்படவில்லை யென்பதைக் கண்டார். சுமார் ஐந்து வருஷகாலம் அவர் இங்கிலீஷ்காரரை அடக்குவதிலேயே தமது கவனத்தைச் செலுத்த வேண்டிய தாயிற்று.

இங்கிலீஷ்காரர்கள் அன்னியர்களைத் துரத்தி ஓட்டிவிட நிரம் பவும் தைரியமாகப் பாடுபட்டார்களானாலும், அவர்களை ஒன்றாய்ச் சேர்த்துத் திறமையாக நடத்திச் செல்லும் தலைவர்கள் எவரும் முன் வரவில்லை. மேலும் தேசம் முழுதும் ஒரே சமயத்தில் கலகம் செய் திருந்தால் வில்லியத்தின் பாடு பிரயாசையாக முடிந்திருக்கும். ஆனால் இங்கிலீஷ்காரர்கள் ஆலோசனையின்றி நடந்துகொண்டதனால் ஒவ் வொரு பிரதேசமாகக் கலகம் செய்யத் தொடங்கியது. அம்மாதிரி ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றிய கலகத்தை அடக்குவது வில்லி

யத்திற்கு மிகவும் சுலபமாக இருந்தது. மேலும் ஒரு பிரதேசத்தை அடக்கியவுடன் அவ்விடத்தில் நார்மன்கள் ஒரு கோட்டையைக் கட்டி, அதில் ஒரு படையை வைத்து வந்தார்கள். இங்கிலீஷ்காரருக்கு ஷி கோட்டைகளை எவ்விதம் முற்றுகை போடுவதென்பது தெரியாமையால் எதிரிகளை வெல்வது பிரயாசையாய் விட்டது. தேசம் முழுதும் நார்மன்களின் கோட்டைகள் ஏற்பட்டு, வில்லியத்தின் ஆட்சிக்கு பக்கபலமா யிருந்தன.

இங்கிலண்டின் தென்பாகம் வில்லியத்தின் பராக்கிரமம் எத்தகையது என்று மாதிரி பார்த்திருந்த தாகையால் சீக்கிரத்திலேயே அது அவருடைய அதிகாரத்திற்குட்பட்டு விட்டது. ஆனால் வடக்கிலும் மேற்கிலும் கலகங்கள் அடிக்கடி விளைந்தன. எட்வினும் மார்க்கரும் ஒருமுறை கலகம் செய்தனர். ஆனாலும் உண்மையில் அவர்களுக்கு வில்லியத்தினிடம் அச்சமே இருந்து வந்தது. தாம் தோற்றுப் போய்விட்டால் தமது பெரிய பதவியைத் தாம் இழக்க நேருமே என்ற கவலை அவர்களுக்கு அதிகமாக இருந்து வந்தது. ஆனால் வில்லியம் அவர்களை சுலபமாக வென்றுவிட்டா ராஜனும், பெருந்தன்மையாக அவர்களை மன்னித்து விட்டார். வேறு சில பிரதேசங்களை வில்லியம் நிரம்பவும் கடுமையாக அடக்கித் தமது வல்லமையை ஜனங்களுக்கு நன்றாகக் காண்பித்தார். கடைசியாக கி. பி. 1070—ல் ஒரு கலகம் நடந்தது. ஹெரிவர்ட் (Hereward) என்ற பிரசித்தி பெற்ற இங்கிலீஷ் வீரர் தலைமை வகித்து அதை நடத்தினார். அவருடைய வீரச் செயல்களைப் பற்றிப் பல கதைகள் சொல்வதுண்டு. ஆனால் சிறிது காலம் அவரும் அவரது நண்பர்களும் ஏலி (Ely) என்ற இடத்தில் ஒளிந்துகொள்ள வேண்டி யிருந்தது. வில்லியம் அங்கும் சென்று அவரைத் தோற்கடித்தார். ஹெரிவர்ட் வில்லியத்துடன் சமாதானம் செய்துகொண்டு அவருடைய சேனையில் சேர்ந்துகொண்டார். இவ்வாறு கி. பி. 1071-ம் வருஷத்திற்குள் இங்கிலண்ட் முழுதும் வில்லியத்தினுடைய வசத்திற்குட்பட்டு விட்டது. நார்மன் அரசகுலம் அதன்பிறகு எவ்வித இடையூறுமின்றி அந்த தேசத்தை ஆண்டுவரத் தொடங்கியது.

(2) நில ஏற்பாடு; பிரபுக்களேயும் இங்கிலீஷ்காரரையும் நடத்திய விதம் :—யுத்தம் செய்யவேண்டிய அவசியம் கி. பி. 1071-ம் வருஷத்தில் தீர்ந்து போனவுடனே, வில்லியம் அரசியல் நிர்வாகத்தில் கவனம் செலுத்தினர். அவர் சண்டையில் ஜயவீரரா யிருந்ததுபோல, அரசியலிலும் நிபுணராக இருந்தார். தமது ஆட்சி உறுதியாகவும் நியாயமாகவும் இருக்க வேண்டுமென்று அவர் பல ஏற்பாடுகள் செய்தார். நான்கு வருஷங்களாக நடந்த கலகங் களின் பயனுக இங்கிலீஷ்காரருடைய நிலங்கள் பெரும்பாலும் பறி முதல் செய்யப்பட்டு வில்லியத்தைச் சேர்ந்துவிட்டன. அந் நிலங் களேயும் உடமைகளேயும் வில்லியம் தம்முடன் வந்த நார்மன் தேசத் துப் பெரிய மனிதர்களுக்கும் வீரர்களுக்கும் பிரித்துக் கொடுத்து விட்டார். இங்கிலீஷ்காரர்களிற் பலர் ஏழ்மையை யடைந்து பராதீ னமானுர்கள். இவ்வாறு அன்னிய தேசத்தார் இங்கிலண்டில் பெரு த்த மிராசுதார்கள் ஆய்விட்டனர். அந்த ஏற்பாடு ப்²பூலிஸம் அல் லது ப்²பூலல் ஸிஸ்டம் (Feudalism; Feudal System) என்றுகுறிக் கப்படுகிறது. அந்த ஏற்பாட்டின் விவரங்கள் பின்வருமாறு:—தேசத் திலுள்ள நிலங்களெல்லாம் அரசனுக்கே சொந்தமானவை. அவன் தன் நிலத்தைப் பல பெரிய மனிதர்களுக்குப் பிரித்துக் கொடுப் பான். அவர்கள் அரசனுடைய தலைமைப்பண்ணைக்கார ரென்று மதிக்கப் பட்டனர். ஒவ்வொரு பண்ணைக்காரரும் தமது நிலத்தை சிறிது சிறிதாகப் பங்கிட்டு வேறு பலருக்கு அளித்து விடுவார்கள். இம்மாதிரியே நிலம் பிரிக்கப்பட்டுக் கடைசியாகக் குடியானவர்கள் வரையில் போய்ச் சேரும். இம்மாதிரி நிலத்தைப் பெற்ற ஒவ்வொரு வரும் யுத்த சமயங்களில் தம் தம் எஜமானருக்கு பணத்தாலோ ஆட் களே அனுப்பியோ உதவி செய்வதென்று ஒப்புக் கொள்வார்கள். அர சனுக்குத் தலைமைப்பண்ணைக்காரர்களும், அவர்களுக்கு சிறுபண்ணைக் காரர்களும், அவர்களுக்குக் குடியானவர்களும் உண்மையாக நடந்து கொள்வதாக வாக்குறுதி செய்து கொடுப்பார்கள். முக்கியமான பண்ணைக்காரர்களுக்கு பா²ரன்கள் (Barons) என்று பெயர். அவர் கள் நமது ஜெமீந்தார்கள் போன்றவர்கள். இம்மாதிரி தேசத்தி லுள்ள நிலம் முழுதும் மேலே அரசனிடமிருந்து கீழே பல சிறு குடியானவர்கள் வரையில் பிரிக்கப்பட் டிருக்கும். இந்த முறையே

அக்காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் விஸ்தாரமாகப் பரவியிருந்தது. அந்த ஏற்பாட்டையே வில்லியம் இங்கிலண்டிலும் அமுலுக்குக் கொணர்ந்தார். ஆனால் அந்த ஏற்பாடு இங்கிலண்டில் முன்பே ஓரளவு இருந்து வந்தது. அதை வில்லியம் பிரபலப்படுத்தி சில முக்கியமான மாறுபாடுகளையும் செய்தார். ஆனால் அதற்குமுன், பிரபுக்கள் இஷ்டப்பட்டால் மாத்திரமே அரசனுக்கு இராணுவ உதவி கிடைத்து வந்தது. வில்லியம் அதைக் கட்டாயமாக்கி வற்புறுத்தினார். இன்னும் பல விஷயங்களில் அந்த நில ஏற்பாட்டை அவர் தமது ஆழ்ந்த விவேகத்தினால் ஒழுங்குப் படுத்தினார். பழைய ஏற்பாட்டிலிருந்த கெடுதல்களை அவர் அகற்றியவிதம் கீழே வருமாறு.

இங்கிலண்டில் நிலங்களைப் பெற்ற நார்மன் கனவான்களுக்கும் வில்லியத்திற்கும் சீக்கிரத்தில் சச்சரவுகள் ஏற்படத் தொடங்கின. வில்லியம் தமது அதிகாரத்தைச் சிறிதளவும் விட்டுக் கொடுக்காமல் ஆட்சி நடத்தத் தீர்மானித்திருந்தார். ஆனால் நார்மன் கனவான்கள் இதர ஐரோப்பிய தேசங்களில் இருந்த நில ஏற்பாட்டைப் பின்பற்ற விருப்பம் கொண்டார்கள். ஏனென்றால் அங்கு பெரிய மிராசுதார்கள் பெயருக்கு மாத்திரம் அரசருக்குக் கீழ்ப்பட்டவர்களே யன்றி, உண்மையில் எல்லாவிதத்திலும் சுயேச்சையாக நடந்து வந்தார்கள். தங்களுடைய நிலங்களையும் அவற்றில் வேலைசெய்த குடியானவர்களையும் தமதுஇச்சைப்படி யெல்லாம் பரிபாலித்துத் தனியரசு செலுத்தி நாட்டின் ஒற்றுமையைக் குலைத்து அரசருடைய அதிகாரத்திற்குப் பெருத்த முட்டுக் கட்டைகளா யிருந்தனர். மேற்படி 'சிற்றரசர்'களால் ஜனங்கள் அடைந்த துன்பம் அளவற்றது. வில்லியம் அவ் விஷயங்களை நன்றாக அறிந்திருந்தார். அவர் இப்பொழுது இரண்டுவிதமான பதவிகளை வகித்து வந்தார் என்பதை நாம் ஞாபகத்தில் வைக்க வேண்டும். இங்கிலீஷ் அரசர் என்ற ஹோதாவில் அவர் மற்ற எவருக்கும் உட்படாதவர். ஆனால் தமது சொந்த தேசமான நார்மண்டியின் தலைவரென்ற ஹோதாவில் அவர் பிரெஞ்சு மன்னருக் குட்பட்ட ஜெமீந்தாரா யிருந்தார். அவரே தமது மேலதிகாரியான பிரெஞ்சு அரசரை மதிக்காமல் இருந்தவராதலால், தம்மையும் இங்கிலண்டில் பிரபுக்கள் அதே மாதிரி நடத்தவிடக் கூடாது என்று அவர் தீர்மானம் செய்துகொண்டார். ஆனால், நார்

மன் பிரபுக்களோ ஐரோப்பிய முறையையே பின்பற்றி பெயருக்கு மாத்திரம் அரசருக்கு உட்பட்டிருந்தாலும், உண்மையில் சுயேச்சாதிகாரம் நடத்த வேண்டுமென்று எண்ணினர். தேசத்தின் ஒற்றுமையைப் பற்றியோ, குடிமக்களின் நன்மையைப் பற்றியோ அவர்களுக்கு அக்கரை இல்லை. ஆனால் வில்லியம் தமது பிடியை விடாமல், தமது அதிகாரத்தைக் கண்டிப்பாகச் செலுத்தலானார். அவர் முதன்முதலாய் நார்தம்பேரியா, மெர்ஷியா என்ற இரு மாகாணத் தலைவர் பதவியையும் எடுத்துவிட்டார். அப்பதவிகளை கா/2ன்யூட் அரசர் ஏற்படுத்தியது முதல் அவைகள் இராஜ்ஜியத்தின் ஒற்றுமையை சீர்குலைத்துவந்தன. எட்வினும், மார்க்கரும், ஹ/2ரல்டை அரசருக்கு உதவி செய்யாமல் இருந்ததே இதற்கு திருஷ்டாந்தமாகும். ஒருவனிடம் அதிகமான அதிகாரத்தைக் கொடுப்பது, அவன் தன்னுடைய எஜமானரின் உத்தரவை மீற வழி செய்து கொடுப்பதுபோல முடிகிறது என்று வில்லியம் உணர்ந்தார். அவர் நிலத்தைத் தமது பிரபுக்களுக்குப் பிரித்துக் கொடுத்த காலத்தில் தமக்கு இன்னுமொரு பாதுகாப்பையும் செய்து கொண்டார். ஒரு பிரபுவுக்கு ஓரிடத்திலேயே விஸ்தாரமான நிலத்தைக்கொடுக்காமல், தெற்குக் கோடியில் கொஞ்ச நிலமும், வடக்குக் கோடியில் கொஞ்ச நிலமுமாகப் பிரித்துக் கொடுத்தார். அரசனை ஒரு பிரபு எதிர்க்க எண்ணம் கொண்டாலும், அவர் வெவ்வேறு மூலையில் இருக்கும் தமது ஆட்களைச் சேர்த்துக்கொண்டு வருவதற்குள் அரசர் அவரை சுலபத்தில் அடக்கிவிடலாம். ஓரிடத்திலேயே அவருடைய ஆட்கள் சேர்ந்திருந்தால், அந்தப் பிரபு திடீரென்று கலகம் விளைத்துவிடலாம். சில எல்லைப் புறங்களில் இருந்த பிரபுக்களுக்கு மாத்திரம் வில்லியம் சுயேச்சாதிகாரம் கொடுத்திருந்தார். எல்லைப் புறத்திற்கு அப்பாலிருந்த பகைவர்கள் உட்புகாமல் தடுத்துக் கொண்டிருக்கும் பொருட்டு அப்பதவிகளை நம்பிக்கைக்குப் பாத்திரரானவர்களுக்கு அளித்தார். இன்னொரு விதமாகவும் பிரபுக்களுடைய வலுவை வில்லியம் குறைத்து விட்டார். ட்2பூடலிஸம் என்ற ஏற்பாட்டின்படி நிலத்தைப் பெறும் ஒவ்வொருவரும் நிலத்தை வழங்கிய எஜமானருக்கு உண்மையாய் நடந்து கொள்வதாக வாக்களிக்க வேண்டுமென்று முன்பே கூறினோம். அதாவது ஜெமீந்தார்கள் அரசருக

கும், ஜெமீந்தார்களுக்கு, அடுத்தபடியான பண்ணைக்காரரும், அவர்களுக்கு குடியானவர்களும் பிரதிக்ஞை செய்து கொடுப்பார்கள். ஐரோப்பாவில் இருந்த எற்பாடு அதுவே. அதன்படி பிரபுக்களுக்கும் அரசருக்கும் சம்பந்தம் இருந்ததே யன்றி, அரசருக்கும் சிறிய பண்ணையாளருக்கும் அல்லது குடிமக்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. ஆதலால் ஒரு சிறிய பண்ணைக்காரர் தமக்கு அடுத்த எஜமானருடைய சொற்படி நடக்கக் கடமைப்பட்டவரே யன்றி, எல்லோருக்கும் மேலான அரசருக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்ற கட்டுப்பாடு இல்லாமலிருந்தது. அவர் தமது சமீப எஜமானருடைய கட்சியைத் தாங்கி அரசரை எதிர்த்தால், அவர் பிரதிக்ஞையை மீறி நடந்த குற்றத்திற்கு உட்பட மாட்டார். அதனால், ஐரோப்பாக் கண்டத்தில் அரசர்கள் எப்பொழுதும் சிறியபண்ணையாட்களுடைய எதிர்ப்பைக் கண்டு பயந்துகொண்டே இருந்தனர் ஆகவே, வில்லியம் அந்தக் கெடுதலுக்கும் ஒரு பரிகாரம் தேடிக் கொண்டார். அவர் கி.பி. 1086-ல் தேசத்திலிருந்த சகலமான மிராசுதார்களையும் குடிகளையும் ஸாலிஸ்வரி (Salisbury) என்ற இடத்திற்கு வரவழைத்து எல்லோரும் நேரில் தமக்கே பிரதிக்ஞை செய்து கொடுக்கும்படி கட்டளையிட்டார். தம்மிடம் நேராக நிலங்களைப் பெற்ற பிரபுக்களும், பிரபுக்களிடம் நிலம்பெற்றவர்களும், அவர்களிடமிருந்து பெற்ற இன்னம் மற்றவர்களும் முதன்மையாக அரசரிடம் ஒழுங்காய் நடந்து, பின்பு தத்தம் நேரான எஜமானர்களுடைய கடமையைச் செய்ய வேண்டுமென்று வில்லியம் திட்டம் செய்துவிட்டார். அதன்படி ஒரு பிரபு அரசரை எதிர்த்தாலும், அவருடைய ஆட்கள் அவருடன் சேர்ந்து கொள்ளாமல் அரசருடைய கட்சியையே சேர்ந்துகொள்ள வேண்டியதாயிற்று. இவ்வாறு, நிலங்களைப் பல இடங்களில் பிரித்துக் கொடுத்தும், எல்லோரிடத்திலும் நேரில் தாமே பிரதிக்ஞை வாங்கியும் வில்லியம் ஐரோப்பாக் கண்டத்தின் நில எற்பாட்டிலிருந்த முக்கியமான தீங்குகள் இங்கிலண்டில் உண்டாகாதபடி பரிகாரம் தேடிக்கொண்டார். அந்த ஒரு விஷயத்திலேயே அவருடைய இராஜீய தந்திரம் தெளிவாக விளங்கியது. வேட்டையாடுவதில் வில்லியத்திற்கு அதிக பிரியமாதலால், அவர் பெரிய காடுகளை அழிக்காமல் காப்பாற்றி வளர்க்கச் செய்து, அவைகளில் தம்மைத்

தவிர வேறு எவரும் வேட்டையாடக் கூடாது என்று கடுமையான உத்தரவுகள் பிறப்பித்தார். ஷெ காடுகளிலுள்ள மிருகங்களைக் கொன்றவர்கள் தம்முடைய கண்களை இழக்கவேண்டிய தாயிற்று. அவர் அபிவிருத்தி செய்த காடுகளில் புதிய காடு (New Eorest) என்பது முக்கியமானது. வில்லியத்தினுடைய காடுகள் சம்பந்தமான சட்டங்கள் மாத்திரம் இங்கிலீஷ்காரருக்கு நிரம்பவும் கடுமையாகஇருந்தன.

வில்லியத்தினுடைய கண்டிப்பான நடவடிக்கைகளைக் கண்ட நார்மன் பிரபுக்கள் அருவருப்படைந்து அதற்குமுன் தங்களுக்கு விரோதிகளாயிருந்த சில இங்கிலீஷ் பிரபுக்களுடன் சேர்ந்து கொண்டு அரசருக்குத் தீங்கிழைக்க முயற்சிக்கலானார்கள். கி. பி. 1075-ல் அவர்கள் ஒரு கலகம் செய்து வில்லியத்தை அரச பதவியிலிருந்து நீக்க எத்தனித்தார்கள். ஆனால் வில்லியம் கலகக்காரர்களை வென்று கடுமையாக தண்டித்தார். வில்லியத்தினுடைய சந்ததியாரின் காலத்திலும் இம்மாதிரியான கலகங்கள் நேர்ந்தனவானாலும் அரசருடைய அதிகாரம் கடைசியில் மேலோங்கியே நின்றது.

கி. பி. 1079-ல் வில்லியத்தினுடைய மூத்த பிள்ளையான ராபர்ட் (Robert) என்பவரே தமது தகப்பனாரை எதிர்த்தார். ஆனால் வில்லியம் அவரைச் சிறைப்படுத்தி அடக்கிவிட்டார். இவ்விதமெல்லாம் தமது நார்மன் பிரபுக்கள் முதலியோரது செல்வாக்கை அடக்கிய வில்லியம், தம்மால் ஜயிக்கப்பட்டுள்ள இங்கிலீஷ் மக்களை எவ்விதம் நடத்தினார் என்பதை கவனித்துப் பார்ப்போம். முதலாகத் தமது தேசத்தாரே தமக்கு விரோதமாகக் கிளம்பியதைக் கண்ட வில்லியம் வரவர இங்கிலீஷ்காரரிடம் அதிக உதவியை எதிர்பார்க்கலானார். இங்கிலீஷ்காரருக்கும் புதிய பிரபுக்களுடைய நடத்தைசம்மதியாயில்லை. வில்லியம் சில சமயங்களில் கடுமையாக நடந்து கொண்டாலும் தமக்குக் கீழ்ப்படிவோர்களை உபத்திரவிக்காமல் நியாயமாக நடத்தி வந்தார். ஆதலால், பல சிறிய பிரபுக்களின் கொடுமைகளுக்கு உள்பட்டிருப்பதைவிட ஓர் அரசருடைய கண்டிப்பான அதிகாரத்திற்கு அடங்கி இருப்பதே உசிதமானதென்று இங்கிலீஷ்காரர்கள் உணர்ந்தனர். ஆதலால் புதிய பிரபுக்களின் கொடுமைகளிலிருந்து தப்பித்துக் கொள்ள, அவர்கள் வில்லியத்தின் பாதுகாப்பையே நாடினர்.

வில்லியம் அவ்விரு வகுப்பாருடைய பரஸ்பர விரோதத்தைக் கொண்டுதந்திரமாகத் தமது நிலைமையை வலுப்படுத்திக்கொண்டார். நார்மன் பிரபுக்களின் உதவியால் அவர் இங்கிலீஷ்காரரை முதலில் அடக்கிவிட்டு, பிறகு இங்கிலீஷ்காரருடைய உதவியைக் கொண்டு நார்மன் பிரபுக்களை அடக்கி வந்தார். அம்மாதிரியே அவர் இங்கிலீஷ் அரசர்களுடைய உரிமைகளையெல்லாம் வகித்ததன்றி நார்மண்டிதேசத் தலைவருக்குரிய உரிமைகளையும் வகித்து அநுபவிக்கலானார். அவர் இருவித அதிகாரப் பெருமையை வகித்தமையால், அவருடைய பலம் அதிகமாயிற்று. இங்கிலண்டு தேசம் முழுவதையும் அடக்கியாண்ட முதலாவது அரசர் வில்லியமே. அவருடைய ஆட்சியின் பயனாக தேசத்தில் குடிமக்களின் சுதந்திரம் குன்றியதானாலும், அமைதியும் ஒழுங்கான அரசாங்கமும் நிலைபெற்றன. அக்காலத்தில் இங்கிலண்டுக்கு இன்றியமையாததா யிருந்தது உறுதியான அரசாங்க நிர்வாகமே. ஆனால் வில்லியம் ஏராளமான வரிகளை விதித்து வசூலித்து குடிமக்களை வருத்தினாரானாலும் அவர் அவர்களுக்குச் செய்த நன்மைகளுக்கு அவை ஈடாகமாட்டா. கூடிய வரையில் அதிகமான வரியை வசூலிக்க விருப்பங்கொண்ட வில்லியம், இங்கிலண்டின் பொருளாதார நிலைமையை ஆராய முற்பட்டார். அவர் தமது உத்தியோகஸ்தர்களை அனுப்பி கிராமம் கிராமமாகச் சென்று அங்கிருந்த நிலங்களையும் ஆடுமாடுகளையும் கணக்கிட்டு அறிக்கை செய்யும்படி ஆக்ஞாபித்தார். கி. பி. 1086-ல் அந்த ஆராய்ச்சி சிறிதும் தவறுக்கு இடமின்றி நன்றாக நிறைவேறியது. மூலை முடக்குகளைக்கூட விடாமலும், ஓர் ஆடுமாடு பன்றியைக்கூட விடாமலும் கணக்கெடுக்கப்பட்டது. அந்தக் கணக்கிற்கு டூம்ஸ்டே புஸ்தகம் (Domesday Book) என்பது பெயர். அதாவது மனிதர் செய்யும் புண்ணிய பாவங்களை அணுவளவும் பிசகாமல் கணக்கிட்டு, கடைசி தினத்தன்று கடவுள் அவரவர்களுக்கேற்ற தண்டனைகளையோ, சன்மானங்களையோ வழங்குகிறாரென்பது கிறிஸ்தவரின் கொள்கை. அதுபோல அவ்வளவு நுட்பமாக அந்தக் கணக்கு எடுக்கப்பட்டிருந்ததென்பது அதன்பொருள். அந்த ஆராய்ச்சியிலிருந்து தங்களுக்கு ஏற்பட்ட அதிக வரிப்பளுவைக் கண்டு குடிமக்கள் பயந்தனரானாலும், பிற்கால நூலாசிரியர்களுக்கு அந்தக் கணக்கு

பெருத்த உதவியாக இருந்து, பழைய இங்கிலண்டின் நிலைமையைத் தெளிவாக விளக்குவதாயிற்று. மேற்கூறிய செய்கைகளால் வில்லியம் தமது ஆட்சியை நிரந்தரமாக ஸ்தாபித்துக் கொண்டார். பொதுவாக அவருடைய ஆட்சி கண்டிப்பானதாகவும் தேசத்திற்கு நன்மை பயக்கத் தக்கதாகவும் இருந்ததென்றே கூறவேண்டும்.

(3) **மதஸ்தாபனச் சீர்திருத்தங்கள் :—**வில்லியம் இராஜாங்க விஷயங்களில் காட்டியதுபோலவே மதவிஷயங்களிலும் அதிக ஊக்கம் காட்டினார். ஆகவே நார்மன் அரசாட்சியால், அரசியலில் ஏற்பட்டதுபோலவே, மதஸ்தாபனத்திலும் மாறுதல்கள் ஏற்பட்டன. வில்லியம் படையெடுத்து வந்தபொழுதே போப்பினுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுவந்தார் என்று முன்னரே குறித்தோமல்லவா. ஆகவே, அவர் போப்பினுடைய விருப்பத்தை நிறைவேற்றி மத விஷயங்களில் இங்கிலண்டு தேசத்தை ஐரோப்பாக் கண்டத்தின் நிலைமைக்கு உயர்த்திவிட்டார். காண்டர்பரியில் இருந்த பழைய தலைமை மதகுருவை வில்லியம் நீக்கிவிட்டு நார்மன் இனத்தைச் சேர்ந்த லான்ப்ராங்க்(Lanfranc)என்ற தமது நண்பரை அந்தப் பதவிக்கு நியமித்தார். லான்ட்ராங்க் கல்வி கேள்விகளில் முதிர்ச்சியடைந்தவராயும் மதப் பற்றுடையவராயும் இருந்தார். அவர் வில்லியத்துடன் ஒத்துழைத்துப் பல நார்மன்களையே மதகுருவாகவும் நியமித்தார்.ஆதலால் அரசாங்கத்திலும் மதஸ்தாபனத்திலும் முக்கிய உத்தியோகங்கள் எல்லாம் நார்மன் தேசத்தாருக்கே சேர்ந்துவிட்டன.ஆனால் நார்மன் மதகுருமார்கள் நிரம்பவும் ஊக்கமாக உழைத்துப் பழைய சோர்வை யகற்றிப் பிரசித்திபெற்றனர். புதிய புதிய மடாலயங்களும் மாதாகோவில்களும் நார்மன் முறைப்படி கட்டப்பட்டன. இங்கிலீஷ் பாதிரிமார்களைவிட புதிய பாதிரிமார்கள் எவ்விதத்திலும் சிறந்து விளங்கி மதஉணர்ச்சியை ஜனங்களுக்கு ஊட்டிவந்தனர். மேலும் மதஸ்தாபன நிர்வாகத்தில் வில்லியம் புதிய மாறுதல்களை உண்டுபண்ணினார். அப்பொழுது ஐரோப்பாவில் முக்கியமான ஓர் இயக்கம் இருந்துவந்தது. அதனுடைய கருத்து மதஸ்தாபனத்தை அரசாங்கத்தாருடைய நிர்வாகத்திலிருந்து பிரித்து தனிப்படுத்திவிடவேண்டுமென்பது. சில அரசர்கள் மதகுருமார்களைத் தமதிச்சைப்

படியெல்லாம் நடத்தி, அவர்கள் உலக வியவகாரங்களிற் கலந்து கொள்ளச் செய்தமையால், ஏழாவது கிரிகரி என்ற போப், மத குருமார்கள் எந்த இலௌகிக அதிகாரிக்கும் உட்படாமல் தனித்துத் தூய்மையாக இருந்து வரவேண்டும் என்று போராடி வந்தார். அவர் கருதியதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் தேசத்தில் இருந்த பாதிரிமார்களெல்லோரும் உண்மையான துறவிகளாயிருந்தால், அந்த ஏற்பாடு சரியாக நடைபெற்றிருக்கும். போலித் துறவிகளுக்கு சுதந்திரம் கிடைத்துவிட்டால், அவர்கள் அக்கிரமத்திலும் அட்டூழியத்திலும் இறங்குவது திண்ணம். ஆனால் அக்காலத்தில் அந்தத் தீங்கை எவரும் அவ்வளவாக உணரவில்லையாதலால், வில்லியம் மதஸ்தாபனத்திற்கு சுதந்திரம் அளிக்கத் தயங்கவில்லை. அவர் ஒரு சட்டமியற்றி, அதற்குப் பிறகு, மதகுருமாரும் பாதிரிகளும் ஏதாகிலும் தவறுசெய்தால், அது சம்பந்தமான வழக்கு, சாதாரண நீதிஸ்தலங்களில் விசாரிக்கப்படாமல் மதஸ்தாபனத்தைச் சேர்ந்த தனியான நீதிஸ்தலங்களிலேயே விசாரிக்கப்பட வேண்டுமெனவும் அவ்விடத்திலேயே அவர்களைத் தண்டிக்க வேண்டுமெனவும் உத்தரவுசெய்தார். அது நாளடைவில் பெரிய அபாயத்தை விளைக்கத் தொடங்கியது. ஏனென்றால் குற்றம் செய்த பாதிரிமார்களுக்குத் தனியான நீதிஸ்தலங்களில் சரியானபடி தண்டனை கிடைக்காமையால், அவர்கள் துணிவடைந்து அதிகமான குற்றங்களைச் செய்து கொண்டே போயினர். மேலும் பூர்ண சுதந்திரம் பெற்ற மதஸ்தாபனம் அரசாங்கத்திற்கு விரோதமாகக் கிளர்ச்சிசெய்யவும் வழி ஏற்பட்டது. ஆனால் வில்லியத்தின் காலத்தில் அவ்வித அபாயம் எதுவும் ஏற்படவில்லை. ஏனென்றால் அவரும் லா/2ன்ப்2ரா/2ன்க்கும் ஒற்றுமையாகவே நடந்துகொண்டனர். லா/2ன் ப்2/ரான்க்கும் நல்ல சீர்திருத்தங்கள் பலவற்றைச் செய்தார்.

ஆனால் வில்லியத்தின் கவனம் எப்பொழுதும் தமது அதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே சென்றது. ஆதலால் அவர் மதகுருமார்கள் அதிக்கிரமமாக நடந்துகொள்வதைப் பலவிதங்களில் தடுத்துவந்தார். போப்பினுடைய அதிகாரத்திற்கும் அவர் வரம்பு ஏற்படுத்தினார். போப்பினுடைய உத்தரவுகள் முதலில்

தமது அங்கீகாரத்தைப் பெற்ருலன்றி இங்கிலண்டில் செல்லு படியாகக் கூடாதென்று சட்டம் செய்தார். மதஸ்தாபன விதிகளை யும் தாம் நேராக ஆராய்ந்த பிறகே அங்கீகரித்தார். இவ்விதம் வில் லியம் மதச் சீர்திருத்தங்களைச் செய்தபோதிலும், முக்கியமாகத் தமது அதிகாரத்தை அதிகப்படுத்திக் கொள்வதிலேயே அவர் கண் ணும் கருத்துமாயிருந்தார்.

கி.பி. 1087-ல் வில்லியம் குதிரைமேலிருந்து கீழே விழுந்த அதிர்ச்சியால் உயிர்துறந்தார். இங்கிலண்டு முழுதும் அவரது காலத்திலேயே அவருக்குக் கீழ்ப்படிந்துவிட்டது. அவர் சில சம யங்களில் கடுமையாகவும் கொடூரமாகவும் நடந்து கொண்டிருந்தாலும், நியாயபுத்தியும் மதப்பற்றும் உடையவராகவே ஒழுகினுர். அவர் இங்கிலண்டு தேசத்திற்கு எத்தனையோ நன்மைகளைச் செய்து அதன் சரித்திரப் போக்கையே புது வழியில் திருப்பிவிட்டார்.

(4) **நார்மன் ஆட்சியினுல் விளைந்த பலன்கள் :**—இங்கி லண்டு தேசம் ஒரு புதிய இனத்தாருக்கு வசப்பட்டுப் போனத ஞல், பல விசேஷ பலன்கள் உண்டாயின. முதலாக நார்மன் வெற் றிக்குக் காரணம் என்னவென்பதைக் கவனிப்போம். நார்மன் தேசத்தார் இங்கிலீஷ்காரரைவிட அதிக உறுதியும் ஊக்கமும் பராக்கிரமமு முடையவர்கள். அவர்களுடைய தலைவரானவில்லியமும் அதிக சாமர்த்தியசாலி. அவர் தமது ஆட்சியைப் பலப்படுத்துவதற் குச் செய்த தந்திரங்களெல்லாம் மேலே விவரிக்கப்பட்டிருக் கின்றன. அதற்கேற்ப இங்கிலீஷ்காரர் ஒற்றுமையாக நடந்துகொள் ளாமல் ஒருவரிடத்தொருவர் பொருமை கொண்டு நடந்தமையால் சீக்கிரத்தில் எதிரிகளின் வசமாய்விட்டனர். அவர்களுடைய பல வீனம் நார்மன்களுக்கு அநுகூலமாக முடிந்தது. புதிய இனத்தா ரின் ஆட்சிக்குட்பட்டதனுல் இங்கிலீஷ்காரர்கள் தமது நிலங்களை யும் உடைமைகளையும் இழந்து சிறிதுகாலம் வரையில் துன்பமநுப வித்தார்களாஞலும், நாளடைவில் நார்மன் இனத்தார் இங்கிலண் டுக்குப் பல நன்மைகளைச் செய்தனர். அதுவரையில் இங்கி லண்டு தேசம் ஐரோப்பாக் கண்டத்துடன் சம்பந்தப்படாமல் தனி யான போக்கில் போய்க்கொண் டிருந்தது. அதன் பின்னர் நார்மன்

அரசர்கள் பிரெஞ்சு அரசருடனும் வேறு அன்னிய நாட்டு அரசர்களுடனும் பல விதங்களில்—சிநேகமாகவும் விரோதமாகவும்—சம்பந்தம் வைத்துக்கொள்ள வேண்டிவந்தது. அதனால் இங்கிலண்டு தேசத்தின் பிற்கால சரித்திரத்தில் பல சம்பவங்கள் நேரிட வழியேற்பட்டது. இரண்டாவதாக, நார்மன் ஆட்சியின் பலனாக அரசாங்கமுறை ஒழுங்காகவும் உறுதியாகவும் அமைக்கப்பட்டது. மூன்றாவதாக, ஐரோப்பாக் கண்டத்துடன் அதிக சம்பந்தம் வைத்துக்கொண்டதனால், இங்கிலண்டின் மதஸ்தாபனத்திலும் அநேக மாறுதல்கள் ஏற்பட்டன. நான்காவதாக, நார்மன் தேசத்தாருடன் கூடிப் பழகிய இங்கிலீஷ்காரருடைய சமூகவாழ்க்கை பலவகையில் மாறுபட்டது. புதிய வழக்கங்களும் அநுஷ்டானங்களும் தோன்றின. புதிய நில ஏற்பாடும் உண்டாயிற்று. அதன் பயனாக பிரபுக்கள் என்ற வகுப்பு ஒன்று ஏற்பட்டது. இங்கிலீஷ் பாஷையுடன் நார்மன்கள் பேசிய பிரெஞ்சு பாஷையும் கலந்து அதைச் சிறிதளவு மாற்றியது. கடைசியாக நார்மன் இனத்தாரும் இங்கிலீஷ்காரரும் ஒன்றுபட்டுப் போனமையால், இருவருக்கும் தோன்றிய சந்ததியார் இருவரது விசேஷ குணங்களையும் பெற்றிருந்தார்கள். இவ்வாறு இங்கிலண்டின் பூர்வ சரித்திரத்தில் வெல்ஷ், ஸாக்ஸன், டேன், நார்மன் ஆகிய நான்கு தனி இனத்தார்கள் ஒன்றுபட்டுப் போயினர். அதன் பிறகு புதிய ஜாதியார் எவரும் அங்கு விசேஷமாகக் குடியேறவில்லை.

---

## 10-வது அதிகாரம்

---

### இரண்டாவது வில்லியம்.

(1) வில்லியம் ரூபஸ்: அவரது கொடுங்கோன்மை:—ஜயவீரர் வில்லியத்திற்கு ராபர்ட், வில்லியம், ஹென்றி என்று மூன்று குமாரர்கள் இருந்தார்கள். மூத்த குமாரர் தந்தைக்கே விரோதமாகக் கலகம் செய்திருந்தாராதலாலும், அவருடைய அரசாட்சியில் குழப்பம் விளையுமென்ற அச்சத்தினாலும், வில்லியம் தமது இரண்டாவது குமாரரே இங்கிலண்டின் அரசர் ஆகவேண்டு

மென்று ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் அவருடைய பிதிரார்ஜித சொத்தான நார்மண்டியை மூத்தவரான ராபர்ட் பெற்றார்; அவருடைய சுயார்ஜிதமான இங்கிலண்டை வில்லியம் தமது விருப்பத்தின்படி இரண்டாவது பிள்ளைக்குக் கொடுத்துவிட்டார்.

இரண்டாவது குமாரரான **இரண்டாவது வில்லியம்** சிவப்பு நிறமும், சிவப்பு உரோமும் உடையவராயிருந்தமையால் அவருக்கு ரூப2ஸ்(Rufus சிவப்பு அரசர்) என்ற காரணப்பெயர் உண்டாயிற்று. ரூப2ஸ் தமது தந்தையைப்போலவே அஞ்சா நெஞ்சமும், கடின ஹிருதயமும், சுயநல அபிமானமும் உடையவரானாலும், தந்தையினுடைய மதஉணர்ச்சியையும், நியாய புத்தியையும், இராஜீய தந்திரத்தையும் பெற்றவரல்லர். அவருடைய நடவடிக்கைகள் நிரம்பவும் இழிவாக இருந்தன. அவர் மிகவும் கடுமையாக நடந்துகொள்ளும் மனப் போக்குடையவரானாலும், முதலில், முக்கிய மதகுருவான லா/2ன் ட்2ரா/2ன்க் அவரை நல்ல வழியில் நடத்திவந்தார். ஆனால், நார்மன் பிரபுக்கள் உறுதியான அரசரை எப்பொழுதும் வெறுத்தவர்களாதலால், ராபர்ட் போன்ற திறனற்றவர் அரசராகவில்லையே என்று வருத்தமுற்று, ரூப2ஸை எதிர்த்துக் கலகம் விளைக்கலாயினர். ரூப2ஸ் இங்கிலீஷ்காரருக்குப் பல அநுகூலங்களைச் செய்து கொடுப்பதாக வாக்குறுதி செய்து, அவர்களது பக்கபலத்தைப் பெற்று கலகத்தை அடக்கினார். அவருடைய கொடுமையைக் கண்ட பிரபுக்கள் அஞ்சி ஒடுங்கிவிட்டனர்.

லா/2ன்ப்2ரா/2ன்க் இருந்தவரையில் ரூப2ஸ் சரியாக நடந்துகொண்டார்; அவர் இறந்த பிறகு தமது சொந்த வழிகளில் திரும்பலானார். அவர் ப்2ளா/2ம்பார்ட் (Flambard) என்பவரைத் தமது முக்கிய மந்திரியாக வைத்துக்கொண்டு, ஜனங்களிடமிருந்து அக்கிரமமான வரிகளை வசூலிக்கலானார். பிரபுக்கள் அரசருக்குக் கீழ்ப்படிந்தவர் என்ற முகாந்திரத்தை வைத்துக்கொண்டு, பல யுக்திகள் செய்து அவர்களிடமிருந்து பணம் பிடுங்கலானார். உதாரணமாக, ஒரு பிரபு இறந்தபின், அவருடைய புதல்வர் பட்டத்திற்கு வரும்போது அவர் ஒருவித வரியைச் செலுத்தவேண்டும்; சில விசேஷ சமயங்களிலும் அவர் அரசருக்குப் பண உதவி செய்ய

வேண்டும்; வயது வராத வார்சுகள் அரசருடைய பாதுகாப்பில் இருந்து, கலியாணம் செய்துகொள்ளும் பொழுது ஒரு வரியை அரசருக்குச் செலுத்தவேண்டும். மேற்கூறிய வரிகளையெல்லாம் ஜயவீரர் வில்லியமும் வசூலித்தாராலும், ரூட2ஸ் காலத்தில் அந்த வரிச்சுமை தாங்க இயலாதபடி அபாரமாகப் பெருகிவிட்டது. அரசருக்கு நட்பாயிருந்த பலருக்கு பிரபுக்களுடைய பெண்கள் கட்டாயத்தின்மேல் விவாகம் செய்துவைக்கப் பட்டனர். ஆனால், பிரபுக்கள் வாயைத் திறவாமல் ஷை அக்கிரமங்களைப் பொறுத்துக் கொண்டிருந்தனர். நார்மன் பிரபுக்களும் இங்கிலீஷ்காரரும் வித்தியாசமின்றி ரூட2ஸின் கொடுங்கோன்மையில் அகப்பட்டுத் தவிக்கலாயினர்.

(2) **மதகுருவுடன் சச்சரவு:**—குடிமக்களைப் பலவாறு வருத்திய வில்லியம் மதஸ்தாபன சம்பந்தமாகவும் பல அட்டூழியங்களைச் செய்யப் பின் வாங்கவில்லை. அவர் மதஉணர்ச்சி என்பது கடுகளவும் அற்றவராய் இருந்ததன்றி, சன்னியாசிகளையும் மடாலயங்களையும் கண்டபடி தூற்றி ஹேளனம் செய்யும் மனப்பான்மையுடையவராயிருந்தார். அவருடைய தந்தை நல்ல எண்ணத்துடன் அரசருக்கென ஒதுக்கிவைத்த பல உரிமைகளை ரூட2ஸ் துர்விநியோகம் செய்தார். பிரபுக்களுடைய நிலங்களைக் கொள்ளை கொண்டது போலவே, மதஸ்தாபன சொத்துக்களையும் பறிமுதல் செய்ய அவர் தயங்கவில்லை. மதகுருமார்கள் சாந்தகுணத்தோடு ஒழுகிவந்தது அரசரது கொள்ளை சுலபமாக நடந்தேறுவதற்கு அநுகூலமாயிருந்தது. உதாரணமாக, ஒரு மடாலயத்தின் தலைவர் ஸ்தானம் சிலகாலம் காலியாயிருக்குமானால், அந்த மடத்திற்குச் சொந்தமான நிலங்களை அரசரே மேல்பார்வை பார்க்கவேண்டுமென்று முதல் வில்லியம் ஏற்பாடு செய்திருந்தார். ஷை நிலங்களைச் சரியாகப் பரிபாலனம் செய்து புதிதாக வரும் தலைவரிடம் அதை ஜாக்கிரதையாக ஒப்புவிக்க வேண்டுமென்பது தான் அவருடைய கருத்து. ஆனால் ரூட2ஸ் ஷை நிலங்களைத் தாம் அநுபவித்தவரையில் இலாபமென்று நினைத்து, அந்த மடத்திற்கு புதிய குருவை நியமிக்காமலேயே வெகுகாலம் வைத்திருந்து ஷை நிலங்களின் வருமானங்களைத் தாமே அநுபவித்துவரத் தொடங்கினர். மடத்தலை

வரின் ஸ்தானம் நிரந்தரமாகவே காலியாக இருந்துவந்தது. அம் முறைப்படி அவர் முக்கிய மதகுருவான லான்ப்ரான்க் கால மானபின், கான்டர்பரியின் மடத்தில் அவருக்குப் பதிலாக எவ ரையும் நியமிக்காமல், நான்கு வருஷகாலம் வரையில் அம்மடத் திக்குச் சொந்தமான வருமானத்தையெல்லாம் தாமே சுயேச்சையாக அடைந்து அநுபவித்து வந்தார். கி.பி. 1093-ல் ரூபஸ் கடு மையான நோயினால் பீடிக்கப்பட்டு மரணத்தருவாயில் இருந்தார். அப்பொழுது தாம் செய்த அக்கிரமங்களை எண்ணி, அவர் வருந்தி அவைகளுக்குப் பரிகாரம் தேட முற்பட்டார். முதலாக முக்கிய மதகுரு ஸ்தானத்திற்கு உத்தமமான குணமுடையவரான ஆன் ஸேல்ம் (Anselm) என்ற ஒருவரை நியமித்தார்.

ஆன்ஸெல்ம் உயர்குலத்தில் ஜனித்து, உண்மையாகவே உல கப்பற்றைத் துறந்து மதகுரு ஸ்தானத்தை அடைந்தவர். அவரு டைய நூலாராய்ச்சிகளும், வியாசங்களும், பரிசுத்த வாழ்க்கையும், களங்கமற்ற தன்மையும் எல்லோரது மனத்தையும் கவர்ந்தன. வஞ் சனையும் துரோகமுமே நிறைந்திருந்த அக்காலத்தில் அத்தகைய சாந்தகுணம் நிறைந்தவரைக் காண்பது மிக அருமையாயிருந்தது. ஆனால் தமக்கு முக்கிய மதகுருவின் பதவி கிடைக்கப் போகிறதென் பதைக் கேட்டு அவர் சந்தோஷமடையவில்லை. தாம் வயோதிக மடைந்து தளர்ந்துபோன ஓர் ஆடு என்றும், ரூபஸ் மன்னரைப் போன்ற கம்பீரமான இளங்காளையுடன் தாம் பழகுவது நிரம்பவும் சிரமமென்றும் கூறினாராம். ஆனால், ரூபஸ் அவரை வற் வழைத்து வற்புறுத்தி அந்தப்பதவியை ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டார்.

முக்கிய குருபதவியை ஆன்ஸெல்ம் முதலில் விரும்பவில்லை யானாலும், அதை ஒப்புக்கொண்ட பின்னர் அவர் அதன் கடமைகளை அணுவளவும் தவறாமல் நிறைவேற்ற நிச்சயித்துக் கொண்டார். ரூபஸ் அக்கடுமையான வியாதியிலிருந்து பிழைத்தெழுந்தார்; உடனே பழைய வழியிலேயே திரும்பி, மறுமையை மறந்து பழைய கொள்ளையிலும் கொடுங்கோன்மையிலும் இறங்கலானார். அவரைத் திருத்துவதற்கும், காலியாயிருந்த மடங்களுக்குத் தகுதி

யானவர்களை நியமிப்பதற்கும் ஆ/2ன்ஸெல்ம் மதகுருமார்களின் கூட்டமொன்றைக் கூட்டினர். அதை யுணர்ந்த ரூப2ஸ் கடுஞ் சினங்கொண்டு, அக்கூட்டம் நடைபெறக்கூடாது என்று தடுத்து, "மடங்களெல்லாம் என்னுடையவையல்லவா?" என்று ஆ/2ன்ஸெல்மிடம் கூற, பின்னவர் சாந்தமாக, "அவைகளைப் பாதுகாக்க அரசரேயன்றி அவைகளைக் கொள்ளையடிப்பதற்கல்ல; அவைகள் கடவுளுக்கல்லவா சொந்தம். அவைகளுடைய வருமானம் மதகுருக்களுடைய உபயோகத்தின் பொருட்டேயன்றி உமக்காக ஏற்பட்டதல்ல" என்று விடை கூறினர். அரசருக்கும் முக்கிய மதகுருவுக்கும் உடனே மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. அந்த மனஸ்தாபம் படிப்படியாய் முற்றிக்கொண்டே போயிற்று. ஆ/2ன்ஸெல்ம் அரசரைவிடத் தமது மதத்தலைவரான போப்பே சிறந்தவரெனக் கருதினர். மேலும் அரசர் கேட்ட பணத்தைக் கொடுக்கவும் அவர் மறுத்துவிட்டார். கடைசியாக கி.பி. 1097-ல் ஆ/2ன்ஸெல்ம் நாட்டைவிட்டு வெளியேற வேண்டியதாயிற்று. ரூப2ஸ் அந்த மடத்திற்குச் சொந்தமான சொத்துகளைப் பறிமுதல் செய்து எடுத்துக்கொண்டார். ஆ/2ன்ஸெல்ம் மாத்திரமே ரூப2ஸினுடைய அக்கிரமத்தை தைரியமாக எதிர்த்துவந்தார்.

(3) முதல் க்ருஸேஃட் அல்லது சிலுவையுத்தம் :—முதல் வில்லியம் ஸ்காட்லண்ட் தேசத்தின் ஒரு பாகத்தையும் ஜயித்திருந்தார். இங்கிலீஷ் பழக்கவழக்கங்கள் அங்கும் பரவலாயின. அவ்விதமே வேல்ஸ் மாகாணத்தின் தென்பாகத்தையும் நார்மன்கள் ஜயித்து ஸ்வாதீனமாக்கிக் கொண்டிருந்தனர்.

ரூப2ஸ் அரசியற்றிய காலத்தில் ஐரோப்பாவில் ஒரு முக்கிய சம்பவம் நடந்தது. பாலஸ்டைன் என்ற பிரதேசம் கிறிஸ்தவர்களுடைய புண்ணிய ஸ்தலம்; அது ஏசுகிறிஸ்து இருந்து கிறிஸ்துமதத்தை நிலைநாட்டிய இடமாதலால், கிறிஸ்தவர்கள் பலர் அவ்விடத்திற்கு யாத்திரை சென்றுவருவார்கள். ஆனல் அந்தப் பிரதேசம் 11-வது நூற்றாண்டுக்குமுன் அராபிய முகம்மதியருடைய வசத்தில் இருந்தது; அவர்கள் கிறிஸ்தவ யாத்திரிகர்களை வருத்தாமல் இருந்துவந்தனர். ஆனல் அதற்குப்பிறகு அந்தப் பிரதேசம் துருக்கி தேசத்து முகம்

மதியரின் வசமாய்விட்டது. அதுமுதல் கிரிஸ்தவ யாத்திரிகர்கள் பலவிதமான இடுக்கண்களுக்கு உட்படுத்தப்பட்டனர். அதைக் கண்ட போப் ஐரோப்பாவிலுள்ள அரசர்களைத் தூண்டி கிரிஸ்தவப் புண்யஸ்தலங்களைத் துருக்கியரிடமிருந்து மீட்பதற்கு யுத்தம்புரிய ஏற்பாடுசெய்து அந்த யுத்தத்தில் கலந்துகொள்வோர்களுக்குப் பல விசேஷ நன்மைகளை அளிப்பதாக உறுதிசெய்து கொடுத்தார். அக் காலத்தில் போப்பின் சொல்லிற்கு விசேஷ மரியாதை இருந்தது மன்றி, எங்கும் பல வீரர்கள் சண்டைசெய்யத் துடித்துக்கொண் டிருந்தனர். அந்தப் புண்ய யுத்தத்திற்குச் சென்றவர்கள் ஒவ்வொரு சிலுவையைத் தமது போர்ச்சின்னமாக வைத்துக்கொண்டு சென்றார்களாதலால், அந்த யுத்தம் சிலுவையுத்தம் (க்ரூஸேஃட்) என்று பெயர்பெற்றது. பின்னர் இதேமாதிரி அநேக சிலுவை யுத்தங்கள் நடைபெற்றன. முதல் யுத்தம் கி. பி. 1095-ல் நடைபெற்றது. அப்பொழுது முசம்மதியர்களிடமிருந்து கிரிஸ்தவப் புண்ணியஸ்தலங்கள் மீட்கப்பட்டன.

ரூப2ஸினுடைய மூத்த சகோதரரான ராவர்ட் நார்மண்டியின் தலைவராக இருந்தாரென்று கூறினோமல்லவா. அவர் தமது மாகாணத்தைச் சரியாகப் பரிபாலிக்கவில்லை. ஆனாலும், அவர் சிலுவை யுத்தத்திற்குப் போக எண்ணம் கொண்டு தமது தம்பியான ரூப/2ஸினிடம் பணம் பெற்று அதற்கு ஈடாக நார்மண்டியை அவரிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றார். ரூப2ஸ் அதையும் சேர்த்து ஆண்டுவந்தார். இங்கிலண்ட், பி2ரான்ஸ் இரு தேசங்களிலும் தம்முடைய ஆட்சியை நிலைபெறச் செய்யலாமென்று ரூப2ஸ் எண்ணியிருக்கலாம். ஆனால் கி. பி. 1100-ல் அவர் புதிய காட்டில் வேட்டையாடச் சென்றபொழுது, எவரோ அவரைக் கொன்றுவிட்டனர். அவரது பிரேதம் கவனிப்பாரின்றிக் கிடந்து மறுநாள் எவராலோ எடுத்து வரப்பட்டு உத்தரகிரியைகளின்றி ஓரிடத்தில் புதைக்கப்பட்டது. அவ்வளவு கொடுமையாகவும் அநியாயமாகவும் அரசு புரிந்தவருக்கு அது சரியான முடிவு தானென்று பலர் நினைத்தனர்.

---

## 11-வது அதிகாரம்.

---

### முதலாவது ஹென்றி.

(1) **பிரபுக்களின் கலகம்:மதஸ்தாபனச் சச்சரவு:—** ரூபஸ் இறந்தபிறகு அவருடைய தம்பியான ஹென்றி சிம்மாதனமேறினார். அவர் ரூபஸைப் போலில்லாமல் நியாயமான ஆட்சி நடத்த நிச்சயம் செய்துகொண்டு அரசரானவுடனே ஜனங்களுக்கு ஓர் அறிக்கை வெளியிட்டு, தாம் தமது சகோதரரைப் போல நடக்காமல் நியாயமாக அரசுபுரிவதாகவும் மதகுருமார்களுக்கு சுதந்திரமளிப்பதாகவும், காலி மடங்களுடைய நிலங்களை துர்விநியோகம் செய்வதில்லை என்றும், பிரபுக்களிடம் அக்கிரமமாக வரி வசூலிப்பதில்லையென்றும், பழைய கொடுங்கோன்மையை ஒழித்து விடுவதாகவும் உறுதிகூறி, பொதுஜனங்களுடைய ஆதரவைத் தேடிக்கொண்டார். மேலும், தமது சகோதரருக்கு உடந்தையாயிருந்த ப்ளாம்பார்ட் என்பவரைச் சிறைப்படுத்தி, ஆன்ஸெல்மைத் திருப்பி அழைத்துக் கொண்டார். பிரபுக்கள் தமது பண்ணையாட்களுக்குச் சரியான நியாயம் வழங்கும்படி அவர் வற்புறுத்தினர். மற்றவைகளை விட மிகவும் முக்கியமான ஒரு காரியத்தையும் அவர் செய்து முடித்தார். அதுவரையில் இங்கிலீஷ்காரர்கள் நார்மன் அரசரை அன்னிய தேசத்தவர் என்ற காரணத்தினுல் வெறுத்து வந்தனர். அவர்களுடைய வெறுப்பை யகற்றும் பொருட்டு ஹென்றி, பழைய இங்கிலீஷ் அரசகுலத்தைச் சேர்ந்த மாடில்டா (Matilda) என்ற ஸ்திரீயை மணந்துகொண்டார். அதனுல் பழைய இங்கிலீஷ் அரசகுலத்திற்கும் நார்மன் அரசகுலத்திற்கும் பாந்தவ்வியம் ஏற்பட்டது. ஹென்றியின் சந்ததியாரை இங்கிலீஷ்காரர் தமது சொந்ததேசத்து அரசர்களென்றே கருதலாயினர்.

ஹென்றியின் மூத்த சகோதரரான ராபர்ட் என்பவர் சிலுவை யுத்தத்திலிருந்து திரும்பி வந்து, சிலருடைய மூட மதியைக் கேட்டு இங்கிலண்டின் மீது படையெடுத்து வந்து, தாமே அரச

ராக வேண்டுமென்று பிரயத்தனம் செய்தார். ஆனால் ஹென்றியை வெல்லமாட்டாதவராய் முடிவில் சமாதானம் செய்துகொண்டு திரும்பிவிட்டார். அதன் பின்னர் சில பிரபுக்கள் ஹென்றியினுடைய அதிகாரத்தை எதிர்த்துக் கலகம் செய்தனர். ஆனால் ஜனங்களுடைய பிரீதியை சம்பாதித்துக்கொண்ட ஹென்றி கலகக்காரரை மிகவும் எளிதில் அடக்கிவிட்டார். மேலும் அவர் கி. பி. 1106-ல் தமது சகோதரரை நீக்கிவிட்டு நார்மன்டி மாகாணத்தையும் தாமே ஆளத் தொடங்கினார். அதன்பிறகு ஹென்றியினுடைய ஆட்சிக்கு எவ்வித இடையூறும் ஏற்படவில்லை.

ஹென்றி பட்டத்திற்கு வந்தவுடன் ஆ/2ன்ஸெல்மும் திரும்பி வந்தாரென்று குறிப்பிட்டோமல்லவா? அவர் ஹென்றியிடம் சிறிதுகாலம் சமாதானமாகவே நடந்து வந்தாலும், சீக்கிரத்தில் அவ்விருவருக்கும் மனஸ்தாபம் ஏற்படக்கூடிய சந்தர்ப்பம் வந்து வாய்த்தது. அப்பொழுது ஐரோப்பாவில் போப்பும் மற்ற மதகுருமார்களும், தாம் இலௌகிக அதிகாரிகளுக்கு உட்பட்டவர்களல்லரென்றும், ஆதலால் தமது பதவிக்குரிய சின்னங்களை அரசர்களிடமிருந்து பெறமாட்டோமென்றும்'' சாதாரண ஜனங்களைப் போல அரசரை வணங்கமாட்டோ மென்றும், கூறி, அவ்விடத்தில் போராடி வந்தனர். ஆனால், அதற்குமுன் இங்கிலண்டில் அரசனிடத்திலிருந்தே மதகுருமார்கள் தமது சின்னங்களைப் பெற்றும், அரசனைப் பணிந்தும் வந்தனர். ஆ/2ன்ஸெல்ம் அதற்குமுன் அப்படிச் செய்திருந்தாலும் பின்னர் போப்பின் கட்சியில் சேர்ந்துகொண்டு பழைய வழக்கத்திற்கு மாறாக நடக்கமுயன்றார். ஹென்றி தமது கட்சியை விட்டுக்கொடுக்காமல் வாதாடினார். இருவரும் சிநேகமாயிருந்தபடியே தர்க்கம் செய்தனர். நான்கு வருஷகாலம் ஆ/2ன்ஸெல்ம் வெளி தேசத்தில் சென்று தங்கினார். கி. பி. 1107-ல் ஆ/2ன்ஸெல்மும் ஹென்றியும் ஒருவிதமான முடிவுக்கு வந்தனர். ஒவ்வொருவரும் ஒரு படி விட்டுக்கொடுத்து சமாதானம் செய்துகொண்டனர். அரசரிடத்திலிருந்து சின்னங்களைப் பெறவேண்டுமென்ற விதியை ஹென்றி விட்டுவிட்டார்; அரசருக்கு மதகுருமார்கள் மரியாதை செய்ய வேண்டுமென்பதை ஆ/2ன்ஸெல்ம் ஒப்

புக்கொண்டார். அந்த ஏற்பாடு இருதிறத்தாருக்கும் திருப்திகரமாக இருந்தது. அதனால் வெளிப்பார்வைக்கு ஆன்ஸெல்ம் வெற்றியடைந்ததாகத் தோன்றினாலும், ஹென்றியினுடைய உள் கருத்து வேறாக இருந்தது. சின்னங்களை யளிக்கும் பிரயோஜனமற்ற உரிமையை இழந்ததுபற்றி ஹென்றி வருந்தவில்லை. அதற்குப் பதிலாக ஒவ்வொரு மடத்திற்கும் உள்ள சொத்துரிமைகளின் பொருட்டு ஒவ்வொரு மதகுருவும் அரசருக்கு மரியாதை செலுத்தி அவருடைய தலைமையை அங்கீகரிக்க வேண்டுமென்ற ஏற்பாட்டினால், அரசருடைய அதிகாரம் வலுப்பட்டது. அதனால் இராஜீய விஷயங்கள் சம்பந்தப்பட்ட வரையில் மதஸ்தாபனம் அரசருடைய அதிகாரத்திற்கே உட்பட்டு விட்டது.

(2) **அரசியல் சீர்திருத்தம்: ஹென்றியின் அந்தியகாலம்:**—தமது தந்தையையும் சகோதரரையும் விட, ஹென்றி அதிகமான அதிகாரம் பெற்றிருந்தார். மதஸ்தாபனமும் அவருடன் ஒத்துப்போய் விட்டது. இங்கிலண்டு, ஆகிய நார்மன்டி ஆகிய இரண்டிற்கும் அவர் அதிபதியாக இருந்ததுடன், ஸ்காட்லண்டு தேசமும் தம்மைப் பணியும்படி அவர் செய்தார். பல நார்மன் பிரபுக்கள் ஸ்காட்லண்டிலும் குடியேறி அங்கும் தங்களுடைய நாகரிகம் பரவச்செய்தார்கள். முடிவில், ஸ்காட்லண்டு தேசமும் நார்மன்களின் வசமாவதற்கு அது அநுகூலமாயிருந்தது. ஹென்றி ஆட்சிபுரிந்த காலத்திற்குள் வேல்ஸ் மாகாணம் முழுவதும் அவருடைய வசத்திற்கு வந்துவிட்டது. தமது தந்தையைப் போலவே ஹென்றியும் சுயேச்சையாக ஆட்சி புரிந்து வந்தார். ஆனாலும் அவர் ரூபஸ் அரசரைப் போலக் கொடுங்கோன்மை நடத்தவில்லை. அவர் ரோஜர் (Roger) என்பவரைத் தமது முக்கிய மந்திரியாக வைத்துக்கொண்டார். ரோஜர் அரசியல் நிர்வாகம் நடாத்துவதில் சிறந்த நிபுணர். அவர் தகுதியுடைய பல உத்தியோகஸ்தர்களைத் தமக்குக்கீழமர்த்திக் கொண்டு முன்னிருந்ததைவிட அதிக திறமையாக துரைத்தன காரியத்தை நடத்தினார். அவர் இரண்டு முக்கிய ஸ்தாபனங்களை யமைத்து இராஜ்ஜிய நிர்வாகத்தை அவைகளுக்குப் பிரித்துக்கொடுத்தார். அவைகளில் ஒன்று க்யூரியா ரெஜிஸ் (Curia Regis=King's Court)

—அல்லது அரசாது நீதிஸ்தலம் எனப்படும். அந்த நியாயஸ்தலத்தார் முக்கியமான வழக்குகளை விசாரித்துத் தீர்மானம் செய்வார்கள். தேசத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து அந்தந்த இடத்தில் பல வழக்குகளை விசாரணை செய்து, அதனுல் பலர் தலைமை நகரத்திற்குச் செல்லும் உபத்திரவமில்லாமல் செய்துவிடுவார்கள். இரண்டாவது ஸ்தாபனம் எக்ஸ்சேக்கர் (Exchequer) என்பது; அதன் வேலை வரிவசூல் செய்து, சரியான கணக்குகளைத் தயாரிப்பது. இவ்வித சிறந்த ஏற்பாடுகளினுல் ஹென்றியினுடைய ஆட்சி நிரம்பவும் வன்மையாக இருந்தது; ஹென்றி "நியமகேசரி" (Lion of Righteousness) என்ற காரணப் பெயரையும் பெற்ருர்.

செங்கோல் மன்னரான ஹென்றியின் அந்தியகாலத்தில் பல இடுக்கண்கள் சம்பவித்தன. அவருக்கு வில்லியம் என்ற ஒரு குமாரர் இருந்தார். ஆனுல் கி.பி. 1120-ல் அவர் நார்மண்டிக்குச் சென்றுவிட்டு வெள்ளைக்கப்பல் (White Ship) என்ற கப்பலில் ஏறிவந்து கொண்டிருக்கையில், கப்பலோட்டிகள் குடிமயக்கத்தால் ஒருபாறையின்மீது அது மோதும்படி விட்டுவிட்டனர். அரசகுமாரரும் வேறு சிலரும் ஒரு படகில் ஏறித் தப்பிப் போனபொழுது அவரது சகோதரி ஒருத்தி கப்பலில் இருந்தபடி அவரை உதவிக்கு அழைத்தாள். அவளையும் ஏற்றிக்கொள்ளச் சென்ற அரசகுமாரரது படகில் ஒரே சமயத்தில் வேறு பலரும் குதித்தனராதலால்,அது சரேலென்று கவிழ்ந்து போக,எல்லோரும் மாண்டுபோயினர். அந்தத் துக்ககரமான சம்பவம் ஹென்றியின் ஹிருதயத்தைப் பிளந்துவிட்டது. அவர் அதன்பிறகு புன்னகை கூடப் புரிந்தறியார்.

ஹென்றிக்கு மாடில்டா என்ற ஒரு குமாரியும் இருந்தாள். தமது புத்திரன் இறந்துவிட்டமையால், அவளே தமக்குப் பின் பட்டத்திற்கு வரவேண்டுமென்று ஹென்றி விருப்பங்கொண்டிருந்தார். ஆனுல் நார்மன் பிரபுக்கள் ஒரு ஸ்திரீயின் அதிகாரத்திற்கடங்கி இருக்க மறுத்தனர்.

பிரான்ஸ் தேசத்தின் ஒரு மாகாணமாகிய நார்மண்டிக்குத் தெற்கில் ஆஞ்ஜௌ (Anjou) என்ற ஒரு சிறு மாகாணம் உண்டு

அதைப் பரிபாலித்துவந்த பிரபு வம்சம் நிரம்பவும் கீர்த்திபெற்றி ருந்தது. ஆ/2ஞ்ஜெள தேசத்து ஜனங்களும் நார்மன்களும் ஒருவரை யொருவர் விரோதித்து வந்திருந்தனர். ஹென்றி தமது குமாரியை ஆ/2ஞ்ஜெளவின் தலைவரான ஜாப்2ரே (Geoffrey) என்பவருக்கு விவாகம் செய்து கொடுத்தார். அவருக்குக் ப்ளா/2ண்டாஜனேட் (Plantagenet) என்ற பட்டம் உண்டு. ப்ளா/2ண்டா ஜெனிஸ்டா என்ற ஒருவித மலரை அவர்கள் சூடிக்கொள்வது வழக்கமாதலால், அவர்களது குலத்திற்கே அந்தப்பெயர் கொடுக்கப்பட்டு விட்டது. ஹென்றி தமது பெண்ணை அங்கு கலியாணம் செய்துகொடுத்ததன் நோக்கம் ஆ/2ஞ்ஜெள மாகாணமும் தமது சந்ததியாரின் ஆட்சிக் குட்படும் என்பதுதான்.

ஹென்றி கி.பி. 1135-ல் மரணமடைந்தார். அவர் சில விஷ யங்களில் ரூப2ஸைப் போலவே சுயநலத்துடனும் கடுமையாகவும் நடந்துகொண்டாரானாலும், திறமையாகவே அரசுபுரிந்தார். அரசர் சுகமநுபவிக்க வேண்டுமானாலும், ஜனங்கள் க்ஷேமகரமாக இருப் பதே அதற்கு அநுகூலமான சாதனம் என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். அவரிடம் குடிமக்களுக்கு பயமும் பக்தியும் அதிகமா யிருந்தன. ஜயவீரர் வில்லியம் தொடங்கிய வேலை ஹென்றி காலத் தில் பூர்த்தியடைந்தது. இங்கிலண்டில் அமைதியும் ஒழுங்கான துரைத்தனமும் ஏற்பட்டன; அதன் அரசர் கடுமைகாட்டினாலும் திறமையாக அரசாட்சி புரியும் வன்மையுடையவராக இருந்தார்.

(3) ஸ்டீப2ன்: குழப்பமும் துன்பமும்:—ஹென்றி தமது பெண் முடிசூடவேண்டுமென்று கூறியிருந்தாரானாலும் அவரது விருப்பம் நிறைவேறவில்லை. அவரது சகோதரியின் புத்திரரான ஸ்டீ ப2ன் (Stephen) என்பவர் கி.பி. 1135-ல் பட்டத்திற்கு வந்தார். அவரை ஜனங்களெல்லோரும் ஒரே மனதாக வரவேற்றார்கள். அவர் அரசரானவுடன் ஜனங்களுக்கு ஓர் அறிக்கை வெளியிட்டு தாம் நிரம்பவும் நியாயமாக ஆட்சிபுரிவதாகத் தெரிவித்துக் கொண்டார். ஆனால் அவர் அரசுபுரிந்த 19 வருஷகாலத்தில் இங்கிலண்டு தேசம் விவரிக்க இயலாத துன்பங்களையெல்லாம் அநுபவித்தது. அவர் சிம்மாதன மேறிய பின் சொற்பகாலம் வரையில்

நிலைமை சரியாக இருந்துவந்தது. ஏனென்றால், ஹென்றியினுடைய மந்திரிகளும், ரோஜர் என்ற பிரக்கியாதி பெற்ற உத்தியோகஸ்தரும் பழைய தோரணைப்படியே துரைத்தன பரிபாலனம் நடத்திவந்தனர். ஸ்டீபன் தயாளகுணமும் தைரியமும் நிறைந்தவராஞலும், அரசியல் நடத்துவதில் திறமைசாலியல்லர். அவர் சில வருஷகாலத்திற்குள் தமக்கு முக்கிய உதவியாக இருந்துவந்த ரோஜரிடம் நம்பிக்கை இழந்து அவரை வேலையிலிருந்து விலக்கிவிட்டார். அதனல் பல பிரபுக்களுக்கு அரசரிடத்தில் வெறுப்பு ஏற்பட்டது. ரோஜர் விலகிக்கொண்டவுடனே அரசியல் நடவடிக்கைகள் தடுமாற்றமடையத் தொடங்கின.

ஹென்றி தமது பெண்ணுன மாடில்டா முடிசூட வேண்டுமென்று விரும்பியிருந்தும் ரோஜர் முதலியோரது பக்கபலத்தைப் பெற்றிருந்தவரான ஸ்டீபனை எதிர்க்க அவளால் இயலவில்லை. ரோஜர் விலகியதும் அவள் சில உறவினருடன் இங்கிலண்டில் வந்திறங்கித் தனக்குப் பட்டம் வேண்டுமென்று கேட்டாள். உடனே ஸ்டீபனுக்கும், மாடில்டாவுக்கும் போர் மூண்டது. ஆனல் இருகட்சிகளும் ஒன்றைவிட மற்றென்று அதிக பலம் பெற்றிருக்கவில்லையாதலால், யுத்தம் சுலபத்தில் முடிவுக்கு வரவில்லை. ஸ்டீபன் தமது பிரஜைகளின் அன்பைப் பெருதவராதலால், அன்னிய தேசத்து சிப்பாயிகளுக்குக் கூலிகொடுத்து அவர்களை அழைத்துவந்து சண்டை நடத்தவேண்டி வந்தது. மாடில்டாவுக்கும் சரியான துணைவர்கள் இல்லை. இருகட்சிகளிலும் சேர்ந்து போர்புரிந்த பிரபுக்களோ சுயநலம் கருதியே அவ்வாறு செய்தார்களன்றி மனதார அதில் இறங்கவில்லை. ஸ்டீபனுகிலும் மாடில்டாவாகிலும் ஜயம் பெருதபடி சச்சரவு நீடித்து நடந்துகொண்டே போனல், தங்களுடைய கொள்ளைத் தொழிலை அச்சமின்றி நடத்தலாம் என்பதொன்றே ஷ பிரபுக்களின் உட்கருத்து. ஆகவே, இருகட்சிகளும் பலஹீனமாக இருந்தது, நார்மன் பிரபுக்களின் வேட்டைக்கு அநுகூலமாயிற்று. முன்னிருந்த வில்லியம், ரூபஸ், ஹென்றி ஆகிய மூன்று அரசர்களும், அவர்களை அடக்கி வைத்திருந்தனர். ஆனல் இப்பொழுதேற்பட்ட உள்நாட்டுச் சண்டையினல், அவர்கள் எவ்விதமான கட்டுப்பாட்டிற்கும் உட்படாமல்

சுயேச்சையாக நடந்துகொண்டு பொதுஜனங்களைப் பலவகையில் வருத்தத் தொடங்கினர். எங்கும் குழப்பமும் பஞ்சமும் தலையெடுத்தன. ஜனங்கள் அடைந்த துன்பம் சொல்லி முடியாததாக இருந்தது. ஒவ்வொரு பிரபுவும் தனியான கோட்டையொன்றைக் கட்டிக்கொண்டு அங்கு அயோக்கியர்களையும் துஷ்டர்களையும் வைத்துக்காப்பாற்றி அவர்களது பலத்தினல் அரசரையும் கூட எதிர்த்தனர்; தனவந்தர்களான குடியானவர்களைப் பிடித்துச் சிறையிலிட்டு அவர்களுடையசொத்துகளைப் பறிமுதல் செய்தனர்; குடிமக்களிடம் வரிவசூலித்தனர். வரி கொடாமல் இருந்த கிராமங்களைத் தீக்கிரையாக்கினர். விளைபொருள்களோ தானியங்களோ காணவும்கிடைக்கவில்லை. பசிப்பிணியால் அநேகர் இறந்தனர். கோடீசுவரர் பலர் பிச்சையெடுக்கலானர்கள். மடாலயங்களின் மதகுருமார்களும் அதே கதிக்கு ஆளாயினர். ஒரு சிலருடைய கொடுமைக்குட்பட்டு தேசம் முழுதும் தத்தளித்தது. ஒவ்வொரு பிரபுவும் ஒரு கொடுங்கோல் மன்னராய் மாறிவிட்டார். கிரிஸ்துவும் அவருடைய சகாக்களும் அப்பொழுது நித்திரை புரிந்ததாலேயே அவ்வித அக்கிரமங்கள் நடந்தனவென்று ஜனங்கள் எண்ணினர். சில பிரபுக்கள் முதலில் ஸ்டீபனுடனும், பிறகு மாடில்டாவுடனும் சேர்ந்துகொண்டு இருவரிடமிருந்தும் சன்மானங்களைப் பெற்றனர்.

உள்நாட்டுச் சண்டையோ எவ்வித முடிவுமின்றி நடந்துகொண்டே இருந்தது. முடிவில் கி.பி. 1141-ல் லின்கன் (Lincoln) என்ற இடத்தில் ஸ்டீபனுடைய சேனை தோற்றுப்போயிற்று. அவரும் சிறைப்பட்டுப் போனர். உடனே எல்லோரும் அவரைக் கைவிட்டு மாடில்டாவுடன் சேர்ந்துகொண்டு, அவளை அரசியாக்க முயன்றனர். ஆனல் மாடில்டா மிகுந்த கர்வமும் ஆணவமும் உடையவளாதலால், அவளது குணம் பலருக்குப் பிடிக்கவில்லை. மேலும், லண்டன் நகரத்து ஜனங்கள் ஸ்டீபன் கட்சியிலேயே இருந்தனர். ஆகவே, மாடில்டாவின் எண்ணம் பலிக்கவில்லை. கடைசியில் அவளுடைய முக்கிய நண்பர்களில் பலரும் கைவிட்டு விட்டமையால் கி.பி. 1148-ல் அவள் நார்மண்டிக்குத் திரும்பிப் போய்விட்டாள். ஸ்டீபன் மறுபடியும் அரசரானர்.

ஆனால் தேசத்தினுடைய நிலைமை மாத்திரம் மாறவில்லை. பழைய குழப்பமும் அராஜகமுமே தொடர்ச்சியாக இருந்துவந்தன.

கி.பி. 1153-ல் மாடில்டாவினுடைய புத்திரரான ஹென்றி என்பவர் தமது தாயின் கட்சியை ஆதரித்து இங்கிலண்டில் வந்திறங்கி, ஸ்டீபனுடன் போர் புரியலானார். ஹென்றி 20 வயதே நிறைந்தவரானாலும் மிகுந்த சாமர்த்தியமுடையவர். அவரை எதிர்க்கும் தைரியமில்லாமையால், ஸ்டீபன் தமது மந்திரிகளின் ஆலோசனைக்கிணங்க ஹென்றியுடன் சமாதானம் செய்துகொண்டார். கி.பி. 1153-ல் வாலிங்போர்ட் (Wallingford) என்ற இடத்தில் நடந்த உடன்படிக்கையின்படி ஸ்டீபனுடைய ஆயிசுகால முடிவுவரையில் அவர் ஆட்சி புரிவதென்றும், அதன் பிறகு ஹென்றி பட்டத்திற்கு வரவேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. கி. பி. 1155-ல் ஸ்டீபன் உயிர் துறந்தார். அவருடைய ஆட்சி நடந்த தோரணையிலிருந்து, பிரபுக்களை உறுதியாக அடக்கும் அரசனொருவன் இல்லாவிடில், தேசத்தில் குழப்பம் அதிகரித்துக் கொண்டே போகும் என்ற உணர்ச்சி ஜனங்களுக்கு நன்றாக ஏற்பட்டுவிட்டது. கொடுங்கோன்மை புரியும் பிரபுக்களைவிட உறுதியாக ஆட்சி நடாத்தும் ஓர் அரசனுக்கு உட்படுவதே உசிதமானதென்பதும் தெரிந்தது. ஆகவே நார்மன் அரசர்களுடைய கடுமையான அரசாட்சியே தேசத்திற்கு நன்மை பயக்கும் என்பது விளங்கியது.

---

# 12-வது அதிகாரம்

---

## இரண்டாவது ஹென்றி.

(1) **மறுபடி அமைதி; மதஸ்தாபனச் சச்சரவு:**-கி. பி. 1154-ல் ஹென்றி முடி சூடினார். முன்பு அரசுபுரிந்த ஹென்றி வேறு, இவர் வேறு என்பதைக் காட்டும் பொருட்டு இவரை இரண்டாவது ஹென்றி என்று குறிப்பது வழக்கம். இவர் முதல் ஹென்றியினுடைய பெண்ணின் குமாரர். இவர் முதல் ஹென்றியின் பெயரன்

என்ற முறைமையில் இங்கிலண்டையும் நார்மண்டியையும் பெற்றதுடன் தமது தந்தையின் மாகாணமான ஆஞ்ஜௌவையும் பெற்ருர். அதோடு அவர் தமது மனைவியின் மூலமாக பிரான்ஸ் தேசத்தின் மேற்கு பாகத்திலுள்ள பாய்டோ: அக்விடேன் (Poitou; Acquitaine) என்ற மாகாணங்களையும் பெற்ருர். இவ்வாறு இங்கிலீஷ் அரசருடைய இராஜ்ஜியம் பரிமாணத்தில் அதிகமாயிற்று. மேலும் முதல் ஹென்றி இங்கிலீஷ் ஸ்திரீயை விவாகம் செய்து கொண்டிருந்தமையால், இரண்டாவது ஹென்றியை இங்கிலீஷ்காரர் அன்னியரென்று எண்ண இடமில்லாமல் போயிற்று. இங்கிலண்டில் ஆட்சிபுரிந்த அரசர்களுள் இரண்டாவது ஹென்றி முக்கியமான கோஷ்டியில் சேர்ந்தவர். அவர் போர் புரிவதிலும் ஆட்சி புரிவதிலும் திறமை மிகுந்தவர்; சோம்பலின்றி எக்காலமும் உழைத்து வேலை செய்பவர். புதிய புதிய இராஜீயமுறைகளைக் கையாளுவதில் அவருக்குத் திருப்தி அதிகம். அவர் பிறரால் நன்கு மதிக்கப்பட வேண்டுமென்ற ஆசையின்றி, தமது போக்கிலேயே உறுதியாகச் செல்லும் குணமுடையவர். ஆனல் சிற்சில சமயங்களில் அவரது கோபமும் குரோதமும் எல்லோரும் கண்டு அஞ்சும்படியாகப் பெருகிவிடும்.

அவர் முதலாக ஸ்டீபன் காலத்தில் நேர்ந்த தீமைகளை ஒழிக்க முயற்சி செய்தார். அவர் பிரபுக்கள் கட்டியிருந்த கோட்டைகளைத் தகர்த்தெறியுமாறு உத்தரவிட்டதன்றி தம்மை எதிர்த்தவர்களையும் சுலபமாக அடக்கினர். ஏராளமான நிலத்தை மானியமாகப் பெற்றிருந்தவர்களிடமிருந்து அரசர் அவைகளைப் பிடுங்கிவிட்டார்; ஸ்காட் அரசரையும் வெல்ஷ் வீரரையும் தமது ஆதிக்கத்திற் குட்படுத்தினர். சில வருஷங்களுக்குள் பழைய அமைதி மறுபடியும் நிலை நாட்டப்பட்டது. முதல் ஹென்றியின் காலத்திலிருந்த நியாய ஸ்தலங்கள் மீண்டும் வேலை செய்யத் தொடங்கின.

ஷை சீர்திருத்தங்களைச் செய்வதில் அரசருக்கு உதவியாய் இருந்தவர்களுள் தாமஸ் பெக்கெட் (Thomas Becket) என்பவர் முக்கியமானவர். அவரும் அரசரைப் போலவே நல்ல உழைப்பாளியாயிருந்தமையால் மிகவும் சீக்கிரத்தில் ஹென்றியினுடைய நம்பிக்

கைக்குப் பாத்திரரானார். கி. பி. 1162-ல் ஹென்றி அவரை கான்டர்பரியின் முக்கிய மத குருஸ்தானத்திற்கு உயர்த்திவிட்டார். இதில், அவருக்கு விசேஷ அக்கரை இருந்தது. ஜயவீரர் வில்லியம் மதஸ்தாபனத்திற்குக் கொடுத்த சுதந்திரங்களால் அது கொஞ்சம் கொஞ்சமாக அதிக அதிகாரத்தைப் பெற்று அரசாங்கத்திற்கு சமமான ஸ்தாபனம் ஆய்விட்டது. ஆதலால் அரசாங்கத்தின் தலைவரான அரசர் எப்பொழுதும் அதன்மீது கண்வைத்துக் கொண்டிருப்பது அவசியமாயிற்று. தமக்கு மிகவும் பிரியமாயுள்ள பெக்கெட் முக்கியமதகுருவாயிருந்தால், தமது அதிகாரத்திற்கு எவ்வித இடையூறும் நேராதென்பது ஹென்றியின் எண்ணம். ஜயவீரர் வில்லியமும் லான்ப்ரான்க்கும் ஒத்துழைத்து வந்ததைப்போலவே தாமும் நடந்துகொள்ள ஹென்றி நினைத்தார். ஆனால், பெக்கெட் அந்தப் பதவியைப் பெற்றபின் முற்றிலும் வேறு மனிதராக மாறிவிட்டார். அவர் முதலில் அந்தப் பதவியை ஏற்றுக்கொள்ளவே மறுத்தார். ஏனெனில், அந்தப் பதவியில் ஹென்றிக்கும் தமக்கும் அபிப்பிராய பேதம் ஏற்படுமென்று அவர் முன்னுகவே உணர்ந்திருந்தார். ஆனால் ஹென்றி அவரை வற்புறுத்தி அவர் ஏற்கெனவே வகித்த அரசாங்க உத்தியோக பதவியை இராஜீநாமாச் செய்யும்படி தூண்டி புதிய பதவியையும் ஏற்கும்படி செய்தார். அரசாங்க உத்தியோகஸ்தரா யிருந்தவரையில பெக்கெட் அரசருடன் மிகவும் அன்னியோன்னியமாக இருந்து, அவருடைய வலதுகைபோல நடந்து வந்தார். ஆனால் மதகுருவின் பதவியை யடைந்தபின், அவர் புது மனிதராக மாறி, பழைய ஆடம்பரத்தை யெல்லாம் விலக்கி, மதவுணர்ச்சி மிகுந்தவராய், ஆன்ஸெல்ம் செய்ததைப் போலவே தாமும் மதஸ்தாபன உரிமைகளை விடாமல் பாதுகாக்க நிச்சயம் செய்துகொண்டார். ஆகவே, ஹென்றி எண்ணியதற்கு மாருகவே விஷயங்கள் நடந்தன. ஹென்றிக்கும் பெக்கெட்டுக்கும் சீக்கிரத்தில் சண்டை மூளுவது அவசியமாகிவிட்டது. அதற்கு அநுகூலமாக பல சச்சரவுகளில், குற்றவாளிகளான மத குருமார்களைத் தண்டிக்கும் விஷயத்தில் பெருத்த அமளி நேர்ந்துவிட்டது.

குற்றம் இழைத்த மதகுருமார்களை விசாரித்துத் தண்டிக்கத் தனியான நியாயஸ்தலங்களை ஜெயவீரர் வில்லியம் ஏற்படுத்தினு

ரென்பதையும், அதனுல் ஏற்படக்கூடிய அபாயத்தையும் முன்பே குறிப்பிட்டோம். ஷ்டி பிரத்தியேக நியாயஸ்தலங்களில் அரசாங்கத்தின் சட்டத்தை விலக்கி, போப்பினுடைய உத்தரவுகளை அநுசரித்தே விசாரணை நடந்தது. ஷ்டி நியாயஸ்தலங்கள் வரவர அதிகமான அதிகாரத்தைப் பெற்றுவந்தன. ஸ்டீபன் காலத்துக் குழப்பத்தில் பொதுஜன நியாயஸ்தலங்கள் வேலை செய்யாமல் இருக்க, மதகுரு நியாயஸ்தலங்கள் எவ்வித உபத்திரவமுமின்றி அமைதியாக வேலைசெய்தன. மதகுருமார்கள் குற்றவாளிகளாக வந்த வழக்குகளையெல்லாம் அந்த நியாயஸ்தலத்தாரே தீர்த்து வைத்தனர். ஏனென்றால் இலௌகீகநியாயாதிபதிகள் மதகுருமார்களை விசாரணை செய்வது மதகுருமார்களுக்கு கௌரவக் குறைவென்று அக்காலத்தவர் எண்ணினர். மேலும் அப்பொழுது படிப்பாளிகளெல்லோரும் அநேகமாய் மதஸ்தாபனங்களில் உத்தியோகம் பெறுவது வழக்கமாயிருந்தமையால், மதகுருமார்களிற் பலர் உலகப் பற்றுடையவர்களாக இருந்து சாதாரண ஜனங்களைப்போலவே குற்றங்கள் செய்துவந்தனர். மேலும் அவர்களுக்குத் தனியாக ஏற்பட்ட நியாயஸ்தலங்களில் சரியான தண்டனை கிடைப்பதில்லை. மதகுருமார்களே அங்கு நியாயாதிபதிகளாக இருந்தமையால், தங்களுடைய சகாக்களுக்கு சரியான தண்டனை விதிக்காமல் தயாளமாக விட்டுவிட்டனர். பொதுஜனங்களைச் சேர்ந்த ஒருவன் திருடி, கடுங்காவல் தண்டனை பெற்றால், அதே திருட்டுக்குற்றம் செய்த மதகுருவுக்கு சொற்ப காலத்திற்கு வெறுங்காவலோ அல்லது இன்னும் குறைவான தண்டனையோதான் கிடைத்துவந்தது.

நியாயப்படி பார்த்தால், இவ்விதம் மதகுருமார்களை விட்டுவிடுவது எந்த அரசராலும் அநுமதிக்கப்படக்கூடாத விஷயமேயாகும். இரண்டாவது ஹென்றி இவ்வித அக்கிரமத்தைக்கண்டு பொறுமல், குற்றம்செய்த பல குருமார்களின் வழக்குகளைத் தமது துரைத்தன நியாய ஸ்தலங்களிலேயே விசாரிக்கும்படி செய்தார். தாமஸ் பெக்கெட் மதஸ்தாபனத்தின் பழைய உரிமைகளை விட்டுக் கொடுக்க இணங்கவில்லை. உடனே ஹென்றி எல்லா மதகுருமார்களையும் கி. பி. 1164-ல் ஒன்றுகூட்டி ஒரு முடிவுக்கு வந்து அந்த முடிவை அறிக்கையாக வெளியிட்டார். அது க்ளாரெண்டன்

(Clarendon) என்ற இடத்தில் தயாரானபடியால் க்ளாரண்டன் உடன்பாடுகள் (Constitutions of Clarendon) எனப்படும். அந்த ஏற்பாட்டின்படி குற்றஞ்சாட்டப்பட்ட மதகுருமார்கள் அரசாங்க நியாயஸ்தலங்களுக்குமுன் வந்து தாங்கள் மதகுருமார்கள் என்பதை மெய்ப்பித்தால், அவர்கள் மதஸ்தாபன நியாயஸ்தலங்களுக்கு விசாரணையின்பொருட்டு அனுப்பப்படுவார்கள். அங்கு அவர்கள் குற்றவாளிகள் என்று தீர்மானமாய்விட்டால், உடனே அவர்கள் தமது பதவியை இழந்து, அரசாங்க நியாயஸ்தலத்திற்கு வந்து சாதாரண மனிதரைப்போல தண்டனை பெற வேண்டுமென்றும், மதஸ்தாபன நியாயாதிபதிகள் தம்முடைய அதிகாரத்தை சிறிதளவும் மீறக்கூடாதென்றும், போப்புடன் கடிதப் போக்குவரத்து நடப்பதெல்லாம் அரசர் துவாராகவே நடக்கவேண்டுமெனவும் ஏற்பாடாயிருந்தது. பெக்கெட் அந்த ஏற்பாட்டை முதலில் ஒப்புக்கொண்டாராஹும், சில நாள்கள் கழித்து அவைகளை உல்லங்கனம் செய்துவிட்டார். ஹென்றியினுடைய கோபமோ அளவிடக் கூடாததாய்ப் பெருகியது. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்காமலே இருந்தனர். கடைசியில் பெக்கெட் நாட்டைவிட்டு வெளியேறினர். ஆறு வருஷம் அவர் வெளியில் இருந்துவிட்டுக் கடைசியில் கி. பி. 1170-ல் ஹென்றியுடன் சமாதானம் செய்துகொண்டு மீண்டும் தமது உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டார். ஆனல், அவர்களது சமாதானத்தில் முக்கியமான விஷயங்களைப்பற்றி எவ்வித முடிவும் ஏற்படவில்லை. எனவே, மீண்டும் அவர்களுக்குள் சச்சரவேற்பட்டது. அதற்குக் காரணம் பின்வருமாறு:—பெக்கெட் வெளிதேசத்தில் தங்கியிருந்தபொழுது ஹென்றி தமது புத்திரருக்கு இளவரசுப் பட்டம் கட்டி வைத்தார். அந்தப் பட்டாபிஷேகச் சடங்கை நடத்துவது காண்டர்பரி முக்கியமத குருவைச்சேர்ந்த காரியம். ஆனல் பெக்கெட் உள் நாட்டில் இல்லாமையால் அந்தச் சடங்கை அவருக்கு அடுத்தபடியிலிருந்த யார்க் மடத்தின் குரு நடத்திவைத்தார். அதைக்கேட்ட பெக்கெட் அந்த குரு செய்தது தவறென்று கூறி, அவரை மதப்பிரஷ்டம் செய்துவிட்டார். தமது பதவியை ஏற்றுக்கொண்ட உடனே அதிருப்தியாக நடந்துகொண்ட பெக்கெட்டின்மீது அரசருக்கு ரௌத்திராகாரமான

கோபம் மூண்டது; அவர் தம்மை அறியாமலேயே "முட்டாள் களுக்கும் தொடைநடுக்கிகளுக்குமா நான் என் அரண்மனையில் சோறுபோட்டு வளர்க்கிறேன்! கேவலம் அற்ப மனிதரான இந்த மதகுரு என்னை இப்படி அவமரியாதையாக நடத்து கிறார். இவரைத் தண்டிப்போர் எவருமில்லையா?" என்று வாய்விட்டுக் கூவினார். அவருடைய வார்த்தையைக் கேட்ட நான்கு வீரர்கள் அரசர் உண்மையிலேயே மதகுருவை தண்டிக்கக் கட்டளை யிடுவதாக எண்ணி உடனே கான்டர்பரிக்கு ஓடி பெக்கெட்டி டம் போய் அவர் செய்த மதப்பிரஷ்ட உத்தரவை நீக்கும்படி கூறினர். பெக்கெட் திருப்திகரமாக மறுமொழி கூறவில்லை. அன்று கி. பி. 1170-ம் வருஷம் டிசம்பர் மாதம் 29-ந் தேதி மாலை சமயம். சில சன்னியாசிகள் மாலை ஜெபம் செய்துகொண்டிருந் தனர். உடனே ஷை நான்கு யுத்தவீரர்களும் தமது கவசங்களை யணிந்துகொண்டு உட்புகுந்தனர். அங்கிருந்த சன்னியாசிகள் வெளிக் கதவை உள்புறத்தில் தாளிட்டுக்கொண்டு, தங்களையும் குருவையும் காப்பாற்றிக்கொள்ள முயன்றனர்.

ஆனால் அஞ்சா நெஞ்சம் படைத்த பெக்கெட் கதவை மூட வேண்டாமென உத்தரவிட்டார். யுத்தவீரர்கள் "இராஜத்துரோகி எங்கே?" என்று கூவியவண்ணம் உள்ளே நுழைந்தனர். பெக் கெட் அவர்களுக்கு முன்வந்து, "இதோ இருக்கிறேன்; நான் முக் கிய மத குருவும், கடவுளின் சேவகனுமேயன்றி இராஜத்துரோகி யன்று" என்று கூறினார். வீரர்கள் முன்பின் யோசியாமல் உடனே பாய்ந்து அவரைக் குத்திக் கொன்றுவிட்டனர். பெக்கெட் கடை சியாக "மதஸ்தாபனத்தைக் காப்பாற்றும்பொருட்டு ஏசுநாதரின் நாமத்தை ஸ்மரித்துக்கொண்டு நான் சந்தோஷமாக இதோ மர ணத்தை ஏற்கிறேன்" என்று கூறியபடி உயிர்துறந்தார். அதனால் தமது அரசருக்கு அரிய சேவை செய்துவிட்டதாக ஷை வீரர்கள் எண்ணினார்களானாலும், உண்மையில் அரசருக்கு அவர்கள் பெரிய தீங்கை இழைத்தவர்களேயாயினர். பெக்கெட் உயிருடனிருந்த வரையில், அவரை ஹென்றி சுலபமாக எதிர்த்துவந்தார். ஆனால்அவர் அக்கிரமமாகப் படுகொலை செய்யப்பட்டதும்,ஜனங்கள் அவருடைய தோஷங்களை யெல்லாம் பொருட்படுத்தாமல், ஒரே குரலாக ஹென்

ற்றியைத் தூற்றலாயினர். யார்க் மடத்தின் குருவை அவர் பிரஷ்டம் செய்தது அக்கிரமமென்பதை ஜனங்கள் மறந்து, அவர் மதஸ்தாபனத்தின் உரிமைகளுக்காகப் போராடி உயிர் துறந்த உத்தமர் என்று புகழ்ந்தனர். அவருடைய பக்தியைப் பற்றியும் நற்குணத்தைப் பற்றியும் பல கதைகள் பரவின. அவருடைய சரீரம் மடிந்துபோன பின்னும் பற்பல ஆச்சரியகரமான உற்பாதங்கள் உண்டாயின என்று எல்லோரும் நம்பினர். அவருடைய கல்லறை முக்கியமான புண்யஸ்தலமாயிற்று. தேசம் முழுதிலும் பெக்கெட்டின் நாமமே த்வனித்தது. ஹென்றி கடைசியில் மத குருவிற்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியதாயிற்று. அவர் மதஸ்தாபனத்தின் உரிமைகளையெல்லாம் விட்டுக்கொடுத்ததன்றித் தாமே நேரில் பெக்கெட்டின் ஸமாதிக்கு யாத்திரை சென்று குருபூஜை நடத்தித் தமது குற்றத்திற்குப் பரிகாரமாக இரும்புச் சூட்டுக்கோலினால் தமது முதுகில் சூடுபோட்டுக் கொண்டார். இப்படி அவரது முன்கோபம் அவருக்குப் பெரிய அநர்த்தத்தை விளைவித்துவிட்டது. கடைசியில் மதகுருமார்கள் தங்களது பிரத்தியேக நியாயஸ்தலங்களிலேயே விசாரணை நடத்தப்பெற்றனர். மேலும் பின்னால் வந்த அரசர்கள் அந்த பயங்கரமான சம்பவத்தை ஞாபகத்தில் வைத்து, மதஸ்தாபனத்துடன் விரோதம் கொள்ளாமல் அஞ்சியே நடந்துகொண்டனர். வெகு காலம் வரையில் மதஸ்தாபனம் அந்த இராஜ்ஜியத்தில் தன்னரசாகவே இருந்துவந்தது. பெக்கெட் உயிருடனிருந்த வரையில் சாதிக்கமுடியாத நன்மைகளை இறந்ததனால் சாதித்துவிட்டார்.

(2) **ஹென்றியின் சட்டங்கள்** :—ஸ்டீபனின் காலத்தில் இருந்த குழப்பத்தை அகற்றியபின் ஹென்றி புதிய சட்டங்களை உற்பத்தி செய்வதிலும் ஊக்கங்கொண்டார். முதல் ஹென்றிசெய்த சீர்திருத்தங்களின்படி ஏற்பட்ட அரசாங்க ஸ்தாபனங்கள் திறமையாக வேலைசெய்து வந்தனவானாலும், அவை கிராமங்களிலிருந்த பழைய இங்கிலீஷ் ஸ்தாபனங்களுடன் ஒத்துழைக்காமல் தனியாக இருந்தன. ஆனால், இரண்டாவது ஹென்றி நார்மன் ஸ்தாபனங்களையும் பழைய இங்கிலீஷ் ஸ்தாபனங்களையும் ஒன்று சேர்த்து வைத்தார் அது மாத்திரமல்ல. நார்மன் இனத்தாரும் இங்கிலீஷ்

காரரும் அவரது காலத்தில் ஒன்றுபட்டுப் போயினர். வெகுகாலம் அவர்கள் ஒருவருக்கொருவர் பக்கம் பக்கமாக இருந்து வாழ்ந்து வந்தமையாலும் அவர்களுக்குள் ஏற்பட்ட கலப்பு விவாகங்களின் மூலமாகவும் இரண்டு இனத்தார்களும் தமக்குள்ளிருந்த வேற்றுமை புத்தியை ஒழித்துக் கலந்துகொண்டனர். கடைசியாக இன்னார் நார்மன் இனத்தைச் சேர்ந்தவர், இன்னார் இங்கிலீஷ் இனத்தைச் சேர்ந்தவர் என்று கண்டுபிடிப்பதுகூடக் கடினமாய்விட்டது. ஆனால் உயர் குலத்தைச் சேர்ந்த கனவான்கள் நார்மன்களுக்குரிய ப்ரெஞ்சு பாஷையையே பேசிவந்தனர். மேலும் வில்லியம், ஹென்றி ஆகியவைபோன்ற நார்மன்களின் பெயர்களே பரவிப்போயின. முன்போல எக்பர்ட், எட்வர்ட் என்ற பெயர்கள் அதிகமாகக் காணப்படவில்லை. ஆனால் நார்மன் கனவான்கள் வரவர இங்கிலீஷ் பழக்கவழக்கங்களை அநுசரித்து நடக்கலாயினர்.

ஹென்றி முக்கியமான சில சட்டங்களையும் இயற்றினார். அவைகளுக்கு அஸைஸஸ் (Assizes) என்று பெயர். கி.பி. 1166-ல் அவர் க்ளாரென்டன் என்ற இடத்தில் சில சட்டங்களை வெளியிட்டாரல்லவா. அதன்படி நியாய பரிபாலனம் திருத்தமடைந்தது. அரசருடைய நியாயாதிபதிகள் ஒவ்வொரு ஜில்லாவாகச் சென்று அங்கங்கு இருந்த குற்றவாளிகளை விசாரணைசெய்துதீர்ப்புச் செய்துவர வேண்டுமென்று ஏற்பாடாயிற்று. எல்லாக் குற்றவாளிகளையும் ஓரிடத்திற்கு வரவழைப்பதென்றால் அது ஜனங்களுக்கு நிரம்பவும்பிரயாசையாக இருக்குமாதலால், நியாயாதிபதிகளேசுற்றுப் பிரயாணம் செய்து அந்தந்த இடத்தில் வழக்குகளைத் தீர்த்துவிடுகிறதென்பது சிறந்த வழியாகத் தோன்றியது. ஒரு ஜில்லாவில் உள்ள குற்றவாளிகளெல்லோரையும் சேர்த்துவைத்திருந்து, நியாயாதிபதிகள் முகாம்செய்யும்பொழுது அவர்களுக்குமுன் ஆஜர் செய்கிறது. அவ்விடத்திலேயே விசாரணைகள் முடிவடைகிறது. நியாயாதிபதிகள் ஒவ்வோர் இடத்திற்கும், வரும்பொழுது அந்த இடத்தில் வசிப்பவர்கள் கண்ணியம்வாய்ந்த சிலரைத்தேர்ந்தெடுத்து, அவர்கள் மூலம் குற்றவாளிகளை நியாய விசாரணைக்கு அனுப்புவார்கள். அம்மாதிரி தேர்ந்தெடுக்கப் பட்டவர்களுக்கு ஜூரி (Jury) என்று பெயர். ஆகவே இந்த ஏற்பாட்டில் ஒரு நன்மை ஏற்பட்டது. நியா

யாதிபதிகள் அரசருடைய சட்டங்களை எடுத்துவிளக்குவார்கள். ஜூரிகளோ தங்களுடைய அநுபவத்தினால் உள்ளூர்க் குற்றவாளிகளின் குணுகுணங்களை எடுத்து விளக்கி சரியானபடி நியாயம் வழங்க உதவிசெய்வார்கள். இந்த ஏற்பாடு இன்னமும் இங்கிலண்டில் அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இவ்வாறு முதல் ஹென்றி ஆரம்பித்ததை இரண்டாவது ஹென்றி பூர்த்தி செய்து வைத்தார்.

ஹென்றியினுடைய இன்னொரு முக்கியமான சட்டம் கிராண்ட் அஸைஸ்/2 அல்லது பெரிய சட்டம் (Grand Assize) எனப்படும். அதன்படி மேலே குறிக்கப்பட்ட ஜூரியேற்பாடு கிரிமினல் வழக்குகளுக்கும் அநுமதிக்கப்பட்டது. நார்மன் வெற்றிக்குப் பின் இருவர்களுக்குள் வழக்கு உண்டானால் அதைத் தீர்த்துக்கொள்வதற்கு ஒருவிநோதமான ஏற்பாடு இருந்துவந்தது. அதாவது குற்றவாளிகளிருவரும் ஒருவரோடொருவர் சண்டை செய்யவேண்டும். கடவுள் உண்மையான குற்றவாளிக்கு எவ்விதமாக வேனும் தண்டனை ஏற்படும்படி செய்வார் என்று அக்காலத்தவர் கருதினார்கள். ஆனால், உண்மையில், பலவானுக்கே அந்த ஏற்பாட்டில் வெற்றி கிடைத்து வந்தது. ஆகவே, பலசாலிகள் எவ்விதமான குற்றத்தையும் அஞ்சாது செய்து, போட்டியில் தப்பித்துக் கொண்டனர். ஹென்றி அதை மாற்றி கிரிமினல் வழக்குகளையும் ஜூரிகள் விசாரிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்தார். எளியவர்களும் பலஹீனர்களும் அந்தச் சட்டத்தை மிக ஆவலுடன் வரவேற்றனர்.

கி. பி. 1181-ல் ஹென்றி இராணுவச் சட்டம் (Assize of Arms) ஒன்றையும் உற்பத்திசெய்தார். அதன்மூலம் பழைய இங்கிலீஷ் சேனையின் அமைப்பைத்திருத்தினார். ஒவ்வொரு சுதந்திரப்பிரஜையும் தன் சக்திக்கேற்றவாறு இராணுவ ஆயுதங்கள் தாங்கி இராணுவப் பயிற்சிபெற வேண்டுமெனவும், சமயம் வரும்பொழுது சேனையுடன் சேர்ந்து யுத்தம் புரியத் தயாராயிருக்க வேண்டுமென்றும் உத்தரவிட்டார். அதற்குமுன், அரசர்கள் தங்களுடைய யுத்தங்களுக்கு தேசத்திலுள்ள பிரபுக்களின் பண உதவியையும் ஆட்கள் உதவியையும் நாடவேண்டியிருந்தது. மேலே கூறிய ஏற்பாட்டினால் சாமானிய ஜனங்களும் அரசனுக்கு உதவிபுரியத் தயாராயிருந்தனர். மேலும் ஹென்றி பட்டத்திற்கு வந்ததற்கு முன்பே, தாமாக

நேரில் வந்து போர்புரிய விரும்பாத பண்ணையாட்கள் அதற்கு பதிலாக, அரசாங்கத்தாருக்கு ஸ்க்யூடேஜ் (Scutage) என்ற இராணுவ வரியைச் செலுத்தலாம் என்ற சட்டம் இருந்து வந்தது. அந்த வரியினால் கிடைத்த பணத்தைக் கொண்டு அரசர் பல சிப்பாய்களை வேலையிலமர்த்திக் கொள்வது சுலபமாயிருந்தது. அதனால் அரசருடைய பலமும் அதிகமாயிற்று. அரசர் பிரபுக்களை மாத்திரம் நம்பியிருந்தால், அவர்கள் சமயத்தில் கைவிட்டு விடலாம். ஆனால் அவர்களிடமிருந்து வரியைப் பெற்று அதைக்கொண்டு சிப்பாய்களை அமர்த்திக் கொண்டால் அச் சிப்பாய்கள் அரசருக்கு உதவ எப்பொழுதும் ஆயத்தமாயிருப்பார்கள். அதனால் பிரபுக்கள் அரசரை எதிர்ப்பதும் பிரயாசை ஆய்விட்டது. ஹென்றி சுயேச்சாதிபதியாக ஆண்டுவந்தாரானாலும், அவர் சாமானிய ஜனங்களுடைய அன்பையும் ஆதரவையும் பூர்த்தியாகப் பெற்றிருந்தார்.

கி. பி. 1184-ல் உட்ஸ்டாக் சட்டம் (Assize of Woodstock) என்ற இன்னொரு புதிய சட்டத்தையும் அவர் உற்பத்தி செய்தார். நார்மன் அரசர்களெல்லோரும் வேட்டையாடுவதில் அதிக விருப்பமுடையவர்கள். ஆதலால் தங்களுடைய வேட்டைக்கென்று ஒதுக்கிவைக்கப்பட்ட காடுகளில் வேறு எவராகிலும் புகுந்து குற்றம் புரிந்தால், அவர்களுக்கு நிரம்பவும் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது. காட்டு இலாகா சம்பந்தமான குற்றங்களை விசாரிப்பதற்கென்றே பிரத்தியேகமாக உட்ஸ்டாக் சட்டத்தை அவர் உற்பத்திசெய்தார். இந்த ஏற்பாடு மாத்திரம் பொது ஜனங்களுக்குப் பெரிய கொடுமையாகத் தோன்றியது. ஆனாலும், பொதுவாக, இரண்டாவது ஹென்றி பல சட்டங்களையும் நியாயஸ்தலங்களையும் உற்பத்திசெய்து அரசாங்க முறையை ஒழுங்குப்படுத்தின அரசர்களுள் முக்கியமானவர் என்ற பெருமையை யடைந்தார்.

**(3) இராஜ்ஜியத்தின் விஸ்தீர்ணம்: அன்னிய நாடுகளுடன் சம்பந்தம்:**—முதல் ஹென்றியின் காலத்திலேயே வேல்ஸ், ஸ்காட்லண்ட் ஆகிய இரண்டும் இங்கிலீஷ் மன்னருடைய ஆதிக்கத்திற்குட்பட்டுப் போயினவானாலும், ஸ்டீபனின் காலத்தில் நடந்த உள்நாட்டுச் சண்டைகளாலும், குழப்பத்தாலும் அவைகள் மறுபடி

யும் சுதந்திரமடைந்து விலகிநின்றன. ஆனால் இரண்டாவது ஹென்றி பழைய அதிகாரம் முழுவதையும் மீண்டும் ஸ்தாபித்துக் கொண்டார். அவருடைய ஆட்சி முடிவதற்குள் வெல்ஷ்காரர்கள் கூட கான்டர்பரியின் முக்கிய மதகுருவினுடைய அதிகாரத் திற்குட்பட்டு விட்டனர். அம்மாதிரியே ஹென்றி ஸ்காட்லண்டில் தோன்றிய இரண்டோர் எதிரிகளையும் அடக்கிவிட்டார்.

ஹென்றி தமது முன்னோர்களின் அதிகாரத்தை மீண்டும் ஸ்தாபித்ததுடன் நிற்காமல், அதற்கு மேலும் அதிகப்படுத்தினர். அவர் அயர்லண்டையும் வென்று அங்கும் நார்மன் ஆதிக்கத்திற்கு வழி செய்துவிட்டார். இங்கிலண்டு தேசம் அநாகரிகமாக இருந்த போது அயர்லண்டு தேசம் சிறப்புற்று விளங்கியதானாலும், அதன்பின் அது க்ஷீணித்துப் பழைய பெருமையை இழந்திருந்தது. தேசம் முழுதும் பல சிற்றரசர்கள் நிறைந்து ஒருவரோடொருவர் சண்டையிட்டு தேசத்தின் அமைதியைக் குலைத்து வந்தனர். அயரிஷ்காரர்களுடைய சச்சரவுகளில் நார்மன்கள் பலர் தலையிட்டு நாளடைவில் அங்கு குடியேறத் தலைப்பட்டனர். ஹென்றி அவர்களை முதலில் கவனிக்காமல் விட்டிருந்தார். ஆனால், அவர்கள் அதிக வலுவடைந்தால், அது தமக்கே அபாயமாய் விடுமென்று எண்ணி, அயர்லண்டு தேசத்தின்மீது படையெடுத்துச் சென்று அங்கு வசித்த எல்லா இனத்தாரும் தமக்குக் கீழ்ப்படும்படி செய்து அயர்லண்டிற்கும் அரசரானர். பல இங்கிலீஷ் வியாபாரிகள் அங்கு சென்று தங்கினர். சில அயரிஷ்வீரர்கள் மாத்திரம் மலைப்பிரதேசங்களுக்குச் சென்று சுயேச்சையாக இருந்தனர். ஆகவே அயர்லண்டு முழுதும் ஹென்றியினுடைய பூர்ண ஆதிக்கத்திற்குட்படாமற் போனாலும், அவர் பிரிட்டிஷ் தீவுகளின் அரசர் என்ற பெயரை வகிக்க ஓரளவு யோக்கியதையைப் பெற்றார்.

ஹென்றி பிரிட்டிஷ் தீவுகளை மாத்திரமன்றி பிரான்ஸ் தேசத்தின் மேற்குபாகத்தையும் ஆண்டுவந்தாரென்று முன்னரே குறித்தோம். தமது தாய்மூலமாக இங்கிலண்டு, நார்மண்டி இரண்டையும், தந்தைமூலமாக ஆஞ்ஜௌ முதலிய மாகாணங்களையும், தமது மனைவியான எலீனர் (Eleanor) மூலமாக அக்விடைன்

மாகாணத்தையும் பெற்றிருந்தார். அவ்வளவு பெரிய இராஜ்ஜியத்தை அவர் பெற்றிருந்தது, பலருக்குப் பொறாமையாக இருந்தது. ஹென்றிக்குத் தமது குடும்பத்திலேயே சுகம் கிடையாது. அவருடைய மனைவி அவருடன் சச்சரவிட்டுக் கொண்டு தனது புத்திரர்களையும் அவருக்கு விரோதமாகக் கிளப்பி விட்டாள். ஹென்றிக்கு நான்கு புத்திரர்கள் இருந்தனர். அவர் தமது புத்திரர்களிடம் நிரம்பவும் பிரியமாயிருந்த தன்றி, அவர்களுக்கு இராஜ்ஜிய நிர்வாகத்தைப் பயிற்றுவிக்க விரும்பினார். ஆனால் புத்திரர்களெல்லோரும் தவறான வழிகளில் திரும்பி அவருக்குப் பெருந் துன்பத்தை யுண்டாக்கி வந்தனர். அவரது இரண்டாவது குமாரரான ரிச்சர்ட் (Richard) அக்விடைன் என்ற மாகாணத்தைப் பரிபாலித்து வந்தார். மூன்றாவது குமாரரான ஜ்பாப்ரே (Geoffrey) ப்ரான்ஸ் தேசத்தில் வடமேற்கில் நார்மன்டிக்கு சமீபத்தில் உள்ள பிரிட்டனி (Brittany) மாகாணத்தின் வார்சாக இருந்த ஸ்திரீயை மணந்து அதற்கு அதிபதியானார். நான்காவது குமாரரான ஜான் (John) அயர்லன்ட் தேசத்தின் நிர்வாகத்தை மேல் பார்வை பார்த்து வந்தார்.

ஹென்றியின்மீது பொறாமை கொண்டிருந்த பலர் ஒன்று சேர்ந்து அவருக்குத் துன்ப மிழைத்து வந்தனர். ப்ரான்ஸ் தேசத்தின் அரசரும் மற்ற விரோதிகளும் இங்கிலன்டில் இருந்த பிரபுக்கள் சிலரும் ஒன்று கூடி கி. பி. 1173-ல் ஹென்றியை எதிர்த்துப் பார்த்தார்கள். ஹென்றியின் குமாரர்களே அவருக்கு உதவி புரிய முன் வரவில்லை. ஆனால் ஹென்றி இங்கிலீஷ்காரருடைய உண்மையான விசுவாஸத்தாலும் தமது உத்தியோகஸ்தரின் உதவியாலும் பகைவரை வென்று, முக்கியமாக, பிரபுக்கள் மீண்டும் தலை தூக்காதவண்ணம் அவர்களை அடக்கி விட்டார். நார்மன் பிரபுக்கள் அரசருக்கு விரோதமாகக் கிளம்பியது அதுவே கடைசிமுறை. கி. பி. 1166-ல் ஜெயவீரர் வில்லியம் ஆட்சிபுரிய ஆரம்பித்தது முதல் சுமார் ஒரு நூற்றாண்டுக் கதிகமாகவே நார்மன் பிரபுக்கள் அரசருடைய அதிகாரத்தை எதிர்த்து வந்தனர். ஆனால் முடிவில் அரசரே வெற்றியடைந்தார். பிறகு

பிரபுக்களும் சாதாரணப் பிரஜைகளைப்போல அரசருக்கடங்கி நடக்கவேண்டியதாயிற்று.

ஷ் சச்சரவுகளுக்குப்பின் சிறிதுகாலம் வரையில் ஹென்றி அமைதியாக அரசுபுரிந்தார். தம்மை எதிர்த்த புத்திரர்களை அவர் மன்னித்துவிட்டார். ஐரோப்பாவிற்குள் அவர் ஒரு முக்கியமான அரசர் ஆய்விட்டார். அவர் தமது பெண்களைப் பல அரசகுமாரர்களுக்கு விவாகம் செய்து கொடுத்து அவர்களுடைய சிநேகத்தையும் சம்பாதித்துக் கொண்டார். அதனால் அவருடைய பகைவர்கள் அவரை எதிர்ப்பது சாத்தியமற்ற காரியமாயிற்று.

ஆனால் பெயர்பெற்ற அரசராயிருந்தும், ஹென்றிக்கு குடும்ப வாழ்வில் சந்தோஷமே இல்லாமல் போயிற்று. அவருடைய புத்திரர்களான ரிச்சர்ட், ஜான் ஆகிய இருவரும் மறுபடியும் கலகம் செய்தனர். ஹென்றிக்கு வெறுப்பும் விரக்தியும் உண்டாய்விட்டன. அவர் கடுமையான நோயில் வீழ்ந்து தமது நற்காரியங்கள் யாவும் வீணாக்கப்படுமென்று எண்ணிக்கொண்டே கி. பி. 1189-ல் உயிர் துறந்தார். ஆனால் அவருடைய நற்காரியங்களை அவருக்குப் பின்னால் வந்த அவருடைய சந்ததியார் அசைக்க முடியவில்லை. இங்கிலண்டின் இராஜ்ஜிய பரிபாலனத்திற்கு இரண்டாவது ஹென்றி உறுதியான அஸ்திவாரம் போட்டுவிட்டுச் சென்றதால், அது என்றைக்கும் வன்மையாக நீடித்து நிற்கலாயிற்று.

---

## 13-வது அதிகாரம்

### முதலாவது ரிச்சர்ட்.

(1) **மூன்றாவது சிலுவையுத்தம்** :—இரண்டாவது ஹென்றிக்குப் பிறகு அவருடைய குமாரரான ரிச்சர்ட் கி.பி. 1189-ல் பட்டத்திற்கு வந்தார். தமது தகப்பனுக்கு விரோதமாக அவர் கலகம் செய்தவரானாலும் அவரிடம் பல நற்குணங்கள் இருந்தன. தமது தந்தை பரிதாபகரமாக இறந்ததைக் கேட்டு அவர் நிரம்பவும்

விசனித்து வருந்தினர். அவர் கீர்த்திபெற்ற யுத்தவீரர்; அஞ்சாத நெஞ்சம்படைத்தவர். அதனல் அவருக்கு சிங்க ஹிருதயம் படைத்த ரிச்சர்ட் (Lion Heart) என்ற புகழ்ச்சியான பெயர் கிடைத்தது. அவர்எப்பொழுதும் பகைவர்களுடன் யுத்தம்புரிந்து பெயரும்புகழும் அடைவதிலேயே கண்ணும் கருத்துமா யிருந்தார், உயர்ந்த அழகிய மேனிகொண்டு அவர் யுத்த வீரருக்குரிய இலக்ஷணங்களைப் பெற்றிருந்தார். அவர் நன்ருகப் படித்து அரசியல் நிர்வாகத்தை வகிப்பதற்குரிய திறமையைப் பெற்றிருந்தும், அவருக்கு அரசியலில் விருப்பம் ஏற்படவில்லை. தமது இராஜ்ஜியம் எப்படிப் போனலும் போகட்டுமென்று விட்டு வீரச் செயல்கள் புரிவதிலேயே அவர் தமது மனதைச் செலுத்தினர். ஆகவே அவர் அரசராயிருந்த பத்துவருஷ காலத்தில் இரண்டு முறைகள் மாத்திரம் இங்கிலண்டுக்கு விஜயம் செய்திருந்தார். மிகுதி காலத்தையெல்லாம் அவர் அன்னிய தேசங்களிலேயே கழித்து எல்லோராலும் யுத்த வீரரெனக் கொண்டாடப் பட்டார். ஆனல் அவருடைய வீரச் செயல்களுக்கும் இங்கிலண்டின் சரித்திரத்திற்கும் எவ்வித முக்கிய சம்பந்தமும் இல்லாமல் போயிற்று.

கிரிஸ்துமதப் புண்யஸ்தலங்களை துருக்கியர் வசமிருந்து மீட்பதற்காக ஐரோப்பாவில் பல சிலுவை யுத்தங்கள் நடந்தனவென்று முன்பே கூறினேமல்லவா? முதல் சிலுவை யுத்தம் வில்லியம் ரூபஸ் அரசருடைய காலத்தில் நடந்தது. அதற்குப்பின் மறுபடியும் துருக்கியர்கள் கிரிஸ்தவர்களின் புண்ய ஸ்தலங்களைப் பிடித்துக் கொண்டனர். கி. பி. 1187-ல் ஸாலடின் (Saladin) என்ற சுல்தான் அந்தப் பிரதேசங்களை ஆண்டுவந்தார். அவரை எதிர்த்துப் பல கிரிஸ்தவ மன்னர்கள் படையெடுத்துச் சென்று புண்யஸ்தலங்களை மீட்க முயற்சித்தனர். ரிச்சர்ட் அரசர் அந்த யுத்தத்தில் கலந்துகொள்ள இச்சைகொண்டு, இங்கிலண்டில் முடிசூட்டிக் கொண்டவுடன், தமக்குத் தேவையான பணத்தைத் தேடலானர். அரசாங்க உத்தியோகங்களை ஏலத்திற்கு விற்றும், மற்றும் பல தவருன வழிகளிலும் பணம் சேர்த்துக்கொண்டு புறப்பட்டுச் சென்ருர். கி. பி. 1191-ல் அவர் ப்ரெஞ்சு அரசருடன் சேர்ந்து கொண்டு சில இடங்களில் வெற்றிகள் அடைந்தார். ஆனல் ரிச்சர்

ஸின் பராக்கிரமத்தைக் கண்டு பொறாமைகொண்ட ப்ரெஞ்சு அரசர் சண்டையிலிருந்து திரும்பிவிட்டார். ரிச்சர்ட் தனியாக இருந்து யுத்தத்தை நடத்தமாட்டாதவராய்ப் பகைவருடன் சமாதானம் செய்துகொண்டு கிரிஸ்தவ யாத்திரிகர்களை அவர்கள் உபத்திரவிக்காதிருக்குமாறு ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பினார். அதற்குப் பின் அவர் தமது இராஜ்ஜியத்திற்கு வருகையில் ப்ரெஞ்சு அரசர் தம்மிடம் பகைமை கொண்டிருந்ததுபற்றி அந்த தேசத்தின் வழியாகச்செல்வது அபாயமென்றுணர்ந்து ஜெர்மனி தேசத்தின் வழியாக மாறுவேஷம் பூண்டு பிரயாணம் செய்தார். ஆனால், அவர்மீது நெடுங்காலமாய்ப் பகைமைகொண்டிருந்த ஜெர்மன் சக்கரவர்த்தி அவரைச் சிறைபடுத்தச் செய்து, இலக்ஷம் பவுன் கொடுத்தால்தான் அவரைவிட இயலுமென்று கூறிவிட்டார்; தமது ஆதிக்கத்தை ரிச்சர்ட் ஒப்புக்கொள்ளவேண்டுமென்றும் ஜெர்மன் சக்கரவர்த்தி வற்புறுத்தினார். இங்கிலண்ட் தேசத்தின் பிரஜைகள் ஏற்கெனவே அதிக வரிச்சுமையினால் துன்புற்றிருந்தனராஞலும், அரசருடைய விடுதலைக்குத் தேவையான தொகையை வசூலித்தனுப்பி வைத்தனர். கி. பி. 1194-ல் ரிச்சர்ட் விடுதலைபெற்றுத் திரும்பினார். ஐந்து வருஷகாலம் அவர் தமது இராஜ்ஜியத்திற்கு வராமலேயே வெளியில் இருந்தார்.

(2) **ரிச்சர்ட் ஆட்சியில் துரைத்தன நிர்வாகம்:**—மேற்கூறியவாறு ஐந்து வருஷகாலம் அரசர் வெளியில் இருந்தாலும், இங்கிலண்ட் தேசத்தின் பரிபாலனம் சிறிதும் பிரயாசையில்லாமல் நடைபெற்று வந்தது. அதிலிருந்து, இரண்டாவது ஹென்றியினுடைய சட்டதிட்டங்கள் எவ்வளவு திறமையானவை என்பதை யூகித்துக்கொள்ளலாம். அரசருடைய மந்திரிகளும் உயர்தர உத்தியோகஸ்தர்களும் வழக்கப்படி அரசியல் நிர்வாகத்தை நடந்திவந்தனர். சிற்சில சமயங்களில் மாத்திரம் சிறிதளவு குழப்பம் நேரிட்டது. ஆனால் பொதுவாக ஜனங்கள் அரசாங்கத்திற்கு அடங்கியே நடந்துகொண்டனர். தேசத்தில் அரசனில்லை யென்பதைக் காரணமாக வைத்துக்கொண்டு பிரபுக்களோ சாமானிய ஜனங்களோ அதிகாரத்தை மீறித் துன்பம் விளைவிக்க முற்படவில்லை.

கி.பி. 1194-ல் ரிச்சர்ட் இங்கிலண்டிற்கு வந்தாராஞலும், மறுபடியும் வேருெரு யுத்தத்திற்காகப் பணம் சேகரிக்கத் தொடங்கினர். அவர் ஜெர்மனியில் சிறைப்பட்டிருந்த காலத்தில் ப்ரெஞ்சு தேசத்து அரசர் நார்மண்டி மாகாணத்தின்மீது படையெடுத்திருந்தார். அதுபற்றி அவரைத் தண்டிக்கும் கருத்துடன் ரிச்சர்ட், ஹ்யூபர்ட் வால்டர் (Hubert Walter) என்பவர் வசம் துரைத்தன நிர்வாகத்தை ஒப்புவித்து தேசத்தைவிட்டு வெளிக்கிளம்பி மிகுதியிருந்த தமது ஆயுட்காலம் முழுதையும் போர் நடத்துவதிலேயே செலவிட்டார். அவர் அதற்குப்பின் இங்கிலண்டுக்குத் திரும்பி வரவே இல்லை. ஹ்யூபர்ட் வால்டர் அரசியல் நிர்வாகத்தில் நல்ல பயிற்சி பெற்றவர். அவர் அரசியல் முறையில் சில சீர்திருத்தங்களையும் செய்து, அரசருடைய யுத்தத்திற்கு வேண்டியிருந்த பணத்தையும் தவருமல் அனுப்பிக் கொண்டிருந்தார். ஆனல் அவர் தமது அரசரின் பொருட்டு பிரபுக்களை அதிகமாக வருத்தத் தொடங்கவே, பலர் அவரை எதிர்த்தனர். ஆகவே கி.பி. 1198-க்குப் பின் அவர் உத்தியோகத்திலிருந்து விலகிக்கொண்டார். ரிச்சர்ட் நிரம்பவும் திறமை வாய்ந்தவராஞலும் ப்ரெஞ்சு தேசத்து அரசருடன் போராடி அதிக வெற்றியை யடையவில்லை. ரிச்சர்டின் ஆதிக்கத்திற்குட்பட்ட ஒரு பிரபு தமது நிலத்தில் ஒரு புதையலைக் கண்டுபிடிக்க, அது தமக்கே சேரவேண்டுமென்று ரிச்சர்ட் கூறினர். அந்தப் பிரபு அதற்கிணங்க வில்லையாகையால், அவருடைய கோட்டையை ரிச்சர்ட் முற்றுகை போட்டார். அப்பொழுது ஒருநாள் ஒரு வீரன் ஓர் அம்பை அவர்மீது எய்து அவரை வீழ்த்திஞன். சிலர் அவனைப் பிடித்துவந்து அரசருக்கு முன்னல் நிறுத்த, ரிச்சர்ட் "நீ என்னைக் கொல்லும்படி உனக்கு நான் என்ன தீங்குசெய்தேன் ?" என்று வினவினர்.

"என்னுடைய தகப்பனரும் இரண்டு சகோதரர்களும் உங்களால் கொல்லப்பட்டுப் போனர்கள். அதற்காகவே நான் இப்படிச் செய்தேன். நீங்கள் என்னை எவ்விதமேனும் வதைக்கலாம். உங்களைக் கொன்றுவிட்டபின் நான் சந்தோஷத்துடனேயே உயிர் துறப்பேன்" என்று அவன் மறுமொழி கூறினன்.

ரிச்சர்ட் அவனை விட்டுவிடும்படி ஆக்ஞாபித்து, தம்மைச் சுற்றி யிருந்தவர்களை அழைத்துத் தமது சகோதரரான ஜானை தமக் குப் பின் அரசுபுரிய வேண்டுமென்பதைத் தெரிவித்தார். கி. பி. 1199-ல் எப்ரல் மாதத்தில் அவர் உயிர்நீத்தார்; அவரைக் கொன்ற வீரனை அவரது விருப்பத்திற்கு மாறாக, மற்றவர் ஒன்றுகூடி சித் திரவதை செய்து கொன்று போட்டனர். இங்கிலண்ட் தேசத் திற்கு ரிச்சர்ட் எவ்வித நன்மையையும் செய்யவில்லையானாலும் அவருடைய வீரச்செயல்களைப்பற்றி அவரை எல்லோரும் புகழ்ந்து கொண்டாடினர். ஆனால் அவருடைய ஆட்சி ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தியது. அதாவது, நாட்டின் தலைவனான அரசன் நேரில் இல்லாவிட்டாலும், அசட்டையாக இருந்தாலும், துரைத்தன பரிபாலனம் சோர்வின்றி நடந்துகொண்டே போகும்படி அவ்வ ளவு உறுதியாக இரண்டாவது ஹென்றியினுடைய ஏற்பாடுகள் இருந்தனவென்பது தெளிவாயிற்று. அவ் ஏற்பாடுகளின் திறமை யைப் பரீட்சித்துப் பார்ப்பதற்கு ரிச்சர்டின் ஆட்சியில் சந்தர்ப்பம் ஏற்பட்டது.

---

## 14வது அதிகாரம்.

---

### ஜான்.

(1) **ஜான் மன்னரின் குணம்: நார்மண்டியை இழப்பது:—** ரிச்சர்டுக்குப் பிறகு அரசர் ஆக ஜானுக்கு உரிமையில்லை. ஏனெ னில் இரண்டாவது ஹென்றியின் மூன்றாவது குமாரரான ஜாப்2 ரே என்பவருக்கு ஆர்தர் (Arthur) என்ற ஒரு புத்திரர் இருந்தார், ஜான், ஹென்றியின் நான்காவது புத்திரராதலால், ஆர்தருக்கே பட் டம் உரியது. ஆனால் ஆர்தர் அப்பொழுது சிறு பிராயத்தினராயி ருந்தமையால் அவருக்கு முடி சூட்ட எவரும் விரும்பவில்லை. எனவே, ஜான் அரசரானார். அவர் இங்கிலண்ட் தேச சரித்திரத் தில் குறிக்கப்பட்ட அரசர்கள் எல்லோரிலும் மிகுந்த அப கீர்த்தி பெற்றவர். அவர் இளமையிலேயே தமது தந்தைக்கும்

சகோதாருக்கும் துரோகம் செய்திருந்தார். அவருடைய இளமையில் செய்த காரியங்கள் விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பதை நிரூபிப்பதுபோலிருந்தது. அவருக்கு சாமர்த்தியமும் ஊக்கமும் இல்லாது போகவில்லை. அரசியல் நிர்வாகத் திறமையும் அவரிட மிருந்தது. ஆனுல், சுயநலம் என்ற பெரிய பேயின்வசப் பட்டும் "க்ஷணப்பித்தம் க்ஷணச்சித்தம்" என்ற நோய்க்கு உட்பட்டும் அவர் பெருந்தன்மை யென்பதையே வகிக்காமல் கேவலமாக நடந்து கொள்ளத் தொடங்கினுர். அவருக்கு ஸ்திரமான புத்தியே கிடையாது. நல்லொழுக்கம், பரிசுத்த குணம் முதலியன அவரிடம் சிறிதும் இல்லாமல் போயின; கொடூர புத்தியும், வஞ்சகமும், துரோகமுமே நிறைந்துநின்றன. அவர் தாம் செய்து கொடுத்த வாக்குறுதிகளை மறு நிமிஷமே மீறி நடப்பார்; ஒரு நிர்ணயத்தில் நிற்பதென்பது அவரால் சாத்தியப்படவில்லை. ரூட2ஸ் கண்டிப்பாக நடந்தாராஞலும் திறமையுள்ள அரசராயிருந்தார். ரூட2ஸ் உயர்வான கருத்துடனேயே தமது காரியங்களைச் செய்து வந்தார். ஜானிடம் சமயோசித புத்தியும் தீர்மானமும் எள்ளளவும் இல்லை. அவர் சிம்மாதனமேறியபின் சிறிதுகாலம் வரையில் தமது அன்னையாலும் வேறுநம்பிக்கையுள்ள உத்தியோகஸ்தர்கள் இருவராலும் தாண்டப் பட்டவராய் சிறிது எச்சரிப்பாக இருந்துவந்தார். அவர்களது காலத்திற்குப்பின் ஜானின் ஒவ்வொரு காரியமும் அவருக்குப் பெருத்த அவமானத்தை விளைவித்தது. ஜயவீரர் வில்லியத்தின் காலம் முதற்கொண்டு இங்கிலீஷ் அரசர்களுக்குச் சொந்தமாயிருந்த நார்மண்டி மாகாணத்தை அவர் இழந்தார்; போப்புடன் சச்சரவு செய்து கடைசியில் அவருக்குப் பணிந்துபோனுர்; தமது தேச ஜனங்களை விரோதித்துக்கொண்டுமுடிவில் அவர்களுக்கும் அடங்கிப்போனுர். அவருடைய ஆட்சியில் மேற்கூறிய மூன்று சம்பவங்கள்தான் முக்கியமானவை; அவைகளால் ஜான் நிரம்பவும் அவமானத்திற்கு ஆளானுர். ஜயவீரர் வில்லியத்தின் காலம் முதற்கொண்டு இங்கிலீஷ் மன்னர்கள் இருவித அதிகாரங்களை வகித்து வந்தார்களென்று முன்பே கூறினேம். அதாவது, இங்கிலண்டின் அரசர் என்ற ஹோதாவில் அவர்கள் சர்வ சுதந்திரமும் பெற்றிருந்தனராஞலும், நார்மண்டி முதலிய மாகாணங்களின் அதிபதி என்ற ஹோதாவில் ட்2ரெஞ்சு மன்ன

ருடைய அதிகாரத்திற்குஉட்பட்டிருந்தார்கள். மேலும் இரண்டாவது ஹென்றியின் காலத்தில் ப்2ரான்ஸ் தேசத்தின் அரைப்பாகம் அவருக்குச் சேர்ந்துவிட்டது. தமக்குட்பட்ட அதிபதி அவ்வளவு பெரிய இராஜ்ஜியத்தைப் பரிபாலிப்பது தமக்கு அபாயமென்று கருதி ப்2ரெஞ்சு அரசர்கள் எப்பொழுதும் இங்கிலீஷ் அரசரை இடுக்கண் படுத்தவே முயன்று வந்தனர். ஜானின் அண்ணன் மகனுன ஆர்தருக்கு சிம்மாதனம் கிடைக்காமற் போனதும், ப்2ரெஞ்சு அரசான இரண்டாவது பி2லிப் (Philip II) ஆர்தருடைய கட்சியை ஆதரித்து ஜானுக்கு விரோதமாக நடந்துவந்தார். ஆனுல் அவருடைய முக்கியமான எண்ணம் ஆர்தருக்குப் பட்டம் கிடைக்கவேண்டுமென்பதல்ல; தமது முக்கியவிரோதியான இங்கிலீஷ் அரசர் யாராயிருந்தாலும், அவரை வருத்த வேண்டுமென்பதே பி2லிப்பினுடைய குறி. ஆனுல் அவருடைய துரோக சிந்தனையைக் கண்டுகொண்ட ஆர்தருக்கும் அவரிடம் நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது; ஜான் பட்டத்திற்கு வந்தது நியாயமான தென்று பி2லிப் கி. பி. 1200-ல் ஒப்புக்கொண்டு அதை அங்கீகரித்து விட்டார். ஆனுல் ஜான் தமது மடமையினுல் மறுபட்டியும் ப்2ரெஞ்சு அரசாது பகைமையைத்தேடிக்கொண்டார். இன்னொருமுறை அவ்விருவருக்கும் யுத்தம் மூண்டது. கி. பி. 1203-ல் ஆர்தர் சிறைப்படுத்தப்பட்டு ஜானுடைய தூண்டுதலின்மேல் கொல்லப்பட்டார். அவருக்கு அப்பொழுது பதினைந்து வயது. ஆர்தரைக் கொல்வித்ததன் பலனை ஜான் சீக்கிரம் அநுபவிக்கத் தொடங்கினுர்; கி. பி. 1204-ல் பி2லிப் நார்மண்டியின்மீது படையெடுத்துச் சென்றுர். அங்கிருந்தவர்களுக்கு ஜான் உடனே உதவி செய்யாமையால், அவர்கள் ப்2ரெஞ்சு மன்னருக்குப் பணிந்துபோயினர். கி. பி. 1206-க்குள் பாய்டூ, ஆ/2ஞ்ஜௌ என்ற மாகாணங்களும் அவரது வசப்பட்டுப் போயின. ஆறேழு வருஷங்களுக்குப்பின், அவைகளை மீண்டும் ஜயிப்பதற்கு ஜான் முயற்சி செய்து பார்த்தார். ஆனுல், அவருடைய உறுதியின்மையினுல் வெற்றி ஏற்படாமல் போய்விட்டது. நார்மண்டியும் அதற்கு சமீபமாகத் தெற்கேயுள்ள பாகங்களும் இங்கிலண்டின் ஆதிக்கத்திலிருந்து விலகிப் போய்விட்டன.

தமது முன்னோர்கள் சம்பாதித்து வைத்திருந்த இராஜ்ஜியத்தில் முக்கியமான ஒரு பகுதியை இழந்ததைக் காட்டிலும் ஜானுக்கு வேறு அதிகமான அவமானம் நேர்ந்திராதென்றே கூறவேண்டும். தாமாகப் புதிய தேசங்களை வென்று சேர்க்காமற் போனாலும் பாரம்பரையாக இருந்துவந்த இராஜ்ஜியத்தையாவது இழக்காமல் காப்பாற்றுவது அவசியமான காரியம். அந்த விஷயத்தில் ஜான் ஏமாறிப் போனார். உண்மையில் ஜான் யுத்தப்பயிற்சி யுடையவரேயானாலும், அது ஆபத்திற்கு உதவாமல் போயிற்று. அவருடைய ஒழுங்கீனமும், சுறுசுறுப்பின்மையுமே அவருக்கு முக்கிய விரோதிகளாய் முடிந்தன. நார்மண்டியை இழந்ததனால் ஏற்பட்ட அவமானம் அவரால் சகிக்க இயலாததாயிருந்தது. ஆனால், உண்மையில், அது நாளடைவில் இங்கிலண்டிற்கும், ப்2ரான்ஸுக்கும் பெரிய நன்மையாகவே முடிந்தது. ப்2ரான்ஸ் தேசம் நார்மண்டியைப் பெற்றபின் பலதுறைகளில் அபிவிருத்தியடைந்து ஐரோப்பாவில் பிரபலமான ஒரு வல்லரசாக உயர்ந்தது. இங்கிலண்டுக்கும் அதனால் முக்கியமான ஒரு நன்மை ஏற்பட்டது. அதுவரையில், நார்மன் பிரபுக்கள் பலருக்கு இரண்டு தேசங்களிலும் நிலங்களும் சொத்துரிமைகளும் இருந்துவந்தன. ஆதலால் அவர்கள் தம்மை ப்2ரெஞ்சுக்காரர்களாகக் கருதுவதா, இங்கிலீஷ்காரர்களாகக் கருதுவதா என்று சந்தேகப்பட்டுக் கொண்டே இருந்தனர். நார்மன்களும் இங்கிலீஷ்காரரும் பரஸ்பரம் விவாகம் செய்து கொண்டமையாலும், ஒன்றுகூடி ஓரிடத்தில் இருந்தமையாலும் தமக்குள்ளிருந்த வேற்றுமைகளை மறந்து, ஒரே இனத்தார்போல ஒழுகிவந்தாலும், அப்பொழுதும்கூடப் பலர் தம்மை உயர்ந்தவர்கள் என்றும் இங்கிலீஷ்காரர்கள் நாட்டை இழந்த தாழ்மையான இனத்தார் என்றும் எண்ண இடமிருந்து வந்தது. ஜான் காலத்தில் நார்மன் பிரபுக்கள் ஒன்று இங்கிலண்டில் நிரந்தரமாக வசித்து, நார்மண்டியிலுள்ள நிலங்களை இழந்து முற்றிலும் இங்கிலீஷ்காரராகவே நடந்துகொள்ள வேண்டியிருந்தது ; அல்லது, இங்கிலண்டின் தொடர்பைவிட்டு நார்மண்டியில் வசித்து ப்2ரெஞ்சுக்காரராக மாறவேண்டியிருந்தது. அதனால் நார்மண்டி பிரெஞ்சுக்காரருக்குப் போய்விட்டதனால், இங்கிலண்டின் தேசீய உணர்ச்சியும் ஒற்றுமையும் உறுதியாய்

பலப்பட்டுப் போயின. ஆனால் அக்காலத்திலிருந்தவர்களுக்கு அவ்வித நன்மை ஏற்பட்டதென்பது தெரிய நியாயமில்லையாதலால், அவர்கள் ஜானின் மூடத்தனத்தைப்பற்றி அவரை நிரம்பவும் இழிவு படுத்தினார்கள். ஜானுக்கு லாக்லன்ட் (Lackland) அதாவது தேசத்தைப் பறிகொடுத்தவர் என்ற ஏளனப்பெயர் ஏற்பட்டது.

(2) போப்புடன் சச்சரவு:—நார்மண்டியை இழந்தபின் ஜானுக்கு வேறொரு துன்பம் நேரிட்டது. கி.பி. 1205-ல் காண்டர்பரியின் முக்கியமதகுரு காலமடைய, வேறொருவரை அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. முக்கிய மதகுருவைத் தேர்ந்தெடுக்கும் உரிமை சட்டப்படி காண்டர்பரியிலுள்ள சில மதகுருமார்களையே சேர்ந்ததானாலும், பொதுவாக அரசரும் அதில் தலையிட்டுக்கொள்வது வழக்கம். ஏனென்றால், முக்கியமதகுருவின் பதவி இராஜ்ஜியம் முழுதையும் பாதிக்கக்கூடியதாதலால், சாதாரணமாக, அரசருக்கு வேண்டியவராயிருப்பவரையே மதகுருமார்களும் தேர்ந்தெடுப்பது வழக்கமாக இருந்து வந்தது. அந்தத் தேர்தல் சுலபமாக நிறைவேறுவது வழக்கம். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட முக்கிய மதகுரு முடிவாக போப்பின் அங்கீகாரத்தையும் சில சின்னங்களையும் பெறுவதும் வழக்கம். ஆனால் ஜானுடைய துரதிருஷ்டத்தினால் அவர் எடுத்த காரியமெல்லாம் அபாயமாகவே முடிந்தது. கி. பி. 1205-ல் மதகுருமார்கள் தமது நலத்தை மாத்திரம் கருதி ரேஜிநால்ட் (Reginald) என்ற சாமானிய யோக்கியதையுடைய ஒருவரை அந்தப் பெரிய பதவிக்குத் தேர்ந்தெடுத்தனர். அவர்கள் அரசருக்குத் தெரியாமல் அதைச் செய்து, ரெஜிநால்டை போப்பினிடம் அனுப்பி வைத்தனர். ஆனால் ரெஜிநால்ட் தாம் கனவிலும் எதிர்பார்க்காத அந்த உத்தியோகத்தைப் பெற்றவுடன், அதை இரகசியமாக வைத்துக்கொள்ளாமல் எல்லோரிடம் கூறிக்கொள்ளவே, அந்தச் செய்தி அரசருக்கு எட்டியது. உடனே ஜான் தமக்கு வேண்டியவராயிருந்த டிரே (Grey) என்பவரை முக்கிய மதகுருவாக நியமித்தார். ரெஜிநால்ட், டிரே ஆகிய இருவரும் போப்பினுடைய அங்கீகாரத்தை எதிர்பார்த்தவராயிருந்தனர். அப்பொழுது, உரோமில் மூன்றாவது

இன்னஸேன்ட் (Innocent III) என்பவர் போப் பதவியை வகித்திருந்தார். அவர் அதிக சாமர்த்தியமும் உத்தம குணங்களும் மதாபிமானமும் உடையவர். அவர் மதஸ்தாபனங்களில் உத்தியோகம் வகிப்பவர்கள் அஷ் ஸ்தானங்களுக்குத் தகுந்த உண்மையான யோக்கியதையுடையவர்களாக இருக்க வேண்டுமென்று எண்ணினவராதலால், அரசராலும் மதகுருமார்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட இருவரும் இங்கிலண்டின் முக்கிய மதகுருவாக இருக்கத் தகுதியற்றவர்கள் என்பதை எளிதில் தெரிந்துகொண்டு, உண்மையிலேயே திறமைபெற்றிருந்த ஸ்டீபன் லாங்டன் (Stephen Langton) என்பவரை அந்தப் பதவிக்கு நியமித்தார். அவ்வாறு மதகுருமார்களையும் அரசரையும் போப் அவமதித்தாராகுலும், மதகுருமார்கள் அவருக்குக் கீழ்ப்படிந்து போயினர். ஜானே அதைப் பொருமல் மன வருத்தமடைந்தார்.

ரெஜினால்ட், கிரே ஆகிய இருவரையும்விட போப்பினால் நியமிக்கப்பட்ட லாங்டன் என்பவர் அதிகத் தகுதியும் சிறப்பும் வாய்ந்தவர் என்பதில் ஐயமேயில்லை. ஆனால் அம்மாதிரி போப்பின் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு இங்கிலண்டின் முக்கிய மதகுருவை நியமிப்பதென்பது எந்த அரசருக்கும் கோபத்தை யுண்டுபண்ணுவது இயற்கையே. நாம் ஏற்கனவே அரசாங்கத்தாரும் மதஸ்தாபனத்தாரும் தம்தம் உரிமைக்காகப் போராடி வந்ததை கவனித்தோம். ஆன்ஸெல்ம், பெக்கட் முதலியவர்கள் தம்தம் அரசருடன் சச்சரவிட்டதையும் கண்டோம். அன்னிய தேசத்தினரான போப்பின் அதிகாரத்தைக் கூடியவரையில் குறைக்க வேண்டுமென்று இங்கிலீஷ் அரசர்கள் எப்பொழுதும் முயன்று கொண்டே இருந்தனர். ஆகவே, இங்கிலண்டின் அரசர் மேற்கூறியபடி போப் செய்ததை எதிர்த்தது நியாயமான காரியமென்றே கூறவேண்டும். தமக்கு விருப்பமானவர் ஒருவரை போப் முக்கிய மதகுருவாக நியமித்து, அவர் மூலம் தமது அதிகாரத்தை அதிகப்படுத்த எண்ணினால், அதை இங்கிலீஷ் அரசர் அவசியம் தடுத்தே தீரவேண்டும். ஆனால், மேற்கூறிய அரசியல் சம்பந்தமான காரணங்களால் தூண்டப்பட்டு, அரசாங்கத்தின் கௌரவத்தைக் காக்கும்பொருட்டு ஜான்

போப்பை எதிர்த்திருந்தால் அவரை எல்லோரும் கொண்டாடி யிருப்பார்கள். அவருடைய எண்ணம் முழுதும் வேருயிருந்தது. தமக்கு அடங்கிய ஒருவரே அந்தப் பதவியைப் பெற்ருல், மதஸ்தாபனச் சொத்துக்களைத் தாம் அநுபவிக்க அது உதவியாயிருக்கும் என்ற கெட்ட கருத்தே ஜானின் மனதில் நிறைந்திருந்தது. எவ்விதமேனும், அவர் தமது பிடியை விடாமல் கடைசி வரையில் சச்சரவிட்டிருந்தாலாகிலும், அவர் எதிர்பார்க்காத நன்மை இங்கிலண்டுக்கு உண்டாயிருக்கும். அதுவும் இல்லை. கோழைத்தனம் மிகுந்தவரான ஜான் கடைசியில் அதை நழுவ விட்டுவிட்டார்.

ஜான், போப் ஆகிய இருவரும் ஒருவரது நியமனத்தை மற்றவர் அங்கீகரிக்காமல் இருந்தமையால், முக்கிய மதகுருவின் ஸ்தானம் சிறிது காலம் காலியாயிருக்க நேர்ந்தது. உடனே போப் இன்னஸென்ட் தமது ஆயுதங்களை வீசலானுர். அவர் கி. பி. 1208-ல் இங்கிலண்டு தேசத்தை மதஸ்தாபன ஆதிக்கத்தினின்று நீக்கி, அதை இன்டர்டிக்ட் (Interdict) என்று கூறப்படும் ஒரு விசேஷ தண்டனைக் குட்படுத்தினுர். அதாவது போப் யாவருக்கும் மேலான கிரிஸ்தவ மதகுருவானதால், அவர் தமது விசேஷ அதிகாரத்தினுல் இங்கிலண்டு தேசத்தில் உள்ள மாதாகோவில்களை மூடும்படி உத்தரவிட்டு விடுவார்; தொழுகை முதலிய சடங்குகள் எதுவும் நடைபெரு; இறந்தவர்களது சவங்கள் உத்தரகிரியைகளின்றி மாதா கோவில்களுக்கு வெளியிலேயே புதைக்கப்படும். கலியாணங்களிலும் குருமார்கள் சம்பந்தப்பட மாட்டார்கள். அவ்வாறு இன்டர்டிக்ட் தண்டனைக் குட்பட்ட தேசம் கடவுளுடைய கோபத்திற்கு இலக்காயிருப்பதாகக் கருதப்படும். அதிலும் அக்காலத்து ஜனங்கள் மத உணர்ச்சியும் மூட நம்பிக்கைகளும் நிறைந்திருந்தவர்களாதலால், அந்த தண்டனையை அவர்கள் பொறுத்திருக்கவே மாட்டார்கள். அவ்வாறு கடவுளுடைய அருள் ஒரு தேசத்திற்கே இல்லாமல் போகும்படி செய்துவிட போப்புக்கு அதிகாரமிருப்பதாக அவர்கள் நம்பியிருந்தார்கள். ஆகவே, அந்த தண்டனையை விதித்தால் இங்கிலண்டு தமக்குக் கீழ்ப்படிந்து வரும் என்று போப் இன்னஸென்ட் எண்ணினுர். ஆனுல் ஜான் சிறிதும் மத உணர்ச்சியோ கடவுளிடம் பயபக்தியோ இல்லாதவர்; வில்லியம் ரூபஸ் அரசரைப்

போலவே அவரும் அந்த விஷயத்தில் யோசனையின்றி நடந்து கொண்டார். மதச்சடங்குகள் நின்றுபோனது அவருக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. போப்பினுடைய சாபத்தினால் பரலோகத்தில் தண்டனை கிடைக்குமே என்று மற்றவர் எண்ணினாலும் அவர் அதைப்பற்றி சிந்தனையே செய்யவில்லை. அவர் போப்பினுடைய அதிகாரத்தை மீறி, அவருடைய உத்தரவை அலட்சியம் செய்து, முன்போலவே மதச் சடங்குகளை நடத்தும்படி சிலரை வற்புறுத்தினார். போப்புக்கு அடங்கி நடந்த சிலரை நாட்டை விட்டோட்டினார். ஒரு வருஷமாகியும், ஜான் பணியாததைக் கண்டு, போப் வேறோர் ஆயுதத்தைத் தொடுத்தார். அதாவது, ஜான் மதப்பிரஷ்டம் செய்யப்பட்டவர் என்று போப் விளம்பரப்படுத்தினார். மதப்பிரஷ்டம் (Excommunication) செய்யப்பட்டவர் எந்த மாதாகோவிலிலும் பூஜை முதலிய சடங்குகளில் கலந்துகொள்ள முடியாது. அந்த உத்தரவைக் கண்டும் ஜான் பயப்படவில்லை. கடைசியாக போப் இன்னொரு காரியம் செய்தார். அக்காலத்தில் போப்பை கடவுளின் பிரதிநிதியென்று எல்லோரும் நம்பியிருந்தமையால், அவருக்கு விரோதமாயிருந்த அரசர்கள் இராஜ்ஜிய பரிபாலனம் செய்ய அருகமற்றவர்கள் என்று தீர்மானிக்கும் அதிகாரம் போப்புக்கு இருந்தது. கி. பி. 1212-ல் போப் ஜானை அரசிலிருந்து நீக்கிவிடுவதாக பயமுறுத்தி ப்ரெஞ்சு மன்னரைக் கூப்பிட்டுத் தமது உத்தரவை நிறைவேற்றும்படி கட்டளையிட்டார். ப்ரெஞ்சு மன்னர் ஜானுக்கு விரோதியாகையால், அவர் மிகுந்த சந்தோஷத்துடன் இங்கிலண்டின்மீது படையெடுத்துவர ஆயத்தமானார்.

அதைக் கேட்ட ஜான் நடுநடுங்கிப் போய், போப்பினால் நியமிக்கப்பட்ட லாங்டனை முக்கிய மதகுருவாக ஏற்றுக்கொள்வதாக உடனே ஒப்புக் கொண்டார். அவருடைய வீரமும், மன உறுதியும் அவ்வளவோடு முடிவடைந்தன. ஆனால் அந்த நிபந்தனைக்கு ஜான் உட்பட்டதைக் கண்ட போப் அதோடு திருப்தியடையாமல், வேறு பல நிபந்தனைகளையும் ஏற்படுத்தலானார். ஜான் அவற்றையெல்லாம் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. கி. பி. 1213-ல் போப்பினுடைய அதிகாரத்தைப் பெற்ற பான்டல்ப் (Pandulf)

என்பவர் இங்கிலண்டு தேசத்திற்கு வந்து போப்பின் ஆக்ஞையை நிறைவேற்றினர். ஜான் முக்கிய மதகுருவின் பதவிக்கு லாங்டனை நியமித்ததுடன் தேசப்பிரஷ்டம் செய்தவரைத்திருப்பியழைத்து, கடைசியாகத் தமது கிரீடத்தையும் போப்பினுடைய பிரதிநிதியின் வசம் ஒப்புவித்தார். இரண்டுநாள் கழித்து, போப்பிற்கு அடங்கி நடந்துகொள்வதாக வாக்களித்தபிறகு கிரீடத்தைத் திருப்பிப் பெற்றுக்கொண்டார். போப்புக்கு வருஷந்தோறும் கப்பம் கட்டுவதாகவும் ஜான் ஒப்புக்கொண்டார். அவர் இவ்விதம் போப்புக்கு உட்பட்ட ஒரு பெரிய பண்ணையாள் போலவே, தமது இராஜ்ஜியத்தை வகிக்க வேண்டியதாயிற்று. அதைக் காட்டிலும் அரசருக்கு வேறு அவமானம் என்ன வேண்டும்? ஏற்கனவே போப்பினுடைய அதிகாரத்தைக் கண்டு அரசர்கள் சந்தேகங்கொண்டிருந்தனர். ஆனல் ஜான் அடியோடு போப்புக்கு அடங்கிப் போனர். அவருடைய முன்னேர்களான இரண்டாவது ஹென்றி முதலியவர்கள் எவ்வளவோ பாடுபட்டு மதஸ்தாபனத்தின் ஆதிக்கம் அளவுக்கு மீறிவிடாதபடி பார்த்துக் கொண்டிருந்தனர். ஜானுக்கு அந்த விவேகம் இல்லாமல் போய்விட்டது. அவர் போப்பினுடைய தயவைப் பெற்று ப்ரெஞ்சு மன்னரின் படையெழுச்சியைத் தடுத்துக் கொண்டதைப்பற்றி ரொம்பவும் திருப்தியடைந்தார். அதனல் தேசத்திற்கு நேரிட்ட அவமானத்தை அவர் சிந்திக்கவே இல்லை.

(3) மகாசாஸனம்:—போப்புடன் செய்த சச்சரவு முடிந்தபின் ஜானுக்கு இன்னெரு பெரிய இடுக்கண் நேரிட்டது. அவருடைய குடிமக்களே அவருக்கு விரோதமாகக் கிளம்பத் தலைப்பட்டனர். ஜானின் ஆட்சி ஜனங்களுக்கு முற்றிலும் வெறுப்பை யுண்டாக்கியது. அந்த விஷயத்தில் பிரபுக்களும் சாதாரண ஜனங்களோடு சேர்ந்து கொண்டனர். அதுவரையில் நார்மன் அரசர்கள் தம்முடைய அதிகாரத்தைச் செலுத்தும் பொருட்டு, பிரபுக்களுடன் சேர்ந்துகொண்டு சாதாரணக் குடிமக்களையும், குடிமக்களுடன் சேர்ந்துகொண்டு பிரபுக்களையும் அடக்கியாண்டு வந்தனர். ஆனல் முன்னரே கூறியபடி, நார்மண்டியை இழந்தபின் பிரபுக்களும் தேசிய உணர்ச்சி பெற்று, பொது மக்களுடன் சேர்ந்து

கொண்டனர். ஜானினுடைய வெட்கக்கேடான ஆட்சி அவர்களை அதிக சீக்கிரமாக ஒன்று சேர்த்துவிட்டது. முன்போல அவர்கள் தமது சுயநலத்தை மாத்திரம் கருதி அரசனை எதிர்க்காமல், நியாயமான அரசாட்சி நடக்கும்பொருட்டுப் போராடலாயினர். ஜான் அடிக்கடி தமது யுத்தங்களின் பொருட்டு பிரபுக்களினிடமிருந்து பண உதவியையும் ஆட்களையும் வேண்டிக்கொண்டே இருந்ததாலும், அதிக வரியை வசூலித்து வந்ததாலும், எல்லோரும் அவருக்கு விரோதமாகக் கிளம்பித் தமது உரிமையைப் பெறுவது அத்தியாவசியமாயிற்று. ஜான் அயல் தேசம் சென்றிருந்தபொழுது பிரபுக்கள் ஒரு மகாநாடு கூட்டினர்; புதிதாக வந்த முக்கிய மதகுரு லாங்டனும் மற்றவர்களுடன் சேர்ந்துகொண்டு முதல் ஹென்றி தமது பிரஜைகளுக்கு அளித்திருந்த உரிமைப் பத்திரம்போல இன்னொரு பத்திரத்தை ஜானிடமிருந்து பெறும்படி ஆலோசனை கூறினர். ஆனால் ஜான் சுலபத்தில் தமது குடிமக்களின் வேண்டுகோளுக்கிணங்கி நியாயமான ஆட்சி நடத்துவதாக வாக்குறுதி யளிக்கவில்லை. பிரபுக்கள் அரசரை எதிர்த்து சண்டையிடவும் ஆயத்தமாயிருந்தார்கள். ஜானுக்கு சொற்பமானவர்களே உதவி புரிந்தனர். கடைசியில் பொது ஜனங்களால் தயாரிக்கப்பட்ட உரிமைப் பத்திரத்தை அரசர் அங்கீகரிக்க வேண்டியதாயிற்று. கி. பி. 1215-ல் ரன்னிமீட் (Runnymede) என்ற இடத்தில் அவர் சிறிதும் மனமின்றி பிரபுக்கள் கொண்டுவந்த பத்திரத்தில் கையெழுத்துச் செய்தார்.

அந்தப் பத்திரம் இங்கிலண்ட் சரித்திரத்தில் மகா முக்கியமானது; ஆதலால் அதற்கு மாக்னு கார்ட்டா (Magna Carta) அல்லது **மகா சாஸனம்** என்று பெயர். அது இங்கிலீஷ்காரருடைய மூலாதாரமான பிரஜா உரிமைகளைத் தெளிவாக விளக்கியிருக்கும் பத்திரமாதலால், இன்னமும் இங்கிலீஷ்காரர்கள் தமது சுதந்திரத்திற்கு அதையே அஸ்திவாரமாக எண்ணிப் பெருமை பாராட்டிக் கூறிவருகிறார்கள். ஜானின் காலம் வரையில் அரசர்கள் சுயேச்சாதிபதிகளாய் அரசாண்டு வந்திருந்தனர். ஆனால் ஜான் காலம் முதல் அரசர் ஜனங்களுடைய சம்மதப்படி நியாயமாக அரசியற்ற வேண்டுமென்பது கட்டாயமாயிற்று. ஏற்கனவே முதல்

ஹென்றி தமது பிரஜைகளுக்கு அம்மாதிரி ஓர் அறிக்கையை வெளியிட்டிருந்தாலும், அதை அவர் தாமாகவே வெளியிட்டிருந் தார். ஆனால் மேலேகுறிக்கப்பட்ட மகா சாஸனம் ஜனங்களால் அரச ரிடமிருந்து பலவந்தமாக கிரகிக்கப்பட்டது. மகா சாஸனத்தில் பல நியதிகள் இருந்தன; அவைகளெல்லாம் அரசியல் நியாயமாக நடப்பதற்கேற்ற வழிகளைக்காட்டின. மதஸ்தாபனத்திற்கு சுதந்திரம் அளிக்கப்பட்டது. அரசன் அக்கிரமமான வரிகளை விதிக்கக்கூடா தென்றும், பிரபுக்கள் அதே மாதிரி தமது பண்ணையாட்களைக் கடுமையாக நடத்தக் கூடாதென்றும் அதில் குறிக்கப்பட் டிருந்தது. வியாபாரிகள் எவ்வித இடையூறுமின்றி வியாபாரம் செய்யலாம் என்றும், புதிய வரிகளை விதிக்க வேண்டுமானால், பிரபுக்கள் சபை யின் சம்மதியைப் பெற்றே அரசர் அவைகளை விதிக்க வேண்டு மென்றும் அதில் வற்புறுத்தப்பட் டிருந்தது. அதாவது, தற்காலத் தில் அரசாங்கத்தார் ஜனப் பிரதிநிதிகளைக் கலந்துகொண்டு அவர்க ளுடைய விருப்பத்தை அநுசரித்தே இராஜ்ஜிய நிர்வாகம் நடத்தும் முறை அந்த மகா சாஸனத்திலேயே சிறிதளவு காணப்பட்டது. நீதி எல்லா மனிதருக்கும் சமமாக வழங்கப்பட வேண்டும். நீதி யென்பது ஒருவனுக்கு உண்டு, இன்னொருவனுக்கு இல்லையென் பது கூடாது. அக்கிரமமாக எவரையும் சிறையி லடைக்கக் கூடாது. அன்னிய நாட்டுக் கூலிக்கார சிப்பாய்களை உதவியாக வைத்துக் கொண்டு அரசர் தமது தேசத்தாரை எதிர்க்கக் கூடாது—என்று பலவிதங்களில் அரசருக்கு நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டன. அர சர் மகா சாஸனத்தின் நியதிகளை மீறாமல் கவனித்துக் கொள்ளும் பொருட்டு, இருபத்தைந்து பிரபுக்கள் நியமிக்கப்பட்டனர். அரச ருடைய சுயேச்சாதிபத்தியத்திற்குப் பல தடைகளும் வரம்புகளும் ஏற்பட்டுப் போயின. ஆனால் மகா சாஸனத்தின்மூலம் இங்கிலீஷ் காரர்கள் பல புதிய உரிமைகளைப் பெற்றுவிட்டதாக எண்ணக் கூடாது. வெகு காலமாக, அநாதரவு செய்யப்பட்டிருந்த பழைய உரிமைகளை அவர்கள் மீண்டும் எழுத்து மூலமாக ஸ்தாபித்துக் கொண்டனர். அதில் காணப்பட்ட ஒழுங்குகள் யாவும் ஏற்கனவே இங்கிலண்டு தேசச் சட்டத்திலேயே அநுஷ்டானத்தில் இருந்து வந்தவைகளே. ஆனால் ஜான் காலத்திற்குப் பின் ஜனங்கள் அந்த

உரிமைகளை வற்புறுத்தத் தொடங்கினார்கள். அதுவன்றி மகா சாஸனம் எழுத்துமூலமாக அந்த உரிமைகளைத் தெளிவுபடுத்தி விட்டமையால், பிற்காலத்தில் ஜனங்கள் அரசருடன் சச்சரவிடுவதற்கு அது ஒரு முக்கிய ஆதாரமாயிருந்தது.

வேறு வழியின்றித் தமது பிரஜைகளுக்கு அடங்கிப்போன ஜான் அரசர் தமது பிரதிக்ஞையை நிறைவேற்றி,மகா சாஸனத்தின்படி நடந்துகொள்ள வேண்டுமென்று கனவிலும் எண்ணவில்லை. அவர் சீக்கிரத்தில் அதை மீறி நடக்கத் தொடங்கினார். முதன் முதலாக, போப்பை அவர் தூண்டிவிட்டு மகா சாஸனத்தை அக்கிரமமான தஸ்தாவேஜியென்று கண்டித்து அதைத் தள்ளுபடி செய்துவிடும்படி ஏற்பாடு செய்தார். பிறகு அன்னிய தேசத்து சிப்பாய்களைக் கூட்டிவந்து பிரபுக்களுடன் யுத்தம் புரியலானார். பிரபுக்கள் சிறிதுகாலம் அவரை எதிர்த்துப் பார்த்து வெற்றியடைய முடியாமல் தாங்களும் பிறரது உதவியை நாடி ப்ரான்ஸ்தேசத்து இளவரசரான லூயி (Louis) என்பவரை உதவிக்கழைத்தனர். இவ்வாறு இங்கிலண்டின் அரசரும் பிரஜைகளும் பிறருதவியைக் கொண்டு பரஸ்பரம் சண்டையிடலாயினர். பலர் லூயியின் கட்சியில் சேர்ந்துகொண்டனர். லூயி எவ்விடத்திலும் வெற்றியடைந்து வந்தார். ஜான் அங்குமிங்கும் ஓடித் தடுமாறினார். ஆனால் திடீரென்று கி. பி. 1216-ல் கடுமையான நோய்கொண்டு மாணமடைந்தார். அவருடைய மரணத்திற்காக எவரும் விசனப்படவில்லை; இங்கிலீஷ் அரசர்களுள் ஜானைப்போல அவ்வளவு கேவலமாக நடந்து கொண்டவர்கள் எவரும் இருந்ததில்லை. அவரது மரணம் பலருக்கு ஆறுதலை யளித்தது. அவர் கால் வைத்த இடமெல்லாம் துன்பமும் அவமானமுமே உண்டாயின; அவை யாவற்றிற்கும் அவருடைய செய்கைகளே காரணமாயிருந்தன. அவருடைய காலத்தில் நார்மன் அரசருடைய சுயேச்சாதிபத்தியம் முடிவடைந்துவிட்டது. இங்கிலண்டு தேசமும் குழப்பத்திலிருந்து விலகி ஒருவாறு அமைதியுற்றது.

## நார்மன் அரசரின் வம்சாவளி.

(1066 — 1216)



## 15-வது அதிகாரம்

---

### மூன்ருவது ஹென்றி.

(1) ஹென்றியின் இளமை:—ஜான் இறந்தபொழுது அவரது மூத்த குமாரரான ஹென்றிக்கு ஒன்பது வயதேயானலும் அவர் மூன்ருவது ஹென்றியென்ற பெயருடன் முடிசூட்டப் பெற்ருர். அவருடைய இளமைப் பருவத்தில் இராஜ்ய பரிபாலனத்தை சில சாமர்த்தியமுள்ள பிரபுக்கள் நிர்வகித்து வந்தனர். அவர்களுக்குள் வில்லியம் மார்ஷல் (William Marshall) என்ற பெயர்கொண்ட பேம்ப்ரோக் (Pembroke) என்னும் பிரதேசத்தின் பிரபு முக்கியமானவர். ஷெ பெம்ப்ரோக் பிரபு வயோதிகராஞலும் அறிவு முதிர்ச்சியும் சாமர்த்தியமும் உடையவர். அவர் சிறுவராயிருந்த அரசருக்குப் பிரதிநிதியாக இருந்து இராஜ்ய நிர்வாகத்தை நடத்தும்படி நியமிக்கப்பட்டார். பெம்ப்ரோக் பிரபுவும் அவருடன் சேர்ந்து வேலை செய்த மற்றவரும் தேசத்தில் மீண்டும் அமைதியை நிலைநாட்டினர். ஜான் இறக்கும்பொழுது, பிரபுக்கள் தமது உரிமைகளுக்காகப் போராடி, மகா சாஸனத்தின் ஒழுங்குகளை அரசர் பின்பற்றி நடக்குமாறு வற்புறுத்த யுத்தம் புரிந்தனரல்லவா? ஆனல் பெம்ப்ரோக் பிரபு அந்தக் கலகத்தை ஒழிக்கும் பொருட்டு ஒரு சிறந்த யோசனை செய்து, மகா சாஸனத்தின் நியதிகளை புதிய அரசர் பின்பற்றியே நடப்பார் என்ற ஓர் அறிக்கையை வெளியிட்டார். அதனல் பிரபுக்கள் அதன்பிறகு அரசரை எதிர்க்கவேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. ஜான் செய்த குற்றங்களுக்காக அவருடைய இளம் குமாரரை தண்டிக்க பிரபுக்கள் விரும்பவில்லை. ஆகவே அவர்களிற் பலர் ப்ரெஞ்சு தேசத்து இளவரசரான லூயியினுடைய உதவி இனித் தேவையில்லையென்றெண்ணி அவருடைய கட்சியை விட்டு விலகிக்கொண்டனர். ஏதோ அவசர காரியநிமித்தம் அவர்கள் அன்னிய தேசத்தாரின் உதவியை நாடினலும், அந்த அவசியம் தீர்ந்தவுடனே தமது மன்ன

ரது கட்சியிலேயே சேர்ந்துகொண்டனர். ஆகவே லூயி எடுத்த முயற்சி பயன்படவில்லை; பெம்ப்ரோக் பிரபு கி. பி. 1217-ல் லூயியைத் தோற்கடித்து அவர் சமாதானத்திற்கு இணங்கும்படி செய்தார். லாம்பெத் (Lam beth) என்ற இடத்தில் நடந்த உடன்படிக்கைப்படி லூயி இங்கிலண்டை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. பிரபுக்களுக்கும் அரசருக்கும் இருந்த விரோதம் மறைய வழி ஏற்பட்டது. ஜானினுடைய மௌடீகத்தினால் விளைந்த கேட்டை பெம்ப்ரோக் பிரபு தமது சாமர்த்தியத்தினால் அகற்றி வைத்தார். அவர் கி. பி. 1219-ல் மரணமடைந்தார்.

அதன் பிறகு முக்கிய மதகுருவான லாங்டன் அரசாங்க விஷயங்களை மேல்பார்வை பார்த்து வந்தார். அவருக்கு உதவியாக ஹ்யூபர்ட் டி பர்க் (Hubert de Burgh) என்ற உத்தியோகஸ்தர் உழைத்து வந்தார். ஹ்யூபர்ட் இரண்டாவது ஹென்றியின் காலத்தில் இருந்த நிலைமையை மீண்டும் ஸ்தாபிக்க முற்பட்டார். ஜானின் ஆட்சியில் பல பிரபுக்கள் தங்களுடைய இச்சைப்படி நடந்து, பல கோட்டைகளைக் கட்டியிருந்தனர். அவைகளை ஹ்யூபர்ட் இடித்துத் தகர்த்து, பிரபுக்களையும் சட்டத்திற்குட்பட்டு நடக்கும்படி செய்தார். மேலும் ஜானுக்கு மிகவும் பிரியமாயிருந்த பல அன்னிய தேசத்தினரையும் அவர் அடக்கிவிட்டார். அவர்களுள் முக்கியமான பீடர் டி ரோஷஸ் (Peter de roches) என்பவர் ஹ்யூபர்ட்டினுடைய ஆதிக்கத்திற்குட்பட மனமற்றவராய் தேசத்தை விட்டுப் போய்விட்டார். கி. பி. 1227-ல் ஹென்றி தாமே இராஜ்ய பரிபாலனம் செய்யலாம் என்று போப் தெரியப்படுத்தினார். முக்கியமத குருவாக இருந்து தேசத்திற்கு நன்மை செய்து வந்த லாங்டன் அடுத்த வருஷம் காலமானார். கி. பி. 1232 வரையில் ஹ்யூபர்ட்டே துரைத்தன நிர்வாகத்தை நடத்திவந்தார். அவருடைய உறுதியான நிர்வாகம் பலருக்கு அருவருப்பை உண்டு பண்ணியது. ஹென்றிக்கும் அவரிடம் மரியாதை குறையத் தொடங்கியது. அப்பொழுது வெளிதேசம் சென்றிருந்த பீடர் டி ரோஷஸ் என்பவர் திரும்பி வந்து அரசருடைய தயவைப் பெற்று ஹ்யூபர்ட்டை வேலையிலிருந்து நீக்கும்படி செய்தார். ஹ்யூபர்ட் விலகியதும், அரசாட்சி மறுபடி சீர்குலையவாரம்பித்தது.

பீடர் தமது உறவினருக்கே பல உத்தியோகங்களைக் கொடுத்து, இங்கிலீஷ்காரருடைய விரோதத்தை சம்பாதித்துக் கொண்டார். அவருடைய துர்நடத்தைகள் அரசருக்குத் தெரிந்ததும், பீடர் தேசத்தைவிட்டுத் துரத்தப்பட்டார். கி. பி. 1234-ல் ஹென்றி தாமே நேராக அரசாட்சி புரிய ஆரம்பித்தார். அவருடைய இளமைப் பருவத்தில் சில முக்கியமான பிரபுக்கள் அரசருடைய பெயரால் நிர்வாகம் நடத்தி வந்தனர். மகாசாஸனத்தின் நியதிகளும் யாவராலும் அங்கீகரிக்கப் பட்டன. அரசர் சிறுவராயிருந்தாலும், அவருடைய உதவியின்றி இராஜ்ஜிய பரிபாலனம் பழுதின்றி நடக்கக் கூடியபடி அவ்வளவு உறுதியாக இங்கிலண்டின் அரசாங்கம் அமைந்துவிட்டது.

(2) ஹென்றியின் ஆட்சி: போப்பின் ஆதிக்கம்:—கி. பி. 1234-ல் ஹென்றி அரசியலை யேற்று அதன்பிறகு எவருக்கும் உட்பட்டிராமல் தமது மனப்போக்கின்படியே காரியங்களை நடத்திக் கொண்டுபோகத் தீர்மானித்தார். ஆனால் ஹென்றி அந்தத் தீர்மானத்தின்படி காரியத்தை நடத்திச் செல்லப் போதிய திறமையையும் உறுதியையும் பெற்றவரல்லர். அவர் நற்குணங்கள் நிறைந்த உத்தமமான அரசர் என்பதில் சந்தேகமில்லை; நல்ல படிப்பாளி, பயபக்தியுடையவர்; மதவுணர்ச்சியுடையவர். அழகிய கட்டிடங்களையும் நல்ல புஸ்தகங்களையும் காண்பதில் அவருக்கு சந்தோஷம் அதிகம். அவர் இங்கிலண்டிலேயே பிறந்து வளர்ந்தவராதலால் நார்மன் வாசனையின்றி,இங்கிலீஷ்காரராகவே ஒழுகிவந்தார். பழைய இங்கிலீஷ் மதகுருமார்களையும் அவர் போற்றித் தமது புத்திரர்களுக்கு இங்கிலீஷ் நாமதேயங்களையே சூட்டிவந்தார். ஆனால் அரசாட்சித் திறமை மாத்திரம் அவருக்கு அவ்வளவாக இல்லாமலிருந்தது. அவர் தமது தேசத்துப் பிரபுக்களையும் நம்பாமல், தாமாகவும் காரியங்களை நடத்தாமல், அவர் அன்னிய தேசத்து மனிதரை நம்பி அதிகாரம் முழுதையும் அவர்களிடம் ஒப்பு வித்தார். கி. பி.1234 முதல் 1258 வரையில் அவர் அன்னிய தேசத்தினரது உதவியைக்கொண்டு அரசியல் நடத்த முயற்சித்தார்.அன்னிய தேசத்தினர் பலர் அவரால் முக்கிய உத்தியோகங்களில் நியமிக்கப்பட்டனர். ஹென்றியின் மனைவியான எலினர் என்பவளுடன் அவளுடைய உறவினர் பலர்

இங்கிலன்டுக்கு வந்து குடியேறலாயினர். அவர்களில் ஸைமன்டி மான்ட்பாேர்ட் (Simon de Montfort) என்பவர் முக்கியமானவர்; அவரை ஹென்றி லீஸ்டர் (Leicester) என்ற பிரதேசத்தின் பிரபுவாகச் செய்து, தமது சகோதரியையும் அவருக்கு விவாகம்செய்து கொடுத்து, மற்றும் பலவகைகளில் அவரிடம் ஆதரவு காட்டிவந்தார். அன்னிய தேசத்தாரின் ஆதிக்கத்துடன் போப்பினுடைய உபத்திரவமும் சேர்ந்துகொண்டன. ஜான் போப்புக்கு அடங்கிப்போனது போப் பதவியைப் பெறும் ஒவ்வொருவரும் இங்கிலன்டு தேசத்து வியவகாரங்களில் அதிகமாகத் தலையிடலானார்கள். தமக்கு இஷ்டமான மனிதரையே போப் இங்கிலன்டின் மதகுருமார்களாக நியமித்து, அவர்கள்மூலம் பலவிதமான வரிகளையும் வசூலிக்க ஆரம்பித்தார். இற்றாலி, ப்ரான்ஸ் முதலிய தேசத்து மதகுருமார்கள் இங்கிலன்டு முழுதிலும் நிறைந்துவிட்டனர். அவர்கள் தங்களுடைய வேலையைச் சரிவரச் செய்யாமல், மதஸ்தாபனச் சொத்துரிமைகளை மாத்திரம் அநுபவித்து வந்தனர்; ஜனங்களோ அரசருடைய வரிச் சுமையையும் போப்பினுடைய கொடுமையையும் தாங்கமாட்டாமல் தடுமாற்றமடையத் தொடங்கினர். முக்கிய உத்தியோகங்களெல்லாம் அன்னிய தேசத்தினரின் வசமே இருந்தமையால், ஜனங்களின் குறைகளைத் தீர்க்கும் வகை புலப்படாமலேயே இருந்தது.

தமது தந்தையின் காலத்தில் இழக்கப்பட்ட ப்ரெஞ்சு பிரதேசங்களை மீண்டும் பெறுவதற்கு ஹென்றி முயற்சிக்கலானார்; ஆனால் அவருடைய முயற்சி பலன் தரவில்லை. அவருடைய ஆட்சியில் வரிச்சுமையும் கொடுமையும் அதிகமாயிருந்தும், அரசாட்சி உறுதியாக நடந்துவரவில்லை. அதைக் கண்ட வெல்ஷ் தலைவர்களிற் பலர் தமது சுதந்திரத்தை எளிதில் ஸ்தாபித்துக்கொண்டு சுயேச்சையாய் நடக்கலானார்கள். அவர்களில் லெவ்லின் (Llewelyn) என்பவர் முக்கியமானவர். மேலும் இங்கிலீஷ் அரசருக்கு ப்ரான்ஸ் தேசத்தில் சொந்தமாயிருந்த பிரதேசங்களில் ஹென்றிக்கு காஸ்கனி (Gascany) என்ற மாகாணம் மாத்திரம் சொந்தமாயிருந்தது. அந்த மாகாணத்தின் பிரஜைகள்கூடத் தங்கள் தலைவருக்குக் கீழ்ப்படியாமல் சுயேச்சையாய் நடந்துகொண்டனர். அவர்களை அடக்கும்பொருட்டு ஹென்றி தமது சகோதரியின் புருஷரான ஸை

மன் டி மான்ட்ட்போர்ட்டை அங்கு அனுப்பினார். ஸைமன்டி மாண்ட் போர்ட் நிரம்பவும் ஊக்கமாக வேலைசெய்து ஹாஸ்கனியில் கலகம் செய்த பிரஜைகளைக் கடுமையாக தண்டித்தார். அவருடைய கொடு மையைப் பொறாத ஜனங்கள் ஹென்றியிடம் முறையிட, அவர் ஸைமனைத் திருப்பியழைத்துக் கொண்டார். அதனால் கோபமடைந்த ஸைமன் அரசருக்கு விரோதமாகக் கிளம்பி விட்டார்.

(3) **ஸைமன் டி மான்ட்போர்ட்; உள்நாட்டுக் கலகம்; அரசியல் முன்னேற்றம்:**—ஹென்றியினுடைய அதிருப்திகரமான ஆட்சியைக்கண்ட ஜனங்களும் பிரபுக்களும் அவரை எதிர்க்கும் சமயம் வாய்க்காமையால் பொறுமையாக இருந்துவந்தனர். மேலும் அக் காலத்தில் இங்கிலண்டில் பொதுவாக எல்லாத் துறைகளிலும் அபி விருத்தி ஏற்பட்டுக்கொண்டிருந்தது. தேசீய உணர்ச்சியும், வியா பாரப் பெருக்கும், அறிவு முதிர்ச்சியும், தீவிரமான உணர்ச்சியும் ஜனங்களுடைய மனதைக் கவர்ந்துகொண் டிருந்தன; அதனால், ஹென்றியின் அதிருப்திகரமான ஆட்சி இன்னும் அதிகமாய் விகாரப்பட்டுத் தோன்றியது. கடைசியாக ஸைமன் டி மான்ட்போர்ட் பிரபுக்களுக்குத் தலைமை வகித்து அரசியல் முன்னேற்றத்திற்காகப் போராட ஆயத்தப்படுத்தினார். அதற்கு ஏற்றபடி ஒரு சந்தர்ப்ப மும் வந்து வாய்த்தது.

கி. பி. 1258ல் ஒரு யுத்தத்தின் பொருட்டு பணம் தேவையா யிருந்தபொழுது ஹென்றி பிரபுக்கள் சபையாருடன் கலந்து யோசிக்காமல் வரிவிதிக்க இயலாததுபற்றி அந்தச் சபையைக் கூட்டி னார். அந்தச் சபை அப்பொழுது பார்லிமேன்ட் (Parliament) அல் லது பொதுஜனசபை என்று பெயர் பெற்றிருந்தது. அந்தச் சபை யினர் அதிகப் பணம் கொடுக்க மறுத்ததுமன்றி அரசியல் முறையை அடியோடு திருத்தியமைக்க வேண்டுமென்றும் வற்புறுத்தி அரசர் அதற்கு இணங்குமாறு செய்தனர். சில நாட்கள் கழிந்தபின், வெல்ஷ்காரருடன் யுத்தம் தொடங்க வேண்டியிருந்தமையால், மறு படியும் அரசர் அந்தச் சபையைக் கூட்டினார். அப்பொழுது பிரபுக் கள் யுத்தத்திற்குத் தயாராக ஆயுதங்களுடனும் ஆட்களுடனும் ஆக்ஸ்போர்ட் (oxford) என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தனர்.

அரசருடைய கட்சியைச் சேர்ந்த சிலர் அந்தச் சபையை பைத்தியக் காரப் பார்லிமேன்ட் (Mad Parliament) என்று கூறி ஏளனம் செய்தனர். ஆனால் அந்தச்சபையினர் நல்லறிவுடன் நடந்து கொண்டு தம்முள் சிலரை நியமித்து ஓர் அறிக்கையைத் தயாரிக்கச் செய்து அதற்கு அரசருடைய அங்கீகாரத்தைப் பெற்றனர். அது வழக்க மாக 'ஆக்ஸ்போர்ட் ஏற்பாடுகள்' (Provision of oxford) என்று குறிக்கப்படும். அதன்படி பதினைந்து பிரபுக்களடங்கிய ஒரு சிறு சபை நியமிக்கப்பட்டது. அந்த சபையின் ஆலோசனைப்படியே ஹென்றி அரசாள வேண்டுமென்று திட்டம் செய்யப்பட்டது. அன்னிய தேசத்தினரெல்லோரையும் உத்தியோகத்திலிருந்து நீக்கி விட்டு அந்தப் பதவிகளை யெல்லாம் சுதேச உத்தியோகஸ்தர்களுக்கு அளித்தனர். பதினைந்து நபர்களடங்கிய சிறுசபை அரசாங்க நிர்வா கத்தைப் பொறுப்பாக வகித்துக் குடிமக்களின் க்ஷேமத்தில் கவன முடையவர்களாய் இருக்கவேண்டுமென்று தீர்மானமாயிற்று. மேற் கூறிய ஏற்பாட்டினால் அரசருடைய சுயேச்சாதி பத்தியத்திற்கு இன்னும் அதிகமான வரம்பு ஏற்பட்டது. மகாசாஸனத்தில் நிர்ண யப்படுத்தியிருந்த விஷயங்களே மீண்டும் நன்றாக வற்புறுத்தப் பட் டன. அரசரே சகலமான அதிகாரத்தையும் பெற்றிருந்தாலும், அவர் தமது இச்சைப்படியின்றி, ஜனங்களுடைய சம்மதியைப் பெற்றே அரசாள வேண்டும் என்று இக்காலத்தில் அநுஷ்டிக்கப்படும் கொள் கை அப்பொழுதிருந்தே நன்றாக நிலைத்துப்போயிற்று. சுமார் ஒரு நூற்றாண்டுக்குமுன் ஒவ்வொரு பிரபுவும் ஒரு தனி அரசராய் இருக்கவேண்டுமென்று ஆசைகொண்டிருந்ததுபோக, இப்பொழுது எல்லோரும் தேசியப் பொதுநலத்தையே நாடினின்றனர். இங்கி லீஷ்காரர்கள் 12, 13, வது நூற்றாண்டுகளிலேயே இவ்வாறு அரசருடன் போராடி அவருடைய சுயேச்சாதிபத்தியத்தை ஒழித்து, சிறுகச் சிறுக ஜனப்பிரதிநிதிகளின் ஆட்சியை ஸ்தாபித்துக் கொண்டதனால்தான் அவர்களுக்கு அரசியல் துறையில் முதன்மை யான ஸ்தானம் கிடைத்திருக்கிறது. ஹென்றி யரசரும் அவரு டைய மூத்தகுமாரரான எட்வர்ட் இளவரசரும் ஆக்ஸ்போர்ட் ஏற்பாடுகளை அநுசரித்து நடந்து கொள்வதாக வாக்குறுதி செய்து

கொடுத்தனர். பதினைந்து நபர்களடங்கிய சபையினர் அரசியலை மேல்பார்வை பார்த்து வரத் தொடங்கினர்.

ஆனால் அரசியல் துறையில் மாறுதல் ஏற்படுவது அவ்வளவு எளிதான காரியமாகுமா? ஹென்றியின் துராட்சியைத் திருத்தி ஒழுங்குப்படுத்த முற்பட்ட பதினைந்து நபர்களடங்கிய சபை கொஞ்சம் கொஞ்சமாக அரசரைவிட சுயநலங்கருதியும் குறுகிய நோக்குடனும் நடந்துகொள்ளத் தொடங்கவே, அவர்கள்மீதும் ஏராளமான புகார்கள் வந்து குவியலாயின. அவர்களெல்லோரிலும் அரசருக்கு எதிரியாய்த் திரும்பியிருந்த லீஸ்டர் பிரபுவான ஸைமன் டி மான்ட்பா2ர்ட் விசால நோக்கத்தைக் கொண்டவரா யிருந்தார். ஆனால் அவரும் மற்றபிரபுக்களும் ஒத்துழைப்பது கூடாததாயிற்று. ஸைமன் இங்கிலீஷ்காரரல்ல வாதலாலும் அவர் உண்மையிலேயே திறமை மிகுந்தவராயிருந்தாலும் சில சமயங்களில் அதிக கர்வத்துடன் நடந்து கொண்டமையாலும் பலர் அவர்மீது அருவருப்புக் கொண்டனர். ஆதலால் பிரபுக்களில் பலர் அவருடைய தலைமையிலிருந்து நீங்கி வேறாக ஒரு கட்சியை ஸ்தாபித்துக் கொண்டனர். இம்மாதிரி பிரபுக்களுக்குள் பிளவு ஏற்பட்டது ஹென்றிக்கு அநுகூலமாயிற்று; ஆனால் ஹென்றி அதிக முன் யோசனையுடன் காரியம் செய்யும் திறனற்றவராகையால், அவருடைய ஸ்தானத்தில் அவருடைய மூத்தகுமாரர் எட்வர்ட் மிகவும் தந்திரமாக நடந்துகொண்டு மான்ட்பா2ர்ட் கட்சியை எதிர்க்கலானார். அவ்விருவரும் ஒருவரையொருவர் கடுமையாக எதிர்க்க அந்தக் குழப்பத்தைத் தமக்கு அநுகூலமாகக்கொண்டு ஹென்றி உடனே பழைய வழிகளில் திரும்பி சுயேச்சாதிபத்தியம் செலுத்தத் தொடங்கினார். ஆக்ஸ்போ2ர்ட் ஏற்பாடுகளையும் உடனே விலக்கி விட்டார். உடனே பிரபுக்கள் மறுபடியும் அரசரை எதிர்க்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்பொழுது நடந்த சண்டைக்கு 'பா2ரன்ஸ் வார் (Barons' war) அல்லது பிரபுக்களின் சண்டை' என்று பெயர் வழங்கும். ஆனால் ஒரு கட்சியாவது பூர்த்தியான வெற்றியடைய முடியாமல் போனமையால் அந்த சச்சரவைத் தீர்ப்பதற்கு வேறொருவருடைய உதவியை நாடவேண்டுமென்று தீர்மானமாயிற்று. கி. பி. 1263-ல் ஹென்றியும் பிரபுக்களும் ப்2ரெஞ்சு அரசரை நாடித் தமது சச்ச

ரவைத் தீர்த்துவைக்கும்படி அவரை வேண்டினார்கள். அப்பொழு திருந்த ப்ரெஞ்சு அரசர் நிரம்பவும் நியாயமான புத்தியுடைய வரேயானாலும், அவர் தம்மைப்போன்ற ஓர் அரசரான ஹென்றிக்கு சாதகமாகவே தீர்ப்புச்செய்தார். அந்தத் தீர்ப்பு மைஸ் ஆப் ஏமிய ன்ஸ் (Mise of Amiens) அல்லது ஏமியன்ஸ் ஒப்பந்தம் என்ற தஸ் தாவேஜியில் எழுதப்பட்டிருந்தது. ஆனால் இங்கிலீஷ் பிரபுக்கள் அந் தத் தீர்ப்பை அங்கீகரிக்காமல் மான்ட்பார்ட்டின் தலைமையின் கீழிருந்து யுத்தத்தை நடத்தத் தயாராயிருந்தனர். அவர்கள் யுத்தம் புரிவதிலும் மிக சாமர்த்தியமாக நடந்துகொண்டார்கள். ல்யூஸ் (Lewes) என்ற இடத்தில் கி. பி. 1264-ல் நடந்த சண்டையில் அரசரும் இளவரசரும் தோற்றுப்போய்க் கைதியானார்கள். மான்ட் பார்ட் பிரபுவினிடமே உண்மையான அதிகாரம் இருந்துவந்தது. ஆனால் மான்ட்பார்ட் முன்னாலோசனை யுடையவராதலால், தமது முயற்சியில் வெற்றியடைய வேண்டுமானால், ஜனங்களையும் தமது பக்கம் சேர்த்துக்கொண்டு அவர்களுடைய நம்பிக்கையைப் பெற வேண்டுமென்பதைத் தெரிந்துகொண்டார்; அவர் 1265-ல் பார்லி மெண்ட் மகாசபையொன்றைக் கூட்டினார். ஆனால் பிரபுக்களை மாத் திரம் அக்கூட்டத்திற்கு அழைத்ததுடன்நின்றுவிடாமல் ஒவ்வொரு ஜில்லாவிலிருந்தும், முக்கிய நகரங்களிலிருந்தும் இரண்டிரண்டு பிர திநிதிகள் வீதம் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு ஏற்பாடு செய்தார். ஆகவே பிரபுக்கள் மாத்திரமன்றி சாமானிய ஜனங்களும் அரசியல் நிர்வாகத்தில் சம்பந்தமுடையவர்கள்என்ற ஜனநாயகக்கொள்கையை மான்ட்பார்ட் காரியத்தில் நடத்திக் காட்டினார். அதனால் இங்கி லண்டு தேச சரித்திரத்தில் கி. பி. 1265-ல் கூடிய பார்லிமெண்ட் சபை மகா முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இப்பொழுது இங்கி லண்டில் பார்லிமெண்ட் சபை இரண்டு பிரிவுகளாகப் பிரிந்திருக் கிறது. ஒன்று லார்ட் சபை (பிரபுக்களின் சபை) இன்னொன்று காமன்ஸ் சபை (சாமானிய ஜனங்களின் சபை). முதல் சபையில் பிரபுக்களும் உயர்குலத்தைச் சேர்ந்த கனவான்களும் வீற்றிருப்பார் கள்; காமன்ஸ் சபையில் சாதாரண ஜனங்களின் பிரதிநிதிகள் வீற் றிருப்பார்கள். ஸைமன் டி மான்ட்பார்ட் "காமன்ஸ் சபையைப் பிறப்பித்த தந்தை" என்று சாதாரணமாய்க் குறிக்கப்படுவது

வழக்கமானாலும் சாமானிய ஜனங்களின் பிரதிநிதிகள் அரசியலில் கலந்துகொள்ளும் வழக்கத்தை முதன் முதலாக அவர் ஸ்தாபிக்கவில்லை. அவரது காலத்திற்கு முன்னரே அம்மாதிரியான வழக்கம் இருந்துவந்தது. ஆனால் மான்ட்பார்ட் பிரபு அவ்வழக்கத்தை நன்ருக ஊர்ஜிதப்படுத்தினராதலால், அவருக்கு அந்த கௌரதை கிடைத்தது. மேலும் அதுவரையில் புதிய வரிகளை விதிப்பதற்கும் இன்னும் சில சாதாரண விஷயங்களின் பொருட்டுமே அரசன் ஜனப்பிரதிநிதிகளைக் கலந்து கொள்வது வழக்கம்; மான்ட்பார்ட் பிரபுவோ அரசியல் நிர்வாகத்திற்கு மூலாதாரமான விஷயங்களைத் தீர்மானிக்கும்பொருட்டு ஜனப்பிரதிநிதிகளைக் கூட்டினர். மகாசாஸனத்தின்படி அரசருடைய அதிகாரத்திற்கு வரம்பு ஏற்பட்டிருந்தாலும், அரசர் அந்த வரம்பை மீறி நடவாமல் கவனித்துக் கொள்ளும் வேலையில் பிரபுக்களுடன் சாமானிய ஜனங்களையும் சேர்த்துவைத்த கௌரவம் மான்ட்பார்ட் பிரபுவுக்கே உரியது. அவரது காலத்திற்குப் பிறகுதான் படிப்படியாக பொதுஜனப் பிரதிநிதிகளின் அதிகாரம் விருத்தியடையலாயிற்று.

ஆனால் மான்ட்பார்ட் பிரபுவால் நெடுங்காலம் தலைமை வகித்திருக்கமுடியவில்லை. அவருடைய கர்வத்தையும் அதிகாரதோரணையையும் கண்டு பொருத பலர் அவருக்கு விரோதமாகக் கிளம்பினர். வெல்ஷ்காரர்கள் அவருக்கு அடிக்கடி துன்பமிழைத்து வந்தனர். அதுவன்றி, அதுவரையில் சிறையிலிருந்த எட்வர்ட் இளவரசர் சாமர்த்தியமாகத் தப்பி ஓடி, தமக்கு சாதகமாக ஒரு சேனையை எளிதில் சேர்த்துக்கொண்டு மான்ட்பார்ட் பிரபுவை ஈவ்ஷாம் (Evesham) என்ற இடத்தில் கி. பி. 1265-ம் ஆகஸ்ட்மாதம் எதிர்த்தார். அங்கு நடந்த யுத்தத்தில் எட்வர்ட் பூர்ணமானவெற்றியடைந்தார்; மான்ட்பார்ட் பிரபு யுத்தகளத்திலேயே உயிர் துறந்தார். அவரை இங்கிலீஷ்காரர்கள் வெகுகாலம் வரையில் மறக்காமல் புகழ்ந்துவந்தனர். அன்னிய தேசத்தவராயிருந்தும் அவர் இங்கிலண்டின் விவகாரங்களில் முழுமனதுடன் நுழைந்து கொடுத்து நியாயமான ஆட்சியை ஸ்தாபிக்கும்பொருட்டு உயிரையும் கொடுத்த உத்தமர் ஆதலால், அவருடைய சரீரம் அழிந்தாலும், அவர் செய்த வேலை மறையாமலேயே இருந்தது. அவரைத் தோற்கடித்த எட்

வர்ட் இளவரசரே அவர் செய்து அறைகுறையாய் விட்டு வைத்துப்போன வேலையைப் பின்னால் பூர்த்திசெய்தார். நல்ல காரியத்தின்பொருட்டு உயிரைத் துறந்தவர்களுடைய நோக்கம் எவ்விதமாகிலும் நிறைவேறுவது நிச்சயம்.

ஈவ்ஷாமும் யுத்தம் முடிந்ததும் ஹென்றி மீண்டும் சிம்மாதனமேறி கி. பி. 1272 வரையில் அமைதியாக ஆண்டு வந்தார். ஆனால் அவருடைய குமாரர் எட்வர்ட் எல்லாக் காரியங்களையும் மேல் பார்வை பார்த்து, மான்ட் பார்ட் பிரபுவின் போக்கைப் பின்பற்றியே நடந்து வந்தமையால் ஜனங்கள் திருப்தியடைந் திருந்தனர். இங்கிலன்ட் தேசத்தில் அமைதியை நிலை நாட்டியபின் எட்வர்ட் அன்னிய தேசங்களுக்குச் சென்று அப்பொழுது நடந்து கொண்டிருந்த சிலுவை யுத்தத்தில் கலந்து கொண்டார். ஆனால் அவர் திரும்பி வருவதற்குள் கி. பி. 1272ல் ஹென்றி மரணமடைந்து விட்டார். ஹென்றி அதிக மதவுணர்ச்சியுள்ளவராதலால், எட்வர்ட் கன்பெஸர் கட்டியிருந்த ஒரு மாதா கோவிலைப் புதுப்பித்ததன்றி அவரது சவமும் அதிலேயே அடக்கம் செய்யப் பட்டது. ஹென்றியின் ஆட்சியில் ஒரு முக்கியமான மாறுதல் ஏற்பட்டதை நாம் கவனிக்க வேண்டும். அதாவது நார்மன் அரசர்களுடைய சுயேச்சாதிபத்தியம் அடக்கப் பட்டதன்றி, ஜன பிரதிநிதிகளினது ஆலோசனைக்கு ஓரளவு கட்டுப்பட்டு நடக்கும் அரசியல் முறை அப்பொழுது முதலே தோன்ற ஆரம்பித்தது. அதற்குக் காரண புருஷராயிருந்தவர் மான்ட்பார்ட் பிரபுவே; ஆனால் அவரை எட்வர்ட் மன்னர் கொன்று வீழ்த்தினாலும், அவர் செய்த அரிய வேலையை மன்னரே போற்றி அது சம்பூர்ணமடையும்படி செய்தார்.

---

# 17-வது அதிகாரம்.

---

## முதல் எட்வர்டு.

(1) எட்வர்டின் அரசியல் திறமை: வேல்ஸ் மாகாணத்தை ஜயித்தல்:—முதல் எட்வர்டு அரசரது குணங்கள், அவரது தந்தையின் குணங்களுக்கு முற்றிலும் மாருக இருந்தன. அரசராவதற்கு முன்னரே அவர் இராஜ்ஜிய நிர்வாகத்தில் கலந்து கொண்டிருந்தவராதலால், அவருடைய பழைய அநுபவம் அவருக்கு நிரம்பவும் உதவியாக இருந்து வந்தது. தைரியம், ஊக்கம், நெறி தவருமை, மதவுணர்ச்சி, விடாமுயற்சி, நல்லொழுக்கம், சூட்சும அறிவு முதலிய குணங்கள் அவரிடம் நிறைந்திருந்தமையால், அவர் கீர்த்திவானுவதற்கு அவை அநுகூலமாயிருந்தன. தமது அதிகாரத்தை விட்டுவிட எவருக்கும் மனம் இராதாலுைம், தமது கொள்கைகளை ஜனங்கள் விரும்பி யேற்றுக் கொண்டாலன்றி தமக்கு துன்பங்கள் சம்பவிக்கும் என்பதைத் தெரிந்து கொண்ட அரசர் மான்ட்பா2ர்ட் பிரபுவைப் பின்பற்றித் தாமும் ஜனப்பிரதிநிதிகளைக் கலந்துகொண்டு அரசியல் நடத்த முற்பட்டார். அதனுல் ஜனங்கள் அவரிடம் நம்பிக்கையும் மதிப்பும் வைத்து நடந்து கொண்டனர். அவர் எல்லோரிடமும் பிரியமாகவும் கௌரவமாகவும் ஒழுகி அவர்களுடைய பிரீதியையும் தேடிக்கொண்டார். சில சமயங்களில் மாத்திரம் அவர் கோபமும் குரோதமும் நிறைந்தவராய்க் கொடுமையாக நடந்து கொள்வார். ஆனுல் அவரிடமிருந்த குற்றங்களெல்லாம் அவரது அரிய செய்கைகளில் மறைந்து போயின. எட்வர்டு அயல் தேசம் சென்றிருந்தபொழுது, அவரது தந்தை இறந்தாராலுைம், அவர் இரண்டு வருஷ காலம் கழித்தே திரும்பி வந்தார். அதுவரையில் பர்னேல் (Burnell) என்ற மந்திரி துரைத்தன காரியங்களைக் கவனித்து வந்தார். அப்பொழுது குழப்பமோ கலகமோ எதுவும் ஏற்படவில்லை.

எட்வர்டு கி. பி. 1274ல் பட்டம் பெற்று இரண்டு மூன்று வருஷங்கள் ஆனபிறகு அவர் வேல்ஸ் மாகாணத்தின்மீது கவனம்

செலுத்த வேண்டியதாயிற்று. முந்திய அதிகாரத்தில் லெவ்லின் என்ற வெல்ஷ் தலைவரைப்பற்றிக் கூறியிருக்கிறோம். ஏற்கனவே எட்வர்ட் இளவரசராயிருந்த பொழுது லெவ்லினுடன் யுத்தம் நடத்தி சமாதானம் செய்து கொண்டிருந்தார். ஆனால் லெவ்லின் தமது அதிகாரத்தைப் படிப்படியாக விருத்தி செய்துகொண்டு ஒரு தனி அரசர் ஆகவேண்டுமென்று ஆசை கொண்டார். இங்கிலீஷ் மன்னருக்கு வழக்கப்படி கீழ்ப்படிந்து இருப்பதாக உறுதி செய்து கொடுக்கஅவர் மறுத்தார். இன்னும் பலவிதங்களில் அவர் எட்வர்டுக்கு உபத்திரவம் கொடுத்து வந்ததால் 1277ல் எட்வர்ட் வேல்ஸ் மாகாணத்தின் வடபாகத்தின்மீது படையெடுத்துச்சென்று லெவ்லினைத் தோற்கடித்து அவரைத் தமக்கு அடங்கிய ஒரு சாதாரணத் தலைவராகச் செய்தார். ஆனால் எட்வர்ட் தம்மால் ஜயிக்கப்பட்ட பிரதேசங்களில் இங்கிலீஷ் சட்டங்களைப் புகுத்த முயன்றதாலும், அவருடைய உத்தியோகஸ்தர்கள் மிகவும் கடுமையாக நடந்து கொண்டதாலும் வெல்ஷ்காரர்கள் அருவருப்புற்று மறுபடியும் லெவ்லினைத் தலைமையாகக் கொண்டு கலகம் செய்தனர். 1282ல் எட்வர்ட் மறுபடியும் அவர்களை எதிர்த்துச்சென்று போர் புரிந்ததில் லெவ்லின் உயிர்துறந்தார். அதன் பிறகு லெவ்லின் தலைமைக்குட்பட்டிருந்த பிரதேசங்கள் எட்வர்ட் வசமாய் விட்டன. இப் பிரதேசங்களை சரியாகப் பரிபாலனம் செய்வதற்கான ஏற்பாடுகளை அவர் செய்தார்; தமக்கு நியாயமெனத் தோன்றிய வெல்ஷ் பழக்க வழக்கங்களில் அவர் தலையிடாமல் மற்ற முக்கிய விஷயங்களில் தமது அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொண்டார்; அங்கு பல கோட்டைகளையும் கட்டிமுடித்தார். இக் கோட்டைகளில் ஒன்றான கார்னார்வன் (Carnarvon)கோட்டையில் அவருக்கு ஒரு மகன் பிறந்தான். (அந்த மகன் அவருக்குப் பிறகு இரண்டாவது எட்வர்ட் என்ற பெயர்பெற்று முடிசூடினான்). அந்தச் சிறு குழந்தையை எட்வர்ட் 1301-ல் வேல்ஸ் மாகாணத்தின் இளவரசனாகச் செய்தார். அதுமுதற்கொண்டு இங்கிலீஷ் மன்னரின் மூத்த குமாரர், அதாவது, அடுத்தார்போல சிம்மாதனமேற வேண்டியவர், வேல்ஸ் இளவரசர் (Prince of wales) என அழைக்கப்படுவது வழக்கம். ஆனால் இப்பொழுது வேல்ஸ் இளவரசர் என்று குறிக்கப்

படும் இராஜகுமாரர் வேல்ஸ் மாகாணத்திற்கு மாத்திரமன்றி ப்ரிட்டிஷ் சாம்ராஜ்யம் முழுதிற்கும் இளவரசாக இருக்கிறார்; ஆனால் அம்மாதிரி அழைப்பது ஒரு பழைய வழக்கமாக வந்துவிட்டதாகையால் அந்தச் சொல் அர்த்தமற்றுப் போனபிறகும்கூட உபயோகத்தில் இருந்து வருகிறது.

**(2) எட்வர்டின் சட்டங்கள்: பார்லிமெண்ட் கூடுவது:—** எட்வர்ட் திறமைமிகுந்த யுத்தவீரராக மாத்திரமன்றி சிறந்த சட்டநிபுணராகவும் இராஜ்ய தந்திரியாகவும் இருந்தார். அவர் வேல்ஸ் மாகாணத்தை ஜயிப்பதற்கு முயற்சிகள் செய்துகொண்டிருந்த சமயத்தில் பல சட்டங்களையும் அரசியல் சம்பந்தமான அநுஷ்டான முறைகளையும் உற்பத்தி செய்தார். ஆனால் அவர் நூதனமான சட்டம் எதையும் இயற்றவில்லை. ஏற்கனவே அநுஷ்டானத்தில் இருந்துவந்த பல விஷயங்களில் ஜனங்களுடைய மனப் போக்கிற்கு ஏற்றவையாக இருந்தவைகளைப் பொறுக்கியெடுத்து அவைகளை சட்டங்களாகவும் விதிகளாகவும் செய்துவைத்தது மாத்திரமே அவருக்கு கௌரவத்தை அளித்தது. அதனால் அவருடைய ஆட்சியில் முன்னரே இருந்து வந்த பல அரசியல் விதிகள் தெளிவாக விளக்கப்பட்டன. 1275 முதல் 1290 வரையில் அவர் பல முக்கியமான சட்டங்களை வெளியிட்டார். எட்வர்ட் பட்டத்திற்கு வந்ததும் தாம் இல்லாத சமயத்தில் திறமையாக இராஜ்ய பரிபாலனம் செய்துவந்த பர்னெல் என்பவரையே தமது முக்கிய மந்திரியாக்கிக்கொள்ள, இருவரும் சேர்ந்தே சட்டமியற்றலாயினர். 1275-ல் முதல் வெஸ்ட்மின்ஸ்டர் * சட்டம் (Statute of Westminster The First) வெளியாயிற்று. அதன்படி அரசாங்கத்திற்கு உறுதியான அதிகாரமும், நாட்டிற்கு அமைதியுமேற்படும் வழி உண்டாயிற்று. ஜானின் மகா சாஸனத்தில் இருந்த சில விதிகள் மீண்டும் அங்கீகரிக்கப்பட்டன. மேலும் நாட்டிலிருந்து ஏற்றுமதியாகும் கம்பளி, ஆட்டுத்தோல் முதலிய சாமான்களின்மீது ஒரு வரி விதிக்கப்பட்டு அந்தத் தொகை அரசனைச் சேர்ந்ததாயிற்று.

---

* வெஸ்ட்மின்ஸ்டர் என்பது பார்லிமெண்ட் சபை கூடும் இடத்திற்குப் பெயர்.

1278-ல் க்ளஸ்டர் சட்டம் (Statute of Gloucester) இயற்றப்பட்டது. அதன்படி தேசத்தில் இருந்த நீதிஸ்தலங்களையும் பிரபுக்கள் வகித்துவந்த பதவிகளையும் ஆராய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அதன்மூலம் எட்வர்ட் பிரபுக்களுடைய பலத்தை ஒடுக்கி, அவர்கள் தம்மையே சார்ந்திருக்குமாறு செய்ய உத்தேசித்தார். ஆனால் அவருடைய முயற்சியை பிரபுக்கள் அனைவரும் சேர்ந்து எதிர்த்ததால் அவரால் அதிக வெற்றியடைய முடியவில்லை.

1279-ல் மார்ட்மேயின் சட்டம் (Statute of Mortmain) என்ற ஒரு சட்டம் வெளியாயிற்று. அதன்படி அரசருடைய அநுமதியில்லாமல் எந்த நிலமும் மதஸ்தாபனத்தைச் சேரக்கூடாது என்று நிர்ணயம் செய்யப்பட்டது. அதனால் மதஸ்தாபனத்திற்கு அதிக சொத்துடைமைகள் சேர்ந்துவிடாமல் தடுக்க வேண்டுமென்பது எட்வர்டின் அபிப்பிராயம். அதை மதகுருமார்கள் எதிர்த்துப் பார்த்தனராலும், அரசர் இணங்கி வரவில்லை. மேலும் 1285-ல் அவர் ஒரு சட்டம் இயற்றி மதஸ்தாபன நீதிஸ்தலங்கள் அரசாங்க நீதிஸ்தலங்களுடைய வியவகாரங்களில் தலையிடாமல் இருக்கும்படி செய்தார். மேலும் ஜானினால் போப்புக்குத் தருவதாக ஒப்புக் கொள்ளப்பட்டபடி கப்பம் செலுத்துவதை அவர் நிறுத்திவிட்டார். அதனால் அரசியலில் போப்பின் ஆதிக்கம் அழிக்கப்பட்டு விட்டது.

1285-ம் வருஷத்திலேயே இன்னும் இரண்டு முக்கியமான சட்டங்கள் இயற்றப்பட்டன அவைகள் இரண்டாவது வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் (Statute of Westminster the Second) என்றும் வின்ச்சேஸ்டர் சட்டம் (Statute of Winchester) என்றும் குறிக்கப்படும். அவைகள் நிலசம்பந்தமான சில சீர்திருத்தங்களைச் செய்ததுடன் ஒவ்வொரு ஜில்லாவிலும் குற்றம் செய்கிறவர்களின் எண்ணிக்கை குறையும்படியான வழியையும் செய்தன.

1290-ல் கடைசியாக மூன்றவது வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் (Statute of West Minister the Third) ஒன்று இயற்றப்பட்டது. அதன்படி பண்ணையாட்களுக்கு தங்களுடைய நிலத்தை விற்பனை செய்யும் உரிமை யளிக்கப்பட்டது. ஆனால் அந்த நிலத்தை வாங்கும்

மனிதனும் விற்றவனுடைய எஜமானனுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்று நிர்ணயம் செய்யப்பட்டது.

எட்வர்ட் இன்னுமொரு விசேஷமான காரியமும் செய்தார். இங்கிலண்டில் குடியேறியிருந்த யூதர்களையெல்லாம் (Jews) 1290ல் தேசத்தை விட்டு வெளியேறும்படி அவர் உத்தரவிட்டார். யூதர்கள் அதற்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு முதற்கொண்டு இங்கிலண்டில் குடியேறி அங்கு வியாபாரம் செய்து தனவந்தர்களாயிருந்தனர். ஆனால் கிரிஸ்தவர்களுக்கும் யூதர்களுக்கும் இயற்கையான பகைமை இருந்தமையாலும், அவர்கள் அதிகமான வட்டிக்குக் கடன்கொடுத்து ஜனங்களை வஞ்சித்து வந்தமையாலும், எட்வர்ட் பொதுஜன அபிப்பிராயத்திற்கிணங்கி அவர்களை தேசப்பிரஷ்டம் செய்து ஓட்டிவிட்டார்.

முந்திய அதிகாரத்தில் எட்வர்ட் மன்னர் மான்ட்பார்ட் பிரபு எடுத்த வேலையை முடித்து வைத்தார் என்று சொன்னோமல்லவா? அன்னியநாட்டு யுத்தம் ஒன்று நேர்ந்தபொழுது அவர் பொதுஜனங்களை சந்தோஷிப்பித்து அவர்களுடைய ஆதரவைப் பெற விரும்பி 1295-ல் ஒரு பார்லிமென்ட் சபையைக் கூட்டினார். ஆனால் பிரபுக்களையும் மதகுருமார்களையும் மாத்திரம் அழைத்ததோடு நின்றுவிடாமல் ஒவ்வொரு ஜில்லாவிலிருந்தும் முக்கிய நகரங்களிலிருந்தும் இரண்டிரண்டு பிரதிநிதிகள் வீதம் அனுப்பும்படி செய்தார். ஆகவே பிரபுக்கள், மதகுருமார்கள், பொதுஜனங்கள் ஆகிய மூன்றினத்தாரும் அதில் ஸ்தானம் பெற்றனர். அந்தப் பார்லிமென்ட் இங்கிலண்டின் சரித்திரத்தில் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. அதையொட்டியே பின்னால் பார்லிமென்ட் சபை அமைக்கப் பெற்றதால் அதற்கு மாடல் அல்லது மாதிரி பார்லிமேன்ட் (Model Parliament) என்ற கௌரவப்பெயர் கிடைத்தது. மேலும் ஓர் அவசர சமயத்தில் துரைத்தன சம்பந்தமான முக்கிய விஷயமொன்றைப் பரிசீலனை செய்யும்பொருட்டு அவர் அந்தச் சபையைக் கூட்டினாராதலால், அதற்கு இன்னும் விசேஷ மதிப்பு ஏற்பட்டது. அரசன் செய்யும் யுத்தம் பிரஜைகளெல்லோரையும் பாதிக்கக் கூடியதென்பதையும், யாவருக்கும் பொதுவாயுள்ள அபாயத்தை யாவரும்

சேர்ந்து ஆலோசித்தே விலக்க முற்பட வேண்டுமென்பதையும் அவர் ஜனங்களுக்குத் தெரிவித்தார்; அந்தக் கொள்கை கொஞ்சம் கொஞ்சமாக நிரந்தரமாகப் பின்பற்றப்படலாயிற்று. வில்லியம் முதலியோர் தமது சுயேச்சைப்படி ஆண்டுவந்த காலம்போக, எட்வர்ட் அரசர் தாமாகவே ஜனங்களுக்கு உரிமைகளை அதிகமாய் ஏற்படுத்திக் கொடுத்தார்.

1297-ல் இங்கிலண்டில் சில பிரபுக்கள் கலகம் செய்து ஜான் காலத்தில் அங்கீகரிக்கப்பட்ட மகா சாஸனத்தை மீண்டுமொரு தடவை உறுதிப்படுத்த வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். எட்வர்ட் அதற்கு இணங்கவேண்டியதாயிற்று. அதனால் மகா சாஸனம் ஜனங்களுடைய உரிமைகளைச் சிறிதும் விடாமல் பாதுகாக்கும் ஜீவாதாரமான சாதனம் ஆயிற்று.

(3) ஸ்காட்லண்ட் யுத்தம்: ப்ரான்ஸ் யுத்தம் :—நார்மன் ஆட்சி இங்கிலண்டில் வேரூன்றிய பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாக வடக்கேயுள்ள ஸ்காட்லண்ட் தேசத்திலும் பரவலாயிற்று என்று முன்பே கூறினோமல்லவா? ஆனாலும் எட்வர்ட் காலத்தில் ஸ்காட்லண்டுடன் சச்சரவிட வேண்டிய சந்தர்ப்பம் ஒன்று வாய்த்தது. ஸ்காட்லண்ட் தேசத்தில் ஆதி கெல்டிக் இனத்தார், டேன் இனத்தார், இங்கிலீஷ்காரர், நார்மன் இனத்தார் முதலிய பலரும் குடியேறி யிருந்தாலும், அவர்கள் நாளடைவில் ஒன்றுபட்டு ஒரே அரசாது ஆளுகைக் குட்பட்டிருந்தனர். ஆனால் ஸ்காட்லண்டின் தென்பாகம் சற்று அதிக நாகரிகம் படைத்து அநேகமாய் இங்கிலண்டைப் போலவே இருந்தது; வடக்குப் பிரதேசம் மலை நாடாகவும் சிறிது நாகரிகக் குறைவாகவும் இருந்து வந்தது. ஸ்காட்லண்ட் அரசர்கள் பொதுவாக இங்கிலீஷ் அரசருடன் அன்னியோன்னியமாகவே இருந்துவந்தனர். எட்வர்டின் ஆட்சியில் அவ்விரு தேசங்களுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. 1286ல் ஸ்காட்லண்டின் அரசரான அலெக்ஸாண்டர் என்பவர் உயிர்துறந்தார்; அவருடைய பேர்த்தியான மார்கரேட் (Margaret) என்னும் சிறிய பெண் அவருக்கு அடுத்த வார்சுதாரி ஆனாள். அந்தப் பெண் நார்வேயில் இருந்தமையால், நார்வே மடந்தை (Maid of Norwya) என்று

குறிக்கப்பட்டாள். அவள் சிறுமியாக இருந்ததால் சில கனவான்கள் நிர்வாகம் நடத்தி வந்தனர். எட்வர்ட் ஸ்காட்லன்டின் வியவகாரங்களை நன்றாக கவனித்து வந்திருந்தாராதலால், அவர் தமது அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்ள ஒரு தந்திரம் செய்தார். நார்வே மடந்தையைத் தமது மூத்தமகனுக்கு விவாகம் செய்து வைத்துவிட்டால், இரண்டு இராஜ்ஜியங்களும் தமக்குக் கீழ் வந்து விடும் என்று யோசனை செய்து அதுபோலவே ஏற்பாடு செய்து விட்டார். அந்த விவாகம் நடந்திருந்தால், இரண்டு தேசங்களும் சுலபமாக ஒரு குடையின் கீழ் வந்திருக்கும். ஆனால் நார்வே மடந்தை ஸ்காட்லன்டுக்கு வரும்பொழுது கப்பலிலேயே இறந்து போய்விட்டாள்.

உடனே அநேக வார்சுதார்கள் கிளம்பி தமக்கே பட்டம் உரியது என்று சச்சரவிடலானார்கள். அவர்களுடைய உரிமைகளை ஆராய்ந்து பார்த்து நியாயமான வார்சுதாரரைத் தேர்ந்தெடுப்பது கடினமான காரியமாயிற்று; ஸ்காட் ஜனங்கள் தமதுதேசத்தில் குழப்பமும் கலகமும் சண்டையும் நடவாமல் அந்த விஷயத்தைத் தீர்க்கப் பெரிதும் கவலை கொண்டு இங்கிலண்டின் அரசரான எட்வர்டை அழைத்து மத்தியஸ்தம் செய்து வைக்கும்படி வேண்டினர். எட்வர்ட் மிகுந்த சந்தோஷத்தோடு அந்த வேலையை ஏற்றுக்கொண்டார். ஆனால் தாம் விசாரணை செய்வதற்குமுன் எல்லாவார்சுதாரர்களும் பிரபுக்களும் தம்மை ஸ்காட்லன்டின் அதிபதி என்று அங்கீகரித்து பிரதிக்ஞை செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவருடைய கருத்து ஸ்காட்லன்டைத் தமது வசமாக்கிக் கொண்டு விடவேண்டு மென்பதே. ஸ்காட்லன்டின் அரசர்களுக்கு இங்கிலன்டிலும் சிலபிரதேசங்கள் சொந்தமாயிருந்தன. அவர்களில் சிலர் இங்கிலீஷ் மன்னருக்கு மேற்கூறியவாறு பிரதிக்ஞை செய்து கொடுத்திருந்தாலும் அது அர்த்தமற்ற மாமூல் மரியாதையாக மாத்திரம் இருந்ததேயன்றி, அவர்கள் எவ்விதமான கட்டுப்பாடுமின்றி சுயேச்சையாகவே நடந்துவந்தனர். மேலும் அவர்கள் செய்து கொடுத்த பிரதிக்ஞை, இங்கிலன்டில் அவர்களுக்குச் சொந்தமாயிருந்த நிலத்தின் பொருட்டா அல்லது அவர்களுடைய இராஜ்ஜியத்தின்பொருட்டா என்பதும் தெளிவு படுத்தப்படவில்லை.

ஆனால் ஸ்காட்லன்டு அரசர்கள் வேறோர் அரசருக்குப் பிரதிக்ஞை செய்து கொடுப்பதை இயற்கையாகவே வெறுத்து வந்தனர். ஆனால் எட்வர்டு மத்தியஸ்தம் செய்ய முன்வராவிட்டால் தேசத்தில் கலகமேற்படுமென்றஞ்சி ஸ்காட்லன்டு பிரபுக்களும் வார்சுதாரர் களும் அவர் கோரிய பிரதிக்ஞையைச் செய்துகொடுத்தனர். முக்கிய மாக இரண்டு வார்சுதாரர்களுக்குள்ளேயே கடுமையான போட்டி யிருந்தது. அவர்களில் ஒருவர் ஜான் பேலியல் (John Balliol) என்பவர்; மற்றவர் ராபர்ட்ப்ரூஸ்(Robert Bruce). எட்வர்டு அரசரால் நியமிக்கப்பட்ட 104 நீதிபதிகள் விசாரணை நடத்தி முடிவு செய்ததில் 1292ல் பேலியல் என்பவருக்கே வெற்றி கிடைத்தது. அந்த வழக்கு சுலபமாய் முடிந்து போனதுபோலத் தோன்றியது; எட்வர்டு நிரம்பவும் நீதியாகத் தீர்ப்புச்செய்தார் என்ற பிரதாபத்தை யடைந்தார்.

ஆனால் சீக்கிரத்தில் துன்பங்கள் விளையலாயின. பேலியல் எட்வர்டுக்குப் பிரதிக்ஞை செய்துகொடுத்திருந்தாரானாலும், அவர் அதை நிறைவேற்றிவைக்க எண்ணவே இல்லை. ஆனால் எட்வர்டு அதை உண்மையாகவே நிறைவேற்றிக்கொள்ள நிச்ச யம் செய்துகொண்டார். அக்காலத்தில் ஒரு தேசத்தரசன் வேறொரு அரசனுக்கு உட்பட்டிருந்தால், அவனுடைய தேசத்து நீதிஸ்தலங் களில் தோல்வியடையும் கட்சிக்காரர்கள், தலைவனான அரசனிடம் "அப்பீல்" செய்து முறையிட்டுக்கொள்ளும் உரிமை இருந்து வந்தது. அவ்வழக்கத்தைப் பின்பற்றி ஸ்காட்லன்டில் தோல்வி யடைந்த கட்சிக்காரர்கள் இங்கிலண்டின் நீதிஸ்தலங்களில் முறை யிட்டுக்கொண்டனர். ஆனால் ஸ்காட் பிரபுக்கள் அதைப் பெரிய இழிவாகக் கருதி, அந்த வழக்கத்தை அநுமதிக்க மறுத்து விட்டனர். எட்வர்டுக்கும் ஸ்காட் அரசாங்கத்திற்கும் விரோதப் பான்மை ஏற்பட்டுவிட்டது.

அதனிடையில் எட்வர்டுக்கு இன்னும் பல துன்பங்களும் உண்டாயின. ப்ரான்ஸ் தேசத்தில் இங்கிலிஷ் அரசருக்குச் சொந்தமாயிருந்த சிறிய பிரதேசத்தை அபகரித்துக்கொள்ள ப்ரெ ஞ்சு அரசர்கள் முயன்றுகொண்டே இருந்தனர். அதுவுமன்றி

ப்2ரெஞ்சுக் கப்பல் வியாபாரிகளுக்கும் இங்கிலீஷ்காரருக்கும் பகைமை இருந்துகொண்டே வந்தது. அதனால் ப்2ரெஞ்சு அரசர், எட்வர்டின் விரோதியான ஸ்காட் அரசருக்கு உதவி செய்யலானார்.

1296-ல் எட்வர்ட் ஸ்காட்லன்டின்மீது படையெடுத்துச் சென்று பேலியலை எளிதில் தோற்கடித்தார். உடனே ஸ்காட்லன்டைத் தமது இராஜ்ஜியத்தில்சேர்த்துக்கொண்டு பல இங்கிலீஷ் பிரபுக்களை நியமித்து அவர்களைக் கொண்டு இராஜ்ஜிய பரிபாலனம் நடத்த ஏற்பாடு செய்ததன்றி, ஸ்காட்லன்டின் சிம்மாதனத்தில் இருந்ததும், அந்த தேசத்தார் பெருமையாக மதித்துப் போற்றி வந்ததுமான ஒரு கல்லைப் பெயர்த்துக் கொணர்ந்துவிட்டார். அது இன்னமும்கூட இங்கிலீஷ் அரசரின் பட்டாபிஷேக ஆசனமாக இருந்து வருகிறது.

எட்வர்ட் ஸ்காட்லன்ட் தேசத்தை நன்றாகவே பரிபாலித்துவர உத்தேசித்திருந்தாராலும், அவரால் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்கள் மிகவும் கொடுமையாக நடந்துகொண்டனர். ஆதலால் ஸ்காட் பிரஜைகளுக்கு ஆத்திரம் பொங்கியது. பேலியல் அரசருடைய மூடத்தனத்தினாலும் சில பிரபுக்களுடைய கோழைத்தனத்தினாலுமே ஸ்காட்லன்ட் தேசம் இங்கிலீஷ் அரசருடைய வசமாயிற்றேயன்றி, சாதாரண ஜனங்கள் தம்முடைய சுதந்திரத்தை அவ்வாறு இழந்துவிட விரும்பவே இல்லை. வா/2லஸ் (Wallace) என்பவரைத் தலைவராகக்கொண்டு ஸ்காட் மக்கள் கலகம் செய்யத் தொடங்கினர். 1298-ல் பா2ல்கர்க் (Falkirk) என்ற இடத்தில் எட்வர்ட் மறுபடியும் ஜயம்பெற்று, வா/2லஸ் நாட்டைவிட்டு ஓடும்படி செய்தார். வா/2லஸ் திறமையுள்ள தளகர்த்தராலும், பல பிரபுக்கள் அவரைப் பின்பற்றாமல் நின்றதாலும், அவர் சாமானிய ஜனங்களையும் வெறும் காலாட் படையையும் நம்பியே போர் புரியவேண்டி யிருந்ததாலும், அவர் தோற்றுப்போனார். 1304-ல் வா/2லஸ் சிறைப்படுத்தப்பட்டு தூக்குமாத்தில் கொல்லப்பட்டார். ஸ்காட்லன்ட் முழுதும் எட்வர்டின்

பூர்ணவசத்திற் குட்பட்டதுபோலத் தோன்றியதால், அவர் அந்த தேசத்தின் பரிபாலனத்திற்கு வேண்டிய எற்பாடுகளைச் செய்ய லானுர். ஆனால் 1306-ம் வருஷத்திலேயே பேலியலுக்கு விரோதமாய் வார்சுதாரராக நின்று அரசைப் பெறாமல் போனவருடைய பேரனான ப்ரூஸ் என்பவர் பல ஜனங்களைச் சேர்த்துக்கொண்டு தமது சுதந்திரத்தைப் பெறுவதற்காகப் போர் புரியலானுர். ப்ரூஸ் உண்மையிலேயே போர்த்திறமையும் விடாமுயற்சியும் ஊக்கமும் உடையவராதலால் அவரை எதிர்த்து வெற்றிகொள்வது பிரயாசையாகத் தோன்றியது. எட்வர்ட் அப்பொழுது எழுபது வயது நிறைந்த வயோதிகராயிருந்தும், ஸ்காட்லண்டைத் தமது ஆதிக்கத்திற்குட்படுத்தத் தீர்மானம் செய்துகொண்டு படையெடுத்துச் சென்றார். ஆனால் அந்த வேலையைத் தமது புத்திரருக்கு விட்டு, போகும் வழியிலேயே உயிர் துறந்தார். அவருடைய மரணம் ப்ரூஸுக்கு நிரம்பவும் அநுகூலமாக முடிந்தது.

ஸ்காட்லண்டு போரில் ஈடுபட்டிருக்கும்பொழுதே ப்ரெஞ்சுக்காரருடைய உபத்திரவம் ஒருபுறமும் உள்நாட்டுக் கலகம் ஒருபுறமும் அவருக்குக் கவலையை விளைவித்துக் கொண்டிருந்தன. ஆனால் அவர் சாமர்த்தியமாக நடந்துகொண்டு அவர்களெல்லோரையும் சமாதானப்படுத்தி அமைதி குலையாவண்ணம் செய்துகொண்டார். அவருடைய ஆட்சி பலவிதங்களில் முக்கியமானதாக இருந்தது. வேல்ஸ் மாகாணத்தை ஜயித்தது, பல சட்டங்களை இயற்றியது, அரசியல் முறையை ஒழுங்குப்படுத்தியது, ஜான் காலத்து மகாசாஸனத்தின் விதிகளைப்பின்பற்றி ஜனங்களுடைய உரிமைகளை அநாதரவுசெய்யாமல் அவர்களையும் கலந்துகொண்டு நிர்வாகம் நடத்தியது—ஆகிய யாவும் அவருக்கு என்றும் அழியாத கீர்த்தியை உண்டாக்கின. அவர் உறுதியும் திறமையும் மிகுந்தவரானாலும் சுயேச்சாதிபதியாக ஆட்சி புரிய இஷ்டம் கொள்ளாமல், ஜனப்பிரதிநிதிகளுக்கு சமமான உரிமை கொடுத்தது ஒன்றே அவருடைய பெருந்தன்மையையும் சுயநலங் கருதாமையையும் தேசபக்தியையும் விளக்கின.

---

# 18-வது அதிகாரம்.

---

## இரண்டாவது எட்வர்ட்

(1) ஸ்காட்லன்ட் யுத்தம் முடிவடைவது:—இரண்டாவது எட்வர்ட் தமது தந்தையின் குணங்களுக்கு முற்றிலும் விரோதமான குணங்களையுடையவர். அரசியல் வியவகாரங்களில் அவருக்கு அக்கரை யென்பதே கிடையாது; தமது சுகபோகங்களை மாத்திரமே அவர் கவலையுடன் கவனித்து வந்தார். அவரது தந்தை அரும்பாடு பட்டு அவருக்களித்த யுத்தப் பயிற்சியும் உபதேசமும் விழலுக்கிறைத்த நீராயின. அவருடைய இளமையில் காவஸ்டன் (Gaveston) என்பவருடைய சகவாஸத்தால் அவர் கெட்டுவிடுவார் என்றெண்ணி, அவரை, முதல் எட்வர்ட் தேசப்பிரஷ்டம் செய்திருந்தார். ஆனால் இரண்டாவது எட்வர்ட் பட்டத்திற்கு வந்தவுடன் காவஸ்டனைத் திருப்பி யழைத்துக் கொண்டார்; அவர் தமது தந்தைக்குச் செய்துகொடுத்த உறுதிமொழியை மறந்து ஸ்காட்லன்டின்மீது படையெடுப்பதை நிறுத்திவிட்டார். அவருடைய அசிரத்தை தேசத்திற்குப் பெருத்த நஷ்டத்தையும் அவருக்கே பெருத்த கேட்டையும் உண்டாக்கியது. காவஸ்டனுடைய கருவத்தையும் மமதையையும் கண்டு வெறுப்படைந்த பிரபுக்கள் 1308-ல் அவரை பிரஷ்டம் செய்யும்படி அரசரை வற்புறுத்தினார்கள். ஆனால் அடுத்த வருஷமே அவரை அரசர் மறுபடி திருப்பி யழைத்துக் கொண்டார். பிரபுக்கள் அரசருடைய நடவடிக்கைகளைக் கண்டு அருவருப்படைந்து,பார்லிமென்ட் மகாசபையைக் கூட்டி சில தீர்மானங்களைச் செய்தனர். காவஸ்டன் தமது ஆயுள்காலம் முழுதும் பிரஷ்டம்செய்யப்பட வேண்டுமென்றும், அரசர் பிரபுக்களுடைய சொற்படி ஆளவேண்டுமென்றும் தீர்மானம் செய்யப்பட்டது. முதல் எட்வர்ட் தமது உறுதியான பரிபாலனத்தினால் பிரபுக்களை அடக்கி வைத்திருந்தது போக, பிரபுக்கள் மறுபடி ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி

விட்டனர். 1312-ல் ஹாவெஸ்டன் ஒரு பிரபுவினால் கொல்லப் பட்டார். அதைக் குறித்து எட்வர்ட் ஒன்றும் செய்ய முடிய வில்லை.

இங்கிலன்டின் நிலைமை அப்படி இருக்க, ஸ்காட்லண்டில் ப்ரூஸ் தமது அதிகாரத்தைப் பெருக்கி இங்கிலீஷ் கோட்டைகளை யெல்லாம் பிடித்துக்கொள்ளத் தொடங்கினார். 1314 ல் ஒரே ஒரு இங்கிலீஷ் கோட்டைமாத்திரம் அவரால் பிடிபடாமல் மிஞ்சிநின்றது. அதையும் ப்ரூஸ் முற்றுகை யிட்டார். அப்பொழுது தான் எட்வர்டுக்கு உணர்ச்சி யேற்பட்டது. பிரபுக்களுடன் சமாதானம் செய்துகொண்டு அவர் ஸ்காட்லன்டை நோக்கிப் புறப்பட்டு மெது வாகச் சென்றார். இங்கிலீஷ் சேனை பார்வைக்கு மிகப் பெரிதா யிருந்தாலும், உண்மையில் அது ஒன்றுக்கும் உதவாததாகவே இருந் தது. அதிலிருந்த பிரபுக்கள் அசிரத்தையாகவே போர் புரிந்தனர். பானக்பர்ன் (Bannockburn) என்ற இடத்தில் நடந்த யுத் தத்தில் ப்ரூஸ் பூர்ண வெற்றியடைந்தார். எட்வர்ட் அரசரும் இங்கிலீஷ் சேனை வீரர்களும் முதுகுகாட்டி ஓடலாயினர். ஸ்காட் லன்டின் பூர்ண சுதந்திரம் கத்திமுனையால் ஸ்தாபிக்கப்பட்டுப் போய்விட்டது. தமது தந்தை செய்துவைத்த ஏற்பாட்டை இரண் டாவது எட்வர்ட் அடியோடு கெடுத்து மாற்றிவிட்டார்.

(2) **பிரபுக்களின் ஆட்சி: எட்வர்டின் அந்திய காலம்:—** பானக்பர்ன் தோல்விக்குப் பின் எட்வர்டுக்கு இருந்த சொற்ப மதிப்பும் குறைந்துபோக, அவர் பிரபுக்களுடைய கட்டுப் பாடுகளுக் குட்பட்டு நடக்கவேண்டிய அவசியம் அதிகமாயிற்று. முதலில் லங்காஸ்டர் பிரபு என்பவர் தலைமை வகித்து வந்தார். ஆனால் அவராலும எதையும் செய்ய முடியாமற் போகவே, தேசத் தில் குழப்பமும் கலகமும் அதிகமாயின. கடைசியாக சில பிரபுக்கள் வேறொரு கட்சியை ஏற்படுத்திக்கொண்டு 1321-ம் வருஷம் வரை யில் நிர்வாகத்தை கவனித்து வந்தனர். அப்படியிருந்தும், பிரபுக்க ளுக் குள்ளேயே இருந்த ஒற்றுமைக் குறைவால் எட்வர்ட் மீண் டும் சுயேச்சையாக நடக்க ஆரம்பித்து, டிஸ்பென்ஸர்ஸ் (Dispen-

sers) என்று குறிக்கப்படும் இரண்டு இங்கிலீஷ் கனவான்களிடம் (தந்தையும் மகனும்) நம்பிக்கை வைத்து அவர்களுக்குப் பல மரியாதைகளையும் செய்தார். பிரபுக்கள் எவ்வளவோ பாடுபட்டும் டிஸ்பென்ஸர் கனவான்களை அகற்ற முடியவில்லை. 1326 முதல் டிஸ்பென்ஸர் கனவான்களுடைய நிர்வாகம் நடைபெற்றது. அவர்கள் பார்லிமெண்ட் சபையில் பிரபுக்களுக்கு மாத்திரமன்றி சாதாரண ஜனங்களுக்கும் சமமான உரிமைகளை அளித்து வைத்தனர். ஆனால் அவர்களுடைய நல்லெண்ணத்தைக் கருதாமல் பலர் அவர்களுக்கு விரோதமாக எழுந்தனர். முக்கியமாக எட்வர்டின் மனைவியான இஸபெல்லா (Isabella) என்பவள் அவர்களை அகற்றுவதற்கு முயன்றாளானாலும், தனது முயற்சி பலியாததைக் கண்டு அவள் தனது சொந்த தேசமான ப்ரான்ஸுக்குப் போய் அங்கு மார்ட்டிமர் (Mortimer) என்பவரைச் சேர்த்துக்கொண்டு, தமது புத்திரருடன் 1326-ல் இங்கிலண்டின்மீது படையெடுத்துத் தனது கணவனையே எதிர்த்து வந்தாள். ஆகா! எவ்வளவு பதிபக்தி! அப்பொழுது எட்வர்டின் ஆட்சியில் அருவருப் படைந்திருந்த வேறு பலரும் அவளுடைய கட்சியில் சேர்ந்து கொண்டனர். எட்வர்ட் ஓட்டமெடுத்தா ரானாலும், கடைசியில் பிடிபட்டு சிறையில் வைக்கப்பட்டார். டிஸ்பென்ஸர் கனவான்களும் கொல்லப்பட்டுப் போயினர். 1327-ல் பார்லிமெண்ட் சபை கூடி இளவரசரை அழைத்து மூன்றாவது எட்வர்ட் என்று பெயரிட்டு முடிசூட்டினார்கள். இரண்டாவது எட்வர்ட் பலவந்தத்தின்மேல் பட்டத்தை இழந்து கடைசியில் படுகொலை செய்யப்பட்டார். இங்கிலீஷ் அரசர்களெல்லோரிலும் அவர் மகா கேவலமானவர். அவர் பட்டத்தை இழந்த சந்தர்ப்பங்களும், அவருடைய மனைவியின் துரோகமும் நமக்கு அருவருப்பாக இருந்தாலும், அவர் நீக்கப்பட்டதால் தேசத்திற்குத் தீங்கு எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. முடிசூடிய மன்னருக்கு அவசியமான குணங்களில் எதுவும் அவரிடம் இல்லாமல் போய்விட்டது. பிரஜைகளின் மதிப்பைப் பெறத்தக்க காரியம் எதையும் அவர் செய்யவில்லை. அவர் தாமும் சுகப்படவில்லை; நாடும் சுகப்பட விடவில்லை.

———

# 19-வது அதிகாரம்

---

## மூன்ருவது எட்வர்ட்

(1) இஸபேல்லா, மார்ட்டிமர் பரிபாலனம்:—1327-ல் முடிசூடிய எட்வர்டுக்கு அப்பொழுது பதினைன்கு வயதே ஆயிருந்தது. ஆகவே, அதுமுதல் மூன்று வருஷகாலம் வரையில் அவரது தாயான இஸபெல்லாவும், அவளுடைய நண்பரான மார்ட்டிமரும் இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்திவந்தனர். அப்பொழுது முதன்முதலில் ஸ்காட்லன்டிலிருந்து உபத்திரவம் தொடக்கமாயிற்று. ப்ரூஸ் நிலைப்பான ஆட்சியைப் பெற்றதோடு நிற்காமல் இங்கிலண்டின்மீதும் படையெடுத்து வரலானர். இங்கிலீஷ் அரசாங்கத்தார் நார்தாம்ப்டன் (Northampton) என்ற இடத்தில் 1328-ல் அவருடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டனர். ஸ்காட்லன்ட் அரசருக்கு பூர்த்தியான சுயேச்சை யளிக்கப்பட்டது. அதைக்கேட்ட இங்கிலீஷ் ஜனங்கள் அந்த வெட்கக்கேடான உடன்படிக்கை நடந்ததைப்பற்றி அருவருப் படைந்தனர். ஆனல் போர்புரியும் திறமையற்றிருந்தமையால், துரைத்தனத்தாருக்கு அதைத் தவிர வேறு வகை தோன்றவில்லை. ப்ரூஸைத் துரத்துவ தென்பதும் கூடாததாயிற்று. ஆகவே, முதல் எட்வர்ட் பிரயாசைப்பட்டுச் செய்து வைத்த ஏற்பாடு முழுதும் கடைசியில் வீணய் முடிந்தது. மேலும்மார்ட்டிமர்என்பவர் சுயநலமே வடிவமாய் இருந்து அதிகாரத்தையெல்லாம் தம்மிடமே வைத்துக்கொள்ள எத்தனித்து வந்தார். 1330-ல் (மூன்ருவது) எட்வர்ட் அரசருக்குத் தக்க வயது வந்துவிட்டதானகயால், அவர் தாமாகவே அரசு புரிய ஆவல்கொண்டு, இஸபெல்லாவை அகற்றிவிட்டு, மார்ட்டிமரை சிறைப்படுத்தித் தூக்கிலிட்டுவிட்டார்.

1330-ல் எட்வர்ட் அரசாட்சியை ஏற்றுக்கொண்டார். அவர் முதல் எட்வர்டைப்போல அதிக மகிமை வாய்ந்தவரான்ருனுலும், தமது பெயருக்கு சரித்திரத்தில் முக்கியமான கௌரவம் ஏற்படும்

படி நடந்துகொண்டார்; மிகவும் சுறுசுறுப்புடனும் ஊக்கத்துடனும் அவர் வேலை செய்து வந்தார். யுத்தவீரருக்கு அவசியமான குணங்கள் அவரிடம் நிறைந்திருந்தன. அவர் பெயரும் புகழும் பெற வேண்டுமென்ற ஆசையுடன், தமது பிரஜைகளுக்குப் பல நன்மைகள் புரிவதில் ஊக்கமாயிருந்தார். அவர் எதிர்பார்த்த வெற்றி யடையவில்லை யானாலும், அது அவரது அந்திய காலத்திலேயே தெரிய வந்ததானாலும், அவருடைய ஆயுட்காலத்தில் ஜனங்கள் அவரை நிரம்பவும் மதிப்பாகவே வைத்துக் கொண்டாடி வந்தனர்.

எட்வர்ட் சிறு பிராயத்தினரா யிருந்தபொழுது ஏற்பட்ட நார்தாம்ப்டன் உடன் படிக்கையின்படி ஸ்காட்லன்டுக்கு சுதந்திரம் அளிக்கப்பட்டதல்லவா? அந்த அவமானத்தை அகற்றி விடுவதற்கு, அவர் சமயம் பார்த்துக்கொண்டே இருந்தார். ப்ரூஸ் மரணமடைந்தவுடன் அவருடைய குமாரன் டேவிட் என்னும் சிறுவர் ஸ்காட்லண்டின் அரசரானர். அவருடைய பலஹீனத்தைக் கருதி, ப்ரூஸுக்கு விரோதமாயிருந்த பிரபுக்கள் பலர் தமது விருப்பப்படி சுயேச்சையாக நடந்து கொள்ளலானார்கள். டேவிட் அரசருக்கு விரோதியாக பேலியல் என்று இன்னொருவர் கிளம்பி சிம்மாதனத்தை அபகரித்துக்கொள்ள முயற்சித்தார். எட்வர்ட் நியாயமாகடேவிடினுடைய கட்சியிலேயே சேர்ந்திருக்கவேண்டும்; ஆனல் அவர் பேலியலின் கட்சியை ஆதரித்து அவருக்கு உதவியாகப்போருக்குச் சென்று 1334-ல் நடந்த ஒரு யுத்தத்தில் வெற்றி யடைந்து, தமது கட்சியைச் சேர்ந்த பேலியலை அரசராக்கி அவரைத் தமது ஆதிக்கத்திற்குட் படுத்திக்கொண்டார். ஆனல் கடைசியில் அவருடைய முயற்சிபலிக்காமல் போய்விட்டது. நீண்டகாலம் யுத்தம் செய்த பின் ஸ்காட்லன்ட் மறுபடியும் சுயேச்சையை யடைந்துவிட்டது, முதல் எட்வர்டைப்போலவே மூன்றாவது எட்வர்டும் ஸ்காட்லன்ட் விஷயத்தில் தோல்வி யடைந்தார்.

(2) நூறு வருஷ யுத்தம்; கருப்பு மரணம் :—இங்கிலீஷ் மன்னர் ஸ்காட்லன்டுடன் சச்சரவிட்டுக் கொண்டிருந்த காலத்தில், அவருக்கும் ப்ரெஞ்சு தேசத்தினருக்கும் இருந்த பகைமை காலக்

கிரமத்தில் அதிகப் பட்டுக்கொண்டே இருந்தது. இரண்டாவது ஹென்றியின் காலத்தில் இங்கிலிஷ் அரசருக்கு ப்2ரான்ஸில் சில பிரதேசங்கள் சொந்தமாயிருந்ததும், ஜான் காலத்தில் நார்மண்டி இழக்கப்பட்டுப் போனதும் முன்புகுறிக்கப்பட்டன. ஆனால் ஞா/2ஸ் கனிஎன்ற மாகாணம் மாத்திரம் மிகுதியாக இங்கிலீஷ் அரசர்வசமே இருந்து வந்தது. அதையும் அபகரித்துக்கொள்ள வேண்டுமென்று ப்2ரெஞ்சு அரசர்கள் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாயிருந்தனர். இங்கிலீஷ் அரசர்களுக்கோ பழைய இராஜ்ஜியத்தை மீண்டும்பெற வேண்டுமென்ற ஆசை இருந்து வந்தது. அதனால் அவ்விரு தேசத்தினருக்கும் எப்பொழுதும் பகைமை இருந்து கொண்டே வந்தது. மேலும், இங்கிலண்டுக்கு விரோதமாக ஸ்காட் அரசனுக்கு ப்2ரெஞ்சுக்காரர்கள் எப்பொழுதும் உதவிபுரிந்து கொண்டிருந்தனர். அந்தக் காரணத்தினாலும் இரண்டு தேசங்களுக்கும் போர் விளையும் போலிருந்தது. மூன்றாவது எட்வர்டின் காலத்தில் சில புதிய காரணங்களும் ஏற்பட்டன. ஆகவே இரண்டு தேசங்களுக்கும் யுத்தம் நடப்பது அவசியமாய் விட்டது. ப்2ரான்ஸ் தேசத்தில் ப்2ளா/2ன்டர்ஸ் (Flanders) என்ற ஒரு மாகாணம் அக்காலத்தில் கைத்தொழிலில் சிறந்து நின்றது. இங்கிலண்ட் தேசம் அப்பொழுது வியவசாயத்திலும் ஆடுகள் மேய்ப்பதிலுமே முனைந்திருந்தது. அங்கிருந்து ஆட்டு உரோமம் ப்2ளா/2ன்டர்ஸ் மாகாணத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டு கம்பளியாக நெய்யப்படுவது வழக்கம். ஆகவே, அந்த மாகாணம் ப்2ரெஞ்சு அரசருக்கு உட்பட்டிருந்தாலும், உண்மையில் அது இங்கிலண்டினிடமே அதிக சம்பந்தம் வைத்துக்கொண்டு, அன்னியோன்னியமாக இருந்து வந்தது. இங்கிலண்டும், ப்2ளா2ன்டர்ஸும் தம்தம் வளர்ச்சிக்கு ஒன்றுக்கொன்று அநுசரணையாக இருந்துவந்தன.

ப்2ளா/2ன்டர்ஸ் மாகாணத்தில் ஜென்ட், ப்3ரூஜஸ் என்ற இரண்டு செழிப்பான முக்கிய பட்டணங்கள் இருந்தன. அந் நகரங்களின் ஜனங்கள் ஏராளமான உரிமைகளைப் பெற்று மாகாணத் தலைவரையும், ப்2ரெஞ்சு அரசரையும் மதியாமல் சுயேச்சையாக இருந்து வந்தனர். அவர்களை அடக்கும் பொருட்டு ப்2ரெஞ்சு அர

ப்ஃரான்ஸ் தேசத்தில்
இங்கிலீஷ் இராஜ்ஜியம்
3ம் எட்வர்டின் காலம்
நூறுண்டுயுத்தம்.
காலே
க்ரேஸி
பாரிஸ்
ப்ரிட்டனி
மத்தியதரைக்
கடல்


(152-வது பக்கம்)

சர் பலபிரயத்தனங்கள் செய்தபொழுது நகரவாசிகள் எட்வர்வின் உதவியைக்கோரினர். அம்மாதிரி செய்தது ப்2ரெஞ்சுக் காரருக்குக் கோபத்தை உண்டாக்கியது. மேலும் இங்கிலீஷ் மாலுமிகளும், ப்2ரெஞ்சு மாலுமிகளும் அடிக்கடி கடலில் சச்சரவு செய்துகொண்டிருந்தனர். வேறு சில காரணங்களால் போப்பும் இங்கிலண்டுக்கு விரோதமாகத் திரும்பி ப்2ரெஞ்சு அரசருக்கு சிநேகமாக இருந்தார். இரண்டு தேசங்களும் மெதுவாக யுத்தத்திற்கு அடிகோலிக்கொண்டிருந்த பொழுது, அதை துரிதப்படுவதற்கு ஏற்பட்டதுபோல இன்னொரு சம்பவமும் நிகழ்ந்தது. எட்வர்வின் தாயான இஸபெல்லா ப்2ரெஞ்சு அரச குலத்தைச் சேர்ந்தவள். அவளுடைய தமையனான ப்2ரெஞ்சு அரசர் சந்ததி யில்லாமல் 1328-ல் இறக்க, அவருடைய சிறிய தகப்பனர் பிள்ளைக்குப் பட்டம் கிடைத்தது. ஏனெனில் அரசகுலத்தில் இருந்த புருஷர்களுக்குள், அவரே, இறந்துபோன அரசருக்கு நெருங்கிய பந்துவாயிருந்தார். மேலும் ஐரோப்பாக்கண்டத்தில் அநுஷ்டானத்தில் இருந்துவந்தஸா/2லிக்லா என்ற சட்டத்தின்படி ஸ்திரீகள் பட்டத்திற்கு வருதல் கூடாது. ஆகவே, இறந்துபோன அரசருடைய சகோதரியான இஸபெல்லாவுக்கு இராணியாகும் உரிமை இல்லாமல் போயிற்று. ஆனல் அவள் ஒரு குயுக்தி செய்து விநோதமாகத் தர்க்கம் செய்ய ஆரம்பித்தாள். மிகவும் நெருங்கிய வார்சுதாரியான தான் ஸ்திரீயென்ற தோஷத்தினல் பட்டத்தை இழப்பது சரியேயானலும், அது தன்மூலமாகத் தனது புத்திரரான எட்வர்டுக்கே கிடைக்க வேண்டுமென்றி, தன்னைத் தாண்டி வேறொரு தூரபந்துவுக்குப் போகக்கூடாது என்று அவள் வாதம் செய்தாள். அவள் செய்த வாதம் நியாயமல்லவென்பது அவளுக்கும் எட்வர்டுக்கும் தெரிந்த விஷயமே. இஸபெல்லாவே உரிமையற்றவளானல், அவளுடைய சந்ததியாரும் தகுதியற்றவரென்பது வெளிப்படை. ஆனல் எட்வர்ட் தாம் மீண்டும் பழைய பிரதேசங்களைப் பெற வேண்டுமென்ற ஆசையினல் தூண்டப்பட்டு, 1340-ல் ப்2ரெஞ்சு மன்னர் என்ற பட்டத்தையும் வகித்துக் கொண்டார். அதனல் இரண்டு தேசங்களுக்கும் சண்டை நடப்பது முற்றிலும் அவசியமாய் விட்டது. அப்பொழுது தொடங்கிய யுத்தத்திற்கு நூறுவருஷ யுத்தம் (The Hundred year's War)

என்று பெயர் கொடுக்கப்பட் டிருக்கிறது. மூன்றாவது எட்வர்ட் காலத்திற்குப் பின் அவரது சந்ததியாரான அரசர்களும் அந்த யுத்தத்தைத் தொடர்ச்சியாக நடத்திச் சென்றதனால், அதற்கு அந்தப் பெயர் ஏற்பட்டது. ஆனால் நூறுவருஷ காலம் முற்றிலும் இடைவிடாமல் போர் தொடர்ச்சியாக நடக்கவில்லை யானாலும், அவ்வளவு நீண்டகாலம் அவ்விரு தேசங்களுக்கும் நட்பே ஏற்படாமலிருந்து வந்தது. இங்கிலீஷ் அரசர்கள் பெயருக்கு மாத்திரமாவது ப்ரெஞ்சு மன்னரென்ற பட்டத்தை வெகுகாலம் வரையில் தரித்துக் கொண்டனர். ஆனால் அதில் ப்ரெஞ்சுக்காரரது கட்சியே முற்றிலும் நியாயமானது. இங்கிலீஷ் அரசர்கள் அதிக்கிரமமான உரிமையை யடைய முயற்சித்ததைத் தடுப்பது ப்ரெஞ்சுக்காரர்களுக்குக் கட்டாயமாகி விட்டது. ஆனால் கடைசியில் இங்கிலீஷ் அரசருடைய முயற்சி பலியாமல் போகவே, அவர்கள் வகிக்க ஆவல்கொண்ட உரிமை அவர்களுக்கு வாய்க்காமலே போய்விட்டது.

1339-40-ல் எட்வர்ட் யுத்தம் செய்யத் தயாராகி ப்ரான்ஸ் மீது படையெடுத்துச் செல்ல, ப்ளான்டர்ஸ் வாசிகளும் மற்றும் பிறரும் அவருக்கு உதவி புரிந்தனர். 1340-ல் ஸ்லே (Sluys) என்ற துறைமுகப் பட்டினத்திற்கருகில் ஒரு பெரிய கடல் போர் நிகழ்ந்ததில், ப்ரெஞ்சு கப்பற்படை முறியடிக்கப்பட்டது. இங்கிலீஷ்காரர்கள் கடலின் எஜமானர்களாய் விட்டனர். ஆனால் நிலச் சண்டைகளில் இங்கிலீஷ்காரர் முதலில் அதிக வெற்றிபெறவில்லை.

1346-ல் எட்வர்ட் மறுபடியும் நார்மண்டியின்மீது படை யெடுத்துச்சென்றார். அப்பொழுது அவர்தமது பிள்ளையான பதினாறு வயது நிறைந்த எட்வர்ட் என்பவரையும் அழைத்துச் சென்றார். அந்த இளவரசர் யுத்தம் செய்வதில் கீர்த்திபெற்று, பின்னால் அவ ரணிந்திருந்த கவசத்தின் காரணமாக, 'கரிய இளவரசர்' (Black-Prince) என்ற பெயரை யடைந்தார். இங்கிலீஷ் படை சென்ற வழியெல்லாம் கொள்ளையும் அமளியும் நடத்திக்கொண்டு ப்ரான்ஸ் தேசத்தின் தலைமை நகரமான பாரிஸ் பட்டணத்திற்கருகில் சென்றது; உடனே ப்ரெஞ்சுக்காரர்கள் அதைத் திருப்பியடித்துத் துரத்திக்கொண்டு வந்தனர். க்ரேஸி (Crecy) என்ற இடத்தில்

இரண்டு படைகளும் எதிர்த்துப் போர் புரிந்தன. இங்கிலீஷ் சேனைத் தலைவர்கள் காலாட் படையையே நம்பி அதை முன்னால் நிறுத்தி வைத்து, இரண்டு பக்கங்களிலும் வில்லாளிகளை நிற்க வைத்து பின்னால் குதிரைப் படையை நிறுத்தி யிருந்தனர். ஆனால் ப்2ரெஞ்சு சேனை எண்ணிக்கையில் அதிகமாயிருந்த தானாலும், அது சரியான கட்டுப்பாட்டிற் குட்படாமல், பழைய முறையை அநுசரித்து நடந்துகொண் டிருந்ததன்றி, குதிரைப் படையையே முக்கியமாக நம்பி இருந்தது. ப்2ரெஞ்சுப் படை ஏற்கனவே களைப்படைந்திருந்தது. ஆனால் தளகர்த்தர்கள் அதை அறிந்து கொள்ளாமல் உடனே யுத்தம் செய்யத் தொடங்கினார்கள். அவர்களுடைய குதிரை வீரர்கள் இங்கிலீஷ் காலாட்படையின்மீது பல தடவை மோதியடித்தும் அதைக் கலைக்க முடியவில்லை. "கரிய இளவரசர்," நிரம்பவும் திறமையாகப் போர்புரிந்து எதிரிகளைக் கலக்கி ஓட்டிவிட்டார். க்ரெஸி யுத்தத்தில் இங்கிலீஷ்காரருக்கே பூர்த்தியான ஜயம் கிடைத்தது; அவர்களுடைய சேனை ஐரோப்பா முழுதிலும் போற்றப்பட்டது. அதன் பின்பு இங்கிலீஷ் சேனை திரும்பி வருகையில் கா/2லே (Calais) என்ற ப்2ரெஞ்சு நகரத்தை முற்றுகையிட்டது. 1347-ல் அந்த நகரம் எட்வர்டின் வசமாயிற்று. அந்தப் பட்டணம் இங்கிலண்டிற்குமிகவும் சமீபமாகவும் நேராகவும் கடற்கரையோரத்திலும் இருப்பதாலும் அதன்மூலமாக இங்கிலீஷ் சேனையை ப்2ரான்ஸ் தேசத்திற்குள் கொண்டு போவதற்கு வசதி ஏற்பட்டது. சுமார் இரண்டு நூற்றாண்டுகள் வரையில் கா/2லே நகரம் இங்கிலீஷ்காரரது வசத்தில் இருந்ததனால், ப்2ரான்ஸ் தேசத்தின் வாசற்படியே அவர்களிடம் அகப்பட்டதுபோல, அவர்களுக்கு அதிக கௌரவத்தை யளித்து வந்தது. க்ரெஸி, கா/2லே, முதலிய இடங்களில் அடைந்த வெற்றிகளுடன் இன்னும் சில ஜயங்களும் இங்கிலீஷ்காரருக்குக் கிடைத்தன. எட்வர்ட் இல்லாத சமயம் பார்த்து ஸ்காட் அரசர் இங்கிலண்டின்மீது படையெடுக்க, அவர் நேவில்ஸ் க்ராஸ் (Neville's Cross) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டு சிறையானார். ஆனால் அத்தனை வெற்றிகளை யடைந்தும், எட்வர்ட் சமாதானம் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. அவ

ருக்கு ஓய்வும் அதிகப் பணமும் தேவையாயின; மேலும் அவர் தமது சக்திக்கு மீறிய காரியத்தைச் செய்ய முயன்ருரென்பதும் தெளிவாயிற்று; அவருக்கு எத்தனை வெற்றிகள் கிடைத்தாலும் ப்ரான்ஸின் அரசராவதென்பது பலிதமாகாத ஆசையாய் முடிந்தது

வெளி தேசங்களில் கிடைத்த வெற்றிகளைக் கண்டு மகிழ்ச்சி கொண்டிருந்த இங்கிலீஷ்காரருக்கு சீக்கிரத்தில் ஒரு பெரிய அபாயம் ஏற்பட்டது. அதுவரையில் தேசம் செழிப்பாகவும் வளமாகவும் இருந்து வந்தது. அரசர் வெளி தேசங்களில் செய்த யுத்தங்களால் ஏற்பட்ட பணவிரயத்தைத் தவிர வேறு எவ்விதமான துன்பமும் குடிமக்களுக்கு ஏற்படவில்லை. மேலும், பல ஜனங்கள் சேனையில் சேர்ந்து கொண்டு யுத்தத்தில் கிடைத்த கொள்ளைப் பொருள்களைப் பெற்று சுகமாயிருந்து வந்தனர். அப்படி யிருக்கையில் 1348-ல் அவர்களின் பாபமோ அல்லது தெய்வத்தின் சாபமோ உருவெடுத்து வந்ததுபோல பெரிய கொள்ளைநோய் இங்கிலண்டு முழுதிலும் பரவித் தாண்டவமாடி ஊரை நாசமாக்கத் தொடங்கியது. அந்த நோயைக் "கருப்பு மரணம்" என்று (Black Death) குறிப்பது வழக்கம். அது ஏற்கனவே ஐரோப்பாவின் சிலபாகங்களில் உயிரைச் சூரையாடிவிட்டு இங்கிலண்டுக்கு வந்தது. அந்தக் கொள்ளைநோய் தொற்று வியாதிபோல வெகுவேகமாய் வியாபிக்கத் தொடங்கியது; அக்காலத்து ஜனங்கள் சாமானிய சுகாதார விதிகளைக் கூடத் தெரிந்து கொள்ளாமல் இருந்தமையால், அவர்கள் அந்தக் காட்டுத் தீய்க்கு எளிதில் இரையானுர்கள். அது பரவிய தேசங்களில் கோடிக்கணக்கான மாந்தர் ஈக்கள்போல கும்பல் கும்பலாக அழிந்து போயினர். லண்டன் நகரத்தில் 50000 ஜனங்கள் உயிர் துறந்தனர்; ஜனத் தொகையில் ஏறக்குறைய மூன்றிலொருபாகம் இருந்தவிடம் தெரியாமல் மறைந்தது. 1348-49-ல் ஒரு வருஷ காலத்திற்கதிகமாகவே அந்தக் கொள்ளை நோய் நிலைத்திருந்தது. அந்த எதிர்பாராத சம்பவத்தினுல் இங்கிலண்டின் போக்கும் சரித்திரமும் அநேகமாய் மாறிவிட்டன. வறுமையும், பிணியும், குழப்பமும் பரவப்பரவ, அநாதைகளும் ஏழைகளும் அதிகமாய்ப் பெருகிப் போயினர். ஜனங்கள் சுயநலமொன்றையே கருதுவோ

ராயினர். கடைசியாக வியவசாய முறையில் அது ஒரு பெருத்த மாறுதலைச் செய்தது. நிலத்தை உழுதுவந்த பல குடியானவர்கள் இறந்து போனமையால், பிரபுக்கள் இடுக்கண்களுக்கு இலக்காயினர். அவர்கள் தமது பண்ணையாட்களை வற்புறுத்தினர். அப்பொழுது கூலி கொடுத்து ஆட்களை வைத்து உழுவதே வழக்கமாய்விட்ட தாகையால், பண்ணையாட்கள் தாமாகவே எஜமானருடைய நிலங்களை உழுவதற்கு சம்மதிக்கவில்லை. கூலியாட்களோ சொற்பத் தொகையினராக இருந்தனராதலால், அதிகக்கூலி கேட்கலாயினர். அதன் பயனாக, கொள்ளை நோய்க்குப்பின் மிஞ்சியிருந்தவர்களையும் கொல்வதற்கு பஞ்சத்தின் கொடுமை தோன்றலாயிற்று. அதனால் கலகமும் குழப்பமும் உண்டாயின. சமூக வாழ்க்கையிலும், பொருளாதாரத் துறையிலும், அரசாங்க நிர்வாகத்திலும் எங்கும் கருப்பு மரணத்தின் பலனாக பல மாறுதல்கள் ஏற்பட்டன.

ஆனால் கருப்பு மரணத்தினால் எட்வர்டினுடைய யுத்த ஆசையும் குதூகலமும் மட்டுப்படவில்லை. அவர் யுத்தவீரர்களுடைய இனமொன்றை ஏற்படுத்தி அதன் ஆரம்பத்தில் பெருத்தவிருந்துகளை நடத்தினார். 1356-ல் இளவரசர் மறுபடியும் ப்2ரான்ஸ் தேசத்திற்குச் சென்று சண்டையிடலானார். இங்கிலீஷ் சேனை எதிரிகளால் வெருட்டப்பட்டு பாய்டியர்ஸ் (Poitiers) என்ற இடத்தில் யுத்தம் செய்ய வேண்டியதாயிற்று. அங்கு ப்2ரெஞ்சு சேனையிலும் காலாட் படையே முக்கியமாக இருந்தது. ஏனெனில் க்ரெஸி யுத்தத்திலிருந்து, அவர்கள் குதிரைப்படை உபயோகமற்ற தென்பதையுணர்ந்துகொண் டிருந்தனர். ஆனாலும் அவர்கள் அதிகப் பழக்கம் பெறாத காரணத்தால் இங்கிலீஷ்காரர்கள் பாய்டியர்ஸ் யுத்தத்திலும் ஜயம்பெற்று விட்டனர். ப்2ரெஞ்சு மன்னரும் சிறைப்பட்டார். அதைக் கண்ட ப்2ரெஞ்சுக்காரர்கள் குழம்பிப்போயினர். 1360-ல் மறுபடியும் எட்வர்ட் யுத்தத்திற்குப் புறப்பட்டதைக் கண்டு பயமடைந்து ப்2ரெஞ்சுக்காரர்கள் சமாதானத்திற்கு வந்தனர். அதே வருஷத்தில் ப்ரெடிக்னி (Bretigni) என்ற இடத்தில் சமாதானப்பேச்சுஆரம்பமாய் கா/2லேஉடன்படிக்கையில்உருவாயிற்று. அதன்படி ப்2ரெஞ்சு அரசரை விட்டுவிடுவதற்காக எட்வர்ட்

ஏராளமான பணத்தொகையைப் பெற்றுக்கொண்டு ப்2ரெஞ்சு பட்டத்தைக் கோருவதில்லையென்று உறுதிசெய்து கொடுத்து, அதற்கு ஈடாக கா/2லே, அக்விடைன் முதலிய பிரதேசங்களைப் பெற்றுக்கொண்டார். எட்வர்ட் ப்2ரெஞ்சுப் பட்டத்தை இழந்தாராலும் வேறு விதத்தில் ஒருவாறு திருப்தியடைந்தார்.

ஆனல் அவருடைய சந்தோஷம் நீடித்திருக்கவில்லை. அவர் இறப்பதற்கு முன்பே அவருடைய வெற்றிகள் எல்லாம் பழங்கதையாய்விட்டன. அது நேர்ந்த விதம் பின்வருமாறு:-அக்விடைன் என்ற மாகாணத்தை கரிய இளவரசர் பரிபாலித்து வந்தார். ஆனல் அங்கே இருந்த ப்2ரெஞ்சுக்காரர்கள் அவருடைய ஆட்சியை விரும்பாமல் துன்புறுத்திக்கொண்டே இருந்தனர். அவர்களுக்கு உதவியாக ப்2ரெஞ்சு மன்னரும் சேர்ந்துகொண்டு மறுபடியும் இங்கிலீஷ்காரருடன் போர்புரியலானர். அப்பொழுது இளவரசருக்கு உடம்பு அசௌக்கியமா யிருந்தமையால், அவர் ஊருக்குத் திரும்பவேண்டியதாயிற்று; மேலும் ப்2ரெஞ்சு சேனை அப்பொழுது அதிகமான பயிற்சி பெற்றிருந்தது. 1377-க்குள் இங்கிலீஷ்காரர் ஜயித்திருந்த பிரதேசங்களெல்லாம் அநேகமாக நழுவிப்போய் விட்டன. கா/2லே முதலிய சில பட்டணங்கள் மாத்திரமே அவர்களுக்குச் சொந்தமாயிருந்தன. எட்வர்டினுடைய அந்திய காலத்தில் அவருடைய பழைய வெற்றிகளெல்லாம் மறைந்துபோயின. க்ரெஸி, பாய்டியர்ஸ் முதலிய இடங்களில் வெற்றியடைந்த கௌரவத்தை ப்2ரெஞ்சுக்காரர்கள் பின்னர் அடைந்த ஜயத்தினல் அழித்து விட்டனர். சுதந்திர நாடான ப்2ரான்ஸின்மீது இங்கிலீஷ்காரர் நிரந்தரமான ஆதிக்கம் செலுத்த ஆசைப்பட்டது மாயமான் வேட்டையாகவே முடிந்தது.

(3) **எட்வர்டின் கடைசிக்காலம்: உள்நாட்டு வியவகாரங்கள்:**—மூன்ருவது எட்வர்ட் அரசியற்றிய ஐம்பது வருஷகாலத்தில் முன்பாதி கீர்த்தியடைந்தும், பின்பாதி சீர்கெட்டும் இருந்ததெனப் பொதுவாகக் கூறலாம். அன்னிய தேச சம்பந்தத்தில், கடைசியாக கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போனதைத் தவிர, இங்கிலண்டில் கருப்பு மரணத்தின் கொடுமையாலும், அதன்பல

ளுக விளைந்த துன்பங்களாலும் சொல்லவொண்ணுத துன்பங்களும் அயாமும் தோன்றின. முன்னரே கூறியபடி, கூலியாட்களிற் பலர் இறந்துபோக, மிகுதியிருந்த சிலர் அநியாயமான கூலிகேட்டனர். அதனுல் சாமன்களின் விலை உயர்ந்துபோயிற்று. அரசாங்க வரிச்சுமையையே தாங்காமல் தவித்த பிரஜைகள் உணவுப்பொருள்களை வாங்குவதிலும் பிரயாசைப்பட்டுத் தவிக்கலாயினர். உடனே அரசாங்கத்தார் 1351-ல் தொழிலாளர் சட்டம் (Statute of Labourers) ஒன்று இயற்றி, கூலியும் அகவிலையும் முன்போலவே இருக்கவேண்டுமென்று தீர்மானித்தனர். ஆனுல் அம்மாதிரி சட்டமியற்றுவது சுலபமாயிருந்ததேயன்றி அதன்படி நடத்திவைப்பது கூடாததாயிற்று. அதிகக் கூலியின்றி கூலியாட்கள் வேலைசெய்ய மறுத்தனர். ஆகவே நிலத்தைச் சாகுபடி செய்யாமல் இருப்பதைவிட சட்டத்தை மீறுவதே சிறந்ததென்று ஜனங்கள் எண்ணினர். அதுவுமன்றி அதிகக் கூலிகொடுத்து தானியங்களைப் பயிர் செய்வதற்கு பதிலாக பலர் ஆடுமாடுகளை வளர்த்து மேய்க்க லாயினர். ஆகவே நாளடைவில் தொழிலாளர்களுக்குப் போதிய வேலை அகப்படாமல் போயிற்று. ஏனெனில் ஒரு சிறுவன் ஓர் ஆட்டு மந்தையை மேய்த்துவிடுவா ஞதலால் அந்தத் தொழிலுக்கு அதிக ஆட்கள் தேவையில்லை. நிலத்தை உழுவதென்ருலோ அதிகமான ஆட்களை நியமிக்கவேண்டும். அதுவன்றி எஜமானர்களுக்கும் தொழிலாளருக்கும் பல வழிகளில் சச்சரவுகள் ஏற்பட்டுக்கொண்டே யிருந்தன. எங்கும் அதிருப்தியும் அமைதியின்மையுமே காணப்பட்டன.

அந்தக்காலத்தில் மதசம்பந்தமான சில இயக்கங்களும் இங்கிலண்டில் இருந்து வந்தன. சாதாரணமாக ப்ரெஞ்சுக்காரரே போப்பின் பதவியை வகித்து வந்தமையால், இங்கிலிஷ்காரர் அதுபற்றி சந்தேகம் கொண்டனர். போப்புக்குச் செலுத்தும் வரி தமது பகைவருக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறதோ என்று யாவரும் நினைத்திருந்தனர்; ஜான் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி தம்மால் போப்புக்குக்கீழ்ப்படிந்திருக்கமுடியாதென்று எட்வர்ட் உறுதியாகக் கூறிவிட்டார். ஜான் தம்முடைய சொந்த ஹோதாவில் செய்துகொண்ட ஓர் இழிவான உடன்படிக்கை பிரஜைகளை எவ்விதத்

திலும் கட்டுப்படுத்தாதென்று அவர்கள் வாதம் செய்தனர். மேலும் இன்னொரு விசேஷமான மாறுதலும் ஏற்பட்டது. நார்மன் ஆட்சி ஆரம்பித்தது முதற்கொண்டு ப்ரெஞ்சு பாஷையே கனவான்களால் பேசப்பட்டு இராஜ பாஷையாகவும் இருந்துவந்தது. ப்ரெஞ்சுக் காரர் மீதிருந்த ஆத்திரத்தை வைத்துக்கொண்டு அந்த பாஷையை யும் விலக்கிவிட்டு, இங்கிலீஷ் பாஷையையே இராஜ பாஷையாக மாற்றிக்கொண்டனர். முக்கியமாக ச்சாஸர் (Chaucer) என்ற கவி இங்கிலீஷிலேயே பல இலக்கியங்களை எழுதினார். அதேசமயத்தில் மதசம்பந்தமாகவும் ஜனங்களுக்கு ஒரு புதிய உணர்ச்சி இருந்துவந் தது. போப்களும் மற்ற குருமார்களும் கொஞ்சமேனும் மதப்பற்று என்பதில்லாமல் பாமர ஜனங்களைவிட கேவலமாகவும் அருவருக்கத் தக்க விதமாகவும் நடந்து கொண்டனர். ஏசுகிறிஸ்துவோ உலகைத் துறந்து பிறரது நன்மைக்காகத் தமது உயிரையும் கொடுத்திருக்க அவரைப் பின்பற்றிவந்த மத குருமார்கள் அவரது கொள்கைக்கு நேர் விரோதமாகவே ஒழுகிவந்தனர். உயர்ந்த பதவிகளை யடையப் போட்டி போடுவதும், ஜனங்களிடமிருந்து வரி வசூலிப்பதுமே அவர்களது முக்கிய வேலையாயிருந்தன; "பாமர ஜனங்களான ஆட்டுமந்தையை மேய்த்துப் பாதுகாக்கும் இடையர்களாய்" இருப் பதை விட்டு அவர்கள் ஆட்டு மந்தையின் நன்மையை கவனியாமல் சுயநலத்தைக் கருதி வாழ்ந்தனர். மதஸ்தாபனத்திற்கு ஏராளமான சொத்தும் இருந்தது. எனவே அவர்களது விபரீதமான ஆசாபாசங் களையெல்லாம் ஒழித்து, மதஸ்தாபனத்தைச் சீர்திருத்தி, மதகுருமார் களின் வாழ்க்கையைப் பரிசுத்தமாக்க வேண்டுமென்று பலர் அபிப் பிராயங் கொண்டனர். முக்கியமாக ஜான் விக்ளிப் (John Wycliffe) என்பவர் மேற்கூறிய சீர்கேடுகளைக் களைய ஆவல்கொண் டார். மதஸ்தாபனத்திற்கு விடப்பட்டிருந்த ஏராளமான சொத்து களே அதன் சீர்கேடுகளுக்குக் காரணமென்பதை உணர்ந்து மதகுரு மார்கள் அனைவரும் புராதன காலங்களிலிருந்ததுபோல ஏழ்மை நிலைமையிலிருந்தே வாழவேண்டுமென்றும் அவர்கள் இராஜீய விஷ யங்களில் கலந்து கொள்ளக்கூடாதென்றும் வற்புறுத்தினார். மேலும் போப் கடவுளுடைய பிரதிநிதி போல நடப்பது பெரிய மோசடி யென்றும், ஒவ்வொரு மனிதனுக்கும் கடவுளுடன் நேரான சம்பந்த

மிருப்பதால், அவ்விருவருக்கும் நடுவில் மத்தியஸ்தன் ஒருவன் இருப்பது அநாவசியமென்றும், கிரிஸ்துவினுடைய வாழ்க்கையைப் பின்பற்றி நடப்போருக்கு மாத்திரமே மரியாதை செலுத்தவேண்டுமென்றும் உபதேசம் செய்து வந்தார்.

எட்வர்ட் அடிக்கடி யுத்தம் செய்ய வேண்டி யிருந்தமையால் அவர் தமக்கு அவசியமான பணத்தைப் பெறும் பொருட்டு அடிக்கடி பார்லிமென்ட் சபையைக் கூட்டி அதன் ஆலோசனையைக் கேட்டுக் கொண்டார். எட்வர்டின் அந்திய காலத்தில் அவருக்குப் பல துன்பங்கள் நேரிட்டன. அவருடைய குமாரர்களெல்லோருக்கும் அவர் பெரிய பிரபுக்களுடைய குடும்பங்களில் விவாகம் செய்து வைத்தார். முக்கியமாக அவருடைய மூன்றுவது குமாரர் ஜான் ஆப் கான்ட் (Jaun of Ghant) தமது விவாகத்தின் மூலம் லங்காஸ்டர்பிரபு வானுர். மூத்தவரான கரிய இளவரசரும் அவருடைய சகோதரரான லங்காஸ்டர் பிரபுவும் வெவ்வேறு கட்சிகளுக்குத் தலைமை வகித்து சச்சரவிட்டு வந்தனர். வயது சென்ற அரசர் லங்காஸ்டர் பிரபுவின் ஆதிக்கத்திற்குட்பட்டு நடந்தார். 1376-ல் ஒரு பார்லிமென்ட் சபை கூடி, கரிய இளவரசருடைய ஆலோசனைப்படி பல நல்ல காரியங்களைச் செய்தது. அதனுல் அது நல்ல பார்லிமேன்ட் (The Good Parliament) என்று குறிக்கப்படுகிறது. ஆனுல் அதன்பிறகு கரிய இளவரசர் மரணமடைந்து விட்டார்; உடனே லங்காஸ்டர் பிரபு சிறிதுகாலம் விக்ளிபுடன் சேர்ந்துகொண்டு மதகுருமார்களைத் தாக்கினர். அந்தக் குழப்பத்தினிடையில் மூன்றுவது எட்வர்ட் 1377-ல் பரலோகம் சேர்ந்தார். அவருடைய மரணத்தருவாயில் பக்கத்திலிருந்த சேவர்கள் அவரவர்கள் கையில் அகப்பட்டபொருட்களை எடுத்துக்கொண்டு ஓட்டமெடுத்தார்கள்; அவருடைய வைப்பாட்டியோ அபாரமான பதிபக்தி காட்டி அவர் அணிந்திருந்த மோதிரங்களையும் கழற்றிக்கொண்டு எவருக்கும் தெரியாதபடி வெளியேறிவிட்டாள். அவருடைய முடிவுகாலம் நிரம்பவும் பரிதாபகரமாக இருந்தது. அவர் சுயநல அபிமானத்துடனும், தாம் கீர்த்தியடைய வேண்டுமென்ற நோக்கத்துடனுமே வாழ்ந்தமையால், அவரால் தேசத்திற்கு நிரந்தரமான நன்மை எதையும் செய்யமுடிய

வில்லை. அவருக்குக் கிடைத்த யுத்த வெற்றிகளும் பயனற்றவை யாயின. அவருடைய ஜனங்களும் அவரை கௌரவிக்கவில்லை; புத்திரர்களும் மதிக்கவில்லை. அரண்மனையிலும் வெளியிலும் பரவி யிருந்த குழப்பத்தி னிடையில் அவர் மண்ணுலகை நீத்தார்.

---

## 20-வது அதிகாரம்.

---

### இரண்டாவது ரிச்சர்ட்.

(1) குடியானவரின் கலகம்:—மூன்றுவது எட்வர்டினுடைய மூத்த புத்திரரான 'கரிய இளவரசர்' தந்தைக்கு முன்பே இறந்துவிட்டாராதலால், பத்துவயதே யடைந்திருந்த அவரது குமாரர் இரண்டாவது ரிச்சர்ட் என்ற நாமதேயத்துடன் முடி சூட்டப்பெற்றார். அவரது இளமைப் பருவத்தைக் கருதி அவரது சிறிய தந்தையான ஜான் ஆப்2 ஹான்ட், அல்லது, லங்கா/2ஸ்டர் பிரபுவே இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்தவேண்டியதாயிற்று. அவர் பலவழிகளில் ஜனங்களின் பகைமையை உண்டாக்கிக் கொண்டார். முந்திய ஆட்சியின் கடைசிக் காலத்தில் இருந்து வந்த குழப்பம் அப்போதும் இருந்து வந்தது. வரிகள் ஏராளமாக வசூலிக்கப்பட்டன; பிரபுக்கள் ஒருவருடனொருவர் சச்சரவிட்டுக் கொண்டிருந்தனர். ஓர் இளஞ் சிறுவரை அரசாகப்பெற்ற தேசம் எப்பொழுதும் அதே நிலைமையில் இருப்பது சர்வ சாதாரணமான விஷயம். உள்நாட்டுக் குழப்பத்தினால் நூறுவருஷ யுத்தத்தைத் தொடர்ச்சியாக நடத்திச் செல்வது சாத்தியமில்லாமல் போயிற்று.

அதே சமயத்தில் ஐரோப்பாவிலும் ஜனங்கள் எவ்விஷயத்திலும் அதிருப்தியுற்றிருந்தனர். முக்கியமாக, போப்புகளின் மதிப்புக் குறையலாயிற்று. இங்கிலண்டில் விக்ளிப்2 என்பவர் ஏற்கனவே மதகுருமார்களைத் தாக்கி உபதேசம் செய்து வந்தார். படிப்படியாக அவர் பல பழைய அநுஷ்டானங்களையும் எதிர்க்கலானார்.

உதாரணமாக, மாதா கோவில்களில் நடக்கும் பூஜை சமயத்தில் வழங்கப்படும் உரொட்டியும் மதுவும் கிரிஸ்து நாதருடைய சரீரமும் இரத்தமுமாக மாறிவிடும் என்ற கொள்கை (Doctrine of Transubstantiation) பலராலும் நீண்டகாலமாக நம்பப்பட்டு வந்ததானலும், விக்ளிப் அது வெறும் கட்டுக்கதையென்று கூறிவிட்டார். அதனால் அவரைப் பின்பற்றி வந்தவர்களில் சிலர் அவரை விட்டுச் சென்றனர். ஆனால் பல வித்துவான்களும் அறிவாளிகளும் அவருடன் சேர்ந்துகொண்டனர். அவருடைய சிஷ்யர்கள் 'ஏழை உபதேசிமார்கள்' என்ற பெயருடன் தேசம்முழுதும் சென்று பிரசங்கங்கள் புரிந்தனர். அவர்கள் கிரிஸ்தவ வேத புஸ்தகமான பைபிளின் கொள்கைப்படி ஜனங்கள் நடக்கவேண்டுவதொன்றே முக்கியமானதன்றி, மத குருமார்களை வணங்குவது அநாவசியமென்று உபதேசம் செய்தனர். பைபிள் புஸ்தகம், லாடின் பாஷையிலிருந்து இங்கிலீஷில் மொழி பெயர்க்கப்பட்டது. விக்ளிப் 1384 ல் இறந்தார்; ஆனால் அதற்குப் பின்னும் அவருடைய சிஷ்யர்கள் 'லாலர்ட்ஸ் (Lollards) என்ற பெயரை வகித்து அஞ்சா நெஞ்சத்துடன் அவருடைய கொள்கைகளை பகிரங்கப்படுத்தி வந்தனர். இவ்விதம், இங்கிலண்டில் கிரிஸ்துமதம் ஸ்தாபிக்கப்பட்டு ஏழு எட்டு நூற்றாண்டுகளுக்குப் பின், மத ஸ்தாபனத்திற்கு ஒரு பெரிய எதிர்பாராத எதிர்க்கட்சி தோன்றலாயிற்று.

இரண்டாவது ரிச்சர்டின் ஆட்சியில் முக்கியமான ஒரு கலகம் நடந்தது. 1381-ல், ஏற்கனவே அதிருப்தியுற்றிருந்த குடிமக்களிற் பலர் அரசாங்கத்திற்கு விரோதமாகக் கிளம்பினர். அந்த சம்பவத்திற்கு 'குடியானவரின் கலகம்' (Peasants Revolt) என்ற பெயர் வழங்கி வருகிறது. சென்ற அதிகாரத்தில் கருப்பு மரணத்தினால், விளைந்த சேதங்களை விவரித்தோமல்லவா? அதனால் சமூக அமைப்பில் பல மாறுதல்கள் தோன்றின. கூலிவேலைக்கு எங்கும் ஆள்கள் ஏராளமாக வேண்டியிருந்தனர். ஆனால் வேலைக்காரருடைய கூலியை நிர்ணயப்படுத்தி மூன்றாவது எட்வர்ட் காலத்தில் ஒரு சட்டமியற்றப்பட்டதல்லவா? அதனால் அதிகக் கூலியைப் பெற வகையில்லாமல் போகவே, கூலிவேலைக்காரர் நிரம்பவும் அதிருப்தியடைந்து,

மிராசுதார்களுடன் அடிக்கடி சண்டையிட்டு வந்தனர். ஆனல் அவர்களுடைய நிலைமையைக் காட்டிலும் பண்ணையாட்களுடைய நிலைமை அதிக பரிதாபகரமாய் விட்டது. கூலி வேலைக்காரர்கள் எவருக்கும் கட்டுப்படாமல் சுதந்திரமாய்த் தொழில் செய்துவந்தவர்கள்; அவர்கள் விரும்பியபொழுது, தாங்கள் கேட்ட கூலி கிடைத்தால் மாத்திரமே வேலை செய்வார்கள்; இல்லாவிடில் சும்மா இருந்து விடுவார்கள்; அவர்களைக் கட்டாயப்படுத்தி வேலை வாங்க எவருக்கும் உரிமை கிடையாது. ஆனல் பண்ணையாட்களுடைய நிலைமை வேறு மாதிரியானது. நார்மன் வெற்றிக்குப் பின், தமது நிலங்களை இழந்த இங்கிலீஷ்காரர்களெல்லோரும் நார்மன் பிரபுக்களுக்கு அடங்கிய பண்ணையாட்கள் ஆய்விட்டனர். அதாவது அடிமைகள்போல அவர்கள் எஜமானர்களுடைய நிலத்தை உழுது பயிரிட்டு, அதை விட்டு வெளியேற வழியில்லாமல் அவர்களால் கொடுக்கப்படும் உணவைப் பெற்று வாழவேண்டும். ஆனல் 14-ம் நூற்றுண்டிற்குள் அம்மாதிரியிருந்த பண்ணையாட்களின் தொகை குறைந்து விட்டது. அவர்களிற் பலர் தம்முடைய எஜமானர்களாலேயே சுயேச்சையாக விடப்பட்டனர். ஏனெனில் பண்ணையாட்களைத் துன்புறுத்தி வேலை வாங்குவதைவிடக் கூலி கொடுத்து வேலையாட்களை அமர்த்தியதில் அவர்களுக்கு வேலை நன்ருக நடந்ததாகையால், அதிக இலாபமும் கிடைத்தது. மேலும் அம்மாதிரி அடிமை நிலையில் அவர்களை வைத்திருந்தது பலருக்கு அநீதியென்று புலப்பட்டது. எனவே 13, 14-ம் நூற்ருண்டுகளில் பண்ணையாட்களின் தொகை குறைந்திருந்தது. ஆனல் 'கருப்பு மரணத்தின்' பயனுக, கூலிவேலை செய்தவர்கள் அதிகக் கூலி கேட்டதனுல், சில எஜமானர்கள் தம்மிடம் மிஞ்சி நின்ற பண்ணையாட்களை மறுபடியும் வற்புறுத்தி வேலை வாங்க ஆரம்பித்தனர். அதனுல், வேலைக்காரர்களுக்கு அதிகமான கூலி கிடைக்காமையாலும், பண்ணையாட்கள் அதிக வேலைசெய்ய வேண்டியிருந்தமையாலும் இரண்டு இனத்தாரும் அதிருப்தியுற்று, தமது குரோதத்தை அரசாங்கத்தார்மீது காட்டத் தொடங்கினர். பொதுவாக நாட்டில், ஏதேனும் தீங்கு சம்பவித்தால், அரசாங்கத்தார்மீது பழி சுமத்துவதே இயற்கை. மேலும் தனவந்தர்களும் கனவான்

களும் சுகமநுபவித்துக்கொண்டு உத்தியோகங்களையும் பதவிகளையும் வகித்து வருவதைக் கண்ட சாமானியஜனங்கள் தம்முடைய ஏழ்மை நிலைமைக்கு அவர்களே காரணமானவர்கள் என நினைத்தனர். உலக சிருஷ்டியின் ஆரம்பத்தில் எல்லோரும் சமானமாகவே இருந்ததாக வும், பிற்காலத்திலேயே சில மனிதர்கள் அக்கிரமமாக நடந்து அதிக மான சொத்துகளைச் சேர்த்துக் கொண்டனரென்றும், மறுபடியும் சமூகத்தைத் திருத்தியமைத்து எல்லோரையும் சமானமாகச் செய்ய வேண்டுமென்றும் சிலர் உபதேசம் செய்தனர். ஜான் பால் (John Ball) என்ற மதகுரு ஒருவர் "நாம் அனைவரும் ஆடம், ஈவ்* என்ற ஒரே தந்தை, தாய் வயிற்றிலிருந்து தோன்றினோம்; அப்படி யிருக்க கனவான்கள் நம்மைக் காட்டிலும் பெரிய மனிதரென்று எப் படிச் சொல்லிக்கொள்ள முடியும்?" என்று தர்க்கித்தார். இன்னும் சிலர் "ஆடம் உழுது பயிரிட்டும், ஈவ் நூல்நூற்றும் வாழ்ந்த காலத் தில், எந்த கனவான் இருந்தான்?" என்று வினவினர். இம்மாதிரி சகலமான துறைகளிலும் தேசத்தில் ஒரு பெரிய புரட்சி ஏற்படும் போலத் தோன்றியது.

ஏற்கனவே, புகைந்துகொண்டிருந்த கலக நெருப்பு கொழுந்து விட்டு எரியும் தருணம் சீக்கிரத்தில் ஏற்பட்டது. அரசருடைய சிறிய தந்தையான லங்காஸ்டர் பிரபு மிகவும் கேவலமாக இராஜ் ஜிய பரிபாலனம் செய்துவந்தார். 1381-ல் அவர் தலைவரி (Poll-tax) யொன்றை விதித்தார். (அதாவது ஒவ்வொரு மனிதனும் தலைக்கு இவ்வளவென்று அவசியம் வரிகொடுத்தே யாகவேண்டும்) இங்கிலண்டின் தெற்குக்கோடியிலுள்ள கென்ட்மாகாணத்து ஜனங் கள் சுயேச்சையாக நடந்துகொள்ளும் சுபாவ முடையவர்களாதலால், வாட் டைலர் (Wat tyler) என்பவருடைய தலைமையின்கீழ்ச் சேர்ந்துகொண்டு அந்த வரியைக் கொடுக்க மறுத்து, கலகம் விளை விக்கும் நோக்கத்துடன் லண்டன் நகரை நோக்கி வந்தனர். அதே சமயத்தில் வேறு சில பாகங்களிலும் அதுபோன்ற கலகங்கள் நடை

---

* கிரிஸ்தவரின் கொள்கைப்படி ஆடம், ஈவ் என்பவர்களே உலகத்தில் முதன்முதலாகத் தோன்றிய ஆணும், பெண்ணும். அவர்களிடமிருந்து உற்பத்தியானவர்களே உலகத்து ஜனங்கள்.

பெற்றன. லங்காஸ்டர் பிரபுவினுடைய வீடு கொளுத்தப்பட்டுப் போய்விட்டது. சில அரசாங்க உத்தியோகஸ்தர்கள் கலகக்காரருடைய வாள்களுக்கு இரையானார்கள். அரசாங்கமே நடவாமல் ஸ்தம்பித்து நின்றுவிடும் போலாயிற்று. லங்காஸ்டர் பிரபுவும் மற்ற மந்திரிகளும் என்ன செய்வதென்பதை அறியாது திகைக்கலாயினர். அப்பொழுது பதினறு வயதேயடைந்திருந்த சிறுவரான ரிச்சர்ட் மன்னர் தமது மந்திரிகளைப்போல அஞ்சியிராமல், உறுதியாகவும், தைரியமாகவும் நடந்துகொண்டு அந்த பயங்கரமான கலகங்களை விலக்கினர். அவர் கலகக்காரர்களை நேரில் கண்டு அவர்களுடைய வேண்டுகோள்களை யெல்லாம் பூர்த்தி செய்வதாக வாக்களித்தார். ஆனல் கலகக்காரர்களின் தலைவரான வாட் டைலர் அந்த சந்தர்ப்பத்தில் கொல்லப்பட்டுப் போனமையால், அரசரது நிலைமை துன்பகரமானதாயிற்று. அவர் மனேதைரியத்தை இழக்காமல், தாமே ஜனங்களின் தலைவரா யிருப்பதாக வாக்குறுதியளித்து, கலகம் செய்த கூட்டத்தைக் கலைத்து அனுப்பிவிட்டார். பிறகு சிப்பாய்கள் தமது வேலையைச் செய்யத் தொடங்கி கலகம் செய்தவர்களைப் பிடித்து எங்கும் துன்புறுத்த ஆரம்பித்தார்கள். அரசரும் தாம் கொடுத்த வாக்குறுதி அபாய சமயத்தைக் கருதிச் செய்து கொடுக்கப்பட்டதென்று கூறி அதை மாற்றிவிட்டார். பண்ணையாட்கள் மறுபடியும் பழைய நிலைமையை யடைந்துவிட்டனர். ஆகவே, 'குடியானவர் கலகம்' எந்தக் கருத்துடன் நடந்ததோ, அது நிறைவேருமல்போக, அவர்களுக்கு தோல்வி ஏற்பட்டதானலும் நாளடைவில் அதனல் ஒரு நன்மை உண்டாயிற்று. பண்ணையாட்களை அதிகமாக வற்புறுத்திக் கொடுமையாக நடத்தினல், அவர்கள் கலகம் செய்யத் தொடங்குவார்களென்ற அச்சம் மிராசுதார்களை நியாயமாக நடந்துகொள்ளும்படி செய்தது. ஆகவே, அந்த கலகம் நடந்து ஒரு நூற்ருண்டுக்குப்பின், இங்கிலண்டின் பண்ணையாட்கள் முன்போல அடிமை நிலையில் வைத்து நடத்தும் வழக்கம் அடியோடு மறைந்துபோய் விட்டது. மேலும் அரசாங்கத்தாருக்கும் அந்தக் கலகத்தின் பயனுக நல்ல விவேகம் உதயமாகவே, இராஜ்ஜிய பரிபாலனமும் நன்ருக நடைபெற அது ஒரு தூண்டுகோலாக முடிந்தது.

(2) ரிச்சர்டின் ஆட்சி: லங்காஸ்டர் வம்சத்தாரின் வெற்றி:- 1381-ல் நடந்த கலகத்தில் நிரம்பவும் சாமர்த்தியமாக நடந்து கொண்ட ரிச்சர்ட் பின்னால் அதற்கு முற்றிலும் மாறாக நடந்துகொண்டார். தைரியமும் உறுதியும் திறமையும் அவரை விட்டுப் போய்விடவில்லை யானாலும் அவருடைய அவசர புத்தியும், குரோத குணமும், அதிகாரப் பேராசையும் அவரைக் கெடுத்துவிட்டன. தாம் நினைத்தபடியே நடக்கும் பிடிவாதமும், டாம்பீக குணமுமே அவருக்குப் பெருங்கேடுகளாய் முடிந்தன. அவர் சுயநலங் கருதாமல் உழைத்த கனவான்களை நம்பாமல் தமக்கு வேண்டிய மனிதரிடமே சகல நிர்வாகத்தையும் ஒப்படைத்தது பிரஜைகளுக்கு அதிருப்தியை உண்டாக்கியது. சில பிரபுக்கள் ஒன்றுகூடி அரசரையும் அவருடைய சகாக்களையும் நல்வழிப்படுத்த முனைந்தனர். 1386-ல் பார்லிமெண்ட் சபையார்கூட அரசருடைய சகாக்களைக் கண்டித்துவிட்டு அரசர் தமக்கிணங்கி நடப்பதாக பிரதிக்ஞை செய்துகொடுக்கும்படி வற்புறுத்தினர். ஆனால் ரிச்சர்ட் அப்படியே செய்வதாக வாக்குறுதி செய்து கொடுத்துவிட்டு, பிறகு பழைய வழிகளிலேயே திரும்பிவிட்டார். மறுபடியும் பிரபுக்களுக்கும் அவருக்கும் நீடித்த போராட்டமேற்பட்டது. ஆனால் முடிவில் 1389 முதல் சில வருஷகாலம் ரிச்சர்ட் எல்லோருக்கும் திருப்தியுண்டாகும்படி அரசாட்சி புரிந்து வந்தார். லங்காஸ்டர் பிரபுவான ஜான் ஆப் காண்ட் (அரசருடைய சிறியதந்தை) அரசருக்கு நல்ல புத்திமதிகள் கூறிவந்தார். அவர் இளமையில் பலவாறு தவறான வழிகளில் நடந்துகொண்டிருந்தாலும் கடைசிக் காலத்தில் மேலான மனப்போக்குடன் நடந்துகொண்டார். அவருடைய மூத்த குமாரரான ஹென்றி என்பவர் ஹெரிபோர்ட் பிரபுவாக்கப்பட்டார். 1397-க்குப்பின் ரிச்சர்ட் அரசர் தமது பழைய வழிகளிலேயே மீண்டும் செல்லலானார். கெஞ்சினால் மிஞ்சுவதும் மிஞ்சினால் கெஞ்சுவதுமே அவருடைய கொள்கையாக இருந்து வந்தது. அப்பொழுது அரசருக்கும் ஹெரிபோர்ட் பிரபுவான ஹென்றிக்கும் ஒரு விஷயத்தில் மனஸ்தாபம் ஏற்பட்டது. ஹெரிபோர்ட் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டார். 1399-ல் ஜான்

ஆப்2 மாண்ட் இறந்த பிறகு, அவருடைய குமாரரான ஹென்றி (ஹெரிபோர்ட் பிரபு) தமது தந்தை வகித்திருந்த லங்காஸ்டர் பிரபு வென்னும் பட்டத்தைப் பெறவேண்டு மல்லவா? அதை அவர் பெறுவதற்கு அரசர் சம்மதிக்க வில்லை யாதலால், ஹென்றி தமது உரிமையைப் பாதுகாக்கும் பொருட்டு தேசப்பிரஷ்ட உத்தரவை மீறி இங்கிலண்டில் வந்திறங்கினர். ரிச்சர்டின்மீது அருவருப்புக் கொண்டிருந்த பலர் அவருடன் சேர்ந்துகொண்டனர். போதாக் குறைக்கு ரிச்சர்ட் அப்பொழுது அயர்லன்டுக்குச் சென்றிருந் தார். முதலில் லங்காஸ்டர் பதவியை மாத்திரம் நாடி வந்த ஹென்றி தமக்கு பக்க பலம் கிடைத்ததைக் கண்டு இராஜ்ஜியத் தையே கைக்கொள்ள எண்ணங்கொண்டார். ரிச்சர்ட் சுலபத்தில் அகப்பட்டுக் கொண்டார். அவரை சிறைப்படுத்திவிட்டு இராஜ்ஜியா திகாரத்தையும் பலவந்தமாய் அபகரித்துக்கொண்ட ஹெரிபோர்ட் நான்காவது ஹென்றி யென்ற நாமதேயத்துடன் பட்டத்திற்கு வந்தார். அவர் ரிச்சர்டினுடைய கொடுங்கோன்மையை ஒழித்தா ரென்ற காரணத்தையும் பாத்தியத்தையும் முன்னிட்டு அரசரானர். ரிச்சர்ட் மூன்றாவது எட்வர்டின் மூத்த குமாரரின் பிள்ளை; நான்காவது ஹென்றியோ அவருடைய இளைய குமாரரின் பிள்ளை. ஆகவே, அரசியல் அன்னியரிடம் போய்விடவில்லை. 1399-ல் நடந்த இராஜீய மாறுதலுக்குப் பொதுவாக 'லங்காஸ்டர் குலத்தாரின் புரட்சி' (Lancastrian Revolution) என்று பெயர். ஆனல் மேலே கூறியபடி அந்தப் புரட்சியினல் அடிப்படையான மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை; அரச குலத்திற்குள்ளேயே ஒருவரிடமிருந்து இன் னெருவருக்கு அரசியல் மாறியது. பார்லிமெண்ட் சபையும் அந்த மாறுதலை அங்கிகரித்தது. அதாவது தங்கள் பிரதிநிதிகளின் மூலமாக, எல்லா பிரஜைகளும் நான்காவது ஹென்றியை அரசராக ஏற்றுக் கொண்டனர். அதிருப்தியாக ஆண்டுவந்த அரசரை நீக்கி, திறமை மிகுந்த வேறொருவரை அரசராக நியமிக்கும் அதிகாரம் ஜனங் களுக்கே உரியதென்ற சித்தாந்தம் அநுஷ்டானத்தில் காட்டப்பட் டது. மறுவருஷம், ரிச்சர்ட் உண்ணமலிருந்து சிறையிலேயே

மரித்தார். அவரும் இரண்டாவது எட்வர்டைப்போல கேவலமான அரசர்களது கோஷ்டியைச் சேர்ந்தவர்.

(3) **பதினான்காம் நூற்றாண்டில் கல்வி யபிவிருத்தி :**—இரண்டாவது ரிச்சர்ட் சிம்மாதனத்தை இழந்ததுடன், இங்கிலண்டின் சரித்திரத்தில் ஒரு தனிசகாப்தம் முடிவடைந்ததாகச் சொல்லலாம். அந்த சகாப்தத்தில் பார்லிமெண்டின் அதிகாரம் படிப்படியாகப் பெருகி வந்ததையும், தேசத்தில் நடந்த சமூகக் குழப்பங்களையும் மதவிஷயமாக நடந்த விவாதங்களையும் நாம் எற்கனவே ஆராய்ந்தோம். அதோடு, அந்த சகாப்தத்தில் பொதுவான கல்வி யபிவிருத்தியும் எற்பட்டது. பல சர்வ கலாசாலைகளும், சாதாரணப் பாடசாலைகளும் உண்டாயின. முக்கியமாக ச்சாஸர் என்பவர் சமஸ்தான கவியாக இருந்து இங்கிலீஷில் பல கதைகளை இயற்றினார். ஜனங்களுக்கு தம்முடைய சொந்த பாஷையில் அதிக அக்கரை தோன்றலாயிற்று. வில்லியம் லாங்லன்ட் (William Langland) என்பவர் 'கருப்பு மரணத்தினால்' நேர்ந்த சேதங்களைப் பற்றியும் ஜனங்கள் அடைந்துவந்த துன்பங்களைப் பற்றியும் விவரித்து எழுதினார். முன்னரே கூறியபடி விக்ளிப் தமது கொள்கைகளை ஜனங்களினிடையே பரப்பும் பொருட்டு பைபிள் புஸ்தகத்தை இங்கிலீஷில் எழுதி வெளியிட்டார். பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும் பல குழப்பங்கள் நேரிட்டதனால், அமைதியில்லாதிருந்தாலும் ஜனங்கள் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேற்றமடைந்து, நவீன கால நிலைமையை அடைந்து கொண்டிருந்தனர்.

---

## ஜானுக்குப் பின்வந்த அரசர்களின் வம்சாவளி.

ஜான்
(1199-1216)
|
மூன்றாவது ஹென்றி
(1216-1272)
|
முதல் எட்வர்ட்
(1272-1307)
|
இரண்டாவது எட்வர்ட்
(1307-1337)
|
மூன்றாவது எட்வர்ட்
(1327-1377)

| | |
|---|---|
| எட்வர்ட்<br>கரிய இளவரசர் | ஜான் ஆப் கண்ட்<br>லங்காஸ்டர் பிரபு |
| \| | \| |
| இரண்டாவது ரிச்சர்ட்<br>(1377-1399) | நான்காவது ஹென்றி<br>(1399-1413) |

## 21-வது அதிகாரம்

### நான்காவது ஹேன்றி ; ஐந்தாவது ஹேன்றி.

(1) பார்லிமேன்டின் அதிகார அபிவிருத்தி: நான்காவது ஹேன்றியின் ஆட்சி:—லங்காஸ்டர் வம்சப் புரட்சியிலிருந்து ஒரு புதிய சகாப்தம் தொடங்கியதென்று கூறினோமல்லவா. ஜானின் மகாசாஸனத்தின்மூலம் பிரஜைகள் அரசனுடைய சுயேச்சாதிபத்தியத்தைக் கட்டுப்படுத்த ஆரம்பித்த முயற்சி பூர்த்தியாகப் பலன்தர சுமார் ஒன்றரை நூற்றுண்டுகாலம் பிடித்தது. இரண்டாவது ரிச்சர்ட் தம்மைக் காட்டிலும் அதிகத் திறமைசாலிகளான அரசராலும் எதிர்க்கமுடியாத பார்லிமெண்ட் சபையின் ஆலோசனையை மீறி நடக்க எத்தனித்து முடிவில் அவமானமடைந்தார். ஆனால் நான்காவது ஹென்றியோ பார்லிமெண்டின் கட்டுப்பாட்டிற்குட்பட்டு நடக்கவேண்டி யிருந்தது. அவருக்கு இராஜ்ஜியம் கிடைத்தது யுத்தகளத்தில் பெரும் வெற்றி யடைந்ததாலுமல்ல; அல்லது, ரிச்சர்டுக்கு நெருங்கிய உறவினராக இருந்ததாலுமல்ல; பார்லிமெண்டின் அநுமதியினாலேயே அவரால் பட்டத்திற்குவர முடிந்தது. எனவே, அவரும் அவருக்குப் பின்வந்த அவருடைய சந்ததியாரும் பார்லிமெண்டின் ஆதரவை நம்பியே அரசாட்சி புரிய வேண்டியதாயிற்று. தமது குறைகளைத் தீர்த்துக்கொண்ட பின்பே பார்லிமெண்ட் சபையினர் அரசருக்குத் தேவையான பண உதவிசெய்ய சம்மதித்தனர். பார்லிமெண்ட் சபையினருடைய விருப்பத்தின்படியே வரிகளும் விதிக்கப்பட்டன. ஆகவே அப்பொழுதே பார்லிமெண்ட் சபை இப்பொழுதிருப்பதைப் போன்ற அதிகாரத்தை அடைந்திருந்தது.

நான்காவது ஹென்றி அதிக மதஉணர்ச்சியுடையவர்; பழைய அநுஷ்டானங்களைப் பின்பற்றும் வைதிக கோஷ்டியைச் சேர்ந்தவர். இரண்டாவது ரிச்சர்ட் அரசியல் விஷயங்களிலிருந்ததுபோலவே மதவிஷயங்களிலும் கவலையற்றவரா யிருந்தார். அதனால் விக்ளிப்

முதலானவர்கள் எவ்விதமான கட்டுப்பாட்டிற்கும் அடங்காமல் தைரியமாக மதகுருமார்களைத் தாக்கி எதிரிடையான உபதேசம் செய்து வந்தனர். அவர்கள் செய்ததில் எவ்வித தவறும் இல்லையானாலும், அக்காலத்து ஜனங்களிற் பலர் அவர்களைப் பின்பற்றிச் செல்லும் விவேகத்தைப் பெறாமல், பழைய மதஸ்தாபனத்தினிடமே பற்றுதலுடையவராயிருந்தனர். ஹென்றி அரசரானவுடனே 1401-ல் பார்லிமெண்டில் ஒரு சட்டமியற்றி விக்ளிப்பி[2]னுடைய சிஷ்யர்களான லாலர்ஸ்களை நாஸ்திகர்கள் அல்லது பதிதர்களென்ற காரணத்தைக்கொண்டு உயிரோடு நெருப்பிலிட்டு எரித்துவிடலாமென்று தீர்மானிக்கப்பட்டது. சில லாலர்ஸ்கள் தமது உயிரையும் துறந்தனர். ஆனால் விக்ளிபி[2]னுடைய கொள்கை உறுதியாக வேரூன்றவில்லையாதலால், கிளர்ச்சி சீக்கிரத்தில் மறைந்துபோய் விட்டது. ஆனால், அவர் எடுத்துக்கொண்ட வேலை வீணாய்ப் போகவில்லை; சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு மதஸ்தாபனத்திற்கு ஒரு பேரிடிபோன்ற அபாயம் நேரிட்டகாலத்தில் அதன் பழையமகிமை அடியோடு போய்விட்டது. அந்த மாறுபாடு ஏற்படுவதற்கு விக்ளிப்[2] வெகு காலத்திற்கு முந்தியே விதை நட்டு வைத்தாரென்றே கூறவேண்டும்.

ஹென்றியின் ஆட்சி அமைதியாக நடைபெறவில்லை. அவருக்கு இராஜ்ஜியாதிகாரம் சுலபமாகக் கிடைத்துவிட்டதானாலும், அதை வைத்துக் காப்பாற்றுவது மகா கடினமாக இருந்தது. பார்லிமெண்ட் சபைக்குட்பட்டு நடக்கவேண்டியிருந்தமையால் அவர் தமது இச்சைப்படி நடக்கமுடியவில்லை; மேலும் அவர் அதிருஷ்டவசத்தினால், அரசரானதால் பலர் அவருக்கு விரோதமாகக் கிளம்பி சதியாலோசனைகளும் கலகமும் செய்யத் தொடங்கினர்; அன்னிய நாட்டு மன்னர்கள் பலரும் அவருக்குப் பொல்லாங்கிழைத்து வந்தனர்; ஹென்றியை அவர்கள் அரசரென்று அங்கீகரிக்கவும் மறுத்தனர். உள் நாட்டிலேயே பல கட்சிப் பிரதி கட்சிகள் உண்டாயின. அக்காரணங்களால் அவர் எப்பொழுதும் பெருத்த மனக்கலக்கம் அடைந்திருந்தார். ரிச்சர்ஸ் அரசர் இறந்தபின் அவருடைய சகாக்கள் ஹென்றிக்குக் கடும்பகைவர்கள் ஆய்விட்டனர். மேலும் வேல்ஸ் மாகாணத்திலும் அப்பொழுது ஒரு கலகம் ஏற்பட்டது. ஓவன்

ஞ்லென்டோவர் (Owen Glendover) என்ற தலைவர் தாம் வேல்ஸின் அரசனென்று சொல்லிக்கொண்டு சுயேச்சையாக நடக்கலானார். ஹென்றி அவரை எதிர்க்க அனுப்பிய படைகள் அவரை வெல்லமாட்டாமல் திரும்பின. ஓவன் வேல்ஸில் துன்ப மிழைத்துக் கொண்டிருந்த சமயத்திலேயே ஸ்காட் ஜனங்கள் 1402-ல் இங்கிலண்டின்மீது படையெடுத்து வந்தனர். அவர்களை அரசர்களுடைய நண்பரான ஹென்றி பேர்ஸி (Henry Percy) என்பவர் தோற்கடித்தார். ஆனால் வெகு சீக்கிரத்தில் பெர்ஸியும் அவருடைய புத்திரரான பேர்ஸி ஹாட்ஸ்பர் (Percy Hotspur) என்ற யௌவன வீரரும் அரசர் தங்களை தக்கபடி மதிக்க வில்லையென்று கண்டு அவரிடம் அருவருப்படைந்து எதிர்க்கட்சி யில் . சேர்ந்துகொண்டனர். ஹாட்ஸ்பரின் கட்சியும் ஓவன் ஞ்ளென்டோவரின் படையும் ஒன்றுசேர்ந்து அரசரை எதிர்க்க யோசித்தன. அவ்விரு சேனைகளும் ஒன்று கூடுவதற்கு முன்ன மேயே ஹென்றி ஷ்ரூஸ்பரி (Shrewsbury) என்ற இடத்தில் ஹாட்ஸ்பருடைய சேனையைத் தாக்கி அந்த யௌவன வீரரையும் கொன்று வெற்றி யடைந்தார். ஆனால் ஓவன் என்பவரைத் தோற் கடிப்பது பிரயாசையாயிற்று. எனெனில் வேல்ஸின் மலைநாடு களில் ஓவன் தப்பியோடி ஒளிந்துகொள்வது எளிதாயிருந்தது. ஓவனின் துணிகரச் செயல்களை, வேல்ஸ் ஜனங்கள் மெய்ச்சி அவரைக் கொண்டாடினர். ஆனால் அவருடைய தோழர்கள் மடிந்த பிறகு அவரால் தமது சுயாதிகாரத்தை நிலைநிறுத்த முடியவில்லை. அவர், தாமே அரசராக வேண்டுமென்ற காலம் மாற, அவர் தமது உயிருக்காக ஓடியொளிய வேண்டிய காலம் வந்துவிட்டது. மேலும் நான்காவது ஹென்றியின் குமாரரும் தமது தந்தைக்கு உதவிபுரிந்த மையால் மீண்டும் வேல்ஸ் மாகாணம் அமைதியும் பணிவு மடைந் தது. இம்மாதிரி அவருக்கு இடையில் நேர்ந்த துன்பங்கள் யாவும் முடிவாக மறைந்து போயினவானாலும், அவைகள் அவரை,நிரம்பவும் வதைத்துவிட்டன. ஸ்காட்லண்டிலிருந்தும் ப்ரான்ஸ் தேசத்தி லிருந்தும் அதன்பிறகு அதிகமான துன்பம் ஏற்படவில்லை. ஆனால் கடைசிக் காலத்தில் ஹென்றியினுடைய மூத்த குமாரர், யௌவ னப் பருவத்தின் மூர்க்கத்தினால் தந்தைக்கு விரோதமாக சில அயோக்

கியர்களுடன் சேர்ந்துகொண்டு கிளம்பியது ஹென்றியின் புண்பட்ட மனதை மேலும் துளைத்தது. 1413-ல் நான்காவது ஹென்றி உயிர் துறந்தார். அவருடைய குமாரர் ஐந்தாவது ஹென்றி என்ற நாமதேயத்துடன் பட்டத்திற்கு வந்தார்.

(2) ஐந்தாவது ஹென்றி ; நூறு வருஷ யுத்தத் தொடர்ச்சி:— இளவரசராக இருந்த வரையில் ஐந்தாவது ஹென்றி தமது பொறுப்பை உணராமல் நடந்து வந்தாராஹலும் முடி சூடியவுடனே அவர் புது மனிதராக மாறிப்போனார். பழைய விளையாட்டுப் புத்தியையெல்லாம் விட்டொழித்து அவர் நியாயமாகவே அரசாட்சி புரிய முனைந்தார். ஏற்கனவே அவரது பராக்கிரமத்தைக் கண்டிருந்த வெல்ஷ்காரர்கள் அவரது மன்னிப்பைப் பெற்று, தங்களுடைய தலைவரான ஒவனைக் கைவிட்டு, புதிய அரசருக்குக் கீழ்ப்படிந்து போயினர். மேலும் அவர் தமது தந்தையின் வழியைப் பின்பற்றி, அங்குமிங்கும் சிதறியிருந்த லாலர்டுகள் பூண்டற்று அழியும்படி செய்துவிட்டார். மறுபடியும் மதஸ்தாபனம் பழைய மதிப்பைப் பெற்று ஓங்கியது. அதற்கு லங்கா[2]ஸ்டர் வம்ச அரசர்கள் உதவியாக நின்றனர்.

ஏற்கெனவே ப்[2]ரான்ஸுக்கும் இங்கிலண்டிற்கும் இருந்த மனஸ்தாபம் ஐந்தாவது ஹென்றியின் காலத்தில் மறுபடியும் யுத்தத்தில் கொண்டுபோய் விட்டது. ஹென்றிக்கு யுத்தம் புரிவதில் ஆசை அதிகமாதலால், அவர் மூன்றாவது எட்வர்டைப் போலவே பெரிய இராஜ்ஜியத்தை சம்பாதிக்க முயன்றார். அப்பொழுது அவருக்கு அநுகூலமாக ப்[2]ரான்ஸ் தேசம் பெருத்த குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. ப்[2]ரெஞ்சு மன்னருக்குப் பைத்தியம் பிடித்திருந்தமையால், அங்கு பிரபுக்கள் சிலர் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக் கொண்டு தம் தமக்கே அதிகாரம் கிடைக்க வேண்டுமென்று போராடி வந்தனர். ஊரிரண்டு பட்டால் கூத்தாடிக்கு எளிதென்பது போல அந்த நிலைமை ஹென்றிக்கு அநுகூலமாக இருந்தது. மூன்றாவது எட்வர்ட் ப்[2]ரெஞ்சு முடியைப் பெறுவதற்குக் கனவு கண்டு கொண்டிருந்ததைப் போலவே, ஐந்தாவது ஹென்றியும் செய்பத் தொடங்கி, தாமே ப்[2]ரெஞ்சு

மன்னர் ஆகவேண்டுமென்று கூறினர். அவருடைய கூற்று எவ்விதத்திலும் அநியாயமானதென்பது அவருக்கே நன்ருகத் தெரியும். ஏனெனில் மூன்றாவது எட்வர்டுக்கு ஃபிரெஞ்சு முடி உரியதாயிருந்தாலும் கூட, அது ஐந்தாவது ஹென்றிக்குக் கிடைக்க நியாயமேயில்லை. ஏனெனில் அவர் மூன்றாவது எட்வர்டுக்கு நேரான வார்சுதாரரல்லர். அவரைவிட நெருங்கிய உறவினர் இருந்தனர். ஆனாலும் தமது துராசையை மறைப்பதற்காகவே அவர் அம்மாதிரி இராஜ்ஜியம் தமக்குரியது என்ற காரணத்தைக் கூறினர். பார்லிமெண்ட் சபையும் அவர் யுத்தம் செய்வதற்குப் பண உதவி செய்தது.

1415-ல் ஹென்றி ஒரு படையுடன் புறப்பட்டு, ஹார்ஃப்ளூர் (Harfleur) என்ற துறைமுகப் பட்டினத்தை அடைந்து அதை முற்றுகையிட்டார். சில மாத காலத்திற்குப்பின் அந்தப் பட்டினம் அவரது வசமாயிற்று. ஆனல் அதற்குள் இங்கிலீஷ் சேனை குளிரினல் நிரம்பவும் வருந்திப் பாதி பலத்தை இழந்துவிட்டது. பிறகு அந்த சேனை மெதுவாக உட்சென்று அஜின் கோர்ட் (Agin Court) என்ற இடத்தில் ஃபிரெஞ்சு சேனையை சந்தித்தது. அங்கு நடந்த யுத்தத்தில் இங்கிலீஷ் சேனை பூர்ண வெற்றியடைந்தது. அதற்கு முக்கிய காரணம் ஹென்றியினுடைய யுத்தப் பயிற்சியே யாகும்; அந்த ஜயத்தினல் ஹென்றிக்கு ஐரோப்பாவில் மதிப்பும் கௌரவமும் ஏற்பட்டன. 1417-ல் மறுபடியும் அவர் ஃபிரான்ஸின்மீது படை யெடுத்துச் சென்று இரண்டு வருஷகாலம் யுத்தம் புரிந்து நார்மண்டி மாகாணத்தைப் பிடித்துக்கொண்டார். அப்பொழுதும் ஃபிரான்ஸில் இரண்டு கட்சிகள் ஒன்றுடனென்று சண்டையிட்டுக் கொண்டிருந்தன. அவ்விரு கட்சிகளும் ஒன்று சேர்ந்து, பொதுவான பகைவரை எதிர்க்க முயற்சி செய்யவில்லை. அக்கட்சிகளுக்குள் ஒன்று பர்கண்டி மாகாணத்தினருடையது. ஃபிரெஞ்சு அரசருக்கு பைத்தியம் பிடித்திருந்தாலும் அவருடைய புத்திரரிடம் அநேக ஜனங்களுக்குப் பிரீதியில்லாததாலும், பர்கண்டிக்கட்சியினர் ஹென்றியுடன் 1420-ல் ட்ராய்ஸ் (Troyes) என்ற இடத்தில் சமாதானம் செய்துகொண்டனர். அதன்படி ஹென்றி ஃபிரெஞ்சு தேசத்து இளவரசியை

மணந்துகொண்டு பைத்தியம்பிடித்த மாமனுருக்கு பதிலாக இராஜ்ஜிய நிர்வாகம் நடத்துவதென்றும், பைத்தியங்கொண்ட அரசர் காலமானதும் ஹென்றியும் அவருக்குப்பின் வரும் இங்கிலீஷ் மன்னருமே ப்2ரெஞ்சு தேசத்தையும் ஆண்டு வரலாமென்றும் ஏற்பாடாயிற்று. தங்கள் தேசம் சீர்குலேந்து கிடந்ததைக் கண்டு சகியாமல் ப்2ரெஞ்சு தேசத்துக் குடிகளிற் பலர் அன்னிய தேசத்து அரசருக்கு மேற்கூறியவாறு கீழ்ப்படிந்து போய்விட்டனர். ஆனுல் தெற்குப் பக்கத்தில் இருந்த ப்2ரெஞ்சுக்காரர் ட்ராய்ஸ் உடன் படிக்கையை அங்கீகரிக்காமல் தம்முடைய இளவரசரையே பின்பற்றி நடந்தனர். எனவே மறுபடியும் யுத்தம் புரியாமல் ஹென்றிக்கு ப்2ரெஞ்சு முடிகிடைக்காதுபோலத் தோன்றியது. அவர் 1422-ல் மூன்றும் முறை படையெடுத்துச் சென்றூர். ஆனுல் அவர் அதே வருஷத்தில் நோயில் வீழ்ந்து உயிர் துறந்தார். அவர் செய்த யுத்தங்களிலெல்லாம் ஜயமே யடைந்து, தமது ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளலாமென்றெண்ணிய சமயத்தில், மரணம் அவரைக் கொள்ளே கொண்டுபோய்விட்டது. கீர்த்தி பெற்ற இங்கிலீஷ் அரசர்களில் ஐந்தாவது ஹென்றியும் ஒருவர்; அவர் சிறந்த தளகர்த்தராயும், பயிற்சி பெற்ற இராஜ தந்திரியாயும், மதப்பற்றுதள்ள கனவானும், நியாயபுத்தி யுடையவராகவு மிருந்தார். கடுமையும், கொடூரமும், பிடிவாத குணமும், தயாளமின்மையும் சில சமயங்களில் அவரிடம் காணப்பட்டாலும் மொத்தத்தில் அவருடைய உறுதியான ஆட்சி முறையில் எல்லோரும் திருப்தியே யடைந்தனர். தாம் எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடிப்பதில் அவருக்கு இயற்கையான சாமர்த்தியம் இருந்தது. ப்2ரெஞ்சு தேசத்துப்பட்டத்தை இச்சித்ததும், லாலர்டுகளே எதிர்த்ததுமே அவருடைய குணத்தில் மாசுகளாக இருந்தன. ஆனுல் உறுதியாகப் பரிபாலனம்செய்வதும், கீர்த்திக்கும் பிற இராஜ்ஜியங்களுக்கும் ஆசைப்படுவதும் ஹென்றியைப் போன்ற பலிஷ்டர்களது விஷயத்தில் இயற்கையானவைகளே.

---

# 22-வது அதிகாரம்

---

## ஆருவது ஹென்றி.

(1) **புதிய மன்னரின் இளமை: நூறு வருஷ யுத்தத்தின் முடிவு :—** ஐந்தாவது ஹென்றி இறந்ததும் அவரது ஒரு வயதுக் குழந்தை ஆருவது ஹென்றி யென்ற நாமதேயத்துடன் பட்டம் பெற்ருர். அப்பொழுது ப்ரெஞ்சு அரசரும் உயிர் துறந்தமையால் ட்ராய்ஸ் உடன்படிக்கைப்படி அவர் ப்ரான்ஸ் தேசத்திற்கும் அரசராஞர். ஆஞல் உண்மையில் அந்த தேசத்தையும் சேர்த்து ஆள்வது அசாத்தியமாகத் தோன்றியது. மேலும் ஒரு வயதுகூட நிறையாத சிசுவை வைத்துக்கொண்டு என்ன செய்கிறது? அந்தக் குழந்தைக்குப் பிரதிநிதியாக அவருடைய உறவினரான பெட்ஃபோர்ட் பிரபு இராஜ்ஜிய நிர்வாகத்தை கவனித்து வந்தார். அவருடைய தம்பியான க்ளஸ்டர் பிரபு அவருக்குதவியாக இருந்து வந்தார்.

பெட்ஃபோர்ட் பிரபு முதலில் ப்ரெஞ்சு தேசத்து விஷயங்களைத் தீர்க்கவேண்டிவந்தது. அவர் மிகவும் சாமர்த்தியமாக பர்கண்டிக்கட்சியினருடன் சேர்ந்துகொண்டு அவர்கள் ஆருவதுஹென்றியை அரசராக எற்றுக் கொள்ளுமாறு செய்து விட்டார். மேலும் ப்ரான்ஸில் ப்ரிட்டனி என்ற மாகாணத்தின் தலைவரையும் அவர் சிநேகம் செய்து கொண்டார். ஆஞல் ட்ராய்ஸ் உடன் படிக்கையை எற்காத ப்ரெஞ்சுக் குடிகளோ இறந்துபோன அரசருடைய குமாரரையே தமது மன்னராகச் செய்தனர். புதிய ப்ரெஞ்சு அரசருக்கு ச்சார்லஸ் (Charles) என்று பெயர். அவ்விதக் குழப்பத்தினிடையில் ஹென்றியின் ப்ரெஞ்சு தேசத்துப் பட்டம் 'பிழைக்கவும் முடியாமல் இறக்கவும் முடியாமல் குற்றுயிராக' இருந்து வந்தது. ஆஞல் ச்சார்லஸ் என்ற புதிய ப்ரெஞ்சு அரசரும் சோம்பேறியாய் ஊக்கமின்றி இருந்தமையால், ஹென்றி முற்றிலும் தோற்றுப்போகவில்லை. ப்ரெஞ்சுதேசம் முழுதும் இரண்டு அரசர்

களுக்குட்பட்டு அராஜகமே நிறைந்து நின்றது. இங்கிலண்டும் அதேமாதிரி உள் நாட்டுச் சச்சரவுகளில் ஆழ்ந்து கிடந்தது.

1428-ல் பெட்போர்ட் பிரபு ஹென்றியின் சார்பாக ப்ரான்ஸில் யுத்தம் செய்யத் தொடங்கி பர்கண்டிக் கட்சியினர் சிலருடன் சேர்ந்துகொண்டு ஆர்லியன்ஸ் (Orleans) நகரத்தை முற்றுகையிட்டார். அந்த நகரத்தைக் கைப்பற்றினால், அதன் பின் சுலபமாகத் தெற்கு திக்கில் செல்ல வழி யேற்படலா மென்பதும், ச்சார்லஸ் அரசரைத் தோற்கடித்து விடலாம் என்பதும் அவருடைய எண்ணங்கள். இங்கிலீஷ் சேனைக்கு வெற்றி நிச்சயமாகக் கிடைக்கும்போலத் தோன்றிய சமயத்தில் உலக சரித்திரத்தில் நிகழும் விசேஷ சம்பவங்களுள் ஒன்று ப்ரான்ஸில் நிகழ்ந்தது. சுமார் பதினைந்து வருஷ காலமாய் அன்னிய நாட்டினரான சொற்பத் தொகையினர் வந்து தமது தேசத்தைப் பாழ்படுத்தியதையும், தமது தேசத்தினரே அவர்களுக்கு உதவிபுரிந்து தேசத் துரோகம் செய்ததையும் கண்ட பல ப்ரெஞ்சுக்காரர்களது மனதில் ஆக்குரோஷம் பொங்கிக் கொண்டிருந்தது. அந்த யுத்தத்தினால் நகரங்களும் நாட்டுப்புறமும் ஒருங்கே பாழடைந்துபோயின. ச்சார்லஸ் மன்னரோ எவ்வித முயற்சியும் செய்யாமல் சும்மா இருந்தார். அந்த நிலைமையில் ஒரு நாள் ச்சார்லஸின் சமஸ்தானத்திற்கு ஜீன் டி ஆர்க் (Jean de arc) அல்லது ஜோன் ஆப் ஆர்க் (Joan of Arc) என்ற ஓர் இளம்பெண் நாட்டுப்புறத்திலிருந்து வந்தாள். அவ்விள நங்கை உலக சரித்திரத்தில் எந்த சேனாவீரராலும் செய்து முடிக்க இயலாத அரிய வீரச் செயல்களைப் புரிந்து அழியாத கீர்த்தியை யடைந்தாள். அவள் குழந்தைப் பருவத்திலிருந்தே அதிசமான குணங்களைப் பெற்றிருந்தாள். ஆடு மேய்த்துக்கொண்டு வயல்களில் தனியாக உட்கார்ந்திருந்தபடி அச்சிறுமி தனது தேசத்தின் துர்க்கதியைப்பற்றிக் ஆழ்ந்து யோசிக்கையில், தனக்குக் கடவுளின் திவ்விய தரிசனம் கிடைத்ததாக உணர்ந்தாள். கடவுளே அவளுக்கு முன் தோன்றி ப்ரெஞ்சு தேசத்தைப் பகைவரின் வசத்திலிருந்து மீட்கும்படி கட்டளையிட்டதாக அவள் உணர்ந்தாள். அவள் அதைப் பலருக்கும் தெரியப்படுத்த, முதலில் எல்லோரும் அதைக் கட்டுக்கதையென

இளக்காரப்படுத்தினர். ஆனால் அவள் தனது திடமான நம்பிக்கையினால், கொஞ்சம்கொஞ்சமாக எல்லோரையும் தனது வசப்படுத்தலானாள். ச்சார்லஸின் முன்வந்து அவள் தனக்கு ஏற்பட்ட திவ்விய தரிசனத்தைப்பற்றிக் கூறி அவரை சீக்கிரத்தில் பட்டம் தரிக்கும்படி செய்வதாக வாக்குறுதி செய்தாள். அவளது சொல்லை முதலில் எவரும் மதிக்கவில்லை. ஆனால் ச்சார்லஸ் அவள் எதை வேண்டுமாயினும் செய்யட்டுமென்று விட்டுவிட்டார். அவள் ஒரு யுத்த வீரனைப் போலக் கவசமணிந்து, தெய்வத்தினருள் பெற்ற கத்தியைத் தாங்கி, குதிரை மீதேறி ஒரு சேனையை நடத்திக்கொண்டு ஆர்லியன்ஸ் நகரத்தை அடைந்தாள்; அது வரையில் வெற்றியடைந்து வந்த இங்கிலீஷ்காரர்கள் அச்சிறு பெண் தோன்றியதற்குப் பிறகு தவறாமல் தோல்வியே யடையலாயினர். ஆர்லியன்ஸ் பட்டணம் விடுவிக்கப்பட்டதுமன்றி பட்டே (Patay) என்ற இடத்தில் ஜோன் தமது பகைவரை முடியடித்தாள். அவள் வாக்குறுதி செய்தபடி உடனே ச்சார்லஸுக்கும் பட்டம் கட்டிவைத்தாள். அதன் பின் ப்ரெஞ்சுக்காரரும் ஒரு புதிய ஆவேசத்தை யடைந்து தமது தேசத்தைக் காப்பாற்றவேண்டுமென்ற உறுதியை யடைந்தனர். ஜோன் செய்த உதவி மகத்தான தேச சேவையாகவும் அதிமாநுஷத்தன்மை வாய்ந்ததாகவும் தோன்றியது.

ச்சார்லஸ் பட்டத்திற்கு வந்ததோடு ஜோனின்வேலை முடிந்து போய்விடவில்லை. இங்கிலீஷ்காரரை தேசத்தை விட்டு ஓட்டினாலன்றி அவள் அமைதியடைபவளாகத் தோன்றவில்லை. எனவே அவள் இடைவிடாமல் சேனையைப் பல பாகங்களுக்கும் நடத்திச் சென்று, பர்கண்டிக் கட்சியினரையும் ச்சார்லஸின் அதிகாரத்திற்குட்படுத்த முயற்சி செய்தாள். ஆனால் அவள் சிறுபெண்ணேயாகையால் போர் புரியும் முறைகளை யறியாமல் சில பிழைகள் புரிந்தாள். ச்சார்லஸ் சிறிதும் நன்றி விசுவாசமற்றவராய் நடந்து அவளுக்குத் தேவையான சேனையை அனுப்பவில்லை. எனவே 1430-ல் அவள் தனது பகைவரின் கையில் அகப்பட்டுக் கொண்டாள். இங்கிலீஷ்காரரும் பர்கண்டிக் கட்சிக்காரரும் அவளைச் சித்திரவதைக்குட் படுத்தினராலும், அவள் தனது தைரியத்தை

இழக்காமல் தான் தெய்வ கடாக்ஷம் பெற்றவளென்பதையே சாதித்தாள். ஆனால் இங்கிலீஷ்காரர்கள் அவளை சூன்யக்காரி என்று நினைத்தனர். கடைசியில் அவளுடைய பகைவர் அவள் மீது பல குற்றங்கள் சுமத்தி அவளைத் தீயிலிட்டு எரித்துவிட்டனர்! தனது தேசத்தின் பொருட்டு அவ்விள நங்கை தனது உடல் பொருளாவியை யெல்லாம் அர்ப்பணம் செய்த மகாபுண்ணியவதி யானாள். அவளுடைய துணிபும் அஞ்சாமையும் எதிரிகளைக் கலக்கிவிட்டன. அவள் உண்மையிலேயே அதிமாநுஷ சக்தி வாய்ந்தவள் என்பதை எல்லோரும் உணர்ந்தனர். அவ்வாறு கேவலம் ஒரு ஸ்திரீயைச் சுட்டெரிக்கத் துணிந்தவர்கள் ஆண் மக்களென்ற கௌரவத்திற்கு உரியவர்களாகமாட்டார்களானாலும் அந்த இழுக்கு இங்கிலீஷ்காரர்களுக்கு மாத்திரம் உரியதல்ல. ஏனெனில் ஜோனின் சொந்த தேசத்தவர்களான பர்கண்டியார்களும் அவளைக் கொல்வதற்கு உதவியாயிருந்தனர். மேலும், அவளுடைய உதவியினால் பட்டத்திற்கு வந்த ச்சார்லஸ் அவளைக் காப்பாற்றி இருக்கலாம், ஆனால் அவர் பட்டம் பெற்ற சுகத்தில் ஆழ்ந்து கிடந்தார்போலும். ஆனாலும், தேசத்திற்காக, ஜோன் உயிரைக் கொடுத்தாள். அவளுடைய சரீரம் சாம்பலாய்ப் போனாலும் அவள் செய்த காரியம் குன்றின் மேல்வைத்த விளக்காய் ஒளிர்கிறது. பர்கண்டிக் கட்சியினருக்கு அப்பொழுதே விவேகம் உதயமாயிற்று. அதன்பிறகு தம்முடைய பொதுவான பகைவருடன் சேருவதை விட்டு ச்சார்லஸின் நட்பை நாடினார்கள். பெட்போர்ட் பிரபுவின் வேலை அதிக கஷ்டமாயிற்று. 1435-ல் சில இராஜீய நிபுணர்கள் கூடி ஒருவித சமாதானம் செய்து நார்மண்டி முதலிய பிரதேசங்களை இங்கிலீஷ்காரருக்குக் கொடுத்துவிடுவதாக ஏற்பாடு செய்தனர். அதற்கு சம்மதித்திருந்தால், இங்கிலீஷ்காரருக்கு சிறிதேனும் இலாபம் ஏற்பட்டிருக்கும். ஆனால் அதற்கு சம்மதிப்பது அவமானமென்று பெட்போர்ட் பிரபு எண்ணினார். இன்னும் அதிகமான பிரதேசங்களை அபகரிக்கலாமென்பது அவரது கருத்து. அதனால் மேலும் சிறிது காலம் சண்டை நீடித்து நின்றது. அதற்குள் ஹென்றி வயதில் பெரியவரானார்; அவர் நற்குண முடையவரேயானாலும், சரீரபலமும் மனோபலமும் அற்றவராயிருந்தார். மேலும் அவரு

டைய இராஜ்ஜியத்திலேயே கட்சிப் பிரதிகட்சிகள் பலமாகத் தோன்றின. சிலர் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தவும், மற்றும் சிலர் அதை நிறுத்திவிடவும் யோசனை கூறினர். அவர்களுக்கிடையில் அகப்பட்ட சிறுவரான ஹென்றி தாமாக எதையும் செய்யக் கூடவில்லை. இங்கிலீஷ்காரரின் சோர்வின் பயனாக 1449-50-ல் நார்மண்டி மாகாணமும் கா/2ஸ்கனி மாகாணமும் அவர்களை விட்டு நழுவிப் போயின. 1453-ல் கடைசியாக கா/2ஸ்டில்லன் (Castillon) என்ற இடத்தில் நடந்த ஒரு யுத்தத்தில் ப்2ரெஞ்சுக்காரர்கள் வெற்றியடைந்தனர். கா/2லே பட்டினத்தைத் தவிர மற்ற பிரதேசங்களெல்லாம் ப்2ரெஞ்சுக்காரது வசமாய்விட்டன. நூறுவருஷ யுத்தம் அதோடு முடிவடைந்தது. அதில் கடைசியாக இங்கிலண்டே தோல்வியடைந்தது. நூறு வருஷ யுத்தத்தில் இங்கிலண்ட் தோல்வியுற்றது ஆச்சரியமல்ல. மூன்ருவது எட்வர்டின் காலத்தில் அந்தயுத்தத்தை ஆரம்பித்ததே நியாயமான செய்கையாகாது. ப்2ரெஞ்சு தேசத்துப் பட்டத்தையடைய இங்கிலீஷ் மன்னர் விரும்பியது விபரீதமான ஆசையேயன்றி வேறல்ல. ப்2ரெஞ்சுக்காரர்கள் அதிக சுதந்திர உணர்ச்சி யுடையவர்களாதலால், அன்னிய நாட்டினருக்கு அவர்கள் உட்பட என்றும் சம்மதிக்க மாட்டார்கள். ஏதோ சில சமயங்களில் சேனை பலத்தாலும் வேறு காரணங்களாலும் இங்கிலீஷ்காரர்கள் பெற்ற ஜெயம் நிரந்தரமான வெற்றி யாகாது. மேலும் இங்கிலீஷ் மன்னர்களிற் சிலர் சிறுவராயும், சிலர் ஊக்கமற்றவராயும் இருந்ததாலும், அவர்களது காலத்தில் நடந்த உள்நாட்டுக் கலகங்களாலும், வேல்ஸ், ஸ்காட்லண்ட் முதலிய இடங்களில் நேர்ந்த யுத்தங்களாலும், 'கருப்பு மரண'த்தின் பயனாக உண்டான துன்பங்களாலும், அன்னிய தேச மொன்றில் யுத்தம் செய்து வெற்றி யடைவது கூடாத காரியமாயிற்று. நூறு வருஷ யுத்தத்தால் நிரந்தரமான வெற்றி கிடைக்காமற் போனாலும், அதனால் பல பலன்கள் உண்டாயின. உதாரணமாக அந்த யுத்தத்தில் செலவிட்ட பணம் முழுதும் வியர்த்தமாயிற்று. ஏறக்குறைய நூறு வருஷகாலம் முழுதும் ஒரு தேசம் யுத்தத்திலேயே முனைந்திருந்தால் அதன் நிலைமை எவ்வாறிருக்கு மென்பது கூறாமலே விளங்கும். அதோடு யுத்தம் அபஜெயமாய் முடிவடைந்தபின் வேலையிலிருந்து நீக்கப்பட்ட

சிப்பாய்கள் பிழைப்புக்கு வேறு மார்க்கம் தேடவேண்டியதாயிற்று. நூறு வருஷ யுத்தம் முடிந்ததும், இங்கிலண்டிலேயே உள் நாட்டுச் சண்டை ஒன்று ஆரம்பமாயிற்று.

(2) ஜாக் கேடின் கலகம்: ரோஜாப்பூக்களின் சண்டைத் துவக்கம்:—யௌவன அரசாது ஆட்சியில் சுய நலத்தை நாடிய பல பிரபுக்கள் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக்கொள்வது சாதாரணமான விஷயம். அவ்விதமே ஆறுவது ஹென்றியின் காலத்திலும் நடந்தது. பார்லிமென்ட் சபையார் சில பிரபுக்களைக் கண்டித்தனர். அந்த சமயத்தில் நூறு வருஷ யுத்தமும் முடியும்காலமாயிருந்ததால், அதில் அடைந்த தோல்வி காரணமாய் ஜனங்கள் அரசாங்கத்தாரை வெறுக்கலானார்கள். நாட்டில் மறுபடியும் அதிருப்தியும் அமைதியின்மையும் தோன்றலாயின. அந்த நிலைமையில் ஒரு பெரிய கலகமும் தோன்றியது. ஜாக் கேட் (Jack Cade) என்பவர் கென்ட் மாகாணத்து ஜனங்களைக் கிளப்பித் திரட்டிக் கொண்டு லண்டன் நகரத்தை நோக்கிச் சென்றார். அரசருடைய சேனையால் அவரை எதிர்த்து தோற்கடிக்க முடியவில்லை. அரசரே ஊரை விட்டு ஓடவேண்டியதாயிற்று ஆனால் முதலில் கலகக்காரர்கள் கேடின் சொற்படி அமைதியாக நடந்து வந்தார்களானாலும், பிறகு அவர்கள் தமது இச்சைப்படி நடந்து, லண்டன் நகரத்தைக் கொள்ளையிட லானார்கள். அதனால் லண்டன் நகரத்து ஜனங்களுக்கும் அவர்களுக்கும் போர் நடந்தது. ஆனால் சிலர் ஜனங்களை சமாதானப்படுத்தி தம்தம் வீடுகளுக்குப் போகும்படி செய்தனர். அதன்பின் கேட் என்பவர் யாரோ ஒருவரால் கொல்லப்பட்டு இறந்துபோனார். அவரது மரணத்துடன் கலகமும் முடிந்து போயிற்று. அந்தக்கலகம் 1381-ல் நடந்த 'குடியானவர் கலக'த்தைப்போலவே இருந்தாலும், அதற்கும் இதற்கும் வித்தியாசம் இருந்தது. 'குடியானவர் கலகம்' முக்கியமாக, பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட மாறுதல்களாலும், ஜனங்களுடைய வறுமையின் காரணமாகவும் உண்டாயிற்று. 1450-ல் நிகழ்ந்த கேட் என்பவரின் கலகம் அரசாங்கத்தாருடைய அதிக்கிரமமான நடத்தைகளைக் கண்டிக்கும்பொருட்டு—அதாவது இராஜீய காரணங்களால்—உண்டாயிற்று. கேடின் கலகம் முடிந்ததும் இன்னுமொரு பெரிய சம்பவம் நேரிட்டது. லங்காஸ்டர் வம்சத்தினரின் அர

சாட்சியை ஸ்தாபித்தவரான நான்காவதுஹென்றி,ஜான்ஆப்2ானட் என்பவருடைய புத்திரரல்லவா? ஜான் ஆப்2 மான்ட மூன்ருவது எட்வர்டினுடைய புதல்வர். அதேமாதிரி மூன்ருவது எட்வர்டின் மற்ற குமாரர்களின் சந்ததியார் சில பிரதேசங்களுக்குப் பிரபுக்களாக இருந்துவந்தனர். அவர்களில் யார்க் வம்சத்துப் பிரபுக்கள்ஒருசாரார்; ஆருவதுஹென்றி அரசாண்டபொழுது, ரிச்சர்ட் என்பவர் யார்க் பிரபுவாக இருந்தார். அதாவது அரசரும் அவரும் தாயாதிகள். இருவரும் மூன்ருவது எட்வர்டின் சந்ததியைச் சேர்ந்தவர்கள். ஷே யார்க் பிரபு தமது தகப்பனுரின் வழியாக யார்க் பூஸ்திதிகளையும், தாயின் வழியாக வேறு சில பூஸ்திதிகளையும் அடைந்து பெருத்த சீமானுயிருந்தார். அவர் இங்கிலண்டின் குழப்பத்தை ஒருவாறு விலக்கி அமைதியை நிலைநிறுத்த முயன்ருர். ஆனல் அப்பொழுது ஹென்றிக்குக் குழந்தை பிறக்கவில்லையாதலால், அவருக்குப் பிறகு அவருடைய தாயாதியான யார்க் பிரபுவே பட்டம் தரிப்பார் என்று பலர் எண்ணினர்.

1450-ல் நூறு வருஷ யுத்தத் தோல்விகளின் பயனுக அரசருடைய கௌரவம் குறைந்து போயிருந்த சமயத்தில், அவர் தமது சகாக்களுக்கு மீண்டும் பதவிகளை அளித்து வந்தார். யார்க் பிரபுவின் தலைமையின் கீழ் ஜனங்கள் அந்த சகாக்களைத் தூரத்துவதற்கு முயற்சி செய்தனர். ஆனல் ஹென்றியின் பட்டமகிஷி அவரைத் தூண்டி ஜனங்களுக்கு விரோதமாகவே நடந்துகொள்ளும்படி செய்தாள். 1452-ல் யார்க் பிரபு ஒரு சேனையைத் திரட்டிக்கொண்டு வந்து அரசரை எதிர்க்கலானுர். ஆனல் உள் நாட்டுச் சண்டையை வளர்ப்பதில் அவருக்கு விருப்பமில்லை. அரசர் தமது ஆலோசனைப்படி நடப்பதாக வாக்குறுதி செய்ததை ஒப்புக்கொண்டு யார்க் பிரபு தமது சேனையைக் கலைத்து விட்டார். ஆனல், ஹென்றியின் இராணி அந்த ஏற்பாட்டின்படி அரசர் நடந்து கொள்ள விடவில்லை. மேலும் 1453-ல் ஹென்றிக்குச் சிறிதளவு புத்தித் தடுமாற்றமும் உண்டாயிற்று. அதே வருஷத்தில் அவருக்கு ஒரு புதல்வனும் பிறந்தமையால், யாக் பிரபு சிம்மாதனமேறும் நம்பிக்கை போய்விட்டது. அதே சமயத்தில் நூறுவருஷ யுத்தம் இழிவாக முடிவடைந்தமையால், ஜனங்களுடைய ஆத்திரம்

அதிகமாயிற்று. 1454-ல் பார்லிமெண்டார் யார்க் பிரபுவை அரசருக்குப்பதிலாக நிர்வாகம் நடத்தும்படி வேண்டினர். ஆனால் அரசருடைய சுயபுத்தி திரும்பியதும், அவர் பழைய வழிகளிலேயே திரும்பிவிட்டார். அதைக் கண்ட யார்க் பிரபு சண்டை செய்வதைத் தவிர வேறு வழி இல்லையெனக் கண்டு 1455-ல் ஸேயின்ட் ஆல்வன்ஸ் (St Albans) என்ற இடத்தில் யுத்தம் தொடங்கி அரசரைச் சிறைப்படுத்தினர். அதுமுதற்கொண்டு இங்கிலண்டில் தொடர்ச்சியான உள்நாட்டுப்போர் ஆரம்பமாயிற்று.

அந்தப் போர் "ரோஜாப் பூக்களின் யுத்தம்" (Wars of the Roses) என்று குறிக்கப்படுகிறது. ஏனெனில் யார்க்பிரபுவும் அவருடைய சந்ததியாரும் வெள்ளை ரோஜாப்பூவையும், அவர்களுடைய தாயாதிகளான லங்காஸ்டர் வம்சத்தினர் (அதாவது ஆறாவது ஹென்றியும் அவரது உறவினரும்)சிவப்பு ரோஜாப்பூவையும் தம் தம் அடையாளங்களாக வைத்துக் கொண்டிருந்தனராம். ஆனால் அந்தப் பெயர் முற்றிலும் பொருத்தமான தல்லவானாலும், அது வழக்கத்தில் வந்துவிட்டதாகையால்,சரித்திரத்தில் அவ்வாறே குறிக்கப்படுகிறது. அந்த யுத்தம் முப்பது வருஷகாலம் நீடித்து நடந்தது. ஆனால் தொடர்ச்சியாகயுத்தங்கள்நடந்துகொண்டே போகவில்லை;ஒரு யுத்தம் நடப்பதும்,அதற்குப்பிறகு சில வருஷகாலம் ஒருவர் அரசாள்வதும், மறுபடியும் குழப்பம் தோன்றுவதும், ஒரு யுத்தம் நடப்பதுமாக இருந்தன. வெற்றியும் தோல்வியும் இருகட்சியினருக்கும் மாறிமாறிக் கிடைத்துக்கொண்டே இருந்தன. நிச்சயமான வெற்றி எந்தக் கட்சியினருக்காவது கிடைத்திருந்தால், மறு கட்சி பலஹீனமடைந்திருக்கும். யுத்தமும் நின்றுபோயிருக்கும். அப்படியே உள்நாட்டுச் சண்டை நீண்டகாலம் தொடர்ச்சியாக நடந்துகொண்டே வந்தது. அந்த யுத்தத்திற்கு மூலகாரணம் ஆறாவது ஹென்றியினுடைய திறமையின்மையேயன்றி வேறல்ல. மேலும் முன்னரே கூறியபடி ப்ரெஞ்சுயுத்தம் முடிந்ததும், பலபிரபுக்களும் யுத்தவீரர்களும் தமதுதேசத்திற்குத் திரும்பினர். அவர்களுக்கு அன்னிய தேசங்களில் கிடைத்தகொள்ளை நின்றுபோய் விட்டமையால், அவர்கள் உள்நாட்டுச் சண்டையில் கலந்துகொண்டு தூண்டிவிட்ட

னர். சில பிரபுக்கள் அரசருடைய, அதாவது லங்கா/2ஸ்டர் வம்சக் கட்சியில் சேர்ந்தனர். சாதாரண ஜனங்களோ யார்க் பிரபுவே மீண்டும் செங்கோலை நிலைநிறுத்தக் கூடியவரென்றெண்ணி அவருடன் சேர்ந்தனர். மேலும் நேவில்ஸ் (Nevilles) என்ற ஒரு முக்கிய குலத்தைச் சேர்ந்த பிரபுக்களும் யார்க் கட்சியில் சேர்ந்து கொண்டனர். அந்தக் குலத்தைச் சேர்ந்தவரொருவர் தமது மனைவியின் வழியாக வார்விக் பிரபுவானுர். ரோஜாப்பூக்களின் சண்டையில் அந்த வார்விக் பிரபு முக்கியமான நிகழ்ச்சிகளுக்குக் காரணமாயிருந்திருக்கிறுர்.

ஸெயின்ட் ஆல்பன்ஸ் வெற்றிக்குப்பிறகு யார்க்பிரபுவே அரசியலை நடத்திவந்தார். ஆனுல் பகிரங்கமாக யுத்தங்கள் நடக்காமற் போனுலும், இரண்டு கட்சியினருக்கும் இருந்த பகைமை முற்றிக் கொண்டே வந்தது. வார்விக் பிரபுவின் வீரச் செய்கைகளும் அதிகமாயின. அவர் 1458-ல் ஒரு ட்2ரெஞ்சுப் படையைத் தோற்கடித்து இங்கிலண்டைக் காப்பாற்றினுர். ஆனுல் இராணியினுடைய இரகசியச் சூழ்ச்சிகளின் பயனுக யுத்தம் தொடங்கியது. முதலில் யார்க் கட்சிக்கு வெற்றிகிடைத்ததானுலும் ஹென்றியரசர் 1459 ல் திடீரென்று தைரியத்தைக் காட்டி யார்க் சேனையைச் சிதற அடித்தார். யார்க் பிரபுவும், வார்விக் பிரபுவும், அவருடைய தந்தையும் தேசத்தை விட்டு ஓடவேண்டியதாயிற்று. அரசர் பூர்ணவெற்றியையடைந்துவிட்டதுபோலத் தோன்றியது. ஆனுல், ஓடிய வீரர்கள் மறு வருஷமே திரும்பினர். அப்பொழுது யார்க் பிரபுவின் புதல்வர் எட்வர்ட் என்பவரும் அவர்களுடன் சேர்ந்து கொண்டார். 1460-ல் நார்தா/2ம்ப்டன் என்ற இடத்தில் நடைபெற்ற யுத்தத்தில் அரசர் சிறைப்பட்டுப்போனுர். உடனே யார்க் பிரபு தாமே அரசர் ஆக முயன்ருர். ஆனுல் பிரபுக்களெல்லோரும் சேர்ந்து ஓர் உடன்படிக்கை செய்து ஆருவது ஹென்றி உயிருடனிருக்கும் வரையில் அரசராயிருப்பதென்றும், அப்பொழுது யார்க் பிரபுவே உண்மையில் நிர்வாகத்தை நடத்திவந்து ஹென்றிக்குப் பிறகு அரசராவதென்றும் ஏற்பாடாயிற்று. ஆருவது ஹென்றியும் அதை அங்கிகரித்தார்.

ஆனால் அவருடைய இராணி அந்த ஏற்பாடு இழிவானதென்று கருதி, தனது குமாரனுக்கு இராஜ்ஜியம் கிடைக்காமல் போவதைப்பற்றி வருத்தமுற்று, தைரியமாக முயற்சி செய்து பார்க்க நிச்சயித்தாள். அவள் ஸ்காட்லன்ட் தேசத்திற்கு சென்று அதன் ஜனங்களுடைய உதவியைப் பெற்றாள். அதற்குள் லங்காஸ்டர் வம்சத்தினிடம் அநுதாபமுள்ள பிரபுக்களும் யார்க் பிரபுவிற்கு விரோதமாகக் கிளம்பினார்கள். அவர்களை அடக்குவதற்கு 1460-ல் வேக்பீல்ட் (Wakefield) என்ற இடத்தில் யார்க் பிரபு யுத்தம் நடத்தி உயிர்துறந்தார். அவரது முக்கியமான தோழர்கள் சிலரும் கொல்லப்பட்டுப் போயினர். அந்தச் செய்தியைக் கேட்டு இராணி ஸ்காட்லன்டிலிருந்து திரும்பிவந்து வெற்றி யடைந்தவர்களைச் சேர்த்துக்கொண்டு லண்டன் நகரத்தை யடைந்தாள். 1461-ல் அவளை மறுபடியும் ஸெயின்ட் ஆல்பன்ஸ் என்ற இடத்திலேயே யார்க் கட்சியின் கூட்டாளியான வார்விக்பிரபு சந்தித்து யுத்தம் நடத்தினார். அவ்விடத்திலும் இராணிக்கே வெற்றி கிடைத்தது. ஆறாவது ஹென்றி தமது இராணியின் வசமானார்; லங்காஸ்டரின் வம்சமே கடைசியில் வெற்றியடைந்து விடும்போல இருந்தது. ஆனால் வேக்பீல்ட் யுத்தத்தில் இறந்துபோன யார்க் பிரபுவின் குமாரரான எட்வர்ட் புதிய சேனைகளைச் சேர்த்துக்கொண்டு லங்காஸ்டர் கட்சியைச் சேர்ந்த பிரபுக்களை மார்ட்டிமர்ஸ் க்ராஸ் (Mortimers Cross) என்ற இடத்தில் முறியடித்தார். இராணியினுடைய எண்ணம் நிறைவேறாமல் போய்விட்டது. எட்வர்டும் லண்டனை நோக்கிவந்தார். வழியில் வார்விக் பிரபுவும் அவருடன் சேர்ந்து கொண்டார். 1461-ல் அவர் நான்காவது எட்வர்ட் என்ற நாமதேயத்துடன் சிம்மாதனமேறினார். ஆனால் அப்பொழுதும் ஆறாவது ஹென்றி உயிருடனேயே இருந்தார். லங்காஸ்டர் வம்சத்தினரின் ஆட்சி அவரோடு முடிவடைந்தது; யார்க் வம்சத்தினரின் ஆட்சி தொடங்கியது. அதோடு ரோஜாப்பூக்களது யுத்தத்தின் ஒரு பகுதி முடிவடைந்தது.

---

# 23-வது அதிகாரம்.

---

## யார்க் வம்சத்தினரது ஆட்சி

(1) நான்காவது எட்வர்ட் : யார்க் வம்சத்தினரின் சேல் வாக்கு : ரோஜாப்பூக்கள் யுத்தத் தொடர்ச்சி:—புதிய அரசருக்கு பத்தொன்பது வயதே நிறைந்திருந்ததானாலும், அவர் ஏற்கனவே தமது பராக்கிரமத்தை எல்லோரும் உணரும்படி செய்திருந்தார். அவரிடம் பல நற்குணங்களும் காணப்பட்டன. மேலும், அவருடைய உறுதியான ஆட்சியே அப்பொழுது தேசத்தின் நிலைமைக்கு ஏற்றதாயிருந்தது. அவர் தமது முயற்சியினாலேயே பட்டத்தைப் பெற்றாராதலால், அவருடைய ஆட்சியிலாவது அமைதி ஏற்படுமென்ற நம்பிக்கையுடன் எல்லோரும் அவரைச் சார்ந்து நின்றனர். பொது ஜனங்களுக்கு சமாதானமே அவசியமானதால், அவர்களெல்லோரும் புதிய மன்னரையே ஆதரித்து நின்றனர். மேலும் எட்வர்டுக்கு முக்கியமான பக்க பலமாயிருந்த வார்விக் பிரபு வேலை செய்து வந்தார். வார்விக் பிரபுவின் பண்ணையாட்களே ஒரு பெரிய சைன்னியமாக இருந்தனர். அவருடைய வீரச் செய்கைகளை மெய்ச்சிய பல பிரபுக்களும் அவருடைய கட்சியில்சேர்ந்து, அவரது கட்சியடையாளத்தைத் தரித்துக் கொள்வதை ஒருபெரிய கௌரவமாக எண்ணினர். எட்வர்ட் அரசராவதற்கு நிரம்பவும் உதவியாக இருந்தமையால் வார்விக் பிரபுவுக்கு "அரசரை ஆக்கியவர்" (King Maker) என்ற காரணப்பெயர் உண்டாயிற்று. எட்வர்ட் முடி சூடிய பின்னரும் யுத்தம் நின்றபாடில்லை. ஆறாவது ஹென்றிக்கு அப்பொழுதும் பலர் துணையாயிருந்தனர். சில பிரபுக்கள் அவரிடம் அபாரமான அபிமானம் வைத்திருந்தனர். மேலும் அவர் உயிருடன் இருந்தபொழுதே எட்வர்ட் பட்டத்திற்கு வந்தது பலருக்கு அநியாயமெனத் தோன்றியது. எனவே ஹென்றியின் இராணியோடு மறுபடியும் பலர் சேர்ந்து கொண்டனர். 1461-ல் நான்காவது எட்வர்ட் தமது பகைவர்களை

டௌடன் (Towton) என்ற இடத்தில் பூர்த்தியாகத் தோற்கடித்தார். லங்கா/2ஸ்டர் கட்சிச் சேனையில் பலர் மடிந்தனர். ஹென்றி இராணியுடன் ஸ்காட்லன்டுக்கு ஓடி ஒளிந்துகொண்டார். அதன் பிறகு ஒன்பது வருஷகாலம் எட்வர்ட் நிரந்தரமாக அரசுபுரிந்து வந்தார். ஆனாலும்கூட அவருக்கு அச்சம் இருந்துகொண்டே வந்தது. ஸ்காட்லன்டிலிருந்த இராணியும் அரசரும் எவருடனாவது சேர்ந்துகொண்டு வந்து அவருக்குத் துன்ப மிழைத்துக் கொண்டே இருந்தனர். ஆனால், கடைசியாக 1464-ல் அரசர் சிறைப்படுத்தப் பட்டுப்போக, அதன்பிறகே எட்வர்டுக்கு சிம்மாதனம் நிலைத்தது.

முடிதரித்தவருக்கு ஒரு பொழுதும் மன அமைதி ஏற்படா தென்று ஒரு கவி கூறியிருக்கிறார். அதன்படி, எட்வர்ட் மன்னருக்கு வெவ்வேறு துன்பங்கள் நேர்ந்து கொண்டே யிருந்தன. தமது பழைய பகைவரை ஜயித்ததும், அவருடைய துரதிருஷ்ட வசமாக, அவருடன் சிநேகமாயிருந்தவர்களே விரோதிகளாயினர். வார்விக் பிரபு அவருக்கு நிரம்பவும் உதவியாக இருந்தாரல்லவா? அவர் தமது சுயநலத்தை அதிகரித்துக் கொள்ளும், நோக்கத்தையும் கொண்டிருந்தார். ஆனால் சீக்கிரத்தில் எட்வர்டுக்கும் வார்விக்குக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. எட்வர்ட் ப்2ரெஞ்சு தேசத்தின் அரசகுலத்தைச் சேர்ந்த மடந்தையொருத்தியை மணக்க வேண்டுமென்று வார்விக் ஏற்பாடு செய்தார். அந்த ஏற்பாடு முடிவடையும்போது, எட்வர்ட் ஏற்கனவே எலிஸபெத் உட்வில் (Elizabeth woodwille) என்பவளை விவாகம்செய்துகொண்டு விட்டதாகக் கூறினார். அதனால், வார்விக்கிற்கு அவமானம் ஏற்பட்டது. மேலும் வார்விக்கினுடைய மிதமிஞ்சிய செருக்கை அடக்கவேண்டுமென்பது எட்வர்டின் கருத்து. ஆகவே அவர் தமது மனைவியின் உறவினர்களிடம் அதிக நேசம் பாராட்டத் தொடங்கி அரண்மனை முழுதிலும் அவர்களையே உத்தியோகங்களில் நிரப்பிவிட்டார். வார்விக் பிரபு அதன் பின் அரண்மனையில் எல்லா கௌரவத்தையும் இழந்துவிடவே, அரசருக்கு விரோதமாகத் திரும்பிவிட்டார். அது வரையில் தாம் எட்வர்டுக்குச் செய்த உதவியின் அளவுக்கு அவருக்குத் தாம் தீங்கு செய்ய வேண்டுமென்று நிச்சயித்துக்

கொண்டார். அவருடன் சேர்ந்த சிலர் ஒரு சேனையைத் தயார் செய்துகொண்டு அரசரை எதிர்த்தனர். ஆனால் ஒருமுறை அரசர் தோல்வியடைந்தாரானாலும், அதிக சீக்கிரத்தில் பகைவரை முறி யடித்தார். வார்விக் பிரபு ப்ரான்ஸ் தேசத்திற்கு ஓடி, அங்கிருந்த ஆறாவது ஹென்றியின் இராணியுடன் சேர்ந்துகொண்டார். ப்ரெஞ்சு தேசத்தரசர் அவர்களுக்கு உதவி புரிந்தார். வார்விக் பிரபு ஆறாவது ஹென்றியை மீண்டும் சிம்மாதனத்தி லேற்றுவ தாக வாக்குறுதி செய்தார். ப்ரெஞ்சு தேசத்துச் சேனையொன்றை அழைத்துக்கொண்டு அவர் 1470-ல் இங்கிலண்டின் மீது படை யெடுத்து வந்தார். அப்பொழுது எட்வர்ட் வடக்கே போயிருந் தமையால் லண்டன் பட்டணம் சீக்கிரத்தில் வார்விக் பிரபுவின் வச மாய் விட்டது. சிறையிலிருந்த ஆறாவது ஹென்றி மீண்டும் சிம் மாதனத்தில் ஏற்றப்பட்டார். எட்வர்ட் ஓடி ஒளிந்துகொண் டார். வார்விக்கினுடைய 'அரசரை ஆக்கியோர்' என்ற காரணப் பெயர் பொருத்தமானதென்பது மறுபடியும் உறுதிப்பட்டது. சகல மான அதிகாரமும் வார்விக்கினிடமே இருந்தது. ஆறாவது ஹென்றி 'கம்பளி மூட்டை'யைப் போலவும் 'முடிதரித்த கன்றுக்குட்டி' யைப் போலவும் சுயமாக எதையும் செய்யமாட்டாதவராய்ப் பரா தீனமாக இருந்து வந்தார். ஆனால் அந்த சுகம்கூட அவருக்கு ஒரு வருஷத்திற்கு மேல் நிலைத்திருக்கவில்லை. 1471-ல் எட்வர்ட் திரும்பிவந்து சிம்மாதனத்தைக் கைப்பற்றினார். ஆறாவது ஹென்றி மறுபடியும் சிறை புகுந்தார். அதன்பின் பார்னட் (Barnet) என்ற இடத்தில் எட்வர்ட் யுத்தம் புரிந்து வார்விக் பிரபுவைக் கொன் றார். அவர் இறந்தது, யார்க் கட்சிக்குப் பெருத்த அநுகூலமா யிற்று. அதன்பின், லங்காஸ்டர் வம்சத்தை ஆதரித்து, ஆறாவது ஹென்றியை அரசராக்க எந்தப் பிரபுவும் முயற்சி செய்யவில்லை. வார்விக் பிரபு உண்மையான தீரமும் தைரியமும் பெற்றவரேயானா லும், அவர் அரசியல் நடாத்தும் திறமை வாய்ந்தவரல்லர். தமது நலத்தை மாத்திரமே அவர் முக்கியமாகக் கருதினாரேயன்றி தேசத் தின் க்ஷேமத்தை அவர் அவ்வளவு அக்கரையுடன் கவனிக்கவில்லை. பழைய நார்மன் பிரபுக்களுக்கிருந்த குணங்களே வார்விக்கினிடம் நிறைந்திருந்தன.

இறந்துபோன பின்னரும், ஹென்றியினுடைய இராணி தனது குமாரனைக் கூட்டிக்கொண்டு ப்ரான்ஸிலிருந்து இங்கிலண்டில் வந்திறங்கி மறுபடி போர் புரியலானாள். ஆனால், அபலையான ஸ்திரீயினால் என்ன செய்துவிட முடியும்? ட்யூக்ஸ்பரி (Tewkesbury) என்ற இடத்தில் 1411-ம் வருஷத்தில் எட்வர்ட் அந்த இராணியை எளிதில் தோற்கடித்தார். அவளுடைய புதல்வன் கொல்லப்பட்டுப் போனான். இராணியும் சிறையிலிடப்பட்டாள். சிறையிலிருந்த ஆறாவது ஹென்றியும் அரசருடைய கட்டளையினால் கொல்லப்பட்டுப் போனார். ஆனால் வெளிக்கு மாத்திரம் ஹென்றி இயற்கையாக மரணமடைந்தாரென்று கூறப்பட்டது. ஆறாவது ஹென்றியைக் கொன்றது மகா குரூரமான செய்கையேயாகும். அவரைச் சிறையிலேயே வைத்திருந்தால் அதற்கு மேல் அபாயமேற்படாது என்பதை அறிந்திருந்தும், எட்வர்ட் அவரைக் கொல்வித்தது அவருடைய கடின ஹிருதயத்தையே காட்டுகிறது.

இச் சம்பவத்திற்குப் பிறகு, எட்வர்ட் எவ்விதமான துன்பமுமின்றி அமைதியாக ஆண்டு வந்தார். அவர் உள்நாட்டுக் கலகத்தை அடக்கிய பின்னர், தமது பகைவருக்கு உதவிபுரிந்த ப்ரெஞ்சு தேசத்து அரசரையும் எதிர்த்துச் சென்றார். கடைசியில் ப்ரெஞ்சு தேசத்தரசர் அவருடன் சமாதானம் செய்து கொண்டார்; அந்தச் சமாதானம் சில வருஷகாலம் நிலைத்திருந்தது.

இங்கிலண்டிலும் அவருடைய ஆட்சிமுறை நிரம்பவும் உறுதியாகவே இருந்தது. அவர் கலகம் நேரிடாதபடி கவனித்து வந்தமையால்,ஜனங்கள் அவரிடம்திருப்தியடைந்தனர். ஆனால் யார்க் வம்சத்தினரின் ஆட்சி தொடங்கிய பிறகு பார்லிமென்ட் சபைக்கிருந்த மதிப்புக் குறையத் தொடங்கியது. லங்காஸ்டர் வம்சத்தினரான நான்காவது ஹென்றி பார்லிமென்டின் தயவினால் அரசாட்சியை பெற்றமையால், அவரது காலத்திலும், அவருடைய சந்ததியாரின் காலத்திலும் இச் சபையாருக்குக் கட்டுப்பட்டே இராஜ்ஜிய நிர்வாகம் நடந்தது. ஆனால், யார்க் வம்சத்தினரான நான்காவது எட்வர்ட் தமது சுய பராக்கிரமத்தினாலேயே வெற்றி யடைந்தாராத

லால், அவர் சுயேச்சையாகவே ஆண்டு வந்தார்; பார்லிமென்ட் சபையை அவர் அடிக்கடி கூட்டவில்லை. தமக்குப் பணம் தேவையான பொழுதெல்லாம் அவர் மேற்படி சபையாரின் அநுமதியைப்பெருமலேயே ஜனங்களிடமிருந்து தயாவிஷயமாகப் (Benevolence) பண உதவி பெறலானார். பிரஜைகள் தாமாகவே இஷ்டப்பட்டு அந்தத் தொகையைச் செலுத்துவதாக அவர் பகிரங்கமாகக் கூறினாலும், உண்மையில் விருப்பமற்றவரும்கூட அதைக் கொடுத்தேயாக வேண்டியிருந்தது. அப்படியிருந்தும், ஜனங்கள் அவருடைய உறுதியான ஆட்சியைக் கருதி அவரை மதித்தே வந்தனர். 1483-ல் அவர் மரணமடைந்தார்.

(2) **ஐந்தாவது எட்வர்டு: ரோஜாப் பூக்களின் சண்டை: மூன்றவது ரிச்சர்டு: புதிய அரச வம்சம்:** இறந்துபோன அரசருடைய புத்திரர் ஐந்தாவது எட்வர்டு என்ற நாமதேயத்துடன் முடிதரித்தார். அவரது இளமைப் பருவத்தைக் கருதி அவருடைய சிறிய தந்தையான ரிச்சர்டு என்ற பெயருடைய ம்ளஸ்டர் பிரபு அரசியலை நடத்தி வந்தார். ம்ளஸ்டர் பிரபு அதிகமான பேராசை படைத்தவர். அவர் இராஜ்ஜியத்தை அடியோடு அபகரிக்க வேண்டுமென்ற துராசை கொண்டிருந்தார். ஆனல் யௌவன அரசருடைய தாயின் உறவினர்கள் அவருக்கு எதிரிடையாக நின்றனர். அவர்களை ம்ளஸ்டர் பிரபு சீக்கிரத்தில் மேற்கொண்டு விட்டார். தாம் இராஜ்ஜியத்தை யடைவதற்கு இடையூருயிருந்தவர்களை அவர் வேரறுத்துவிட்டார். ஐந்தாவது எட்வர்டு என்று பட்டம் தரித்த சிறுவர் சிறைவாசம் செய்ய நேர்ந்தது. அதன்பின் ம்ளஸ்டர் லண்டன் நகரத்து ஜனங்களைத் தமதுவசப்படுத்த முயன்ருர். அவருடைய கூட்டாளிகள் ஒரு கட்டுக்கதையை வெளியிட்டனர். அதாவது யௌவன அரசருடைய தாயார் நான்காவது எட்வர்டுக்கு கிரமப்படி ஏற்பட்ட பட்டமகிஷியல்லவென்றும், அவளுடைய வயிற்றில் ஜனித்த பிள்ளை அரசராவதற்கு அருகமற்றவரென்றும் கூறினர். அதற்குப்பிறகு லண்டன் நகரத்து ஜனங்களின் கூட்டமொன்றில் ம்ளஸ்டருடைய கூட்டாளிகளில் சிலர் ம்ளஸ்டர் பிரபுவே அரசியலை வகிக்க வேண்டுமென்று கூறிப் பிரசங்கம் புரிந்தனர். ஜனங்கள் அதை அங்கீகரிக்கத் தயங்கிக் கொண்டிருக்

கையில், முன்னேற்பாடுகளுடனேயே அங்கு வந்திருந்த சிலர் ஒவ்வொரு மூலையிலிருந்தும் "ரிச்சர்ட் (க்ளஸ்டர் பிரபுவின் பெயர்) மன்னர்!" என்று கூவினார்கள். அதுவே மகாஜனங்களின் சம்மதவாக்கென்று கூறிக்கொண்டு க்ளஸ்டர் பிரபு மூன்றாவது ரிச்சர்ட் என்ற நாமதேயத்துடன் முடிசூட்டிக்கொண்டார். ஐந்தாவது எட்வர்ட் அரசர் அற்ப இராஜ்ஜிய சுகமும் அநுபவிக்காமல் சிறையிலடைக்கப்பட்டுப் போனார். கொலை புரிவதற்குப் பின் வாங்காத ரிச்சர்ட் அவரைக் கொன்று விட்டாரென்றே கருதப் பட்டது.

1484-ல் பார்லிமென்ட் சபை கூடியது. ரிச்சர்ட் அதனிடம் இணக்கமாகவே நடந்துகொண்டார். ஜனங்களுடைய அன்பையும் உண்டாக்கிக்கொண்டு செங்கோல் மன்னராய் ஆட்சி புரியவேண்டு மென்று அவர் நினைத்திருக்கலாம். அந்த எண்ணம் பலிக்க இடமில்லாமல் போய்விட்டது. ஏனெனில் அவருக்குப் விரோதிகளும் வஞ்சகர்களுமான போலி நண்பர்கள் பலர் தோன்றினர். அதுவன்றி, எதிர்பாராத இடத்திலிருந்து இன்னொரு துன்பமும் ஏற்பட்டு அவருடைய பதவிக்கும் உயிருக்குமே ஹானியை உண்டாக்கியது. அவருடைய புத்திரரும் மனைவியும் இறந்தனர்.

ஆறாவது ஹென்றி கொல்லப்பட்ட பிறகு லங்காஸ்டர் வம்சத்தினரின் சந்ததியார் அநேகமாய் அற்றுப் போயினர். ஆனால் அந்த வம்சத்தைச் சேர்ந்த ஒரு தூர பந்து வெளி தேசத்தில் இருந்து வந்தார். அவர் ட்யூடர் (Tudor) என்ற குலத்தைச் சேர்ந்தவர். அவருக்கு ஹென்றி என்று பெயர். அவர் தமக்கு இங்கிலண்டின் அரசாட்சி கிடைக்கு மென்று அதற்கு முன் கனவிலும் எண்ணவில்லை. ஆனால் ரிச்சர்டினுடைய பகைவர்கள் அவரே லங்காஸ்டர் வம்சத்தின் நியாயமான வார்சுதாரர் என்று கூறி அவருடன் சேர்ந்துகொண்டு ரிச்சர்டை எதிர்க்கலானார்கள். 1485-ல் பாஸ்வர்த் என்ற இடத்தில் நடந்த யுத்தத்தில் ரிச்சர்ட் இறந்து போனார். அவர் செய்திருந்த கொலைகள் யாவும் ஒன்று சேர்ந்து முடிவில் அவரையே கொன்றன. பாஸ்வர்த் சண்டையில் வெற்றியடைந்த ஹென்றி ஏழாவது ஹென்றி என்ற நாமதேயத்துடன்

பட்டத்திற்கு வந்து, ட்யூடர் வம்சத்தாரின் ஆட்சியை ஸ்தாபித்தார். அதுமுதல் இங்கிலண்டின் சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாகிறது. அதாவது, அதோடு பழைய நிலைமை மாறுபட்டுப் போக, நவீன கால நிலைமை அப்பொழுது முதல் ஆரம்பமாகிறது.



# லங்காஸ்டர், யார்க் வம்சங்களின் மன்னர்கள்.




* ஐந்தாவது ஹென்றியின் மனைவியான காதரைன், அரசர் இறந்தபின் ஓவன் ட்யூடர் என்பவரை மணந்து கொண்டாள்.

= என்ற குறிப்பு மணந்துகொண்டாரென்பதைக் காட்டுவது.

# 24-வது அதிகாரம்

---

## ஏழாவது ஹென்றி.

(1) **நவீன கால நிலைமையின் ஆரம்பம் : புத்துயிர் தளிர்த்தல் :**—ஏழாவது ஹென்றியினுடைய ஆட்சியை விவரித்துக் கூறுமுன், அவரது காலத்தில் ஏற்பட்ட சில முக்கியமான இயக்கங்களைப் பற்றிக் கூறுவது அவசியமாகிறது. 14, 15-ம் நூற்றாண்டுகளில் ஐரோப்பா முழுதிலும் ஒரு புதிய உணர்ச்சியும் ஊக்கமும் புத்துயிரும் தோன்றின. நீண்ட காலம் நித்திரையிலிருந்து விழித்தெழுந்தவர்களைப்போல ஜனங்கள் அதற்குமுன் இல்லாத நுட்ப புத்தியையும், எதையும் ஆராய்ந்து பார்க்கும் குணத்தையும் பெற்றனர். அதனாலேயே 15-ம் நூற்றாண்டு முதல் நவீன கால நிலைமை தொடங்குவதாகக் கூறுவது வழக்கம். பழைய கொள்கைகளும் அபிப்பிராயங்களும் மாறி, புதிய அமைப்பைப் பெற்றன. அதற்கு முக்கிய காரணம் பின் வருமாறு; பண்டைக்கால ஐரோப்பாவில் கிரீஸ் தேசமே நாகரிகத்திலும் அறிவிலும் மேம்பட்டிருந்தது. ஐரோப்பா முழுதிற்கும் அதுவே அறிவுச் சுடராய் நின்றது; எல்லாவிதமான கலைகளும் சாஸ்திரங்களும் அங்கு அபிவிருத்தி யடைந்திருந்தன. அப்பொழுது ஐரோப்பாவின் மற்ற பாகங்கள் இருளடைந்திருந்தன வென்றே சொல்ல வேண்டும். ஆனல் நாளடைவில் கிரீஸ் தேசம் க்ஷீணித்துப்போக, அதற்குப்பின் உரோம் இராஜ்ஜியம் பிரபலமடைந்தது. சில நூற்றாண்டுகளுக்குப் பின் அதுவும் மலினமடைந்தது. இவ்விரு தேசங்களில் அபிவிருத்தி யடைந்திருந்த கல்வியும், கலைகளும் அழியாமல் சில அறிவாளிகளால் பரம்பரையாய்ப் பாதுகாக்கப்பட்டு வந்தன. ஆனல் அவை சாதாரண ஜனங்களினிடையே பரவாமல் ஒரு சிலரிடமே இருந்து வந்தன. ஆனல் 15-ம் நூற்றாண்டின் இறுதியில் கான்ஸ்டான்டிநோபில் (Constantinople) என்ற இடம் துருக்கியர் வசமாக, அங்கு வாழ்ந்து வந்த மேற்கூறிய அறிவாளிகள் தமது மூட்டை முடிச்சுகளுடனும் கலைஞானத்துடனும்

வெளியேறி ஐரோப்பாவில் பரவி விட்டனர். அதுவரை ஒடுங்கிக் கிடந்த கலைகளும் ஞானமும் அவர்கள் மூலம் பரவலாயின. ஜனங்கள் கல்வி கேள்விகளில் ஊக்கமும் அக்கரையும் கொள்ளலாயினர்; பல நூல்களைப் படிக்கத் தொடங்கினர்; அதனல் அறிவு விசாலமடைந்தமையால் எதையும் ஆராய்ச்சி செய்யும் குணத்தைப் பெற்றனர்; உடனே, தம்முடைய சமூக அமைப்பையும் மதக்கொள்கைகளையும் கூர்ந்து சோதித்து அவைகளிலிருந்த குற்றம் குறைபாடுகளை அறியலாயினர். அதனல் பழைய மூட நம்பிக்கைகளிற் பல மறைந்தன; பிறர் சொல்வதையெல்லாம் அப்படியே நம்பாமல் ஜனங்கள் தமக்குத்தாமே யுக்தாயுக்தங்களை ஆராய்ந்து பார்க்கலாயினர். அறிவாளிகள் சாமானிய ஜனங்களை ஏமாற்றுவது கூடாத காரியமாயிற்று. ஷெ மாறுதல்களெல்லாம் ஐரோப்பா முழுதிலும் பொதுவாக ஏற்பட்டனவாகையால், இங்கிலண்டிலும் அவை பரவின; ஆதலால் 15-ம் நூற்றுண்டில் ஐரோப்பாவில் ரினேஸன்ஸ் (Renaissance or Revival of Letters) அல்லது கலைகளின் மறுபிறப்பு ஏற்பட்டதாகக் குறிப்பிடுவது வழக்கம். அந்த இயக்கத்திற்கு அநுகூலமாக, அப்பொழுது அச்சியற்றும் யந்திரமும் கண்டு பிடிக்கப்பட்டது. அதற்கு முன் நூல்கள் கையெழுத்துப் பிரதிகளாகவே இருந்ததாகையால், அவை சொற்பமாக இருந்ததுபற்றி எல்லா ஜனங்களிடமும் பரவாமலும் படிப்பதற்குப் பிரயாசையாகவுமிருந்தது. அது கல்வி அபிவிருத்திக்கு ஒரு பெருத்த இடையூருக இருந்து வந்தது. அச்சு யந்திரம் கண்டுபிடிக்கப் பட்டவுடனே, சொற்ப விலையில் புஸ்தகங்கள் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன. சாமானிய ஜனங்களும் அவைகளை வாங்கிப் படிப்பது சுலபமாயிற்று. ஆரம்பத்தில், அச்சியற்றும் முறை தற்காலத்திலிருப்பதுபோல இவ்வளவு திறமையாகஇல்லாமல்போனுலும் கையெழுத்தை விட அது எத்தனையோ மடங்கு சௌகரியமாக இருந்தது. இங்கிலண்டில் 1477-ல் வில்லியம் கா/2க்ஸ்டன் (Wlliam Caxton) என்பவர் முதன்முதலாக அச்சு யந்திரத்தை உண்டாக்கினர். அவரே சிறந்த மேதாவியாதலால், புஸ்தகங்களை அச்சிடுவதில் அவர் தமது புத்தியையெல்லாம் உபயோகித்தார். இங்கிலீஷிலும் லா/2ட்டின் பாஷையிலும் அவர் பல நூல்களை

அச்சியற்றினர். மேலும் 15-ம் நூற்றூண்டிலேயே இன்னும் பல புதிய விஷயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. கோலம்பஸ் (Columbus) என்பவர் முதன்முதலாக அமெரிக்காக் கண்டம் ஒன்று இருப்பதாகக் கண்டு பகிரங்கப்படுத்தினர். அப்பொழுதே ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்கு வருவதற்கு கடலில் ஒரு வழியைக் கண்டுபிடித்தனர். அமெரிக்காவிற்கும் இந்தியாவிற்கும் ஐரோப்பியர் பலர் பிரயாணம் செய்யலாயினர். புதிதாகக் கண்டுபிடித்த தேசங்களில் வியாபாரம்செய்யவும் குடியேறி இராஜ்ஜியத்தை ஸ்தாபிக்கவும் வசதி ஏற்பட்டது; இவ் மாறுதல்களை யெல்லாம் கண்ட ஐரோப்பியர்களுக்கு ஒரு வித ஆவேசமும், பரபரப்பும், ஆர்வமும் உண்டாவது இயற்கையான விஷயமே. எந்த விஷயத்திலும் அவர்கள் சுயமாக ஆலோசித்து சுயேச்சையாக நடந்து கொண்டனர். ட்யூடர் வம்சத்தாரின் ஆட்சி தொடங்கியபொழுது இவ்விதமான மாறுதல்கள் தலையெடுக்க ஆரம்பித்து, படிப்படியாக நிலைத்துப்போயின. ஆகவே, ட்யூடர் அரசர்கள், அறிவு விசாலமடைந்த பிரஜைகளைப் பரிபாலனம் செய்யவேண்டியிருந்ததென்பதை நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும். ட்யூடர் அரசர்கள் தமது விசேஷ குணங்களினுலும் சாமர்த்தியத்தினுலுமே தமது ஆட்சியை திருப்திகரமாகவும், ஜனங்களுக்கு அவநம்பிக்கையையோ ஆக்குரோஷத்தையோ உண்டாக்காத விதமாகவும் நடத்திவந்தனர். அவர்களுக்கிருந்த குணங்கள் என்னென்னவென்பதையும், அவைகளின் மூலம் அவ்வரசர்கள் பெருமையடைந்த விதத்தையும் நாம் பின்னுல் விவரிப்போம். இங்கிலண்டில் ஆட்சிபுரிந்த பல வம்சங்களுக்குள் ட்யூடர் வம்சத்தாரே அதிக கீர்த்தியையும் மேம்பாட்டையும் அடைந்தவர்கள். அவர்கள் அரசாட்சி புரிந்ததில் எவ்வாறு ஜெயம் பெற்றனர் என்பதையும், அவர்கள் ஆண்டு வந்தகால நிலைமையும் பரிபாலித்த பிரஜைகளின் மனப்பான்மையும் எவ்விதம் அவர்களுக்கு அநுகூலமாயிருந்தனவென்பதையும் நாம் பின்னுல் விவரிப்போம்.

(2) **இம்பாஸ்டர்ஸ் (Imposters) அல்லது வேஷதாரி மன்னர்கள்: எட்வர்டின் அரசியல் முறைகள்: பிரபுக்களை அடக்குதல்:**—ஏழாவது ஹென்றி தாம் பின்னுல் அரசராகப் போவதை தமது யௌவனப் பருவத்தில் சிறிதும் எதிர்பார்க்கவில்லை; அவர் அர

சராவதற்கு முன் பல இடுக்கண்களை அடைந்தவராதலால், அந்த எதிர் பாராத பெரிய பாக்கியம் கிடைத்ததுமே, அவர் தமது சுய நன்மையைப் பெருக்க முயன்றார். எவரிடமும் அவருக்கு நம்பிக்கை கிடையாது; நிதானமாகவும் ஜாக்கிரதையாகவும் நடந்து தமது விரோதிகளை அழிப்பதிலும், தமது அதிகாரத்தை விருத்தி செய்துகொள்வதிலும் அவர் கவனமாயிருந்தார். மௌனமாக வேலை செய்து அதிக பதற்றத்தைக் காண்பியாமல், யார் யாரை எப்படி எப்படி வசப்படுத்த வேண்டுமோ, அந்தந்த முறைகளை அவர் அநுஷ்டித்து வந்தார். ஆனால் அவர் சுயநலத்தை முக்கியமாக கவனித்தாரானாலும் தேசத்தின் நலத்தை அவர் கவனியாமல் விட்டுவிடவில்லை. அவர் லங்காஸ்டர் வம்சத்தின் சந்ததியார் என்ற ஹோதாவில் பட்டத்திற்கு வந்தது வாஸ்தவமானாலும், இங்கிலண்டு முழுதும் தமது ஆதிக்கத்திற்குட்படவேண்டுமென்றும், பழைய கட்சிச் சண்டைகள் ஒழியவேண்டுமென்றும் எண்ணி அவர் யார்க் வம்சத்தைச் சேர்ந்தவளும், நான்காவது எட்வர்டு அரசரின் குமாரத்தியுமான எலிஸபெத் என்ற பெண்ணை விவாகம் செய்து கொண்டார். அதனால் யார்க் கட்சியினர் அவர்மீது கொண்டிருந்த அருவருப்பு மறைந்துபோக சாதனமுண்டாயிற்று; அவரது புத்திரர் காலத்தில் பழைய குரோதம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. இவ்விதம் தமது விவாகத்தின் மூலம் இங்கிலண்டில் மீண்டும் ஒற்றுமை ஏற்படும்படி செய்தது ஹென்றியினுடைய அரசியல் விவேகத்தை நன்கு காட்டியது.

ஆனாலும், அவர் சிம்மாதனமேறியபின் சில வருஷகாலம் வரையிலும் பழைய குழப்பம் இருந்தே வந்தது. யார்க் வம்சத்து ஸ்திரீயை அவர் மணந்து கொண்டதன் பயன் நாளடைவிலேயே தோன்ற வாரம்பித்தது. யார்க் வம்சத்தைச் சேர்ந்த பல பிரபுக்கள் அவரை எதிர்க்கத் தயாராயினர். 1486-ல் அவர்கள் பல இடங்களில் கலகம் செய்ய முயன்றனர்; ஆனால் அவர்களுக்குள்ளேயே ஒற்றுமை இல்லாமல் போகவே, அந்த முயற்சி பலிக்காமல் போய்விட்டது. ஆனால், கலகக்காரர்கள் வேறொரு தந்திரம் செய்தனர். அவர்களுக்கு அயர்லண்டிலிருந்த சிலரும் உதவியாயிருந்தனர். அவர்களெல்லோரும் சேர்ந்து 1487-ல் பன்னிரண்டு வயது நிறைந்த ஓர்

அழகிய சிறுவனைத் தம்முடன் கூட அழைத்துக் கொண்டு வந்து அவனை இங்கிலண்டின் மன்னனாக்க முயன்றனர். வார்விக் பிரபுவின் சந்ததியானொருவனை மூன்றாவது ரிச்சர்டு தவது வார்சாக ஏர்படுத்த எண்ணியிருந்தார். அந்தச் சந்ததியான் பின்னால் சிறையிலிடப்பட்டுஅவ்விடத்திலேயே அப்பொழுதும் இருந்து வந்தான். கலகக்காரர்கள் அந்த சந்ததியானே சிறையிலிருந்து தப்பி வந்திருக்கிறானென்றும் அவனே அந்தச் சிறுவன் என்றும் கூறி, அயர்லன்டில் அவனுக்கு மகுடாபிஷேகமும் செய்வித்தனர். அச்சிறுவன் உண்மையில் ஓர் ஏழைக்குடும்பத்தைச் சேர்ந்தவன். அவனுடைய பெயர் லாம்பர்ட் ஸிம்னல் (Lambert Simnel) என்பது. கலகக்காரர்கள் அவனை ஒரு கருவியாக வைத்துக்கொண்டு, போலி மன்னன் பெயரால் தாமே அதிகாரத்தை வகித்து சுகமநுபவிக்க எண்ணினர். அந்தப் பெரிய புரட்டை வெளிப்படுத்துவது ஹென்றிக்கு மிகவும் எளிதாயிருந்தது. அவர் உண்மையான வார்விக் சந்ததியானை சிறையிலிருந்து அழைத்துவந்து, எல்லோருக்கும் காட்டி கலகக்காரரின் ஆள் மாறாட்ட மோசத்தை எளிதில் மெய்ப்பித்து விட்டார். எனவே, கலகக்காரர்கள் இங்கிலன்டில் வந்திறங்கியபோது இங்கிலீஷ்காரர்களில் எவரும் அவர்களுடன் சேரவில்லை. ஸ்டோக் என்ற இடத்தில் கலகக்காரர்கள் தோல்வியுற்றனர். வேஷதாரி மன்னனான லாம்பர்ட் ஸிம்னலுக்கு அரண்மனை மடைப்பள்ளியில் ஓர் உத்தியோகம் கிடைத்தது. அந்தக் கூத்து நடந்ததற்கு நாலைந்து வருஷ காலத்திற்குப் பிறகு அதைவிட அதிக சாமர்த்தியமாகத் தயாரிக்கப்பட்ட இன்னொரு போலிமகுடாபிஷேகம் நடந்தது. 1492-ல் பேர்கின் வார்பெக் (Perkin Warbeck) என்டவன் தான் ஐந்தாவது எட்வர்டினுடைய இளைய சகோதரனென்று கூறிக்கொண்டு வெளிப்பட்டான். உண்மையில் அவ்விரு சகோதரர்களையும் மூன்றாவது ரிச்சர்டு சிறையில் கொல்லச் செய்துவிட்டார். ஆனால் வார்பெக் தனது நாடகத்தை மிக அழகாக நடித்து வந்தமையால், அவன் கூறியதை உண்மையென்றே பலர் நம்பிவிட்டனர். லாம்பர்ட் ஸிம்னல் என்ற முதல் வேஷதாரியை விட வார்பெக் அதிக துன்பம் கொடுத்து வந்தான். ப்ரெஞ்சு அரசர்கூட அவனே

அரசனென்று ஏற்றுக்கொண்டு விட்டார். இங்கிலண்டிலும் பலர் அவனுக்கு இரகசியமாக உதவி செய்யலாயினர். 1495-96-ல் அவன் ஸ்காட்லன்டில் தங்கியிருந்தான். ஸ்காட் அரசரும் ஹென்றியை சிறிதுகாலம் எதிர்த்துவிட்டு பிறகு வேஷதாரி மன்னனைக் கை நழுவவிட்டு விட்டார். வார்பெக் அங்குமிங்கும் ஓடிக் கடைசியில் இங்கிலண்டில் வந்திறங்கினான். ஹென்றியிடம் பகைமை கொண்டிருந்த சிலஇங்கிலீஷ்காரர்கள் அவனுடன்சேர்ந்துகொண்டனர். ஆனால் ஹென்றியின் சேனையைக் கண்டதும் வார்பெக் ஓட்டம் பிடித்தான். ஆனாலும் 1497-ல் அவன் சிறையிலடைக்கப்பட, அங்கும் அவன் ஏதோ சதியாலோசனை செய்தானென்ற குற்றத்தினால் இரண்டு வருஷ காலத்தில் அவன் தூக்கிலிடப்பட்டான். அதன்பின் ஹென்றிக்கு எவ்வித இடுக்கணும் ஏற்படவில்லை. அவருடைய அரசபதவி அவருக்கே உறுதிப்பட்டது. வார்பெக் மடிந்ததுடன் யார்க் வம்சத்தினரின் கொட்டம் அடியோடு மறைய, ரோஜாப்பூக்கள் யுத்தங்களும் முடிவடைந்தன. மேற்கூறிய கலகங்களை அடக்கியபின் ஹென்றி அரசியல் முறைகளைச் சீர்ப்படுத்தத் தொடங்கினார். ரோஜாப்பூக்கள் யுத்தங்களின் பலனாக, தேசத்தில் அமைதி இல்லாமல் போனமையால், அரசாட்சி திறனற்றுத் தளர்வடைந்து போயிருந்தது. முதலில், ஹென்றி அதற்கு பலத்தையும் ஊக்கத்தையும் உண்டாக்கினார். ஆனால் அவர் லங்காஸ்டர் வம்சத்து அரசர்களைப் போல எந்த விஷயத்திற்கும் பார்லிமென்டின் தயவை நாடி நிற்க விரும்பவில்லை. அவர் நான்காவது எட்வர்ட் மன்னரைப்போல சற்று சுயேச்சையாகவே அரசுபுரிய எத்தனித்தார். பார்லிமென்ட் சபையை அவர் அடிக்கடி கூட்டவில்லை. நான்காவது எட்வர்ட் ஜனங்களிடமிருந்து தயாவிஷயமான வரியென்று மிகவும் தந்திரமாகப் பணம் வசூலித்து வந்ததை மூன்றாவது ரிச்சர்ட் ஜனங்களுடைய பிரீதியைப் பெறும் பொருட்டு நிறுத்தியிருந்தார். ஹென்றி மறுபடி அதை விதிக்கலானார். அதாவது, பார்லிமென்டாரின் தயவை எதிர்பார்க்காமல், ஜனங்களிடமிருந்து பணம் பிடுங்குவதற்கு அது ஒரு தந்திரமான வழியாக இருந்தது. அரசர் ஹோதாவில் வரி விதிப்பதற்கு பார்லிமென்டின் அநுமதி அவசியம். ஜனங்கள் தாமாகவே சுயேச்சையாய்

தயாவிஷயமாகக் கொடுப்பது என்ற பெயரை வைத்தால், அதற்கு பார்லிமெண்டின் அநுமதி தேவையில்லை. ஆகவே, அரசர் தந்திரமாக அந்த வழியில் இறங்கினர். துரைத்தன அதிகாரத்தை அவர் மீண்டும் நிலைநிறுத்தத் தொடங்கி, பல நல்ல சட்டங்களையும் இயற்றினர். உதாரணமாக, 1495-ல் அவர் இயற்றிய ஒரு சட்டத்தின்படி, ஒரு சமயத்தில், முடி தரித்துள்ளவனுக்குக் கீழ்ப்படியும் எந்த மனிதன் மீதும்—அந்த அரசன் நியாயப்படி ஏற்பட்ட அரசனானாலும் சரி, அல்லது நியாயமில்லாத முறைப்படி அரசனாயிருந்தாலும் சரி—இராஜத் துரோகக் குற்றம் சுமத்தக்கூடாது என்று ஏற்பாடு செய்யப்பட்டது. ஹென்றி யரசர் யௌவனப் பருவத்தில் எழ்மையிலேயே ஆழ்ந்து கிடந்தவராதலால் அவர் அரசியலையடைந்தபின் பொக்கிஷத்தை நிரப்புவதிலேயே கண்ணாயிருந்தார். அந்தக் காரியத்தில் அவருக்குதவியாகப் பல மந்திரிமார்களும் உழைத்து வந்தனர். கார்டினல் மார்ட்டன் (Cardinal Morton) என்பவர் கா/2ன்டர்பரியின் முக்கிய மதகுருவினது பதவியை வகித்து வந்தார்; ஆனால் அவர் துரைத்தன காரியங்களிலேயே அதிக அக்கரை கொண்டிருந்தார். அவர் ஹென்றியிடம் நிரம்பவும் உண்மையாக நடந்து, அவருக்குப் பலவிதங்களில் பணம் சேகரித்துதவினர். வெளிப்பார்வைக்கு சட்டத்திற்கு விரோதமில்லாமல் தோன்றும் முறைகளில் ஜனங்களிடம் பணத்தைக் கறப்பதில் மார்ட்டின் மிக சமர்த்தர். 1500-ல் மார்டின் இறந்தபிறகு டட்லி, எம்ப்ஸன் (Dudly , Empson) என்ற இருவர் இந்த கைங்கரியத்தைச் செய்துவந்தனர். அவர்களுக்கு ஹென்றியினுடைய குதிரை என்றும், அட்டை என்றும், தோலுரிப்பவர் என்றும் காரணப்பெயர்கள் உண்டாயின. அவர்கள் மார்ட்டினைவிட அதிக கேவலமான முறைகளில் பணம் பிடுங்கத் தொடங்கினர். ஹென்றியின் பொக்கிஷம் குபேரநிதிபோலப் பெருகிப் போயிற்று.

ரோஜாப்பூக்களின் யுத்தம் நடந்ததற்கு முக்கிய காரணங்களில் ஒன்றுஇங்கிலண்டின் பிரபுக்களுக்கிருந்த சுயேச்சாதிகாரமல்லவா? நார்மன் அரசர்கள் அவர்களை எத்தனையோ சந்தர்ப்பங்களில் அடக்கியிருந்தும், அவர்கள் தலையெடுத்துக்கொண்டே யிருந்தனர். ஆகவே,

15-ம் நூற்றூண்டிலும்கூட அவர்கள் அரசாங்கத்தை எதிர்க்கும் சக்தியை முற்றிலும் இழந்துவிடவில்லை. ஹென்றி தமது பதவியை உறுதிப்படுத்திக் கொள்ளும்பொருட்டு, ஷை பிரபுக்களின் வல்லமையைக் குறைக்க ஆரம்பித்தார். பிரபுக்களும் சாதாரண ஜனங்களைப்போலவே சட்டத்திற்குட்பட வேண்டுமென்று அவர் வற்புறுத்தினர். மேலும், அக்காலத்தில் ஒவ்வொரு பிரபுவினிடமும் பல சிற்றூள்கள் அண்டியிருந்தனர். அதாவது ஒரு குறித்தபிரபுவின் அடையாளத்தை அணிந்து அவருக்குவிருது தாங்கும் பல ஆட்கள் தம் எஜமானரை எப்பொழுதும் பின்பற்றிக் காத்துவருவார்கள்; அவ்வுதவிக்குப் பதிலாக எஜமானர் அவர்களை போஷித்து வருவார். இந்த 'விருது அணிந்து போஷணை பெறும் முறை'யினுல் (System of Livery and Maintenance) ஒவ்வொரு பிரபுவினிடத்திலும் ஒரு சிறு சேனை இருந்த தாகையால் அந்த தைரியத்தினுல்அவர்கள் சட்டத்தை மீறுவார்கள்; அவர்களுக்கு எவ்வித தண்டனையும் ஏற்படா வண்ணம் அவரது ஆட்கள் தந்திரமாக நடந்துகொள்வார்கள். நீதிபதிகளுக்கு இலஞ்சம் கொடுத்தாவது,வேறு வழிகளிலாவது குற்றம்செய்த பிரபுக்கள் தப்பித்துக்கொள்வார்கள்.ஷைவிருது அணிந்து போஷணை பெறும்திட்டத்தை ஒழிப்பதற்குப் பல அரசர்கள் ஏற்கனவேமுயன்றனராலும் அது அழியாமல் இருந்துவந்தது. 1487-ல் ஹென்றி ஒருசட்டமியற்றி அதை வேரறுத்துவிட்டார். குற்றம் செய்யும் பிரபுக்களை தண்டிக்கும்பொருட்டு அவர் ஓர் உயர்தர நீதிஸ்தலத்தை ஏற்படுத்தினர். அதில் உத்தியோகம் பார்த்தவர்கள் உயர்ந்த கனவான்களாகையால், பிரபுக்களுக்கு அஞ்சாமலும், இலஞ்சம் வாங்குவது முதலிய இழிவான செய்கைகளில் இறங்காமலும் குற்றம் செய்தவர்களை பக்ஷபாதம் தாட்சணியம் முதலிய இன்றி தண்டித்துவந்தனர். அந்த நீதிஸ்தலத்திற்கு ஸ்டார் ச்சேம்பர் கோர்ட் (Star Chamber Court) அல்லது நட்சத்திர கூட நீதிஸ்தலம் என்ற பெயர் உண்டாயிற்று;ஏனெனில் ஷை நீதிஸ்தலத்தின் சுவர்களில் நட்சத்திர வடிவங்கள் வரையப்பட்டிருந்தனவாம். அந்த நீதிஸ்தலம் பின்னுல் வந்த ட்யூடர் வம்சத்து மன்னர்களுக்குப் பெரிய பக்கபலமாக இருந்து வந்தது. பழைய 'விருது—போஷணை' முறை முற்றி

லும் உருவழிக்கப்பட்டது; பிரபுக்களின் கொட்டம் அடக்கப்பட்டுப் போயிற்று. ஆதிகாலங்களில் செய்ததுபோல பிரபுக்கள் அரசரை எதிர்த்துப் போர்புரிய வகையில்லாமல் போய்விட்டது. ஜனங்கள் அவருடைய ஏற்பாட்டைப் புகழ்ந்துகொண்டாடி, அவர் விதித்திருந்த வரிச்சுமையைக்கூட அதிகமாய் உணராமல் இருந்தனர். அதற்குமுன் ஒரு நூற்றுண்டாக தேசத்தில் இருந்த குழப்பம் மறைந்தது. அவ்வாறு பிரபுக்களை அடக்கி, சாமானிய ஜனங்களை சந்தோஷிப்பிக்கச் செய்ததானது, ட்யூடர் அரசர்களுடைய சுயேச்சைப்படி இராஜ்ஜிய நிர்வாகம் நடப்பதற்கு அநுகூலமாயிருந்தது. அரசர் பார்லிமெண்ட் சபையின் சொற்படி நடக்கவேண்டுமென்ற எண்ணம்ஜனங்களினிடையில் அப்பொழுது பரவவில்லை; அந்த எண்ணம் பிற்காலத்திலேயே ஏற்படலாயிற்று. அவர்கள் விரும்பியதெல்லாம் உறுதியான ஆட்சியும், அமைதியான வாழ்க்கையுமே. அரசர் சுயேச்சாதிபதியா அல்லது பார்லிமெண்ட் சபையின் ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டவரா என்பதைப்பற்றி அவர்கள் அதிகமாய்க் கவலை கொள்ளவில்லை. பிரபுக்களின் பலவகைப்பட்ட கொடுமைகளுக்கு உட்படுவதைக் காட்டிலும் ஓர் அரசருடைய உறுதியான ஆட்சி—அது சிறிதளவு கடுமையா யிருந்தாலும்கூட—அவர்களுக்குப் பன்மடங்கு சிலாக்கியமானதாகத் தோன்றியது அத்தகைய உறுதியான ஆட்சிமுறையை ஸ்தாபித்ததனால்தான், ட்யூடர் மன்னர்கள் அதிக வரியை விதித்தாலும் வேறு சில்லறை விஷயங்களில் கொடுங்கோன்மை புரிந்தாலும், பிரஜைகள் சகித்துக் கொண்டிருந்தனர். ட்யூடர் அரசர்களின் வெற்றிக்குக் காரணமாயிருந்த சம்பவங்களை ஆராயும்பொழுது முக்கியமான இந்த ஒரு விஷயத்தை நாம் மறவாதிருக்கவேண்டும். இராஜ்ஜியத்தில் அமைதி ஏற்பட்டதும், ஜனங்கள் வியாபாரம், கைத்தொழில் முதலியவைகளில் தங்கள் கவனத்தைச் செலுத்தி தேசம் முன்னேற்றமடையும்படி செய்வது சாத்தியமாயிற்று.

(2) அன்னிய நாடுகளுடன் உறவு:—இங்கிலண்டின் உள்நாட்டு வியவகாரங்களைச் சீர்திருத்தியதனால் மாத்திரம் ஏழாவது ஹென்றிக்குப் பெருமை உண்டாகிவிடவில்லை. ரோஜாப்பூக்கள் யுத்த சமயத்தில் வெளி தேசங்களில் இங்கிலண்டு தேசத்திற்கு

இருந்த பழைய கௌரவம் மறைந்துவிட்டது. மூன்றாவது எட்வர்டு காலத்தில் க்ரெஸி முதலிய யுத்தஸ்தலங்களில் அடைந்த வெற்றிகளால் இங்கிலீஷ்காரருடைய பராக்கிரமம் வெகுதூரம் பரவியிருந்தது. ஐந்தாவது ஹென்றி, அஜின் கோர்ட்டில் அடைந்த வெற்றியால் அந்தப் பெருமையை ஒருவாறு மீண்டும் ஸ்தாபித்தார். ஆனால் நூறுவருஷ யுத்தத்தின் கடைசியில் இங்கிலண்டுக்கே தோல்வி ஏற்பட்டது. அதுவன்றி ரோஜாப்பூக்கள் சண்டை நடந்தபொழுது உள்நாட்டுக் குழப்பத்தினிடையில் அன்னிய தேச விஷயங்களை கவனிக்க இங்கிலீஷ் அரசர்களுக்கு சந்தர்ப்பமோ திறமையோ இல்லாதுபோயின. ஐரோப்பிய இராஜீய உலகில் இங்கிலண்டின் இருப்பே காணப்படாது போயிற்று. ஆனால் ஏழாவது ஹென்றி தமது இராஜ்ஜியத்தில் அமைதியை நிலைநாட்டியபின், அன்னிய தேச வியவகாரங்களிலும் தலையிடலானார். அவர் பட்டத்திற்குவந்தபொழுது, ஸ்காட்லன்டும் ப்2ரான்ஸும் இங்கிலண்டுக்கு விரோதமாயிருந்தன. ஹென்றி முதலில் ப்2ரெஞ்சு அரசருடன் போர் புரிய ஆயத்தமா யிருந்தாலும், முடிவில் சமாதானம் செய்துகொண்டு திரும்பினார். வேஷதாரி மன்னன் பெர்க்கின் வார்பெக் என்பவனுக்கு உதவி புரிந்துவந்த அன்னிய நாட்டு அரசர்களுடனும் அவர் சிநேகம் செய்துகொண்டார். 15ம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் பல தனி இராஜ்ஜியங்கள் இருந்துவந்தன; அவைகளில் அரசாண்ட மன்னர்கள் ஏறக்குறைய ஒரே மாதிரியான பலத்தையும் சாமர்த்தியத்தையும் பெற்றிருந்ததால், ஒருவருடைய வியவகாரங்களில் மற்றவர் தலையிடலானார்கள். அவர்களுக்குள் இருந்த பொறாமையும் அவநம்பிக்கையும் கடைசியில் ஓர் இராஜீய திட்டத்தில் முடிவடைந்தன. அதாவது ஓர் அரசன் அமிதமான அதிகாரமடைந்து, இதர தேசங்களைத் தன் வசப்படுத்த முயலாமல் மற்ற அரசர்கள் கவனித்துக்கொள்ள வேண்டுமென்ற ஒரு கட்டுப்பாடு ஏற்பட்டது. ப்2ரான்ஸ் தேசம் இன்னொரு சிறு தேசத்தை அக்கிரமமாக எதிர்த்தால் உடனே மற்ற தேசத்தார் எல்லோரும் ஒன்றுசேர்ந்து ப்2ரான்ஸ் தனது வரம்பை மீறாதபடி அடக்கிவிடுவார்கள். எல்லோரும் சமமான அந்தஸ்துடன் இருக்கவும், ஒருவர்மீதொருவர் அதிக்கிரமமாக ஆதிக்கம் செலுத்தாமல் இருக்கவும் அந்தக் கட்டுப்

பாடு அத்தியாவசியமாயிருந்தது. இன்னமும் ஐரோப்பாவில் அந்தக் கட்டுப்பாடு இருந்து வருகிறதெனக் கூறலாம், அதை "பா2லன்ஸ் ஆப்2 பவர்" (Balance of Power) என்று குறிப்பார்கள், எல்லா தேசங்களின் பலமும் திராசு முனைப்படி சமநீதியாயிருக்கவேண்டுமென்பது அதன் கருத்து. ஒவ்வோர் இராஜ்ஜியமும் மற்ற இராஜ்ஜியங்களைப் பாதுகாக்கவும் வேண்டும். அவைகளிடம் உள்ள பயத்தினால் தானும் தனது வரம்பை மீறாமல் இருந்துவரவும்வேண்டும். ஹென்றி பட்டத்திற்கு வந்தகாலத்தில் ப்2ரான்ஸ் தேசம் மேலோங்கியிருந்தது; ஆனால் அதை யடக்குவதற்கு சில அரசர்கள் முனைந்து கொண்டனர். உதாரணமாக, அ/2ரகன் (Aragon) மாகாணத்தின் அதிபதியான பெ2ர்டி னா/2ன்ட் (Ferdinand) என்பவர் முக்கியமானவர்; அவர் இஸபெல்லா (Isabella) என்ற ஓர் அரசியை மணந்துகொண்டு தமது இராஜ்ஜியத்தைப் பெருக்கி, ஸ்பெயின் (Spain) தேசத்தின் சக்கரவர்த்தியானார். அவ்வாறே ஆஸ்ட்ரியா (Austria) தேசத்துச் சக்கரவர்த்தியான மா/2க்ஸிமிலியன் (Maximilian) என்பவரும் கீர்த்தி பெற்றிருந்தார். ஹென்றி இங்கிலண்டின் மதிப்பை அதிகப்படுத்த எண்ணங்கொண்டு ஐரோப்பிய அரசர்களுடன் உறவு கொண்டாடலானார். பெ2ர்டினன்ட் சக்கரவர்த்தியின் பெண்ணான கா/2தரைன் (Catherine of Aragon) என்பவளை அவர் தமது மூத்த குமாரரான ஆர்தர் என்பவருக்கு மணம் செய்வித்தார். 1501-ல் அந்த மணம் நடைபெற்றது. மறுவருஷமே ஆர்தர் மரணமடைந்தார். ஆனால் ஹென்றிக்கு அந்த விவாக சம்பந்தத்தை நீக்கிவிட இஷ்டமில்லை. பெ2ர்டினன்டினுடைய சிநேகத்தை எப்படியாகிலும் நிலைநிறுத்திக்கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடனும், கா/2தரைன் கொண்டுவந்திருந்த சீதனங்களை இழந்துவிட மனமில்லாமலும் அவர் ஒரு தந்திரம் செய்து, ஆர்தருக்கு அடுத்த இளவரசரும் தமது இரண்டாவது பிள்ளையுமான ஹென்றிக்கு அதே பெண்ணைக் கலியாணம்செய்து வைத்துவிட்டார். அம்மாதிரி ஒரு விதவை தனது மைத்துனனையே மணந்துகொள்வது மதசம்மதமாகாது; அதற்காக ஹென்றி முக்கிய மதகுருவான போப்பினிடம் சென்று வேண்டி

அவரது விசேஷ அதிகாரத்தால் அந்த விவாகம் மதசம்மதமான தென்று அங்கீகரிக்கும்படி கேட்டுக்கொண்டார். போப் அதற்கு இணங்கினார். போப்பினுடைய சம்மதி கிடைத்தாலும் உண்மையில் அந்த விவாகம் மதசம்மதமான தாகாதென்பது நிச்சயம். இராஜீய அநுகூலங்களை யுத்தேசித்து, ஹென்றி அவ்விதம் செய்தார். காதரைன் இங்கிலண்டிலேயே இருந்து, சில வருஷகாலத்திற்குப் பிறகு இரண்டாவது இளவரசரை மணந்துகொண்டாள். விவாகத்தின் மூலம் இராஜீய நன்மைகளை அடைவதில் ஹென்றி மிகவும் சமர்த்தர். 1503-ல் அவர் தமது மூத்த குமாரியான மார்கரேட் (Margaret) என்பவளை, ஸ்காட்லண்டு தேசத்தரசரான நான்காவது ஜேம்ஸ் (James IV) என்பவருக்கு விவாகம் செய்து கொடுத்தார். அவரது காலத்திற்குமுன் ஸ்காட்லண்டும் இங்கிலண்டும் எப்பொழுதும் சச்சரவிட்டுக்கொண்டு விரோதப் பான்மையாகவே இருந்துவந்தன. ஹென்றி அதை ஒழித்து அவ்விரு தேசங்களும் நெருங்கியிருக்குமாறு செய்தார். ஏனெனில், அண்டையிலிருந்தாற்போலிருந்த ஸ்காட்லண்டினிடம் விரோதம்கொண்டிருந்தது இங்கிலீஷ் அரசர்களுக்கு எப்பொழுதும் பிரயாசையாக இருந்தது. அந்த விவாகம் இன்னொரு விதத்திலும் நன்மையைப் பயந்தது. அது நடந்தேறி ஒரு நூற்றாண்டுக்குப்பின் ஸ்காட்லண்டு தேசத்தரசரொருவர் இரண்டு தேசங்களையும் பரிபாலிக்க நேர்ந்தது. அதன்மூலம் இரண்டு தேசங்களும் ஒரு குடையின்கீழ் வர, நாளடைவில் அதிக ஒற்றுமை ஏற்பட்டது.

ஹென்றியரசரது முன்னோர்களில் ஒரு பகுதியினர் வெல்ஷ் இனத்தைச் சேர்ந்தவர்கள். ஆகவே வெல்ஷ் மாகாணத்தையும் நன்றாய்ப் பரிபாலிக்க வேண்டுமென்ற ஆசையும் அவருக்கு இருந்தது. அவருடைய முதல் குமாரரான ஆர்தர் சிறிது காலம் இராஜப்பிரதிநிதியாக இருந்து வேல்ஸ் மாகாணத்தை பரிபாலித்து வந்தார். சில உத்தியோகஸ்தர்கள் அவருக்குதவியாக இருந்து இராஜ்ஜிய நிர்வாகத்தில் ஆலோசனை கூறிவந்தனர். அதுபோல அயர்லண்டு தேசத்தையும் அவர் ஆளமுயன்றார். 'வேஷதாரி மன்னர்கள்' இருவரும் கலகம் செய்தபொழுது அவர்களுக்கு அயரிஷ்காரர்கள் உதவி செய்து வந்தனர். முக்கியமாக கில்டேர் (Kildare)

என்ற தலைவர் கட்டுக்கடங்காமல் சுயேச்சையாக நடந்துவந்தார். கில்டேரை அவருடைய பதவியிலிருந்து நீக்கி அவருக்கு பதிலாக பாய்னிங்ஸ் (Poynings) என்பவரை ஹென்றி நியமித்தார். பாய்னிங்ஸ் 1494-ல் ஒரு சட்டமியற்றி அதன்படி இங்கிலீஷ் சட்டங்களும் அநுஷ்டானங்களும் அயர்லன்டிலும் பிரயோகமாக வேண்டுமென்று ஏற்பாடாயிற்று; அயர்லன்டின் தனிப் பார்லிமென்ட் சபையில் நிறைவேறும் தீர்மானங்களும் இங்கிலீஷ் மன்னருடைய அங்கீகாரத்தைப் பெற வேண்டுமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. அதாவது இங்கிலீஷ் துரைத்தனத்திற்குட்பட்டே அயர்லன்டின் நிர்வாகம் நடக்கவேண்டியதாயிற்று. ஆனால், அம்மாதிரியான சட்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டனவானாலும், அவைகளைப் பிரயோகிப்பது மிகவும் பிரயாசையாயிருந்தது. கில்டேர் என்ற தலைவரை அடக்குவது கடினமாயிருந்தது. ஆகவே ஹென்றி அவரையே தமது பிரதிநிதியாகச் செய்து அவருடன் சமாதானம் செய்துகொண்டார். 'அயர்லன்ட் தேசத்தினரெல்லோரும் கூடினாலும் கில்டேர் பிரபுவை அடக்கியாள முடியாது' என்று யாரோ ஒருவர் கூறியதைக்கேட்ட ஹென்றி "அப்படியானால், கில்டேர் பிரபுவே அயர்லன்ட் தேசத்தினரெல்லோரையும் அடக்கியாளட்டும்" என்று கூறினாராம். அவ்விதம், பெயருக்குமாத்திரம் அயர்லண்ட் தேசம் இங்கிலீஷ் அரசாங்கத்தைச் சார்ந்திருந்ததேயன்றி உண்மையில் அது சுயாதீனமாகவே இருந்தது. 1509-ல் ஏழாவது ஹென்றி மண்ணுலகைத் துறந்தார். ட்யூடர் குல ஆட்சியை ஸ்தாபித்து அதை நிலைத்திருக்கும்படி செய்ததிலேயே அவருக்கு மதிப்பு ஏற்பட்டது. பலவகையிலும் குழப்பமுற்றுக்கிடந்த தேசத்தைச் சீர்ப்படுத்தி ஒரு கட்டுப்பாட்டுக்குள்ளடக்கி, சட்டமும் நீதியும் நிலைபெறும்படி செய்து, அரசாங்கத்தையும் உறுதியாக நிலைக்கச்செய்ததுதான் அவரது முதன்மையான செய்கை. அவர் பலவிதங்களில் விதை விதைத்து வைத்தார்; அதன் பலனை அவருடைய சந்ததியார்கள் அறுவடைசெய்தனர். அவருடைய உறுதியான அஸ்திவாரத்தைக்கொண்டு அதன்மீது கட்டிடத்தை நிர்மாணிப்பது அவருடைய சந்ததியாருக்கு எளிதாயிருந்தது. ஏழாவது ஹென்றியைக் காட்டிலும் கீர்த்திபெற்ற மன்னர்கள் அவருக்குப்பின்

தோன்றினாராலும், அவர் சிம்மாதனமேறியபோது இருந்த நிலைமையை அவ்வளவு திறமையாக சமாளித்து ஒழுங்குப்படுத்தி உறுதியான அரசாங்கத்தை நிலைநாட்டிய அபாரமான மேம்பாடு ஹென்றிக்கு என்று மழியாமல் இருந்துவருகிறது. அவர் கோழைமனதுடைய அரசராய் இருந்திருப்பின், இங்கிலண்டில் இருந்த குழப்பம் மறுபடி மறுபடி தோன்றிக்கொண்டே இருந்திருக்கும். அந்த நிலைமை மீண்டும் உண்டாகாவண்ணம் செய்து, ஹென்றி இங்கிலண்டு தேச சரித்திரத்தின் போக்கை சமரீதியுடையதாகச் செய்து வைத்துவிட்டுச் சென்றார்.

---

## 25-வது அதிகாரம்

---

### எட்டாவது ஹேன்றி.

(1) **எட்டாவது ஹென்றியின் குணம்: உல்ஸி: அன்னிய நாட்டு சம்பந்தம்:**—ஏழாவது ஹென்றியின் மூத்த புத்திரரான ஆர்தர் தந்தைக்கு முந்தியே காலமாய் விட்டமையால், இரண்டாவது குமாரரான ஹென்றி சிம்மாதனமேறினர். அவருக்கு அப்பொழுது 18 வயதே நிறைந்திருந்ததாலும் அரசாட்சியை வகிக்க அவர் சகலமான அம்சங்களிலும் யோக்கியதை யுடையவராகவே இருந்தார். அவர் கம்பீரமான தோற்றமுடையவர்; உயர்ந்து, பருத்து, சதைப் பிடிப்புள்ள சரீரத்தில் டாம்பீகமான ஆடைகளை யணிந்து அவர் வெளிப்பார்வைக்கு நிரம்பவும் பகட்டாகவும் அழகாகவும் தோன்றினர். அதுவன்றி, வேட்டை யாடுவதிலும், விளையாடுவதிலும் அவருக்கு ஆசை யதிகம். தமது கௌரவத்தில் அவர் அதிக ஆர்வம் கொண்டிருந்தார்; ஆனல் வித்துவான்களிடமும் பண்டிதர்களிடமும் அவருக்கு விசேஷ மரியாதை உண்டு. ஆனல் பல கேளிவிலாஸங்களில் அவர் அடிக்கடி கலந்து கொண்டாலும், அவருடைய உறுதியான மனமும் திடமான புத்தியும் இங்கிலண்டின் ஆட்சியை நடத்துவதிலேயே லயித்திருந்தன. தாம் விரும்பியதைப் பேறும் முயற்சியில் அவர் எவ்வித முறைகளையும் கையாண்டு விடுவார்;

திறமையான மந்திரிகளைப் பொறுக்கி யெடுப்பதில் அவர் மிரம்பவும் ஜாக்கிரதையாக இருந்தாராலும் அவர்களைத் தமது விருப்பத்தின் படி நடத்திவைக்கப் பின்வாங்க வில்லை. பல சமயங்களில் அவர் பேராசையுட்னும், சுயநலத்தைக்கருதியும், கடுமையாகவும் நடந்து கொண்டார். ஆனல் அவருடைய ஆட்சி உறுதியாக இருந்தமை யால் பொதுமக்கள் அவர்மீது குறை கூற வில்லை. தமது மந்திரி களிடத்திலும் மற்ற உத்தியோகஸ்தர்களிடத்திலும் அவர் கண்டிப் பாக நடந்து சொண்டாராலும், தேசீய நலத்தை அதிகப்படுத்தவே அவர் எப்பொழுதும் முயன்று வந்தமையால் அவரது கொடுமை குரூரமானதாகத் தோன்றவில்லை. அவர் லங்கா/2ஸ்டர் வம்சத்தைச் சேர்ந்த தந்தைக்கும், யார்க் வம்சத்தைச் சேர்ந்த தாய்க்கும் பிறந்தவ ராதலால் இங்கிலண்டு முழுதும் பேதமின்றி அவரையே அரச ராக எற்றது. அவரது தந்தை சேர்த்து வைத்திருந்த அபரிமித மான பணமும் அவருக்கு உபயோகப்பட்டது. இங்கிலண்டில் கல கமோ குழப்பமோ எற்படவில்லையாதலால், அவர் தைரியமாக அன் னியநாட்டு வியவகாரங்களில் தலையிட்டுக்கொண்டு பெயரும் புகழும் அடைய ஆவல் கொண்டார். அரசரை எதிர்க்கும் மனப்பான்மை யோடிருந்த பிரபுக்களை அடக்கியும் மதகுருமார்கள் அரசாங்க விஷ யங்களில் தலையிட்டு இடுக்கண் விளைவிக்காதபடி தடுத்தும், அவர் தமது ஸ்தானத்தை பலப்படுத்திக் கொண்டதுடன் சாமானிய ஜனங் களுடைய இடைவிடாத ஆதரவையும் சம்பாதித்துக் கொண்டார். சுயேச்சையாகவும் அதே சமயத்தில் ஜனங்களுக்குத் திருப்திகர மாகவும் இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்த வேண்டுமென்பதுதான் அவருடைய நோக்கமாக இருந்தது. முதலாக அவர் குடிமக்களுடைய பிரீதியை சம்பாதித்துக் கொள்ளும் பொருட்டு ஒரு காரியம் செய் தார். எழாவது ஹென்றியின் ஆட்சியில் ஜனங்களிடமிருந்து பல விதங்களில் பணத்தைக் கறந்துவந்த எம்ப்ஸன், டட்லி ஆகிய இருவரையும் அவர் சிறையிலிட்டு, 1510-ல் தூக்கிலிடவும் கட்டளை பிறப்பித்தார்.

பொதுஜன விரோதிகளாயிருந்தவர்களை அவர் அவ்வாறு வீழ்த் தினாலும், தமது தந்தையுடன் வேலை செய்துவந்த சாமர்த்தியமுள்ள ஆலோசனையைக் கேட்டு மந்திரிகளை கௌரவித்து அவர்களது

விருப்பத்தின்படி சில வருஷ காலம் வரையில் நடந்து வந்தார். ஆனால் ஹென்றியின் அபிப்பிராயம்போல அவர்களால் நடந்துகொள்ள இயலவில்லை. ஹென்றியின் யோசனைகள் வெகுதூரம் வரையில் சென்றன. ஆகவே அவருக்கு உதவியா யிருக்க, அவரைப் போலவே இளமையும் ஊக்கமும் வாய்ந்த ஒரு மந்திரி ஏற்படுவதே தேவையா யிருந்தது. அவ்வித குணங்கள் படைத்த மந்திரியும் அவருக்குக் வெகு சீக்கிரத்தில் கிடைத்துவிட்டார். அவரது பெயர் தாமஸ் உல்ஸி (Thomas Wolsey) என்பது. அவர் ஒரு வியாபாரியினுடைய குமாரர்; சிறு வயதிலேயே அவர் கல்வியில் தேர்ச்சி யடைந்து கலாசாலைப்பட்டமும் பெற்றுவிட்டார். பின்னர் மத ஸ்தாபனத்தில் ஓர் உத்தியோகம் வகித்திருந்த சந்தர்ப்பத்தில், அரசருக்கும் அவருக்கும் அறிமுகம் ஏற்பட்டது. ஏழாவது ஹென்றிக்குக்கூட அவர் பல சிறிய காரியங்களை வெற்றியாக முடித்து வைத்தார். வயது சென்ற பழைய மந்திரிகள் விலக விலக, உல்ஸி துரைத்தன நிர்வாகத்தில் அதிக செல்வாக்கும் அதிகாரமும் அடைந்தார். 1515-ல் அவர் அரசருடைய வலது கை போல ஆய்விட்டார்; அதன்பிறகு 16 வருஷ காலம் வரையில் அவர் அரசாங்க விஷயங்களிலும் மத ஸ்தாபன விஷயங்களிலும் சுயேச்சாதிகாரி என்று மதிக்கத் தக்கபடி அவ்வளவு உன்னத பதவியை வகித்திருந்தார். ஹென்றியுடன் அவர் முதலில் நிரம்பவும் அன்னியோன்னியமாக இருந்து, இராஜ்ஜிய நிர்வாகத்தில் அவருடன் சமரஸமாக உழைத்து வந்தார். உல்ஸி தளராது உழைத்து, அரசியல் நிர்வாகங்களைத் தாமே நேராக கவனித்து வந்தார். அவருக்கு டாம்பீகத்திலும் படாடோபத்திலும் அதிக ஆசை; பிரபுக்கள் கூட அவரைக் கண்டு பொறாமை கொண்டனர். அவர் ஏழைகளுக்கு உற்ற நண்பர்போல நடந்து வந்தார். பிரபுக்களை அடக்குவதில் அவர் ஹென்றிக்கு உதவிபுரிந்து வந்தமையால், பிரபுக்கள் அவரை வெறுத்தும் அவரைக் கண்டு அஞ்சியும் வந்தனர். ஹென்றியைப் போலவே உல்ஸியும் கர்வம், பேராசை, வேடிக்கை விளையாட்டுகளில் ஆசை முதலிய குணங்களைப் பெற்றிருந்தார். ஆனால் அவரிடமிருந்த அற்ப தோஷங்கள் ஒரு புறமிருக்க, தேசத்தின் நன்மையை அபிவிருத்தி செய்யும் வழிகளை உல்ஸி தெளிவாக அறிந்திருந்தார். ஹென்றிக்கு அவர் செய்த உத

விகள் பல. உல்ஸியின் காரியங்களே ஹென்றியின் ஆட்சியை மிரம்பவும் சோபிக்கச் செய்தன. முக்கியமாக, அன்னிய தேசத்து மன்னர்களுடன் உறவாடுவதில் உல்ஸி அரிய சேவைகள் புரிந்தார்.

எட்டாவது ஹென்றியின் அன்னிய நாட்டு சம்பந்தங்கள் மிக முக்கியமானவை. முன்பே கூறியபடி, 15-ம் நூற்றாண்டின் இறுதியில் ரோஜாப்பூக்கள் யுத்தத்தின் பலனாக, இங்கிலீஷ் மன்னர்கள் அன்னிய தேசங்களில் கௌரவமின்றி இருக்க, எழாவது ஹென்றி உள்நாட்டில் அமைதியை நிலை நாட்டிய பின், சில ஐரோப்பிய அரசர்களுடன் விவாக சம்பந்தங்கள் செய்துகொண்டு இங்கிலண்ட் தேசமும் ஐரோப்பிய இராஜீய வியவகாரங்களில் கலந்து கொள்ளுமாறு செய்வித்தார். அவர் ஸ்பெயின் தேசத்து அரசரான பெர்டினண்ட் என்பவருடைய குமாரியைத் தமது மூத்த மகனுக்கு விவாகம் செய்து வைத்ததையும், பின்பு மூத்தமகன் இறந்ததும், அதே பெண்ணைத் தமது இளைய குமாரரான எட்டாவது ஹென்றிக்கு விவாகம்செய்ய போப்பினுடைய விசேஷ அநுமதியைப் பெற்றதையும் முன்பே கூறினோம். எட்டாவது ஹென்றி பட்டத்திற்கு வந்தபோது, ஐரோப்பிய இராஜீய நிலைமை குழம்பியிருந்தது. ப்ரான்ஸ் தேசத்து அரசரும், ஸ்பெயின் தேசத்து அரசரான பெர்டினண்டும் விரோதிகளாயிருந்தார்கள். அப்பொழுது ப்ரெஞ்சு அரசர் இற்றலி (Italy) தேசத்தில் ஆதிக்கம் பெற முயன்றுகொண் டிருந்தார். ஆனல் முன் அதிகாரத்தில் விவரிக்கப்பட்ட வண்ணம், எதாவதொரு தேசத்தின் அரசர் தமது வரம்பை மீறி, பிற தேச ஆதிக்கத்தில் ஆசைகொண்டால், மற்ற அரசர்கள் ஒன்றுகூடி அவரை அடக்குவது ஐரோப்பிய அரசியல் கட்டுப் பாடாதலால், பெர்டினண்டும், ஆஸ்டிரியா தேசத்து அரசரான மாக்ஸிமிலியனும் 1511-ல் ஒன்று சேர்ந்து ப்ரான்ஸ் மன்னருக்குப் பகைமையான காரியங்களைச் செய்யலானார்கள். அவர்களுடைய சேர்க்கைக்கு சரித்திரத்தில் ஹோலி லீக் (Holy League) அல்லது "புனிதமான சங்கம்" என்று பெயர். ஏனென்றால் போப்பும் அதில் சேர்ந்திருந்தார். அந்தச் சங்கம் ஸ்தாபிக்கப்பட்ட உடனே எட்டாவது ஹென்றியும் அதில் அங்

கத்தினர் ஆனார். ப்2ரெஞ்சு தேசத்தின் அரசருடன் போர் புரிந்து கீர்த்தி பெற வேண்டுமென்பதும், கூடுமானால் நார்மன் அரசர்கள் ஆண்டுவந்த ப்2ரெஞ்சு மாகாணங்களைப் பெற வேண்டுமென்பதும் அவருடைய கருத்துகள். ஆகவே, அவர் சுறுசுறுப்பாக ஏற்பாடுகள் செய்து ஐரோப்பாவில் நடந்த சண்டைகளுக்குப் படைகளைத் திரட்டி அனுப்பிவந்தார். அவருக்குத் தேவையான பணம் முதலிய யுத்த தளவாடங்களை உல்ஸி சாமர்த்தியமாகச் சேகரித்து அப்பொழுதப்பொழுது அனுப்பிவைத்தார். 1512-ல் ஐரோப்பா முழுதும் யுத்தம் நடைபெற்றது. புனிதச் சங்கத்தினர் ப்2ரெஞ்சுக்காரருக்குத் தோல்விமேல் தோல்வியை யளித்து வந்தனர். அப்பொழுது ஹென்றி ப்2ரெஞ்சுக்காரர்மீது படையெடுத்துச் சென்றார். 1512-ல் அவருடைய முயற்சி பலனளியாமற் போனாலும், 1513-ல் ஹென்றி தாமே நேரில் ஒரு சேனையை நடாத்திச் சென்று, ப்2ரெஞ்சுக்காரரது சேனையைத் தோற்கடித்தார். ப்2ரெஞ்சு வீரர்கள் தங்கள் உயிர் தப்புவதே போதுமென்று நினைத்துக் குதிரைகளை இடித்திடித்துத் தூரத்தியபடி ஓட்டம் பிடிக்கத் தொடங்கினர். அதனால் இங்கிலீஷ்காரர் அந்த யுத்தத்திற்கு "ஸ்பர்ஸ் யுத்தம்" (Battle of the Spurs) என்று பெயர் கொடுத்தனர். அதாவது யுத்தவீரர்கள் தமது குதிரைகளை வேகமாய் ஓடச் செய்யும்பொருட்டு, தமது பாதரக்ஷைகளில் இரும்பினால் ஈட்டி போலக் கூராக நீட்டிவிடப் பட்டிருக்கும் தார் முள்ளினால் குதிரையின் வயிற்றில் இடித்து இடித்து அதை ஊக்கி ஓடச்செய்வது வழக்கம்; ப்2ரெஞ்சு சிப்பாயிகள் அந்தச் சண்டையில் கத்தியை உபயோகித்துப் போர் புரிந்ததைக் காட்டிலும், கால் பாதரக்ஷைத் தார்முள்ளினால் குதிரைகளை ஓட்டி முடுக்கிப் பின்வாங்குவதிலேயே அதிக கவனமுடையவர்களாயிருந்தமையால் இங்கிலீஷ்காரர்கள், அவ்வித இழிவான பெயர்கொடுத்து ஏளனம் செய்தனர்.

ஷை யுத்தத்தில் தோல்வி யடைந்த ப்2ரெஞ்சு மன்னர் இங்கிலீஷ்காரர்களுக்கு பரம்பரையான விரோதிகளாயிருந்துவந்த ஸ்காட் தேசத்தாரைத் தூண்டிவிட்டார். (ஏழாவது ஹென்றியின் மருமகப் பிள்ளையான) ஸ்காட் அரசர் எட்டாவது ஹென்றி தமது மைத்துனர் என்பதைக்கூட அசட்டை செய்து, பழைய ஸ்காட்

அரசர்களைப் பின்பற்றி, இங்கிலண்டின்மீது 1513-ல் படையெடுத்தார். ஆனால் ப்ளாடன் (Flodden) என்ற இடத்தில் ஸ்காட் வீரர்கள் தோற்றுப்போக, அவர்களது அரசரும் யுத்தகளத்தில் இறந்து போனார்.

எட்டாவது ஹென்றி தமக்கு வெற்றியும் கீர்த்தியும் கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே ஐரோப்பிய வியவகாரங்களில் தலையிட நிச்சயித்தார். ஆனால் அவர் எதிர்பார்த்த அளவிற்கு திருப்தி ஏற்படவில்லை. ப்ளாடன் என்ற இடத்தில் ஸ்காட் சேனையைத் தோற்கடித்ததைத் தவிர வேறு முக்கியமான நன்மை இங்கிலீஷ்காரருக்கு உண்டாகவில்லை. புனிதச் சங்கத்தார் தமது வேலையை மாத்திரம் கவனித்துக் கொண்டார்களேயன்றி, ஹென்றியின் சாதகபாதகங்களைப்பற்றி அக்கறை காட்டவில்லை. அதைக் கண்டு வெறுப்படைந்த ஹென்றி சண்டையில் மீண்டும் பணவிரயம் செய்ய விரும்பாமல், சமாதானத்தை நாடினார். ப்ரெஞ்சு அரசரும் அதுபோலவே சமாதானத்தை விரும்ப, இரண்டு அரசர்களும் பகைமையை விட்டு உறவாடலாயினர். இங்கிலீஷ் அரசருடைய சகோதரி ஒருத்தியை ப்ரெஞ்சு மன்னர் விவாகம் செய்து கொண்டார். அதோடு ஹென்றியின் அன்னியநாட்டு சம்பந்தத்தின் ஓர் அத்தியாயம் முடிவடைகிறது. இரண்டாவது அத்தியாயம் எழுவருஷ காலத்திற்குப்பின் தொடங்கியது.

அந்த எழுவருஷ காலமும் இங்கிலண்டு தேசம் எந்தப் போரிலும் தலையிடாமல் தனித்து நின்றது. அதற்குள் ஐரோப்பாவில் சில மாறுதல்களேற்பட்டன. வயோதிக அரசர்கள் கழிந்து போக, யௌவனப் பிராயத்து அரசர்கள் ஆட்சி புரியலாயினர். ஹென்றி பட்டத்திற்கு வந்தபொழுது, பெர்டினாண்டு, மாக்ஸ்மிலியன், ப்ரெஞ்சு மன்னர் ஆகிய எல்லோரும் வயது சென்றவர்களாயிருந்தனர். ஹென்றி மாத்திரம் இளமைப் பருவத்தினர். அதற்குரிய ஊக்கமும் ஆர்வமும் கொண்டிருந்ததுபற்றி அவர் மற்றவர்களுடன் சமத்துவ புத்தியுடன் சேர்ந்து கொள்ளவில்லை. 1515-ல் பழைய ப்ரெஞ்சு மன்னர் மடிய, முதல் ப்ரான்ஸிஸ் (Francis I) என்றவர் ப்ரெஞ்சு மன்னரானார்; ப்ரான்ஸிஸ் அதிக

ஊக்கத்தோடு தமது இராஜ்ஜியத்தைப் பெருக்க முயற்சித்தார். 1516-ல் ஸ்பெயின் அரசரும் ஹென்றியின் மாமனாருமான ஃபெர்டினன்ட் காலமாக, ச்சார்லஸ் என்பவர் அந்த தேசத்திற்கு அரசரானார். 1519-ல் ஆஸ்ட்ரியா தேசத்தரசர் மாக்ஸிமிலியன் இறக்க, அச்சார்லஸே அந்த தேசத்திற்கும் சக்கரவர்த்தி யானார். ஆகவே ஐரோப்பாவில் அப்பொழுது மூன்று இளஞ்சிங்கங்கள் ஆண்டுவந்தன. இங்கிலீஷ் மன்னரான ஹென்றி, ஃப்ரெஞ்சு மன்னரான ஃப்ரான்ஸிஸ், ஸ்பெயின், ஆஸ்ட்ரியா இரண்டிற்கும் சக்கரவர்த்தியான ச்சார்லஸ் ஆகிய மூவரும் தம்தம் பராக்கிரமத்தினால் பெயரும் பெருமையும் அடைய வேண்டுமென்ற ஆசை கொண்டவர்கள். அவர்களுக்குள் ச்சார்லஸினுடைய இராஜ்ஜியமே பெரிதாயிருந்தமையால், அவரைக் கண்டு மற்ற அரசர்கள் பொறாமை கொள்வது சகஜமான விஷயமே. ஃப்ரான்ஸிஸ், ச்சார்லஸ் ஆகிய இருவரும் வம்ச பரம்பரையாக இருந்துவந்த தங்கள் பகைமையை மறக்காமலேயே வளர்த்துக்கொண்டு போயினர். முந்திய அதிகாரத்தில் ஐரோப்பாவின் இராஜீய நிலைமையை சமரீதியாய்ச் செய்வதைப்பற்றிக் கூறினோமல்லவா? உதாரணமாக இரண்டுதேசங்களை ஆண்டுவந்த ச்சார்லஸ் சக்கரவர்த்தியினிடம் மிதமிஞ்சிய அதிகாரம் இருக்குமாதலால், அவர் எவ்விதத் தீங்கும் இயற்றாதபடி ஃப்ரான்ஸிஸ், ஹென்றி ஆகிய இருவரும் கவனித்துக்கொள்ள வேண்டிய அவசியமாயிற்று. முக்கியமாக உல்ஸி அந்த விஷயத்தில் அதிக அக்கறை பாராட்டினார். ஃப்ரான்ஸிஸோ அல்லது ச்சார்லஸோ வரம்பை மீறிப் பெருகிவிடாதபடி ஹென்றி பார்த்துக் கொள்ள வேண்டுமென்பதை அவர் வற்புறுத்தினார். மேலும், அவ்விரு அரசர்களுக்குள் எவராகிலும் ஒருவர்சற்று மேலோங்கிவிட்டால் அவர்களை அடக்கும் பொருட்டு மற்றவருடன் சேர்ந்து உழைப்பதாகவும் அச்சுறுத்தி உல்ஸி ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநிறுத்தி வந்தார். ஆனால் ஃப்ரான்ஸிஸ், ச்சார்லஸ் ஆகிய இருவரும் தம்தம் இராஜ்ஜியத்தைப் பெருக்குவதில் ஊக்கமாயிருந்தமையால் அவர்களுக்குள் சண்டை ஏற்படுவதை வெகுநாள் தடுக்க முடியவில்லை. எனவே ஹென்றி அவர்களுக்குள் யாராவது ஒருவருடன் சேரவேண்டிய அவசியமாயிற்று. ச்சார்லஸ், ஃப்ரான்ஸிஸ் ஆகிய

இருவரும் ஹென்றியின் சிநேகத்தை நாடினர்; அதனால் இங்கிலண்டினுடைய மதிப்பு அப்பொழுது எவ்வளவு அதிகமாயிருந்த தென்பது தெரிய வருகிறது. 1520-ல் ஹென்றியும் ப்2ரான்ஸிஸ் அரசரும் கா/2லே பட்டணத்தினருகில் சந்தித்தனர். அவர்கள் நெடுநாட் பழகிய நண்பர்கள்போல நிரம்பவும் குதூகலமாகவும் அன்னியோன்னியமாகவும் அங்கு சில தினங்கள் இருந்து விருந்துண்பதும் இன்பமநுபவிப்பதுமே வேலையாய்ச் செய்தனர். இரண்டு அரசர்களும் டாம்பீகமாக ஆடையுடுத்து, ஆபரணங்களணிந்து வந்தமையாலும், அந்த இடம் முழுதும் பீதாம்பரங்களே மயமாய்க் காணப்பட்டமையாலும் அதற்கு "பீதாம்பர மய ஸ்தலம்" (Field of the Cloth of gold) என்று பெயர் வந்தது; அதாவது அந்த இடம் முழுதும் ஸ்வர்ணமயமாகக் காணப்பட்டது என்பது கருத்து. ஆனால், அந்த ஆடம்பரமெல்லாம் கடைசியில் வீணாகவே முடிந்தது. ப்2ரெஞ்சு அரசரிடம் ஹென்றிக்கு உண்மையான அன்பு கிடையாது. அவர் சில மாதகாலத்திற்குப் பின்னர், ச்சார்லஸ் மன்னரையும் அது போலவே சந்தித்துக் குலாவினார். தமது மனைவியின் உறவினரான ச்சார்லஸின் கட்சியில் சேர்ந்துகொண்டு ப்2ரெஞ்சு மன்னரை எதிர்ப்பதே அவருடைய நோக்கம். எனவே அவர் ச்சார்லஸின் கட்சியில் சேர்ந்துகொண்டார். அவர் செய்தது அவருடைய கொள்கைக்கே விரோதமானது. ஐரோப்பாவில் எந்த அரசர் அதிகமான பலத்தைப் பெற்றிருக்கிறாரோ, அவரை அடக்குவதே ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநிறுத்துவதற்கான சாதனம் என்பதை அநுசரித்து நடந்துகொள்வதென்றால் ஹென்றி ப்2ரெஞ்சு மன்னரோடு சேர்ந்திருக்கவேண்டும்; ஏனெனில் ச்சார்லஸ் ஏற்கனவே இரண்டு தேசங்களுக்குச் சக்கரவர்த்தியா யிருந்தார். அவருடன் ஹென்றி சேர்ந்துகொண்டது ஷை கட்டுப்பாட்டிற்கு முற்றிலும் விரோதமான செய்கை.

1521-முதல் எட்டுவருஷகாலம் ச்சார்லஸ், ட்2ரான்ஸிஸ் ஆகிய இருவரும் போர்புரிந்தனர். ஹென்றியும் ட்2ரெஞ்சு அரசரை எதிர்த்துச் சென்றார். ஆனால் இங்கிலீஷ் சேனையால் அதிகமாய் வெற்றி அடைய முடியவில்லை; ச்சார்லஸ் ஒருவராகவே ட்2ரெஞ்சு அரசரைப் பூர்த்தியாகத் தோற்கடித்துவிட்டார். அதைக் கண்ட

உல்ஸி, அவ்விதம் ச்சார்லஸ் பூர்ண வெற்றியடைந்தது அபாயகரமான தென்பதைக் கண்டு, ஐரோப்பா முழுதிற்கும் ச்சார்லஸ் சக்கரவர்த்தி ஆகிவிடுவாராளுல் அது இங்கிலண்டிற்கும் தீங்காய் முடியும் என்பதை ஹென்றிக்கு அறிவுறுத்தினர். அதை உணர்ந்த ஹென்றி, ச்சார்லஸ் கட்சியை விட்டு நழுவி, ப்ரெஞ்சு அரசருடன் சமாதானம் செய்துகொண்டார். ஆனல் ச்சார்லஸ் தமது பராக்கிரமத்தைக் கொண்டே ப்ரெஞ்சு அரசரைப் பல இடங்களில் தோற்கடித்து வந்தார். ஐரோப்பாவில் அதிகாரத்தை சமரீதியாய் வைக்கவேண்டுமென்று ஹென்றியும் உல்ஸியும் வாயால் பேசிய தெல்லாம் பயன் படாமற் போயிற்று. இங்கிலீஷ் சேனையினல் எதையும் செய்ய முடியவில்லை; உல்ஸியினுடைய இராஜ தந்திரத் திறமையினல் எதையும் சாதிக்கக் கூடவில்லை. ச்சார்ஸுக்கு விரோதமாக ப்ரெஞ்சு அரசருடன் சேர்ந்திருக்க வேண்டியது ஹென்றியின் கடமை. அதைச் செய்யும் தைரியம் அவருக்கு இல்லாமல் போயிற்று. எனவே ஹென்றி, உல்ஸி ஆகிய இருவரும் அன்னிய தேச சம்பந்தமாக பிரபலமான வெற்றியைஅடைந்துவிடவில்லை.

அன்னிய நாடுகளின் வியவகாரங்களில் தலையிட்டு எவ்வித இலாபத்தையு மடையாமல் திரும்பி வந்த அரசரும் உல்ஸியும் ஜனங்களுடைய அதிருப்திக்குப் பாத்திரராயினர். தமது தந்தை பாடுபட்டுச் சேர்த்து வைத்திருந்த பணத்தை யெல்லாம் அன்னிய நாட்டுச் சண்டைகளில் செலவழித்த பின், ஹென்றிக்குப் போதிய வருமான மில்லாமல் போய்விட்டது. அவர் பார்லிமென்ட் சபையின் தயவை நாடிப் பணம் கேட்க வேண்டியதாயிற்று, அந்தச் சபையினர் சண்டைக்கு அவசியமான தொகைக்கு முதலில் அநுமதி கொடுத்தனர். ஆனல் அதனல் எவ்வித நன்மையும் ஏற்படாமல் போனதைக் கண்டு, அவர்கள் முணுமுணுத்தனர். இங்கிலீஷ்காரர்கள் எப்பொழுதும் மிதமிஞ்சிய வரிகள் கொடுக்க எளிதில் சம்மதிப்பதே இல்லை. 1523-ல் உல்ஸியினுடைய தூண்டுதலின்மேல், பார்லிமென்டார் ஒரு சிறு தொகையை அளித்தனர். அதைக் கண்டு வெறுப்படைந்த ஹென்றி ஐந்தாறு வருஷகாலம் பார்லிமென்ட் சபையைக் கூட்டவேயில்லை. ஒரு சமயம் அவர் ஜனங்களிட

மிருந்து பலவந்தமாகக் கடன் வாங்க முயன்றூர்; அதாவது, ஒவ்வொரு பிரஜையும் தன் வருமானத்தில் ஆறிலொருபங்கை அரசருக்குக் கொடுத்துவிடவேண்டுமென்று ஆக்ஞாபித்தார். ஆனால், ஜனங்கள் அனைவரும் அதற்குச் சம்மதியாமற் போனதனால், அந்தக்கடன் முறையை விலக்கிவிடவேண்டியதாயிற்று. அவ்வாறு அரசர் செய்ததெல்லாம் உல்ஸியினுடைய தூண்டுதலின் மேலேதான் என்று குடிமக்கள் உணர்ந்தனர். உல்ஸியினிடம் அவர்களுக்கு அருவருப்பு உண்டாயிற்று. அன்னிய நாட்டு யுத்தங்களில் வெற்றி பெறுமையும், உள் நாட்டுப் பிரஜைகளின் அதிருப்தியும், பிரபுக்களின் பகைமையும் உல்ஸிக்குக் கேடு விளைவிக்கத்தக்கதாயின.

(2) **மதச் சீர்திருத்தம்: ஐரோப்பாவில் மதப் புரட்சி: உல்ஸியின் வீழ்ச்சி:** முன் அதிகாரத்தில் கூறியபடி, 15-ம் நூற்றூண்டில் ஐரோப்பாவில் தோன்றிய புதியஉணர்ச்சி காரணமாக, ஜனங்கள் நூதனமான கொள்கைகளையும், அறிவு முதிர்ச்சியையும் பெற்று வந்தனர். அரசாங்கத்தாரோ, மத குருமார்களோ கூறியதையெல்லாம் அதுவரையில் வேதவாக்கியமாய் நம்பி வந்த ஜனங்கள், இப்பொழுது 'எப்படி? ஏன்?' என்று கேட்கலாயினர். அவர்கள் ஒவ்வொரு விஷயத்தையும் தமக்குத் தாமே ஆராய்ந்து பார்த்து, சரியாக உள்ளவைகளை ஏற்றுக்கொண்டு, மற்றவைகளை நிராகரிக்கும் குணத்தைப் பெற்றுவிட்டனர். மனிதருடைய சுபாவமும் நிலைமையும் மாறியவுடன், அதற்கேற்ப அவர்களுடைய ஸ்தாபனங்களும் கொள்கைகளும் மாறத் தொடங்கின. பழைய காலங்களில் சரியாக வேலை செய்துவந்த ஸ்தாபனங்கள், அவர்களுக்கு திருப்திகரமாகத் தோன்றவில்லை. அதன் பயனாக பல சீர் திருத்தங்களும் புரட்சிகளும் நடைபெறவேண்டி யிருந்தன. முக்கியமாக, மதஸ்தாபனத்தின் விஷயத்தில் அத்தகைய பெரிய புரட்சி ஒன்று 15-16-ம் நூற்றூண்டுகளில் ஏற்பட்டது.

கிறிஸ்து மதம் ஐரோப்பாவில் தோன்றியபின் அநேக மடாலயங்கள் ஏற்பட்டன. அவைகளில் மத குருமார்கள் இருந்து, அறநெறியை உபதேசித்து வந்தனர். நாளடைவில் மடாலயங்களும் மத குருமார்களும் பெருக,மதஸ்தானம் ஒரு கட்டுப்பாட்டை யடைந்தது. போப் என்பவர் எல்லா மதகுருமார்களுக்கும் தலைவரானர். அவரு

னுடைய மடாலயம் உரோம் (Rome) நகரத்தில் இருந்தது; கிறிஸ்தவர்களெல்லோருக்கும் அதுவே தலைமை ஸ்தானமாக இருந்துவந்தது. எனவே ஐரோப்பாவில் மதகுருமார்களெல்லோரும் ஒரு தனியான இலாகாவாக அமைந்து, அதிகாரமும் பலமும் பெற்று சுயேச்சையாகத் தனியரசு புரிந்து வந்தனர். சில போப்கள் தங்களுடைய சாமர்த்தியத்தினால் பலஅரசர்களும் தங்களது விருப்பம் போல நடக்கும்படி செய்தனர். ஜான் என்ற இங்கிலீஷ் அரசரை, போப் எவ்வளவு தூரம் ஆட்டி வைத்தார் என்பதை முன்பு விவரித்தோம். ஆனால் வரவர, மதஸ்தாபனம் சீர் குலைந்துகொண்டே வந்தது. மதகுருமார்களிடம் வைராக்கிய புத்தியும், பக்தியும் இருப்பதற்கு மாறாக, இகலோக இன்பங்களில் இச்சையும், பேராசையும், பொன்னாசையுமே நிறைந்திருந்தன. பாரமார்த்திக வழிகளில் பாமர ஜனங்களைப் பயிற்றுவதற்கு மாறாக, அவர்கள் இராஜீயச் சண்டைகளிலும், வீண் வியவகாரங்களிலும் தலையிடலாயினர். சில போப்கள் யுத்தவெறி கொண்டவர்களாயும், சிலர் வஞ்சகம் நிறைந்த இராஜதந்திரிகளாகவும் இருந்தனர். 'கடவுளின் இம்மைப் பிரதிநிதி' யென்று பெருமை பாராட்டிக்கொண்ட போப்மார்களே அவ்வளவு கேவலமாக நடந்து கொண்டமையால் அவர்களுக்குக் கீழ்ப்பட்ட சிஷ்யர்களான சாதாரண மதகுருமார்களின் நடத்தை இன்னும் படுமோசமாய் விட்டது. அநேகமாய் எல்லா மதகுருமார்களும் வெறும் உருத்திராக்ஷப் பூனைகளாயிருந்தனர். மத உணர்ச்சி என்பதே மடாலயங்களில் இல்லையாயிற்று. மதகுருமார்கள் அவ்வளவு ஒழுங்காய் நடக்க, அவர்கள் நடத்திச் செல்லவேண்டிய ஆட்டு மந்தையான பாமர ஜனங்களோ முற்றிலும் பரிதாபகரமான நிலைமைக்குத் தாழ்ந்து விட்டனர். எங்கும் மூடபக்தியும், அவநம்பிக்கையும் நிறைந்திருந்தனவேயன்றி, தர்மம், அறநெறி முதலியவை கேவலம் அற்பமாய் விட்டன. அப்படியிருந்தாலும் மதஸ்தாபனத்தை எவராலும் அசைக்க முடியவில்லை. மேலே குறித்த சீர் கேடுகளை அகற்றி செம்மைப்படுத்த முற்படுவோரைக்கூட மதகுருமார்கள் பகைத்தும் எதிர்த்தும் வந்தனர். ஏனெனில் அவர்கள் தம்முடைய பழைய உரிமைகளையும் உடைமைகளையும் துறந்துவிட விரும்பவில்லை. அறி-

விலிகளான பாமர ஜனங்களும் குருமார்களுடைய சொல்லை வேத வாக்கியமாக நம்பி அவர்களைப் பாராட்டி வந்தனர்.

ஆனால் 15-ம் நூற்றாண்டில் புதிய உணர்ச்சியையும் அறிவு முதிர்ச்சியையும் பெற்றபின், பலர் மேலே கூறிய கெடுதல்களை அகற்ற முயன்றனர். அதாவது மதஸ்தாபனத்தைப் பழைய காலத்தில் இருந்ததைப்போலத் தூய்மையாகவும் ஞான ஒளியை அளிக்கத்தக்கதாகவும் மாற்றவேண்டுமென்பது அவர்களது நோக்கம். உதாரணமாக முன்னொரு காலத்திலேயே விக்ளிப்2 என்பவர் மதகுருமார்களை தைரியமாக எதிர்த்து வந்தாரென்று குறித்திருக்கிறோம். ட்யூடர் ஆட்சி தொடங்கியபின், பல அறிவாளிகளும் அதே முயற்சியைச் செய்து வந்தனர். ஜான் காலெட் (John Colet) என்பவர் பரிசுத்தமாக நடந்து தமது உபதேசத்தினால் ஜனங்களுக்கு அறிவூட்டி வந்தார். மதகுருமார்கள் அதிக ஊக்கத்துடன் வேலைசெய்யத் தூண்டவேண்டுமென்பதே அவருடைய கருத்து. அதன் பிறகு எரா/2ஸ்மஸ் (Erasmus) என்பவர் உயர்தர நூல்கள் பலவற்றை எழுதி மூட நம்பிக்கைகளையும், அசம்பாவிதக் கொள்கைகளையும் கண்டித்தார். ஸர் தாமஸ் மூர் (Sir Thomas Moore) என்ற பிரசித்தி பெற்ற சட்ட நிபுணரும் அதே மாதிரி "யுட்டோபியா" (Utopia) என்ற ஒரு நூலைச்செய்து அதில் அக்காலத்தில் தேசவாழ்க்கையில் ஊன்றி மறைந்து கிடந்த ஊழல்களை வெளிப்படுத்தினர். அவர் அக்காலத்து சமூக அமைப்பைக் கண்டித்ததுடன் நின்று விடாமல் தமது மனோபாவனையினால் ஒரு புதிய சமூக அமைப்பையும் சிருஷ்டி செய்து விளக்கி யிருந்தார். ஆனால் அவருடைய மனோபாவனையிலேற்பட்ட உலகம் அநுபவ சாத்தியமானதாக இல்லை. மானஸீகமான அவருடைய புதுசமூகத்தின் நிலைமையைப் பின் வருமாறு அவர் வர்ணித்திருந்தார்: ஜனங்களிடம் சுய நலமோ, பேராசையோ எள்ளளவும் இருத்தல் கூடாது. ஒவ்வொருவனும் தனது விருப்பத்தின்படி கடவுளை உபாசிக்கலாம். சச்சரவும் கலகமும் இல்லாமல் குடி மக்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழவேண்டும். கல்வி பரவ, அதனால் அறிவு வளர்ச்சியும் உண்டாகும். ஒவ்வொருவனுக்கும் தேவையான பொருள் இருக்கும்; வறுமையும் பிணியும் காணக்-

கிடையா. ஆனால் மூர்காலத்தில் இருந்த இங்கிலண்டு தேசத்தின் நிலைமைக்கு அது முற்றிலும் மாறாக இருந்தது. பணக்காரர்களுக்குப் பணமும் ஏழைகளுக்கு ஏழ்மையும் பெருகிக் கொண்டே போயின. ஹென்றியும் உல்ஸியும் இராஜ்ஜியத்தில் பரவியிருந்த சீர்கேடுகளை அகற்ற ஒருவாறு முயன்றனர். மூர் என்பவரை ஹென்றி தமக்குக் கீழ் வேலையிலமர்த்திக்கொண்டு, அவருடைய ஆலோசனையைக் கேட்டு நடந்து வந்தார். உல்ஸி தம்மை போப்பின் பிரதிநிதியாகச் செய்துகொண்டு மதஸ்தாபனச் சீர்திருத்தம் செய்ய முனைந்தார். அவர் பல சிறு மடாலயங்களை அழித்து அவற்றைச் சேர்ந்த பணத்தைக் கொண்டு ஆக்ஸ்போர்டு என்ற இடத்தில் ஒரு பெரிய கலாசாலை ஏற்படுத்தினர். மதகுருமார்களும் நன்ருக உழைத்துக் கல்வி கற்று வரும்படி தூண்டினர். ஆனல், அவருடைய முயற்சிகள் அதிகமான பலனை அளித்து விடவில்லை. ஏனெனில், உல்ஸியே நிரம்பவும் ஆடம்பரமான வாழ்வு வாழ்ந்தவர். அவரே பல மடாலயங்களின் தலைவராக இருந்து, தமது கடமைகளை சரிவர நடத்தாமல், அவைகளின் வருமானத்தை மாத்திரம் பெற்று அநுபவித்து வந்தார், ஆனலும் மதச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று அவர் உணர்ந்ததே ஒரு நல்ல அறிகுறியாகும்.

இங்கிலண்டில் இருந்ததுபோலவே ஐரோப்பா முழுதிலும் அத்தகைய கெடுதல்கள் நிரம்பியிருந்தன. ஆனல் இங்கிலண்டில் பலர் அற்ப சொற்பமாக மதச்சீர்திருத்தம் செய்ய முயன்றுகொண்டிருக்கையில், ஐரோப்பாவில் ஒரு பெரிய புரட்சி கிளம்பி அக்கண்டம் முழுதையும் ஓர் ஆட்டு ஆட்டி உலுக்கிவிட்டது. ஐரோப்பாவிலும் பல அறிவாளிகள் போப்பினுடைய செய்கைகளைக் கண்டு வெறுப்படைந்தனர். மதஸ்தாபனம் விவரிக்க இயலாத துன்மார்க்க நிலைமையை அடைந்திருந்ததொன்றே அந்தப் பெரும் புரட்சிக்குக் காரணமாயிற்று. போதாக் குறைக்கு 16-ம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் போப்பின் பதவியை வகித்த **பத்தாவது லியோ** (Leo X) என்பவர் அந்தப் புரட்சியை துரிதப்படுத்தக்கூடிய காரியங்களைச் செய்துவந்தார். அவர் ஒரு மாதா கோவில் கட்டும் பொருட்டு பணம் சேகரிக்க எண்ணி ஒரு தந்திரம் செய்தார். பாபச்செய்கைகள் புரிந்தவர்களிடம் அவர் பணம் பெற்றுக்கொண்டு, அவர்களு

டைய பாபங்களை மன்னித்து விட்டதாகக் கூறிவரலானார்; ஷெ மன்னிப்புச் சீட்டுகளை பகிரங்கமாக விற்க ஏற்பாடு செய்துவிட்டார். பல பிரபுக்கள் பணம் கொடுத்து ஷெ சீட்டுகளை வாங்கி வைத்துக் கொண்டு, இன்னும் அதிகமான பாபச்செய்கைகள் புரியலாயினர். அந்த அசம்பாவித நடத்தையைக் கண்ட பலர் பெரிதும் கோப மடைந்தனர். கடைசியில், நெடுநாளாகப் புகைந்துகொண்டிருந்த நெருப்பு பெரிய ஜ்வாலையாக மூண்டு பற்றி எரிய ஆரம்பித் தது. போப்பினுடைய செய்கைகளையும் அவருடைய அதிகாரத்தை யும் பலர் தைரியமாக எதிர்த்தனர். கிரிஸ்துமத சரித்திரத்தில் போப்பினுடைய அதிகாரத்திற்கு அவ்வளவு எதிர்ப்பு அதுவரையில் ஏற்பட்டதில்லை. போப்பின் அதிகாரத்தைக் கூடச் சிலர் நிராகரித்து விட்டனர். முதன் முதலாக, மார்ட்டின் லூதர் (Martin Luther) என்பவர் 1517 ல் போப்பை பகிரங்கமாக எதிர்த்துப் பிரசங்கம் புரியலானார். கிரிஸ்துமதத்தைப் பின்பற்றுவோர் ஏசுகிரிஸ்துவின் உபதேசப்படி நடக்கக் கடமைப்பட் டிருக்கிறார்களேயன்றி, போப் மதகுருமார்கள் முதலிய இழிவான மாந்தரின் சொற்படி நடக்கக் கடமைப்படவில்லை என்று அவர் கூறி உபதேசித்தார். அவர் ஆரம்பித்த இயக்கம் ரெபர்மேஷன் (Reformation) அதாவது மதப் புரட்சி அல்லது மதத்திருத்தம் என்று பெயர்பெற்றது. சீக்கிரத்தில், ஜெர்மனி தேசத்தார் போப்பின் அதிகாரத்தை மீறும்படி மார்ட்டின் லூதர் செய்துவிட்டார். அவர் செய்த காரியம் சாமானியமான காரியமல்ல. எத்தனையோ நூற்றாண்டுகளாக ஐரோப்பாக் கண்டம் முழுதிலும் அரசுபுரிந்து வந்த அகண்டாகாரமான பெரிய மதஸ்தாப னத்தை அவர் அடியோடு ஆட்டி அசைத்துத் தகர்த்தெறியத் தொடங்கிவிட்டார். மதஸ்தாபனத்தில் நெடுநாளாகச் சேர்ந்து குவிந் திருந்த சீர்கேடுகளே அவருக்கு சாதகமாயிருந்தன. ஆனால் அதற்கு முன் கிரிஸ்தவரெல்லோரும் ஒரே கூட்டத்தினராய்ச் சேர்ந்திருந் தது மகா உத்கிருஷ்டமான விஷயமாயிருந்தது; லூதர் காலத்திற் குப்பின் அவர்கள் பற்பல பகுதிகளாய்ப் பிரிந்துபோக வேண்டிய தாயிற்று. லூதருடைய ஆவேசமும், அவர் உழைத்த வேகமும் காண் பவரை நடுங்கச்செய்தன. அரசர்களில் பலர் லூதரை அடக்க முயன் றனர். ஆனால் அவர் ஆரம்பித்த காரியம் வாய்திறந்து விடப்பட்ட

எரிமலை எவராலும் அணைக்க இயலாதபடி பிரம்மாண்டமாக மூண்டெரிந்து அக்கினிக்குழம்பைப் பரப்புவது போல எங்கும் பரவலாயிற்று. லூதரைப் பின் பற்றியவர்களுக்கு ப்ராடெஸ்டன்ட்ஸ் (Protestants) கட்சியினர் என்ற பெயர் உண்டாயிற்று; அதாவது போப்பின் கொள்கைகளை மறுத்துக் கண்டிப்பவர்கள் என்பது அதன்பொருள். லூதர் ஜெர்மனியில் செய்த காரியத்தை வேறு சிலபிரமுகர்கள் மற்ற தேசங்களிலும் செய்து முடித்தனர். ஸ்2விங்கிள் (Zwingle) என்பவர் ஸ்விட்ஸர்லண்ட் நாட்டிலும், கால்வின் (Calvin) என்பவர் ப்ரான்ஸ் தேசத்திலும் புதிய கொள்கைகளை உபதேசிக்கலாயினர். வெகுசீக்கிரத்தில் கிரிஸ்தவர்களில் ஒருபெரும்பகுதியினர் போப்பின் தொடர்பைவிட்டு விலகிக்கொண்டனர். போப்பின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தவர்களுக்கு கா2தலிக்ஸ் (Catholics) என்று பெயர் உண்டாயிற்று. இப்பொழுதும்கூட, கிரிஸ்தவர்களில் ஷை இரண்டு பெரிய பிரிவுகள் இருந்து வருகின்றன. எனவே போப்பின் அதிகாரம் 16-ம் நூற்றாண்டு வரையில் பூர்த்தியாக இருந்து, அதன்பின் ஏறக்குறைய பாதி அளவிற்குக் குறைந்துபோய்விட்டது.

ஆனால் மேலே குறித்த மதச் சீர்திருத்தக்காரர்களெல்லோரும் பழைய முறைகளையும் போப்பையும் கண்டிப்பதில் மாத்திரம் ஒன்றுபட்டிருந்தனரேயன்றி, புதிய முறைகளை அமைப்பதில் அவரவர் தமது மனப்போக்கின்படி நடந்துகொண்டனர். ஒவ்வொருவரும் தம்தமக்குத்தோன்றியபடி ஏசுநாதரின் உபதேசங்களை அநுஷ்டிக்கலாயினர். இவ்வாறு ஐரோப்பாவிலிருந்துவந்த பழையஸ்தாபனம் மாறியதும், புதிய ஸ்தாபனம் உண்டானதும் மிக் எளிதில் நடந்துவிடவில்லை. புதிய கொள்கையினருக்கும் பழையவர்களுக்கும் ஒரு நூற்றாண்டுக்கதிகமாக கத்திச்சண்டை நடந்துவந்தது. இரத்தவெள்ளம் ஆறாய் ஓடியது. பழைய முறையைச் சார்ந்த அரசர்கள் சிலரும், புதிய முறையைப் பின்பற்றிய அரசர்கள் சிலரும் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் புரிந்தனர். சில அரசர்கள் வெளிக்குமாத்திரம் மதவிஷயத்தை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு இரகசியத்தில் தமது இராஜீய வியவகாரங்களைக் கருதி சண்டையும் சமாதானமும் செய்துவந்தனர். அப்பொழுது ஐரோப்

பாவில் மதவெறி பேய்க்கோலம்கொண்டு தலைவிரித்தாடியது. ஏசு கிருஸ்துவின் பெயரைச் சொல்லிக்கொண்டே மனிதரும் மனிதரும் — கிரிஸ்தவரும் கிரிஸ்தவரும்—ஒருவர் கழுத்தை மற்றவர் வெட்டிக்கொண்டு மடியலாயினர். அக்காலத்தில் அங்கு ஏற்பட்ட குழப்பமும் அமர்க்களமும் விவரிக்க வொண்ணுதனவாயிருந்தன.

அவ்வாறு நிகழ்ந்த மதப்புரட்சிக் கொடுமை இங்கிலண்டு தேசத்தை எவ்வளவுதூரம் பாதித்தது என்பதை நாம் இனி கவனிப்போம். ஐரோப்பாவிற்கு அடுத்தாற்போல நிரம்பவும் சமீபத்தில் இங்கிலண்டு தேசம் இருப்பதனுல், அங்கு ஏற்படும் புரட்சிகள் பக்கத்திலும் பரவுவது ஆச்சரியமானதல்ல. ஐரோப்பாவில் மதப்புரட்சி தோன்றுதற்குமுன்பே, இங்கிலண்டில் விக்ளிப்2 என்பவர் மதஸ்தாபனத்தை எதிர்த்து வந்தார். ஆதலால் அவர் "மதப்புரட்சிக்கு அருணுேதயம் போன்றவர்" (Morning Star of the Reformation) என்று குறிக்கப்படுகிறுர். மேலும் ஐரோப்பாவில் இருந்துவந்த துர்நடத்தைகள் யாவும் இங்கிலண்டிலும் இருந்தன. அப்படியிருந்தாலும், இங்கிலண்டில் மதப்புரட்சி சிறிதளவு மெதுவாகவே நடைபெற்றது; அதன்போக்கும் தனிமாதிரியாகவே இருந்தது. ஏனெனில் இங்கிலீஷ்காரர்கள் எதிலும் எப்பொழுதும் நிதானமாகவே நடந்துகொள்ளும் குணமுடையவர்கள்; எந்தக் காரியத்தையும் அவர்கள் அவசரப்பட்டுச் செய்யாமல் தீர்க்காலோசனை செய்து அதன்பின்பே அநுஷ்டிப்பார்கள். ஆகவே, லூதருடைய தீவிரமான கொள்கைகள் முதலில் இங்கிலீஷ்காரருக்கு உகந்ததாகத் தோன்றவில்லை. சீர்திருத்தத்தில் ஆர்வம்கொண்ட மூர்கூட் லூதரைப்போல அவ்வளவு அமிதமாக முனைய விரும்பவில்லை. லூதர் போப்பைத் தாக்க ஆரம்பிக்கவே இங்கிலீஷ்மன்னரான ஹென்றி போப்புக்கு சாதகமாக ஒரு நூலியற்றினுர். அதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த போப் இங்கிலீஷ் அரசருக்கு 'மதக்காவலன்' (Defender of the Faith) என்ற பட்டத்தை யளித்தார். இப்பொழுதும்கூட இங்கிலீஷ் மனனர்களுக்கு அந்தப் பட்டம் இருந்து வருகிறது; இங்கிலீஷ் நாணயங்களில் அது குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இங்கிலீஷ் மன்னர் அவ்விதம் போப்பின் அதி

காரத்தை ஆதரித்ததுபற்றி ஜனங்களும் லூதருடைய கொள்கைகளை உடனே பின்பற்றிவிடவில்லை. ஐரோப்பாக் கண்டத்திற்குச் சென்றிருந்த சிலர் மாத்திரம் புதிய கொள்கைகளில் பற்றுதல் கொண்டனர். இங்கிலண்டில் புதியமதம் பரவிய விதத்தைப் பின்னர் கூறுவோம். ஆனால் ஒரு விஷயம் இங்கு குறிப்பிடவேண்டும். அதாவது லூதர் முதலிய புரட்சிக்காரர்களின் கொள்கைகளை அநுசரித்து இங்கிலண்டில் ப்ராடெஸ்டன்ட் என்ற புதியமதம் பரவவில்லை; ஹென்றியினுடைய முயற்சியினாலேயே அந்த இயக்கம் இங்கிலண்டில் கிளம்பலாயிற்று. தமது மூத்த சகோதரருக்கு மனைவியாயிருந்த கா/தரைன் என்பவளை, போப்பினுடையவிசேஷ அநுமதியின்மேல் ஹென்றி மணந்துகொண்டார் என்று கூறினோமல்லவா? சில வருஷ காலத்திற்குப்பிறகு அவருக்கு அந்த மனைவியினிடம் வெறுப்பு உண்டாய்விட்டது. கா/2தரைன் அவரைக் காட்டிலும் ஐந்து வயது பெரியவளாயிருந்தமையாலும், அவளுக்குப் பிறந்த குழந்தைகளில் ஒரு பெண்ணைத்தவிர மற்றவை, இறந்துபோய் விட்டமையாலும், ஹென்றி அவளை விலக்கிவிட எண்ணினார். தாய்க்கு சமதையான அண்ணியைத் தாரமாக்கிக் கொண்டது கடவுளுக்கே பொறுக்கவில்லையாதலால், தான் குழந்தைகள் யாவும் மடிந்துபோய்விட்டன என்று அவரே கூறிக்கொள்ளத் தொடங்கினார். இங்கிலீஷ்காரரும் தமது அரசருக்கு ஒரு புத்திரன் பிறந்தால்தான், அவருக்குப்பிறகு இராஜ்ஜியத்தில் கலகமேற்படாமலிருக்குமென எண்ணினர். ஆனால் ஹென்றிக்குக் கா/2தரைனின்மீது வெறுப்புத் தோன்றியதன் காரணம் வேறு; அவர் அ/2ன் போலின் (Anne Boleyn) என்ற ஓர் இளநங்கையின் மீது மோகம் கொண்டிருந்தார்; அவளை மணந்துகொள்ளும் பொருட்டே அவர் கா/2தரைனை நீக்கிவிட முனைந்து நின்றார்.

மேனாடுகளில் கணவன் மனைவி ஆகிய இருவருக்கும் பரஸ்பரம் விரோதம் ஏற்பட்டால் அவர்கள் தமது விவாகபந்தத்தை விடுதலை செய்துகொண்டு பிரிந்துபோவது சாதாரண வழக்கமாக இருந்து வருகிறது. தமக்கும் தமது அண்ணியான கா/2தரைனுக்கும் நடந்த விவாகம் நியாயமான விவாகமேயாகாது என்று ஹென்றி கூறிக்

கொண்டு, அந்த பந்தத்தை அறுத்தெறிய முயன்றார். அந்த நோக்கத்துடன் அவர் 1527-ல் போப்புக்கு விண்ணப்பம் செய்து கொண்டு கா/2தரைனின் விவாகம் கிரமத்தவறான விவாகமென்று உத்தரவிடும்படி வேண்டினர். ஆனால் அப்பொழுது போப்பின் நிலைமை நிரம்பவும் சங்கடமாய்விட்டது. கிரமப்படி பார்த்தால், அண்ணியை மைத்துனன் மனைவி யாக்கிக் கொள்வது அக்கிரமச் செய்கையே; ஆனால் தமக்கு முந்தியிருந்த ஒரு போப் அவருடைய விசேஷ அநுமதியினால் அது நியாயமானதென்று ஏற்றுக்கொண்டிருந்தார். இப்பொழுது அந்த விவாகம் தவறானதென்று கூறுவது, அவ்வித விசேஷஅநுமதியை யளிக்கும் அதிகாரம் போப்புகளுக்கு இல்லை யென்று தீர்மானிப்பது போலாகும். ஏற்கனவே, மதப்புரட்சியி லடிபட்டிருந்த தமது ஸ்தானத்திற் கிருந்த விசேஷ அதிகாரத்தைத் தாமே எடுத்துவிட போப் சம்மதிப்பாரா? மாட்டார். ஆகவே, ஹென்றியின்வேண்டுகோள் போப்பினுடைய விசேஷ அதிகாரத்தை மறுப்பதாக இருந்தது. உண்மையில் ஹென்றி அந்த விஷயத்தின் நியாயத்தைப் பற்றியாவது அநியாயத்தைப் பற்றியாவது கவலை கொள்ளவில்லை. புதிய காதலியின் மையலில் மயங்கி, அவர் எவ்விதமாகவேனும், கா/2தரைனை விலக்க வழிதேடலானார். மேலும் போப்புக்கு இன்னொரு விதத்திலும் சங்கடம் ஏற்பட்டது. ஐரோப்பாவில் பெரிய சக்கரவர்த்தியாயிருந்த ச்சார்லஸ் அரசர் கா/2தரைனுடைய உறவினர்; அவருடன் ஹென்றியும் உல்ஸியும் சில வருஷகாலம் சேர்ந்திருந்த பிறகு ப்2ரெஞ்சு மன்னருடன் சமாதானம் செய்து கொண்டதுபற்றி அவருக்கு ஹென்றியின் விஷயத்தில் அருவருப்பு ஏற்பட்டிருந்தது. மேலும் அந்த சமயத்தில் போப்பும் அவருடைய வசத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்தார். ஆகவே ச்சார்லஸிடம் இருந்த பயத்தாலும், தமது ஸ்தானத்தின் அதிகாரத்தைக் காப்பாற்றவும், போப் ஹென்றியின்வேண்டுகோளை உடனே நிறைவேற்றாமல் நிறுத்திவைத்து, தாமதப்படுத்துவதே உசிதமானதென்று கருதினர். இதில் எவரும் கா/2தரைனுக்கு இரங்கிக் கலங்கவில்லை. ச்சார்லஸ், ஹென்றி ஆகிய இருவரையும் விரோதித்துக் கொள்ளாமல் சாமர்த்தியமாக நடந்து கொள்ள எண்ணி, போப் 1528-ல் ஒரு கமிஷனை நியமித்து ஷ வியவகாரத்தை விசாரிக்கச் செய்தார். அந்தக் கமி

ஷனில் உல்ஸி ஓர் அங்கத்தினர் ; மற்றோர் அங்கத்தினர் கா/2ம்பெஜ்ஜியோ (Campeggio) என்ற மதகுரு. போப் அந்தக் கமிஷனை நியமித்தது ஹென்றிக்கு திருப்தியை யளித்தது ; உல்ஸியும் கா/2ம்பெஜ்ஜியோவும் தமக்கு சாதகமாகவே தீர்ப்புக் கூறுவரென்று உறுதியாக எண்ணினர். ஆனல் கா/2ம்பெஜ்ஜியோ மாத்திரம் போப்பினுடைய நோக்கத்தின்படி தாமதத்தை வளர்த்தி வந்தார். விசாரணை 1529-ல் ஆரம்பித்தது ; சா/2தரைன் சாக்ஷியம் கொடுத்தபோது தான் ஹென்றியின் நியாயமான மனைவியே என்று கூறினள். அவள் கூறியது சரி யென்று பலர் கருதினர். அதற்குள் போப் அந்த வியவகாரத்தைத் தாமே தீர்த்துவிட நிச்சயம் செய்து, கமிஷனைக் கலைத்துவிட்டு மறுபடி விசாரணை நடத்த வேண்டு மென்றார். புதிய மனைவியை மணக்கஆவல்கொண்டு துடித்திருந்த ஹென்றிக்கு போப்பின் தாமதத்தைக் காணக்காண அவர் மீது கடுமையான கோபம் மூண்டது. ஆனல் அவரது கோபம் முழுதும் உல்ஸியின் தலையில் போய் விடிந்தது. உல்ஸிக்கும் அரசருக்கும் ஆதியில் இருந்த சிநேகம் வரவரக் குறைந்து வந்தது;அன்னிய நாட்டு வியவகாரங்களில் வீண் பாடுபட்டுத் திரும்பியபோதே உல்ஸியின் மதிப்புக் குறையலாயிற்று. ஹென்றி மறுமணம் செய்ய வேண்டுமென்று உல்ஸியும் விரும்பினர்; ஆனல் ஏதாவதொரு அரசகுல ஸ்திரீயை ஹென்றிக்கு மணம் செய்வித்து அதன் மூலம் ஒரு தேசத்து மன்னரது நட்பை யடையவேண்டு மென்பது அவருடைய கருத்து. ஆ/2ன் பொலீன் என்பவளை அரசர் மணந்து கொள்வது உல்ஸிக்கு சம்மதமாகவில்லை. ஆனல் புது மோகத்தில் இருந்த ஹென்றி அவரிடம் அந்த உண்மையைத் தெரிவிக்கவே இல்லை. ஏற்கனவே பிரபுக்களும் ஜனங்களும் உல்ஸியை வெறுத்து வந்தனர் ; ஆகவே அவரை வீழ்த்துவதால் தேச ஜனங்களுக்கும் திருப்தி ஏற்படும் என்பதை அரசர் கண்டு கொண்டார். ஆ/2ன் பொலீன் முதலியோருக்கும் உல்ஸிமீது குரோதமிருந்து வந்தது.எனவே ஹென்றி தமக்கு எத்தனையோ நன்மைகளைச்செய்திருந்த உல்ஸியை வேலையிலிருந்து நீக்கி, அவருடைய சொத்துகளைப் பறிமுதல் செய்து வடக்கேபோய் வசிக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டார். அடுத்த வருஷம்—1530-ல்—அவர்மீது இராஜத் துரோ

கக் குற்றம் சுமத்தப்பட்டது. அவர் அரசருக்கு முன் ஆஜராகும் பொருட்டு வந்துகொண்டிருக்கையில், நடுவழியில் உயிர் துறந்தார். அவர் கடைசிக் காலத்தில் "ஐயோ! நான் இந்த அரசருக்கு சேவை செய்ததில் வைத்த அந்தரங்கமான பிரேமையில் கேவலம் அரைப் பாகத்தை என் கடவுளின் மீது திருப்பி இருந்தால்கூட என்னுடைய இந்தத் தள்ளாத காலத்தில் அவர் என்னைக் கைவிட்டிருக்க மாட்டாரே" என்று பரிதாபகரமாகக் கூறிக்கொண்டே உயிர் துறந்தார். அவருடைய இளமையில் அவர் அநுபவித்த செல்வாக்கும் மதிப்பும் கௌரவமும் அவர் கடைசிக் காலத்தில் அடைந்த அவமதிப்பும், துன்பமும்முற்றிலும் மாறாய்த் தோன்றும். ஆனால் உல்ஸி உண்மையில் குற்றமற்றவரே. அவரிடம் அவ்வாறு நடந்துகொண்ட ஹென்றியே நன்றியை நினையாத துரோகியானார். ஊல்ஸி இராஜதந்திரத்திலும் அரசியலிலும் சிறந்த நிபுணர்; அவருடைய காரியங்களே ஹென்றியின் ஆட்சியை அபாரமாய் சோபிக்கச் செய்கின்றன. உல்ஸி பின்பற்றிய முறைகள் நிரம்பவும் சாமர்த்தியமானவையே; ஆனால் அவருடைய துரதிருஷ்டவசமாக, அம்முறைகள் பலன் தரவில்லை. உல்ஸியின் வீழ்ச்சியோடு ஹென்றியின் ஆட்சியில் முதல் அத்தியாயமும் முடிவடைகிறது.

(3) **இங்கிலண்டில் மதமாறுதல்:**—உல்ஸியின் மரணத்திற்குப்பின் தமது விவாக பந்தத்தை விலக்கிக்கொள்ள ஹென்றி பல சூழ்ச்சிகள் புரிந்தார். அவர் ப்ரெஞ்சு தேசத்தரசர்மூலம் போப்பை வற்புறுத்த முயன்றார். மேலும் வேறு பல அறிவாளிகளிடத்திலும் அந்த விஷயத்தைப்பற்றி ஆலோசனை கேட்கலானார். ஆனால் எவரும் அவருக்கு முற்றிலும் சாதகமாக அபிப்பிராயம் கூறவில்லை. ஹென்றிக்கு போப்பின்மீது கடுமையான கோபம் பொங்கியது. ஆனால் அவர் விவாகத்தைத் தள்ளுபடி செய்யும் விஷயத்தில் முடிவான தீர்மானத்திற்கு வரும் முன்பு; தமது பிரஜைகளுக்குத் தாம் நடந்துகொள்ளும் முறை சரியே என்று மெய்ப்பித்து அவர்கள் தம்மீது அதிருப்தி யுறாதவண்ணம் செய்துகொள்ள எண்ணினார். ஏனெனில் பிரஜைகள் அவரிடம் வெறுப்புறாமலிருந்தால் அவர் எதை வேண்டுமானாலும் அச்சமின்றிச் செய்யலாம். அக்காலத்தில் இருந்த பிரஜைகள் அரசரிடம் இயற்கையான பயபக்தியுடையவர்.

ளாயும், அவர் சொல்வதை உண்மையென்று நம்பும் குணமுடைய வர்களாயும் இருந்தனர். மேலும் ஹென்றி நிரம்பவும் தந்திரமாக நடந்துகொண்டு, ஜனங்கள் தமது செய்கைகளை சுலபத்தில் அங்கீ சரிக்குமாறு செய்வதில் திறமைசாலியாயிருந்தார். ஆகவே, ஜனங்க ளையும் தமது தேசத்தில் இருந்த மதகுருமார்களையும் அவர் திருப்தி செய்ய முயன்று, பார்லிமென்ட் சபையை அடிக்கடி கூட்டலானார். ஆனால் உண்மையில் அவர் எப்பொழுதும் ஜனங்களுடைய விருப் பத்திற்கு உட்பட்டு நடக்க எண்ணவில்லை. 1529 ல் கூடிய பார்லி மென்ட் சபை ஆறேழுவருஷகாலம் வரையில் நீடித்திருந்து, பல முக்கியமான சட்டங்களையும் மாறுதல்களையும் செய்வதில் ஹென் றிக்கு அநுகூலமாயிருந்தது. முதலில் போப் தமக்கு சாதகமாக நடந்துகொள்ளாததற்காக அவரை தண்டிக்க எண்ணம் கொண்ட ஹென்றி, இங்கிலண்டு தேச மதஸ்தாபனத்திற்கு இங்கிலீஷ் அரசரே எல்லோருக்கும் மேலான தலைவரென்று கூறி மதகுரு மார்களும் அதை அங்கீகரிக்கும்படி வற்புறுத்தினார். இங்கிலீஷ் மதகுருமார்கள் அந்த விஷயத்தில் இருதலைக்கொள்ளி எறும்புபோ லாயினர். மதவிஷயங்களில் போப்பையே அவர்கள் கடைசியான தலைவராய் மதிக்க வேண்டியிருந்தது; இங்கிலீஷ் பிரஜைகள் என்ற ஹோதாவில் அரசருக்கும் அவர்கள் கீழ்ப்படிய வேண்டி யிருந்தது. ஆனால் ஹென்றி அவ்வாறு கூறியதில், புதுமை யொன்றுமில்லை. நார்மன் ஆட்சி ஆரம்பித்தது முதற் கொண்டே, இங்கிலீஷ் அரசர்கள் தமது தேசத்தில் போப்பின் ஆதிபத்யம் வேரூன்றாதபடி செய்ய முயன்று வந்திருக்கின்றனர். அதே விஷ யத்தை இப்பொழுது ஹென்றியும் வற்புறுத்தினார்; அதற்குக் கார ணம் மாத்திரம் அவருக்குப் போப்பினிடம் உண்டான கோபமே யாகும். அரசருடைய தலைமை அதிகாரமும் போப்பினுடைய தலைமை யதிகாரமும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை என்பதை இங்கிலீஷ் மதகுருமார்கள் சீக்கிரத்தில் கண்டுகொண்டனர்.

முன்னர் ஐரோப்பாவில் மதப்புரட்சி யுண்டான விதத்தை விவ ரித்தோம். அங்கு போப்பின் அதிக்கிரமங்களையும் மதகுருமார் களின் அட்டூழியங்களையும் கண்டு பொறுமல் ஜனங்கள் போப் பின் ஆதிபத்யத்தை நிராகரிக்க சுயமாக ஒரு மதமுறையை அமைத்

துக் கொண்டனர். இங்கிலண்டிலோ அரசருக்கும் போப்புக்கும் கலியாண விஷயத்தில் உண்டான மனஸ்தாபத்தால் போப்பினுடைய அதிகாரத்திற்கு பங்கம் எற்பட்டது. பார்லிமெண்ட் சபை போப்புக்கு விரோதமாக சில சட்டங்களை இயற்றி வந்தது. 1533-ல் இங்கிலீஷ் வழக்குகள் போப்பினிடம் அப்பீல் விசாரணைக்கு அனுப்பப்படக் கூடாதென்று ஒரு சட்டம் செய்யப்பட்டது. மதகுருமார்கள் போப்புக்கு அனுப்பி வந்த சில சிறு கப்பங்கள் அதன் பின் அரசரையே சேரவேண்டு மென்றும் ஒரு தீர்மானம் செய்யப்பட்டது. ஆனல் அவைகளைக் கண்டும் போப் ஹென்றிக்கு அநுகூலமாகத் திரும்பவில்லை. ஆதலால் 1534-ல் தலைமைஆதிபத்யச் சட்டம் (Act of Supremacy) என்ற ஒருசட்டத்தை உண்டாக்கி, அதன்படி இங்கிலண்டின் மதஸ்தாபனத்திற்கு ஹென்றியே முடிவான தலைவர் என்றும், அவ்விதமில்லை யென்று கூறுவோருக்கு இராஜத்துரோக தண்டனை விதிக்கப்படும் என்றும் தீர்மானம் செய்யப்பட்டது. அதாவது, போப்பினுடைய அதிகாரம் இங்கிலண்டில் அடியோடு எடுபட்டுப் போய்விட்டது.

அப்பொழுது கா/2ன்டர்பரியில் முக்கிய மதகுருவின் பதவி காலியாயிற்று. அதற்கு தாமஸ் க்ரா/2ன்மர் (Thomas Cranmer) என்பவரை ஹென்றி நியமித்தார். க்ரா/2ன்மர் என்பவர் நல்ல அறிவாளி; மத உணர்ச்சி யுடையவர். ஆனல் அவர் தமது ஸரஸமான தன்மையால் சீக்கிரத்தில் ஹென்றியின் விருப்பத்தின்படி ஆடும் கருவி யாய் விட்டார். போப்பின் அதிகாரம் நிராகரிக்கப்பட்டுப் போனபின் கா/2ன்டர் பரியின் முக்கிய மதகுருவே மதஸ்தாபனத்தின் தலைமை அதிகாரி யாய்விட்டார்; அவர் ஹென்றிக்கு சாதகமாக நடந்துகொண்டு கா/2தரைனின் விவாகம் நியாய விரோதமானது என்று கூறிவிட்டார். முன்பு இயற்றிய சட்டப்படி இங்கிலண்டிலிருந்து எந்த வழக்கும் போப்புக்கு அப்பீலின்பொருட்டு அனுப்பப் படமுடியாதாகையால், கா/2தரைனின் வழக்கு அவளுக்குப் பிரதிகூலமாகவே முடிந்து போய்விட்டது. ஆனல் அதற்கு முந்தியே ஹென்றி இரகசியமாக ஆ/2ன் பொலீனை மணந்துகொண்டு விட்டார். தமது மோகாவேசத்தைப் பூர்த்தி செய்துகொள்ளும் கருத்தை முன்னிட்டு,ஹென்றி தேசத்தில் ஒரு பெரிய மத மாறுதலை உண்

டாக்கிவைத்தார். இங்கிலண்டின் மதஸ்தாபனம் போப்பினுடைய ஆதிகாரத்தை விட்டு விலகி சுயாதீன மடைந்துவிட்டது. ஆனால் முதலில் அந்த சுயாதீனம் வெறும் தோற்றமாகவே இருந்தது. உண்மையான அதிகாரம் போப்பினிடத்திலிருந்து அரசரிடம் மாற்றப்பட்டுப் போயிற்று. ட்யூடர் வம்சத்து மன்னர்கள் இவ்வாறு அரசாங்கம் மதஸ்தாபனம் இரண்டிலும் சுயேச்சாதி பத்தியம் செலுத்தலாயினர். ஆனால் முன்னரே விவரித்தபடி, இங்கிலண்டில் மதமாறுதல் ஏற்பட்டவிதம், ஐரோப்பாவில் ஏற்பட்ட முறைக்கு முற்றிலும் வேறாக இருந்தது. அங்கு ஜனங்கள் தாமாகவே, போப்பினுடைய செய்கைகளில் வெறுப்படைந்து, அவரை எதிர்த்தனர். இங்கிலீஷ் மன்னரோ ஒரு ஸ்திரீயை அடைவதான மோகவேட்கையின் பொருட்டு போப்பின் சம்பந்தத்தை ஒழித்துவிட்டார். ஆனால் ஹென்றிக்கு ப்ராடெஸ்டன்ட் என்ற புதிய மதசம்பிரதாயத்தில் அவ்வளவு ஆர்வம் ஏற்படவில்லை. அவர் ஏற்கனவே லூதருடைய கொள்கைகளைக் கண்டித்து எழுதி, போப்பினிடமிருந்து ஒரு புகழ்ச்சிப் பத்திரம் கூடப் பெற்றிருந்தாரல்லவா? ஆகவே அவர் போப்பின் அதிகாரத்தை அகற்றியதுடன் நின்றுவிட்டார்;ஐரோப்பாவில்ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் பின்பற்றியஒழுங்கு முறைகளை ஹென்றி அநுசரிக்கவில்லை. பழைய மாதிரியிலேயே அவருடைய பூஜை முதலிய சடங்குகளெல்லாம் நடந்து வந்தன. புதிய முறையைப் பின்பற்றிய இங்கிலீஷ்காரரைக்கூட ஹென்றி உபத்திரவித்து வந்தார். அதாவது, தமக்கு அநுகூலமானவரையில் மாத்திரம் அவர் பழைய மதத்தைச் சீர்திருத்திக்கொண்டாரே யன்றி, மதவிஷயமாக ஏற்பட்ட உண்மையான மனக்கிளர்ச்சியினால் அவர் புதிய மதத்தைப் பின்பற்றவில்லை. அதாவது, ஹென்றி இரண்டிலும் அமிதமாயிராமல் மத்தியஸ்தமாகச் சென்றார்; அவர் செய்த மதமாறுதல் இராஜீய சம்பந்தமான காரணங்களாலேயே ஏற்பட்டது.

ஆனால் போப்பின் அதிகாரத்தை அழித்தபின் புதியமதம் இங்கிலண்டில் பரவ ஆரம்பித்துவிட்டது; அதைத் தடுக்க ஹென்றியினால் கூடவில்லை. மேலும் அது சம்பந்தமாக ஒரு விஷயத்தை நாம் கவனிக்கவேண்டும். ஹென்றி எவ்வளவுதான் சுயேச்சாதி

பதியாக இருந்தாலும், ஜனங்களெல்லோரும் அவருக்கு விரோதமாக நின்றிருந்தால், அவரால் போப்பின் அதிகாரத்தை அழித்திருக்கமுடியாது. அரசரையும் மீறி ஜனங்கள் போப்புக்கு மரியாதைசெலுத்தி விடுவார்கள். ஜனங்களும் அந்த மாறுதல் அவசியமானதென்று உணர்ந்தே அதற்கு இணங்கினர். பொது ஜனங்கள் ஐரோப்பாவில் நடந்த பெறும் மாறுதல்களால் பாதிக்கப்படாமல் இருக்கவில்லை. இங்கிலீஷ்காரர்களிற் பலர் லூதரைப்போலவே, மதஸ்தாபனத்தின் சீர்கேடுகளையும் போப்பின் செய்கைகளையும் அறவே வெறுத்துவந்தனர். லூதர் தோன்றுவதற்கு முன்பே இங்கிலன்டில் விக்ளிப்/2, அவருடைய சிஷ்யர்களான லாலர்ட்கள் ஆகியோர் மதஸ்தாபனத்தை எதிர்த்திருந்தனர். அப்பொழுது ஜனங்கள் அதற்குப் பக்குவமடைந்திருக்கவில்லை யாதலால், விக்ளிப்2 முதலியோரது முயற்சி உடனே பலன்தரவில்லை. ஆனால், அதன்பின் 15-ம் நூற்றாண்டில் ஜனங்களுக்குப் புத்துணர்ச்சியும் அறிவு விசாலமும் ஏற்படவே, 10- நூற்றாண்டுகளாக போப்பை கௌரவித்துவந்த இங்கிலீஷ் ஜனங்கள் சிறிதும் மரியாதை பாராது அவரை நிராகரித்து ஒதுக்கிவிட முன்வந்தனர். ஹென்றி சுயநலத்தைக் கருதி போப்பை விலக்கினாராலும், அது ஒரு பெரிய மதப்புரட்சி என்பதை உணர்ந்தே பொது ஜனங்கள் அதை ஏற்றுக்கொண்டனர். ஐரோப்பாவில் ப்ராடெஸ்டன்ட் மதம் ஜனங்களினிடையில் முதலில் பரவி, பின்னரே அரசர்களாலும் அநுஷ்டிக்கப்பட்டது. இங்கிலன்டில் அரசர் அந்த மாறுதலைத் துரிதப்படுத்தினர்; ஜனங்கள் அந்த மாறுதலை ஏற்கத் தயாராயிருந்தனர். ஆகவே ஹென்றி நிரம்பவும் திறமையாக, மத்தியஸ்த நிலைமையில் செல்ல முயன்றாராலும், ஜனங்கள் நடுவழியில் நின்று தவிக்க விரும்பாமல் லூதர் முதலியோர் சென்ற வழியையே பின்பற்றி நடந்தனர்.

ஆனாலும், முதன்முதலாகப் பல இங்கிலீஷ் மேதாவிகள் போப்புக்கு சாதகமாக இருந்து ஹென்றியைக் கண்டித்தனர். அது எந்த தேசத்திலும் சாதாரணமாக நடக்கும் விஷயமே. ஒரு புதிய மாறுதல் ஏற்படும்பொழுது, ஒரு கூட்டத்தார் அது அநர்த்தத்தை விளைவிக்குமென்று கூக்குரலிடுவது இயற்கையே; ஆனால் அவர்களுடைய கூக்குரல் செவிடன்காதில் சங்கூதப்பட்டதுபோல

வியர்த்தமாகவே முடியும்; ஏனெனில் நம்மால் அறியமுடியாத மேலான ஒரு சக்தியினுல், சமூகஅமைப்பிலும், மனிதர் சம்பந்தப் பட்டுள்ள மற்ற விஷயங்களிலும், மாறுதல்களும் சீர்திருத்தங்களும் ஏற்படுவதை ஒரு சிலர் தடுப்பதெப்படி? பழையன கழிதலும் புதி யன புகுதலும் பிரகிருதியின் நிரந்தரமானவிதி. அதை எதிர்ப்ப தும் தடுப்பதும் வீண்முயற்சியேயன்றி வேறல்ல. ஸர் தாமஸ் மூர் என்பவர் மதச்சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று வாதாடி வந்தா ராஞலும், போப்பினுடைய அதிகாரத்தை அகற்றியது அவருக்கு சம்மதமாகவில்லே. அவர் அரசரிடம் வகித்துவந்த உத்தியோகத்தி லிருந்து விலகிக்கொண்டு எதையும் காதில் வாங்காமல் தூரப்போய் விடுவது உசிதமானதென்று கருதிப் போய்விட்டார். அதுபோலவே ஜான் பி2ஷர் என்ற மதகுருவும் ஹென்றியின்செய்கையைக் கண்டி த்து வந்தார். எட்டாவது ஹென்றி எந்தக்குற்றத்தையும் பொறுப்பார்; தமக்கு விரோதமாக நடந்துகொள்வோரை மாத்திரம் அவசியம் தண் டித்தே தீருவார் அவர் மூர், பி2ஷர் ஆகிய இருவரையும் அழைத்து, அவர்கள் ஆ/2ன் பொலீனே நியாயமான பட்டமகிஷி என்று ஏற்ப தாகவும், போப்பினுடைய அதிகாரத்தை நிராகரிப்பதாகவும் பிரதிக்ஞை செய்துகொடுக்கும்படி வற்புறுத்தினுர். அவ்விருவரும் மனச்சாட்சிக்கு விரோதமாக நடந்துகொள்ள மறுத்துவிட்ட னர். அதுபோலவே வேறு மதகுருமார்கள் சிலரும் தைரியமாக ஹென்றியை எதிர்த்தனர். சிலர் தமது மனச்சாட்சியை மீறு வதைவிட, சொத்துரிமைகளே இழப்பதே மேலானதென எண்ணி னர். ஹென்றியோ, மூர், பி2ஷர் முதலியோர் அனைவரையும் சிறையி லடைத்து, அவர்கள்மீது இராஜத்துரோகக் குற்றம் சுமத்தி, மரண தண்டனைக்கு உள்ளாக்கிவிட்டார். ஹென்றியினுடைய கடுமை யைக் கண்டு ஜனங்கள் நடுங்கினர். அவர் சர்வாதிகாரமும் படைத்த சிங்கம்போல அரசுபுரிந்தார். ஆனுல் மூர் முதலியோருடைய மதக்கொள்கைகள் சரியானவையோ தவருனவையோ அதைப் பற்றி நமக்கு அக்கரையில்லே. ஆனுல் அவர்கள் தமது கொள்கை களின் பொருட்டு உயிரையும் திரணமாய் மதித்து உறுதியாக நடந்துகொண்டதே என்றும் போற்றத்தக்க சம்பவமாகும்.

ஹென்றி அரசாங்கத்திலும் மதஸ்தாபனத்திலும் தமது சுயேச்சாதிபத்தியத்தைப் பூர்த்தியாக ஸ்தாபிக்க நிச்சயித்துவிட்டார். இப்பொழுது அவருக்கு உடந்தையாக வேலைசெய்ய ஒருவர் அகப்பட்டார். அவருக்கு தாமஸ் க்ராம்வெல் (Thomas Cromwell) என்று பெயர். அவர் இளமைப் பருவத்தில் வெளிநாடுகளில் சென்று வியாபாரம் செய்து தனவந்தராயிருந்தார். உல்ஸி அவரைத் தமக்குக் கீழ் வேலைசெய்ய அமர்த்தியிருந்தார். உல்ஸியின் மரணத்திற்குப் பிறகு அவர் ஹென்றியின் தயவைப்பெற்று அரசாங்கவேலையில் அமர்ந்தார். க்ராம்வெல், ஹென்றியின் மனதிற்குகந்தவர்; அரசர் ஓரடி பாய்ந்தால் அவர் ஒன்பதடிதூரம் பாய்வார். அவர் அரசருடைய மனப்போக்கின்படியெல்லாம் நடந்து அவருடைய ஆசைகளை நிறைவேற்றி வைப்பார். ஹென்றியின் ஆட்சியில் முதற்பகுதியில் உல்ஸி அவருடைய வலதுகையாக இருந்ததைப்போல, பிற்காலத்தில் க்ராம்வெல் அவருக்கு உற்றதுணைவராக இருந்துவந்தார். போப்பின் அதிகாரத்தை அகற்றியதைவிட முக்கியமான பல மாறுதல்களை க்ராம்வெல் செய்துவைத்தார்.

கிரிஸ்துமதம் இங்கிலண்டில் பரவியபின், அநேக மடாலயங்கள் தோன்றியிருந்தன. பழைய காலங்களில் அந்த மடாலயங்கள் ஜனங்களுக்கு எத்தனையோ சௌகரியங்களைச் செய்துவந்தன. அதில் வாழ்ந்துவந்த சன்னியாசிகள் மதப்பிரசாரம், கல்வியபிவிருத்தி, பொதுஜன சேவை முதலிய தருமகாரியங்களில் ஈடுபட்டிருந்தனர். நாளடைவில் மடாலயங்களுக்கு ஏராளமான சொத்துசேர, அதுவே அவைகளைச் சீர்குலைக்கக் காரணமாக இருந்தது. ஜனங்களுக்கு மடாலயங்களில் அக்கரை குறைந்துவந்தது. பின்னர், நூதனமாக எவரும் மடாலயங்களை ஸ்தாபிக்கவில்லை. அதற்குபதிலாக, கலாசாலைகள் முதலியவைபோன்ற பொதுஜன நன்மைக்கான ஸ்தாபனங்களில் பணத்தைச் செலவிட்டனர். மடாலயங்கள் பிரபலம் சிறப்பு திறமை முதலிய அம்சங்களில் க்ஷீணதசையடைந்திருந்தன. ஆனால் அவைகளுக்கு நிலங்களும் சொத்துக்களும் ஏராளமாகச் சேர்ந்திருந்தன. அந்த சொத்துக்களை அநுபவித்துவந்த மதகுருமார்களிற் பலர் அறநெறி தவறி, அதர்மமான மார்க்கங்களில் பிரவர்த்திக்கலாயினர். தேசத்திற்கு அவர்களால் எவ்வித நன்மையும் ஏற்பட

வில்லை. மடாலயங்களின் பழைய நிலைமையும், அப்போதைய ஸ்திதியும் அடியோடு தலைகீழாய் மாறுபட்டுப் போயிருந்தன. எட்டாவது ஹென்றியினுடைய பொக்கிஷம் ஏற்கெனவே யுத்தச் செலவினால் காலியாய்விட்டதாகையால்,மடாலயங்களின்சொத்தைக் கண்டு ஹென்றி பொறாமையும் பேராசையும் கொண்டு அவைகளைத் தனிக்கை செய்யத் தொடங்கினார். ஹென்றியின் அந்தரங்க மந்திரியான க்ராம்வெல் 1535-ல் சிலரை நியமித்து மடாலயங்களின் நிலைமையைப் பரிசோதனை செய்யும்படி ஏற்பாடு செய்தார். அவர்கள்அரசருடைய மனப்போக்கிற்கேற்றபடியே அறிக்கையைவெளியிட்டனர். 1536-ல் ஹென்றியின் விருப்பப்படி, பார்லிமெண்ட் ஒரு சட்டமியற்றி 200 பவுன்களுக்குக் குறைந்தவருஷவருமானமுடைய சிறிய மடாலயங்களை அழித்துவிடவேண்டுமென்று தீர்மானித்தது. அந்தவகையில் அழிக்கப்பட்டசிறியமடங்களின் சொத்துகளெல்லாம் அரசரைச் சேர்ந்துவிட்டன. அவ்வாறு ஹென்றி பழைய மதஸ்தாபனத்தில் ஒரு முக்கிய அங்கமாயிருந்த மடாலயங்களை எடுத்துவிட்டது பலருடைய மனதில் அச்சத்தை உண்டுபண்ணியது. எப்பொழுதும் நிதானபுத்தியோடு நடந்துகொள்ளும் இங்கிலீஷ்காரருக்கு, புரட்சிபோலவிருந்த அந்தப் பெரிய மாறுதலைச் அவர் திடீரென்று செய்தது, ஏதோ அநர்த்தம் விளைந்து விட்டதுபோலத் தோன்றியது. மேலும் ஐரோப்பாக் கண்டத்தில் ஏற்பட்ட அமிதமான புதுக்கொள்கைகள் இங்கிலண்டின் வடபாகத்தில் அவ்வளவாகப் பரவவில்லை. அங்கிருந்த மதகுருமார்கள் பொதுஜனசேவை செய்வதில் அப்பொழுதும் அதிகமாய் ஈடுபட்டிருந்தனர். ஜனங்களும் அவர்களிடம் அதிக அபிமானமும் மரியாதையும் வைத்திருந்தனர். ஆகவே, சிறிய மடாலயங்களை ஹென்றி கொள்ளைகொண்டது அந்த பாகத்து ஜனங்களுக்கு ஆத்திரத்தை யுண்டுபண்ணிவிட்டது. அவர்கள் அந்த அநீதியைப் பொறுதவர்களாய்க் கூட்டம் கூடி ஹென்றியரசரிடம் போய், முறையிட்டுக் கொண்டனர். ஜனங்கள் அவ்வாறு வந்ததற்கு கருணை யாத்திரை (Pilgrimage of grace) என்று பெயர். அதாவது, அந்தக் கூட்டத்தார் அரசரிடம் சென்று முறையிட்டு, அவர் கருணைகூர்ந்து, மடாலயங்களை மீண்டும் பழைய நிலைமையில் வைக்கவும், எல்லா விஷயங்களிலும் புரா

தன முறைகளையே அநுஷ்டிக்கவும் கட்டளையிடுமாறு மன்றாடினர். அரசர் அவர்களது குறைகளை நீக்குவதாக வாக்குறுதி செய்தனுப்பி, கலகக்காரர்கள் அமைதியாகவே கலைந்துபோகும்படி செய்தார். ஆனால், மறுவருஷம் அவர் ஷெ கலகத்திற்கு உத்தரவாதியாயிருந்த தலைவர்களைப் பிடித்து தண்டித்து, இங்கிலண்டின் வடபிரதேசத்தில் சமாதானத்தை நிலைநாட்ட சில உத்தியோகஸ்தர்களை நியமித்து ஜனங்களைக் கடுமையாக நடத்தி அடக்கியாளத் தலைப்பட்டார். 1536-ல் சிறிய மடாலயங்களை அழித்தபின், அவர் இன்னம் அதிக வருமானம் அடையக் கருதி பெரிய மடாலயங்களின் சொத்துக்களையும் அபகரிக்க நிச்சயம் செய்துகொண்டார். மூன்றுவருஷ காலத்திற்குள் அநேகமாக எல்லா மடங்களின் சொத்துக்களும் அரசரைச் சேர்ந்துவிட்டன. மேற்படி சொத்துக்களை பொதுஜன நலத்தின்பொருட்டு செலவிடுவதாகவும், புதிய மடங்களை ஸ்தாபித்து, சேனை, கப்பற்படை முதலியவைகளை பலப்படுத்துவதாகவும் முதலில் கூறிவந்த ஹென்றி, சொத்துக்கள் தமது கைக்கு வந்தபின், அவைகளை சிநேகிதர்களுக்கும் தம்மை யண்டியிருந்தவர்களுக்கும் பிரித்துக்கொடுத்தும், அல்லது, குறைந்த தொகைக்கு ஏலத்திற்குவிட்டும் தாறுமாறுக்கினர். ஹென்றியின் செய்கை பலவிதங்களில் ஜனங்களுக்குத் தீங்கை உண்டுபண்ணியது. மடாலயங்கள் எவ்வளவு தாழ்ந்த நிலைமையை யடைந்திருந்தாலும் சாமானிய ஜனங்கள் தமது பக்திப் பெருக்கினால் அதைப் பொருட் படுத்தாதிருந்து வந்தனர். அவைகள் மறைந்தது அவர்களுக்கு மத உணர்ச்சியே பாழ்த்துப்போனது போலாய்விட்டது. அதுவன்றி இன்னொரு கொடிய பொல்லாங்கும் நேரிட்டது. மடங்களுக்குச் சொந்தமாயிருந்த நிலங்களில் பண்ணையாட்களாக இருந்து உழுது பயிரிட்டு வேலைசெய்து வந்தவர்கள் மதகுருமார்களான எஜமானர்களிடமிருந்து அநேக நன்மைகளை அடைந்து வந்தனர். ஷெ எஜமானர்கள் இயற்கையாகவே சாத்விக குணம் நிறைந்தவர்களாதலால், அவர்கள் தமது பண்ணையாட்களை வருத்தாமல் ஜீவகாருண்யத்தோடு நடத்திவந்தனர். ஆனால் ஹென்றியின் செய்கையால் அந்த நிலங்கள் பிரபுக்களுக்கும் இராஜ சபையைச் சேர்ந்த பிரமுகர்களுக்கும் சொந்தமாகவே, ஷெ புதிய எஜமானர்கள் பண்ணையாட்களைக்குரூரமாக நட-

த்தி அவர்களிடமிருந்து ஏராளமான வரிகளையும் பகுதிப்பணங்களை யும்பிடுங்கலாயினர். மேலும் பண்ணையாட்களின் கஷ்டநிஷ்டூரங்க ளைப்புதிய எஜமானர்கள் பொருட்படுத்தாமல் சுயநலமே கருதிதமது வருமானத்தை அதிகப்படுத்திக்கொள்ளவே முயன்று வந்தனர். மேலும் பழைய மதகுருமார்கள் வழக்கமாக, கிராமத்திலிருந்த ஏழை களுக்குப் பிச்சையிட்டும், நோயாளிகளுக்கு வைத்தியம் செய் வித்தும், ஜனங்களிடம் வாஞ்சையாகவும் நடந்து வந்தனர்; அவைக ளெல்லாம் அடியோடு போயின. அந்த விபரீதமான மாறுபாடு ஜனங்களின் மனத்திற்கு எவ்வளவு அருவருப்பாக இருந்திருக்கு மென்பது கூறாமலே விளங்கும். அவர்களுடைய ஆத்மாவுக்கும் சரீரத்திற்கும் போஷணை யளித்துவந்த மடாதிபதிகளும் மதகுரு மார்களும்அரசரால் நடத்தப்பட்டவிதம்ஜனங்களது மனதில் சொல்ல இயலாத கொதிப்பை யுண்டாக்கியது. ஆனல், அரசருடைய போக்கை அவர்களால் திருப்பமுடியவில்லை. ஹென்றியோ தமது செய்கையால் அநேக சுயநன்மைகளை யடைந்தார். காலியாயிருந்த அவருடைய பொக்கிஷம் நிரம்பியது. மேலும் அவரிடமிருந்து நிலங்களைப் பெற்ற பிரபுக்கள் எப்பொழுதும் அவருக்கு சாதகமாக வும் அடங்கியும் இருக்க ஆரம்பித்தனர். அவர்கள் அரசருக்கு முக் கியமான ஒரு பக்கபலம் ஆயினர். இது நிரம்பவும் முக்கியமான நிகழ் ச்சி.நார்மன பிரபுக்கள்எப்பொழுதும் அரசனை எதிர்த்து,தாங்கள் அர சாங்கத்திற்கு இயற்கையான விரோதிகள் என்று எண்ணிவந்ததை யும், அதனல் உண்டான குழப்பங்களையும் முன்பு பல இடங்களில் விவரித்தோம். ஆனல் ட்யூடர் மன்னரின் அதிருஷ்டவசமாக, அவர்களுக்கு எப்பொழுதும் பணிவாகவே நடந்துகொண்ட ஒரு கூட்டத்தார் இருந்துவந்தனர். ட்யூடர் மன்னர்களின் அரசியல் ஏற்கனவே உறுதியாகவும் அரசருடைய இச்சைப்படியும் நடந்து வந்தது. ஷெ பிரபுக்கூட்டம் அவர்களுக்கு இன்னமும் அதிக பலத்தை யளித்தது. மடங்களின் சொத்தில் ஒரு பாகம் கப்பல் களை உற்பத்தி செய்வதிலும் கடற்கரையோரமாகக் கோட்டைகள் கட்டுவதிலும் செலவிடப்பட்டது.

மடாலயங்களை யழித்ததே, ஹென்றி, பழைய மதத்தைக் காப் பாற்றவேண்டுமென்னும் பற்றுதலில்லாதவர் என்பதைக் காட்டி

யது. மடங்களில் இருந்த விக்கிரகங்கள் உடைக்கப்பட்டதுடன் மற்ற பல சேதங்களும் ஏற்பட்டிருந்தன. ப்ராடெஸ்டன்ட் என்ற புதிய சம்பிரதாயத்தை பகிரங்கமாகப் பின்பற்றியவர்களை அவர் சிக்ஷித்துக்கொண்டே வந்தார்; ஆனால் அதே சமயத்தில் போப்பின் அதிகாரத்தை ஆதரித்தவர்களையும் தண்டனைக்குட்படுத்தினர். இவ்வாறு இருவழிகளிலும் செல்ல இயலாதபடி அவர் ஜனங்களை உபத்திரவித்து வந்தாராலும் ப்ராடேஸ்டன்ட் மதம் இங்கிலண்டில் பரவுவது நிச்சயமாய்விட்டது. முக்கியமதகுரு வேலைபார்த்த க்ரா/2ன்மரும் அரசருடைய அந்தரங்கக் காரியதரிசியாயிருந்த க்ராம் வெலும் புதியமுறையைப் சிறுகச் சிறுகத் தழுவலானார்கள். இங்கிலீஷ் பாஷையில் மொழி பெயர்க்கப்பட்ட பைபிள் புஸ்தகம் ஒவ்வொரு மாதா கோவிலிலும் இருக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. முற்றிலும் புதிய முறையைப் பின்பற்றியவர்களும் பழைய முறையைத் தழுவியவர்களும் ஹென்றியினால் அதிகமாய் உபத்திரவிக்கப்பட்டதனால், அவருடைய கொடுமை சகிக்க இயலாததாயிற்று. தமது விருப்பத்திற்கு மாறாகச் சென்றவர் யாராயிருந்தாலும் அவர் தயை தாக்ஷண்யமின்றி ஒரே அடியில் வீழ்த்தினர். அந்தக்குணம் அரசாங்க விஷயங்களில் மாத்திரமன்றி, அவருடைய குடும்ப வியவகாரங்களிலும் தலையெடுத்து நிறைந்திருந்தது. அவர் ஆ/2ன் பொலீன் என்பவள்மீது மோகம்கொண்டு, அவள் பொருட்டு அரும்பாடுபட்டுத் தமது முதல் மனைவியை விலக்கினர். ஆனால் 'மோகம் முப்பது நாள்' என்பதற்கிணங்க வெகு சீக்கிரத்தில் அவருக்கு ஆ/2ன் பொலீன்மீதிருந்த ஆசைகுறைந்து போய்விட்டது. மேலும் அவர் எதிர்பார்த்தபடி அவளிடம் புத்திர பாக்கியமும் ஏற்படவில்லை. ஜேன் ஸேய்மூர் (Jane Seymoore) என்ற இன்னொரு ஸ்திரீயின்மீது அவருக்குக் காதலேற்பட்டது, அவள் அதிக அழகானவளுமன்று, ஆனால் லலிதமான குணவொழுக்கமுடையவள். அவளை யடைய ஹென்றி மன்னர் கருத்துக் கொண்டார். ஆ/2ன்பொலின் பகிரங்கமான விபசார நடத்தையில் இறங்கி விட்டாள் என்ற குற்றத்திற்காக அவள் தூக்கிலிடப்பட்டு உயிர் துறந்தாள். மறுதினமே அரசர் புதிய மோகனுங்கியான ஸெய்மூர் என்பவளை மணந்துகொண்டார். 1537-ல் அவள் ஓர் ஆண்மகவை ஈன்றது ஜனங்களெல்லோருக்கும் மகிழ்ச்சி யளித்தது.

ஆனால் மதசம்பந்தமாக ஏற்பட்ட மாறுதல்கள் அடிக்கடி நாட்டில் குழப்பத்தை யுண்டுபண்ணிக் கொண்டே இருந்தன. அரசருடைய சுயேச்சாதிபத்தியமோ வரவர அதிகரித்துக்கொண்டு போயிற்று. 1539-ல் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்மூலம் அரசருடைய சாதாரண அறிக்கைகள்கூட, சட்டங்களுக்குள்ள மதிப்பையும் அந்தஸ்தையும் பெற்றன. அதாவது பார்லிமெண்ட் சபைக்கிருந்த சட்ட மியற்றுவதான விசேஷ உரிமை அரசரிடம் சென்றுவிட்டது. அதே சமயத்தில் ஹென்றி இன்னொரு முக்கியமான சட்டத்தையும் இயற்றி பழைய மதத்தினருக்கு ஓரளவு நன்மை புரிந்தார். ஏற்கெனவே செய்த மாறுதல்கள் ஜனங்களுக்குள் கிளர்ச்சியை உண்டாக்கிக்கொண்டு வந்ததைக் கருதியும், அவருக்கே உண்மையில் புதிய ப்ராடெஸ்டன்ட் மதத்தினிடம் பற்றுதல் இல்லாமையாலும், 'ஆறு விதிகளடங்கிய சட்டம்' (Six Articles statute) என்று ஒரு சட்டமியற்றி அதில் பழைய முறையில் மதஸ்தாபனத்தில் அநுஷ்டிக்கப்பட்டு வந்த ஆறு முக்கியமான கொள்கைகள் அழியாதிருக்கும்படி வற்புறுத்தினார். அந்தச் சட்டத்தைக் கண்ட ப்ராடெஸ்டன்ட் மதாபிமானிகள் அதை "ஆறு கயிறுகள் கொண்ட சவுக்கு" என்று குறித்தனர். ஆனால் ஹென்றியின் உள்கருத்தோ, போப்பின் ஆதிபத்யம் மறைந்ததொன்றைத் தவிர மற்ற முக்கியமான அம்சங்களில் பழைய மதமே நிலைத்து நிற்கவேண்டுமென்பதேயன்றி வேறல்ல.

அரசருடைய முக்கிய உத்தியோகஸ்தராயும் அவரது வலது கைபோலவும் இருந்துவந்த க்ராம்வெல் புதிய மத சம்பிரதாயத்தில் பற்றுதலுள்ளவராதலால், அவருக்கும் ஹென்றிக்கும் இருந்த அன்னியோன்னியத் தன்மை குறையத் தொடங்கியது; பழைய நட்பை மீண்டும் பெற, க்ராம்வெல் முயற்சி செய்து வந்தார். உல்ஸியின் காலத்திற்குப் பிறகு, அவர் அன்னியதேச வியவகாரங்களில் அதிகமாய்த் தலையிடவில்லை. இங்கிலண்டில் நடந்த மத மாறுதல்களே அவருடைய மனதைக் கவர்ந்தன. ஆனால் அவ்விதம் தனிப்பட்டு நிற்பது அபாயத்திற் கிடமாகும் என்று நினைத்த க்ராம்வெல் ஒரு யோசனை கூறினார்; அதாவது வட ஜெர்மன் தேசத்தில் இருந்த சிற்றரசர்களுடன் நட்பை உண்டாக்கிக் கொள்ளவேண்டு

மென்றும், அதற்கநுசரணையாக, க்ளீவ்ஸ் என்ற பிரதேசத்தைச் சேர்ந்த ஆ/2ன் (Anne of Cleves) என்ற ஸ்திரீயை நான்காவது தாரமாகக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானம் செய்தார். அப்பொழுது அவரது மூன்ருவது தாரமான ஸெய்மூர் இறந்து போய் விட்டாளென்பதை நாம் இவ்விடத்தில் குறிப்பிடுவதவசியம். மேற்படி ஆ/2ன் என்பவளின் உறவினர் புதியமதத்தில் பற்றுதலுள்ளவர்களாதலால், ஹென்றிக்கும் அந்த விவாகத்தின்மூலம் புதிய மதத்தில் ஊக்கமுண்டாகுமென்பது க்ராம்வெலின் கருத்து. ஹென்றியும் அதற்கிணங்கி அவளை மணந்துகொள்ள ஒப்புக்கொண்டார். ஆனல் அந்த ஸ்திரீயை நேரில் கண்டு பழகியபோது, அவள், க்ராம்வெல் கூறியபடி, அவ்வளவு அழகும் அறிவும் ஆற்றலும் பெற்றிராததை அறிந்த ஹென்றிக்கு, நான்காவது மனைவிமீதும் வெறுப்புத்தோன்றியது. அவளையும் அகற்றிவிட வழிதேடலானர். ஆனல் அவருடைய கடுஞ்சினம் முழுவதும் க்ராம்வெலின் தலைக்குவந்துவிடிந்தது. வடஜெர்மனியில் இருந்த சிற்றரசர்களும் ஹென்றியுடன் சேர்ந்து கொள்ளாதது அரசருடைய கோபத்தை இன்னும் அதிகப்படுத்தியது. ஹென்றியின் கோபத்திற்கு ஆளானவர் எவ்வித முடிவை யடைவரென்பதைக் கூறவேண்டுமா? க்ராம்வெல்மீது இராஜ துரோகக் குற்றம் சாட்டி, பார்லிமென்ட் சபையும் அவர்மீது பழி சுமத்தும்படி செய்து 1540-ல் அரசர் அவரை மரணதண்டனைக்குட்படுத்தி விட்டார். சுமார் பத்து வருஷ காலத்திற்கு முன் உல்ஸி யும், அது போலவே வீழ்த்தப்பட்டார்; ஆனல், உல்ஸி கொலையாளிகளின் வாளுக்கு இரையாகாமல், இயற்கையான மரணத்தை அடைந்தது அவர் செய்த தவப்பயன். உல்ஸியின் சிஷ்யர்போலவே நடந்து வந்த க்ராம்வெல், தமது குருவைப்போல சிறிது காலம் ஹென்றியுடன் மிகவும் அன்னியோன்னியமாகப் பழகி இருந்து, பிறகுஅவருடைய கோபாக்கினிக்கு இரையானர். ஆனல்,ஹென்றிக்கு மனிதருடைய உயிர் ஒரு பொருட்டே யல்ல. ஆ/2ன் ெபாலீனக் கொன்ற மறுதினமே அவர் மூன்ருவது மனைவியை மணந்தார்; இப்பொழுது க்ராம்வெல் மடிந்த அன்றையதினமே கா/2தரைன் ஹோவார்ட் என்னும் ஸ்திரீயை ஐந்தாவது தாரமாக மணந்துகொண்டார். அவ்வாறு ஜீவகாருண்யம், இரக்கம் முதலி

யவை சிறிதுமற்ற ஹிருதயத்தினராய், தமக்கு ஆகாத மனிதர் எவராலும், பேதாபேதமின்றி வீழ்த்திவந்த மகாதுஷ்டரான அரசரைக் கண்டு அந்த நாடே நடுங்கிப் போய்விட்டது.

1540-ல் க்ராம்வெல் மடிந்ததோடு, ஹென்றி யாசரது ஆட்சியின் இரண்டாவது அத்தியாயம் முடிவடைந்ததாகக் கூறலாம். அதன் பிறகு அவர் ஏழுவருஷ காலம் அரசாட்சிபுரிந்து வந்தார். ஆனால், அதற்குள் அவர் புது மத சம்பிரதாயத்தின் போக்கைத் தடுத்து, பழைய வழிகளிலேயே அதைத் திருப்பிவிட்டார். முன்பே கூறியபடி அவருக்கு லூதர் முதலியவர்களைப் போல மத ஆவேசம் தோன்றியதனால், அவர் போப்பின் ஆதிபத்யத்தை மீறவில்லை. அப்படி மீறியதோடு மாத்திரம் அவர் நின்றுவிட்டார். அதற்கு மேல் செல்ல அவர் விரும்பவில்லை. ப்ராடெஸ்டன்ட் மதத்தைப் பின்பற்றியோரில் அநந்தமானவர்கள் அவரால் இளக்காரப்படுத்தப்பட்டு வதைபட்டு சீர்குலைந்து போயினர். அப்படி இருந்தும், அவரை மீறி புதிய மதம் சிறகச் சிறக வேரூன்றிக் கொண்டே வந்தது.

(4) **ஹென்றியின் அந்திய காலம்:**—எட்டாவது ஹென்றியின் கடைசிக் காலத்தில் அவர் சில யுத்தங்களை நடத்த வேண்டியதாயிற்று. ஸ்காட்லன்டு தேசத்தினர் இங்கிலண்டுக்குப் பரம்பரையாகவே எதிரிகளாய் இருந்து வந்தவர்கள். மேலும் ப்ரெஞ்சுக்காருடைய கட்சியைத் தாங்கியும், போப்பிற்கு சாதகமாகவும், 1542-45-ல் போர் புரிந்துவந்தனர். ஆனால் ஹென்றி அவர்களை சுலபமாக வென்றுவிட்டார். அதே சமயத்தில் அவர் ஆஸ்ட்ரியா—ஸ்பெயின் சக்கரவர்த்தியான ச்சார்லஸுடன் சேர்ந்துகொண்டு ப்ரெஞ்சுமன்னரை எதிர்த்தார். ப்ரெஞ்சு தேசத்துக் கப்பற் படையொன்று இங்கிலண்டை எதிர்க்கமுயன்றது பயன்படாமல் போயிற்று. இங்கிலீஷ் சேனைக்கு அதில் சொற்ப வெற்றி கிடைத்தது. ஹென்றியின் காலத்தில் வேல்ஸ் மாகாணம் இங்கிலண்டுடன் ஒன்று சேர்க்கப்பட்டது. முதல் எட்வர்டு அரசர் லெவ்லின் என்னும் தலைவரை வென்றபின், வேல்ஸ் மாகாணம் இங்கிலீஷ் மன்னருக்குக் கீழ்ப்படிந்து பராதீனப்பட்ட தேசம் போல்

இருந்தது. ஏழாவது ஹென்றியின் முன்னோர்கள் வேல்ஸ் இனத்தைச் சேர்ந்தவர்களாதலால், வெல்ஷ்காரர்கள் ட்யூடர் மன்னர்களிடம் பற்றுதல் கொண்டிருந்தனர். எட்டாவது ஹென்றி அந்த மாகாணத்தைத் திருத்தியமைத்து, அதற்கும் பார்லிமென்ட் சபையில் பிரதிநிதித்துவம் அளித்தார். இங்கிலீஷ் சட்டங்களே அங்கும் பிரயோகமாயின. பழைய காலத்தில் இங்கிலீஷ் மன்னருக்கு இடுக்கண் இழைத்து துன்பமியற்றி வந்த வேல்ஸ் கடைசியில் இங்கிலண்டின் ஒரு பகுதி ஆய்விட்டது.

அதுபோலவே, அயர்லன்டு சம்பந்தமாகவும் ஹென்றியின் காலத்தில் முக்கிய மாறுதல்கள் நிகழ்ந்தன. இங்கிலண்ட், ஸ்காட்லன்ட், அயர்லன்ட் ஆகிய மூன்றிற்கும் மன்னர் ஆகவேண்டுமென்பது அவரது ஆசை. ஸ்காட்லன்டில் அவரது முயற்சி பலிதமடையவில்லை. அயர்லன்டில் அவரது தந்தையின் காலத்திலிருந்த பாய்னிங் என்பவரது செய்கைகளை முன்னோதிகாரத்தில் விவரித்தோம். அதாவது, சில நார்மன் பிரபுக்கள்—முக்கியமாக, கில்டேர் பிரபுவின் குலத்தினர்—அங்கு சுயேச்சையாக இருந்து வந்தனர். 1535-ல் அவர்கள் கிளர்ச்சி செய்ய முயன்று, ஹென்றியால் அடக்கப்பட்டனர். அதன்பிறகு, ஹென்றி நயத்தாலும் பயத்தாலும் அவர்களைத் தமது வசப்படுத்த முயன்றார். அதுவரையில் இங்கிலீஷ் மன்னர்கள் தம்மை "அயர்லன்டின் அதிபதி" (Lord of Ireland) என்றழைத்துக் கொண்டனர். எட்டாவது ஹென்றி "அயர்லன்டின் அரசர்" என்ற பட்டப் பெயரை வகித்துக்கொண்டார். ஆனால் அவரது காலத்திலும் அயர்லன்ட் தேசம் உண்மையில் சுயேச்சையாகவே இருந்து வந்தது. அவரது சந்ததியார்கள் அந்த தேசத்தை மீண்டும் அடக்கி அதைத் தமது ஆதிக்கத்திற்குட் படுத்துவது அவசியமாயிருந்தது.

ஹென்றியின் ஐந்தாவது மனைவியான காதரைன் ஹோவர்ட் என்பவளும் 1542-ல் விபசார தோஷம் செய்ததற்காக மரண தண்டனைக்குட்படுத்தப் பட்டாள். கடைசியாக காதரைன் பார் (Catherine Parr) என்ற வேறொரு யௌவன விதவையை அவர் ஆறாவது மனைவியாக ஏற்றுக் கொண்டார். அந்த ஸ்திரீ

கிரம்பவும் ஜாக்கிரதையாக நடந்துகொண்டு ஹென்றியின் கோபத்திற்கு இலக்காகாமல் தப்பித்திருந்தாள். ஆறு மனைவிகளை அடைந்த ஹென்றி அவர்களில் நால்வரைக் குரூரமாக நடத்திக்கொன்றோ, அல்லது நீக்கியோ விட்டார். மூன்றாவது மனைவி தானாக மடிந்தாள். ஆறாவது மனைவி அவருடன் சிலவருஷ காலம் வாழ்ந்திருந்தாள். 1547 ல் எட்டாவது ஹென்றியே மரணமடைந்து விட்டார். அவருக்கு, மூன்றாவது மனைவியான ஜேன் ஸெய்மூர் என்பவள் மூலம் எட்வர்ட் என்ற குமாரனும், முதல் இரண்டாவது மனைவிகளிடம் முறையே, மேரி, எலிஸபெத் என்ற புத்திரிகளும் ஜனித்திருந்தனர்.

எட்டாவது ஹென்றியின் ஆட்சி பலவிதங்களில் முக்கியமானதென்றே கருதவேண்டும். முதலாக, ஹென்றியின் அரசியல் திறமையும், அவரது சாமர்த்தியமும், தாம் நினைத்த காரியத்தைச் செய்துமுடிக்கும் வல்லமையும், அவருக்கு அமைந்த மந்திரிமார்களின் ஆற்றலும் ஆகிய யாவும் ஒன்றாக அவருடைய ஆட்சியை அபாரமாய் சோபிக்கச்செய்தன. இரண்டாவதாக, அவரது காலத்தில் இங்கிலண்டில் நடந்த மாறுதல்கள் அநேகம். அவை தேசசரித்திரத்தின் போக்கையும் பொது ஜனங்களின் வாழ்க்கையையும் பெரும்பாலும் பாதித்தன. அவைகளின் பலன்கள் நீண்டகாலம் வரையில் இங்கிலண்டின் சரித்திரத்தில் பிரதிபலித்தன. முதல் ட்யூடர் மன்னரான ஏழாவது ஹென்றி ஆரம்பித்த காரியத்தை அவரது குமாரர் பக்குவப்படுத்தி வைத்தார். இங்கிலண்ட் தேசம் நெடுநாளாக வேண்டிநின்ற அமைதியைப் பெற்றது; ஆனால் அந்த நன்மையைப் பெறும் பொருட்டு இங்கிலீஷ்காரர்கள் செய்ய வேண்டியிருந்த தியாகமும், அவர்கள் உட்படுத்தப்பட்ட தயை தாக்ஷண்யமில்லாத ஆட்சியின் உறுதியும் அபாரமாயிருந்தன.

---

# 26-வது அதிகாரம்

## ஆருவது எட்வர்ட்.

(1) மதமாறுதலின் அபிவிருத்தி: ஸாமர்ஸேட் பிரபுவின் நிர்வாகம்:--1547-ல் முடிசூடிய எட்வர்ட் பத்துவயதே நிறைந்த பாலகராய் இருந்தார். அதைக் கருதி, எட்டாவது ஹென்றி, சில பிரமுகர்கள் அடங்கிய ஒரு சிறுசபையை அரசியல் நிர்வாகம் நடத்தும்படி நியமித்திருந்தார். அந்தச் சபையில் ஹென்றி, பழைய முறையைப் பின்பற்றியவர்களையும், புதிய முறையில் ஆர்வம் கொண்டவரையும் சமமாகச் சேர்த்திருந்தார். அப்படிச் செய்தால், தமது பிள்ளையின் இளமைப்பருவம் நீங்கி, அவரே இராஜ்ஜிய நிர்வாகம் செய்யத்தொடங்கும் வரையில், விசேஷ மாறுதல்கள் ஏற்படாதிருக்குமென்பது அவரது நோக்கம். ஆனல் அந்த எண்ணம் பலிதமாகவில்லை; புதிய முறையைத் தழுவியவர்களே மேலோங்கிவிட்டனர். ஸாமர்ஸேட் பிரபு (Somerset) என்பவர் அந்த நிர்வாக சபைக்குத் தலைவராய், ஏறக்குறைய பூர்ண அதிகாரத்தைப் பெற்றிருந்தார். ஸாமர்ஸெட் பிரபு அரசகுலத்திற்கு நெருங்கிய உறவினராயிருந்ததன்றி, உண்மையாக உழைக்கவும் கூடியவர். அவருடைய நற்குணங்கள் எல்லோருக்கும் திருப்தியையளித்தன. அவருக்கு இரண்டு ஆசைகள் ஏற்பட்டிருந்தன. ஒன்று எட்டாவது ஹென்றி அறைகுறையாகச் செய்துவிட்டிருந்த சீர்திருத்தங்களைப் பூர்த்திசெய்விக்க வேண்டுமென்பது; மற்றொன்று ஹென்றியின் வழியைப் பின்பற்றி அன்னிய நாடுகளுடன் அன்னியோன்னியமாயிருக்க வேண்டுமென்பது. ஆனல் அவரிடம், போதிய வல்லமை இல்லாமையால் இரண்டிலும் அவர் தவறிவிட்டார். அவர் பல வேலைகளை ஒரே சமயத்தில் கவனிக்கத் தொடங்கினாதலால், அவரால் எதையும் செய்து முடிக்கக்கூடவில்லை. அவர் மூன்று வருஷகாலம் நிர்வாகம் நடத்தினர். அவருடைய எண்ணத்தில் தவறு ஒன்றுமில்லையானலும், காரியத்தில் அவர் எம்முயற்சியிலும் வெற்றிபெறவில்லை.

எட்டாவது ஹென்றி ஸ்காட்லன்ஃட், ப்ரான்ஸ் ஆகிய இரண்டு தேசங்களுடனும் சண்டையிட்டுப் பார்த்துக் கடைசியில் சமாதானம் செய்துகொண்டார். அவ்வளவு உறுதியான மன்னரால் சாதிக்க இயலாத காரியம், ஸாமர்ஸெட் பிரபு எவ்வளவு பாடுபட்டாலும் கைகூடப் போகிறதா? ஆனல் 1547-ம் வருஷத்திலேயே அவர் ஸ்காட்லன்ஃடுடன் சண்டையிட நேர்ந்தது. ஸ்காட்லன்ஃடில் இருந்த சில ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் அந்த அரசாங்கத்தாரால் குரூரமாக நடத்தப்பட்டு, இங்ஙிலீஷ்காரரை உதவிக்கழைத்தனர். இன்னொரு முக்கிய காரணமும் இருந்தது. அப்பொழுது ஸ்காட்லன்ஃடின் ஆட்சி ஒரு யௌவன அரசியின் வசத்திலிருந்தது. அவளுக்கு சரித்திரத்தில் ஸ்காட்டுகளின் இராணி மேரி (Mary Queen of Scots) என்று பெயர் வழங்கும். எட்டாவது ஹென்றி ஒரு யோசனை செய்திருந்தார்; அந்த அரசியைத் தமது புத்திரருக்கு விவாகம் செய்துவைத்தால் இரண்டு தேசமும் ஒரு குடையின்கீழ் வருமென்று நினைத்தார். அதுபோலவே நெடுங்காலத்திற்குமுன் எஃட்வர்ஃட் செய்ய எத்தனித்தது நிறைவேருமற்போன விஷயம் ஞாபகமிருக்கும். அந்த யுக்தி நல்லதுதான். எட்டாவது ஹென்றி இறந்துவிட்டபின்னும் ஸாமர்ஸெட் பிரபு அதை நிறைவேற்ற எண்ணியதிலும் தவறு ஒன்றுமில்லை: அது இராஜ தந்திரிகளின் ஆழ்ந்த யோசனையையே காட்டும். ஆனல் இன்னொரு விஷயத்தில் ஸாமர்ஸெட் பிரபு அவசரப்பட்டுக் காரியங்களைச் செய்துவிட்டார்; அவரிடம் உதவியைக் கோரிய ப்ராடெஸ்டன்ட் மதத்தினரைக் காப்பாற்றும்பொருட்டு அவர் ஸ்காட்லன்ஃடின்மீது படையெடுத்துச் சென்றார். பிங்கி (Pinkie) என்ற இடத்தில் போர் நடந்தது. ஸ்காட் சேனை தோற்று ஓடியது; நெருப்பு வைத்தும் கத்தியால் வெட்டியும் இங்ஙிலீஷ் வீரர்கள் பகைவரது நாட்டைக் கொள்ளையிட்டுப் பாழ்படுத்தினர். ஆனல் யுத்தத்தில் வெற்றியடைந்த ஸாமர்ஸெட் பிரபுவின் நோக்கம் நிறைவேறவில்லை. ஸ்காட் ஜனங்கள் தமது அரசியை இங்ஙிலீஷ் மன்னருக்கு விவாகம் செய்விக்க எற்கனவே விரும்பவில்லை. அந்த யுத்தம் அவர்களது தீர்மானத்தை மேலும் பலப்படுத்த, அவர்கள் தங்கள் இராணி மேரியைக் கப்பலிலேற்றி ப்ரான்ஸ தேசத்திற்கு அனுப்பிவிட்டனர். அங்கு

அவள் ப்ரெஞ்சுதேச முறைகளில் பயிற்றுவிக்கப்பட்டாள். அவளை மறுபடியும் நாம் சிலவருஷங்களுக்குப்பின் இதே சரித்திரத்தில் சந்திக்கநேரிடும். ஸாமர்ஸெட் அவசரப்பட்டுச் செய்த காரியத்தினல் இங்கிலீஷ்காரரும் ஸ்காட் இனத்தாரும் ஒருவரிடத்தொருவர் கொண்டிருந்த விரோத உணர்ச்சி அதிகமாயிற்று. மேலும் எப்பொழுதும்போல, ஸ்காட் ஜனங்களை ஆதரித்து ப்ரெஞ்சுக்காரர் இங்கிலீஷ்காரரை எதிர்த்தனர். இங்கிலண்ட் தேசமே அதில் தோல்வியுற்றது.

வெளிநாட்டு வியவகாரங்கள் இவ்வளவு அழகாக முடிந்தாலும், ஸாமர்ஸெட்பிரபு இங்கிலண்டில் ப்ராடெஸ்டன்ட் மதத்தைப் பரப்பி, லூதர் முதலிய ஜெர்மன் தேசத்தாரை எவ்விதத்திலும் பின்பற்ற முயன்றுவந்தார். பழைய மதசம்பிரதாயப்படி கிரிஸ்தவர்கள் பல விக்கிரகங்களையும் வேறு சின்னங்களையும் போற்றியும் ஆராதித்தும் வந்தனர்; புதிய சம்பிரதாயப்படி அவைகள் எல்லாம் பைத்தியக்காரச் செய்கைகளாய்க் கருதப்பட்டன. ஸாமர்ஸெட் பிரபு புதிய முறையைத் தழுவி, அத்தகைய விக்கிரகங்கள், சின்னங்கள், பதுமைகள் ஆகியவைகளை உடைத்தெறியும்படி ஆக்ஞாபித்தார். இங்கு ஒரு விஷயத்தை கவனிக்கவேண்டும். இப்பொழுது உலகில் மதக்கலகம் அவ்வளவு அதிகமாகக் கிடையாது; அது ஏற்பட்டாலும், இரத்த வெள்ளத்தில் போய்முடிவதில்லை. வெவ்வேறு மதத்தைப் பின்பற்றுபவர்கள்—ஆஸ்திகர்களும் நாஸ்திகர்களும்கூட—இப்பொழுது தமக்குள்ள மத வேற்றுமைகளைப்பற்றி சச்சரவிட்டுக் கொள்வதில்லை. ஆனல் 16, 17-வது நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் மத சம்பந்தமாக அபிப்பிராய வேற்றுமையுடையவர்கள் ஒருவர் தலையை மற்றவர் வெட்டி விடுவதற்கே சமயம் பார்த்துக்கொண் டிருந்தனர். ப்ராடெஸ்டன்ட், கா2தலிக் ஆகிய இரண்டு முறைகளைப் பின்பற்றியவர்களும் எப்பொழுதும் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக் கொண்டே யிருந்தனர். ஐரோப்பாவில் நடந்த மதச்சண்டைகள் எண்ணிலடங்கா. ஸாமர்ஸெட் பிரபு புதியமுறையைச் சேர்ந்தவராதலால், பழைய முறையைப் பின்பற்றியவர்களை அவர் தயைதாக்ஷிண்யமின்றி தண்டித்து வந்தது, அக்காலத்தில் ஆச்சரியமாகத் தோன்றிராது. பார்லிமென்ட் சபையும் அவருக்கு அநுகூலமாகவே இருந்

தது. எட்டாவது ஹென்றி இயற்றிய ஆறு விதிகளடங்கிய சட்டம் முதலியவை தள்ளுபடி செய்யப்பட்டுப்போயின. ஹென்றியோ இரண்டு கோடிகளையும் விட்டு நடுமத்தியில் சென்றவர். அது ஸாமர்ஸெட் பிரபுவிற்கு சரிப்படவில்லை. காதலிக் மதக்கொள்கையின்படி மதகுருமார்கள் மணந்து கொள்ளக்கூடாது; அதாவது, கடவுளுடைய உபாஸனையிலேயே காலம்கழிக்கவேண்டியவர்களுக்கு சிற்றின்ப நாட்டமே கூடாது என்பது அதன் நோக்கம். ஆனால் நாளடைவில் மதகுருவேலை பார்த்தவர்கள் எல்லோரும் உண்மையான வைராக்கிய புத்தியற்றிருந்தமையால் அந்த முறை இரகசியத்தில் பல அக்கிரமங்கள் நடக்க இடமுண்டுபண்ணியது. ப்ராடெஸ்டன்ட் முறையின்படி மதகுருமார்கள் மணந்து கொள்ளலாம்; அதாவது, இல்லறவாழ்க்கையி லிருந்துகொண்டே மனிதர்கள் தூய்மையாக இருக்கலாமென்பது அதனுடைய கருத்து. அதை யநுசரித்து ஸாமர்ஸெட்பிரபு, மதகுருமார்கள் விவாகம் செய்துகொள்ள அநுமதியளித்தார். எட்டாவது ஹென்றியின் கைக்கு அகப்படாமல் எஞ்சிநின்ற மடாலயங்களையும் ஸாமர்ஸெட் கொள்ளையிட்டுவிட்டார். கொள்ளையில் அவருக்கு ஒரு பெரும்பாகம் கிடைத்தது. இன்னொரு முக்கிய மாறுதலையும் ஸாமர்ஸெட் செய்தார். அவரது காலம் வரையில் இங்கிலண்டில் மாதாகோவில்களில் பூஜை, உபதேசம் முதலியவை லாடினின் பாஷையில் நடந்துவந்தன; அதாவது, சாதாரண ஜனங்களுக்கு அர்த்தமாகாத வேறுதேசத்து பாஷையில் நடைபெற்றன. இப்பொழுது அதுபோக, இங்கிலீஷ் பாஷையிலேயே யாவும் நடைபெறும் வழக்கம் ஆரம்பமாயிற்று. 1549-ம் வருஷத்தில் பிரார்த்தனைப் புஸ்தகம் ஒன்று இங்கிலீஷ் பாஷையில் வெளியாயிற்று. லாடினின் பாஷையில் செய்துவந்த பூஜை முறையை மிகவும் ஜாக்கிரதையாகப் பின்பற்றி, அர்த்தம், கருத்து முதலியவை குன்றாமல் நிரம்பவும் அழகாகவே அந்த நூல் எழுதப்பட்டிருந்தது. பல பழைய சடங்குகளும் விதிகளும் அதிகமாக மாற்றப்படாமல், தெளிவாகவும், சுலபமான வழியிலும் விளக்கப்பட்டிருந்தன. ஏனெனில், மத விஷயங்களில் புதிய மாறுதலை உண்டுபண்ணுவதென்பது மிகவும் கடினமான விஷயம். ஜனங்களுடைய மனம் புதிய முறையில் சீக்கிரத்தில் பற்றுதல்கொள்ளாது. 1549-ல்

'சமரீதிச் சட்டம்' (Act of Uniformity) என்று ஒரு சட்டமியற்றி, புதிய பிரார்த்தனைப் புஸ்தகத்தை தேசம் முழுதும் பின்பற்றவும், மத காரியம் எங்கும் ஒரேமாதிரியாக இங்கிலீஷிலேயே நடைபெறவும் செய்தார்.

ஆனால் மேலே கூறியபடி பொதுஜனங்கள்—அதிலும் இங்கிலீஷ்காரர்—மத மாறுதல்களை முதலிலிருந்தே வெறுத்துவந்தனர். பழைய முறைப்படி லாட்டின் பாஷையிலேயே யாவும் நடக்க வேண்டுமென்று அவர்கள் கிளர்ச்சி செய்தனர். ஸாமர்ஸெட் பிரபு இராஜ்ஜிய நிர்வாகம் நடத்துவது சடினமாய்விட்டது. அவருடைய சகாக்களே அவருக்கு விரோதமாக நடந்துகொண்டனர். எட்டாவது ஹென்றியிடம் அடங்கிக்கிடந்த பலர் ஸாமர்ஸெட் பிரபுவை எதிர்ப்பது சுலபமான காரியமெனக் கண்டுகொண்டனர். எனவே பிரபுக்கள் ஒரு புறத்திலும், பொதுமக்கள் ஒரு புறத்திலுமாக அவரை வருத்திவந்தனர். இங்கிலண்டின் தென் பிரதேசத்தில் ஸாமர்ஸெட் பிரபு செய்த மதமாறுதல்களைக் காரணமாகக்கொண்டு அவரை எதிர்த்தனர். வடபிரதேசத்தில் ஜனங்கள் பொருளாதார சம்பந்தமான இடர்களை முன்னிட்டுக் கிளர்ச்சிசெய்தனர். எட்டாவது ஹென்றியிடமிருந்து மடங்களுக்குச் சொந்தமாயிருந்த நிலங்களைப்பெற்ற பிரபுக்கள் ஜனங்களைக் கொடுமையாக நடத்தினர். பண்ணையாட்களும் மற்ற குடியானவர்களும் அந்த நிலைமையை சகிக்கமாட்டாதவராய் கேட் (Ket) என்ற தலைவருக்குக்கீழ் ஒன்றுகூடி, கலகம்செய்து, 1549-ல் அரசருடைய சேனையைக்கூடத் தோற்கடித்துவிட்டனர். ஸாமர்ஸெட் பிரபுவோ உண்மையில் அவர்களுக்கு ஏதேனும் நன்மை செய்யவேண்டுமென்று ஆசைகொண் டிருந்தாராலும், அப்படிச் செய்து முடிக்கும் சக்தி அவரிடம் இல்லை. அந்தக் கிளர்ச்சிக்காரரை அவர் அடக்கமுடியாத காரணத்தால், ஸாமர்ஸெட் பிரபு தமது உத்தியோகத்தை இழந்தார்; இராஜ்ஜிய நிர்வாகம் அவரது கையிலிருந்து நழுவிவிட்டது. அவர் சிறிதுகாலம் சிறைவாஸமும் செய்தார். ஆனால் விஷப்பல்லை இழந்த ஸர்ப்பம்போல அவரால் ஒன்றும் செய்யமுடியாது என்பது தெரிந்தபின் அவர் சிறையிலிருந்து மீட்கப்பட்டார்.

(2) **எட்வர்டின் ஆட்சியும் அந்தியகாலமும்:**—எட்டாவது ஹென்றி இறந்தபோது தமது சிறுபிராயத்துப் பிள்ளைக்கு உதவியாக இராஜ்ஜிய பரிபாலனம் செய்யும்பொருட்டு ஒருசிறியசபையை நியமித்திருந்தாரல்லவா? அந்தச் சபைக்கு அக்கிராசனாதிபதிபோல விருந்த ஸாமர்ஸெட் பிரபு மூன்றுவருஷகாலம் தமது சுய யோசனைப்படியே நிர்வாகம் நடத்திவந்தார். மேலே கூறியவாறு அவர் வீழ்ச்சியடைந்ததும், அந்தச் சபையினர் கூட்டாக இருந்து நிர்வாகம் நடத்த முயற்சித்தனர். ஆனால் எல்லோரும் மொத்தத்தில் பொறுப் பேற்றுக்கொண்டதில் ஒவ்வொருவருக்கும் தனியான பொறுப்பு இல்லாமல்போயிற்று. உறுதியான ஆட்சியை நடத்திச் செல்வதற்கு எட்டாவது ஹென்றியை யொத்த ஒருவர் தேவையாயிருந்தது. அந்தக் குழப்பத்தில் வார்விக் பிரபு என்பவர் முக்கிய அதிகாரத்தை வகிக்கலானார். அவர் ஏழாவது ஹென்றிக்கு மந்திரியாயிருந்த டட்லி என்பவருடைய குமாரர். அவர் யுத்தப்பயிற்சியில் கைதேர்ந்தவர்; மதச்சீர்திருத்தம் செய்வதில் அதிக ஊக்கம்கொண்டவர்; ஸாமர்ஸெட் பிரபு செய்த மாறுதல்கள் அற்பமேயென்றும் அவர் ஆரம்பித்த காரியத்தை முடித்துவிட வேண்டுமென்றும் எண்ணியிருந்தவர். அவருக்கு அநுகூலமாக அன்னிய நாட்டுச் சீர்திருத்தக்காரர்கள் பலரும் அப்பொழுது இங்கிலண்டில் வந்து குடியேறினார்கள். ஐரோப்பாவில் சில அரசர்கள் பழைய மதத்தைப் பின்பற்றி, புதிய மதத்தினரைக் கொடுமையாக நடத்தி வந்தனர். அந்தக் கொடுமையிலிருந்து தப்பி வாழும்பொருட்டு அமிதமான திருத்தக்காரர்கள் பலர் இங்கிலண்டில் வந்து தங்கி வார்விக் பிரபுவின் ஊக்கத்தை அதிகப்படுத்தினர். புதிய சீர்திருத்தங்கள் செய்தால் எஞ்சியுள்ள மடங்களின் சொத்தையும் அபகரித்துக் கொள்ளலாமென்று எண்ணிய பிரபுக்களும் மாறுதல்கள் செய்வதில் ஆவலாயிருந்தனர். பல மடங்களில் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டு, இஷ்டமானவர்களுக்கெல்லாம் பிரித்துக் கொடுக்கப்பட்டன. எங்கும் அதிருப்தியே நிறைந்திருந்தது. ஆனால் பகிரங்கமாக அதிகாரிகளை எதிர்க்கப் பலருக்கு தைரியம் இல்லை. புதிய சீர்திருத்தங்களின் பலனாக ஏற்பட்ட நிலைமை, பழைய நிலைமையைக் காட்டிலும் கேவலமாக இருந்தது. யாரோ சிலர் மாத்திரம் மனப்பூர்வமாக

வும், உண்மையான பற்றுதலோடும் புதிய மதத்தைப் பிரசாரம் செய்துவந்தனர். மற்றவர்களோ சுயநலத்தைக் கருதியும், இலாபத்தை எதிர்பார்த்தும், சமயோசித தந்திரமாகப் புதிய முறையை ஆதரித்தனர். ஸாமர்ஸெட் பிரபு மறுபடியும் அதிகாரத்தைப் பெற்று அந்தக் குழப்பத்தை ஒழித்து அமைதியை உண்டாக்க முயற்சித்தார். ஆனால் அது அவருக்கே ஆபத்தாக முடிந்தது. 1552-ல் அவர் தூக்கிலிடப்பட்டார்; அக்காலத்தில் மனிதருடைய உயிர் அவ்வளவு அற்பமாக மதிக்கப்பட்டது. நீண்டகாலம் இராஜ்ஜிய பரிபாலனம் செய்தவர்களும் தமது அதிகாரத்தை இழந்தால், உடனே தூக்குமேடைக்குச் செல்வது சர்வ சாதாரணமான வழக்கமாயிருந்தது.

ஸாமர்ஸெட் அழிந்ததும் வார்விக்பிரபு சர்வாதிகாரியாய்விட்டார்; அவர் அப்பொழுது நார்தம்பர்லன்டூ *பிரபுவானார். யௌவனப் பருவத்தினரான எடூவர்டூ அரசர் அவரது சொற்படி நடந்துவந்தார். நார்தம்பர்லண்டூ தட்டுத்தடங்கலின்றி அநேக சீர்திருத்தங்களைச் செய்துவந்தார். 1549-ல் பிரசுரிக்கப்பட்ட பிரார்த்தனைப் புஸ்தகத்தில் தேவையான அளவிற்கு மாறுதல்கள் செய்யப்படவில்லை என்ற கருத்துடன் அவர் 1552-ல் இரண்டாவது பிரார்த்தனைப் புஸ்தகம் ஒன்றை வெளியிட்டு, தேசம் முழுதும் அதைப் பின்பற்றும்படி ஆக்ஞாபித்தார். அந்தப் பிரார்த்தனைப் புஸ்தகம் இப்பொழுதும்கூட அதிக மாறுதல்களின்றி இங்கிலண்டில் அநுஷ்டானத்திலிருந்து வருகிறது. அந்தப் புஸ்தகம் மிகவும் புராதனமான முறைகளை அநுசரிக்கிறது என்ற நோக்கத்துடன், [1928-ம் வருஷத்தில் அதை மாற்றி வேறு புதிய நூல் இயற்ற

*இங்கிலண்டில் ஒரு பிரதேசத்தின் பிரபுவின்(Lord or Duke) பதவியை வகிப்பவர் அவருடைய சொந்தப் பெயரால் அழைக்கப்படாமல், அந்தப் பிரதேசத்தின் பெயராலேயே குறிக்கப்படுவார். உதாரணமாக, நார்தம்பர்லன்டூ என்ற பிரதேசத்தின் பிரபுவை, நார்தம்பர்லன்டூ பிரபு என்றே குறிப்பார்கள். ரீடிங் என்ற பிரதேசத்தின் பிரபுவுக்கு ரீடிங் பிரபு வென்று பெயர் வழங்கும். அம்மாதிரியே இங்கிலீஷ் பாஷையில், பாடியாலா மகாராஜாவை பாடியாலா என்று மாத்திரம் சிலர் குறிப்பதுண்டு.

முயற்சிசெய்தனர். மதகுருமார்கள் அதற்கு ஆதரவு அளித்தும், பார்லிமென்ட் சபையார் அதை அங்கீகரிக்க மறுத்துவிட்டமையால், அந்த முயற்சி அரைகுறையாக நிற்கின்றது.] எட்வர்ட் அரசர் நார்தம்பர்லன்ட் பிரபுவுக்கு விசேஷ ஆதரவு அளித்து வந்தமையால், அவர் தமது மனப்போக்கின்படி அதிகாரம் நடாத்தி வந்தார். எட்வர்ட் அரசருக்கு அப்பொழுது பதினாறு வயது ஆயிருந்தது. அவர் சிறுவயதிலேயே இராஜ்ஜிய பாரத்தை வகிக்கவேண்டியதா யிருந்தமையால், அவருடைய தேகாரோக்கியம் கெட்டுப்போய் விட்டது. மரணத்தை சீக்கிரம் எதிர்பார்க்கும் நிலைமை வந்துவிட்டது. எனவே, தமது காலத்திற்குப்பின் ப்ராடெஸ்டன்ட் மதத்திற்கு என்ன கதி நேருமோ என்ற கவலை அவருக்கு உண்டாயிற்று. எட்டாவது ஹென்றி முன்னரே செய்து வைத்திருந்த ஏற்பாட்டில், எட்வர்ட் சந்ததியில்லாமல் இறந்துபோனால், எட்வர்டின் சகோதரியான மேரியும், அவளும் சந்ததியின்றி இறந்தால்,மற்ற சகோதரியான எலிஸபெத் என்பவளும் பட்டத்திற்கு வரவேண்டுமென்ற முறைமை குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் மேரி என்ற சகோதரியோ ப்ராடெஸ்டன்ட் மதத்தை முற்றிலும் வெறுத்து வந்தாள். அவள் எட்டாவது ஹென்றியின் முதல் மனைவியான காதரைன் என்பவளுடைய புதல்வி; ஆகவே அவளுக்குப் பழைய முறையிலேயே பற்றுதல் மிகுந்திருந்தது. அவள் இராணியானால் எட்வர்ட் செய்த சீர்திருத்தங்களையெல்லாம் தள்ளுபடி செய்துவிடுவாளென்பது நிச்சயமாகத் தெரிந்தது. அது நார்தம்பர்லன்ட் பிரபுவுக்கும் எட்வர்டுக்கும் சிறிதும் சம்மதியாயிருக்கவில்லை. ஆகவே நார்தம்பர்லன்ட் ஒரு தந்திரம் செய்தார். எட்டாவது ஹென்றி செய்ததைப் போலவே, எட்வர்டும் தமது விருப்பத்தின்படி இராஜ்ஜியத்தை யாருக்காகிலும் கொடுக்கலாமென்று கூறி, அரசருடைய உறவினளான ஜேன் க்ரே (Jane grey) என்ற மாது ஒருத்திக்கு அது கிடைக்கும்படி செய்வித்தார். ஜேன் க்ரே என்பவள் 16, 17 வயது நிறைந்தவளே யானாலும், சதாகாலமும் தனிமையாக உட்கார்ந்து புஸ்தகங்களைப் படிப்பது முதலான சிறந்த காரியங்களிலேயே ஈடுபட்டிருந்தவள்; விளையாட்டுகளிலும் வேடிக்

கைகளிலும் அவளுக்குக் கொஞ்சமும் பற்றுதல் கிடையாது. தன் அமைதியான வாழ்க்கையை விட்டு, இராஜ்ஜிய நிர்வாகம் செய்யும் கடினமான வேலையை ஏற்றுக்கொள்ள அவள் விரும்பவே யில்லை. ஆனல் அவள் நார்தம்பர்லன்ட் பிரபுவின் மருமகள்; ஆதலால் அவளை இராணியாக்கி உட்கார வைத்துத் தாம் சகலமான அதிகாரத்தையும் வகிக்கலாமென்பது நார்தம்பர்லன்ட் பிரபுவின் நோக்கம். மேலும் ஜேன் க்ரே புதிய முறையில் பற்றுதலுடைய வள். 1553-ல் எட்வர்ட் மரணமடைந்தார். அவர் ஆறு வருஷகாலமே அரசியற்றினர். அதில் முன் பாதி காலத்தில் ஸாமர் ஸெட் பிரபுவும், பின் பாதியில் நார்தம்பர்லன்ட் பிரபுவும் அதிகாரம் செலுத்தி வந்தனர். ஸாமர்ஸெட் பிரபு செய்த காரியங்கள் ஒன்றுவது நிரந்தரமாக நிலைக்கவில்லை. நார்தம்பர்லன்ட் பிரபுவும் அதிகாரம் செலுத்தி வந்தார். நார்தம்பர்லன்ட் பிரபு செய்த சீர்திருத்தங்களும் அம்மாதிரி அவருக்குப் பிறகு முற்றிலும் அழிந்து போயின. ஆனல் ப்ராடெஸ்டன்ட் மதம் இங்கிலண்டில் வேரூன்றிவிட்டது. சிற்சிலர் அந்த விருக்ஷத்தின் கிளைகளை வெட்டி எறிய முயன்றலும், அது மறுபடி மறுபடி தளிர்த்து வந்துகொண்டே இருக்கத் தக்கதாய் ஸ்திரமாக வேரூன்றிப் போயிருந்தது.

எட்வர்ட் இறந்தவுடன் நார்தம்பர்லன்ட் பிரபு முன்னரே யோசித்திருந்தபடி, ஜேன் க்ரே சிம்மாதனமேறும் வழியைச் செய்தார். ஆனல் அவருடைய கபடநினைவு எல்லோருக்கும் தெரிந்து போய்விட்டது. எட்டாவது ஹென்றி செய்த ஏற்பாட்டின்படி மேரி என்பவளே பட்டத்திற்கு வர வேண்டுமென்று எல்லோரும் விரும்பினர்; நார்தம்பர்லன்ட் சுயநலம் கருதுகிறவர் என்பதை எல்லோரும் கண்டுகொண்டனர். ப்ராடெஸ்டன்ட் மதத்தை அநுசரித்தவர்கள் கூட மேரி பட்டம் பெறுவதே நியாயமான காரியமென்றனர்.

அவர்களை அடக்கும் பொருட்டு நார்தம்பர்லன்ட் செய்த முயற்சிகள் வீணயின. ஜேன் க்ரே பத்து தினங்கள் வரையில் இராணியின் பதவியை வகித்து வந்தாள். அதற்குள் மேரியின் கட்சி

வலுத்துவிட, அவள் எவ்வித பிரயாசையுமின்றி முடி சூடினாள். அவ்விதம் எட்டாவது ஹென்றி செய்து வைத்த ஏற்பாடு மாறாமல் நிறைவேறியது.

---

## 27-வது அதிகாரம்.

---

### மேரி அரசி.

(1) ப்ராடேஸ்டன்ட் மதத்தை வேரறுக்கும் முயற்சி:—மேரி 1553-ல் சிம்மாதன மேறினாள்; அதற்குமுன் இங்கிலண்டின் ஆட்சி ஓர் இராணியின் வசத்தில் இருந்ததில்லை. அவள் தைரியமும், மதப்பற்றுதலும் மிகுந்தவள்; ப்ராடெஸ்டன்ட் மதத்தை அவள் சிறுவயதிலிருந்தே வெறுத்து வந்தாள்; நார்தம்பர்லன்டு செய்த சீர்திருத்தங்களை அவள் என்றும் அங்கீகரிக்கவில்லை. ஆதலால் தனக்குப் பட்டம் கிடைத்தவுடனே, தனது சுயேச்சைப்படி நடக்கும் உரிமையை வகித்து, ஆறாவது எட்வர்ட் காலத்தில் செய்த சீர்திருத்தங்களை மாற்றி, மறுபடியும் பழைய கத்தோலிக் முறையே பரவும்படி செய்ய எத்தனித்தாள். மத மாறுதல் சக்கரம் மறுபடி சுழன்றது. நார்தம்பர்லன்ட் பிரபு பழைய முறையைத் தழுவியவர்களெல்லோரையும் துன்புறுத்தி வந்தார். இப்பொழுது மேரி இராணி அதே கதையைத் திருப்பிப் படித்துக் காட்டத் தொடங்கினாள். நார்தம்பர்லன்டினால் சிறையிலடைக்கப் பட்டிருந்தவர்களை அவள் விடுவித்து அவர்களுக்குப் பதிலாக, புதிய முறையில் அதிக பற்றுதல் கொண்டிருந்தவர்களைச் சிறைப்படுத்தலானாள். நார்தம்பர்லன்ட் பிரபுவுக்கு மரணதண்டனை கிடைத்தது. ஜேன் க்ரே தனது மாமனாரின் குற்றத்திற்காக சிறைவாசம் செய்ய நேர்ந்தது.ப்ராடெஸ்டன்ட் மதகுருமார்கள் மடங்களைவிட்டுத் துரத்தப்பட்டனர்;அன்னியதேசத்திலிருந்து ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் சிலர் இங்கிலண்டில் வந்து தங்கியிருந்தார்களல்லவா? அவர்களும் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டனர். அப்பொழுது பார்லி

மென்ட் சபை எவ்விதமாக வேண்டுமானாலும் வளைந்து கொடுக்கக் கூடியதாக இருந்தது: ஆதலால் அது மிகவும் துரிதமாய் சட்டங்களை இயற்றி, முந்திய ஆட்சியில் செய்யப்பட்டிருந்த சீர்திருத்தங்களை யெல்லாம் மாற்றி, எட்டாவது ஹென்றியின் காலத்தில் இருந்த நிலைமையை மீண்டும் ஸ்தாபித்து விட்டது. ஆனால் மேரி அரசி அவ்வளவோடு திருப்தியடையவில்லை. இங்கிலண்டு தேசம் முழுதும் கா/2தலிக் மதத்தைப் பின்பற்றி, போப்பினுடைய ஆதிபத்யத்திற்கு உட்பட வேண்டுமென்பது அவளுடைய நோக்கம். மேலும் அவளுடைய தாயின் உறவினரான ஸ்பெயின் தேசத்துச் சக்கரவர்த்தியின் நட்பைப் பெற வேண்டுமென்றும், எட்டாவதுஹென்றியின் ஆட்சி தொடங்கிய காலத்தில் இருந்த இராஜீய மத நிலைமைகளே சிறந்தவையென்றும் மேரி எண்ணினாள். அவளுடைய தந்தை சிறிதுகாலம் ஸ்பெயின் சக்கரவர்த்தியுடன் சிநேகமாக இருந்து, பிறகு பிரிந்துவிட்ட விவரத்தை முன்பு குறிப்பிட்டோம். மேரி அரசி அந்த சிநேகத்தை மீண்டும் பெறுவதற்கு முயற்சி செய்தாள்.

முதலில் போப்பினுடைய அதிகாரத்தை இங்கிலீஷ்காரர்கள் ஏற்றுக் கொள்ளும்படி செய்ய அவள் பகீரதப் பிரயத்தனம் செய்தாள். அவள் சிறையிலிருந்து விடுவித்த சில பிரமுகர்கள் அதற்கு உடந்தையாயிருந்தனர். பொது ஜனங்களும் அதை மும்முரமாக எதிர்க்கவில்லை. ஆனால் ஓர் இடையூறு மாத்திரம் இருந்தது. எட்டாவது ஹென்றியும் அவரது புத்திரரும் பல மடங்களை யழித்து அவைகளின் சொத்துக்களை பிரபுக்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்திருந்தனரல்லவா? மீண்டும் கா/2தலிக் மதம் இங்கிலண்டில் ஸ்தாபிக்கப்பட்டால், ஷை நிலங்கள் தம்மிடமிருந்து பிடுங்கப்படுமோவென பிரபுக்கள் அஞ்சினர். ஆனால் போப் தமது அதிகாரம் இங்கிலண்டில் திரும்பவும் நிலைபெறுவதொன்றே எதிர்பாராத பெரும் நன்மையெனக் கண்டு, மடங்களுக்குச் சொந்தமான நிலங்களை ஷை பிரபுக்களிடமிருந்து பறிமுதல் செய்வதில்லையென்று வாக்குறுதி செய்து கொடுத்தார். பிரபுக்கள் திருப்தியடைந்து விட்டனர். 1554-ல் பார்லிமென்ட் சபை கூடி இராணியின் விருப்பம்போலச் சட்டங்கள் இயற்றியது. எட்டாவது ஹென்றியரசர் போப்பிற்கு விரோதமாகச் செய்திருந்த ஏற்பாடுகள் அடியோடு நிராகரிக்கப்பட்

டுப்போயின; இங்கிலண்டின் மதஸ்தாபனத்திற்கு இங்கிலீஷ் அரசரே முதன்மையான அதிபதி என்ற ஹென்றியின் தீர்மானமும் எடுபட்டுப் போய்விட்டது. இங்கிலண்டு முழுதும் காதலிக் முறையைப் பின்பற்ற வேண்டுமென்று ஆக்ஞாபிக்கப்பட்டது. இவ்வாறு மேரியரசியினுடைய ஊக்கத்தினல் எட்டாவது ஹென்றியும் அவரது புத்திரரும் செய்த மாறுபாடுகளும் மறைந்துபோய்விட்டன. இப் புதிய மாறுதலுக்கு உட்பட்டு நடக்காதவர்கள் தண்டனைக்காளாயினர். அந்த நிலைமையில் பொதுஜனங்கள் என்ன செய்வார்கள்? இரண்டு வருஷங்களுக்கு முன் புதிய முறையைப் பின்பற்ருதவர்களை நார்தம்பர்லண்டு பிரபு வேட்டையாடிக் கொன்ருர். இப்பொழுதோ புதிய முறையைப் பின்பற்றியவர்களுக்கு அதே கதி நேர்ந்தது. மத நம்பிக்கையென்பது அரசாங்கத்தாருடைய இஷ்டப்படியெல்லாம் மாற்றப்படக்கூடிய விஷயமா? அல்லது ஜனங்களை வற்புறுத்தி பயமுறுத்தி, கத்திமுனையில் ஏதோ ஒரு முறையைப் பின்பற்றச் செய்வதுதான் அந்த முறை நீடித்திருப்பதற்குரிய சாதனமாகுமா? மேற்படி உண்மைகளெல்லாம் அக்காலத்தவர்களுக்குப் புலப்படவில்லை போலும். தமது கொள்கைக்கு இணங்காதவர்களை ஜன்ம விரோதிகளாக பாவிப்பதுதான் அப்பொழுது நாகரிகமெனக் கருதப்பட்டது போலும். ப்ராடெஸ்டன்ட் பிரமுகர்களில் பலர் மேரியரசியின் கொடுமையைப் பொறுக்காமல் அயல் தேசங்களுக்குச் சென்றுவிட்டனர். பலர் சிறைவாசம் புகுந்தனர். புதிய மதத்தை ஊக்கத்துடன் பிரசாரம் செய்தவர்கள் தீக்கிரையாயினர். அவ்வாறு தைரியமாக உயிரிழந்தவர்கள் அநந்தமானவர். அவர்கள் அனைவரும் வேறு தேசம் சென்று தப்பிப் பிழைத்திருக்கலாம்; ஆனல் தமது கொள்கையின் பொருட்டு அவர்கள் உயிரையும் இழக்கத் தயாராயிருந்தனர். எட்டாவது ஹென்றியின் காலத்தில் முக்கிய மத குருவாயிருந்த க்ராமர் என்பவரும் அந்தக் கோஷ்டியில் சேர்ந்தார். மேரியரசியின் தாயான காதரைன் ஹென்றியின் நியாயமான மனைவியல்லவென்று க்ராமர் தீர்மானம் செய்தது ஞாபகமிருக்கலாம். அதனல், அவர்மீது மேரி இராணிக்குப் பகைமை ஏற்பட்டது இயற்கையே. 1556-ல் அவர் நிரம்பவும் அவமரியாதையாக நடத்தப்பட்டு விசாரணைக்கு அனுப்பப்பட்டார்.

வயது சென்ற க்ரா/2ன்மர் கோழை மனதுடையவர்; அவர் தப்பித்துக் கொள்ளும் பொருட்டு, தாம் முன்புசெய்த காரியங்களுக்காக வருந்துவதாக எழுதி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். ஆனால், அது அவருடைய பகைவர்கள் செய்த தந்திரவேலை; அவரை விட்டுவிடுவதாக இராணிக்கு எண்ணமே இல்லை. கடைசியில் அவர் செய்த குற்றங்களை அவருக்கு எடுத்துக் கூறியபின் விசாரணை செய்த மதகுருமார்கள் அவர் எழுதியிருந்த மன்னிப்புக் கடிதத்தை உரக்கப் படிக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டனர். அப்பொழுது எதிர்பாராதபடி க்ரா/2ன்மர் ஒருவித தைரியத்தை அடைந்து, மரணகாலத்தில் இருப்பவனுடைய அஞ்சாத மனப்பான்மையில் "நான் அவமானமடைந்து தாழ்த்தப்பட்ட காலம் முதல் என் கையால் எழுதிக் கையெழுத்திடப்பட்ட பத்திரங்கள் கடிதங்கள் முதலியவைகளை நான் முற்றிலும் மறுக்கிறேன். ஏனெனில், நான் என் மனதிற்கு மாறான சில பொய்களை எழுதிக் கொடுத்திருக்கிறேன். அந்தக் குற்றத்தைச் செய்ததற்காக, என் கையே முதலில் தீக்கிரையாகட்டும்" என்று கூறி, அக்னிகுண்டத்தண்டை நெருங்கி தமது கையைத் தீக்குமுன் நீட்டினார். நெருப்பு கொழுந்துவிட்டு எரிகிறது. அவர் துணிந்து தமது கரத்தை அக்னியில் நீட்டி "இந்தக் கைதான் குற்றம் செய்தது! இதை நானே சுட்டெரிக்கிறேன்" என்று கூறியவண்ணம் தீயில் குதித்து மண்ணுலகை நீத்தார். அவருடைய அந்தியகாலச் செய்கை எல்லோரும் திடுக்கிட்டு நடுங்கும்படி செய்துவிட்டது. க்ரா/2ன்மரைப் போலவே மற்ற பல சாமானிய மனிதரும் துணிவும் ஆவேசமும் கொண்டு அவ்விதமே உயிரிழந்தனர். 1555 முதல் 1558-க்குள் முன்னூறு ஜனங்கள் தமது மதக் கொள்கைகளை விட மனமின்றி தீயில் விழுந்து மாண்டனர். ஆனால் அந்த மகா கொடூரமான செய்கையால் மேரி இராணி எதிர் பார்த்ததற்கு நேர் விரோதமான பலனே உண்டாயிற்று. அது உலகத்தில் எங்கும் எப்போதும் நடக்கும் விஷயமே. குடிமக்களைக் கொடுமையாக நடத்தும் அரசாங்கம் தன்னுடைய குழியைத் தானே தோண்டிக் கொண்டிருப்பது போன்றதே. ஏற்கனவே பொது ஜனங்களுடைய மனம் ப்ராடெஸ்டன்ட் மதத்தை ஆதரிக்கும் போக்குடையதாய் மாறி வந்தது; எட்வர்ட் அரச

ரது காலத்தில் செய்த சீர்திருத்தங்கள் அவர்களது ஊக்கத்தை வலுப்படுத்தியது. ஒரு வேளை மேரி இராணி நிதானமாக உபதேசித்து வந்திருந்தால், இளம் பயிராயிருந்த புதிய மதத்தை அவள் சுலபமாக வேரறுத்திருக்கலாம். ஆனால் அந்த சமாதான முறையைப் பின் பற்றாமல், அவள் பலவந்தத்திற்கும் அடக்கு முறைக்கும் இடம் கொடுத்தமையால், புதிய மதம் அழியாமல் நன்றாக அபிவிருத்தியடைய வழி செய்தது போலாயிற்று; மேரி இராணி ஓடவிட்ட இரத்த வெள்ளமே அந்த இளம் பயிர் செழித்து ஓங்கி வளரும்படி செய்து விட்டது. புதிய மதத்தின் பொருட்டு உயிர் துறந்த ஒவ்வொரு மனிதரது சாம்பலும் அந்தப் பயிருக்கேற்ற எருபோல உரமாக முடிந்தது. பலவந்த வழிகளையும் கொடுமையையும் பின்பற்றி நடக்கும் அரசாங்கத்தின் நோக்கம் கடைசியில் நிறைவேறாது போவது முற்றிலும் திண்ணம். சிறிதும் தயைதாக்ஷண்யமின்றி ஜீவஹிம்ஸை செய்துவந்த மேரி அரசிக்கு சரித்திரத்தில் "இரத்த வெறி பிடித்த மேரி" என்ற காரணப் பெயர் கிடைத்தது. ஆனால் அதில் ஒரு முக்கிய விஷயத்தை நாம் கவனிக்கவேண்டும்; மேரி யரசியின் குரூரச் செய்கைகள் மகா பயங்கரமாகவும் அநாகரிகமாகவும் தோன்றுவது சகஜமே; ஆனால் 16-வது நூற்றாண்டில் ஐரோப்பா முழுதிலும் அவ்விதமான பயங்கரக்காட்சியே எங்கும் சாதாரணமாகக் காணப்பட்டது. ஏனெனில் அப்பொழுது இராஜீயக் கொள்கைகள் இப்பொழுதிருப்பவைகளுக்கு முற்றிலும் மாறுபட்டிருந்தன. இக்காலத்தில் குடிமக்கள் எந்த மதத்தைப் பின்பற்றினாலும், அதுபற்றி, அரசாங்கத்தார் எவ்வித நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்வதில்லை; ஆஸ்திகர்களாயிருந்தாலும் நாஸ்திகர்களாயிருந்தாலும் தேச அமைதியும் க்ஷேமமும் கெடாதவரையில், அவர்களை அரசாங்கத்தார் எவ்விதத்திலும் உபத்திரவிப்பதில்லை; மதம் என்பது ஒவ்வொரு மனிதருடைய புத்திவிசேஷத்தின்படி அவரவர் தீர்மானித்து அநுஷ்டித்துக் கொள்ள வேண்டிய விஷயமென்று இக்காலத்தவர் கருதுகிறார்கள். ஆனால் 16-ம் நூற்றாண்டில் பிரஜைகளுடைய மதக்கொள்கைகளைக்கூட அரசாங்கத்தாரே தீர்மானித்துக் கட்டுப்படுத்தி, அவர்கள் பொய் மதங்களிலும் மூட நம்பிக்கைகளிலும் பற்றுதல் வைக்காமல் காப்பாற்றவேண்டுமென்பதே நியதியாக இருந்து வந்தது. எனவே ஜனங்களுடைய

மனதைக் கலக்கக்கூடிய சித்தாந்தங்கள் நாட்டில் பரவாமல் தடுப்பது அரசருடைய சடமையாயிருந்தது. நாஸ்திகர்களையும், வேறு புதிய கொள்கைகளை உபதேசிட்போரையும் தண்டிப்பது நியாயமெனக் கருதப்பட்டது; மேலும் அரசாங்கத்தாரால் அநுஷ்டிக்கப்பட்டுவந்த மதத்தை சாமானிய ஜனங்கள் எதிர்த்தால் அது இராஜத்துரோக மான செய்கை என்றும் அவர்கள் நம்பிவந்தனர். ஆகவே, மேரி இராணி தனது கொள்கைக்கு விரோதமாக நடந்து வந்தவர்களைக் கடுமையான தண்டனைக் குட்படுத்தியது, அக்காலத்தவர்க்கு அவ்வளவு ஆச்சரியகரமாக இருந்திருக்காது. அவளுக்கு மாத்திரம் "இரத்த வெறி பிடித்த மேரி" என்ற பெயர் கிடைத்தது ஓரளவு பொருந்துமானாலும், அவளைப் போலவே, இன்னும் பல அரசர்கள் இரத்த வெறி கொண்டவராயிருந்தனர். ப்ராடெஸ்டன்ட் மதத்தை ஆதரித்த அரசர்களால் ஆளப்பட்ட நாடுகளில் கா/2தலிக் மதஸ்தர் இருந்து வாழ்வது துர்லபமாயிருந்தது. அதுபோல கா/2தலிக் மத அரசர்கள் இருந்த தேசத்தில் ப்ராடெஸ்டன்ட் மதத்தினருக்குப் பாதுகாப்பும் நிம்மதியும் இல்லை. எட்டாவது ஹென்றி, ஆறாவது எட்வர்டு ஆகிய இருவரது காலத்திலும் எத்தனையோ ஜனங்கள் மதப் பற்றுதலின் பொருட்டு உயிர் துறந்தனர். மேரி யரசியும் அவர்களைப் பின்பற்றியே நடந்தாள்; ஆனால் ஒவ்வொருவரும் வெவ்வேறு மதக்கொள்கைகளைப் பின்பற்றியவர்களை தண்டித்தனர்; அவ்வளவே வேறுபாடு. மேரி இராணி இயர்கையிலேயே இரக்கமற்ற சடின ஹிருதயம் வாய்ந்தவளாயிருந்த காரணத்தால் அவ்வாறு பலரைக்கொன்று வீழ்த்தவில்லை; தான் அநுசரித்த மத சம்பிரதாயமே உண்மையான தென்றும், மற்றவை குடிமக்களைக் கெடுக்கக்கூடிய தவறானவைகள் என்றும் உறுதியாக நம்பி அதற்கு அடிமையாகியே, அவள் ஜனங்களைக் கொல்வதற்கும் பின் வாங்காமல் அதைஊர்ஜிதப்படுத்தினாள். 16-ம் நூற்றாண்டில்ஐரோப்பா முழுதும் இம்மாதிரியே இரத்த வெள்ளம் பெருகியோடியது. ஒவ்வோர் அரசரும் தயக்குப் பர்றுதலர்ற மதத்தைப் பின்பற்றிய ஜனங்களை வாள் கொண்டே கொன்று வீழ்த்தினர்; ஆனால் மேரி இராணி அந்தப் படுகொலையில் மற்றவரைவிட முதல் வகுப்பில் தேறினதாகவே

கருதவேண்டும். ஆனால், இறந்தவரும் கடவுளின் பெயரைச் சொல்லிக்கொண்டே இறந்தனர். கொன்றவரும் கடவுளின் பெயராலேயே கொன்றனர். அதுதான் ஆச்சரியகரமான விஷயம்! ஆனால் முன்பே கூறியபடி, அந்த இரத்த வெள்ளம், ப்ராடெஸ்டன்ட் மதத்தை அழிப்பதற்குப் பதிலாக, அதை நன்றாக வளரச்செய்து விட்டது.

(2) **மேரி யரசியின் அன்னிய நாட்டு சம்பந்தம்:**—மேரி இராணி சிம்மாதன மேறியபோது அவளுக்கு 37 வயது ஆயிருந்தும், அவள் விவாகம் செய்து கொள்ளாமலேயே இருந்தாள். அவளுக்கு இங்கிலீஷ் பிரபு எவரையேனும் மணம் செய்விக்க வேண்டுமென்று பார்லிமெண்ட் சபை விரும்பியது. ஆனால், மேரி யரசியின் தாயான கா/2தரைன்என்பவளுக்குஉறவினரும்ஸ்பெயின்தேசத்துச் சக்கரவர்த்தியுமான ச்சார்லஸ் அவளிடம் அபிமானம் வைத்தவராதலால், தமது புத்திரரான பி2லிப் (Philip) என்பவரை அவள் விவாகம் செய்துகொள்ளும்படி தூண்டினர். பி2லிப் மேரியரசியை விடப் பத்து வயது சிறியவராயிருந்தாராலும், அவள் அதற்கு இணங்கினாள். மேலும் ச்சார்லஸ் சக்கரவர்த்தி கா/2தலிக் மதத்தைப் பின்பற்றியவராதலால், மேரியரசிக்கு அந்த சம்பந்தம் நிரம்பவும் சிலாக்கியமாகத் தோன்றியது. ஆகவே, பார்லிமெண்ட் சபையின் சம்மதியையும் பொருட்படுத்தாமல் 1554-ல் அவள் விவாக நிச்சயதார்த்தம் செய்துகொண்டு விட்டாள். ஆனால் ஜனங்களுக்கு அது சிறிதும் சம்மதியாக இல்லை; முதலாக, ச்சார்லஸ் சக்கரவர்த்தி கா/2தலிக் மதத்தைச் சேர்ந்தவர்; மேலும் அவருடைய புத்திரர் அவருக்குப் பிறகு சக்கரவர்த்தியானால், இங்கிலண்ட் தேசம் அவருக்குட்பட்டு இருக்கவேண்டி வரும். இங்கிலீஷ்காரருக்கு அந்த நினைவே ஆத்திரத்தை உண்டுபண்ணியது; தமது தேசம் பராதீனம் ஆய்விடுவதை அவர்கள் விரும்பவில்லை. கா/2தலிக் மதத்தை ஆதரித்த இங்கிலீஷ்காரர்கள்கூட அந்த விவாகத்திற்கு சம்மதி யளிக்கவில்லை. இங்கிலீஷ்காரரிடம் அந்த ஒரு விசேஷ குணம் உண்டு; அதாவது, தமக்குள் மதவிஷயமாகவோ வேறு எவ்விதமாகவோ வேற்றுமைகள் இருந்தாலும், தமது தேசத்திற்கு ஏதேனும் தீங்கு

நேருமென்று தோன்றினல், எல்லோரும் உள்நாட்டு வேற்றுமைகளை மறந்து ஒன்ருகச் சேர்ந்து கொள்வார்கள். தேசத்தின் க்ஷேமமே அவர்களது முதல் நோக்கம். மற்ற வியவகாரங்களெல்லாம் இரண்டாம் பக்ஷமாகவே கருதப்படும். மேரி இராணி ஜனங்களின் இச்சைக்கு விரோதமாகச் செய்த காரியம் சில கலகங்களுக்கும் கிளர்ச்சிகளுக்கும் இடம் கொடுத்தது. ஸர் தாமஸ் வயாட் (Sir Thomas Wyatt) என்பவர் கலகம் செய்யும் கருத்துடன் கென்ட் மாகாணத்திலிருந்து புறப்பட்டு லண்டன் நகரத்தை நோக்கி வந்தார். ஆனல் மேரி இராணியின் தைரியத்தினல் வயாட்டின் கிளர்ச்சி உடனே அடக்கப்பட்டது. கலகக்காரருக்குக் கடுமையான தண்டனையும் கிடைத்தது. வயாட் கொலையுண்டார். பத்து தினம் வரையில் பட்டத்திராணியாயிருந்து பின்பு சிறைவாசம் செய்தவளான ஜேன் க்ரேயும் அவளது கணவனும்கூட தூக்கிலிடப்பட்டு மாண்டுபோயினர். அவ்வாறு தனக்கு விரோதமாயிருந்தவர்களெல்லோரையும் ஒழித்துவிட்டு, மேரி இராணி பிலிப் என்பவரை மணந்துகொண்டாள்.

மேரியரசி ஆட்சிபுரிந்த காலத்தில் ஐரோப்பாவில் பெரிய யுத்தங்கள் நடந்துகொண்டிருந்தன. ப்ரெஞ்சு தேசத்தரசருக்கும் ஸ்பெயின் தேசத்துச் சக்கரவர்த்தியான ச்சார்லஸூக்கும் நீண்டகாலமாக இருந்துவந்த பகைமையே அதற்குக் காரணம். ப்ரெஞ்சு தேசத்தரசரால் பலவகையில் துன்புறுத்தப்பட்ட ச்சார்லஸ் இராஜ்ஜிய நிர்வாகத்தைத் தமது குமாரரிடம் ஒப்புவித்துவிட்டார். அவர் இரண்டாவது பிலிப் என்ற நாமதேயத்துடன் பட்டத்திற்கு வந்தார். அவர் ப்ரெஞ்சு தேசத்துச் சேனையைத் தோற்கடிக்க பகீரதப் பிரயத்தனம் செய்தார். அவர் தமது மனைவியான மேரியரசியையும் 1557-ல் யுத்தத்தில் கலந்துகொள்ளும்படி தூண்டினர். இங்கிலீஷ்காரர்களுககு, அம்மாதிரி அநாவசியமாக அன்னியநாட்டுப் போர்களில் தலையிடுவதில் சற்றேனும் விருப்பமில்லை. ஆனல் மேரியரசியோ தன் கணவனது சொற்படியே நடக்க வேண்டியதாயிற்று. பிலிப், இங்கிலீஷ் சேனையின் உதவியைப் பெற்று ப்ரெஞ்சுக்காரரைத் தோற்கடித்து, தமது கீர்த்தியை நிலைநாட்டினர். அதுமுதல் பிலிப் அரசரால் ஆளப்பட்ட ஸ்பெயின் தேசம் ஐரோப்பிய சரித்

திரத்தில் பிரபலமடைந்தது. ஆனால் அந்தச் சண்டையில் கலந்து கொண்ட இங்கிலண்ட் தேசத்திற்குப் பெருத்த நஷ்டமேற்பட்டது. மூன்றாவது எட்வர்டின் காலம் முதல் நடந்த நூறுவருஷ யுத்தத்தின் பயனாக இங்கிலீஷ் அரசருக்குக்கிடைத்த பிரதேசங்கள் யாவும் ஒவ்வொன்றாக நழுவிப்போய்விட்டதையும், ஆனால் கா/2லே என்ற துறைமுகப் பட்டினம் மாத்திரம் இங்கிலீஷ்காரருக்குச் சொந்தமாயிருந்ததையும் முன்பு விவரித்தோம். அந்தக் கா/2லேப் பட்டினம் ப்2ரான்ஸ் தேசத்தின் வாசற்படிபோல அமைந்திருப்பது இங்கிலீஷ்காரருக்கு நிரம்பவும் சௌகரியமாயிருந்தது. அவர்கள் ப்2ரெஞ்சு தேசத்துடன் போர் புரியவேண்டியிருந்த சமயங்களிலெல்லாம் அந்தப் பட்டினத்தின் வழியாகவே சேனைகளை ப்2ரான்ஸ் நகரத்திற்குக் கொண்டுபோவது மிக எளிதாயிருந்தது. பகைவரது நாட்டில் சௌகரியமாய்த் தங்குவதற்கு ஓரிடம் கிடைப்பது மற்ற எத்தனையோ விஷயங்களுக்கும் வியாபாரப் போக்குவரத்திற்கும் சௌகரியமானதென்பது கூறாமலே விளங்கும். மேரி இராணி தன் கணவருக்கு உதவியாய் ப்2ரெஞ்சுக்காரரை எதிர்த்துப் போர் புரிந்ததற்காக இங்கிலண்டை தண்டிக்கும் நோக்கத்துடன் ப்2ரெஞ்சு மன்னர் 1558-ல் கா/2லேப் பட்டினத்தைத் தாக்கி அதைஅபகரித்துக் கொண்டார். அது இங்கிலீஷ்காரருக்கு எல்லாத் துறைகளிலும் பெரிய நஷ்டமாகவும் அவமானகரமாகவும் தோன்றியது. தன் குடிமக்களது விருப்பத்திற்கு மாறாகப் போருக்குச் சென்று, அவ்வளவு பெரிய அவமானத்தைக் கொணர்ந்துவைத்த மேரி இராணி அந்த விசனத்தைப் பொறாதவளாக இருந்து சில மாதங்களுக்குப் பிறகு உயிர் துறந்தாள். "நான் இறக்கும்பொழுது என் இருதயத்தில் கா/2லே என்று செதுக்கப்பட்டிருக்கும்" என அவள் கூறினளாம். எவ்விஷயத்திலும் மேரியரசியின் ஆட்சி ஜனங்களுக்கு அதிருப்தியையே உண்டாக்கியது. இராஜ்யத் துறையிலும் மதத்துறையிலும் மேரியரசி செய்த காரியங்கள் பயனற்றுப்போயின. அவளுடைய ஆட்சி ஜனங்களுடைய மனதில் அச்சத்தையும் அருவருப்பையுமே உண்டாக்கின. மேரியிராணியின் சீர்திருத்தங்கள் யாவும் அவளுடன் கூடவே மறைந்துபோயின.

---

# 28-வது அதிகாரம்

---

## எலிஸ2பேத்

(1) **எலிஸ2பேத் இராணியின் குணம்: அவள் செய்த மத ஏற்பாடு:**—மேரி இராணி 1558-ல் இறந்தபின், எட்டாது ஹென்றியின் இரண்டாவது தாரமான ஆ/2ன் பொலீனுடைய குமாரி எலிஸ2பெத் பட்டத்திற்கு வந்தாள். அவளுக்கு அப்பொழுது இருபத்தைந்து வயது நிறைந்திருந்தது. அவள் தனது ஆயுள் காலம் முழுதும் மணம் செய்துகொள்ளாமலேயே இருந்துவிட்டாள்: ஏனெனில் இராஜ்ஜியாதிகாரத்தில் அவளுக்குப் பற்றுதல் அளவுமீறி இருந்ததாகையால் ஒரு கணவனுடன் சம்பந்தப்பட்டிருக்கும் தொல்லைக்கு இலக்காக அவள் விரும்பவில்லை. அவள் அழகும் கம்பீரத் தோற்றமும் உடையவள். உறுதியான சரீர அமைப்பைப் பெற்றிருந்தமையால், அவள் அரசாங்க நிர்வாகத்தை, அளவற்ற ஊக்கத்துடன் நடத்தி வந்தாள். எட்டாவது ஹென்றியின் சிறந்த குணங்களிற் பல அவளிடம் நிறைந்திருந்தன. ஹென்றியின் மூன்று மக்களுக்குள் எலிஸ2பெத் ஒருத்தியே அவரைப் போல அதிக கீர்த்தியும் பெயரும் அடைந்தவள். தான் அரசி என்ற மமதையை அவள் எப்பொழுதும் மறந்தவளன்று. அவள் பிரபுக்களுடன் நிரம்பவும் சாமர்த்தியமாக நடந்து, அவர்களுடைய அன்பையும் ஆதரவையும் மிக எளிதில் அடைந்தாள். அடிக்கடி தேசத்தில் அவள் சுற்றுப்பிரயாணம் செய்து, அங்கங்குவசித்த பிரபுக்களின் விருந்தாளியாக இருப்பதும் உண்டு. அவளுடைய தந்தையைப்போலவே அவளும் அதிகாரம் வகிப்பதிலும் ஆக்ஞையிடுவதிலும் அதிக ஆசை கொண்டிருந்தாள்; ஆனால் சில அற்பகுணங்களும் அவளிடம் அமைந்திருந்தன. தான் உண்மையாக நடக்கவேண்டுமென்பதைப் பற்றியும், நியாய வரம்பிற்குட்பட வேண்டுமென்பதைப் பற்றியும் அவள் அதிக கவலை கொள்ளமாட்டாள்; ஸ்திரீகளுக்குரிய மெல்லிய குணங்களிற்பல அவளிடம் காணப்படவில்லை. ஆனால் அவளிடம்சுய

நலாபிமானம் அதிகமாயிருந்ததாலும், தன் தேசத்தின்மீதும் குடி மக்களின்மீதும் அவள் அளவுகடந்த அன்புடையவள்; தேசத்தின் பெருமையைக் காப்பதிலும், ஜனங்களின் க்ஷேமத்தை அதிகப்படுத் துவதிலும் எப்பொழுதும் கவனம் செலுத்திவந்தாள். ஆழ்ந்த விவே கமும், கூர்மையான புத்தியும், மன உறுதியும், தைரியமும், விடா முயர்சியும் நிரம்பப் பெற்றிருந்தவளான அந்த அரசி தனது தந்தை யைப்போலவே கண்டிப்பான நிர்வாகம் நடத்திவந்தாளாலும், அவளுடைய தாயைப்போல, டாம்பீகத்திலும்,வீண்பெருமையிலும், தற்புகழ்ச்சியிலும், முகஸ்துதியிலும் விருப்பங்கொண்டவளாயு மிருந் தாள். அவள் ப்ராடெஸ்டன்ட் சம்பிரதாயத்தைப் பின்பற்றினாள்; ஆனால்அவளுக்குமதவிஷயத்தில்அதிகமும்முரமான பற்றுதல்இல்லை. அரசியல் நிர்வாகத்தில் மதஸ்தாபனமும் ஒரு பகுதியெனவே அவள் கருதினாள்.அவள் ஒரு நாளைக்குப் பலதடவைகள் ஆடைகளை மாற்றி யணிந்துகொள்வாள்;வயது முதிர்ந்த பின்னும் அவள் தனதுவயோதி கத்தை மறைத்துக்கொள்ள செயற்கை அலங்காரங்களை நாடினாள். இன்னொரு விசேஷ குணமும் அவளிடம் இருந்தது. கேவலம் அற்ப விஷயங்களில் ஒரு தீர்மானத்திற்கு வருவதுதான் அவளுக்குக் கடினமாகஇருக்கும். தான் சிவப்பு உடைதரிப்பதா வேறு நிற உடை தரிப்பதா என்பதை நிச்சயிக்க அவளுக்கு அதிக அவகாசம் வேண் டும்.ஆனால் யுத்தம் நடத்தப் போகும்பொழுதும் அதுபோன்ற இதர முக்கியவிஷயங்களிலும் அவள் தன் மனதை உடனே திடப்படுத்திக் கொண்டு ஒரு முடிவிற்கு வந்துவிடுவாள். அவள் ஏறக்குறைய 45 வருஷகாலம் ஆட்சிபுரிந்தாள்; அவ்வளவு நீடித்தகாலம் முழுதும் அவள் தனது கொள்கைகளிலிருந்து வழுவாமல் ஒரேமாதிரியாக இராஜ்ய பரிபாலனம் செய்துவந்தாள். அவள் எத்தனையோ பொல் லாங்குகளுக்கு ஈடுகொடுத்து அவைகளை மேற்கொண்டு அரசாங்கக் கப்பலை நிரம்பவும் ஜாக்கிரதையாகவும் பத்திரமாகவும் நடத்திச் சென்றாள்; அதனால் அவளது அந்தியகாலத்தில் மற்ற அரசர்களுக் குக் கிடைக்காத மனஅமைதியும் சாந்தியும் அவளுக்குக் கிடைத்தன. ட்யூடர் வம்சத்தாரில் அவளே கடைசியாக ஆண்டவள். இங்கிலண் டு தேசசரித்திரத்தில் அவள் நிரம்பவும் முக்கியமான ஸ்தானம் வகி க்கிறாள்; மற்ற அரசர்களின் ஆட்சிகளில் இல்லாத ஒருவித சோபித

மும், அழகும், விசேஷத்தன்மையும் எலிஸ2பெத் இராணியின் ஆட்சியில் நிரம்பி இருந்தன.

எலிஸ2பெத் பெண்ணாய் ஜனித்துவிட்டாளானாலும் அவளிடம் சிறந்த அரசருக்குரிய ஆண்மை வீரம் முதலான குணங்கள் இயற்கையிலேயே அமைந்திருந்தன. எந்த விஷயத்திலும் அவள் தனது தீர்மானத்தின்படியே நடக்கவேண்டுமென்று விரும்பும் பிடிவாத குணமுடையவளானாலும், அவளுடைய அதிருஷ்டவசமாக, சிறந்த இராஜதந்திரிகளும் அரசியல் நிபுணர்களும் திறமை மிகுந்த மந்திரிகளும் அவளுக்கு உதவியாகக் கிடைத்தனர். எலிஸ2பெத் அவர்களுடைய மனப்போக்கை அநுசரித்து எப்பொழுதும் நடந்துகொண்டனளாதலால், அவர்கள் இராணியிடம் உண்மையான அன்பும் பற்றுதலும் உடையவர்களாய் நீண்டகாலம் அவள்பொருட்டு உழைத்து வந்தனர். ஆனால், எலிஸ2பெத் ஒவ்வொருசமயம்தனக்கு அபகீர்த்தி வரும்போலத் தோன்றினால், அதற்குக் காரணமான குற்றத்தைஎந்தமந்திரியின் மீதாவது சுமத்தி விடுவதுண்டு;மேலும் மந்திரிகளுக்கு தாராளமாக அவள் வெகுமதி யளிக்கமாட்டாள். அப்படியிருந்தும், அவளுடைய வசீகர சக்தியினாலும் விசேஷ சாமர்த்தியத்தினாலும் மந்திரிகள் அவளிடம் அபிமானத்துடனேயே நடந்தனர். அவ்வாறு அவளிடம் உழைத்துவந்த மந்திரிகளுள் ஸர் வில்லியம் ஸேஸில் (Sir William Cecil) என்பவர் முக்கியமானவர்; அவர் இறக்கும்வரையில் அரசிக்கு உழைத்துவந்தார். ஆனால் எலிஸ2பெத் அவரை சிறிதளவே கௌரவித்து பர்லி பிரபு (Lord Burghley) என்ற பட்டத்தை மாத்திரம் அவருக்கு உண்டாக்கிக்கொடுத்தாள். அவருடைய உறவினரான ஸர் நிக்கோலாஸ் பேகன் (Sir Nicholas Bacon) என்பவரும் அதுபோலவே அவளுக்கு உதவி புரிந்து வந்தார். எலிஸ2பெத்தின் பிற்காலத்தில் பர்லி பிரபுவின் குமாரர் ஸர் ராபர்ட் ஸேஸில் (Sir Robert Cecil) என்பவர் தமது தந்தையைப்போலவே அந்தரங்க சுத்தியாக உழைத்துவந்தார். இன்னம் ஸர் ப்2ரான்ஸிஸ் வால்ஸிங்ஹா/2ம் (Sir Francis Walsingham) என்பவர் அரசியின் உயிருக்கு அபாயம் விளைவிக்கும் நோக்கத்துடன் சதியாலோசனை செய்துவந்த பல கூட்டத்தாரைக்

கண்டுபிடித்து தண்டித்தார். மேலே குறிக்கப்பட்டவர்கள் இராஜ்ஜிய பரிபாலனத்தில் அரசிக்குப் பேருதவி புரிந்துவந்ததுபோல அவளுடைய கேளிவிலாஸங்களிலும் விளையாட்டுகளிலும் கலந்துகொண்டு அவளுக்கு திருப்தியளித்துவந்த பிரபுக்கள் அநேகர் இருந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர் சன்மானங்கள் செய்துகொள்வதிலும், விருந்துகள் நடத்திக்கொள்வதிலுமே ஆநந்தமாகக் காலங்கழித்துவந்தனர். லீஸ்டர் பிரபு (Earl of Leicester) என்பவர் மற்ற எல்லோரைக் காட்டிலும் அதிகமாய் அரசிக்கு வேண்டியவர். அவரை அவள் மணந்து கொள்வதாகக்கூட வதந்தி இருந்துவந்தது; ஆனால் எலிஸபெத் விவாகம் செய்து கொள்வதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டிருந்தமையால், அது நிறைவேறவில்லை. இவ்வாறு எலிஸபெத் குடிமக்களாலும், பிரபுக்களாலும் கொண்டாடப்பெற்றுத் தனது புகழ் என்றும் நிலைக்கும்படி அரசியற்றிவந்தாள்.

எலிஸபெத் பட்டத்திற்கு வந்தவுடன், அவளது கவனம் முதலில் மதச்சீர்திருத்தத்தில் சென்றது. எட்டாவது ஹென்றி மதச் சீர்திருத்தம் செய்வதில் நிதானமாக நடந்துவந்ததும், அவருக்குப்பின் எட்வர்ட், மேரி ஆகிய இருவரும் முரண்பட்ட சம்பிரதாயங்களை அமிதமாக அநுஷ்டித்து ஜனங்களுக்கு எல்லையற்ற துன்பமளித்ததையும் அவள் கண்டிருந்தாள். மேலும் மேரி இராணியின் ஆட்சியில் எலிஸபெத் சில வருஷகாலம் சிறைவாசமும் செய்ய நேர்ந்தது; ஏனெனில் மேரி இராணி, எலிஸபெத் புதிய மதத்தின்மீதுள்ள ஆதரவினால் சதியாலோசனை செய்வோருடன் சேர்ந்து ஒருகால் தனக்குத் தீங்கிழைப்பாளோ என்று சந்தேகம் கொண்டாள். ஆனால் எலிஸபெத் மிகவும் சாமர்த்தியமாக நடந்து கொண்டு, மேரியரசியின் பகைமைக்குப் பாத்திரமாகாமல் தப்பித்துக்கொண்டாள். முன்னரே கூறியபடி, அவளிடம் அமிதமான மதப்பற்றுதல் கிடையாது; இராஜ்ஜிய நிர்வாகம் உறுதியாக நடைபெறும்பொருட்டு எவ்வளவு அவசியமோ அந்த அளவிற்கு மாத்திரம் அவள் மத விஷயங்களில் தலையிட்டுக்கொண்டாள். ஆறாவது எட்வர்ட், மேரி ஆகிய இருவரும் மத்தியஸ்தமாக நடவாமல், ஒவ்வொருவரும் அமிதமாக நடந்து ஒன்றுக்கொன்று முற்றிலும்

விரோதமான கொள்கைகளை அநுஷ்டித்தமையால், தம்முடைய முயற்சிகளில் வெற்றியடையாதவரானார்கள் என்பதையும் அவள் அறிந்திருந்தாளாதலால், தனது தந்தையின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடப்பதே உத்தமமானதென்று அவள் தீர்மானித்தாள். எட்டாவது ஹென்றியோ ப்ராடெஸ்டன்ட், காதலிக் ஆகியஇருமுறைகளிலும்சம்பந்தம் வைத்துக்கொண்டு ஜாக்கிரதையாக நடந்துகொண்டார். ஆனால், ஹென்றியைப் பின்பற்றி நடப்பதில் எலிஸபெத் இராணிக்குச் சில இடைஞ்சல்கள் இருந்தன. ஹென்றியின் காலத்தில் இங்கிலண்டில் புதிய மதம் நன்றாக வேரூன்றவில்லை; அது அப்பொழுதே தொடக்கமாயிற்று. ஆகவே, ஹென்றியின்போக்கை எதிர்த்துப் போராடுவோர் அதிகமாயில்லாதிருந்தனர். ஆனால் அதற்குப்பின் எட்வர்டின் காலத்தில் செய்யப்பட்ட அமிதமான சீர்திருத்தங்களினாலும், மேரி இராணி சிந்திய இரத்தவெள்ளத்தின் பயனாகவும் ப்ராடெஸ்டன்ட் சம்பிரதாயம் தழைத்தோங்கியிருந்தது. அந்த சந்தர்ப்பத்தில் எட்டாவது ஹென்றியைப் பின்பற்றி நடப்பது அபாயகரமாகத் தோன்றியது. மேரி இராணியின் காலத்தில் தேசத்தை விட்டு வெளியில் சென்றிருந்த ப்ராடெஸ்டன்ட் முறையினர் பலர் எலிஸபெத் தம்மை ஆதரிப்பாளென்ற நம்பிக்கையின்மேல் இங்கிலண்டுக்குத் திரும்பிவந்து மும்முரமாகப் பிரசாரம் செய்து,இன்னும் அதிகமான சீர்திருத்தங்கள் வேண்டுமெனக் கிளர்ச்சி செய்தனர். ஆனால் மேரியரசியால் நியமிக்கப்பட்ட ஏராளமான மதகுருமார்கள் பழைய காதலிக் முறையையேஆதரித்தனர். காதலிக் மதத்தினருக்கு வெளிநாடுகளிலிருந்தும்கூட உதவி கிடைத்துவந்தது. எனவே எலிஸபெத் இராணி, தேசக்ஷேமத்தின் பொருட்டாவது, ப்ராடெஸ்டன்ட் மதத்தை மாத்திரம் ஆதரிப்பது அவசியமாயிற்று. 1559-ல் அவள் "ஆதிபத்தியச் சட்டம்" (Act of Supremacy) என்ற சட்டமொன்றை இயற்றி, மேரிஇராணியால் மீண்டும் ஸ்தாபிக்கப்பட்டிருந்த போப்பின் அதிகாரத்தை மறுத்துவிட்டாள்; அவளுடைய தந்தை செய்ததைப்போலவே, அவளும் இங்கிலண்டிற்கு இலௌகிக விஷயங்களிலும் வைதிக விஷயங்களிலும் தானே தலைமையான அதிகாரியானாள், ஆனால் போப் செய்து வந்ததைப்போலஅவள் மதகுருமார்கள்மீது அதிகாரம் செலு

த்தும் நோக்கத்துடன் அவ்விதம் செய்யவில்லை; அரசாங்கம், மதஸ்தாபனம் ஆகிய இரண்டையும் பொதுவாகப் பரிபாலித்துவரும் அதிகாரியாகவே நடந்து வந்தாள். அதுபோலவே, அவள் "சமப்படுத்தும் சட்டம்" (Act of Uniformity) என்று ஒரு சட்டமியற்றி, ஆறுவது எட்வர்டின் காலத்தில் வெளியான பிரார்த்தனைப் புஸ்தகத்தை இங்கிலண்டு முழுதிலும் பின்பற்ற வேண்டுமென்றும் கட்டளை செய்யப்பட்டது. சுருங்கக்கூறுமிடத்து, மேரி இராணி செய்த காரியங்கள் யாவும் எலிஸபெத் இராணியால் தள்ளுபடி செய்யப்பட்டு, முற்றிலும் மறைந்து போயின. 1563-ல் அவ்வாறு மதச் சடங்குகள் சம்பந்தமாய் 39 விதிகள் (Thirty-nine Articles) தயார் செய்யப்பட்டதன்றி, ஜனங்களுடைய மதக்கொள்கைகள் அவைகளை அநுசரித்தவையாயிருக்க வேண்டுமென்ற கட்டளையும் பிறப்பிக்கப்பட்டது. எலிஸபெத் இராணி அத்தனை சீர்திருத்தங்களையும் செய்தாளானாலும், உண்மையில் அவள் தனது தந்தை சென்ற வரம்பை மீறிச்செல்ல விரும்பவில்லை. ஸாமர்ஸெட் பிரபுவும், நார்தம்பர்லண்டு பிரபுவும் மதவெறி கொண்டு முரட்டுத்தனமாகப் பல சீர்திருத்தங்களைச் செய்ததுபோலத் தானும் செய்ய அவள் விரும்பவில்லை; பொது ஜனங்களின் எல்லாப் பகுதியினரையும் கூடியவரையில் திருப்திசெய்து, எவரையும் அதிகமாய்ப் பகைத்துக் கொள்ளாமல் நடந்துகொள்ள வேண்டுமென்பது அவளது நோக்கம். ஆனால் அவ்வாறு, உண்மையான மதப்பற்றுதலினால் தூண்டப்படாமல், இராஜீய நோக்கத்துடன் அவள் தந்திரமாக வளைந்து கொடுத்துக்கொண்டு வந்ததானது அவள் கோரிய பலனையளிப்பது துர்லபமாயிருந்தது. ஏனெனில் ப்ராடெஸ்டண்ட் மதக்காரரோ இன்னும் அதிகமான சீர்திருத்தங்களுக்காகப் போராடினர்; காதலிக் மதத்தினரோ ஏற்கனவே செய்த அற்ப மாறுதல்கள் காரணமாகவே அவளை வெறுத்தனர். எனவே இரண்டு கட்சிக்காரர்களையும் திருப்தி செய்விக்கும் முயற்சி கடைசியில் ஒருவருக்கும் சம்மதியாயிராமலே போயிற்று.

ஆனால், ட்யூடர் மன்னர்களது இயற்கைப்படி மன உறுதியையும் பிடிவாதமான மனப்போக்கையும் கொண்டிருந்த எலிஸபெத் ஏற்கனவே விவரித்த மாறுதல்களுடன் நின்று, வேறு மாறுதல்களுக்கு

எல்லோரும் உட்பட்டு நடக்கும்படி செய்ய முயற்சித்தாள். இம்மாறுதல்களை மதகுருமார்கள் அங்கீகரிப்பது அவசியமாயிற்று; ஆனால் மேரி இராணியால் நியமிக்கப்பட்ட கத்தலிக் மதகுருமாரெல்லோரும் இம்மாறுதல்களை எதிர்த்தனர். உடனே இராணி அவர்களை அவர்களதுபதவிகளிலிருந்து நீக்கிவிட்டுத் தனது மனதிற்குகந்த வேறு சிலரை நியமித்தாள். மாத்யூ பார்க்கர் (Matthew Parker) என்பவருக்கு முக்கிய மதகுரு ஸ்தானம் கிடைத்தது; பார்க்கர் என்பவரும் தமது அரசியைப் போலவே இரண்டு கோடிகளையும் விட்டு மத்தியஸ்தமாகச் செல்லும் மனப்போக்குடையவரா யொழுகினார். 1559-ல் எலிஸபெத் ஹை கமிஷன் நீதிஸ்தலம் (High Commission Court) என்ற ஒரு நியாயஸ்தலத்தை ஸ்தாபித்து, தனது மத வற்பாட்டை மீறியவர்களை இந்நியாயஸ்தலத்தில் கடுமையாக தண்டித்துவந்தாள். பலருக்கு அபராதமும், இதர தண்டனைகளும் விதிக்கப்பட்டன. ஏழாவது ஹென்றி, பிரபுக்களை அடக்கும் பொருட்டு 'நக்ஷத்திர கூட நீதிஸ்தலம்,' என்பதை நியமித்தது தெரிந்த விஷயம். இராஜீய சம்பந்தமாக அந்த நீதிஸ்தலமும், மதசம்பந்தமாக, மேற்கூறிய ஹை கமிஷன் நீதிஸ்தலமும் எலிஸபெத்தின் ஆட்சி உறுதியாய் நடைபெறும்படி செய்தன.

ஆனால் அரசியின் உறுதி எவ்வளவு அதிகமாக இருந்தபோதிலும், ஜனங்களின் மனப்போக்கைத் தடுப்பது அழுத்தமான ஒரு சிறிய கோலைக்கொண்டு ஒரு பெரிய வெள்ளத்தைத் தடுக்க முயல்வது போலவே இருந்தது. எலிஸபெத் இராணியின் கட்டளைக்கு பயந்து, கத்தலிக் முறையைப் பின்பற்றியவர் அவளுக்குக் கீழ்ப்படியலாயினர். ஆனால் ப்ராடெஸ்டன்ட்களே அவளுக்குத் துன்பமிழைக்கலாயினர். ஏனெனில் எலிஸபெத்தின் சீர்திருத்தங்கள் அவர்கள் எதிர்பார்த்ததற்கு நிரம்பவும் குறைவாக இருந்தன. மேரி இராணியின் காலத்தில் ப்ராடெஸ்டன்ட்கள் பலர் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டதனால், அவர்கள் ஐரோப்பா சென்று அங்கு சிலவருஷ காலம் இருந்து, எலிஸபெத் பட்டம் பெற்றதும் இங்கிலண்டிற்குத் திரும்பினார்கள். அப்பொழுது ஐரோப்பாவில் பல அமிதமான மத இயக்கங்கள் நடைபெற்றுவந்தன. லூதர் என்பவர் போப்பின் ஆதிபத்தியத்தை விலக்கியபின் புதிய சம்பிரதாயத்தை ஒழுங்குப்

படுத்தி நிலைநாட்டவேண்டியிருந்தது. போப்பின் ஆதிபத்தியத்தை ஒழிப்பதான நிக்கிரக வேலையில் பல தேசத்தினரும் ஒற்றுமையாக நடந்துகொண்டாலும், புதிய மதஸ்தாபனமொன்றை அமைக்கும் நிர்மாணவேலையில் பலதேசத்தினர் வெவ்வேறு முறைகளை அநுஷ்டித்தனர். சில தேசத்தினர் அற்ப சொற்பமான சில மாறுதல்களைமாத்திரம் செய்ததோடு நின்றுவிட்டனர். வேறு தேசத்தினர் பழைய விஷயங்களில் நல்லவை, கெட்டவை யாவற்றையும் ஒருங்கே விலக்கிவிட்டு முற்றிலும் புதிதான முறையை உண்டுபண்ணிக்கொண்டனர். சிலர் நிதானமாகச் சென்றனர்; சிலர் அதிக துரிதமாக முனைந்துசென்றனர். எனவே, ஆதியில் ஒன்றுயிருந்த கிரிஸ்தவ மதஸ்தாபனம் 16-ம் நூற்றுண்டில் ப்ராடெஸ்டன்ட் கா/2 தலிக் என்ற இருபெரும் பகுதிகளாகப் பிரிந்தது; அதன்பின் ப்ராடெஸ்டன்ட் என்ற பெரிய பகுதிக்குள் பல சிறியபிரிவுகள் உண்டாயின. போப்பின் ஆதிபத்தியத்தை ஒழிப்பது என்ற அடிப்படையான விஷயத்தில் ஷெ சிறு பிரிவுகளுக்குள் ஒற்றுமை இருந்தானாலும், சடங்குகள், பூஜை விதிகள் முதலிய விஷயங்களில் அவைகளுக்குள்ளும் எண்ணிறந்த வித்தியாசங்கள் இருந்தன. மேலே கூறியபடி மேரியரசியின் கொடுமைக்கு அஞ்சி ஐரோப்பா சென்று திரும்பிய இங்கிலீஷ்காரரில் பலர் அங்கு தங்கி யிருந்தபொழுது அதிக அமிதமான ப்ராடெஸ்டன்ட் கொள்கைகளைக் கற்றுக்கொண்டிருந்தனர்; முக்கியமாக ஜினிவா (Geneva) என்ற நகரத்தில் அம்மாதிரி அமிதமான முறையை ஜான் கால்வின் (John Calvin) என்பவர் உபதேசம் செய்துவந்தார். கால்வின் எத்தனையோ சீர்திருத்தங்களைச் செய்து, பலரைத் தமது வழிக்குத் திருப்பியிருந்தார்; அவருடைய முறைப்படி ஒரு குறித்த பிரார்த்தனைப் புஸ்தகப்படியேதான் ஆராதனைகள் நடக்க வேண்டுமென்பதில்லை. பழைய கா/2 தலிக் மதத்தில் பல சடங்குகளும் சின்னங்களும் விதிகளும் வழக்கத்திலிருந்து வந்தன. ஆனல் கால்வின் அவைகளெல்லாம் அநாவசிமானவையெனத் தள்ளி விட்டு, சொற்பமான கிரிகைகளுடன் திருப்தியடைந்தார்; அதிக ஆடம்பரமில்லாமல், உண்மையான தூய்மையுடன் கடவுளை வழிபட வேண்டுமென்றும், மதத்தில் சிரத்தையுடனிருப்பதற்கு பரிசுத்தமான வாழ்க்கையே அடிப்படையானது என்றும்

அவர் தமது சிஷ்யர்களுக்கு வற்புறுத்திக் கூறிவந்தார். மனம் வாக்கு காயங்களின் பரிசுத்தத்தையே பிரதானமாகக் கொண்டதனால், கால்வினின் சிஷ்யர்களுக்கு 'ப்யூரிடன்கள்' (Puritans), அல்லது, "தூயவர்கள்" என்ற பெயர் உண்டாயிற்று. அதாவது ப்யூரிடன் முறையானது, ப்ராடெஸ்டன்ட் மதத்தில் அதிக அமிதமான ஒரு பகுதியென்று கூறலாம்.

மேலே விவரித்த ப்யூரிடன் கொள்கைகளை அநுஷ்டித்துஇங்கிலண்டு திரும்பியவர்களுக்கு எலிஸபெத் செய்த சீர்திருத்தங்கள் மிக அற்பமாகத் தோன்றின. கால்வின் முறைப்படி அமைந்த மதஸ்தாபனமும் இங்கிலண்டின் மதஸ்தாபனமும் இரண்டும் ப்ராடெஸ்டன்ட்முறையைத் தழுவியதாகஇருந்ததானாலும் ஒன்றிற்கொன்று அதிக வேற்றுமையும் இருந்து வந்தது. கொஞ்சம் கொஞ்சமாக எலிஸபெத் சீர்திருத்தங்கள் செய்துகொண்டேபோவாள் என்று எதிர்பார்த்த ப்யூரிடன் இங்கிலீஷ்காரருக்கு, அவள் முதலில் செய்த மாறுதல்களோடு நின்றுவிட்டதைக் காண, சகிக்கமுடியாத வெறுப்புண்டாயிற்று. இங்கிலண்டில் ஏராளமான சடங்குகளும், குறிப்பிட்ட முறைப்படி பிரார்த்தனை செய்வதும், மதகுருமார்கள் தனியான உடையணிவதும் அப்பொழுதும் விலக்கப்படாமல் அநுஷ்டானத்தில் இருந்துவந்தன: ப்யூரிடன் முறைக்காரருக்கு அது காதலிக் மதம்போலவே தோன்றியது. அவர்களிற் சிலர் அரசியின் ஏற்பாட்டை மீறவும் துணிந்தனர். சில வருஷகாலம் வரையில் எலிஸபெத் அவர்களுடைய விருப்பத்தின்படி நடக்குமாறு விட்டுவிட்டாள். ஏனெனில் ப்ராடெஸ்டன்ட், காதலிக் ஆகிய இருவகுப்பாரும் அவளை எதிர்த்துக்கொண்டால், அவளுடைய நிலைமை இருதலைக்கொள்ளி எறும்புபோலாய் விடுமல்லவா? ஆனால் காதலிக் மதத்தினரைப் பூர்த்தியாகத் தனது ஆதிபத்தியத்திற்குட்படுத்தியவுடன், அவளது கை வலுத்துவிட்டதாகையால், அதன் பிறகு ப்யூரிடன் அமிதக் கட்சியினரையும் அடக்குவது அவளுக்கு சுலபமாயிருந்தது. 1565-ல் முக்கியமதகுரு பார்க்கர் தமக்குக் கீழிருந்த மதகுருமார்களுக்குத் தொடர்ச்சியாகப்பல விளம்பரங்களை வெளியிட்டுஅவர்கள் நடந்து கொள்ளவேண்டிய ஒழுக்கமுறைகளை திட்டப்படுத்தினார். அவைகள் பார்க்கர் விளம்பரங்கள்(Parker's Advertisments) என்று

பிரசித்தமாயின. ஆனல் ப்யூரிடன் இனத்தார் தமது கொள்கைகளை விடாமல்எதிர்த்துக்கொண்டே வந்து,அரசியும் பார்க்கரும் தமதுவழிக்கிணங்கி வராததைக் கண்டு, இன்னும் பல விஷயங்களிலும் அமிதமான சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமெனக் கிளர்ச்சிசெய்யத் தொடங்கினர். சில ப்யூரிடன் மதகுருமார்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டனர்; அவர்கள் தனியான சங்கங்கள் அமைத்துக்கொண்டு தமது முறையையே பின்பற்றிவந்தனர். அவர்களுக்குப் பல பெயர்கள் தோன்றின. அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட மதஸ்தாபனத்திலிருந்து பிரிந்துசென்றதனல் அவர்களுக்கு 'பிரிந்தவர்கள்' (Separatists—ஸெபரேடிஸ்ட்ஸ்) என்றும், தமதிச்சைப்படி சுதந்திரமாக மதாநுஷ்டானம் செய்து வந்ததால் 'சுயேச்சைக்காரர்' (Independents—இன்டிபென்டென்ட்ஸ்) என்றும், தேசத்தின் மதஸ்தாபனத்திலிருந்து வேறு முறையைப் பின்பற்றியதனல் 'வேறுபடுபவர்' அல்லது 'இணங்காதவர்' (Dissenters-டிஸ்ஸென்டர்ஸ்) என்றும் பல காரணப்பெயர்கள் கிடைத்தன. அவர்களைத்தவிர, இன்னும் பல ப்யூரிடன் இனத்தவர் தமது வேலையை விட்டு நீங்க மனமின்றி,ப்ராடெஸ்டன்ட் மதஸ்தாபனத்தின் உள்ளேயே இருந்து, ஒட்டியும் ஒட்டாமலும் வேலை செய்து, சௌகரியமான சந்தர்ப்பங்களிலெல்லாம்அதன் விதிகளை மீறியும், முடியாதசமயத்திலெல்லாம் அவைகளைப் பின்பற்றியும் வந்தமையால் அவர்களுக்கு 'ஒத்து நடவாதவர்கள்' (Non-Conformists—நான்கன்பார்மிஸ்ட்ஸ்) என்ற பெயர் கிடைத்தது.அதாவதுமுதலில்குறிக்கப்பட்டமூன்றுவகையார்கள் ப்யூரிடன் இனத்தாரை விட அதிக முற்போக்காகச் சென்றவர்கள்; இரண்டாவது வர்க்கத்தார் ப்யூரிடன் இனத்தையே சேர்ந்தவர்களானலும் சற்று பின் தங்கியவர்கள். எலிஸபெத் இராணியின் ஆட்சி முழுதிலும் ப்யூரிடன்கூட்டத்தாருடைய நிலைமை சிலசமயங்களில் கடினமாயும் சில சமயங்கள் சௌகரியமாயும் மாறிமாறி இருந்து வந்தது. கடைசியாக, இங்கிலண்டின் மதஸ்தாபனத்தில் ப்யூரிடன் இனத்தார் ஒரு முக்கியமான பிரிவாக இருந்து வேலை செய்து வந்தனர். எலிஸபெத்தினலும் அவர்களை அழித்துவிட இயலவில்லை; அவர்களால் தமது விருப்பத்தின்படியெல்லாம் இங்கிலண்டின் மதஸ்தாபனத்தை மாற்றியமைத்துவிட முடியவில்லை. இரு

வரும் அடிக்கடி முட்டிக்கொண்டும் மோதிக்கொண்டும், மாறிமாறி வெற்றியும் தோல்வியும் அடைந்து தம்தம் முறைப்படி நடந்து கொள்ள முயற்சித்து வந்தனர்.

இங்கிலண்டில் மேற்கூறிய மதமாறுதல்கள் ஏற்பட்ட சமயத்தில், அதற்கு சமீபத்தில் வடக்கேயுள்ள ஸ்காட்லண்டு தேசத்திலும் அமிதமான மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருந்தன. ஐரோப்பாவில் தோன்றிய மதப்புரட்சி வெள்ளம் எல்லா தேசங்களிலும் பெருகியோடியது. முதலில் ஸ்காட் அரசாங்கத்தார் பழைய காதலிக் மதத்தையே ஆதரித்து, தேசத்திலிருந்த சில ப்ராடெஸ்டனட் மதத்தினரை தண்டித்தும் தேசப்பிரஷ்டம் செய்தும் வந்தனர். அம்மாதிரி தண்டனை யடைந்தவர்களில் ஜான் நாக்ஸ் (John knox) என்பவர் ஒருவர். அவர் ஆறுவது எட்வர்டின் ஆட்சியில் இங்கிலண்டிலேயே அமிதமான மத உபதேசம் செய்துவந்தவர்; உண்மையான மதப்பற்றுத லுடையவர். எட்வர்டு அரசர் உயிர் துறந்தபின், ஜான் நாக்ஸ் ஐரோப்பா சென்று அங்கு முன்பு விவரித்த கால்வின் என்பவருடைய அதிகஅமிதமான முறையில் பற்றுதல்கொண்டார். எலிஸபெத் பட்டத்திற்கு வந்ததும் அவர் இங்கிலண்டிற்குத் திரும்பிவர முயற்சித்தார்; அதற்கு அவ்வரசி அநுமதியளிக்கவில்லை; ஏனெனில் ஜான் நாக்ஸ், ஸ்திரீகள் இராஜ்ஜியபரிபாலனம் நடந்துவதைக் கண்டித்து ஒருபுஸ்தகம் எழுதியிருந்தார். அதன்பிறகு நாக்ஸ் தமது சொந்த தேசம் சென்று அங்கு மத உபதேசம் செய்து தமது அபாரமான திறமையினாலும், விடா முயற்சினாலும் சீக்கிரத்திலேயே ஜயமடைந்தார். ஸ்காட் அரசாங்கத்தார் அவருடைய முயற்சிகளை எதிர்த்துப் பார்த்தனர்; இரு கட்சியினருக்கும் யுத்தமும் நடந்தது. ப்ரெஞ்சுக்காரது சேனையொன்று அரசாங்கத்தாருக் குதவியாக வந்தது ; ஆனால் எலிஸபெத்தின் விருப்பப்படி இங்கிலீஷ்காரர் நாக்ஸ் கட்சிக்கு உதவிசெய்தனர். கடைசியில் நாக்ஸ் தமது முயற்சியின் பலத்தைக்கொண்டே பூர்த்தியான வெற்றியடைந்தார்.ஸ்காட்லண்டு தேசத்துப் பார்லிமெண்ட் சபையார் போப்பின் ஆதிபத்தியத்தை விலக்கிவிட்டு, ஐரோப்பாவில் கால்வின் என்பவர் ஏற்படுத்திய அமிதமான ப்ராடெஸ்டன்ட் முறையைப் பின்பிற்றி, அதையே தேசீய மதமாகவும் செய்தனர்.

ஜனங்கள் மிகவும் குதூகலமாகப் புதிய மதத்தைஏற்றுக்கொண்டனர். அந்தக் குதூகலத்தில் அவர்கள் பழைய மடாலயங்களையும் அவைகளது நிலங்களையும் சொத்துக்களையும் நாசமாக்கினர். ஆனால்அந்தக் குழப்பம் நிரந்தரமான கேட்டை விளைவிக்காதபடி நாக்ஸ் கவனித்துக் கொண்டார். மடங்களின் சொத்துக்களைக்கொண்டு அவர் ஏழைகளுக்குப் பல உதவிகளைச் செய்து கிராமங்கள் தோறும் பல பாடசாலைகளையும் ஏற்படுத்தினார். மேலும் மதஸ்தாபனம் எவ்விதமான பழுதுமின்றி உறுதியாகவும் திடமாகவும் நடைபெறும்படி அவர் செய்தார். அவ்வித மமைக்கப்பட்ட புதிய மதஸ்தாபனத்தில் ஜனங்களுக்கு மாறாத பற்றுதல் உண்டாயிற்று. இங்கிலண்டில் அமிதமான ப்ராடெஸ்டன்ட் மதத்தினருக்கு ப்யூரிடன் முதலிய பல காரணப்பெயர்கள் தோன்றி நிலைத்ததுபோலவே, ஸ்காட்லண்டில் ஜான் நாக்ஸ் வேரூன்றச் செய்த அமிதமான ப்ராடெஸ்டன்ட் மதத்திற்கும் ஒரு காரணப்பெயர் உண்டாயிற்று. ஸ்காட்லண்டில் மதஸ்தாபன நிர்வாகம், இங்கிலண்டில் இருப்பது போல மதகுருமார்களிடம் ஒப்படைக்கப்படாமல், அந்தஸ்துடைய சில மதாபிமானிகளின் வசத்தில் இருந்தது. அந்த மதஸ்தாபன நிர்வாக சபைகளுக்கு ப்ரேஸ்பிடர்ஸ் (Presbyters) என்றுபெயர்; எனவே அதைக் காரணமாகக்கொண்டே, ஸ்காட்லண்டின் அமித மத முறைக்கு ப்ரேஸ்பிடீரியன் முறை (Presbyterianism) என்ற பெயர் நிலைத்தது. அதாவது இங்கிலண்டில் ப்யூரிடன் மதமும் ஸ்காட்லண்டில் ப்ரெஸ்பிடீரியன் மதமும் ஏதோ சில மேற்போக்கான விஷயங்கள் தவிர, அடிப்படையான விஷயங்களில் ஒற்றுமையாகவே இருந்தன. ப்ரெஸ்பிடீரியன் முறையை அநுஷ்டித்தது முதற்கொண்டு ஸ்காட்லண்டின் சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தம் ஏற்பட்டது எனலாம்; ஏனெனில் ஜனங்களுக்கு அப்பொழுது ஒரு புதிய உணர்ச்சி தோன்றியது. இங்கிலண்டிலும் ஸ்காட்லண்டிலும் புதிய மதம் பரவிய முறை வெவ்வேறுவிதமானது. ஸ்காட்லண்டில் ஜனங்கள் தாமாகவே உணர்ச்சி பெற்று, பழைய முறையை ஒரேயடியில் வீழ்த்தி, மிக துரிதமாகப் புதிய முறையை அநுஷ்டித்தனர்; இங்கிலண்டிலோ மதமாறுதல் மெதுவாகவே ஏற்பட்டது; அது பல இராஜீய விஷயங்களுக்கேற்றபடி

வளர்ந்து கொடுத்துக்கொண்டும், அந்தந்த அரசருடைய மனப்போக்கின்படி சீர்திருத்தப்பட்டும் வந்தது; சில இங்கிலீஷ்காரர்கள் பழையமுறையையும் விடடவிடாமல் புதியமுறையையும் அநாதரவு செய்யாமல் ஊசலாடிக் கொண்டுவந்தனர். அதாவது, ஸ்காட்லண்டில் பூர்த்தியான மதப்புரட்சி ஏற்பட்டது; பழையது முற்றிலும் மறைய, மின்னற்கொடிபோலப் புதிய மதம் தோன்றி நிலைத்துவிட்டது. இங்கிலண்டில் பழைய மதமும் புதிய மதமும் சந்தித்து, சமாதானம் செய்துகொண்டதுபோலத் தோன்றியது. ஆனால் இம்மத மாறுதல்களினால் ஒரு பெரிய நன்மை ஏற்பட்டது. நெடுங்காலமாக ஸ்காட்லண்டும் இங்கிலண்டும் விரோதமான மனப்பான்மையோடிருந்துவந்தன. இப்பொழுது இரண்டு தேசங்களும் போப்பின் ஆதிபத்திய வட்டத்தை விட்டு வெளியேறிவிட்டமையால், அவர்களுக்குள் ஒரு சகோதரத்தன்மை ஏற்பட்டது. அப்பொழுது ஐரோப்பாவில் ஒரு தேசத்தின் மதத்தைக் காரணமாகக்கொண்டே பல போர்கள் நேரிட்டதாகையால், அடிப்படையாக ஒரே மதத்தைத் தழுவியிருந்த இவ்விரு தேசங்களும் பகைமை கொள்வதைவிட நட்புக் கொள்வதற்கே சந்தர்ப்பங்கள் அதிகமாயிருந்தன.

இதுவரையில் இங்கிலண்டில் எலிஸபெத் செய்த மத ஏற்பாட்டையும், இங்கிலீஷ் ஜனங்களின் அப்பொழுதைய மத நிலைமையையும் விரிவாகக் கூறினோம். எட்டாவது ஹென்றியின் காலத்தில் போப்பிற்கு விரோதமாக மதப்புரட்சி தோன்றிப் பெருவெள்ளமாகப் புரண்டோட, ஏறக்குறைய அரை நூற்றாண்டுக்குப் பின்னர் எலிஸபெத் ஆட்சி புரிந்துவந்தாள். காதலிக் மதம், ப்ராடெஸ்டன்ட் மதம் ஆகிய இரண்டும் அப்பொழுதும்கூட ஒன்றோடொன்று சச்சரவிட்டு வந்தன. லூதர் இறந்தபின் அவரைக் காட்டிலும் அதிக ஊக்கம் கொண்ட கால்வின் புதிய மதத்தைப் பரப்பிவந்தார். அந்தப் புதியமதம் தோன்றியதற்குக் காரணத்தைக் கூறும்போது, பழைய காதலிக் மதஸ்தாபனத்திலுள்ள ஊழல்களே முக்கிய காரணமென்று கூறினோம். லூதருடைய எதிர்ப்பைக் கண்டபின்னர், போப்பும் அவருடைய சிஷ்யர்களும் தங்களிடம் இருந்த சீர்கேடுகளை அகற்றுவதற்குப் பல முயற்சிகள் செய்தனர். தம்மிடமிரு

ந்த கெடுதல்களினால் காரியம் அடியோடு கெட்டுப்போன பின்னரே அவர்களுக்கு விவேகம் உதயமாயிற்று. எனவே, ஐரோப்பாவில் 16-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தோன்றிய மதப்புரட்சியானது நாளடைவில் அது எதிர்த்துவந்த கா/2தலிக் மதஸ்தாபனத்திற்கே ஒரு நன்மையைச் செய்தது; அதனால் தாக்குண்ட கா/2தலிக் மதம் நித்திரை தெளிந்தெழுந்து, அழுக்கு நீங்க ஸ்நானம் செய்து, சுத்தமாய்த் தலையெடுப்பதுபோல மாறியது. இயற்கையமைப்பில், ஒரு சிறிய இயக்கம் ஏற்பட்டாலும், அதற்கு சமமான வேகத்தையுடைய எதிர் இயக்கம் ஒன்று அவசியம் ஏற்படும். எனவே, மதப்புரட்சி தோன்றியதன் பயனாய்ப் புதிய மதம் ஸ்தாபிக்கப்பட்டபின், அதற்குச் சமமான வேகத்துடன் ஓர் எதிர் இயக்கம் ஏற்பட்டு, கா2தலிக் மதத்திற்குப் புத்துயி ரளித்தது. கா2தலிக் மதம் தனக்கு எதிராகத் தோன்றிய ப்ராடெஸ்டன்ட் முறையைப் பூர்த்தியாக அழிக்கமுடியாமற்போனாலும், அது ஆதியில் பெற்றிருந்த கௌரவத்தையும் செல்வாக்கையும் ஓரளவிற்குத் திரும்பப் பெற்றது. அது மத மாறுபாட்டிற்கு எதிரிடை இயக்கம் (Counter-Reformation) என்றுகுறிக்கப்படுகிறது. அந்த இயக்கத்திற்கு அநுகுணமாக பல சங்கங்களும் அப்பொழுது ஸ்தாபிக்கப்பட்டன. அவைகள் பாமர ஜனங்களுக்கு மதக்கோட்பாடுகளை எடுத்துக்கூறி உபதேசம் செய்தன. அவைகளில் முக்கியமாக, இக்னேஷஸ் லயோலா (Ignatius Loyola) என்பவரால் ஸ்தாபிக்கப்பட்ட ஏசுநாதர் திருக்கூட்டத்தார் (Order of Jesus) மிக ஊக்கத்துடன், ஏராளமான தியாகமும் செய்து, கா/2தலிக் மதத்திற்கு அரியசேவைகள் புரிந்து வந்தனர். அந்தச் சங்கத்தைச் சேர்ந்த பாதிரிமார்கள் உலகம் முழுதும் சென்று மதோபதேசம் செய்து வந்தனர்; இன்னமும் அவர்களின் சந்ததியார் அந்தக் கைங்கரியத்தைச் செய்து வருகின்றனர். பல அரசர்கள் கா/2தலிக் மதத்தைப் புனருத்தாரணம் செய்வதில் போப்புக்கு உதவிபுரிந்தனர். மேற்கூறிய மாறுபாடுகளின் பயனாக, ஐரோப்பாக் கண்டம் இரண்டு பெரிய பிரிவுகளாகப் பிளவுபட்டது; வெவ்வேறு மதத்தை ஆதரித்த அரசர்கள் ஒருவரையொருவர் ஜன்மப் பகைவர்களாய் மதித்துப் போர்புரிந்தனர். இராஜீயச் சச்சரவுகள் சம்பந்தமாக விரோதம் ஏற்பட்டதைக் காட்டிலும், மதசம்பந்த

மாகவே அதிகமான பகைமை ஏற்பட்டது. சுமார் ஒரு நூற்றாண்டு காலம் வரையில் மதச்சண்டைகள் ஐரோப்பாவில் இரத்த வெள்ளம் புரண்டோடும்படி செய்துவிட்டன. இத்தகைய வரலாறுகளை நாம் விவரித்தது, எலிஸபெத் இராணியின் ஆட்சியை விவரித்துக் கூறுகையில், அப்பொழுது ஐரோப்பாவின் நிலைமை மேலே கூறிய படி இருந்ததென்பதை கவனத்தில் வைக்கும்பொருட்டேயாகும். இங்கிலண்டில் இராணியின் திறமையான ஆட்சியினால் இரண்டு மதத்தினரும் சண்டையிட்டுக் கொள்ளவில்லையானாலும், எலிஸபெத் அரசியல் நிர்வாகம் நடாத்துவதில் ஐரோப்பாவின் நிலைமையை நன்றாகக் கவனித்துக்கொள்வது அவசியமாயிற்று.

(2) **ஸ்காட் இராணி மேரியின் வரலாறு:**-ஸ்காட் இராணிமேரியைப்பற்றி முன்னரே கூறியிருக்கிறோம். ஆறாவது எட்வர்ட் அரசருக்கு பதிலாக நிர்வாகம் நடத்திவந்த ஸாமர்ஸெட் பிரபு, ஸ்காட்லண்டின் பட்டத்திற்கு வார்சுதாரியாக இருந்த மேரி என்பவளை இங்கிலீஷ் அரசருக்கு மணம் செய்துவைக்க முயன்றதும், பிங்கி என்ற இடத்தில் நடந்த சண்டைக்குப் பிறகு அந்த முயற்சி பயனற்றுப்போனதும் ஞாபகமிருக்கலாம். அந்த ஸ்காட் இராணி மேரி இளமைப்பருவத்தில் ப்ரான்ஸ் தேசத்தில் வளர்ந்துவந்தமையால், அவள் ப்ரெஞ்சுக்காரரது குணங்களையே விசேஷமாகப் பெற்றிருந்தாள்; மேலும் அவளுடைய தேசத்தினர் அமிதமான புதிய மதத்தைப் பின்பற்றி யிருக்கையில் அவள் காதலிக் மதத்தையே ஆதரித்துவந்தாள். அவள் எலிஸபெத்தினது ஆட்சியின் முற்பகுதியில், என்று மழியாப் பெயர் உண்டாகும்படி இங்கிலண்டின் அரசியல் துறையில் சம்பந்தப்பட்டிருந்து சென்றாள். அந்த ஸ்காட் இராணி அழகும், வசீகர குணமும், சாமர்த்தியமும், பிறருடைய அன்பை எளிதில் பெறும் மிருதுத்தன்மையும் உடையவள். எலிஸபெத் இராணியும் ஸ்காட் இராணி * மேரியும் சில

---

* எலிஸபெத்திற்குமுன் இங்கிலண்டில் அரசுபுரிந்த அவளுடைய சகோதரி மேரியும், மேலே கூறிய ஸ்காட் இராணி மேரியும் வெவ்வேறானவர்கள்.

அம்சங்களில் ஒரேமாதிரியானவர்கள்; சில அம்சங்களில் வேறுபட்டவர்கள். இங்கிலீஷ் இராணியின் டாம்பீகமும், ஆடம்பரமும், தந்திரமும் மேரியிடம் காணப்படவில்லை; எலிஸபெத்தினிடம் இருந்த இராஜ்ஜிய நிர்வாகத்திற் கின்றியமையாத விடாமுயற்சியும், சமயோசித புத்தியும் மேரியிடம் இல்லை. ஆனால் இருவரும் அதிக அதிகாரம் பெற்று, பூர்த்தியான அரசாட்சி நடத்தவேண்டுமென்று விரும்பினார்கள்; அதில் மேரி இராணி பின்னடைந்தாள். எலிஸபெத் தனது நிதான புத்தியைக்கொண்டே வெற்றியடைந்தாள். இருவருக்கும் மிக அதிகமான மதப்பற்றுதல் இல்லாமல்போனாலும், சமய சந்தர்ப்பங்களுக்கேற்றபடி அவர்கள் மதச்சச்சரவுகளில், தலைமை வகிக்க வேண்டியதாயிற்று. ஸ்காட் இராணி, பழைய காதலிக் மதத்தையே ஆதரித்தாள்; இங்கிலீஷ் இராணியோ ப்ராடெஸ்டன்ட் மதத்தை ஆதரிக்கவேண்டியிருந்தது. ஆனால், எலிஸபெத் மிகவும் அதிருஷ்ட-சாலி; அவள் எடுத்த காரியங்களெல்லாம் அநேகமாய் வெற்றியடைந்தன; மேரி இராணியோ துர்ப்பாக்கியவதி; அவள் செய்த முயர்சிகளெல்லாம் பலிதமடையாமல்போயின. அவள் அசாத்தியமான விஷயங்களில் தலையிட்டு பொருளையும் ஆயுளையும் வீணாக்கி மிரம்பவும் பரிதாபகரமான வாழ்க்கை வாழ்ந்து முடிவில் உயிர்துறந்தாள்; எலிஸபெத் ஒரு தேசத்தின் ஜனங்கள் எல்லோராலும் கொண்டாடப்பட்ட இராணியாயிருந்ததற்கு மாறாக மேரியிராணி தனது சொந்த தேசத்தினராலேயே வெறுக்கப்பட்டாள். அவ்விதம் ஸ்காட் இராணிக்கும் இங்கிலீஷ் இராணிக்கும் இருந்த வேற்றுமைகளின் பயனாக அவ்விருவருக்குமே எளிதில் பகைமை எற்பட்டு முற்றிப்போயிற்று.

எலிஸபெத்திற்குமுன் இங்கிலண்டில் அரசுபுரிந்த அவளுடைய சகோதரி இரத்தவெறிபிடித்த மேரியிராணி, ஸ்பெயின் தேசத்துச் சக்கரவர்த்தியான இரண்டாவது பிலிப் என்பவரை மணந்துகொண்டதும், அவருக்கு யுத்தத்தில் உதவிசெய்து, ப்ரெஞ்சுக்காரரை விரோதித்துக்கொண்டு, காலே நகரத்தை இழந்ததும் முந்திய அதிகாரத்தில் விளக்கப்பட்டன. எலிஸபெத் பட்டத்திற்கு வந்த பின்னும் அந்த பிலிப் சக்கரவர்த்தியே ஐரோப்பாவில் முதன்மையான ஸ்தானம் வகித்திருந்தார். அவர் காதலிக் மதத்தை ஆத

ரித்தமையால், ப்ராடெஸ்டன்ட் மதத்தினரைக் கொடுமையாக நடத்திவந்தார். பல ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் தீக்கிரையாக்கப் பட்டனர். அவ்விதமே ப்2ரெஞ்சு அரசாங்கமும் கா2தலிக் மதத்தையே ஆதரித்து வந்தது. முன்பே கூறியபடி அக்காலத்தில் மத வேற்றுமைகளின் பயனாக, தேசங்களுக்குள் விரோதம் உண்டாவது சகஜமாக இருந்தமையால் ஸ்பெயின், ப்2ரான்ஸ் ஆகிய இரண்டு தேசங்களும் இங்கிலண்டிற்கு விரோதமாயின; ஏனெனில் இங்கிலீஷ் இராணி புதிய மதத்தையே பின்பற்றிவந்தாள்.

ஸ்காட் இராணி மேரி இளமையில் ப்2ரெஞ்சு தேசத்தில் வளர்ந்ததாலும், கா2தலிக் மதத்தில் பற்றுதல் கொண்டிருந்ததாலும், எலிஸ2பெத் அவளிடம் சந்தேகம் கொள்வதற்கு இடமிருந்தது; போதாக்குறைக்கு ஸ்காட் இராணிமேரி இன்னொரு பைத்திக்காரச் செய்கையையும் புரிய எத்தனித்தாள். எட்டாவது ஹென்றி, ஆ2ன் பொலீனை இரண்டாவது தாரமாக மணந்துகொண்டது கிரமத்தவறுன செய்கையாதலால் ஆ2ன்பொலீனுக்குப் பிறந்த எலிஸபெத் பட்டத்திற்கு வர அருகமற்றவளென்றும் தனக்கே இங்கிலண்டின் பட்டம் கிடைக்க வேண்டுமென்றும் அவள் கூறிவந்தாள். அதனால் எலிஸ2பெத்திற்கு அவள்மீது இருந்த வெறுப்பு அதிகமாயிற்று. இங்கிலண்டில் இருந்த கா2தலிக் மதத்தினரை அவள் கிளப்பி விட்டுவிடுவாளோ என்று எலிஸ2பெத் அஞ்சினள். ஆனால் ஸ்காட் இராணி மேரிக்கு அவளது சொந்த நாட்டிலேயே அதிகாரமில்லாதபடி ப்ரெஸ்பிடீரியன் மதத்தினர் செய்துவிட்டனர். அவர்களிடம் எலிஸ2பெத் அபிமானமுடையளாயிருந்து அவர்களுக்கு சிறிதளவு உதவியும் புரிந்திருந்தாள்.

ஸ்காட் இராணி மேரி ப்2ரெஞ்சு அரசரை மணந்து கொண்டிருந்தமையால், ப்2ரான்ஸ் தேசத்தில் கொஞ்சகாலம் அவளுக்கு செல்வாக்கு இருந்துவந்தது. ஆனல் 1561-ல் அவளது கணவன் இறந்தபிறகு அந்த தேசத்தில் அவளுடைய செல்வாக்குக் குறைந்து போய்விட்டது. அதன்பிறகு அவள் தனது சொந்த தேசத்திற்கு வந்து, மிகுதியிருந்தகாலத்தில் அந்த தேசத்து இராஜீயச் சுழல்களில் வலுவில் அகப்பட்டுக்கொண்டு அல்லற்படலானள். ப்2ரெஞ்சு

தேசத்தில் அவள் அமைதியாகவும் சுகமாகவும் இருந்துவந்தாள்; ஸ்காட்லன்டு தேசத்தினரோ அவளுடைய மதப்பற்றுதலையும் குணத்தையும் வெறுத்து, அவளுடைய அதிகாரத்தைப் புறக்கணித்துவந்தனர். அந்த அபாயகரமான இடத்தில் மேரியிராணி தனது அதிகாரத்தை நிலைநாட்ட முனைந்தாள்: அவள் கால்வைத்த இடமெல்லாம் படுகுழிகளாகவே இருந்தன.

ஆனால் மூன்று நான்கு வருஷகாலம் வரையில் அவள் தனது விஷப்பல்லைக் காட்டாமல் அமைதியாக இருந்து ஜனங்களுடைய இச்சைப்படி நிர்வாகம் நடக்கும்படி விட்டு அதனால் பல பிரபுக்களை வசியமாக்கிக்கொண்டாள். ஆனால் ஜான் நாக்ஸ் முதலியோர் போன்ற அமிதக்கட்சியினர் அவளை முதலிலிருந்து முடிவுவரையில் கடுமையாக வெறுத்துவந்தனர்.

மூன்று நான்கு வருஷகாலத்திற்குப் பிறகு, மேரி பெயருக்கு மாத்திரம் இராணியாக இருப்பதில் திருப்தியடையாமல், பலவழிகளில் தனது அதிகாரத்தை ஸ்தாபித்துக்கொள்ள முயற்சித்தாள். ஸ்காட்லன்டில் அவளுடைய முயற்சி பலியாததாகத் தோன்றியதாகையால், அவள் இங்கிலன்டின் மீது கண்ணோக்கம் வைத்தாள். தான் இங்கிலன்டின் அரசி ஆக வேண்டுமென்று அவள் விரும்பினாள். இங்கிலண்டில் அடங்கி ஒடுங்கிக்கிடந்த கத்தலிக் மதத்தினர் எலிஸபெத்தின் ஆட்சியில் வெறுப்படைந்து, கத்தலிக் மதத்தை ஆதரிக்கும் மேரியிராணிக்கு உதவத் தயாராயிருந்தனர்; மேரியிராணியும் அவர்களுடைய கட்சியை ஆதரித்துப் போராடுவதற்குத் தயாராயிருந்தாள். 1565-ல் அவள் கத்தலிக் மதத்தினரான டார்ன்லி (Darnley) என்பவரை இரண்டாவது புருஷராக மணந்துகொண்டாள். டார்ன்லி என்பவர் இங்கிலண்டின் கத்தலிக் மதத்தினருக்குத் தலைவராயிருந்தமையால், மேற்கூறிய விவாகம் எலிஸபெத்திற்கு அச்சத்தை உண்டாக்கியது.

ஆனால் முதலிலிருந்தே அந்த மணம் அசுபமாகவே இருந்துவந்தது. டார்ன்லி என்பவர் தமது யோசனைப்படி நடக்கும் திறனற்றவர் என்பதைக் கண்ட மேரிக்கு அவர்மீது இருந்த பிரியம் குறைந்தது. அவள் ரிக்கியோ (Riccio) என்ற ஓர் அன்னிய

தேசத்தானைத் தனது அந்தரங்க நண்பனுய்ச் செய்துகொண்டாள். அதனுல் டார்ன்லிக்குப் பொருமை ஏற்பட்டது. டார்ன்லியினுல் நியமிக்கப்பட்ட சில முரடர்கள் 1566-ல் ரிக்கியோவும் மேரியிராணி யும் போஜனம் செய்து கொண்டிருந்த சமயத்தில், உட்புகுந்து ரிக்கியோவை வெளியில் இழுத்துவந்து, குத்திக் கொன்றுபோட்டு விட்டனர். மேரியிராணி சமயத்திர்கேற்றபடி தந்திரமாக நடந்து மறுபடி டார்ன்லியைத் தனது வசப்படுத்திக் கொண்டாள். ஆனுல் அவர்களுக்குள் உண்மையான காதல் இருந்தாலல்லவா அந்த நட்பு நீடித்திருக்கும். ஒருவர் மற்றவரைத் தமது கருவியாக வைத்துக் கொண்டு சுயநலத்தை அடையும் நோக்கம் கொண்டவராகவே யிருந்தமையால், மறுபடியும் அவர்களுக்குள் மனஸ்தாபம் ஏற்பட்டது. பாத்வெல் பிரபு என்ற ஒரு புதிய கனவானின்மீது மேரி யிராணிக்குப் பற்றுதலேற்பட்டதனுல், அவள் அந்தப் பிரபுவினிடம் அடிமைபோலப் பணிவாக நடந்துவந்தாள்; அவர்களுடைய நடவடிக் கைகளைப்பற்றிப் பலவிதமான அபவாதச் சொற்கள் பிறந்தன. பாத் வெல் பிரபுவுக்கு மேரியிராணியை மணந்துகொள்ள விருப்பம் இருந்தமையால், டார்ன்லியைக் கொன்றுவிட வேண்டுமென்று அவர் தீர்மானம் செய்து கொண்டார். 1567ல் ஒரு நாளிரவில் டார்ன்லியின் விடுதி வெடிமருந்தினுல் தூளாக்கப்பட்டது; டார்ன் லியின் பிரேதம் அதற்கருகில் கிடந்தது. பாத்வெல் பிர புவே அந்தக் கொலையைச் செய்தார் என்பதில் அணுவளவும் சந் தேகமில்லை. மேரியிராணியும் அதில் சம்பந்தப்பட்டிருந்ததும் தெற்றென விளங்கியது; மேரியிராணியின் பதிபக்தியை என்ன வென்று சொல்வது!

ஆனுல் மேரியிராணி வெளிப்பார்வைக்குக் குற்றமற்றவள்போல நடந்துகொண்டாள். போலி விசாரணையொன்று நடத்தப்பட்ட பின், பாத்வெல் பிரபு விடுவிக்கப்பட்டார். அவர் மறுபடியும் பகிரங்கமாக மேரியிராணியுடன் உறவாடிவந்தார். ஜனங்களின் ஆட்சேபணைக்கு இலக்காகாமல் அவரை மணந்துகொள்ள மேரி யிராணி ஒரு தந்திரம் செய்தாள்; இராணி ஏதோ ஓர் ஊருக்குச் சென்று திரும்புகையில், அவர் பலவந்தமாக அவளை மடக்கி மணந்து

கொண்டதாகத் தோன்றும்படி ஒரு சூழ்ச்சி செய்தாள். ஆனால், அதைக் கண்டு எவரும் ஏமாறவில்லை. ஸ்காட்லன்டிலிருந்த பிரபுக்களும் பொது ஜனங்களும் சேர்ந்துகொண்டு அரசியையும் அவளுடைய மூன்றாவது புருஷரையும் எதிர்த்தனர். மேரியிராணி பலவழிகளில் முயன்று பார்த்தாள். அவளை எல்லோரும் கைவிட்டு விட்டனர். ஸ்காட் இராணி கைதியானாள். அவளுடைய சிறு பிராயத்துப் பிள்ளை ஆறவது ஜேம்ஸ் (James VI) என்ற நாமதேயத்துடன் பட்டத்திற்கு வந்தார். ஒருவருஷத்திற்குப் பின் மேரியிராணி சிறையிலிருந்து தப்பிவந்து, மறுபடியும் ஒரு சேனையைச் சேர்த்துக்கொண்டு தனது அதிகாரத்தை நிலைநிறுத்த முயன்றாள். அது பலியாமற்போகவே, வேறுவகை யில்லாமையால் அவள் இங்கிலண்டிற்குச் சென்று, அவளுடைய விரோதியான எலிஸபெத்தினிடம் சரணகதி யடைந்தாள்.

எலிஸபெத்தின் நிலைமை அப்பொழுது நிரம்பவும் சங்கடமாயிருந்தது. அதுவரையில் மேரியிராணி தூரத்தில் இருந்தபடி ஏதோ ஒருசமயத்தில் துன்பம் விளைவித்துவந்தாள். மேரியிராணியை இங்கிலண்டில் வைத்துக்கொள்வது நெருப்பை மடியில் கட்டிக்கொள்வதுபோல எலிஸபெத்திற்குத் தோன்றியது. மேரியிராணியின் வேண்டுகோளுக் கிணங்கி அவளுக்குப் பாதுகாப்பும் அபயமும் அளித்தால், அதனல் ஸ்காட் ஜனங்களின் பகைமையை சம்பாதித்துக் கொள்வதாகும். அவ்விதம் செய்யாவிடில், மேரியிராணி ப்ரான்ஸ் தேசத்திற்குச் சென்று அங்கிருந்தபடி விஷமம் செய்துவருவாள். அவளை இங்கிலண்டில் வைத்துக் கொண்டாலோ, கத்தலிக் மதத்தை ஆதரித்த இங்கிலீஷ்காரர்கள் அவளை விடுவித்துச் சிம்மாதனத்தி லமர்த்த முயற்சிப்பார்கள். எனவே, மேரியைப் பாதுகாப்பதும் நிராகரிப்பதும் இரண்டும் அபாயகரமாகத் தோன்றியதாகையால், எலிஸபெத் ஒரு யுக்தி செய்தாள். அதாவது, திடமான ஒரு முடிவிற்கும் வாராமல் நிதானமாக முன் செல்லுவதே சரியென அவள் நிச்சயித்தாள். அதன்படி அவள், தன்னுடைய முடிவைத் வெளிப்படுத்துவதற்கு முன், டார்ன்லியைக் கொன்ற குற்றம் மேரியிராணியைச் சேருமா சேராதா என்பதை நிச்சயிக்க வேண்டுமென்றும், அதன்பிறகே

தன்னால் ஒருவித முடிவிற்கு வரமுடியுமென்றும் கூறி, ஒரு விசாரணைச் சபையை நியமித்தாள். மேரி இராணியின் பகைவர்கள் அவள் குற்றவாளி என்பதை அநேக விதங்களில் நிரூபித்தனர். ஆனால் விசாரணைச் சபையார் எவ்விதமாகவும் முடிவு செய்யவில்லை. மேரியிராணியைக் குற்றவாளியென்று தண்டிக்காமலும், குற்றவாளியல்லவென்று விட்டுவிடாமலும் திரிசங்கு சுவர்க்கத்தில் வைத்திருப்பதே எலிஸபெத்திற்கு அநுகூலமாக இருந்தது. ஏனெனில், பின்னால் சமய சந்தர்ப்பத்திற்கேற்றபடி மேரியிராணியின் விஷயத்தில் நடந்து கொள்ளலாமென்று அவள் அவ்வாறு தந்திரம் செய்தாள். மேரியிராணி கௌரவமாகவே சிறையில் வைக்கப்பட்டிருந்தாள். எலிஸபெத்தின் சாமர்த்தியத்தால் இருதிறத்தாரும் ஒருவாறு திருப்தியடைந்தனர்.

அவ்வாறு செய்த பின்னும், எலிஸபெத்தின் அபாயம் நீங்கவில்லை. அநேக வருஷகாலம், அவளது உயிருக்கே அபாயம் நேரிடும் போல இருந்தது. 1509-ம் வருஷத்தில் இங்கிலண்டின் வடக்கில் சில பிரபுக்கள் பெரிய கிளர்ச்சி செய்தனர். எலிஸபெத் அதை அடக்கினாளானாலும், அவளுடைய பகைவர்கள் வேறு பலவழிகளில் அவளுக்குத் தீங்கிழைக்க முயன்றனர். 1570-ல் காதலிக் முறையினருக்கு முக்கிய குருவான போப், எலிஸபெத் இராணியை மதப்பிரஷ்டம்செய்து, அவள் அரசாட்சிநடத்த யோக்கியதையற்றவளென்று ஒரு ஸ்ரீ முகம் விடுத்தார். ஆனால் போப்பின் உத்தரவுக்கு இங்கிலண்டில் மதிப்பு இருந்த காலம் சென்றுவிட்டது. பார்லிமெண்ட் சபையார் போப்பிற்கு விரோதமாகவும் காதலிக்களுக்கு விரோதமாகவும் சட்டங்கள் இயற்றினர். போப்பின் ஆதிபத்தியத்திற்குட்பட்டவர்கள் இராஜத் துரோகிகளாகக் கருதப்பட்டனர். அதனால், காதலிக் மதத்தினர் பலர் சதியாலோசனைகள் செய்து எலிஸபெத்தின் உயிருக்கே ஹானி தேடிக்கொண்டிருந்தனர்.

1571-முதல் அதுபோன்ற பல சதியாலோசனைகள் நடந்து கொண்டே இருந்தன. ஆனால் பெரும்பான்மையான இங்கிலீஷ்காரரும், பார்லிமெண்ட் சபையாரும் எலிஸபெத்தினிடம் உண்மையான அபிமானத்தோடு நடந்துகொண்டு, அரசியின் பகைவர்

களைப் பலவிதங்களில் எதிர்த்து அவர்களுடைய முயற்சிகள் பலிக்காமல் போகும்படி செய்துவிட்டனர். பல கா/2தலிக்காரர்கள் கொடுமையாக நடத்தப்பட்டனர். 1586-ல் மற்ற எல்லாவற்றையும் விட மிகப் பெரியதான ஒரு சதியாலோசனை நடந்தது வெளிப்பட்டது. பேபிங்டன் (Babington) என்ற அற்ப புத்தி படைத்த ஒரு பகைவன் எலிஸ2பெத்தைக் கொன்றுவிடுவதற்கு ஏற்பாடுகள் செய்துவந்தான். ஆனால் தான் செய்யக் கருதிய காரியத்தை அவன் இரகசியமாக வைத்துக்கொள்ளாமல் பெருமையாகச் சிலரிடம் கூறிவிட்டான். அதனால் அவனுடைய எண்ணம் பலியாமல் போய்விட்டது. அவனே தனது சகாக்களுடன் உயிர்துறந்தான். ஆனால் அவ்விஷயம் அதோடு நின்றுவிடவில்லை. ஸ்காட் இராணி மேரியினால் சிறையிலிருந்து ஷ்டி பேபிங்டனுக்கு எழுதப்பட்ட சில கடிதங்கள் அகப்பட்டன. அதிலிருந்து மேரியிராணியும் அந்த சதியாலோசனையில் சம்பந்தப்பட்டிருந்தது வெளியாயிற்று.

எலிஸ2பெத் அதைக் கேட்டு திகிலடைந்தாள். அதன் பின்னும் மேரியிராணியை உயிரோடு வைத்திருப்பது அபாயகரமென்று தோன்றவே, அவள் மறுபடி ஒரு விசாரணைச் சபையை ஏற்படுத்தி, மேரியிராணியின் குற்றத்தைப் பரிசீலனை செய்யும்படி உத்தரவு செய்தாள். மேரி யிராணியோ, தானே முடிசூடிய ஓர் இராணியாதலால், தனக்குச் சமமான மற்றோர் அரசியின் விஷயத்தில் தான்'இராஜத் துரோகக்குற்றம்'செய்திருக்க முடியாதென்றும், தன்னை விசாரணை செய்யவோ தண்டிக்கவோ அந்த அரசிக்கு உரிமை இல்லையென்றும் வாதம் செய்தாள். ஆனாலும், அவள் இராஜத்துரோகக் குற்றம் செய்ததாக 1586-ல் மரணதண்டனை விதிக்கப்பெற்றாள். ஆனால் அந்த தண்டனையை நிறைவேற்றாமல் நீண்டகாலம் எலிஸ2பெத் தாமதித்துப் பார்த்தாள். பார்லிமென்ட் சபையாரோ துரிதப்படுத்தி மேரியிராணியைக் கொன்றுவிடும்படி உத்தரவளித்த பின்னும், அந்த ஆக்ஞைச் சீட்டை அனுப்பவேண்டாமென்று எலிஸ2பெத் கூறிவிட்டாள். ஆனால் மந்திரி முதலியோருடைய உத்தரவின்படி அரசியின் காரியதரிசி அதை அனுப்பிவிட்டார். 1587-ல் ஸ்காட் இராணி மேரி தூக்கிலிடப்பட்டு உயிர்

துறந்தாள். ஆனால் அவளுடைய பரிதாபகரமான வாழ்க்கை சம்பீரமாக முடிவடைந்தது. அவள் இறக்குமுன் அசாதாரணமான தைரியத்தையும் வீரத்தையும் காட்டினாள். எலிஸபெத்திற்குத் தனது முக்கியமானவிரோதிஒழிந்ததில்திருப்தியேயானாலும், அவள் வெளிக்கு மாத்திரம் தனது விருப்பத்திற்கு மாறாகவே அந்த தண்டனை நிறைவேற்றப்பட்டது என்று கூறி, தனது காரியதரிசியையும் தண்டித்தாள். ஆனால் அதெல்லாம் உலகத்தை ஏமாற்றி நல்லபெயரெடுக்கும் பொருட்டு, அரசர்களும் அரசிகளும் செய்யும் ஜாலங்களென்பது பரிஷ்காரமான விஷயம். மேரியிராணி இறந்தது, மழைபெய்து ஓய்ந்ததுபோல, இங்கிலீஷ் இராணிக்கு மன அமைதியை உண்டாக்கியது. அதன் பிறகு அவளது உயிருக்கு அபாயம் விளைவிக்க காதலிக்காரரும் முயற்சிக்கவில்லை.

(3) **ஸ்பெயின் தேசத்துடன் போர்:**—ஸ்பெயின் தேசத்துச் சக்கரவர்த்தியான பிலிப் என்பவர் ஐரோப்பாவில் முதன்மையான ஸ்தானம் வகித்து வந்ததைப்பற்றி முன்னரே கூறினோம். அவருக்கும் எலிஸபெத்திற்கும் பகைமை வரவர அதிகரித்துக்கொண்டு போயிற்று. பிலிப் அரசர் பழைய காதலிக் முறையை ஆதரித்து, புதிய முறையை வேரறுத்துக் கொண்டே வந்தார். ப்ரெஞ்சு அரசரும் அவ்விதமே புதிய முறையை வெறுத்து வந்தார். எலிஸபெத் அன்னிய தேசத்தில் இருந்த ப்ராடெஸ்டன்ட் மதத்தினருக்கு உதவி செய்யும்படி நேர்ந்தது. நற்காலமாக, ப்ரான்ஸ், ஸ்பெயின் ஆகிய இரண்டு தேசங்களும் சில சமயங்களில் ஒன்றையொன்று விரோதித்து வந்தமையால், அவ்விரண்டும் ஒன்றுசேர்ந்து இங்கிலண்டை எதிர்க்கும் சமயம் ஏற்படவில்லை. எலிஸபெத் இராணியும் மிக சாமர்த்தியமாக நடந்து ஐரோப்பாவில் இருந்த காதலிக் அரசர்களை அதிகமாய்ப்பகைத்துக் கொள்ளாமலும், அவர்களது விஷயத்தில் அதிகமாய் சம்பந்தப்படாமலும் ஜாக்கிரதையாகக் காலம் கழித்துவந்தாள்.

ஸ்காட் இராணி மேரியின் விசாரணைகள் நடந்துகொண்டிருந்த சமயத்தில் இங்கிலண்டிற்கும் ஸ்பெயின் தேசத்திற்கும் இருந்த பகைமை பல காரணங்களால் அதிகப்பட்டுக் கொண்டு வந்தது.

முதலாக, அவ்விரண்டு தேசங்களும் வெவ்வேறு மதத்தை ஆதரித்த தொன்றே அவைகளுக்குள் நட்பு ஏற்படுவதற்குத் தடையாயிருந்தது. பிலிப் தமக்குட்பட்ட தேசங்களில் இருந்த ப்ராடெஸ்டன்ட் மதத்தினரைக் கொடுமையாக நடத்தி வந்தமையாலும், இங்கிலீஷ்காரர் ப்ராடெஸ்டன்ட் மதத்தினருக்குத் தங்களுடைய அநுதாபத்தைத் தெரிவித்து வந்தமையாலும், இரண்டு தேசங்களுக்கும் ஏற்பட்ட பிளவு அதிகரித்துக்கொண்டே வந்தது. உதாரணமாக நேதர்லண்ட்ஸ் (Nether Lands) என்றதேசத்தில் இருந்தப்ராடெஸ்டன்ட் ஜனங்களை பிலிப் தயை தாக்ஷண்ணியமின்றிக் கொடுமையாக நடத்திய பொழுது, எலிஸபெத் அந்த தேசத்தினருக்கு உதவினள். அதற்கு மாருக பிலிப் ஸ்காட் இராணி மேரியை விடுவிக்க முயற்சி செய்தவர்களுக்கு உதவி செய்தார். அவ்விதமே அயர்லன்டின் ஜனங்களேயும், ஸ்காட்லன்ட் அரசாங்கத்தாரையும் அவர் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தார். மேலும் இங்கிலீஷ் கடல் வியாபாரிகளுக்கும் ஸ்பெயின் தேசத்துக் கடல் வியாரிகளுக்கும் அடிக்கடி சச்சரவுகள் நடந்து கொண்டே இருந்தன. 16ம் நூற்ருண்டில் ஐரோப்பிய தேசத்து ஜனங்கள் புதிய ஊக்கத்துடன் கடல்களில் சென்று வியாபாரம் செய்ததைப் பற்றியும் மிக தூரத்தில் உள்ள தேசங்களில் குடியேறியதைப் பற்றியும் பின்னுல் விவரிப்போம். அந்த முயற்சியில் இரண்டு தேசத்தார்களுக்கும் போட்டி ஏற்பட, ஒருவரையொருவர் வெட்டி மாய்த்துக்கொண்டனர். ஆகவே பிலிப், எலிஸபெத் ஆகிய இருவருக்கும் வேறு காரணங்களால் விரோதமேற்படா திருந்தாலும், இரண்டு தேசத்துக் கடல் வியாபாரிகளுடைய போராட்டத்தினுலேயே அவர்களுக்குள் பெரும்போர் விளைந்திருக்கும்; ஆனல் இரண்டு தேசங்களும் யுத்தம் செய்வதனுல் ஏற்படக்கூடிய இடர்களைக் கருதி அநேக வருஷகாலம் சும்மா இருந்தன; அவைகளின் உள்ளத்திலோ பகைமையும் பொருமையும் பொங்கி எழுந்து கொண்டிருந்தன. மேலும் ஐரோப்பாவில் இருந்த நிலைமையில் பிலிப் வேறு தேசத்துடன் சண்டை செய்வதை யுக்தமென எண்ணவில்லை. அவர் இங்கிலண்டை எதிர்த்த சமயத்தில் அவருடைய நீண்டகால விரோதிகளான ப்ரெஞ்சுக்காரர் ஸ்பெயினின்மீது படையெடுத்து

வரலாம் என்று அவர் அஞ்சினர். ஆகவே, கா/ தலிக் மதத்தைக் காப்பாற்றும் பொருட்டு, இங்கிலீஷ் இராணியின் மீது படையெடுத்துச் செல்லத் தயாராயிருந்தாலும், பல இராஜீய விஷயங்களைக் கருதி அவர் மௌனமாகவே இருந்து வந்தார். இரண்டு தேசங்களும் வெளித் தோற்றத்திற்கு சிநேகப்பான்மையாகவே நடந்து வந்தன.

பட்டத்திற்கு வந்து நீண்டகாலமான பின்னும், எலிஸபெத் விவாகம் செய்து கொள்ளாததைக் கண்டு இங்கிலீஷ்காரர்கள் அவளுக்குப் பின் நாட்டை ஆளுவதற்கு ஒரு வார்சுதாரர் வேண்டுமே என்று கவலைகொண்டு விவாகம் செய்துகொள்ளுமாறு அவளிடம் வேண்டி வந்தனர். எலிஸபெத்திற்கு அப்பொழுது ஐம்பது வயது ஆயிருந்தது. அவள் தன்னைவிட வயதில் இளையவரான ப்ரெஞ்சு மன்னரை மணந்துகொள்ள ஏற்பாடு செய்து வந்தாளாலும், உண்மையில், அவள் எவரையும் மணந்து கொள்வதில்லை என்ற எண்ணத்துடனிருந்தாள். ஆனல், ப்ரெஞ்சு மன்னரும், இங்கிலீஷ் இராணியும் ஒன்று சேர்ந்துவிட்டால், அது ஸ்பெயின் தேசத்திற்குப் பெரிய அபாயத்தை விளைவிக்கக் கூடுமாதலால், பிலிப் அந்த சம்பந்தம் நடப்பதை விரும்பவில்லை. ஆனல் கடைசியில் அந்த விவாகம் நடைபெறவுமில்லை. பிலிப் அரசரையே எலிஸபெத் மணந்து கொள்வதாக வாக்களித்திருந்து அவரை ஏமாற்றிவிட்டதாகவும், அதனல் பிலிப்பிற்கு அவள்மீது கோபமேற்பட்டதாகவும் சிலர் கூறுவர்.

நெதர்லன்ட்ஸ் தேசத்தில் இருந்த ப்ராடெஸ்டன்ட் ஜனங்களை பிலிப் அரசர் வருத்திவந்த பொழுதெல்லாம், எலிஸபெத் அவர்களுக்குஉதவிபுரிந்து வந்தாள். 1586-ல் அவள் தனது நண்பரான லீஸ்டர் பிரபுவின் தலைமையின் கீழ் ஒரு சேனையை நெதர்லன்ட்ஸ் தேசத்தினருக்கு உதவும்படி அனுப்பினுள். லீஸ்டர் பிரபுவினல் எதையும் சாதிக்க முடியவில்லையானலும், ஸ்பெயினுக்கும் இங்கிலண்டிற்கும் இருந்த பகைமை அதனல் அதிகப்பட்டது. இவ்வாறு இராஜீய வியவகாரங்களினலும், மத வேற்றுமைகளாலும், கப்பல் வியாபாரிகளின் இடைவிடாத சச்சரவுகளாலும் புகைந்து கொண்டிருந்த பகைமைத் தீ கடைசியில் பற்றிஎரியத்தொடங்கியது.

1587-ல் ஸ்காட் இராணி மேரி தூக்கிலிடப்பட்டதும், பிலிப் இங்கிலண்டின்மீது படையெடுக்க, ஒரு பெரிய கப்பற்படையைத் தயார் செய்து வந்தார். ஆனால் ட்ரேக் (Drake) என்ற பிரசித்தி பெற்ற கடற் போர்வீரர் ஸ்பெயினின் துறைமுகத்திற்குச் சென்று அங்கிருந்த கப்பல்களை எரித்தும் நீர்க்குள் அழுத்தியும் நாசமாக்கி விட்டார். அவ்வாறு தாம் செய்ததை அவர் ஸ்பெயின் சக்கரவர்த்தியின் தாடியைப் பொசுக்கிக் கருக்கிவிட்டதாகக் கூறிக் கொண்டார். ஆனால், பிலிப் மறுபடியும் ஒரு பிரம்மாண்டமான கப்பற் படையைத் தயாரித்து 1588-ல் இங்கிலன்டின்மீது படையெடுத்து வரலானார். இங்கிலன்டில் உள்ள கா/தலிக்காரர் தமக்கு உதவி செய்வார்கள் என்று நம்பி அவர் நியாயமாகத் தமக்கே இங்கிலீஷ் பட்டம் உரியது என்று பகிரங்கப்படுத்தினர். அவர் தயாரித்த கப்பற் படைக்கு எவராலும் வெல்ல இயலாத ஆர்மடா (The Invincible Armada) என்று பெயர். ஸ்பெயின் தேசத்துச்சேனை ஐரோப்பாவில் எத்தனையோ யுத்தங்களில் சண்டையிட்டுக் கை தேர்ந்திருந்தது; இங்கிலீஷ் சேனைக்கு அவ்வளவு திறமை இல்லையாதலால், நிலப்போரில் அவர்கள் அநேகமாய்த் தோற்றுவிடுவதற்கு இடமிருந்தது. ஆனால் இங்கிலீஷ் கப்பல் வீரர்கள் கடற் போர்களில் அடிக்கடி வெற்றியடைந்திருந்தன ராதலால், அவர்கள் ஸ்பெயினின் கப்பற் படையைக் கடலிலேயே தோற்கடித்து, பகைவர்கள் இங்கிலண்டில் கால் வைக்காதபடி செய்துவிட எண்ணினர். எட்டாவது ஹென்றியின் காலம் முதற்கொண்டே இங்கிலன்டில் கப்பற்படை அபிவிருத்தியடைந்து வந்திருந்தது. இங்கிலீஷ் கப்பல்கள் வேகமாய்ச் செல்லக் கூடியவையாகவும், சண்டை செய்வதற்கேற்ற வசதிகள் உடையவையாகவும் இருந்தன. ஸ்பெயின் தேசத்துக்கப்பல்கள் மிகவும் பெரியவையாகவும்,இலகுவில் நகரமுடியாதபடி கட்டப்பட்டும் இருந்தன. மலைபோன்ற ஷெ கப்பல்கள் நகர்ந்து வருவதற்குள் பல சிறிய இங்கிலீஷ் கப்பல்கள் அவைகளை நாலாபக்கங்களிலும் வளைத்துக் கொண்டு தாக்கிவிடக்கூடும். மேலும் அவைகள் சேனைகளைவேறுதேசத்திற்கு அழைத்துச்செல்வதற்கான பிரயாணக்கப்பல்களேயன்றி யுத்தவசதிகளை அதிகமாய்ப்பெற்றவைகளன்று. இங்கிலீஷ் வீரர்கள் ஏற்கனவே கடல்களில் வெகுதூரம்

சென்று போர்புரிந்து, கொள்ளையிட்டு வந்திருந்தவர்களாதலால்,கடற்போர் என்றால் அவர்களுக்குக் குதூகலமாக இருந்தது. மெடினா பிரபு (Duke of Medina) என்பவர் ஸ்பெயின் தேசப்படைக்கும் ஹோவார்ட் பிரபு (Lord Howard) இங்கிலீஷ்படைக்கும் தலைவராயிருந்தனர். மெடினாவும் அவருடைய வீரர்களும் நிலச் சண்டைகளிலேயே கைதேர்ந்தவர்கள்;ஹோவார்ட் பிரபுவின் வீரர்களோ கடலிலேயே வாசம் செய்துவந்தவர்கள்.ட்ரேக்,ஹாக்கின்ஸ் என்றவீரர்கள் இங்கிலீஷ் சேனையை நிரம்பவும் திறமையாகநடத்தி வந்தனர். அக்காலத்து வழக்கப்படி இங்கிலண்டின் மலைகளிலும் குன்றுகளிலும் சொக்கப்பானை கொளுத்தி ஜனங்களுக்கு யுத்தச் செய்திகளை அறிவிப்ப வழக்கம். இங்கிலீஷ் மக்களெல்லோரும் தமது தேசத்தையும் இராணியையும் பாதுகாக்க முன்வந்தனர். அதில் ஒரு விசேஷம் என்னவென்றால், காதலிக், ப்ராடெஸ்டன்ட் என்ற வேற்றுமையின்றி எல்லா இங்கிலீஷ்காரர்களும் அப்பொழுது ஒன்று சேர்ந்துகொண்டனர். அந்த அருமையான ஒற்றுமைக்குணம் ஒன்றே இங்கிலீஷ்காருக்கு மேம்பாட்டையளித்து வந்திருக்கிறது; மதவேற்றுமையினால் பெரிய அநர்த்தங்கள் விளைந்திருந்ததான அக்காலத்திலும்கூட, இங்கிலண்டில் இருந்த காதலிக்காரர் தம்மை வருத்திவந்த அரசியின் கட்சியிலேயே சேர்ந்துகொண்டது அவர்களுடைய தேசாபிமானத்தை நன்கு காட்டுகிறது; தேசத்திற்குப் பொதுவான அபாயம் நேரிடும்பொழுது அவர்கள் தமக்குள் இருக்கும் சச்சரவுகளை மறந்து, பொதுவான விரோதியைத் தாக்குவார்கள்.அதில் வெற்றியடைந்த பிறகு வேண்டுமானால், மறுபடியும் தமது உள்நாட்டுச் சச்சரவுகளில் கவனம் செலுத்துவார்கள். எனவே பிலிப் நினைத்தபடி காதலிக் மதத்தை ஆதரித்த இங்கிலீஷ்காரரின் உதவி அவருக்குக் கிடைக்காமலே போய்விட்டது. அது ஒன்றே அவருக்குப் பேரிடிபோல ஆய்விட்டது. அவரது ஆர்மடாக் கப்பற்படை லிஸ்பன் என்ற துறைமுகத்திலிருந்து புறப்பட்ட காலம் முதற்கொண்டு, அதற்கு அபசகுனமும், அபாயமுமே சம்பவித்துவந்தன. கடவுளே இங்கிலீஷ்காரருக்கு அநுகூலமாயிருந்ததுபோலத் தோன்றியது. முதலில் ஸ்பெயினின் கப்பற்படை புயல்காற்றிலகப்பட்டுக் கொண்டதாகையால், பூதாகாரமா

யிருந்த அது நிரம்பவும் பாடுபட்டு அலங்கோலமடைந்துவிட்டது. பிறகு இங்கிலண்டுக்குத் தெற்கிலுள்ள 'இங்கிலீஷ் கால்வாய்' (English Channel) என்ற கடலுக்குள் ஆர்மடா பிரவேசிக்கவே, இங்கிலீஷ் கப்பல்கள் வேட்டை நாய்களைப்போல, ஆர்மடாவை நாலாபக்கங்களிலும் சூழ்ந்து தாக்கவாரம்பித்தன. இங்கிலீஷ் கப்பல்காரர்கள் வேண்டும்பொழுதெல்லாம், தங்கள் தேசத்திலிருந்து உணவுப் பொருள்களையும் யுத்த தளவாடங்களையும் பெற்றுக்கொண்டனர்; ஸ்பெயின் தேசத்தாருக்கு அந்த வசதி இல்லாமல்போயிற்று. ஸ்பெயின் தேசத்துக் கப்பற்படை சின்னபின்னமாக்கப்பட்டது. இங்கிலீஷ்காரர்கள் வேறு பல தந்திரங்களும் செய்தனர். சிறிய சிறிய கப்பல்களில் நெருப்பை வைத்துக் கொளுத்திவிட்டு அவைகளை ஸ்பெயின் தேசத்துக் கப்பல்களினிடையில் செலுத்தினர்; ஸ்பெயின் தேசத்துக் கப்பல்களில் நெருப்புப் பிடித்துக்கொள்ளாமல் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு அங்குமிங்குமாகப் பிரிந்து போகத் தலைப்பட்டன. அப்பொழுது இங்கிலீஷ் வீரர்கள் அவைகளை எளிதில் மடக்கி வளைத்துக் கொண்டனர். கடைசியாக க்ரேவ்லின்ஸ் (Gravelins) என்ற இடத்திற்கு சமீபத்தில், ஒன்பது மணிநேரம் வரையில் ஓயாமல் யுத்தம் நடந்தது. ஸ்பெயின் வீரர்கள் நிரம்பவும் தைரியமாகவே சண்டையிட்டனரானாலும், கடைசியில் தோல்வியடைந்து ஓடத் தொடங்கினர். திரும்பி ஓடுவதிலும்கூட அவர்களுக்கு தெய்வாதீனமாகத் துன்பங்கள் நேரிட்டன. அப்பொழுது காற்று வடக்கு நோக்கியடித்துக் கொண்டிருந்ததாகையால், அவர்கள், தெற்கிலிருந்த தங்களுடைய தேசத்திற்குச் செல்லமாட்டாதவர்களாய் வடக்கு திக்கில் சென்று ஸ்காட்லண்டைச் சுற்றிக்கொண்டு போகவேண்டியதாயிற்று. புயல் காற்றினாலும் கடலின் கொந்தளிப்பினாலும் அந்தப் படைக்கு ஏராளமான சேதம் ஏற்பட்டது. கடைசியாக, எவராலும் வெல்ல இயலாத ஆர்மடாக் கப்பற்படையில் சரிபாதி யழிந்துபோக, மிகுதியை மெடினாப் பிரபு நிரம்பவும் பாடுபட்டுக் கொண்டுவந்து ஊரில் சேர்த்தார்.

இவ்வாறு, ஐரோப்பாவில் முதன்மைஸ்தானம் வகித்திருந்த ஸ்பெயின் தேசத்தை யாண்டு, எத்தனையோ யுத்தங்களில் வெற்றி




ஸ்பானிஷ் ஆர்மடா சென்று திரும்பிய வழி

(288-வது பக்கம்)

யடைந்த பிலிப் அரசராலேயே இங்கிலண்டை ஜெயிக்க இயலாமல்போயிற்று. இங்கிலீஷ்காரர் அடைந்த பூர்த்தியான ஜயத்தினால் எத்தனையோ பலன்கள் ஏற்பட்டன. முதலாக, இங்கிலண்டின் மதிப்பு எங்கும் அதிகரித்தது. எலிஸபெத் இராணியின் புகழ் பாவிற்று. இங்கிலண்ட் தேசம் ஓர் ஐரோப்பிய அரசருக்கு உட்பட்டுப் பராதீனமாகாதபடி பாதுகாக்கப்பட்டமையால், ப்ராடெஸ்டன்ட் மதமும் இங்கிலண்டின் சுயாதீனமும் தீங்கிழைக்கப் படாமல் தப்பின. பிறருடைய துன்பமின்றி இங்கிலீஷ் மக்கள் தாமாகவே தமது விஷயங்களைச் சீர்திருத்தி யமைத்துக்கொண்டனர். மேலும் ஆர்மடா என்ற பெரும் கப்பர்படையைத் தோற்கடித்ததுமுதற்கொண்டு, இங்கிலண்ட் தேசத்திற்கு, கடலின் உரிமை வரவா அதிகரித்து, கடைசியில் கடல் வியாபாரத்திலும், கடல் ஆதிபத்தியத்திலும் முதன்மை ஸ்தானம் பெறுவதற்கு சாதனமாயிருந்தது. இப்பொழுதும் இங்கிலண்ட் தேசமே "கடல்களின் அரசி"யாய் இருந்துவருகிறது. இங்கிலீஷ்காரருடைய வெற்றியினால் ஐரோப்பாவின் நிலைமையே மாறுபட்டதென்று கூறலாம். ஏனெனில் அதுவரையில் மிதமிஞ்சிய அதிகாரத்தைப் பெற்றிருந்த ஸ்பெயின் தேசத்திற்கு ஆர்மடாவின் தோல்வி அசுபக்குறி போல ஆயிற்று. அதுமுதல் ஸ்பெயின் தேசம் படிப்படியாய் க்ஷீணிக்கத் தொடங்கி பழைய கீர்த்தியை முற்றிலும் இழந்து உலக வியவகாரங்களில் இரண்டாம் தரமான நிலைமையை அடைந்தது. ஸ்பெயினுக்கு உட்பட்டிருந்த சில தேசங்கள் சுயாதீனமடைந்தன. ஸ்காட் இராணி மடிந்ததும், ஆர்மடா தோற்றோடியதும் எலிஸபெத்திற்குப் பெருத்த மனவமைதியை உண்டாக்கின. அவளுடைய பிரஜைகள் அவளிடம் அதிக விசுவாஸம் கொண்டனர்.

எலிஸபெத்தின் முக்கிய விரோதியான பிலிப் 1598-ல் இறந்ததுவரையில் அவ்விரு தேசத்தினரும் பழைய பகைமையைக் கருதி அடிக்கடி சிறுசிறு சண்டைகள் நடத்திவந்தனர். 1589 முதல் 1603 வரையில் பல சிறு போர்கள் நடந்தனவானாலும் இங்கிலீஷ்காரருக்குப் பிரபலமான வெற்றிகள் கிடைக்கவில்லை. 1589-ல் ட்ரேக் என்னும் வீரர் லிஸ்பன் (Lisbon) என்ற நகரத்தைத் தாக்க முயற்சித்து வெற்றியடையாது திரும்பினார். 1591-ல்

ஹோவார்ட் பிரபுவின் தலைமையின்கீழ் போருக்குச் சென்ற ஓர் இங்கிலீஷ்படை, ஸ்பெயின் கப்பற்படைக்கு அஞ்சிப் பின்னோட வேண்டியிருந்தது. அப்பொழுது ஸர் ரிச்சர்ட் க்ரேன்வில் (Sir Richard Grenville) என்பவர் மற்றவர்களை விட்டுப் பிரிந்து போய்ப் பகைவரது வசத்தில் அகப்பட்டுக்கொண்டார். அவருடைய கப்பலுக்கு 'ரேவேஞ்ஜ்' (Revenge—பழிக்குப்பழி) என்று பெயர். கடைசியில் க்ரென்வில் பகைவருக்குக் கீழ்ப்படிந்து விட்டாராலும், அவர் ஒருவராகவே தைரியமாகப் போர் புரிந்ததைப் பலரும் கொண்டாடினார்கள். இங்கிலீஷ்காரரின் வீரச் செய்கைகள் யாவற்றிலும் ரெவெஞ்ஜ் கப்பலின் சூரத்தனம் முதன்மைபெற்றிருந்தது. 1595-ல் ட்ரேக், ஹாக்கின்ஸ் ஆகிய இருவரும் கப்பற் பிரயாணம் செய்யப் புறப்பட்டனர். ஸ்பெயின் தேசத்துக் கப்பல்களை அவர்கள் முன்பு கொள்ளையடித்ததுபோல அப்பொழுது செய்ய அவர்களால் இயலவில்லை. அவ்விருவரும் கடலிலேயே மடிந்தனர். 1596-ல் பிலிப் புதிதாக ஓர் ஆர்மடா தயார்செய்து அதை காடிஸ் (Cadiz) என்ற இடத்தில் நிறுத்திவைத்திருந்தார். ஹோவார்ட் பிரபு ஒரு படையை நடத்திச் சென்று அக்கப்பல்களையெல்லாம் சின்னாபின்னப் படுத்திவிட்டார். அதன் பின்னர் இரண்டு வருஷகாலத்திற்குப் பிறகு பிலிப் மரணமடைந்தார். அதோடு ஸ்பெயின் தேசத்து யுத்தத் தொடர்ச்சி முற்றுப் பெற்றுவிட்டது. அது முன்பு கூறியபடி இங்கிலண்டிற்கே மேம்பாட்டை யளித்தது.

(4) அயர்லண்ட் தேசத்து வியவகாரங்கள்; அரசியின் அந்தியகாலம் :—இங்கிலண்டின் சமீபத்தில் உள்ள அயர்லண்ட் தேசம் ஒவ்வோர் இங்கிலீஷ் அரசருக்கும் துன்பத்தைக் கொடுத்து வந்தது. இங்கிலீஷ் மன்னர்களுக்கு அந்த தேசத்தையும் பரிபாலனம் செய்யவேண்டுமென்ற அவா இருந்துவந்தது. அயர்லண்ட் தேசத்தினரோ சுயாதீனமாக இருக்கவே விரும்பினர். ஏழாவது, எட்டாவது ஹென்றிகள் அயர்லண்ட் சம்பந்தமாகச் செய்த விஷயங்களை ஏற்கனவே விவரித்திருக்கிறோம். எட்டாவது ஹென்றி தம்மை அயர்லண்ட் தேசத்தின் அரசர் என்று அழைத்துக் கொண்டாராலும், அவருடைய அதிகாரம் எட்டுச்

-சுரைக்காயாகவே இருந்து வந்தது. பல இங்கிலீஷ்காரர்கள் அயர்லன்ட் தேசத்தில் குடியேறினர். மேரி இராணியின் காலத்தில் அயர்லன்டின் சில பாகங்கள் இங்கிலீஷ்காரரால் வியாபிக்கப்பட, அங்கு இங்கிலீஷ் சட்டமும் அமுலுக்கு வந்தது. அயர்லண்ட் தேசத்தில் பிரபுக்கள், சாதாரண ஜனங்கள் ஆகிய இருவகையினரும் ப்ராடெஸ்டன்ட் மதத்தில் ஆர்வம்கொள்ளாமல் பழைய மதத்தையே பின்பற்றி வந்தனர். ஆனால் எலிஸபெத் தன்னுடைய மத ஏற்பாட்டை அயர்லன்டிலும் நிலைநாட்ட விரும்பினாள். அப்படியிருந்தும், இங்கிலண்டின் விவகாரங்களே அவளுடைய கவனத்தையும் திறனையும் கவர்ந்துகொண்டனவாதலால், அயர்லண்ட் தேசத்தை அவள் உறுதியாக ஆள்வதற்குப்போதிய அவகாசமில்லாமல் போயிற்று. ஆகவே, அவள் தனது தந்தை, பாட்டனார் முதலியோரது தோரணையைப் பின்பற்றி, அயரிஷ் இனத்தவர்களைக் கொண்டே அந்த தேச பரிபாலனத்தை நடத்த முயன்று வந்தாள். அப்பொழுது அயர்லன்டில் ஓநேயில் (O'Neill) என்ற மிகுந்த பராக்கிரமம் வாய்ந்த பிரபு ஒருவர் இருந்தார். அவருடைய தந்தை இங்கிலீஷ்காரருடன் சிநேகமா யிருந்த காரணத்தைக்கொண்டு, ஓநெயில் அவரை தேசத்தைவிட்டுத் துரத்திவிட்டு அல்ஸ்டர் (Ulster) என்ற மாகாணம் முழுதையும் தமது வசப்படுத்திக்கொண்டார். எலிஸபெத் அவருடன் நட்பாயிருக்கத் தயாராயிருந்தாலும், ஓநெயில் அவளை அசட்டைசெய்து, சுயாதிகாரியாய் நடந்து பகிரங்கமாகஅவளை எதிர்த்து வந்தார். இங்கிலீஷ் சேனாதிபதி ஒருவர் 1567-ல் ஓநெயிலுடன் போர்புரிந்து பார்த்தார். அதற்குள் ஓநெயில் வேறொரு பகைவரது வாளுக்கிரையானார். அதன்பிறகு அல்ஸ்டர் மாகாணம் சிறிதுகாலம் அமைதியாயிருந்தது.

அந்த அமைதி அதிக காலம் நிலைத்து நிற்கவில்லை. அல்ஸ்டர் மாகாணம் பழையபடி கலகத்திற்கிருப்பிடமாயிற்று. 16-ம் நூற்றாண்டின் இறுதியில், மதப்புரட்சியின் எதிர்ப்புரட்சி இயக்கமொன்று ஏற்பட, காதலிக் மதத்தின் செல்வாக்கு ஓரளவு மீண்டும் தலையெடுத்ததாகக் கூறினோமல்லவா? அந்த இயக்கம் அயர்லன்டிலும் பரவிற்று. அதுவரையில் அயர்லன்ட் தேசம் ஐரோப்பாவுடன் சம்பந்தப்படாமல் தனித்து நின்று, ஒதுங்கிக்கிடக்கும் சிறிய

கிராமத்தைப்போல, மற்ற நாடுகளுடன் சம்பந்தமின்றி தன் அறிவுக்கெட்டியபடி பழைய வழிகளிலேயே சென்றுகொண்டிருந்தது. ஆனால் போப்பும் அவருடைய சிஷ்யர்களும் தம்முடைய கருத்தை சுலபமாக நிறைவேற்றுவதற்கு அயர்லன்டே ஏற்ற இடமென்பதை எளிதில் கண்டுகொண்டனர். மேலும் அயரிஷ்காரருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் இருந்த பகைமையும் அவர்களுக்கு அநுகூலமாயிருந்தது. ப்ராடெஸ்டன்ட் மதத்தை ஆதரித்த இங்கிலீஷ்காரரை தண்டிப்பதற்கு, அயரிஷ் ஜனங்களைக் கிளப்பி விடுவதே சிறந்த மார்க்கமாகத் தோன்றியது. ஆகையால் போப்பின் சிஷ்யர்கள் அங்கு சென்று உபதேசம் புரிந்தனர். ஸ்பெயின் தேசத்தின் அரசர் பல சிப்பாய்களை அனுப்பி உதவிபுரிந்தார். சீக்கிரத்தில் அவர்களுடைய விருப்பம் நிறைவேறியது; டெஸ்மண்ட் (Desmond) பிரபுவின் தலைமையின்கீழ் 1579-ல் ஒரு கலகம் நடைபெற்றது. எலிஸபெத் நிரம்பவும் பாடுபட்டு, கலகக்காரர்களை அடக்கி அவர்கள் பூண்டற்றுப் போகும்படி செய்தாள். கலகக்காரருடைய நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டு இங்கிலீஷ் பிரபுக்களுக்கு அளிக்கப்பட்டன. ஆனால், ஷை பிரபுக்கள் அங்கு சென்று குடியேறத் துணியவில்லை. ஏனெனில் அவர்களுடைய உயிருக்கே அபாயம் நேரிடலாமென்ற அச்சமே அதற்குக் காரணம். எனவே அவர்கள் தமது நிலங்களை அதிகமான குத்தகைத் தொகை கொடுத்த அயரிஷ்காரரிடமே விட்டுவந்தனர். ஆதலால், எலிஸபெத் எண்ணியபடி பல இங்கிலீஷ் ஜனங்கள் அயர்லன்டில் குடியேறவில்லை. அந்த தேசம் அப்பொழுதும் உண்மையில் அயரிஷ்காரரின் வசத்திலேயே இருந்து வந்தது. அங்கு தைரியமாகச் சென்று குடியேறிய சிலரும் அயரிஷ் கலகக்காரரால் பலவாறு வருத்தப்பட்டனர். ஆனால் அதற்குமுன் இருந்ததுபோலவே அத்தனை கலகங்கள் நடைபெறவில்லை. டெஸ்மண்ட் பிரபு ஒடுக்கப்பட்டபின் 15, 20, வருஷகாலம் அமைதி நிலைபெற்றிருந்தது. ஆனால் அந்தக் காலத்திற்குள் அயர்லன்டில் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. அதற்குமுன் பல இனங்களாகப் பிரிவுபட்டு, பல தலைவர்களுக்கடங்கியிருந்த அயரிஷ்காரர்கள் புதிய மத உணர்ச்சியின் காரணமாய் ஒற்றுமையடைந்து, தேசிய அபிமானமும் கொள்ளலாயினர். எனவே, 1598-ல் மறுபடி

யும் ஒரு கலகம் நடைபெற்றபொழுது, அது ஒரு தனி இனத்தாருடைய கலகமாயிராமல், தேசியக் கிளர்ச்சியாகிவிட்டது. ஓநெயில் இனத்தார், ஓடானல் (The O'Donnells) இனத்தார் முதலிய பலர் ஒன்றுகூடி இராஜீய சுயாதிகாரத்திற்காகவும், மத உரிமைகளுக்காகவும் இங்கிலண்டிற்கு விரோதமாகக் கிளம்பினர். அயரிஷ் வீரர்களை அடக்குவதற்கு எஸ்ஸெக்ஸ் பிரபுவை, எலிஸபெத் அனுப்பி வைத்தாள். அவர் அயரிஷ் பகைவருக்கு எவ்விதத் தீங்கும் செய்ய மாட்டாதவராய்த் தமது வேலையை நழுவ விட்டுவிட்டார். அவருக்குப் பதிலாக 1600-ல் மௌன்ட் ஜாய் (Lord Mount Joy) பிரபுவை இராணி அனுப்பி வைத்தாள். மௌன்ட் ஜாய் மிகவும் துடியாக வேலை செய்து கலகக்காரரை அடக்கிக் கீழ்ப்படுத்திவிட்டார். ஓநெயில் இனத்தார் மாத்திரம் நீண்டகாலம் பணியாமல் இருந்து கடைசியில் தோற்றுப்போயினர். 1603-ம் வருஷத்துக்குள் அயர்லன்டு முழுதும் ஒருவாறு ஜயிக்கப்பட்டு இங்கிலீஷ் அரசியின் ஆட்சிக்குட்பட்டது. ஆனால் அந்த நிலைமையை யடைவதற்குள் இங்கிலீஷ் வீரர்கள் செய்த கொடுமைகளும், அந்த தேசத்திற்கு விளைத்த சேதங்களும் நெடுங்காலம் அயரிஷ்காரரின் மனதை விட்டு மாறாமல் பதிந்திருந்து, கலகத்தீ புகைந்துகொண்டே யிருக்கும்படி செய்துவந்தன. வெறும் முரட்டு பலத்தினாலேயே இங்கிலீஷ்காரர்கள் அயரிஷ்மக்களை மொத்தமாக அடக்கி வந்தனர்; ஆளும் இனத்தாருக்கும் அடக்கப்பட்ட இனத்தாருக்கும் ஒருவரிடத்தொருவர் சிறிதும் அன்போ பிரியமோ இல்லை. அயரிஷ் மக்கள் மறுபடி தமது சுயாதிகாரத்தை ஸ்தாபிக்க ஏற்ற தருணத்தையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். ஆனால் நெடுங்காலமாக இங்கிலீஷ் மன்னர்கள் ஸ்தாபிக்க முயன்று வந்த அயரிஷ் ஆதிக்கத்தை எலிஸபெத் இராணி ஸ்தாபித்தது அவளுக்குப் புகழையே யளித்தது. ஆனால் அவளுடைய வெற்றி நிரந்தரமாக மாத்திரம் நிற்கவில்லை. அயர்லன்டு தேசம் கேவலம் இராணுவ பலத்திற்குட்பட்டு, கூண்டிலடைக்கப்பட்ட காட்டு மிருகம்போல, உறுமிக்கொண்டும் கர்ஜித்துக்கொண்டும் இருந்தது. ஆதலால் அயர்லன்டு தேசத்தின் விவகாரம் பின்னால் வந்த அரசர்களுக்கும் துன்பகரமாகவே இருந்து வந்தது.

அயர்லன்டை அடக்கியதுடன் மாத்திரம் எலிஸபெத் அரசி நின்றுவிடவில்லை. வேல்ஸ் மாகாணத்திலும் அவள் ப்ராடெஸ்டன்ட் மதத்தைப் பரவச்செய்தாள். ஸ்காட்லண்டு தேசமும் புதிய மதத்தைப் பின்பற்றியதாகையால் ஸ்காட் ஜனங்களும் இங்கிலீஷ் மக்களும் சகோதரர்கள்போல உறவாடினர். அவ்வாறு பிரிட்டன் தேசத்தின் ஒற்றுமை உறுதிப்பட்டுக்கொண்டே வந்தது.

எலிஸபெத் இராணியினது ஆட்சியின் முதற்பகுதியில் அவளுக்கு எத்தனையோ துன்பங்கள் சம்பவித்தாலும், அவள் அவைகளையெல்லாம் மேற்கொண்டு கடைசிக்காலத்தில் அமைதியும் சுகமும் அநுபவித்தாள். ஸ்பெயின் தேசத்துக் கப்பற்படை முறியடிக்கப்பட்டபின் வேறு முக்கியமான சண்டைகள் உண்டாகவில்லை. காதலிக்காரரும் துன்பம் விளைவிக்காமல் அரசிக்குட்பட்டு நடந்து வந்தனர். இங்கிலண்டின் வியாபாரமும் பெருகியது; பல இங்கிலீஷ் கப்பல்காரர்கள் அரிய வீரச்செயல்களைச் செய்துமுடித்தனர். எலிஸபெத் இராணியின் தர்பாரை விவரிப்பதற்கே ஒரு தனி நூல் எழுதலாம். அவள் சகலமான பிரஜைகளாலும் விரும்பப்பட்டு, ஒரு தேவதைபோலக் கொலுவீற்றிருந்தாள். பல பிரபுக்களும் வீரரும் அவளுடைய தயவை நாடி நின்றனர். அவர்களில் முக்கியமானவர்களைப்பற்றிப் பின்னால் கூறுவோம். தேசத்தில் சமாதானம் பரவி இருந்தது. அநேக நூலாசிரியர்களும் கவிராயர்களும் தோன்றி தேசத்திற்கு அரிய சேவை செய்தனர்.

ஆனால் அவ்வளவு மகத்துவம் ஏற்பட்டிருந்தாலும் அரசிக்குச் சில மனக்குறைகள் இருந்து வந்தன. அவளுடைய பழைய மந்திரிகளும், சகாக்களும் ஒவ்வொருவராய்க் காலகதி யடைந்துவிட்டனர். எஸ்ஸெக்ஸ் பிரபுவோ அயர்லன்டில் எதையும் செய்யமாட்டாதவராய்த் திரும்பியபின் அரசியின் மதிப்பை இழந்து, அவளுக்கு விரோதமாக ஒரு சதியாலோசனையில் கலந்து, முடிவில் கொலை செய்யப்பட்டுப்போனார். மேலும், அரசியின் சில நடவடிக்கைகள் ஜனங்களுக்கு சம்மதியாக இல்லை. அவள் சிற்சில சமயங்களில் அவசியத்திற்கு அதிகமான கொடுமையைக் காட்டி வந்தாள். காதலிக், ப்யூரிடன் ஆகிய இருமதத்தினரும் அரசியிடம் அடங்கி

நடந்து வந்தாலும், அவர்களை அவள் தண்டித்துக்கொண்டே வந்தாள். வயதாக ஆக, அரசியின் பொறுமைக்குணமும் குறையத் தொடங்கியது. பார்லிமென்ட் சபையும் அவளிடம் அதிருப்தியடைந்தது. பழைய காலங்களில் பார்லிமென்ட் சபையினர் அரசர்களுடைய விருப்பத்தின்படி யெல்லாம் தலையாட்டி வந்தனர். அந்தக் காலம் போய்விட்டது; அரசருக்கு ஆலோசனை கூறும் காரியத்தை பார்லிமென்டார் பூர்த்தியாகச் செய்யத் தொடங்கினர். அரசி கூறியதை யெல்லாம் அவர்கள் மௌனமாக ஏற்றுக்கொள்ளவில்லை. உதாரணமாக, அரசி மணம் புரிந்துகொள்ள வேண்டுமென்றும், ப்யூரிடன்களை வருத்துதல் கூடாதென்றும் அவர்கள் வற்புறுத்திக் கூறிவந்தனர். ஆதலால், எலிஸபெத், பார்லிமென்ட் சபையை அடிக்கடி கூட்டாமலும், சபையினருடைய கோபத்தைக் கிளப்பிவிடாமலும் தந்திரமாக நடந்துவந்தாள். ஆனால் சில சமயங்களில் பார்லிமென்ட் சபையினர் பிடிவாதமாக இருந்தால், அவள் அவர்களிடம் கடுமை காட்டி, சிலரை சிறைப்படுத்தியும் சிலரை தண்டித்தும் வந்தாள். பார்லிமென்ட் சபைக்கும் அரசிக்கும் கொஞ்சம் கொஞ்சமாக மனஸ்தாபம் வலுத்துக்கொண்டே வந்தது; தம்முடைய ஆலோசனைப்படியே இராஜ்ஜிய நிர்வாகம் நடைபெற வேண்டுமென்றும், அரசரோ அரசியோ சுயேச்சாதிபத்தியம் செலுத்துதல் கூடாதென்றும் பார்லிமென்ட் சபையார் கோரி வந்தனர். அரசிக்கோ தனது அதிகாரத்தை விட்டுவிடுவதென்பது கனவிலும் கூடாத காரியமாகத் தோன்றியது. எலிஸபெத்திற்குப் பின் வந்த அரசர்களது காலத்தில் மேற்கூறிய சச்சரவு அதிகப் பிரமலபடைந்து, பெரிய குழப்பத்தை யுண்டாக்கியதைப்பற்றி பின்னால் பேசுவோம். கடைசியில் மன்னர்கள் சுயேச்சாதிபத்தியம் செலுத்துவது அக்கிரமமென்றும், ஜனப்பிரதிநிதிகளான பார்லிமென்ட் சபையினரே உண்மையான அதிகாரத்தை வகிக்கவேண்டுமென்றும் தீர்மானமாயிற்று. ஆனால் அந்த நிலைமை ஏற்படுவதற்குள் பார்லிமென்ட் சபையார் எத்தனையோ போராட்டங்களில் கலந்துகொள்ள வேண்டியதாயிற்று. எலிஸபெத்தின் கடைசிக் காலத்தில் பார்லிமென்ட் சபையினர் தமக்கிருக்கவேண்டிய உண்மையான அதிகாரம் எத்தகையது என்பதை உணர்ந்துகொண்

டனர்; அதைப் பெறுவதற்காக அவர்கள் சச்சரவிட ஆபத்தப்பட்டுக்கொண்டிருக்கையில், அதிர்ஷ்ட வசமாக, எலிஸபெத்தின் ஆட்சி முடிவடைந்துவிட்டது. இல்லாவிடில் அவளுக்குப் பின் வந்த அரசர்களுக்கு நேரிட்ட கதி அவளுக்கும் நேர்ந்திருக்கும். தெய்வாதீனமாக ட்யூடர் வம்சம் அதற்குத் தப்பிப்போய்ச் சேர்ந்தது. உதாரணமாக, 1597-ல்—அதாவது அரசியின் மரணத்திற்கு, ஐந்தாறு வருஷ காலத்திற்கு முன்பு பார்லிமென்ட் சபையினர் அவளுடைய அதிக்கிரமச் செய்கையொன்றைக் கண்டிக்க நேர்ந்தது. இக்காலத்தில் ஒரு பொருளை உற்பத்தி செய்து விற்கும் உரிமையை ஒரு தேசத்தில் ஏதோ ஒருவருக்கோ அல்லது ஒரு கூட்டத்தாருக்கோ அளிப்பது சாதாரணமாயிருக்கிறது. உதாரணமாக, இந்தியாவில் உப்பைத் தயாரிப்பதை அரசாங்கத்தாரே செய்து வருகிறார்கள். வேறெவரும் அதை உற்பத்தி செய்தல் கூடாதாகையால், அரசாங்கத்தார் அதன் விலையைத் தமது விருப்பத்தின்படி நிர்ணயிக்கலாம்; ஜனங்கள் அதிக விலை கொடுத்து வாங்கியே தீரவேண்டும். அம்மாதிரியே எலிஸபெத்தும் தனது நண்பர் சிலருக்கு அம்மாதிரி போட்டியின்றி, சிற்சில பொருள்களை உற்பத்திசெய்து சுயேச்சையாய் விற்கும் சர்வ சுதந்திரத்தையும் அளித்து வந்தாள். ஆனால் இக்காலத்தில் அந்த முறையை அநுஷ்டிப்பதால் நன்மை ஏற்படுவதற்கு மாறாக, அப்பொழுது ஜனங்களுக்கு அதனால் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருட்களும் கூட அம்மாதிரி ஒருவருடைய வசப்பட்டு விட்டதாகையால், சாதாரண ஜனங்கள் துன்பத்திற் காளாயினர். 1601-ல் பார்லிமென்ட் சபையார் தங்களது குறைகளை அரசியிடம் எடுத்துக் கூறி பரிகாரம் செய்ய வேண்டிக் கொண்டனர். அரசியும் சமயோசிதமாக நடந்து, அவைகளை நிவர்த்திக்க வழி தேடினாள். ட்யூடர் மன்னர்களது இயற்கையான பிடிவாத குணம் அவளிடம் திடமாக இருந்தும், அவள் சமய சந்தர்ப்பங்களையும் கால தேச வர்த்தமானங்களையும் ஆராய்ந்து பார்த்து, திருப்திகரமாக நடந்து வந்தாள். ஆதலால் ஏதோ சில சமயங்களில் அவளுடைய செய்கைகள் ஜனங்களுக்குக் கோபமூட்டினவானாலும் மொத்தத்தில் அந்த 'நல்ல இராணி'யை எல்லோரும் போற்றியே

வந்தனர். அரசன் அல்லது அரசியினுடைய விருப்பத்தின்படி ஜனங்கள் ஆடிவந்த காலம் மறைந்துவிட்டாலும், எலிஸபெத்தின் விசேஷ குணங்களால் அவளுக்குத் தனியான மதிப்பும் செல்வாக்கும் இருந்து வந்தன. அவளல்லாமல் வேறு ஒருவர் அப்பொழுது அரசாட்சி நடத்தியிருந்தால் ஏராளமான பொல்லாங்குகள் நேர்ந்திருக்கலாம்.

1603-ல் எலிஸபெத் தனது எழுபதாவது வயதில் காலகதியடைந்தாள். அவளுடன் ட்யூடர் வம்சத்தின் ஆட்சி முற்றுப் பெற்றது; அவளுடன் இங்கிலண்டு தேசசரித்திரத்தின் ஒரு சகாப்தம் முடிவடைந்தது. பழைய சகாப்தத்தையும் புதிய சகாப்தத்தையும் சேர்த்துவைத்த ஒரு தொடர்ச்சியான சங்கிலியென்றே அதை மதிக்கலாம். எலிஸபெத், கன்னிகையாகவே காலம் கழித்தமையால், அவளுக்குப்பின் இராஜ்யம் வேறு வம்சத்தினருக்குச் சென்றது. ஏழாவதுஹென்றி தமது பெண் ஒருத்தியை ஸ்காட் அரசருக்கு விவாகம் செய்து கொடுத்திருந்ததை முன்பே கூறினோம். ஸ்காட் இராணிமேரி, அந்த அரசருடைய பேர்த்தியாவாள்; ஸ்காட் இராணி மேரியின் புத்திரன், ஆறுவது ஜேம்ஸ் என்ற பெயருடன் ஸ்காட் அரசராக முடிசூடியதையும் முன்னர் கூறினோம். இப்பொழுது அந்த ஆறுவது ஜேம்ஸ் இங்கிலண்டிற்கும் அரசானார். ஆனால், இங்கிலண்டில் ஜேம்ஸ் என்ற அரசர் அதற்குமுன் பட்டத்திற்கு வந்ததில்லையாதலால், அவர் இங்கிலண்டின் சரித்திரத்தில் முதலாவது ஜேம்ஸ் (James I) என்று குறிக்கப்படுகிறார். அவர் ஸ்டுவர்ட் (Stuart or Stewart) என்ற வம்சத்தைச் சேர்ந்தவர். ஆதலால் ட்யூடர் வம்சத்திற்குப் பிறகு ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சி ஆரம்பமாயிற்று.

(5) இங்கிலண்டின் கடல் அதிகார மகிமை:—ஐரோப்பாக் கண்டத்தில் 15-ம் நூற்றாண்டில் ஒரு புதிய உணர்ச்சி தோன்றியதைப் பற்றி முன்னரே விரிவாகக் கூறினோமல்லவா? அந்த உணர்ச்சி காரணமாக சமூக வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் பெரிய பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. அவ்வுணர்ச்சி காரணமாக ஏற்பட்ட விவேக முதிர்ச்சியினாலும், அறிவுப் பெருக்கினாலுமே, மதப்புரட்சி தோன்றி ஐரோப்பாவின் நடவடிக்கைகளையே ஒரு

புதிய போக்கில் திருப்பிவிட்டது. அவ்விதமே பல கலைகளும் வளர்ச்சியடைந்தன. ஆனால் அவைகளைக் காட்டிலும் உலக சரித்திரத்திலேயே ஒரு பெரிய மாறுதலை ஏற்படுத்திய முக்கியமான ஒரு சம்பவமும் நிகழ்ந்தது. அதாவது, அதுவரையில் தம் தம் தேசங்களுக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்த ஐரோப்பியர்கள் அபார தைரியத்தையும், ஊக்கத்தையும் காட்டி, கடலில் பிரயாணம் செய்யத் தொடங்கி, புதிய புதிய நாடுகளுக்குச் சென்று குடியேறியும், தூர தேசங்களுடன் வியாபாரம் செய்தும் தம்முடைய நாட்டில் பலவிதங்களில் செல்வமும் வளமும் சீரும் பெருகும்படி செய்தனர். அப்பொழுது திசையறி கருவி முதலிய யந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. கோலம்பஸ் (Columbus) என்பவர் அமெரிக்காக் கண்டம் இருப்பதைக் கண்டு பிடித்தார். அப்பொழுது அந்தக் கண்டம் முழுதும் பூர்விக ஜனங்களான நாகரிகமற்ற சில ஜாதியாருடைய வசத்தில் இருந்து வந்தமையால், ஐரோப்பியர்களுக்கு அங்கு சென்று குடியேறுவது சுலபமாயிருந்தது. அதன்பிறகு வாஸ்கோடிகாமா (Vascodegama) என்பவர் இந்தியாவிற்குக் கடல் மார்க்கமான வழியைக் கண்டுபிடித்தது, வியாபாரம் செய்வதற்கேற்ற வசதியை யளித்தது. ஸ்பெயின் தேசத்தாரே முதன் முதலாக இவ்விஷயங்களில் அக்கறை காட்டி அமெரிக்காவில் சென்று குடியேறி வியாபாரம் செய்து ஊரைக் கொள்ளையிட்டு வந்தனர். முதலில் அவர்களுக்குப் போட்டியாக எவரும் முன்வரவில்லையாதலால் அவர்கள் அமெரிக்காவில் அகப்படும் கொள்ளையைத் தாமே பூர்த்தியாக அநுபவித்து வந்தனர். ஆனால் நாளடைவில் மற்ற பல ஐரோப்பிய தேசங்களும் அந்தக் கொள்ளைத் தொழிலில் கலந்து கொண்டன. அவைகளில் இங்கிலண்டே கடைசியாகவே அம்முயற்சியில் கலந்து கொண்டது. ஆனால் கடைசிப் பிள்ளையே சமர்த்தன் என்பதற்கிணங்க, முதலில் சென்றவர்களின் வாழ்வு அற்ப வாழ்வாய் முடிய, இங்கிலீஷ்காரர் அடைந்த மேம்பாடும் உரிமைகளும் செல்வமும் நிரந்தரமாக நிலைத்துப் போயின. 15-ம் நூற்றூண்டு வரையில் இங்கிலீஷ்காரர்கள் கடல் வியாபாரத்தில் அக்கறை கொண்டவர்களன்று. உள்நாட்டு வியாபாரத்தைச் செய்து அவர்கள் திருப்தியடைந்து வந்தனர். ஆனால் கொலம்பஸ்

முதலியவர்களுடைய பிரயாணங்களைப் பற்றிக் கேள்வியுற்றபின் எழாவது ஹென்றி, ஜான் கா/2பட் (John Cabot) என்பவரை அமெரிக்காக் கண்டத்திற்கு அனுப்பினர். கா/2பட் வட அமெரிக்காவில் வடகிழக்குப் பிரதேசத்தை ஆராய்ந்து பார்த்துவிட்டுத் திரும்பினர். அதன்பிறகு ஹாக்கின்ஸ் (Hawkins) என்பவர் தென் அமெரிக்காவுடன்வியாபாரம்செய்யத் தொடங்கினர். 1553-ல்(மேரியிராணியின் காலத்தில்) ஸர் ஹ்யூ வில்லோபி (Sir Hugh Willoughby) என்பவரும் ரிச்சர்ட் சான்ஸலர் (Richard Chancellor) என்பவரும் சேர்ந்து, இங்கிலண்ட் தேசத்தின் வடக்கே சென்று ஆர்டிக் மகா சமுத்திரத்தின் வழியாக, சீன தேசத்திற்கு வழி கண்டுபிடிக்க முயர்சித்தனர். ஆனல் அவர்கள் அந்த முயற்சியில் ஜயமடையாமல் உருஷியா தேசத்துடன் வியாபாரம் நடைபெற வழி தேடினர்.

அதன் பிறகு இங்கிலண்டில் தொடர்ச்சியாக மத மாறுதல்கள் எற்பட்டது மேற்கூறிய கடல் பிரயாணங்கள் அதிகமாவதற்குக் காரணமாயிருந்தன. உண்மையான மதப்பற்றுதல் உள்ளவராயினும் இல்லாதவராயினும் ஆஸ்திகராயினும் நாஸ்திகராயினும் இங்கிலீஷ்காரக் கடல் வீரரிற் பலர் ப்ராடெஸ்டண்ட் மதத்தை எற்று, போப்பையும் கா/2தலிக்காரரையும் விஷம்போல வெறுத்து வந்தனர். மேரியின் கொடுமையை சகியாத பல ப்ராடெஸ்டண்ட் இங்கிலீஷ்காரர் கடல் வாழ்க்கை புரியத் தொடங்கி, அயல் தேசக்கப்பல்களைக் கொள்ளையடித்து ஜீவிக்கலாயினர். மேலும் அப்பொழுது இங்கிலீஷ்காரர் ஸ்பெயின் தேசத்தின்மேல் கடுமையான பகைமையும் வெறுப்பும் கொண்டிருந்தனர்; ஸ்பெயின் தேசத்தார் கா/2தலிக் மதத்தை ஆதரித்து வந்ததுடன், அவர்கள் அடிக்கடி அமெரிக்காவிலிருந்து அநேகம் பொருள்களை சம்பாதித்துக் கடல் மார்க்கமாகத் தமது தேசத்திற்குக் கொண்டுவந்து சேர்த்தனர். ஷெ கப்பல்களை வழி மறித்து, அவைகளில் இருந்த பொருள்களைப் பறிமுதல் செய்வது இங்கிலீஷ் கடல்வீரருக்கு குதூகலத்தை உண்டாக்கியதன்றி ஜீவனேபாயத்திற்கும் வழியாயிற்று. ஸ்பெயின் தேசத்தாரைப் பல விதங்களில் உபத்திரவிப்பது அவர்களுக்கு நியாயமான கடமையெனத் தோன்றியது. மேலும் அமெரிக்காவில் ஸ்பெயின் நாட்டினர் மாத்திரமே பூர்த்தியான உரிமையுடன் வியா

பாரம்செய்து வந்தமையால், மற்ற தேசத்தினர் அவர்களுக்குத் தெரியாமல் தந்திரமாகவும் வஞ்சகமாகவும் அமெரிக்கா தேசத்தாருடன் வியாபாரம் செய்யவேண்டி வந்தது. எப்படியிருந்தாலும், இங்கிலீஷ் ஜனங்களுக்குக் கடல் வியாபாரத்திலும் கடலதிகாரத்திலும் பலமான ஆசை உண்டாயிற்று. நிலப்பிரதேசங்களைவிட, கடலே முக்கியமானதாகி விட்டது.

அமெரிக்காவில் குடியேறிய ஸ்பெயின் தேசத்தாருக்கு அங்கு கிடைத்த நிலங்களை உழுது பயிரிடவும், சுரங்கங்களில் வேலை செய்யவும் ஏராளமான கூலியாட்கள் தேவையா யிருந்தனர். ஏனெனில் அமெரிக்காவில் சென்று தாங்களே வேலைசெய்வதை அவர்கள் இழிவாகக் கருதினர்; அமெரிக்காவில் இருந்த சுதேசக் குடிகளோ கஷ்ட வேலைகளைச் செய்யும் திறமையுடைவர்களாய் இல்லை. அதை யறிந்த ஜான் ஹாக்கின்ஸ் என்ற இங்கிலீஷ்காரர், பணம் சம்பாதிக்க ஒருவழி கண்டுபிடித்தார். அவர் ஆப்பிரிக்கா தேசத்தின் கடலோரங்களுக்குச் சென்று, அந்தக் கண்டத்தின் சுதேச ஜனங்களான நீக்ரோக்களில் முரட்டு ஆட்களாகப் பொறுக்கியெடுத்து அவர்களைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு வந்து, ஸ்பெயின் தேசத்தாருக்கு விற்று வந்தார். ஸ்பெயின் தேசத்துப் பிரபுக்கள் அவர்களை அமெரிக்காவுக்குக் கொண்டுபோய், அவர்களைக் கொண்டு தங்களுடைய நிலங்களை உழுது பயிரிட்டுக்கொண்டனர். 1562-லும் 1564-லும் ஹாக்கின்ஸ் அம்மாதிரி நீக்ரோ வியாபாரம் செய்து ஏராளமான பணம் சேர்த்துக்கொண்டார். ஸ்பெயின் சக்கரவர்த்தியான பிலிப் அதைக் கேட்டு, பெரிதும் சினம் கொண்டார். 1567-ல் ஹாக்கின்ஸ் மூன்றாவது தடவை நீக்ரோ வியாபாரம் செய்ய எத்தனித்த பொழுது ஸ்பெயின் தேசத்து வீரர்கள் அவரை எதிர்த்துத் துரத்திவிட்டனர். ஆனால் ஹாக்கின்ஸ் காட்டிய வழியை மற்ற பல இங்கிலீஷ்காரர்கள் பின்பற்றி நடந்தனர். அதனால் அமெரிக்காக் கண்டத்தில்—முக்கியமாக மத்திய நாடுகளில்—ஐரோப்பியர்களுக்குச் சொந்தமான நிலங்களை நீக்ரோக்கள் உழுது பயிரிடும் வழக்கம் ஊன்றி நிலைத்துவிட்டது. ஐரோப்பியர்கள் அமெரிக்காவில் உள்ள நிலங்களை விலைகொடுத்து வாங்கவில்லை. அப்பொழுது அமெரிக்காக் கண்டம் பெரும்பாலும் காடுகளாகவும் சமவெளிகளாகவும் நிர்மா

நுஷ்யமாகவுமே இருந்தனவாகையால் நினைத்தவர்கள் நினைத்தபடி அங்கு சென்று வேண்டிய அளவிற்கு நிலத்தை சுவாதீனப்படுத்திக் கொண்டனர். ஆனால் அக்காலத்தில் நீராவிக்கப்பல் முதலான போக்குவரத்து சௌகரியங்களும் மற்ற நவீன வசதிகளும் இல்லாமையால் எத்தனையோ மைல் தூரத்திற்கப்பாலுள்ள ஒரு புதிய கண்டத்தில் சென்று குடியேறியவர்கள் அசகாய சூரர்களாகவே கருதப்பட்டனர். மேலே கூறியபடி, நீக்ரோக்களை ஆடுமாடுகள்போலப் பிடித்து விற்று அடிமைகளாக நடத்தியது பெரிய அநீதியென்பதை இங்கிலீஷ்காரரும் உணரவில்லை; ஸ்பெயின்காரரும் உணரவில்லை. இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்புதான் அந்தச் செய்கை அநியாயமானதென்ற விவேகம் அவர்களுக்கு உதயமாயிற்று.

ஹாக்கின்ஸ் என்பவர் தமது பணப்பையை நிரப்பிக்கொள்ளும் பொருட்டு மாத்திரம் நீக்ரோ வியாபாரம் நடத்திக் கடல் பிரயாணம் செய்ததற்குமாறாக, மற்றும் பல வீரர்கள் கேவலம் துணிகரமான செய்கைகளைச் செய்யும் ஆசையுடனும்,போப்பிற்கு விரோதமாக, காதலிக்காரரை எதிர்த்துத் துன்புறுத்தும் நோக்கத்துடனும், அதன்மூலம் தமது நாட்டு சகோதரர்களின் மதிப்பையும் கௌரவத்தையும் பெறும் எண்ணத்துடனும் கடல் பிரயாணம் செய்தனர். இக்காலத்தில் கடல் பிரயாணம் செய்வது எவ்வளவோ சௌகரியமாயிருக்கிறது; ஆரோக்கியத்தின் பொருட்டுக்கூடப் பலர் கப்பலேறிச் சென்று வருகின்றனர். அக்காலத்திலோ கப்பலேறிச் சென்று வருவதென்றால் அது நிரம்பவும் அபாயகரமாகவே இருந்தது. ஆதலால் உயிரைத் திரணமாக மதித்தவர்கள் மாத்திரமே அதில் அக்கரை கொண்டனர். சாமானிய ஜனங்களும் ஷை சிலருடைய வீரச் செயல்களைக் கொண்டாடி வந்தனர். மார்ட்டின் ப்ராபிஷர் (Martin Frobisher) என்பவர் வட அமெரிக்காவின் வடகோடிக்கு மூன்று முறை பிரயாணம் செய்து அங்கிருந்து சீனதேசத்திற்குப்போகக் கடலில் ஒரு வழி கண்டுபிடிக்க முயற்சித்தார். அவரைவிட முக்கியமானவர் ட்ரேக் (Drake) என்பவர்; ட்ரேக் முதன்முதலாக பூகோளத்தை சுற்றிவந்தவர். அவர் 1577-ல் புறப்பட்டு மூன்று வருஷகாலம் கழித்தபின்பு திரும்பி ஊருக்கு வந்து சேர்ந்தார். ட்ரேக் என்பவர் இங்கிலண்டிலிருந்து அமெரிக்கா

வுக்குச் சென்றபின், அதற்கு மேற்கேயுள்ள பஸிபிக் மகா சமுத்திரத்தில் பிரயாணம் செய்யவேண்டுமென்று உறுதி செய்திருந்தார். அதற்குமுன் ஸ்பெயின் தேசத்தினர் மாத்திரமே அந்தக் கடலில் பிரயாணம் செய்துவந்தனர். ட்ரேக் தம்முடைய தீர்மானத்தை நிறைவேற்ற நிச்சயம்கொண்டு, இங்கிலண்டிலிருந்து புறப்பட்டு, அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்து, அமெரிக்காவின் தென் முனையைச் சுற்றிக்கொண்டு, பஸிபிக் சமுத்திரத்தை அடைந்தார். அங்கு ஸ்பெயின் தேசத்து வியாபாரிகளை எதிர்த்துக் கொள்ளையடித்து ஏராளமாகப் பொருள் சேர்த்துக்கொண்டு மேற்குப் புறமாகச் சென்று, இந்துமகா சமுத்திரத்தை அடைந்து, ஆப்ரிக்காக் கண்டத்தின் தெற்கேயுள்ள நன்னம்பிக்கை முனையைச்சுற்றிக் கொண்டு, புறப்பட்ட இடத்திற்கு வந்துசேர்ந்தார். மூன்றுவருஷ காலம் இடைவிடாமல் பிரயாணம் செய்ததில் அவர் புயல் காற்று முதலிய இயற்கை உபத்திரவங்களாலும் பகைவர்களின் துன்பங்களாலும் படாதபாடுகள் பட்டு வந்து சேர்ந்தார். 1580-ல் அவர் இங்கிலண்டிற்குத் திரும்பிவந்ததும், எல்லோராலும் ஏகமனதாகக் கொண்டாடப் பெற்றார். எலிஸபெத் இராணி அவரது செய்கையைப் பற்றி மகிழ்ச்சியடைந்து அவருடைய கப்பலுக்குத் தானேசென்று, அங்கு ட்ரேக் வீரருக்கு ஸர் பட்டம் அளித்தாள். ஆனால் ஸ்பெயின் அரசரான பிலிப், ட்ரேக் செய்த அட்டூழியங்களை எடுத்துக் காட்டி அந்தக் கடற்கொள்ளைக்காரரைத் தம்மிடம் ஒப்புவித்து அவர் கொள்ளையடித்திருந்த பணத்தையும் திருப்பிக் கொடுக்கும்படி எலிஸபெத்தினிடம் வேண்டினர். எலிஸபெத் தனது தேசத்து வீரரைக் காட்டிக்கொடுக்கமறுத்து, பிலிப்பையும் நயவார்த்தைகளால் சமாதானம் செய்து, ட்ரேக்கின் செய்கைகளையும் இரகசியத்தில் அங்கீகரித்து வந்தாள். ட்ரேக் முதலிய கடல் வீரர்களுக்கு 'கடல் நாய்கள்' (Sea Dogs) என்ற காரணப் பெயரும் கிடைத்தது. இங்கிலண்டிற்கும் ஸ்பெயின் தேசத்திற்கும் யுத்தம் நேர்ந்ததற்குக் காரணங்களில் ஒன்று, இக் கடல் நாய்களின் அட்டூழியங்களேயாகும். ஆனால் கடல் நாய்களின் உதவியினாலேயே எலிஸபெத் உயிர் தப்பினாள்; இங்கிலண்டும் காப்பாற்றப்பட்டது. உண்மையில் வேட்டை நாய்களைப்போலவே அவர்கள் ஆர்மடாக் கப்பற் படையைச் சூறையாடித் துரத்திவிட்டனர்.

எலிஸபெத்தின் காலத்தில் இன்னும் பலவிதங்களில் வியாபாரப் பெருக்கு ஏற்பட்டது. 1600-ம் வருஷத்தில் சில இங்கிலீஷ் வர்த்தகர்கள் 'கிழக்கிந்தியக் கம்பெனியார்' என்று பெயர் வைத்துக்கொண்டு, இராணியிடமிருந்து உரிமைப் பத்திரம் பெற்று இந்தியா முதலான தேசங்களுடன் வியாபாரம் செய்ய ஆரம்பித்தனர். அதன்பின் அவர்களுடைய வியாபாரம் பெருகி, இந்தியாவில் இங்கிலீஷ் ஆட்சி ஏற்படுவதற்கு எலிஸபெத் காலத்திலேதான் விதை ஊன்றப்பட்டது. அதே மாதிரி அமெரிக்காவிலும் பலர் அப்பொழுது குடியேறத் தலைப்பட்டனர். இராணியின் இஷ்டர்களுள் ஒருவரான ஸர் வால்ட்டர் ராலீ (Sir Walter Raleigh) என்பவர் இரண்டு மூன்று முறை அமெரிக்காவுக்குச் சென்று, தமது தேசத்தினரை அங்கு குடியேறும்படி தூண்டினார். அந்த தேசத்திற்கு வர்ஜீனியா (Virginia) அதாவது "கன்னி இராணியின் நாடு" என்று எலிஸபெத்தின் பெயரால் அதைக் குறிப்பிட்டார். வால்ட்டர் ராலீதான் முதன் முதலாகப் புகையிலையை இங்கிலண்டிற்கு கொண்டு வந்தாராம். ஆனால் அவரே அந்த நாட்டில் தங்குவதற்கு நிச்சயிக்கவில்லையாதலால் அவருடைய முயற்சி விசேஷமான பயனை யளிக்கவில்லை. இருந்தாலும், அவருடைய ஆலோசனை சிறிது காலத்தில் நிறைவேறியது. ராலீ என்பவர் இராணியினுடைய மனதைக் கவர்ந்த பிரபுக்களில் ஒருவர். அவர் எப்பொழுதும் சாமர்த்தியமாக நடந்துகொண்டு அரசியின் பிரியத்தை இழக்காமல் இருந்து வந்தார். அமெரிக்காவில் தங்கமும் வெள்ளியும் எங்கும் இறைந்து கிடப்பதாக அவர் கட்டுக் கதைகள் கூறி ஜனங்களுடைய அவாவையும் அரசியின் ஆச்சரியத்தையும் அதிகப்படுத்தி வந்தார். அவ்விதம் எலிஸபெத் அரசியின் காலத்தில் இங்கிலீஷ் ஜனங்கள் ஏதோ ஒரு விதத்தில் சுறுசுறுப்பாக இருந்து, தேனீக்கள்போல அங்குமிங்கும் சென்று ஓடியாடி இங்கிலண்ட் தேசத்திற்குப் பொருளையும் புகழையும் மேம்பாட்டையும் வேறு பலவித ஊதியங்களையும் கொண்டுவந்து சேர்த்தவண்ணமிருந்தனர்.

(6) **ட்யூடர் வம்சத்தினரின் சுயேச்சாதிபத்தியம்**:—எழாவது ஹென்றியின் காலம் முதல் எலிஸபெத் காலம் முடிய நீடித்

திருந்த ட்யூடர் வம்சத்தாரின் ஆட்சி இங்கிலண்டு தேச சரித்திரத்தில் ஒரு முக்கியமான பகுதியாகும். அது பலவிதங்களில் முக்கியமாயிருந்தது. முதலாக, அதுமுதல்தான் புராதன காலம் முடிய, நவீன காலம் ஆரம்பமாயிற்று. பழைய முறைகள் மறைந்தோ, மாறியோ புதிய முறைகளுக்கு இடங்கொடுத்தன; எல்லாத் துறைகளிலும் புரட்சிகளும் திருத்தங்களும் மாறுதல்களும் ஏற்பட்டன. புதிய உணர்ச்சி தோன்றியதைப்பற்றி முன்பே கூறினோம்; பிறகு மதப் புரட்சி உண்டாகி கிரிஸ்தவ மதத்தை இரண்டு பிரிவுகளாகச் செய்தது. அதன் பிறகு கா/2தலிக் மதத்திற்கு சாதகமாக எதிர்ப்புரட்சியொன்று ஐரோப்பாவில் உண்டானாலும், அது இங்கிலண்டை அவ்வளவு அதிகமாக பாதிக்கவில்லை. இங்கிலீஷ் தேசிய வாழ்க்கை, அமைதியாகவும் பலமான எதிர்ப்புகளுக்குட்படாமலும் முன்சென்று கொண்டிருந்தது. எலிஸ2பெத்தும் அவளுக்குமுன் அவளுடைய தந்தையும், ப்ராடெஸ்டன்ட் மதத்தைக் காத்து அது நிலைத்திருக்குமாறு செய்துவிட்டனர். ஆறுவது ஹென்றி, மேரி ஆகிய இருவருடைய காலத்திலும் சிறிதளவு குழப்பம் ஏற்பட்டது; எலிஸ2பெத் நாட்டில் அமைதியை ஏற்படுத்தினாள். அமைதியற்ற தேசத்தினர் தமது கவனத்தையும் புத்தியையும் திறனையும் வேறு வழிகளில் செலுத்தினர். அந்த இராணியினது ஆட்சியின் பிற்பகுதியில் ஜனங்களிடம் பெருகிக்கொண்டிருந்த புதிய உணர்ச்சி பல நூதன விதங்களில் அழகாகப் புஷ்பித்துப் பிரகாசிக்கலாயிற்று.

ட்யூடர் ஆட்சியின் சில பொதுவான விசேஷ குணங்களை ஆராய்ந்து தெரிந்துகொள்வது அவசியமாகத் தோன்றுகிறது. அப்பொழுது தேசம் இருந்த நிலைமையில் தைரியமும் உறுதியும் திடமும் படைத்த அரசரால் மாத்திரமே இராஜ்ஜிய நிர்வாகம் ஒழுங்காய் நடப்பது சாத்தியமாயிருந்தது. ஏழாவது ஹென்றி அரசானபொழுது ரோஜாப்பூக்களின் யுத்தம் முடிவடைந்திருந்ததுபற்றி ஜனங்கள் தளர்வுற்றிருந்தனர். எட்டாவது ஹென்றியின் காலத்தில் மதப்புரட்சி தோன்றியது. எலிஸ2பெத் இராணியோ ஸ்பெயின் தேசத்துடன் போராடவேண்டியிருந்தது. ஆனால் இங்கிலண்டின் அதிருஷ்டவசமாக ட்யூடர் அரசர்களும் அரசிகளும் அந்த வேலைக்கேற்றவர்களாகவே இருந்தனர். அரசாங்கமென்னும் கப்பலை


தெரியாதது
யூரோப்
ஏஷியா
ஆப்ரிக்கா
அமெரிக்கா
ப்ரோபிஷர்
1576
1497
ட்ரேக் 1579
பஸிபிக்
மகாசமுத்திரம்
இண்டியன்
மகாசமுத்திரம்
1580.
16 வது நூற்றாண்டில்
அன்னிய நாடுகளுக்குச்
சென்று குடியேறிய
விவரங்கள்.
ஸ்பானியர் குடியேறிய நாடுகள்
போர்ச்சுகீஸியர் — ,, —
டச்சுக்காரர் — ,, (1602க்குப் பிறகு)

(304-வது பக்கம்)

அவர்கள் எவ்விதமோ பாடுபட்டு, ஸாம, தான, பேத, தண்டம் முத லிய உபாயங்களினால் ஜாக்கிரதையாக ஓட்டிச்சென்று, கொந்தளிக் கும் கடல்களைக் கடந்து, பத்திரமான இடத்தில் கொண்டுவந்து சேர்த்தனர். அவர்கள் பிரஜைகளிடம் சில சமயம் கொடுமையாக நடந்து கொண்டனராலும், மொத்தத்தில் நாட்டின் நன்மையே கருதி நடந்து வந்தனர். இரண்டொரு சமயங்களில் சுயநலத்தை யுத் தேசித்தும் கொடுமைகள் புரிந்தனர். ஆனால் அவைகளை நாம் புறக் கணித்துவிடலாம். ட்யூடர் அரசர்களும் அரசிகளும் தங்களது மனப் போக்கின்படி ஆண்டமையால் அவர்களுடைய ஆட்சியை சுயேச் சாதிபத்தியம் என்றே கூறவேண்டும்; ஆனால் அந்த சுயேச்சாதிபத் தியம் கொடுங்கோன்மையில் சேர்ந்ததன்று; கொடுங்கோன்மையாக ஆளும் அரசாது துர்க்குணங்கள் எதுவும் அவர்களிடம் காணப்பட வில்லை. தமது புத்திரர்களின் நன்மையின்பொருட்டே அவர்களைக் கடு மையாக நடத்தும் தந்தையின் நடத்தைக்கே ட்யூடர் வம்சத்தினரின் ஆட்சியை ஒப்பிடலாம். ட்யூடரது ஆட்சி உறுதியாக இருந்ததனாலே தான் இங்கிலண்டு தேசம் எத்தனையோ யுத்தங்களையும் இதர அபா யங்களையும் மேற்கொண்டு நின்றது. மற்ற தேசங்களில் நேர்ந்தமதப் போர்களும் இரத்தவெள்ளமும் இங்கிலண்டில் அவ்வளவு அதிகமாக ஏற்படவில்லை. லங்காஸ்டர் வம்சத்தினரின் ஆட்சியில் பார்லிமென்ட் சபையின் விருப்பத்தின்படியே அரசர்கள் ஆள வேண்டுமென்ற முறை ஸ்தாபிக்கப்பட்டதாகக் கூறினோமல்லவா? ட்யூடர் வம்சத் தினர் அதைப் பின்பற்றவில்லை யென்றே கூறவேண்டும். அத னால் இங்கிலீஷ் அரசியல் முறை மாறுபட்டுவிட்டதாக எண்ணு தல் கூடாது. சட்டங்களில் எதுவும் மாறவில்லை; அவைகள் சொற்பகாலம் அமுலுக்கு வராமல் மறைந்திருந்தன. ட்யூடர் வம் சத்தினர் தம்முடைய சுயமான பராக்கிரமத்தினால் மாத்திரம் அவ் வாறு சுயேச்சாதிபத்தியம் நடத்தவில்லை. அவ்விதம் செய்திருந்தால் ஜனங்கள் கலகம் புரிந்து குழப்பம் விளைவித்திருப்பது திண்ணம். ஜனங்களாகவே அவ்வரசர்களிடம் பூர்த்தியான நம்பிக்கை வைத்திருந் தனர். காலநிலையும் உறுதியான அரசியல் நிர்வாகமே அவசியமென் பதைத் தெளிவுபடுத்தியது. மேலும் ட்யூடர் வம்சத்தாருடைய பலத் திற்குக் காரணமாயிருந்த முக்கிய அம்சங்கள் இரண்டு. மதஸ்தாபனம்

அழிந்தது ஒரு காரணம். பிரபுக்களின் வலு ஒடுங்கியது இரண்டாவது காரணம். இரண்டாவது ஹென்றி, ஜான் முதலிய அரசர்களது காலத்தில் மத ஸ்தாபனம் அரசாங்கத்திற்குச் சரியான பலத்தைப் பெற்ற எதிரிடையான ஒரு ஸ்தாபனமாக இருந்து வந்ததை நாம் ஏற்கனவே கண்டோம். எட்டாவது ஹென்றியின் காலத்தில் போப்பின் உரிமையும் மதகுருமாரின் ஆதிபத்யமும் ஒரேயடியில் வீழ்த்தப்பட்டன. அவ்வாறு நார்மன் அரசர்களை இடைவிடாமல் எதிர்த்து வந்து, ரோஜாப்பூக்களின் யுத்தம்போன்ற உள்நாட்டுச் சண்டைகளுக்குக் காரணபூதர்களாய் இருந்த பிரபுக்களின் வலியும் ட்யூடர் ஆட்சியில் குறைந்துவிட்டது. உதாரணமாக, எட்டாவது ஹென்றி ஸ்தாபித்த, நட்சத்திர கூட நீதிஸ்தலம், எலிஸபெத் ஸ்தாபித்த ஹை கமிஷன் நீதிஸ்தலம் ஆகியவை பிரபுக்களின் கொட்டத்தை அடக்கின; எட்டாவது ஹென்றி மதஸ்தாபனச் சொத்துக்களைக் கொள்ளையடித்து அவைகளை பிரபுக்களுக்கு அளித்தமையால், பிரபுக்கள் அரசரிடம் பகைமை கொள்ளாமல் நன்றியறிதலுடனேயே இருந்தனர். எனவே, பழைய காலத்தில் அரசருக்கு எதிரிடையாக சச்சரவுபுரிந்த பிரபுக் கூட்டத்திற்குப் பதிலாக அரசரை அநுசரித்து நடந்துகொண்ட பிரபுக்கள் ஏற்பட்டனர். அதை எலிஸபெத்தின் காலத்தில் நன்றாகக் காணலாம். அவ்வரசியின் தயவை நாடிநின்ற பல பிரபுக்களைப்பற்றி நாம் முன்பே கூறினோம். மத குருமார்களும் பிரபுக்களும் பழைய காலங்களிலிருந்ததுபோலின்றி அதற்கு முற்றிலும் மாறாக, அரசாங்கத்தைத் தாங்கும் தூண்கள் போலாய்விட்டனர். அதனால் ட்யூடர் ஆட்சி அவ்வளவு அபாரமான வலுவையடைந்தது. மேலும் இங்கிலீஷ் ஜனங்கள் 17, 18-ம் நூற்றாண்டுகளில் அரசருடைய சுயேச்சாதிபத்தியத்தை எதிர்க்க ஆரம்பித்தனர். அவர்கள் ஜனநாயக தத்துவத்தை ஆதரித்தனர். பார்லிமெண்ட் சபையினரும் தம்முடைய அதிகாரத்தை உண்மையிலேயே வகித்து, நடவடிக்கைகளில் அநுஷ்டானத்திற்குக் கொண்டுவரப் போராடினர். அந்த வரலாற்றை நாம் பின்னால் தெரிந்து கொள்வோம். அந்த இயக்கம் தோன்றியது பற்றி, பிற்காலத்தில் வந்த அரசர்கள் நிரம்பவும் பாடுபட்டனர். ட்யூடர் வம்சத்தினர் ஆண்ட 16-ம் நூற்றாண்டு பழைய சகாப்தத்தி

லும் சேராமல், புதிய சகாப்தத்திலும் சேராமல் இரண்டிலும் கலந்து, இரண்டிற்கும் கோர்வையாய் இருந்ததாகையால், ட்யூடர்களுக்கு விசேஷ சௌகரியங்கள் ஏற்பட்டிருந்தன. அவர்களுக்கு முன்னர் ஆண்ட அரசர்களுக்கு ஏற்பட்ட ஒருவிதமான துன்பமோ, அவர்களுக்குப் பின்வந்த அரசர்களுக்கு நேரிட்ட வேறுவிதமான துன்பங்களோ ட்யூடர் வம்சத்தினருக்கு ஏற்படவில்லை. நடுமத்தியில் இருந்தமையால், அவர்கள் தப்பித்துக்கொண்டனர். அதே வம்சத்தினர் 17, 18-வது நூற்றாண்டில் இருந்திருந்தால் ஜனங்களுக்கும் அவர்களுக்கும் சச்சரவு ஏற்பட்டிருப்பது நிச்சயம். அவர்களுக்குக் கெட்ட பெயர் உண்டாகாத வண்ணம், 1603-ம் வருஷத்துடன் அவர்களுடைய ஆட்சியை முடிவடையும்படி செய்தது தெய்வமே துணைசெய்தது போலாயிற்று. மேலும் ட்யூடர்களின் காலத்தில் இங்கிலீஷ்காரர்கள் எவ்விஷயத்திற்கும் அரசனையோ அரசியையோ எதிர்பார்த்து நின்றனர். ஐரோப்பிய நாடுகளில் மதச் சண்டைகளால் விளைந்த பெருத்த அனர்த்தத்தைக் கண்ட ஜனங்கள் அரசாங்கத்தாரின் கொடுமையை சகித்து வந்தனர். ஆதலால் ட்யூடர்களுடைய சுயேச்சாதிபத்தியம் ஓரளவிற்கு ஜனங்களுடைய சம்மதியை அநுசரித்ததாகவே இருந்ததெனக் கூறலாம். மேலே குறித்தபடி தேச நிலைமையே ட்யூடர்களுக்கு அநுகூலமாயிருந்ததன்றி அவர்களுடைய விசேஷ குணங்களும் அவர்களுக்குப் பேருதவி புரிந்தன. ட்யூடர் மன்னர்கள் பொதுவாக மிகவும் தந்திரசாலிகள்; சாமர்த்தியம் நிறைந்தவர்கள். அவர்கள் தாம் செய்த காரியங்களின் மூலம் சுயநலத்தை அதிகப்படுத்திக் கொண்டாலும், அது ஜனங்களுக்கும் சம்மதமாயிருக்கும்படி செய்வார்கள். ஆதலால் வெளிப்பார்வைக்கு அவர்கள் ஜனங்களுடைய (அல்லது பார்லிமெண்டினுடைய) விருப்பத்தையொட்டி நடப்பதாகத் தோன்றும். அவர்கள் எவ்வளவு கடுமையான நிர்வாக காரியத்தைச் செய்தாலும், அதற்கு பார்லிமென்டின் சம்மதியைப் பெற்று விடுவார்கள். மேலும் அப்பொழுது பார்லிமென்டின் அங்கத்தினர்களும் அரசாங்கத்திற்குப் பணிந்து நடப்பவர்களாகவே இருந்தனர். பார்லிமெண்ட் என்பது இரண்டு தனிச் சபைகளாகப் பிரிந்திருந்தது. ஒன்று சாதாரணஜனப்பிரதிநிதி

களடங்கிய காமன்ஸ் சபை (House of Commons); மற்றொன்று பிரபுக்களும் மதகுருமார்களும் அடங்கிய லார்ட்ஸ் சபை (House of Lord) இரண்டுசபையினரும் ட்யூடர்களுக்கு சாதகமாகவே இருந்தனர். பார்லிமென்டுக்கும் அரசருக்கும் மனஸ்தாபம் நேரிட சந்தர்ப்பமில்லை. பார்லிமெண்ட் சபையார் வரிகள் விதித்து, சட்டங்கள் இயற்றி, அவசியமானபொழுது அரசருக்குத் தங்கள் குறைகளை எடுத்துக் கூறுவார்கள். சட்டத்தை நிறைவேற்றி, வரிப் பணத்தைச் செலவிட்டு நிர்வாகம் நடத்துவது அரசருடைய அல்லது அரசியினுடைய சடமையாயிருந்தது. இராஜ்ஜியாதிகாரம் அரசரிடமே அடங்கியிருந்தது. எனவே ட்யூடர்களின் சுயேச்சாதிபத்தியம் ஜனங்களுக்கு சம்மதமானதாகவே இருந்தது. ட்யூடர் அரசர்கள், இங்கிலீஷ் சிம்மாதனத்தில் தமக்கு முன் வீற்றிருந்தவர்களுடைய பலஹீனத்தை வகிக்காமல் துணிகரமாகவும் தேசத்தின் நடுநாயகமாகவும் இருந்துவந்தனர். அரசாங்கத்திலும் மதஸ்தாபனத்திலும் அவர்களே தலைமை வகித்தனர். இருந்தாலும் அவர்களைக் கொடுங்கோலர்களென்று கூறுதல் சரியாகாது. ஏனெனில் கொடுங்கோன் மன்னர்கள் எப்பொழுதும் ஒரு சேனையின் உதவியைக்கொண்டே அதிகாரம் செலுத்துவார்கள்; அதாவது கத்தி முனையைக் காட்டி பயமுறுத்தி ஜனங்களை அடக்கி ஆண்டுவருவார்கள். ட்யூடர் மன்னர்களுக்கு அவவிதமான சேனை இல்லை. தம்மைக் காத்துக்கொள்ள ஒரு சேனை இல்லாமலேயே அவர்கள் சுயேச்சாதிகாரம் செலுத்தியதுதான் அவர்களுக்குவிசேஷமான பெருமையை உண்டாக்குகிறது. அதாவது ஜனங்கள், தம்மை எதிர்த்துத் துரத்திவிடுவார்கள் என்ற அச்சம் அவர்களுக்கு இல்லை. ஏனெனில் இங்கிலண்ட் தேசத்தின் மானத்தையும் மதிப்பையும் காப்பாற்றுவதை ட்யூடர் மன்னர்கள் முதற்கடமையாகக் கொண்டவர்கள். அதாவது அவர்களுடைய நோக்கமும் பிரஜைகளுடைய நோக்கமும் முக்கியமான வியவகாரங்களில் மாறுபடவில்லை. ஏதோ சில சமயங்களில் ஜனங்களுக்கு அதிருப்தி ஏற்பட்டாலும், அவர்கள் அதை சாமர்த்தியமாக அகற்றி விடுவார்கள். பார்லிமெண்ட் சபை அவர்களுடைய துணைக்கருவியாகவே இருந்துவந்தது. ட்யூடர் அரசர்கள் ஒரு சமயம் புன்முறுவல் புரிந்து, மறுசமயம் கடிந்து

கோபித்தாலும், மொத்தத்தில் நாட்டின் நலத்தை அதிகப்படுத்தினராதலால், பொதுமக்கள் அவர்களை அன்போடு ஆதரித்து வந்தனர்.

ட்யூடர்களின் காலத்தில், அரசரே முக்கிய மந்திரியின் வேலையைச் செய்து வந்து, முக்கிய வியவகாரங்களைத் தமதிச்சைப்படியே நடத்தி வந்தாலும், அவருக்குதவியாக உத்தியோகஸ்தர்கள் பலரும் இருந்துவந்தனர். ஏனெனில், ஒருவரே இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்துவது முடியாத காரியமாயிருந்தது; தேசத்திலிருந்த பெரிய பிரபுக்கள் அரசருக்கு அந்தரங்க நண்பர்களாக இருந்துவந்தனர். பொறுப்புள்ள முக்கிய உத்தியோகங்களும் அவர்களுக்கே கிடைத்தன. அவர்களுக்குக் கீழ், பல காரியதரிசிகளும் வேலைபார்த்து வந்தனர். அரசருக்குதவியாக இருபது பேர்களடங்கிய ஒரு சிறிய ஆலோசனை சபையும் இருந்துவந்தது ; அதில் பல அபிப்பிராயங்களையும் பல கொள்கைகளையும் கொண்டவர்கள் அங்கத்தினர்களாக இருந்து, அரசருக்கு ஒரு வியவகாரத்தின் பல அம்சங்களையும் எடுத்துக் கூறுவார்கள். அவர்களுடைய ஆலோசனைகளையெல்லாம் ஆராய்ந்தபின் அரசர் தமது முடிவைத் தெரிவிப்பார்.

ட்யூடர்களின் காலம் பலவிதங்களில் இங்கிலீஷ்காரரின் சரித்திரத்தில் மிக முக்கியமானதாயிருந்தது. வேல்ஸ் மாகாணம் அயர்லண்டு ஆகிய இரண்டும் இங்கிலண்டுடன் முன்னிருந்ததைவிட அதிகமாய் நெருங்கிவந்தன. உள்நாட்டில் அமைதி ஏற்பட்டது. அயல்நாட்டு விரோதிகளும் அடங்கினர். இங்கிலண்டின் கப்பற்படை பெருகியது. வியாபாரம் வளர்ந்து பரவியது. மேற்கே அமெரிக்காவிலும் கிழக்கே இந்தியாவிலும் இங்கிலீஷ்காரர்கள் சென்று பிற்காலத்து ஏகசக்ராதிபத்தியத்திற்கு அஸ்திவாரத்தைப் போட்டுவந்தனர். தேசத்தில் கலைகளும் சாஸ்திரங்களும் ஓங்கி வளர்ந்ததைப்பற்றிக் கீழே விரிவாகக் கூறுவோம். பலதுறைகளிலும் இங்கிலண்டின் தற்கால மகிமைக்கு அப்பொழுது விதை விதைக்கப்பட்டதென்றே கருதவேண்டும்.

**(7) ட்யூடர் ஆட்சியில் பொருளாதார நிலைமை; கலைகளின் அபிவிருத்தி:**—ட்யூடர் ஆட்சியில் இங்கிலீஷ் சமூக வாழ்க்கையும் பொருளாதார நிலைமையும் பலவிதங்களில் மாறுபட்டன. புதிய ஊக்

கத்தின் பயனாக, ஒவ்வொருவரும் நூதன முறைகளில் இறங்கி வேலைசெய்யும் துணிபையடைந்தனர். அதனால் போட்டிக்குமேல் போட்டிகள் ஏற்பட்டன; எட்டாவது ஹென்றி மடாலயங்களின் நிலங்களைக் கொள்ளைகொண்டதால் குடிமக்களுக்கு நேரிட்ட கஷ்டங்களைப்பற்றி முன்பே கூறியிருக்கிறோம். புதிய எஜமானர்கள் பண்ணையாட்களையும் கூலியாட்களையும் துன்புறுத்தி வந்தனர். ஆனால் நாளடைவில் அதனால் நன்மை விளைந்தது. குடிமக்கள் புதிய ஜீவனோபாய முறைகளில் இறங்கலாயினர். நிலத்தை உழுது பயிரிடுவதில் வந்ததைவிட கைத்தொழில்களில் அதிக இலாபம் கிடைத்து வந்தது. கைத்தொழிலாளிகள் ஒவ்வொரு நகரத்திலும் அபிவிருத்தி யடைந்து, கூட்டுவியாபாரங்களையும் ஐக்கிய சங்கங்களையும் ஏற்படுத்தி முக்கிய பிரஜைகள் ஆயினர். 1563-ல் அரசாங்கத்தார் இயற்றிய ஒரு சட்டப்பட்டி ஒவ்வொரு கைத்தொழிலாளியும் ஏழுவருஷகாலம் பயிற்சிசெய்து கொண்டபின்புதான் ஒரு தொழிலில் இறங்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. எலிஸபெத்தின் காலத்தில் இன்னொரு விசேஷ முன்னேற்றமும் ஏற்பட்டது. அதாவது நிஜமாகவே ஏழைகளாயுள்ளவர்களுக்கு அரசாங்கத்தார் உதவிசெய்ய முன் வந்தனர். நாட்டின் ஜனங்களைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றுவதைப்போலவே அவர்களை ஏழ்மைத் தன்மையிலிருந்து காப்பாற்றி உண்பித்து உடுத்துவதற்குப் பல சாதனங்களைச் செய்துவைப்பது அரசாங்கத்தாருடைய கடமையென்பதை எலிஸபெத் உணர்ந்தாள். அவள் ஏழைமக்களுக்கும் பிச்சைக்காரருக்கும் பரிகாரம் தேடும்பொருட்டு அநுஷ்டித்த முறைகளுக்குள் 1601-ல் செய்த ஓர் ஏற்பாடு மிக முக்கியமானது. அந்தச் சட்டப்படி, ஒவ்வொரு கிராமத்தொகுதியிலுமுள்ள பிச்சைக்காரர்களைக் காப்பாற்றும் பொறுப்பை அந்த கிராமத்தினரே வகிக்கவேண்டியதாயிற்று. அதாவது ஓர் அநாதையை அவனுடைய உறவினர்கள் காப்பாற்றுவதுபோல ஒரு கிராமத்திலுள்ள ஏழைகளை அந்த கிராமத்தாரே காப்பாற்ற வேண்டியதாயிற்று. அவர்களிடமிருந்து வரி வசூல்செய்து, அந்தத் தொகையைக் கொண்டு ஏழைகளைப் பாதுகாப்பதற்கு உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டனர். அந்த முறை இரண்டு நூற்றாண்டுகள் வரையில் மாறு

மல் இருந்துவந்தது. வேலை செய்ய சக்தியுடையவர்களுக்கு அந்த உதவி கிடைக்கவில்லை. அங்கஹீனராயிருந்தவர்களும், வயோதிகருமே அதனால் பாதுகாக்கப்பட்டனர்.

இங்கிலண்டு தேசத்தின் வளப்பெருக்கு இன்னும் பல விதங்களில் வெளிப்படையாகத் தெரிந்தது. ஜனங்கள் தினசரி வாழ்க்கையில் அதிக சுகசௌகரியங்களையும் விலையுயர்ந்த உணவையும் ஆடைகளையும் அடைந்தனர். கல்வியும் துரிதமாகப் பரவிற்று. ஒவ்வொரு கனவானும் நன்றாகக் கல்வி கற்று, கண்ணியமாக நடந்துகொண்டனர். அன்னிய தேசங்களிலும் பலர் பிரயாணம் செய்து அறிவுப் பெருக்கையடைந்து திரும்பினர். சிற்பவேலையும் நிர்மாண வேலையும் பிரபலமடைந்தன. சங்கீதமும் முன்னிருந்ததைவிட அதிகமாய் அபிவிருத்தியடைந்தது.

எலிஸபெத்தின் காலத்தில் இங்கிலண்டிற்கு இன்னொரு விதத்தில் மகிமை ஏற்பட்டது. ஒரு பாலைவனத்தில் திடீரென்று ஒரு புஷ்பச்செடி தோன்றி, மலர்களைச் சொரிந்து நறுமணத்தை நாலாபக்கங்களிலும் வீசுவதுபோல, அப்பொழுது பலகவிகளும் நூலாசிரியர்களும் தோன்றி தமது நூல்களினால் இன்பம் பயக்கலாயினர். அதற்குமுன் இங்கிலீஷ் பாஷையில் அவ்வளவு உயர்வான நூல்கள் இருந்ததில்லை. அப்பொழுதுதான் இங்கிலீஷ் பாஷை உச்சரிப்பிலும் எழுத்திலும் இப்பொழுதிருக்கும் நிலைமையை எட்டிப் பார்த்தது. எட்டாவது ஹென்றியின் காலத்தில் மூர் என்பவர் யுட்டோபியா என்ற நூல் எழுதினாரென்பதை முன்னரே குறிப்பிட்டோம்; அது லாட்டின் பாஷையில் எழுதப்பட்டது. அதற்குப் பிறகு பிரார்த்தனைப் புஸ்தகங்கள் இங்கிலீஷ் பாஷையில் வெளியாயின. ஜனங்களுக்குக் கல்வியில் அதிகக் கவர்ச்சி ஏற்பட்டது. வசனத்திலும் காவியத்திலும் பலர் பல நூல்களை எழுதினர். இங்கிலீஷ் இலக்கியத்தைக் கற்பவர்கள் அந் நூல்களை இப்போதும் படிக்கலாம். எலிஸபெத் அரசியின் காலத்தில், ஸ்பெயின் யுத்தமும், 'கடல் நாய்'களின் வீரச் செய்கைகளும், அமெரிக்காவின் வியாபாரமும் இங்கிலீஷ்காரருடைய மனதை முற்றிலும் கவர்ந்துகொண்டிருந்த சமயத்தில், எதிர்பாராவிதமாக, கோடைகாலத்துக்

குளிர்ந்த வர்ஷம்போல, பல கவிவாணர்கள் தோன்றி எலிஸபெத் இராணியின் கீர்த்திக்கு சிரோரத்னம் போல என்றைக்கும் அழியாத பிரகாசத்தை உண்டாக்கிவிட்டனர். அக்கவிகளில் எட்மன்ட் ஸ்பென்ஸர் (Edmund Spenser) என்பவர் முக்கியமான ஒருவர். அவர், 'கவிகளின் கவி' என்ற மதிப்பு வாய்ந்தவர். அவர் 'இடையரின் பஞ்சாங்கம்' (Shepherd's Calender) என்ற அருமையான காவியத்தையும், அதை விட மிக அருமையான 'கந்தருவ ராணி' (Faerie Queen) என்ற காவியத்தையும் இயற்றினர். அவைகளின் விசேஷ குணங்களை இங்கு எடுத்துக்கூறுதல் எளிதல்ல. அவைகளில் எலிஸபெத் இராணியைக் குறித்த ஸ்துத்திய பாகங்கள் ஏராளமாக நிறைந்து கிடக்கின்றன. ஸ்பென்ஸரைப் பின்பற்றிப் பலர் காதல் ரஸம் ததும்பும் சிறிய கீதங்களை மதுரமான விருத்தப் பாக்களில் பாடினர். அப்பொழுது இங்கிலண்டில் நாடக காவியங்களை நடிப்பதும் பிரபலமாயிருந்தன. இங்கிலண்டில் கவிச்சக்ரவர்த்தியான ஷேக்ஸ்பியர் (Shakespeare) நாடகத்திற்குப் பின் நாடகமாக அள்ளிச் சொரிந்தார். தேன் குடித்த நரிகள்போல ஜனங்கள் ஆநந்தமாகக் காலம் கழித்தனர். எலிஸபெத்தின் ஆட்சியில் ஆரம்பித்த கலையபிவிருத்தி அவளுக்குப் பின்னும் தொடர்ந்து சென்றது. ஒருபுறம் அன்புள்ள பிரஜைகளாலும், இன்னொரு புறம் கடல் வீரர்களாலும், மறுபுறம் கவிமணிகளாலும் சூழப்பட்ட எலிஸபெத் அரசி உண்மையில் இந்திராணி கொலு வீற்றிருப்பது போலவே இருந்து வந்தாள்.

மேற்கூறிய விரிவான விருத்தாந்தங்களிலிருந்து, இராஜீயத் துறையிலும், மதவிஷயத்திலும், பொருளாதார நிலைமையிலும், வியாபாரப் பெருக்கிலும், கல்வி வளத்திலும் ட்யூடர் வம்ச ஆட்சி, இங்கிலீஷ் சரித்திரத்தில் எவ்வளவு முக்கியமான பகுதி என்பது எளிதில் விளங்கியிருக்கும்.

---

## ட்யூடர் வம்சாவளி.

ஏழாவது ஹென்றி
1485-1509

- ஆர்தர்
- எட்டாவது ஹென்றி 1509-1547
  - ஆறாவது எட்வர்ட் 1547-53
  - மேரி 1553-58
  - எலிஸபெத் 1558-1603
- மார்கரட் (ஸ்காட் அரசனின் மனைவி)
  - (ஐந்தாம் ஜேம்ஸ் (ஸ்காட் அரசன்)
    - ஸ்காட் இராணிமேரி
      - முதல் ஜேம்ஸ் (ஸ்காட்லண்டின் ஆறாவது ஜேம்ஸ்-இங்கிலண்டில் முதலாவது ஜேம்ஸ் 1603 - 1625

# 29-வது அதிகாரம்.

---

## முதலாவது ஜேம்ஸ்.

(1) ஜேம்ஸ் அரசரின் குணம்: அரசருக்கும் பார்லிமெண்ட் சபையினருக்கும் சச்சரவு:-ஸ்டுவேர்ட் வம்சத்து அரசர்கள் இரண்டு நூற்றாண்டுகளாக ஸ்காட்லன்டு தேசத்தைப் பரிபாலித்துவந்திருந்தனர்; எலிஸபெத்திற்குப் பின் அவர்களுக்கு இங்கிலண்டின் அரசாட்சி உரிமையும் கிடைத்தது. அதனால் ஒரு பெருத்த நன்மை ஏற்பட்டது; இங்கிலண்டும் ஸ்காட்லன்டும் சமீப தேசங்களாக இருந்தும், வெகுகாலமாக சிநேக உணர்ச்சியின்றி ஒன்றோடென்று சச்சரவிட்டுக்கொண்டே இருந்தன. ஆனால் 1603-ல் இருதேசங்களும் எவ்விதச் சண்டையு மின்றியே ஒரு குடையின்கீழ் வந்தன. அவ்வாறு அமைதியாக இருதேசங்களுக்குள் ஒற்றுமை ஏற்படுவது மிகமிக அரிது. மேலும் ஜேம்ஸ் அரசர் அந்த ஒற்றுமையைப் பலவாறு உறுதிப்படுத்த முயற்சி செய்தார். இருதேசங்களும் அப்பொழுது ஒரு பொதுவான அரசருக்கே உட்பட்டு விட்டாலும் இரு தேசத்தினரும் முற்றிலும் வேறான சட்டங்களையும், பழக்க வழக்கங்களையும், ஆசார ஒழுக்கங்களையும், ஸ்தாபனங்களையும் வைத்து அநுஷ்டித்து வந்தனர். ஆதலால் இருதேசத்தினருக்குள் உண்மையான ஒற்றுமை ஏற்பட்டாலன்றி, அவர்களுக்குள் சகோதரத்தன்மை உண்டாவதும், நீடித்து நிற்பதும் அரிது என்பதை ஜேம்ஸ் உணர்ந்துகொண்டார். ஆதலால் அவர் 'க்ரேட் பிரிட்டனின் அரசர்' என்ற பட்டப்பெயர் தரித்து வெவ்வேறு தன்மையாயிருந்த இருநாடுகளையும் ஒரே முறையுள்ள அரசாங்கமாகச் செய்யமுயன்றார். ஸ்காட் மக்களுடைய குணங்கள் அவரிடம் நிறைந்திருந்தனவானாலும், அவர் பழைய இங்கிலீஷ் அரசர்களைப் போலவே உறுதியாக நிர்வாகம் நடத்தவேண்டுமென்று தீர்மானித்திருந்தார். அவர் ஸ்காட்லன்டில் அரசுபுரிந்த சமயத்தில், ஒருபுறம் பிரபுக்களாலும் மறுபுறம் அமிதமான மதக் கட்சியினராலும் துன்புறுத்-

தப்பெற்றுவந்தார்; ஆனால் அதே சமயத்தில் எலிஸபெத் உறுதியாக நிர்வாகம் நடத்தியதை அவர் கவனித்து வந்திருந்தார். ஆதலால் இங்கிலீஷ் முறைகளையே அவர் பின்பற்றி ஸ்காட்லண்டு தேசத்தின் நிர்வாகத்தையும் அதே வழியில் நடத்திச் செல்லமுயன்றார். அது ஸ்காட் மக்களுக்குச் சம்மதியாக இல்லை. தங்களது அரசர் இங்கிலீஷ்காரருடைய முறைகளை அதிகமாக கௌரவித்தது அவர்களுக்கு அதிருப்தியை உண்டாக்கியது. அவ்விதமே இங்கிலீஷ்காரரும் அவருடைய நோக்கத்தைக் கண்டு சந்தேகம் கொண்டனர். ஆதலால் ஒரு நூற்றாண்டுக்குப் பிறகுதான் இங்கிலண்டும் ஸ்காட்லண்டும் உண்மையான ஒற்றுமையை யடைந்தன. ஜேம்ஸின் கருத்து நிரம்பவும் சரியானதேயானாலும் அக்காலத்து ஜனங்கள் அவரைப்போல முன்னோக்க முடையவர்களல்லாதலால், அவருக்கு அபகீர்த்தியே ஏற்பட்டது. ஜேம்ஸ் அரசர் இருதேசங்களும் ஒரே மாதிரியான சட்டம், ஒரே பார்லிமெண்ட், ஒரே மதஸ்தாபனம் முதலியவைகளைப் பெறவேண்டுமென்று விரும்பியதற்கு மாறாக, இரு தேசத்தினரும் தனித்தனியாகவே இருக்க முயன்றனர். இங்கிலீஷ்காரரும் ஸ்காட்மக்களும், ஒருவர் மற்றவருடைய தேசத்தில் அன்னிய தேசத்தினரைப்போல நடத்தப்படலாகாது என்று ஏற்பாடுசெய்ய அவர் முயன்றதுகூடப் பலிதமடையவில்லை. ஆதலால் ஒரே குடையின்கீழ் இருந்ததாலும் ஒரே மதத்தைப் பின்பற்றியதாலும் இரு தேசங்களுக்குள்ளும் முன்பு இருந்த கடுமையான பகைமை ஒருவாறு குறைந்ததானாலும், உண்மையான ஒற்றுமை ஏற்படுவதற்கு மேலும் ஒரு நூற்றாண்டு கழியவேண்டி யிருந்தது.

ஸ்டுவர்ட் வம்சத்து அரசர்களைப்பற்றி முக்கியமான ஒரு விஷயத்தை இங்கு குறிப்பிடலாம். அதாவது, பொதுவாக ட்யூடர் அரசர்களும் அரசிகளும் எவ்வாறு ஜனங்களுடைய அன்பையும் ஆதரவையும் பெற்றுப் புகழடைந்தனரோ, அதற்கு நேர்விரோதமாக ஸ்டுவர்ட் அரசர்கள் ஜனங்களுடைய வெறுப்புக்கும், கோபத்திற்கும் பாத்திரர்களாகி, அபகீர்த்திக் காளாயினர். அந்த துரதிருஷ்டம் அவர்களுக்கு நேரக் காரணமாயிருந்த விஷயங்கள் பின்னால் விளங்கும். அவ்வித காரணங்களில் முக்கியமாக ஒன்றை இங்கு குறிப்பிடலாம். ஸ்டுவர்ட் அரசர்கள் ஸ்காட்லன்டு தேசத்தினரா

யிருந்ததால், இங்கிலீஷ்காரருக்கு ஷை அரசர்களிடத்தில் விவரிக்க இயலாத ஒருவிதப் பற்றுதலின்மை இருந்துகொண்டே வந்தது. அவர்கள் ஒருவருடைய சுகதுக்கங்களில் மற்றவர் கலந்துகொள்ள முடியவில்லை; ட்யூடர் அரசர்களோ இங்கிலீஷ்காரராயிருந்தாலும், ஜனங்களுடைய குணதோஷங்களையே அவர்களும் பெற்றிருந்ததாலும், ஜனங்களுக்கும் அரசருக்கும் நடுவில் பெரிய மடுவுபோன்ற வித்தியாசம் ஒன்றுமில்லை; இருவருக்குள்ளும் இயற்கையான பாங்தவ்வியம் ஏற்பட்டிருந்தது. ஸ்டுவர்ட் அரசர்களோ ஈரொட்டாய் இருந்து தவிக்கலாயினர். ஏனெனில் அவர்கள் இங்கிலீஷ் முறைகளைக் அநுஷ்டித்ததற்காக ஸ்காட் ஜனங்களின் வெறுப்பைப் பெற்றனர்; ஸ்காட் வம்சத்தினராய்ப் பிறந்த தோஷத்திற்காக இங்கிலீஷ்காரரின் மனப்பூர்த்தியான நம்பிக்கையை யடைய இயலவில்லை. ஆதலால் ட்யூடர்களின் காலத்தில் இருந்த நிலைமைக்கு மாறாக, ஸ்டுவர்ட் அரசர்களின் காலத்தில் குழப்பமும் சச்சரவுகளுமே நிறைந்திருந்தன. ஜனங்களுக்கும் அரசர்களுக்கும் சிறிதும் சமரஸத்தன்மையில்லாமல்போக, வேற்றுமையும் சச்சரவுகளும் ஏற்பட்டுக்கொண்டே வந்தன. மேலும் இங்கிலீஷ்காரரின் இயற்கையே அப்பொழுது மாறிக்கொண்டு வந்தது. ட்யூடர் வம்சத்தாருடைய சுயேச்சாதிகாரத்திற்கும் கொடுமைக்கும் பணிந்துவந்த இங்கிலீஷ்காரர், சுதந்திர உணர்ச்சியைப்பெற்று, அரசரை எதிர்க்கும் தைரியத்தை அடைந்துவிட்டனர். பார்லிமெண்ட் சபையினர், ட்யூடர் அரசர்களுக்கு உட்பட்டு நடந்ததற்கு மாறாக, ஸ்டுவர்ட் ஆட்சியில் அரசர்களோடு இடைவிடாது சச்சரவிட்டு வந்தனர். ஸ்டுவர்ட் வம்சத்தாரது ஆட்சியில் ஷை சச்சரவு ஒன்றுதான் முக்கிய சம்பவமாக இருந்தது. கடைசியில் அந்த வழக்கில் அரசர்கள் தோற்றுப்போக, பார்லிமெண்ட் சபையின் ஆதிபத்தியமே தலையெடுத்து நிலைத்துவிட்டது. மேலும் ட்யூடர் அரசர்கள் காலத்தில் தேசத்திற்குப் பல விதங்களில் அபாயம் நேர்ந்துவிடும்போலிருந்தமையால், ஜனங்கள் கிளர்ச்சி செய்யாது, அரசனொருவனே தம்மைக் காப்பாற்றவல்லவன் என்று எண்ணி அவனுடைய ஆதிக்கத்தை மீறாமல் நடந்துவந்தனர். உதாரணமாக ஏழாவது ஹென்றி சிம்மாதனமேறியபொழுது ரோஜாப்பூக்களின் யுத்தம் நடந்துகொண் டிருந்தது; அதன்பிறகு

மதப்புரட்சி ஏற்பட்டது. பிறகு மதவேற்றுமை காரணமாக, ப்ராடெஸ்டன்ட், காதலிக் மதத்தினர்கள் ஒருவரையொருவர் வதைத்து வந்தனர்; எலிஸபெத்தின் காலத்தில் ஸ்பெயின் தேசத்துடன் போர் நேர்ந்தது; இவ்வாறு ட்யூடர்களின் காலம் முழுதும் இங்கிலீஷ்காரருக்கு ஏதாகிலுமொரு பொல்லாங்கோ குழப்பமோ நேர்ந்து கொண்டே இருந்ததாதலால், ஜனங்கள் தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்கு அரசர் அல்லது அரசியினுடைய உதவியையே எதிர்பார்த்து வின்றனர். ஸ்டூவர்ட் ஆட்சியில் அவ்வித அபாயம் ஒன்றும் நேரவில்லையாதலால், ஜனங்கள அரசரது கொடுங்கோன்மையை அடக்குவதிலேயே கவனம் செலுத்தி முடிவில் வெற்றியடைந்தனர். மேலும் ட்யூடர் குலத்தினரைப்போன்ற சமயோசித புத்தியும், தந்திரகுணமும், நயமாக நடந்துகொள்ளும் திறமையும் ஸ்டூவர்ட் அரசர்களுக்கு இல்லையாதலால், பார்லிமெண்ட் சபையின் அதிருப்தியை அவர்கள் அதிக சீக்கிரத்தில் சம்பாதித்துக் கொண்டனர். இவ்வாறு ஒரு புறத்தில் தேச நிலைமையின் மாறுதல்கள் காரணமாகவும், மறுபுறத்தில் ஸ்டூவர்ட் மன்னரின் குணவிசேஷத்தாலும், அப்பொழுது பொது ஜனங்களுக்கும் அரசருக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு அது முற்றிப் பெரும்போரில்போய் முடிந்தது. அந்தச் சச்சரவின் போக்கு பின்னால் விளங்கும். ஆனால் ட்யூடர் மன்னர்களே 17-வது நூற்றாண்டில் ஆண்டுவந்திருந்தாலும் அவர்களும் ஜனங்களிடம் அபக்கியாதி யடைந்து துன்புற்று இருப்பரென்றே கருதவேண்டும். ஏனெனில், குடிமக்களுக்கு ஒரு புதிய சுதந்திர உணர்ச்சியும் தைரியமும் தோன்றியிருந்தனவாதலால், அந்தப் பெரு வெள்ளத்தின்முன் எவ்வளவு திறமைசாலியான அரசராயிருந்தாலும் எதிர்த்து நிற்கமாட்டாமல் அடித்துக்கொண்டு போகப்பட்டிருப்பது திண்ணம். ஆனால் அதில் ஒரு விஷயம் மாத்திரம் கவனிக்கத்தக்கது; அதாவது, ட்யூடர் அரசர்களாயிருந்தால் கூடியவரையில் அந்த நிலைமையில் சமாளித்துக்கொண் டிருப்பார்கள்; ஸ்டூவர்ட் மன்னர்களுடைய பலஹீனத்தாலும் மதியின்மையாலும் அந்த சச்சரவு சீக்கிரமாகவும் வேகமாகவும் நடைபெற்று, எதிர்பாராத அளவு சேதத்தை விளைவித்துவிட்டது.

ஸ்டூவர்ட் வம்சத்தின் முதல் அரசரான ஜேம்ஸ் மேலே கூறிய நிலைமைக்கு ஏற்றவாறு அரசியல் நிர்வாகத்திறமை பெற்றவரன்று. அவர் அதிகமாய்ப் படித்தவர்; தயையும் அன்பும் நிரம்பியவர்; சமாதானத்தையும் அன்பையும் விரும்பியவர்; ஆனால் அவர் இங்கிலண்டிற்கு வந்தபொழுதே வயது முதிர்ந்தவராயிருந்தமையால் அவரால் தமது குணங்களை மாற்றி யமைத்துக்கொள்ள முடியவில்லை. அவர் சில சமயங்களில் பிடிவாத குணத்தைக் காட்டினார்; இராஜ கௌரவத்தை வகிக்கும் திறமையும் கம்பீரத் தன்மையும் அவரிடம் இல்லை; உறுதியும் ஊக்கமும் சுறுசுறுப்பும் அவரிடம் காணப்படவில்லை; ஆகவே, அவர் எப்பொழுதும் தனியாக இருந்து படிப்பிலும் வேட்டையாடுவதிலுமே காலம் கழித்தாரே யன்றி, இராஜ்ஜிய நிர்வாகத்தைத் தாமே கவனிக்க முன்வரவில்லை; அவருடைய நண்பர்களும் மந்திரிகளும் தமதிச்சைப்படி அதிகாரம் செலுத்தலாயினர். ஆனால் ஜேம்ஸ் அரசர் அடிக்கடி அரசியல் தத்துவங்களைப் பற்றி விஸ்தாரமாகப் பிரசங்கம் புரிவார். முக்கியமாக அவர் அரசர்கள் தெய்வத்தினிடமிருந்து நேராக சக்தியைப் பெறுகிறார்கள் என்றும், சாமானிய ஜனங்கள், தெய்வாக்ஞையைப் பெற்ற அரசரை எவ்விதத்திலும் மீறக்கூடாது என்றும் ஒரு கொள்கையை வற்புறுத்தி பிரபலப்படுத்தி கூறிவந்தார். அந்தக் கொள்கையைக் குடிமக்கள் அங்கீகரிக்கவில்லை. மேலும் ஜேம்ஸ் தமதிச்சைப்படி நடந்துகொள்ளும் தைரியத்தையும் பெறவில்லை. ட்யூடர்வம்சத்தார்களைப் போல அவர் இங்கிலீஷ்காரருடைய நன்மை தீமைகளைத் தமது நன்மை தீமைகளாகவும் கருதவில்லை. மேற்கூறிய குணங்களால் அவர் செய்த காரியங்கள் முதற்கோணல் முற்றிலும் கோணல் என்பதுபோல யாவும் விபரீதமாகவே முடிந்தன. ஐரோப்பாவில் அவருக்கு "கிரிஸ்தவ உலகத்திலுள்ள எல்லோரிலும் மகா மேதாவியான முட்டாள்" (Wisest Fool in Christendom) என்று அவரைக் குறிப்பது வழக்கம்.

(2) **மத ஏற்பாடு; சீர்கேட்ட ஆட்சி:**—எலிஸபெத் இராணியின் ஆட்சியில் இங்கிலண்டில் மூன்றுவகையான மதக்கட்சிகள் இருந்தன; அவை யாவன: காதலிக் மதத்தினர்; ப்யூரிடன் என்ற அமிதமான சீர்திருத்தக்காரர்: எலிஸபெத் இராணியின் ஏற்பாட்டிற்

குட்பட்டு இரு கோடிகளையும் விட்டு மத்திபஸ்தமான முறையைப் பின்பற்றிபவர்களான ஆங்ளிகன்ஸ் (Anglicans) என்ற கட்சியினர். அவர்களுள் கடைசியாகக் குறித்த கட்சியினரே அதிகமான செல்வாக்கும் மதிப்பும் கௌரவமும் பெற்றிருந்தனர். அம்மூன்று கட்சியினரும் பகிரங்கமாக யுத்தம் செய்துகொள்ளாவிட்டாலும், உண்மையில் அவர்கள் ஒருவரையொருவர் வெறுத்து வந்ததுடன், தம் தம் முறையையே அரசாங்கத்தார் அங்கீகரிக்க வேண்டுமென்று வற்புறுத்தி வந்தனர். ஜேம்ஸ் அரசர் முடி சூடியபொழுது அம்மூன்று கட்சியினரும் அவரிடமிருந்து பெரிய நன்மையை எதிர்பார்த்தனர். எவ்வாறெனில், ஆங்ளிகன் கட்சியினர், அவர் எலிஸபெத்தின் ஏற்பாட்டை மாற்றமாட்டாரென்று எண்ணினர்; அவர் ஸ்காட்லன்ட் தேசத்திலிருந்து வந்தமையால், அங்கு பரவியிருந்த ப்ரெஸ்பிடீரியன் முறைக்கு ஒத்திருந்த தங்கள் முறையையே அரசர் ஆதரிப்பாரென்று ப்யூரிடன் இனத்தவர் நம்பி யிருந்தனர். அவர் மேரி இராணியின் புத்திரராதலாலும், மேரி இராணியை எலிஸபெத் அக்கிரமமாகக் கொன்று விட்டமையாலும், அவர் காதலிக் மதத்தையே தழுவி நிற்பார் என்று காதலிக் மதத்தினர் கனவு கண்டு கொண்டிருந்தனர்.

ஆனல், பொதுவாக எலிஸபெத்தின் அரசியல் முறையையே பின்பற்ற வேண்டுமென்று ஜேம்ஸ் நிச்சயித்திருந்தாரானலும், எலிஸபெத் இராணியின் நோக்கத்தை உள்ளபடி அறிந்துகொள்வதே அவருக்குப் பிரயாசையாயிருந்தது; அதை அறிந்துகொண்டாலும், காரியத்தில் நிறைவேற்றி வைக்கும் வல்லமை அவரிடம் அதிகமாக இல்லை. எலிஸபெத்தின் அந்தரங்க மந்திரியான ஸேஸில் என்பவரையே ஜேம்ஸும் தமக்கு மந்திரியாக வைத்துக்கொண்டார். இரண்டொரு தடவைகளில் ஸெஸிலின் பகைவர்கள் அவரைக் கொல்லுவதற்கும், அரசரைத் தமது வசப்படுத்திக் கொள்ளவும் முயற்சித்தனர். ஆனல், அவர்களது சதியாலோசனை கண்டுபிடிக்கப் பட்டதாகையால், அவர்கள் தண்டனை யடைந்தனர். அவர்களுடன் எலிஸபெத்தின் பிரிய நண்பரான ஸர் வால்ட்டர் ராலீயும் சேர்ந்திருந்தார். ராலீக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டதானலும், அவர் கொல்லப்படாமல் அநேக வருஷ காலம் சிறைவாசம் செய்தார்.

முன்னர் கூறியதுபோல, எலிஸ2பெத்தின் முறையைப் பின்பற்ற நிச்சயித்த ஜேம்ஸ் ப்யூரிடன், கா/2தலிக் ஆகிய இருவரது மனக்கசப்பையும் சம்பாதித்துக்கொண்டார். அவர் ஸ்காட்லன்டிலிருந்து லண்டன் நகரை நோக்கி வந்தபொழுது, ப்யூரிடன் மதத்தினர் பலர் அவரிடம் ஒரு விண்ணப்பத்தை சமர்ப்பித்து, தங்களுக்கு அவசியமான மதச் சீர்திருத்தங்களைச் செய்யும்படி வேண்டினர். 1604-ல் ஜேம்ஸ் அரசர் இருமதக் கட்சியினரையும் சேர்த்து ஒரு மகாநாடு கூட்டினர். அதற்கு ஹா/2ம்ப்டன் கோர்ட் மகாநாடு (Hampton Court Conference) என்று பெயர். ஜேம்ஸ் அரசர் மத சம்பந்தமான தத்துவ நூல்களை அதிகமாய்ப் படித்திருந்தமையால், அவர் நிரம்பவும் படாடோபமாகப் பிரசங்கங்கள் புரிந்தார். ஆனால் ஸ்காட்லண்டில் அனுஷ்டிக்கப்பட்டு வந்த தீவிர மதத்தையே இங்கிலீஷ் ப்யூரிடன்களும் ஆதரிப்பதாகத் தெரிந்தவுடனே அவர் ப்யூரிடன் மதத்தினருக்கு விரோதமாகத் திரும்பினர். "கடவுளுக்கும் சைத்தானுக்கும் எவ்வளவு தூரமோ, அவ்வளவு தூரமே அரசருக்கும் ப்ரெஸ்பிடீரியன் இனத்தாருக்கும்'' இருப்பதாக அவர் கூறிவிட்டார். ஆதலால் அந்த மகாநாடு கூடியதால் நன்மையொன்றும் ஏற்படவில்லை. ப்யூரிடன் இனத்தார், தாம் எதிர்பார்த்த அளவுபலன் பெருதவராய் ஏமாறிப்போயினர். ஜேம்ஸ் அரசர் 1611-ல் பைபிள் புஸ்தகத்திற்கு ஒரு புதிய மொழிபெயர்ப்பை வெளியிடச் செய்தார். ஆனல் ப்யூரிடன் இனத்தாருக்கு அதில் திருப்தி ஏற்படவில்லை. அவர்களுடைய நிலைமை முள்மேல் இருந்ததுபோலாயிற்று.

அது போலவே கா/2தலிக் மதத்தினரும் ஜேம்ஸை வெறுத்து வந்தனர். எலிஸ2பெத்தின் காலத்தில் கா/2தலிக்காரர் பெரும் துன்பம் அநுபவித்து வந்தனரல்லவா? ஜேம்ஸ் அரசர் தயாளகுணமுடையவராயும் மத வேற்றுமை காரணமாக, ஜனங்களை வதைக்காதவராயும் இருந்தாலும், அவர் கா/2தலிக் மதத்தினருக்குத் துன்பகரமாயிருந்துவந்த சட்டங்களை மாற்றவில்லை. ஆதலால் பல கா/2தலிக் மதத்தினர் தமக்கு என்றைக்கும் விமோசனகாலம் நேராதெனக் கண்டு, அரசருக்கு விரோதமாக சதியாலோசனைகள் புரியலாயினர். 1605-ம் வருஷம் நவம்பர்மீ 5-ந் தேதி பார்லிமெண்ட் சபை கூடுவதாக இருந்தது. அந்த சமயம் அரசரையும் பார்லிமெண்ட் சபை

யாவரையும் வெடி மருந்தை வைத்துக் கொளுத்தி அடியோடு படு கொலை செய்துவிட யோசனை செய்தனர். காதலிக் மதத்தினர் சிலர் கை பாக்ஸ் (Guy Fawkes) என்பவரைத் தலைமையாகக் கொண்டு, பார்லிமென்ட் சபை கூடும் மாடத்தின் கீழ்ப்பாகத்திலிருந்த அறைகளை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு அவைகளில் வெடி மருந்தை நிரப்பி வைத்திருந்தனர். ஆனால் அரசருடைய அதிருஷ்ட காலத்தினால், அந்த பயங்கரமான சதியாலோசனை வெளியாகிவிட்டது. கை பாக்ஸ் என்பவரும் சிறைப்பட்டு கொடிய தண்டனைக்காளானார். அவருக்கு உடந்தையாயிருந்தவர்களும் அம் மாதிரியே தண்டிக்கப்பட்டனர். அந்தச் சம்பவத்திற்கு கன் பவுடர் பிளாட் (Gun powder Plot) அல்லது வெடிமருந்துச் சதியாலோசனை என்று பெயர். அதனால் காதலிக் மதத்தினருக்கு எள்ளளவும் நன்மையுண்டாகாமற் போனதன்றி, பொது ஜனங்களும் அரசரும் அவர்களை அதிகமாய் வெறுக்கலாயினர்.

ஜேம்ஸ் அரசருக்கு நாலா பக்கங்களிலிருந்தும் பொல்லாங்குகளே நேர்ந்துவந்தன. அவருடைய மத ஏற்பாட்டினால் ஜனங்களில் பெரும்பான்மையோருக்கு அதிருப்தியே ஏற்பட்டு வந்ததென்பதை முன்பு கூறினோம். அதனால் துரைத்தன நிர்வாகமும் கடினமாயிற்று. முக்கியமாக ஜனப்பிரதிநிதிகளடங்கிய பார்லிமென்ட் சபையினர் அரசருடைய நிர்வாக முறையைக் கண்டித்து இன்னும் அதிக ஊக்கத்துடன் சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமென்று வற்புறுத்தினர். ஜேம்ஸ் அரசருக்கு அடிக்கடி பணம் தேவையாயிருந்ததாகையால், அவர் பார்லிமென்ட் சபையின் தயவை நாடவேண்டியிருந்தது. பார்லிமென்ட் சபையினருக்கு சில சமயங்களில் ஆசை வார்த்தைகள் கூறியும், சில சமயங்களில் அவர்களுக்குப் பணிந்து நடந்துமே அவர் தமது தேவைகளைப் பூர்த்திசெய்துகொள்ள வேண்டியதாயிற்று. பார்லிமென்டார் சமயம் வாய்த்த பொழுதெல்லாம் அரசருடைய செய்கைகளை வலுவாகக் கண்டித்தனர். ப்யூரிடன்களை அவர் வருத்தக்கூடாதென்றும், அன்னிய நாடுகளுடன் சம்பந்தம் வைத்துக்கொள்வதிலும் அவர் ப்ராடெஸ்டன்ட் மதத்திற்குத் தீங்கு நேரிடாத வண்ணம் நடந்துகொள்ள வேண்டுமென்றும் பார்லிமென்டார் கூறிவந்தனர். ஜேம்ஸ் அரசரோ அடிக்கடி தமது பெருமையைய

எடுத்துக் கூறுவதிலேயே ஆநந்தம் கொண்டிருந்தார்; தாம் தெய்வத்தின் ஆக்ஞை பெற்றவரென்றும், சாமானிய ஜனங்கள் தமக்கு எவ்விதத்திலும் கீழ்ப்பட்டவர்களென்றும் அவர் பிரசங்கம் செய்துவந்ததைக் கேட்க பார்லிமென்டார் சகிக்கவே இல்லை.

ஜேம்ஸ் முடிசூடிய பின்னர் 1604,ல் பார்லிமென்ட் சபை கூடி 1611- வரையில் கலையாமல் இருந்தது. ஆரம்பத்திலேயே அரசருக்கும் பார்லிமென்டாருக்கும் வாக்குவாதம் நடந்தது. பார்லிமென்டார் அரசருக்குத் தேவையான பணத்தை யளிக்காமல் அவருக்கு ஹிதோபதேசம் செய்தனர். அதன் பிறகு ஜேம்ஸ் தமக்குள்ள விசேஷ அதிகாரத்தைப் பிரயோகம் செய்து புதிய வரிகளை விதித்து வசூல் செய்யலானார். 1610-ல் பார்லிமென்டார் அது பற்றி அவரைக் கண்டித்தனர்; அரசர் தமக்கு வேண்டிய பணத் தொகையைக் கொடுத்தால், அவ்வரிகளைத் தள்ளுபடி செய்துவிடுவதாக வாக்குறுதி யளித்தார். கடைசியில், சமாஸத்தன்மை ஏற்படாது போகவே, 1611-ல் ஜேம்ஸ் பார்லிமென்ட் சபையைக் கலைத்துவிட்டார். அதன் பிறகு மூன்று வருஷகாலம் அவர் பார்லிமென்டின் தயவின்றியே ஆட்சி புரிந்து வந்தார். அவருடைய பொக்கிஷம் அடியோடு காலியாய் விட்டது. 1614-ல் அவர் மறுபடியும் பார்லிமென்ட் சபையைக் கூட்டினார். முக்கியமான சில தலைவர்களுடன் அவர் முன்னாகவே கலந்து ஆலோசித்து அத் தலைவர்களது சொற்படி தாம் நடப்பதாகவும், அதைக் கருதி அவர்கள் பார்லிமென்ட் சபையினரை அரசருக்கு வேண்டிய பணத் தொகையைக் கொடுக்கும்படி செய்ய வேண்டுமெனவும் ஏற்பாடாயிருந்தது. ஆனால் 1614-ல் கூடிய பார்லிமென்ட் சபையார் தமது தலைவர்கள் இரகசியத்தில் அரசருடன் செய்துகொண்டிருந்த ஏற்பாட்டை வெறுத்து, அதை ஒப்புக்கொள்ளாமல் முன்போல உக்கிரமாகவே நடந்துகொண்டனர். அவர்களது ஆக்குரோஷத்தைக் கண்டு நடுங்கிய ஜேம்ஸ் உடனே பார்லிமென்ட் சபையைக் கலைத்துவிட்டார். ஒரு சட்டம் கூட இயற்றாமல், ஒன்றுகூடிக் கலைந்த அந்த சபை சுத்த சூன்னியமான அல்லது ஊசிப்போன பார்லிமென்ட் (Addled Parliament) என்று குறிக்கப்படுகிறது. அதன் பிறகு ஏழு வருஷகாலம் ஜேம்ஸ் அரசர் பார்லிமென்ட் சபையைக்

கூட்டாமலேயே அரசு புரிந்தார். அப்பொழுது அவருடைய ஆட்சி மேலும் அதிகமாய் சீர்கேடடைந்தது. அவரிடம் திறமையாக வேலைசெய்து வந்த ஸெஸில் என்ற மந்திரி 1612-ல் இறந்ததனல் ஜேம்ஸுக்கு முக்கிய உதவியாயிருந்தவரும் போய்விட்டார். ஆனல் ஜேம்ஸ் தமது அதிகாரத்தை வேறு ஒருவரிடம் விட்டுவைப்பதில் விருப்பமற்றவராய் இருந்தார்; தாமாக நிர்வாகம் செய்யும் திறமையும் அவருக்கு இல்லை. ஆதலால் அவர் உண்மையான தேசாபிமானம் இல்லாமல் சுயநலப் பிரியர்களாயிருந்த சகாக்களையே தமக்கு உதவியாகக்கொண்டு அரசியல் நடத்தலானர். அவர்கள் அரசர் கூறியதற்கெல்லாம் ஆம், ஆம் என்று கூறி அங்கீகரித்து தேசத்தின் நன்மைக்கு ஒவ்வாத விஷயங்களையும் கூடச்செய்து முடித்து, தமக்குத் தேவையான பணத்தையும், பொருளையும் பெற்றுவந்தனர். அதனல் அரசருக்கும் குடிகளுக்கும் இருந்துவந்த பகைமை அதிகமாயிற்று. ஜேம்ஸ் அரசருடைய சகாக்களில் ராபர்ட் கேர் (Robert Ker) என்பவர் முக்கியமானவர். அவர் ஸ்காட்லண்டு தேசத்தைச் சேர்ந்தவர்; ஜேம்ஸ் அரசருக்கு அவரிடத்தில் அளவற்ற அபிமானமும் பிரேமையும் எற்பட்டுவிட்டன. ஆனல் கெர் என்பவரோ படிப்புவாசனையே இல்லாத மூடர். அவர் புதியபுதிய பதவியைப் பெற்று இரண்டு மூன்று வருஷகாலம் வரையில் பூர்த்தியான அதிகாரம் செலுத்தி வந்தார். கடைசியில் ஜேம்ஸுக்கே அவரிடம் வெறுப்பு உண்டாகிவிட்டது. செர் என்பவர் ஒரு கொலைக் குற்றத்தில் சம்பந்தப்பட்டு, தண்டனை யடைந்தார். ஜேம்ஸுக்கு அதனல் மிகுந்த அவமானம் விளைந்தது. அவர் தாமாக எவ்விதமான குற்றமும் செய்யாவிட்டாலும், அவருடைய சகாக்களின் கெட்ட நடத்தைகளுக்கு ஜனங்கள் அவரையே உத்தரவாதியாக மதித்தனர். கெர் என்பவரின் வீழ்ச்சிக்குப்பின் ஜார்ஜ் வில்லியர்ஸ் (George Villiers) என்பவர் ஜேம்ஸின் அந்தரங்க நண்பரானர். ஜேம்ஸ் அவரை (Duke of Buckingham) பக்கிங்ஹாம் பிரபு வாக்கினர். அவர் டாம்பீககுணமும் தற்பெருமையும் தந்திரமும் நிறைந்தவராதலால் சீக்கிரத்தில் ஜனங்களுக்கு அவரிடம் அதிருப்தி தோன்றிவிட்டது. ஆனல் அரசரோ அவரது கையிலகப்பட்ட கருவியாய் நடந்துவந்தார். பக்கிங்ஹாம் பிரபுவின் தயவை அடைந்தவர்களுக்கே உயர்ந்தபதவிகளும்

உத்தியோகங்களும் கிடைத்தன. ஆனால் பொதுஜனங்களுக்கு அரசர் அம்மாதிரி பராதீனமாயிருப்பது சிறிதும் சம்மதியாகவில்லை. ஜேம்ஸ் உறுதியின்றி பலஹீனமாக நடந்துவந்தது ஜனங்கள் அவரிடம் வைத்திருந்த மதிப்பைக் குறைத்துவிட்டது. இவ்வாறு, ஸ்டுவேர்ட் வம்சத்தின் முதல் அரசரான ஜேம்ஸினிடமே குடிமக்களுக்கு அதிருப்தி ஏற்பட்டு, அவருடைய சந்ததியார்களது காலத்தில் அது முற்றிவிட்டது. முன்பு கூறியதுபோலவே, ஸ்டுவேர்ட் வம்சதினரின் ஆட்சி முதற்கோணல் முற்றிலும் கோணலாக முடிந்தது.

(3) அன்னிய நாட்டு சம்பந்தம்: ஜேம்ஸின் அந்திய காலம்:— எலிஸபெத்தின் ஆட்சியில் இங்கிலண்டு தேசத்திற்கும் ஸ்பெயின் முதலிய வேறு தேசங்களுக்கும் இருந்த சம்பந்தத்தைப் பற்றியும், அப்பொழுது நடந்த யுத்தத்தைப்பற்றியும் விரிவாகக் கூறினோம். உள்நாட்டு விஷயங்களைப்போலவே வெளி நாட்டு வியவகாரங்களிலும் ஜேம்ஸ் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாயிற்று. ஜேம்ஸின் அரசியல் கொள்கைகள் எப்பொழுதும் சரியாகவே இருந்தனவானாலும், அவர் தமது கொள்கைகளைப் பின்பற்றி வியவகாரங்களை நடத்திவைப்பதற்குப் போதிய திறனற்றவராய், எவ்விஷயத்திலும் தோல்வியுற்று, அவமான மடைந்துவந்தார். ஜேம்ஸுக்கு சண்டையிடுவதில் விருப்பமில்லை; அன்னிய தேசங்களுடன் சமாதானமாகவே இருக்கவேண்டுமென்பது அவருடைய நோக்கம். மேலும் அந்தந்த தேசத்தார் அவரவருடைய மனப்போக்கின்படி மத ஏற்பாட்டைச் செய்துகொள்ள வேண்டுமென்றும் அவர் கூறிவந்தார். ஆதலால் இங்கிலீஷ் ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் ஸ்பெயின் தேசத்தின் காதலிக் மதத்தினரை எதிர்த்துப் போர்புரிவது புண்ணிய காரியமாகக் கருதப்பட்டதுபோல, ஜேம்ஸ் எண்ணவில்லை. ஆனால் ஜேம்ஸின் கொள்கைகள் நமக்கு சரியெனத்தோன்றினாலும், அக்காலத்தவர்களுக்கு அவை அசாத்தியமானவையாகத் தோன்றின. 1604-ல் ஜேம்ஸ் ஸ்பெயின் தேசத்துடன் சமாதானம்செய்துகொண்டார். மேலும் ஸ்பெயின் தேசத்து அரசகுமாரி ஒருத்தியைத் தமது புத்திரரான ச்சார்லஸ் (Charles) என்பவருக்கு மணம்செய்து வைக்கவும் சம்மதித்தார். அந்த சமயத்தில் ஒரு விசேஷ சம்பவம் நிகழ்ந்தது.

எலிஸபெத் இராணியின் முக்கிய நண்பரும் இங்கிலீஷ்காரரின் பிரியத்தை அடைந்த பிரமுகருமான ஸர் வால்ட்டர் ராலீ என்பவர் ஜேம்ஸ்அரசரால் சிறையிலிடப்பட்ட விருத்தாந்தத்தை முன்பு கூறினோம். ராலீ தமது பழைய மேம்பாட்டையும் அப்பொழுது அடைந்திருந்த இழிவையும் எண்ணி சிறையில் நெடுங்காலம் வருந்தியிருந்தார். அவர் ஏற்கெனவே அமெரிக்காக் கண்டத்தின் சிலபாகங்களுக்குப் பிரயாணம் செய்திருந்தார்; அங்கு வெள்ளியும் தங்கமும் நிறைந்த ஏராளமான சுரங்கங்கள் இருப்பதாக அவர் நம்பி, ஜேம்ஸ் அரசர் தம்மைச் சிறையிலிருந்து விடுவித்தால், தாம் அமெரிக்காவுக்குச் சென்று ஏராளமான திரவியம் கொணர்ந்து, அவருக்குக் கொடுத்து அவரைக் குபேரனாக்கி விடுவதாக உறுதி கூறினார். ஜேம்ஸ் அரசரும் அந்த வலையில் வீழ்ந்து, ராலீயை 1617-ல் வெளியில் விட்டு அமெரிக்காக் கண்டத்திற்குப் பிரயாணம்செய்ய அநுமதியும் அளித்தார். ஆனால், அவர் ஸ்பெயின் தேச வியாபாரிகளுடன் சண்டையிடக்கூடாதென்றும், அமைதியாகச் சென்று திரும்பவேண்டுமென்றும் ஜேம்ஸ் அவரிடம் உறுதிமொழி பெற்றுக் கொண்டார். ராலீ அதற்குச் சம்மதித்தாரானாலும், அந்த வாக்குறுதியின்படி நடப்பது அசாத்தியமாயிற்று. ஏனெனில், அவர் பணத்தைச் தேடிச்சென்ற பிரதேசம் ஸ்பெயின் தேசத்தாருடைய வசத்தில் இருந்தமையாலும், ராலீயே அவர்கள் வழிப்பறிசெய்பவரென்று எண்ணியிருந்தமையாலும் இருவருக்கும் போர் மூண்டுவிட்டது. அமெரிக்காவை அடைந்து ராலீ தமது கப்பல்களை ஒரு நதியின் வழியாக உள்நாட்டுக்குள் விடுத்துச் சென்றபோது ஸ்பெயின் தேசத்தார் அவரைத் தடுக்க, இருதிறத்தாரும் போர் நடக்கத் தொடங்கியது. ராலீயுடன் வந்தவர்கள் பயமடைந்து இங்கிலண்டிற்குத் திரும்பிவிடுமாறு தமது தலைவரை வற்புறுத்தினர். அதற்குள் ஸ்பெயின் தேசத்து அரசாங்கத்தார் ஜேம்ஸ் அரசரிடம் ராலீயின் துஷ்டச் செய்கைகளைப்பற்றிப் புகார்செய்து, அவரைத் தம்மிடம் ஒப்படைத்து விடவேண்டுமென்று கேட்டுக்கொண்டிருந்தனர். ஸ்பெயின் அரசரை விரோதித்துக் கொள்வதற்கு ஜேம்ஸ் அரசர் தைரியங்கொள்ளவில்லை. ஆதலால் அவர் ஒரு சுலபமான காரியம் செய்தார். 1603-ல் ராலீக்கு விதிக்கப்பட்டு அதுவரையில்

நிறைவேற்றப் படாமல் இருந்த மரண தண்டனையை அவர் 1618-ல் நிறைவேற்றத் தீர்மானித்தார். மேலும் ராலீ தமது வாக்குறுதியின்படி ஏராளமான பணக்குவியல்களைக் கொண்டு வரவில்லையாதலால் அதனாலும் ஜேம்ஸ் ஏமாற்றமடைந்தார். 1618-ல் ராலீ தூக்கிலிடப்பட்டு உயிர் துறந்தார். அவர் ஒரு காலத்தில் இங்கிலண்டு தேசத்து இராணியின் அந்தரங்க நண்பராக இருந்து கடைசியில் வேறொரு அரசரால் தூக்குமரத்திற்கு பலியிடப்பட்டார். ஆனால், அவருடைய பல வீரச்செய்கைகளை மறவாதிருந்த இங்கிலீஷ்காரர்கள் ஜேம்ஸ் அரசர் ஸ்பெயின் தேசத்தாருடைய பகைமைக் கஞ்சியே அத்தகைய பாதகச் செய்கையைப் புரிந்தாரென்றெண்ணி அவரை முன்னிலும் அதிகமாக வெறுத்து வந்தனர்.

1618-ல் ஐரோப்பாவில் கடுமையான மதச்சண்டை ஒன்று ஆரம்பமாயிற்று. அதற்கு **முப்பது வருஷ யுத்தம்** (1618-1648) என்று பெயர். அதன் காரணம் காதலிக் மதத்தினருக்கும் அமிதமான மதப்புரட்சிக்காரருக்கும் இருந்த பகைமையேயாகும். பொஹிமியா (Bohemia) தேசத்தில் இருந்த ப்ராடெஸ்டன்ட் மக்கள் தமது தலைவரும் காதலிக் மதத்தைச் சேர்ந்தவருமான ஆஸ்ட்ரியா தேசத்து அரசருடைய ஆதிக்கத்தை மீறி, அமிதமான மதக் கட்சியைச் சேர்ந்த **ப்ரெடரிக்** (Frederick) என்பவரைத் தமது அரசராக்கிக் கொண்டனர். ஆதலால் அவ்விரு அரசர்களுக்கும் கடுமையான போர் நிகழ்ந்தது. ப்ரெடரிக் என்பவர், ஜேம்ஸின் மருமகன்; ஜேம்ஸின் ஒரே புத்திரியை அவர் மணம் செய்து கொண்டிருந்தார். மேலும் ப்ரெடரிக்குக்கு **எலக்டர் பாலடைன்** (Elector Palatine) என்ற பட்டப்பெயரும் இருந்தது. ஜேம்ஸ் அரசர் தமது மருமகனுடைய கட்சியிலேயே சேருவார் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர். ஆனால் ஜேம்ஸ் அரசர் மத சம்பந்தமான சண்டைகளை வெறுத்தவராதலால், அவர் ப்ரெடரிக்குக்கு எவ்வித உதவியையும் புரியவில்லை. கடைசியில் ப்ரெடரிக் தனியாகப் போர் நடத்தி, ஆஸ்ட்ரியா தேசத்துச் சக்கரவர்த்தியை எதிர்க்கமாட்டாதவராய்த் தமது தேசத்திலிருந்து துரத்தப்பட்டார். அதாவது அவருக்குப் புதிதாகக் கிடைத்த இராஜ்ஜியமும் போக, அவருடைய சொந்தப் பிரதேசங்களும் அவருக்கு இல்லாமல் போயின. அப்பொழுதே

ஜேம்ஸ் விழித்துக் கொண்டார். அதுவரையில் இங்கிலீஷ்காரர் அவருடைய பலஹீனத்தைக் கண்டு எளனம் செய்து வந்தனர். ஆனால் அவருடைய மருமகன் தமது சொந்த இராஜ்ஜியத்தையும் இழந்தவுடனே அவர் சில சேனைகளை ப்2ரெயரிக்குக்கு உதவிபுரியும்படி அனுப்பி வைத்தார். அப்பொழுதும் தீவிரமாகச் சண்டை செய்ய அவருக்கு மனமில்லை. அவர் ஸ்பெயின் அரசாங்கத்தாரைத் தூண்டிவிட்டு, சமாதான முறைகள் மூலமாகவே தமது மருமகனுடைய இராஜ்ஜியத்தை மறுபடி பெறுவதற்கு முயற்சித்தார். ஸ்பெயின் அரசாங்கத்தார் வெளிக்குமாத்திரம் ஜேம்ஸின் யோசனைப்படி நடப்பதாகக் காட்டி உண்மையில் எவ்வித முயற்சியும் செய்யாமல் இருந்துவிட்டனர். ஏனெனில் ப்ராடெஸ்டன்ட் வீரான ப்2ரெயரிக்குக்கு உதவிபுரிய அவர்களுக்கு மனமில்லை. வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பிய ஜேம்ஸ் ஸ்பெயின் தேசத்தரசாது சிநேகத்தை அதிகப்படுத்திக்கொள்ளும் நோக்கத்துடன், தமது புத்திரரின் விவாக விஷயத்தைப்பற்றி மீண்டும் முயற்சி செய்தார். ஆனால் இங்கிலண்டிலுள்ள கா/2தலிக் மதத்தினருக்கு ஜேம்ஸ், சர்வ சுதந்திரமும் கொடுத்தாலன்றி ஸ்பெயின் அரசர் தமது பெண்ணைச் ச்சார்லஸ் இளவரசருக்கு மணந்து கொடுக்கத் தயாராக இல்லை. கடைசியாக 1623-ல் ச்சார்லஸ் இளவரசர், பக்கிங்ஹா2ம் பிரபுவுடன் ஸ்பெயின் தேசத்திற்குச் சென்று விவாகத்தைப்பற்றிய முடிவைத் தெரிந்து வருவதற்காகப் பிரயாணமானர். ஸ்பெயின் தேசத்தார் அவர்களை மரியாதையாக நடத்தவில்லை. ஸ்பெயின் இளவரசியும் ச்சார்லஸினிடம் அன்பாக நடந்துகொள்ளவில்லை. அதுவரையில் அவர்கள் வஞ்சகமாய் நடந்துகொண்டிருந்த விஷயம் ச்சார்லஸுக்குப் புலப்பட்டுவிட்டது. அவர் திரும்பி வந்து தமது தகப்பனரைத் தூண்டிவிட்டு, ப்2ரெயரிக்குச்கு அதிக உதவி யனுப்பும்படி வற்புறுத்தினர். மேலும் ச்சார்லஸ் ட்2ரெஞ்சு இளவரசியான ஹென்றியட்டா மேரியா (Henrietta Maria) என்பவளை மணந்துகொள்ள ஒப்புக்கொண்டார். இங்கிலீஷ் ஜனங்களுக்கு அந்த விவாகம் நடப்பதும் சம்மதியாகவில்லை; ஏனெனில் அந்த இளவரசி கா/2தலிக் மதத்தைச் சேர்ந்தவள். ஜேம்ஸ் அரசர் தமது மருமகனுக்கு உதவி செய்யும் பொருட்டு அனுப்பிய சேனைகளும் விசேஷமான வெற்

றியை யடையவில்லை. அவ்வாறு அன்னிய நாட்டு சம்பந்தத்தில் ஜேம்ஸ் குழப்பத்தையும் அதிருப்தியையுமே விளைவித்துக்கொண்டார்.

1614-ல் பார்லிமெண்ட் சபையைக் கலைத்த பிறகு, எழுவருஷ காலம் ஜேம்ஸ் அதை மீண்டும் கூட்டவே இல்லை. ஆனால் தமது யுத்தச் செலவுக்கு அவசியமான பணத்தொகையைப் பெறும் பொருட்டு 1621-லும் 1624-லும் அவர் பார்லிமென்டைக் கூட்ட வேண்டிய தவசியமாயிற்று. 1621-ல் மூன்றாவது தடவையாகக் கூடிய சபையார் ஜேம்ஸின் தாமஸ குணத்தைக் கண்டித்து, அதிக ஊக்கத்துடன் ப்ரெடரிக்குக்கு உதவி புரியுமாறு வற்புறுத்தினர். மேலும் தங்களது குறைகள் பலவற்றை நிவர்த்திக்க வேண்டுமென்றும் அவர்கள் வற்புறுத்தினர். அதுவன்றி அக்கிரமமாக நடந்து வந்த அரசாங்க உத்தியோகஸ்தர்களையும் பார்லிமென்டார் கண்டித்தனர். உதாரணமாக, பேகன் (Bacon) என்ற உயர்தர உத்தியோகஸ்தர் இலஞ்சம் வாங்கிக் கொண்டு அநீதி புரிந்ததாகக் குற்றம் சுமத்தப் பட்டார். உயர்தர அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பெரிய தவறு புரிவார்களானால், காமன்ஸ் சபையார் அவர்கள்மீது குற்றம் சுமத்தி விசாரணையின் பொருட்டு அவர்களை லார்ட்ஸ் சபைக்கு அனுப்புவார்கள். அதற்கு இம்பீச்மேண்ட் என்று பெயர் (Impeachment). பேகன் என்பவரை அந்த விசாரணை முறைக்கு உட்படுத்தினார்கள். முடிவில் அவர் தமது உத்தியோகத்தை இழந்து சிறை வாசம் செய்ய நேர்ந்தது. பேகன் சிறந்த வித்வானாக இருந்தார். அவரது வழக்கு முடிந்த பின், பார்லிமென்ட் சபையார் அரசருக்கு வேண்டிய பணத்தொகையை உதவியதன்றி ச்சார்லஸ் இளவரசர் ஒரு ப்ராடெஸ்டன்ட் இராஜ குமாரியையே மணக்கவேண்டுமென்றும் உத்தரவிட்டனர். ஜேம்ஸ் அரசர் அந்த விஷயம் பார்லிமென்டின் அதிகாரத்திற்குள்ளடங்கியதல்ல வென்று கூறினார். பார்லிமென்டாரோ அரசருக்கு சமயோசிதமான புத்திமதியைக் கூறுவதற்குத் தமக்கு அதிகாரம் உண்டென்று சாதித்தனர். அதனால் கோபமூட்டப் பட்ட ஜேம்ஸ் பார்லிமென்டைக் கலைத்துவிட்டார். பிறகு 1624-ல் கூடிய பார்லிமென்ட் சபையாரும் தம்முடைய குறைகளை நிவர்த்தித்துக் கொள்ளும்பொருட்டு அரசருடன் போராடி வந்தனர்.

ஆனால் 1625-ல் ஜேம்ஸ் அரசர் மரணமடைந்தார். இளவரசரான, ச்சார்லஸ் பட்டத்திற்கு வந்தார்.

ஜேம்ஸின் ஆட்சியில் வேறு பல விசேஷ சம்பவங்களும் நிகழ்ந்தன. எலிஸபெத்தின் காலத்திலேயே அயர்லன்ட் தேசம் இங்கிலீஷ் ஆதிபத்யத்திற்கு உட்பட்டு விட்டதாகையால், ஜேம்ஸ் அரசர் பிரிட்டிஷ் தீவுகள் முழுதிற்கும் அரசராயிருந்தார். ஆனால், அயரிஷ்காரர்கள் ப்ராடெஸ்டன்ட் மதத்தையும் இங்கிலீஷ் ஆதிபத்யத்தையும் வெறுத்து வந்தனர். இங்கிலீஷ் அரசாது வாளுக்கு அஞ்சியே அவர்கள் அடங்கிக் கிடந்தனர். 1607-ல் சில அயரிஷ்காரர்கள் கலகம்செய்து தோற்று ஓடினர். 1610-ல் ஜேம்ஸ் ஒரு விசேஷமான காரியத்தைச் செய்தார்; அதாவது அயர் லண்டின் வடக்கிலுள்ள **அல்ஸ்டர் (Ulster)** என்ற மாகாணத்தில் பல இங்கிலீஷ்காரர்கள் குடியேறுமாறு செய்தார். அங்கு காதலிக் மதத்தினரான அயரிஷ்காரருக்கண்டையிலேயே ப்ராடெஸ்டன்ட் மதத்தினரான இங்கிலீஷ்காரர்கள் குடியேறி நிலைத்திருக்கத் தொடங்கினர். அதனால் அயரிஷ்காரருடைய சுதந்திரப் போராட் டத்திற்குப் பெருத்த தடையொன்று ஏற்பட்டது. அயர்லண்ட் தேசம் முழுதும் சுதந்திரத்திற்காகப் பாடுபட்டாலும், அதில் ஒரு முக்கிய மாகாணமான அல்ஸ்டர் இங்கிலண்டிற்கு அநுகூலமாக இருந்தது. ஆனாலும் தமது நிலங்களைக் கொள்ளைகொண்டு தம்மை அடக்கிவந்த இங்கிலீஷ்காரரை அயரிஷ் மக்கள் கடுமையாய் வெறுத்து வந்தனர்.

இவ்வாறு ஸ்காட்லன்ட், அயர்லன்ட் ஆகிய இரண்டு தேசங்களையும் இங்கிலண்டின் ஆதிபத்திற்குட்படுத்திய ஜேம் ஸின் காலத்தில் இங்கிலன்டின் மேம்பாடு வேறுவிதமாகவும் பரவி யது. அதாவது, எலிஸபெத்தின் காலத்தில் 'கடல் நாய்கள்' செய்து வந்த வீரச் செய்கைகள் அப்பொழுது பலன்பட்டன. இங்கிலீஷ்காரர்கள் பலர் அமெரிக்காவிற்குச் சென்று குடியேற லாயினர். 1607-ல் **வர்ஜீனியா** என்ற பிரதேசத்தில் சில இங்கி லீஷ்காரர்கள் குடியேறி சில நகரங்களையும் உற்பத்தி செய்தனர். முதலில் அவர்களுக்குப் பல இடுக்கண்கள் சம்பவித்தன. ஆனால் விடா முயற்சியோடு அவர்கள் உழைத்து நிலங்களைப்

பண்படுத்தி சுக வசதிகளைச் செய்து கொண்டனர். இங்கிலண்டில் ஜேம்ஸின் மதக்கொடுமையைப்பொருத சில ப்யூரிடன்கள் 1620-ல் அமெரிக்காவுக்குப் பிரயாணமாயினர். தமது சொந்த தேசத்தில் மத சுதந்திர மற்று, வாழ்வதைவிட, அன்னிய நாடு சென்று அங்கு துன்பங்களை யடைந்தாகிலும் தமது சுயேச்சைப்படி கடவுளை வழிபடுவதே சிறந்ததென அவ்வீரர்கள் கருதினர். அவர்களுக்கு "யாத்திரை சென்ற தந்தைமார்" (Pilgrim Fathers) என்ற பெயர் ஏற்பட்டது. 'மேப்ளவர்' (Mayflower) என்ற கப்பலில் ஏறிக் கொண்டு அவர்கள் அதற்கு முன் அறியாததான அமெரிக்காவை நோக்கிச்சென்று அங்கு குடியேறினர்.அம்மாதிரி மதசுதந்திரத்தின் பொருட்டும், உழுது பயிரிட்டு ஜீவனம் நடத்தும் கருத்துடனும் இங்கிலீஷ்காரர்கள் பலர் அமெரிக்காவிற்குச் சென்று கடற்கரைகளில் குடியேறி, புதிய உலகமென்று குறிக்கப்படுவதான அமெரிக்காவைத் தமது வசப்படுத்தலானார்கள். அங்கு புதிய இங்கிலண்டு (New England) என்ற ஒரு பிரதேசமும் ஏற்பட்டது. எனவே இப்பொழுது அமெரிக்காவில் உள்ள வெள்ளைக்காரர்கள் எல்லோரும் ஐரோப்பாவிலிருந்து சென்ற யாத்திரிகர்களுடைய சந்ததியார்களே.

அவ்வாறு புதிய உலகத்தில் பலர் சென்று நிலைத்ததைப் போலவே, இந்தியா முதலான கிழக்கு தேசங்களுடனும் இங்கிலீஷ்காரர்கள் வியாபாரம் செய்ய முனைந்தனர். 1600-ல் கிழக்கிந்தியக் கம்பெனி (East India Company) க்கு எலிஸபெத் இராணி பிரத்யேகமான ஒரு சாஸனம் அளித்து வியாபாரம் செய்யும் உரிமையை வழங்கியிருந்தாள். அந்தக் கம்பெனியார் இந்தியாவுடன் வியாபாரம் செய்யத் தொடங்கி, மற்ற சில ஐரோப்பிய அரசுகளுடன் போட்டிபோட்டு முடிவில் இந்தியா தேசத்தையும் ஆக்கிரமித்துக்கொண்ட வரலாறு இந்தியா தேசசரித்திரத்தில் காணக்கிடக்கிறது.

இவ்வாறு ஸ்டுவர்ட் அரசர்களின் காலத்தில் இங்கிலீஷ் மக்களிற் பெரும்பாலோர் தமது உரிமைகளைக் காப்பாற்றும் பொருட்டு அரசருடைய சுயேச்சாதிகாரத்தை எதிர்த்துப் போராடிக்கொண்

டிருக்கையிலேயே, அவர்களில் ஒரு சாரார் உலகின் இருகோடிகளுக்கும் சென்று ஸிரிட்டிஷ் இராஜ்ஜியத்தின் பிற்கால மகிமைக்கும் சாம்ராஜ்யத்திற்கும் விதை விதைத்துக் கொண்டிருந்தனர். ஸ்டுவர்ட் அரசரின் காலம் முதற்கொண்டு இங்கிலீஷ் அரசாங்கத்தார் உள்நாட்டு விஷயங்களை மாத்திரமன்றி, தமக்குட்பட்ட அன்னிய நாட்டு வியவகாரங்களையும் கவனிக்க வேண்டியதாயிற்று.

---

# 30-வது அதிகாரம்

---

## முதலாவது ச்சார்லஸ்

**(1) ச்சார்லஸ் அரசரது குணம்: அன்னிய நாட்டு வியவகாரம்: பார்லிமேன்டுடன் சச்சரவு:—**இருபத்தைந்தாவது வயதில் பட்டத்திற்கு வந்த ச்சார்லஸ் அரசர் தமது தந்தையைவிட அதிக அழகும், ஆண்மையும், வெளிப்பகட்டும் உடையவரானாலும், ஜேம்ஸைப்போன்ற விசால அறிவும் சூக்ஷ்ம புத்தியும் உடையவரல்லர். அவரது காலத்தில் அரசருக்கும் பார்லிமென்டுக்கும் இருந்த மனஸ்தாபம் முற்ற, அதுவரையில் புகைந்து கொண்டிருந்த பகைமைத்தீ பற்றிஎரியலாயிற்று. ஜனங்களுடைய விருப்பத்திற்கு மாறாக அவர் மணந்துகொண்ட ப்ரெஞ்சு இளவரசியான ஹென்றியட்டா மேரியா என்பவள் தந்திரம் நிறைந்தவளானாலும், தனது கணவனை நல்லவழிகளிற் செலுத்த முயலவில்லை. அதுபோலவே, ச்சார்லஸ், பக்கிங்ஹாம்பிரபுவினிடம்மிதமிஞ்சியநம்பிக்கைவைத்திருந்தமையாலும், அவர் பொதுமக்களது அதிருப்தியை சம்பாதித்துக்கொண்டார். ஆனால் ச்சார்லஸ் அரசர் தமது மந்திரிகளிடமும் பூர்த்தியான நம்பிக்கை வைக்கவில்லை. மந்திரிகளின் சொற்படியாவது ஒரே உறுதியாக நடந்துகொள்ளும் குணம் அவருக்கிருந்திருந்தால், அது சற்று சௌகரியமாயிருந்திருக்கும். ச்சார்லஸ் அரசர் மதப்பற்றுதலும், நண்பர்களிடம் அன்பும் உடையவராதலால், தம்முடன் அன்னியோன்னியமாகப் பழகியவர்களை அவர் திருப்தி செய்வித்து வந்தாரானாலும், குடிமக்களிடம் அவருக்கு அந்தரங்கமான பட்சம் இல்

லாமல் போய்விட்டது. அவர் பல சமயங்களில் முற்றிலும் பிடிவாதமாக நடந்து எவருக்கும் அடங்காதவரென்பதைக் காட்டிக்கொண்டார். ஆனாலும் தமது சொந்தத் தீர்மானத்தின்படி உறுதியாக நடக்கும் குணமும் அவரிடம் காணப்படவில்லை. அவரால் தெளிவாகப் பேசவும் இயலவில்லை; குழப்பமின்றி யோசனை செய்யவும் இயலவில்லை; வியவகாரங்களின் உண்மையை அறிந்துகொள்ள மாட்டாதவராய் அவர் எப்பொழுதும் தோல்வி யடைந்துகொண்டே வந்தார். சுறுசுறுப்பாக நிர்வாகம் நடத்தும் திறனும் அவரிடம் அமைந்திருக்கவில்லை. இவ்வித அற்புத குணங்கள்வாய்ந்த அரசருக்கும் ஏற்கனவே அதிருப்தியுற்றிருந்த குடிமக்களுக்கும் சமரஸ உணர்ச்சி ஏற்படாமல் கலகமே விளைந்தது ஆச்சரியமான விஷயமல்ல. ச்சார்லஸ் பட்டத்திற்கு வந்தபொழுது இங்கிலண்டு தேசம் ஸ்பெயின் தேசத்துடன் போர்புரியும் தருணத்திலிருந்தது. ச்சார்லஸ் அரசர் ஸ்பெயின் தேசத்துடன் சண்டை செய்வதுடன், தமது சகோதரியின் புருஷரான எலக்டர் பாலடைனை ப்ரெஹரிக் அரசருக்கு உதவிபுரிந்து அவரை அவருடைய இராஜ்ஜியத்தில் மீண்டும் ஸ்தாபிக்கவும் எண்ணம் கொண்டார். அவ்வாறு அவர் நிச்சயித்தது இங்கிலண்டில் இருந்த ப்ராடெஸ்டன்ட் ஜனங்களுக்கு பெரிதும் திருப்திகரமாக இருந்தது. அதனால், அவ்விரு யுத்தங்களையும் நடத்துவதற்காக, பார்லிமென்ட் சபையார் தமக்குத் தேவையான பணத்தொகையை அளிப்பார்கள் என்று ச்சார்லஸ் எண்ணினார். 1625-ல் கூடிய பார்லிமென்ட் சபையார், அவ்விதம் பணம் தருவதற்கு முன் தங்களது குறைகளைத் தீர்த்துவைக்கவேண்டுமென்றும், பக்கிங்ஹாம் பிரபுவை உத்தியோகத்திலிருந்து நீக்கவேண்டுமென்றும் கூறி அரசரிடத்தில் மன்றாடினர். அந்த எதிர்பாராத சம்பவத்தினால் கோபமடைந்த ச்சார்லஸ் பார்லிமெண்டைக் கலைத்துவிட்டார். பார்லிமெண்டார் அவ்வாறு தமக்குக் கட்டளை இடுவது அக்கிரமச் செய்கையென்று அவர் கருதினார். ஆனால், பார்லிமென்டாரோ அரசர் தங்களது விருப்பத்தின்படி நிர்வாகம் நடத்தினாலன்றி அவருக்குத் தேவையான பணத்தைக் கொடுப்பதில்லை யென்று நிச்சயித்துக்கொண்டனர். அரசருக்கும் பார்லிமென்டுக்கும் கடுமையான விவாதம் ஏற்படும் சந்தர்ப்பம் நெருங்கிவிட்டது. அந்த சமயத்

தில் ச்சார்லஸ் அன்னிய நாட்டு யுத்தங்களில் அகப்பட்டுச்கொள்ளாமல்இருந்திருந்தால்,அது நன்மை பயந்திருக்கும்.ஆனால் அவரது பிடிவாத குணம் அதற்கு இடம்கொடுக்கவில்லை. பார்லிமென்டின் உதவி கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும், ஸ்பெயின் தேசத்துப்போரை நடத்தியே தீருவதாக அவர் உறுதிசெய்துகொண்டார். ஆகவே உள்நாட்டில் பார்லிமென்டின் சச்சரவும், வெளிநாட்டுப் போரும் அவருக்கு மிகுந்த துன்பத்தை உண்டு பண்ணின. இரண்டிடங்களிலும் அவருக்குத் தோல்வியே ஏற்படுவது நிச்சயமாய்த் தோன்றியது.

ஸ்பெயின் தேசத்துப் போரில் இங்கிலீஷ் சேனாவீரர்கள் முக்கியமான வெற்றிகளைப் பெறவில்லை; மேலும் யுத்தம் செய்வதற்கு அவசியமான பணமும் அரசரிடம் இல்லை. அவருக்கு ப்ரெஞ்சு தேசத்தரசரும், உறுதி கூறியபடி, உதவி செய்ய வரவில்லை. 1626-ல் தமது மைத்துனரான ப்ரெஞ்சு அரசருக்கும் ச்சார்லஸுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. அப்பொழுது வேறு வழியில்லாததுபற்றி அவர் பார்லிமென்ட் சபையைக் கூட்டினார். அச்சமயம் ஸர் ஜான் எலியட் (Sir John Eliot) என்பவருடைய தலைமைக்குட்பட்டிருந்த பார்லிமென்டார், அரசருக்கு இணங்கி வராமல், பக்கிங்ஹாம் பிரபுவின்மீது குற்றப்பத்திரிகை தயாரிக்கத் தொடங்கினர். அதைக் கண்ட ச்சார்லஸ் பக்கிங்ஹாம் பிரபுவைக் காப்பாற்றும் பொருட்டு, அந்தப் பார்லிமென்டையும் கலைத்துவிட்டார். ச்சார்லஸின் அன்னியநாட்டு சம்பந்தம் ஏற்கனவே அவமானத்தை விளைவித்துவிட்டது. ஸ்பெயின் தேசத்தாருக்கு எவ்விதத்திலும் தீங்கிழைக்க அவரால் கூடவில்லை. ப்ரெஞ்சு அரசருக்கும் அவரால் எவ்வித நன்மையும் உண்டாகவில்லை. 1626-ல் அவர் ப்ரெஞ்சு தேசத்தரசரை எதிர்த்துச் செல்லவேண்டுமென்று தீர்மானித்து அந்த யுத்தத்திற்குஅவசியமான பணத்தைப் பெறுவதற்கு ஒரு யுக்தி செய்தார். தமது பிரஜைகளிடமிருந்து அவர் பலவந்தமாகக் கடன் வாங்கத் தொடங்கினார். அதாவது ஒவ்வொரு பிரஜையும் அரசர் கேட்ட தொகையைக் கொடுத்தே தீரவேண்டும். அவ்விதம் பலவந்தக் கடன் பெறுவது அரசருடைய உரிமைகளில் ஒன்று என்று அக்கால நீதிபதிகள் வாதம் செய்தனர். ஆனால் பலர் அதை அக்

கிரமமான வரியென்று கண்டித்து, கடன் கொடுக்க மறுத்தனர்; அவ்வாறு செய்தவர்கள் அரசாங்கத்தாரால் பலவிதமாய் வருத்தப்பட்டனர்; ஸர் ஜான் எலியட் முதலிய தலைவர்கள் சிறையிலிடப்பட்டனர். அவ்வாறு சிறைப்பட்டவர்களுள் ஐந்து வீரர்கள் அரசருடைய செய்கை நியாயமானதுதானா என்பதைப்பற்றி நியாய ஸ்தலத்தார் பரிசீலனை செய்யுமாறு வழக்குத் தொடுத்தனர். அந்த வழக்குக்கு டார்னெல் வழக்கு (Darnell's Case) என்று பெயர்; டார்னெல் என்பவர் ஷ ஐவரில் ஒருவர். அந்த வழக்கில் அரசர் தமது இச்சைப்படி பிரஜைகளைச் சிறையிலிடலாம் என்று நியாயாதிபதிகள் தீர்ப்புக் கூறினர். ஆனாலும் சில நாட்கள் கழித்து ச்சார்லஸ் அரசரே அவர்களை விட்டுவிடச் செய்தார். 1628-ல் அவர் மூன்றாவது முறையாக பார்லிமெண்ட் சபையைக் கூட்டினார். அந்த சபையில் ஸர் ஜான் எலியட் என்ற தலைவருடன் ஸர் தாமஸ் வேன்ட்வர்த் (Sir Thomas Wentworth) என்பவரும் பிரபலமடைந்திருந்தார். அவ்விரு தலைவர்களைப் பின்பற்றி பார்லிமெண்ட் சபையார் ச்சார்லஸின் அக்கிரமச் செய்கைகளைக் கண்டித்து, பிரஜைகளின் உரிமைகளைக் காப்பாற்ற உறுதி செய்துகொண்டனர். பலருக்கு பக்கிங்ஹாம் பிரபுவின்மீதும் வெறுப்பு உண்டாயிருந்தது. பலவந்தக் கடன் வாங்குவதும் பிரஜைகளை நிதிஸ்தல விசாரணையின்றி சுயேச்சையாகச் சிறையிலிடுவதும் கூடவே கூடாதென்று ஒரு சட்டமியற்ற பார்லிமெண்டார் முயற்சித்தனர்; ச்சார்லஸ் அந்தச் சட்டம் தமது அதிகாரத்தைக் குறைப்பதுபோலாகுமென்று கூறி அதை எதிர்த்தார். ஆனால் எலியட் முதலிய தலைவர்கள் தமது பிடியை விட்டுக் கொடுக்காமல், ஒரு விண்ணப்பம் தயார் செய்து அதை அரசருக்கு அனுப்பினார்கள். அதற்கு உரிமை விண்ணப்பம்" (Petition of Right) என்று பெயர். அதில் ச்சார்லஸ் அரசர் பலவந்தக் கடன் வாங்குவதும், பார்லிமெண்டாரின் சம்மதியின்றி வரிகள் விதிப்பதும், தக்க ஆதாரமின்றி ஜனங்களைச் சிறையிலிடுவதும், இராணுவ வீரர்களைக் கொண்டு பிரஜைகளுக்குத் துன்பமிழைப்பதும் அநீதியான செய்கைகள் என்றும் அவைகளை இவர் மீண்டும் அநுஷ்டித்தல் கூடாதென்றும் கண்டிருந்தனர். அந்த விண்ணப்பம் இங்கிலீஷ் பிரஜைகளின் சுதந்திரப்

போரில் ஒரு முக்கியமான தஸ்தாவேஜி. 13 வது நூற்றாண்டில் ஜான் அரசரது காலத்தில் மகா சாஸனம் என்ற பத்திரம் ஜனங்களுக்கு உரிமைகளை யளித்ததுபோல, மேலே குறிக்கப்பட்ட விண்ணப்பமும் இன்னொரு சாஸனம் போன்றது. முதலில் அந்த விண்ணப்பத்திற்குத் தமது சம்மதியை யளிக்காமல் ச்சார்லஸ் கால தாமதம் புரிந்துவந்தார். ஆனால் பார்லிமெண்டார் ஒரே கட்டுப்பாடாக இருந்து அவரை வற்புறுத்தி, அவருடைய சம்மதியையாவது நிராகரிப்பையாவது உடனே தெரிவிக்க வேண்டுமென்று பிடிவாதமாகக் கூறியதன்றி, பெங்கிங்ஹாம் பிரபுவையும் கண்டிக்க ஆரம்பித்தார்கள். தமது நண்பரது மானத்தைக் காப்பதற்காக, ச்சார்லஸ் அந்த விண்ணப்பத்தை அங்கீகாரம் செய்துகொண்டார். உடனே பார்லிமெண்ட் சபையார் அரசருக்குத் தேவையாயிருந்த பணத்தை அளித்தனர். அரசர்மீது பூர்த்தியான வெற்றியடைந்ததாகவே அவர்கள் எண்ணினர். பார்லிமெண்டார் அளித்த பணத்தைப் பெற்ற பின் ப்ரெஞ்சு யுத்தத்தை நடத்திச் செல்லுவதற்கு அரசர் எற்பாடு செய்தார். பெக்கிங்ஹாம் பிரபு படையைத் திரட்டிக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்ட தருணத்தில் அவரது பகைவன் ஒருவன் அவரைக் குத்திக் கொன்றுபோட்டு விட்டான். ச்சார்லஸுக்கு உடந்தையாயிருந்து வந்த மனிதர் ஒழிந்தது ஜனங்களுக்கு மிகுந்த ஆறுதலை யளித்தது. தமது நண்பரின் மரணத்திற்காக ச்சார்லஸ் ஒருவரே நிரம்பவும் வருந்தினர். ஆனால் அதன் பின்னும் அவர் தம்மைத் திருத்திக் கொள்ளவில்லை. அதுவரையில் பார்லிமெண்டார் அரசரையும் பெக்கிங்ஹாம்பிரபுவையும் சேர்த்துக் கண்டித்து வந்தனர். அதன் பிறகு அவர்களுடைய கோபம் முழுதிற்கும் ச்சார்லஸ் ஒருவரே பாத்திரரானர்.

1629-ல் பார்லிமெண்ட் சபை மறுபடி அரசரை எதிர்த்தது. ச்சார்லஸ் அரசர் டன்னேஜ், பௌண்டேஜ் (Tunnage and Poundage அதாவது ஒரு டன் அல்லது ஒரு பௌண்ட் எடையைக் கணக்கு வைத்துக்கொண்டு விதிக்கப்பட்ட வரி) என்ற சுங்கவரிகளைப் பார்லிமெண்டின் சம்மதியின்றியே வசூலித்து வந்ததையும், ஜனங்களுடைய நம்பிக்கையைப் பெறாதவர்களை மதஸ்தாபன உத்தியோகங்களுக்கு உயர்த்தி வந்ததையும் ஜனப் பிரதிநிதிகள் கண்

டித்தனர். ச்சார்லஸ் அரசர் உடனே சபையைக் கலைத்து விடும்படி உத்தரவிட்டார். அப்பொழுது பார்லிமென்டில் விவாதம் நடந்து கொண்டிருந்தது. அரசருடைய உத்தரவை எடுத்துவந்த உத்தியோகஸ்தர் உள்ளே பிரவேசிக்காதபடி சிலர் கதவை மூடி விட்டனர்; இன்னும் இருவர் சபையின் அக்கிராசனாதிபதியை நாற்காலியிலேயே அழுத்திப் பிடித்துக் கொண்டனர். ஏனெனில் அரசருடைய உத்தரவை சபைத் தலைவர் பெற்றுவிட்டால் அவர் சபையை உடனே கலைத்து விடுவாராதலால், அதற்குள் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டுமென்று சபையினர் ஆவல் கொண்டு அவ்வாறு செய்தனர். குழப்பத்தினிடையில், எலியட் என்ற தலைவர் முக்கியமான ஒரு தீர்மானத்தைப் பிரேரணை செய்தார்; அதாவது, மத மாறுதல்கள் செய்வோரும், பார்லிமென்டாரால் அங்கீகரிக்கப்படாத வரிகளைக் கொடுப்போரும் தேசத் துரோகிகள் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன் பிறகு அரசருடைய தூதன் உள்ளே விடப்பட்டான்; சபையும் கலைந்தது. அதுபற்றி, எலியட் சிறையிலிடப்பட்டு, மூன்று வருஷ காலத்திற்குப் பின் அவ்விடத்திலேயே உயிர் துறந்தார். ஜனங்களுடைய உரிமைகளுக்காக அவர் தைரியமாகப் போராடித் தமது உயிரையும் தேசத்தின்பொருட்டு அர்ப்பணம் செய்து விட்டார். ஆனால் அத் தலைவரைச் சிறையிலிட்டுக் கொன்றதிலிருந்து ஜனங்களுடைய கோபாவேசம் அதிகமாயிற்றேயன்றிக் குறையவில்லை.

(2) **ச்சார்லஸின் சுயேச்சாதிபத்தியம்; அவருடைய ஆட்சியின் சீர்கேடு**:—ச்சார்லஸினது ஆட்சியின் மூன்றாவது பார்லிமென்ட் சபையானது 1629-ல் கலைக்கப்பட்டதோடுஅவ்வாட்சியின் முதற்பகுதி முடிவடைகிறது. இதில் அரசருக்கும் ஜனப்பிரதிநிதிகளுக்கும் இருந்து வந்த ஒற்றுமை எவ்வளவு என்பது விளங்குகிறது. பிறகு 11 வருஷ காலம்—அதாவது 1640 வரையில் பார்லிமென்ட் சபையைக் கூட்டாமலேயே ச்சார்லஸ் சுயேச்சையாக அரசாட்சி புரிந்தார். பார்லிமென்டின் உரிமையும் அரசருடைய அதிகாரமும் ஒன்றிற்கொன்று முரண்பட்டன. ட்யூடர் வம்சத்தாரின் காலத்தில் அவர்களுக்கு அடங்கி நடந்துவந்த பார்லிமென்ட் சபை ஸ்டுவர்ட் அரசர்களை எதிர்த்து வந்தது. ஆனால், தமக்கு முன்னிருந்த

அரசர்களைப்போலவே தாமும் சுயேச்சையாக ஆளவேண்டுமென் பது ச்சார்லஸின் விருப்பம். அரசர், பார்லிமெண்ட் சபையார் ஆகிய இரு சாராரும் தம்தமது கட்சியே நியாயமானதென்று சாதித் தனர். உண்மை எவருக்கும் புலப்படவில்லை. பழைய காலத்தில் ஜனங்கள் அரசனது சொற்படி நடந்து வந்தனர். 17-வது நூற் றாண்டிலோ ஜனப்பிரதிநிதிகள் தமக்கே இராஜ்ஜியாதிகாரம் உரிய தென்று போராடலாயினர். அரசர்களுடைய சுயாதிபத்யத்திற்கும் பொதுஜனப்பிரதிநிதிகளுடைய உரிமைக்கும் போராட்ட மேற்பட் டது. அதில் எந்தக் கட்சிக்கு அதிக பலம் ஏற்படுமோ அதற்கே வெற்றி கிடைப்பதாக இருந்தது. ச்சார்லஸ் பதினொரு வருஷ காலம் பார்லிமெண்டைக் கூட்டாமல் ஆண்ட காலத்தில் அவர் ஜனங்களுடைய ஆதாரவை சம்பாதித்துக் கொண்டிருந் தாராகில், அவரது கட்சி வலுவடைந்திருக்கும். அவருக்கு அவ் வளவு சூட்சும புத்தி இல்லை. ட்யூடர் அரசர்களும் சுயேச்சாதி பத்தியம் செலுத்திவந்தனர்; ஆனால் அவர்களிடம் ஜனங்களுக்குப் பகைமை ஏற்படவில்லை. ஸ்டுவர்ட் அரசர்களை மாத்திரம் ஏன் ஜனங்கள் அவ்வளவு அதிகமாய் வெறுக்க வேண்டுமென்பதற்கு அநேக காரணங்கள் இருந்தன. முக்கியமாக, ட்யூடர்கள் சுயேச்சாதி பத்தியம் செலுத்தினாலும், அதனால் ஜனங்களுக்கு நன்மையேவிளைந் தது: தேச நலத்தின் பொருட்டே அவர்கள் கடுமையாக நடந்து வந்த மையால் பிரஜைகள் அதைப் பொறுத்து வந்தனர். ஸ்டுவர்ட் அர சர்களோ ஆரம்பத்திலிருந்தே ஒவ்வொரு செய்கையாலும் ஜனங்க ளுடைய வெறுப்பையே தேடிக்கொண்டனர். அவர்களுடைய சுயேச்சாதிபத்தியத்தைக் கண்டு எல்லோரும் சம்சயமே கொண்ட னர். மேலும் ட்யூடர் அரசருக்கிருந்த நற்குணங்களிற் பல ஸ்டு வர்ட் வம்சத்தினரிடம் காணப்படவில்லை. மற்றவைகளைக் காட்டி லும் முக்கியமான காரணம், ட்யூடர்களின் காலத்தில் இருந்த ஜனங்களை விட, ஸ்டுவர்ட் காலத்திலிருந்த ஜனங்கள் சுதந்திர உணர்ச்சியை அதிகமாய்ப் பெற்றிருந்ததே. நாம் குழந்தையாயிருந்த பொழுது தரித்த உடைகள் வயதானபின்னர் சரிப்பட்டு வருவ தில்லையல்லவா. ட்யூடர்களின் காலத்துப் பிரஜைகளுக்குத் திருப்தி கரமாயிருந்த அரசியல் முறை, ஸ்டுவர்ட் அரசர்களது காலத்துப் பிர

ஜைகளுக்கு ஏற்றதாக இல்லை. நாடு முன்னேற்ற மடைந்ததற்கேற்ப, அரசியல் முறையும் மாறவேண்டியது அவசியமாயிருந்தது. அதனுலேயே ஸ்டுவேர்ட் அரசர்கள் அடிக்கடி பார்லிமென்டின் எதிர்ப்புகளுக்கு ஆளாயினர். ஜன சுதந்திர உணர்ச்சி எலிஸபெத் இராணியின் கடைசிக் காலத்திலேயே பெருகி நிலைத்துப் போய்விட்டது. ஆகவே, நாம் மேலே கூறிய சம்பவங்களுக்கு ஸ்டுவேர்ட் அரசர்களின் திறமையின்மை யொன்றையே காரணமாகக் கொள்ளல் தகாது. பல காரணங்களுக்குள் அதுவும் ஒன்று; ச்சார்லஸ் ஆண்ட சமயத்தில் எட்டாவது ஹென்றி ஆண்டிருந்தாலும், பார்லிமெண்டார் முன் கூறிய மாதிரியே வாது புரிந்திருப்பார்கள். ஒரு கால் ட்யூடர் அரசரது விசேஷ சாமர்த்தியத்தால் சண்டை அவ்வளவு அதிகமாய் முற்றியிருக்காது; ஆயினும் இங்கிலண்டில் சுதந்திர உணர்ச்சியென்னும் வெள்ளம் புரண்டோட ஆரம்பித்துவிட்டது; ஸ்டுவேர்ட் அரசர்கள் அந்த வெள்ளத்தைத் தடுத்து, பழைய நிலைமையையே ஊர்ஜிதப்படுத்த முயன்றனர். அது சாத்தியமாகாமல் போய் விட்டது.

மேலே கூறியபடி பதினொரு வருஷகாலம் பார்லிமெண்டைக் கூட்டாமல் சுயேச்சாதிபத்தியம் நடாத்திய ச்சார்லஸ், தமது சாமர்த்தியத்தால் ஜனங்களுடைய பிரீதியைப் பெற்றிருக்கலாம். ஆனல், அவருடைய ஒவ்வொரு செய்கையும் அவரைப் படுகுழியில் வீழ்த்துவதற்கே வழி செய்வதாயிருந்தது. பார்லிமென்டாருடைய தயவின்றியே தமக்குத் தேவையான பணத்தைப் பெறுவதற்கு அவர் முதலில் வழி செய்தார். ஸ்பெயின் தேசத்துடனும் ப்ரான்ஸ் தேசத்துடனும் செய்துவந்த போரை அவர் நிறுத்திவிட்டார்; ப்ரெடெரிக் அரசர் நட்டாற்றில் விடப்பட்டார். மிகவும் படாடோபமாக மூன்று அன்னிய நாடுகளின் வியவகாரங்களில் தலையிட்டுக் கொண்ட ச்சார்லஸ் ஒன்றிலாவது ஜயமடையாமல் பின் வாங்கிக் கொண்டார். அது ஒன்றே அவருக்குப் பெரிய அவமானத்தை உண்டாக்கியது. அன்னிய நாட்டுப் போர்களை நிறுத்திய பின்னும் தமது செலவிற்குப் பணம் போதாமல் போனதைக் கண்ட ச்சார்லஸ் சட்டத்தை மீறித் தமது இச்சைப்படி வரி வசூல்செய்ய தைரியமின்றி, சட்ட வரம்புக்குட்பட்டு நடப்பதாகக் காட்டிக்

கொண்டு பல குதர்க்க முறைகளை அநுஷ்டித்து வந்தார். பழைய அரசர்களது காலத்தில் அநுஷ்டானத்தில் இருந்து பிறகு நிராகரிக்கப்பட்டுப் போன பல அதிகாரங்களை அவர் வகிக்க ஆரம்பித்தார். தேசத்தின்வியாபாரத்தை சீர்ப்படுத்தும்உரிமை அரசர்களுக்கு உண்டென்ற காரணத்தை வைத்துக்கொண்டு அவர் கடற் சுங்க வரிகளை அதிகப்படுத்தினார்; அதுபோலவே இறக்குமதி வரிகளையும் விதிக்கலானார். நார்மன் அரசர்கள் செய்ததைப் போல, இராஜாங்கத்திற்குச் சொந்தமான காடுகளின் எல்லையை விசாலமாக்க முனைந்தார். கடைசியாக பெரிய அநர்த்தத்தை விளைவித்த வேறொரு காரியத்தையும் செய்தார். அதாவது, பழைய காலத்தில் இங்கிலண்டின் கடலோரமாயிருந்த நகரத்து ஜனங்கள் அரசருக்குத் தேவையான கப்பல்களையாவது அல்லது அதற்கு பதிலாக அரசரே கப்பல்களைக் கட்டிக் கொள்ளும் பொருட்டு குறித்த பணத் தொகையையாவது கொடுக்க வேண்டுமென்ற வழக்கம் இருந்து வந்தது. அது "கப்பல் பணம்" (Ship money) என்ற பெயரால் குறிக்கப்பட்டது. அதன் கருத்து என்னவென்றால், கடற்கொள்ளைக்காரர்களாலும் பகைவர்களாலும் அபாயம் நேர்ந்தால், அது முக்கியமாக கடலோரங்களிலிருந்த நகரங்களையே பாதிக்குமாதலால், அந்தப் பொல்லாங்கிலிருந்து தங்களை அரசர் காப்பாற்றும் பொருட்டு ஷை நகரங்களின் ஜனங்கள் வீதாசாரப்படி அரசருக்கு பணமோ கப்பலோ கொடுத்து உதவிவந்தனர். ச்சார்லஸ் அரசர் 'கப்பல் பணம்' என்ற வரியை விதித்தார். ஆனால் முதலில் அவர் அந்தத் தொகையைக், கொண்டு தேசத்தின் கப்பற்படையை விருத்தி செய்தாரேயன்றி, அதை அக்கிரம வழிகளில் செலவிடவில்லை. கொஞ்ச காலம் கழிந்த பின்னர், அவர் அந்த வரியைக் கடலோரமாக இல்லாத உள்நாட்டுப் பிரதேசங்களிலும் விதிக்கத் தொடங்கிவிட்டார். அந்த வரி பார்லிமெண்டின் அநுமதியின்றி வசூலிக்கப்பட்ட ஒரு புதிய வரியாகவே இருந்தது. பார்லிமெண்டின் அங்கத்தினர் பலர் அந்த வரியை விதிப்பது அக்கிரமச் செய்கையென்று கூறினர்; ஆனால் அப்பொழுது பார்லிமெண்ட் சபை கூட்டப்பட்டிருக்கவில்லையாதலால், அவர்களது ஆட்சேபனை பலிக்காமற் போயிற்று. அவர்களுள் ஒருவரான ஹாம்ப்டன்(Hampden)என்பவர் அந்த வரியைக் கொடுக்க மறுத்து

விட்டார். 1638-ல் அவருடைய வழக்கு விசாரணைக்கு வர, நியாயாதிபதிகள் அந்த வரி நியாயமானதென்றே தீர்மானித்தனர். ஸ்டுவர்ட் அரசர்களின் காலத்தில் அநேகமாய் நீதிபதிகள் நியாயத்தை கவனியாமல் அரசர்களுடைய கட்சியையே ஆதரித்து தீர்ப்புச் செய்து வந்தனர். தர்மதேவதையே ஸ்டுவர்ட் அரசர்களின் சிம்மாதனத்தின் முன் ஒரு பணிப்பெண் போல ஆய்விட்டதெனக் கூறுவதுண்டு. ஆனாலும் ஹாம்ப்டன் தைரியமாக வரி செலுத்த மறுத்ததனால், மற்ற எல்லா ஜனங்களுக்கும் ஒருவிதமான துணிபு ஏற்பட்டது. ச்சார்லஸின் அக்கிரமச் செய்கைகளையும் சுயேச்சாதிகாரத்தையும், சீர்கெட்ட துரைத்தன நிர்வாகத்தையும் எல்லோரும் ஒரு முகமாக வெறுத்தனர். பார்லிமெண்டாரின் சம்மதியின்றி ஜனங்களிடமிருந்து பணம் பிடுங்குவதற்காக ச்சார்லஸ் செய்த முயற்சிகள் அவரைக் கொண்டுபோய் ஆழ்ந்த படுகுழியில் வீழ்த்திவிட்டன. இதிலிருந்து இங்கிலீஷ்காரருடைய ஒரு சிறப்பான குணம் விளங்குகிறது. அவர்கள் அரசாங்கத்தாருடைய எவ்விதமான கொடுமைமையும் பொறுத்துக் கொள்வார்கள்; ஆனால், தங்களுடைய அல்லது தங்கள் பிரதிநிதிகளுடைய சம்மதியின்றி வரி விதிக்கும் அரசரை அவர்கள் எப்படியும் எதிர்த்தே தீருவார்கள்.

ச்சார்லஸினுடைய மதசம்பிரதாயங்களும், அவைகளையொட்டி அவர் அநுசரித்த முறைகளும் ஜனங்களுக்கு இன்னும் அதிகமான வெறுப்பை யுண்டாக்கின. ப்யூரிடன் மதத்தினருடைய செல்வாக்கு இங்கிலண்டில் வரவர அதிகரித்து வந்தது. ஆனால் ஜேம்ஸைக் காட்டிலும் ச்சார்லஸுக்கு அவர்கள்மீது அதிக த்வேஷம் இருந்து வந்தது. மேலும், பார்லிமெண்டில் அவரை எதிர்த்து வந்த தலைவர்களிற் பலர் ப்யூரிடன் மதத்தினராகவே இருந்தனர். அப்பொழுது இங்கிலண்டில் முக்கிய மதகுரு ஸ்தானத்தை லாட் (Laud) என்பவர் வகித்து வந்தார். அவர் ப்யூரிடன் மதத்தைப் போல அவ்வளவு தீவிரமாக இல்லாத ஆர்மீனியன் (Armenian) என்ற புதிய மதமுறையைப் பின்பற்றியவர். ச்சார்லஸ், லாடின் சிநேகிதராகவும் சிஷ்யராகவும் இருந்து அவரையே சகல விஷயங்களிலும் நம்பிவந்தார். ஆர்மீனியன் முறைக்காரர்கள் எப்பொழுதும், முடி சூடிய அரசருக்குக் கீழ்ப்படிந்தும், அவரிடம்

பயபக்தி விசுவாஸத்துடன் நடந்தும் வந்தமையால், ச்சார்லஸ் அந்தக் கட்சியினரிடம் பிரேமை கொண்டது இயற்கையே. லாடு என்ற முக்கிய மதகுரு சிறந்த படிப்பாளி; நற்குணம் வாய்ந்தவர்; ஊக்கமும் சிரத்தையும் உடையவர்; மதஸ்தாபனச் சீர்திருத்தத்தில் உண்மையாக உழைத்தவர். ஆனால் அவரிடம் பெருந்தன்மையான மனப்போக்கு இல்லை. சமயோசிதமாகவும், பிறருடைய மனவுணர்ச்சிகளைப் புண்படுத்தாமலும் நடந்துகொள்ளும் திறமை கிடையாது. ஆகவே ச்சார்லஸும் அவரும் சேர்ந்தது காற்றும் நெருப்பும் சேர்ந்தது போல முடிந்தது. லாடு என்பவருக்கு வாஸ்தவமான மதப் பற்றுதல் அதிகமாயிருந்தாலும், அவர் வெளிப்படையான சடங்குகளிலும் கூட, தேசம் முழுதும் ஒரே முறையை அநுஷ்டிக்க வேண்டும் என்ற குறுகிய அபிப்பிராயம் உடையவர். ஆதலால் மதச்சடங்குகளில் வேறு முறைகளைப் பின்பற்றிய ப்யூரிடன் மதத்தினருக்கும் அவருக்கும் முரண்பாடு ஏற்பட்டது; லாடு, காதலிக் மதத்தினருடன் சேர்ந்துகொண்டு ப்ராடெஸ்டன்ட் மதத்தை வேரறுக்க முயற்சிப்பதாகவே எல்லோரும் நினைத்தனர். அற்ப விஷயங்களில் அவர் செய்த சீர்திருத்தங்களால், ப்யூரிடன் மதத்தினருக்கு அவர் மீதும், அரசர்மீதும, பெருத்த சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. காதலிக் மதத்தையே மீண்டும் ஸ்தாபிக்க அவாகள் முயற்சிப்பதாக ஒரு வதந்தியும் உண்டாகிவிட்டது. மேலும் ச்சார்லஸினுடைய இராணியின் சுற்றத்தாரும் தோழிகளும் காதலிக் மதத்தையே ஆதரித்தது இந்த சந்தேகத்தை ஊர்ஜிதப் படுத்தியது. ஆனால் லாடும் ச்சார்லஸும் சேர்ந்து தம்மை எதிர்த்த அனைவரையும் ஒரே முட்டாக அடக்கிவிட யத்தனித்தனர். மதகுருமார்கள் தமது இச்சைப்படி ஜனங்களைத் துன்புறுத்தினர். லாடு ஏற்படுத்திய முறையைப் பின்பற்றாதவர் எல்லோரும் குற்றவாளிகளாகக் கருதப்பட்டு, ஹைகமிஷன் நீதிஸ்தலத்தால் விசாரிக்கப்பட்டு தண்டனை யடைந்தனர். ட்யூடர் அரசர்களால் நியமிக்கப்பட்ட நக்ஷத்திர கூட நீதிஸ்தலத்தாரும் அதே மாதிரி சிறிதும் தயை தாட்சண்ணியமின்றி, அரசருடைய இச்சைப்படி யெல்லாம் நடந்து, நியாய அநியாயத்தைக் கவனியாமலேயே தண்டனைகள் விதித்து வந்தனர். தேசம் முழுதும் கொடுமையான அடக்குமுறைக்கு உட்படுத்தப்பட்டது. மத

குருமார்களைக் கண்டித்து ஒரு நூல் இயற்றியதற்காக ஒருவர் சிறைப்பட்டு சவுக்கடி அடைந்து காதுகளையும் அறுக்கப் பெற்றார். நாடகப் பெண்களின் நடத்தையைப் பற்றி தூஷணையாக எழுதிய ஒரு சட்ட நிபுணர், நாடகமாடுவதில் ஆர்வம் கொண்டிருந்த அரசிக்குக் கோபமூட்டவே, அவரும் சிறைக்கு ஆளானார். இவ்வாறு பல கடுமையான முறைகளை அநுஷ்டித்து வந்த லாடு மதஸ்தாபனத்தின் பழைய மதிப்பை மீண்டும் ஸ்தாபித்து விட்டதாகப் பெருமை பாராட்டி வந்தார். ஸர் தாமஸ் வென்ட்வர்த் என்ற பார்லிமென்ட் தலைவரும் அவருடைய நண்பராயிருந்தார்.

வென்ட்வர்த் என்பவர் 'உரிமை விண்ணப்ப' சம்பந்தமாக ச்சார்லஸுடன் போராடியவர்களில் ஒருவர் என்பது முன்னரே குறிக்கப்பட்ட விஷயம். ஆனால் அவர் எப்பொழுதும் எலியட் முதலியோரைப்போல அரசருக்கு விரோதமான கட்சியைச்சேர்ந்தவரல்லர். பக்கிங்ஹாம் இறந்த பிறகு அவர் ஜனங்களுடைய கட்சியை விட்டு அரசாங்கத்தாருக்கு சாதகமாக வேலை செய்யலானார். அரசாங்கம் உறுதியாக நடக்க வேண்டுமென்றும், சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்றும் அவரும் விரும்பினாலும், அரசருடன் ஒத்துழைத்தே அவைகளைச் செய்துகொள்ளலாம் என்று அவர் கருதினார். தடபுடலாகக் காரியம் செய்யும் குணமுடைய பார்லிமென்டாரிடம் அவருக்குப் பிரீதி யில்லாமல் போய்விட்டது. ஆனால் ச்சார்லஸ் அரசரோ அவரை முற்றிலும் நம்பவில்லை. வென்ட்வர்த் எல்லா விஷயங்களையும் துரிதத்தில் தலைகீழாக மாற்றிப் புதிப்பிக்க வேண்டுமென்று யோசனை கூறுபவர்; அவ்வளவு அவசரமாக நடவடிக்கைகள் நடத்தியும் அடி முதல் நுனி வரையிலும் சீர்திருத்தங்கள் செய்யவும், நிர்வாகம் நடத்தவும், ச்சார்லஸ் தயாராக இல்லை. வென்ட்வர்த் சிறிது காலம் கழித்து அயர்லன்டு தேச பரிபாலனத்தை ஏற்றுக் கொண்டார். அங்கு அவர் சுறுசுறுப்பாகவும் கடுமையாகவும் அரசியல் நடாத்தி, அயர்லன்டு தேசத்தில் உறுதியான ஆட்சியை நிலை நாட்டி, கலகம் செய்தவர்களை தயையின்றி தண்டித்து அமைதியை உண்டுபண்ணி, தேசத்தின் வியாபாரம் கைத்தொழில் விவசாயம் முதலியவைகளை அபிவிருத்தி செய்தார். ஆனால் அவர் காட்டிய கடுமையும் பலவந்தத் தன்மையும் எல்லோ

ரும் நடுங்கும்படி செய்துவிட்டன. கேவலம் மிருகபலத்தினாலேயே தம்மையும் தமது செய்கைகளையும் எதிர்த்தவர்களை அடக்குவதான அவரது முறையை லாடும் பின்பற்றினர். அவர்களுடைய முறையை 'தரோ' (Thorough) என்று குறிப்பது வழக்கம். அதாவது தயைதாட்சணியம் பாராது அடக்கி அடியோடு வேரறுப்பது என்பது அதன் பொருள். அந்தக் கொடிய பரிபாலனத்தினால் அயர்லன்டில் பணிவும் சமாதானமும் நிலைத்தன. ஆனால் வெளிப்பார்வைக்கு அமைதி ஏற்பட்டது போலிருந்தாலும் உண்மையில் அயரிஷ் ஜனங்கள் அந்தப் பரிபாலனத்தை முற்றிலும் வெறுத்தபடியே சகித்து வந்தனர். லாட், வென்ட்வர்த் ஆகிய இருவரும் சேர்ந்து, மத விஷயத்திலும் இராஜீய விஷயத்திலும் மேலே குறிக்கப்பட்டபடி பலவந்தச் சீர்திருத்தம் செய்து வந்ததை யொட்டி, ஸ்காட்லன்டிலும் மதமாறுதல்கள் ஏற்பட்டன. ஸ்காட்லன்டின் குடிகள் இங்கிலீஷ் ப்ராடெஸ்டன்ட் மதத்தினரைக் காட்டிலும் முன் சென்று, அமிதமான கொள்கைகளைப் பின்பற்றியவர்கள். 1637-ல் ச்சார்லஸ், லாட் ஆகிய இருவரும் சேர்ந்து இங்கிலண்டில் அநுஷ்டானத்திலிருந்து வந்த மதச் சடங்குகளையும் பிரார்த்தனை முறையையும் ஸ்காட்லன்டிலும் அநுஷ்டிக்கவேண்டு மென்று உத்தரவிட்டார்கள். ஆனால் ஸ்காட்லன்டின் மதகுருமார்கள், பிரபுக்கள், பொது ஜனங்கள் ஆகிய எல்லோரும் அந்தக் கட்டளையை மீறத் துணிந்தனர். 1638-ல் ஸ்காட் பிரஜைகளெல்லோரும் "தேசியப் பத்திரம்" (National Covenant) ஒன்று தயாரித்து, தமது மத சுதந்திரத்தைக் குறைக்க ச்சார்லஸுக்கு அதிகாரம் இல்லை யென்று வெளிப்படையாகக் கூறிவிட்டனர். இவ்வாறு தனது ஆக்ஞையைத் தனது பிரஜைகள் மீறுவது அரசனுக்கு நிரம்பவும் அவமானகரமான காரியமல்லவா. ச்சார்லஸின் வசம் அப்பொழுது சேனை தயாராக இல்லை யாதலால், அவர் இங்கிலீஷ்காரருடைய உதவியை நாடினர். ஆனால் தம்மைப்போலவே சுதந்திரத்திற்காகப் போராடும் ஸ்காட் மக்களுக்கு விரோதமாக அரசருக்கு உதவ, இங்கிலீஷ்காரர்கள் முன்வரவில்லை. ஒரு சிறிய சேனையே ச்சார்லஸுக்குக் கிடைத்தது; அதுவும் பயிற்சி யற்றவர்கள் நிறைந்த சேனையாயிருந்தது. ஆனால் ஸ்காட் சேனையில் நல்ல வீரர்களும், மத சுதந்திரத்திற்காக உயி

ரையும் விடத் துணிந்தவர்களான பல தைரியசாலிகளும் நிறைந்திருந்தனர். 1639-ல் இரண்டு சேனைகளுக்கும் போர் நடந்தது. அதற்கு, முதல் ஸிஷப்களின் யுத்தம் (First Bishops' War) என்று பெயர், ஆனால் ச்சார்லஸ் தாம் எதிர்பார்த்தபடியே அபஜயமடைந்து கடைசியில் சமாதானம் செய்துகொண்டு திரும்பினார். ஸ்காட் மக்கள் வெற்றி பெற்றுத் திரும்பினர். ச்சார்லஸின் நிலைமை திண்டாட்டமாக முடிந்தது. அவரால் தமது சொந்த பிரஜைகளையே அடக்கமுடியாமற் போனது வெட்கக்கேடான காரியமாய்த் தோன்றியது. ஆகவே, அவர் அயர்லன்ஹிலிருந்து வென்ட்வர்த்தை வரவழைத்து; அவரை ஸ்ட்ரா/2போ2ர்ட் (Earl of Strafford) பிரபுவாகச் செய்து, சகல விஷயங்களையும் அவருடைய மேல்பார்வையில் ஒப்படைத்தார். வென்ட்வர்த் (அல்லது ஸ்ட்ரா/2போ2ர்ட்) உண்மையாகவே இராஜ்ஜிய நிர்வாக சக்தி வாய்ந்தவர். ச்சார்லஸின் அறிவு குழம்பியிருந்ததற்கு மாறாக அந்தப் பிரபுவின் புத்தி தெளிவாக இருந்தது. ஸ்காட் மக்களுடன் போர் புரியவேண்டுமானால் முதலில் பார்லிமென்டின் சம்மதியைப் பெறுவது அவசியம் என்பதை அவர் கண்டு, அச்சபையைக் கூட்டும்படி ச்சார்லஸுக்கு யோசனை கூறினார். அதற்கு முன்பு பதினொரு வருஷ காலம் பார்லிமென்டைக் கூட்டாமலேயே அரசாட்சி புரிந்துவந்த ச்சார்லஸுக்கு அந்த ஆலோசனை யுக்தமாகத் தோன்றவில்லை. ஆனால் வேறு வழியில்லாமையால், அவர் 1640-ல் பார்லிமென்ட் சபையைக் கூட்டினார். அப்பொழுது அந்தச் சபையில், 'கப்பல் பண' வரி கொடுக்க மறுத்து, கீர்த்தியடைந்தவரான ஹா2ம்ப்டன் என்பவரும், ஜான் பிம் (John Pym) என்பவரும் தலைவர்களா யிருந்தனர். அச்சபையினர், முதலில் ச்சார்லஸ் தமது அரசியல் முறையை மாற்றி யமைத்துக்கொண்டு, ஜனங்களுடைய குறைகளைத் தீர்த்தாலன்றி எவ்விதமான பண உதவியும் பெயராது என்று கூறிவிட்டனர். அதைக் கேட்ட ச்சார்லஸ் கோபமடைந்து சபையைக் கலைத்துவிட்டார். அந்தச் சபை அவருடைய ஆட்சியில் நான்காவது முறை கூடிய பார்லிமென்டாகும். அது வெகு சீக்கிரத்தில் கலைந்துபோன காரணத்தால் அது 'குறுகிய பார்லிமென்ட்' (Short Parliament) என்று குறிக்கப்படுகிறது. எனவே, பார்லிமென்டினிடம் பண உதவி

பெருமலேயே ஸ்காட் யுத்தத்தை நடத்தவேண்டியது அவசிய மாயிற்று. ஆனல் அந்தச் சமயம் ஸ்காட்சேனையே இங்கிலண்டின் மீது படையெடுத்து வந்தது; சில இங்கிலீஷ்காரர்கள் அவர்களுக்கு நல்வரவும் கூறினர்; ஏனெனில் ச்சார்லஸுக்கும் ஜனங்களுக்கும் அவ்வளவு பகைமை இருந்து வந்தது. ச்சார்லஸின் சேனை எதிரி களுடன் போர் புரிந்ததில், முன்போலவே தோற்று ஓடவேண்டிய தாயிற்று. கடைசியாக ச்சார்லஸ் ஸ்காட்சேனையின் யுத்தச்செலவு களைக் கொடுத்து விடுவதாக ஒப்புக்கொண்டு, பகைவருடன் சமா தானம் செய்துகொண்டார். அந்த யுத்தத்திற்கு இரண்டாவது பிஷப்கள் யுத்தம் (Second Bishops' War) என்று பெயர்; அதன் பயனக ஸ்காட் மக்கள் பூர்த்தியான சுதந்திரத்தை யடைந்துவிட்ட னர்; பெயருக்கு மாத்திரம் ச்சார்லஸ் அவர்களுக்கு அரசாக இருந் தாரேயன்றி அவருடைய சொல்லுக்கு எள்ளளவும் மதிப்பு இல்லா மல் போய்விட்டது. பதினெரு வருஷ காலம் சுயேச்சாதிபத்தி யம் நடத்தியதில், அவர் தொட்டதெல்லாம் விபரீதமாகவே முடிந் தது.

(3) அரசருக்கும் பார்லிமேன்டுக்கும் நடந்த உள்நாட்டுக் கலகம் : ச்சார்லஸின் முடிவு:—ஸ்காட் சேனைக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைச் சேர்க்கும் பொருட்டுத் தமது விருப்பத் திற்கு மாருகவே, ச்சார்லஸ் மறுபடியும் பார்லிமென்ட் சபையை அழைக்க வேண்டியதாயிற்று. 1640-ல் கூடிய பார்லிமென்ட் இங் கிலண்டு தேச சரித்திரத்தில் மிக மிக முக்கியமானது; அந்தச் சபை அநேக வருஷ காலம் வரையில் கலையாமல் இருந்தமையால், அது "நீடித்திருந்த பார்லிமென்ட்" (Long parliament) என்று குறிக்கப்படுகிறது. இங்கிலீஷ்காரரின் உரிமைகளையும் உடை மைகளையும் பாதுகாத்த காரணத்தால் அந்தப் பார்லிமென்ட சபைக்குப் பெருத்த கௌரவமும் அழியாப் புகழும் ஏற் பட்டன. நீடித்திருந்த பார்லிமென்ட் கூடியவுடன், முதலாக அரசருடைய அக்கிரமச் செய்கைகள் கண்டிக்கப்பட்டன. ச்சார்லஸ் எதையும் செய்ய வல்லமையற்றவராய் அச்சபைக் கடங்கி எங்கி உட்கார்ந்து போனர். முதலாக பார்லிமென்டார் அரசருக்கு உடந் தையாயிருந்தவர்களைக் கண்டித்தார். முன்னர் ஒரு முறை பார்லி

மென்டின் தலைவராயிருந்து பிறகு அரசரது கட்சியைச் சேர்ந்த ஸ்ட்ராஃபோர்ட் பிரபுவின் மீது குற்றம் சுமத்தப்பட, அந்த வழக்கு லார்ட்ஸ் சபையின் தீர்மானத்திற்கு வந்தது. ஆனால் சட்டப்படி அவர் எவ்விதமான குற்றமும் செய்ததாக சாட்சியம் ஏற்படவில்லை. ஏனெனில் அப்பொழுதிருந்த சட்ட முறைப்படி இராஜத்துரோகம் என்பது அரசரையே எதிர்ப்பதென்று பொருள்பட்டது; ஆனால் ஸ்ட்ராஃபோர்ட் பிரபுவோ அரசருக்கு சாதகமாகவே உழைத்து வந்தவர். ஆகவே, சட்டப்படி அவரை வீழ்த்த முடியாதென்பதைக் கண்ட பார்லிமென்டார் அவரை எவ்விதமேனும் தொலைத்துவிட நிச்சயித்துக்கொண்டு ஒரு தந்திரம் செய்தனர். தங்களுக்கு இருந்த ஏதோ ஒரு விசேஷ அதிகாரத்தை ஆதாரமாகக் கொண்டு, அவர்கள் "ஸ்ட்ராஃபோர்ட் பிரபு இறந்தே யாக வேண்டும்" என்று ஒரு தீர்மானம் செய்துவிட்டனர். காரணம் கூறாமல் ஒருவரை மரண தண்டனைக்கு ஆளாக்கும் முறைக்கு பில் ஆஃப் அட்டெயின்டர் (Bill of Attainder) என்று பெயர். அதாவது பார்லிமென்டார் எவ்வித சட்டத்தையும் இயற்றலாம் என்ற ஆதாரத்தைக் கொண்டு, அந்த அதிகாரத்தை துராகிருதமாய் உபயோகப்படுத்தி ஓர் அரசாங்க உத்தியோகஸ்தரை, எவ்வித விசாரணையும் செய்யாமலேயே, திடீரென்று வேரறுத்துவிடும் முறையே அது. பார்லிமெண்டின் ஒரு பகுதியான காமன்ஸ் சபையில் அந்த மசோதா சுலபமாக நிறைவேறிவிட்டது. மற்றொரு பகுதியான லார்ட்ஸ் சபையில் சிறிது தாமதம் ஏற்பட்டது. அப்பொழுது யாரோ சிலர் பார்லிமென்டுக்கு விரோதமாக சதியாலோசனை செய்த சங்கதி வெளிப்படவே, அதைக் கண்டு நடுங்கிய லார்ட்ஸ் சபையார் அந்த மசோதாவை அங்கீகரித்து விட்டனர். கடைசியில் அது அரசருடைய கையெழுத்தைப் பெறவேண்டியிருந்தது. அதுவரையில் தமது நண்பரின் சிரத்திலிருந்த ஓர் உரோமத்திற்குக்கூட அபாயம் நேரிடாமல் காப்பாற்றிவந்த ச்சார்லஸ் தேசத்து மகா ஜனங்களின் விருப்பத்தை மீறத் துணியாமல் தமது பொருட்டு அந்தரங்க சுத்தியாய் உழைத்துவந்த ஸ்ட்ராஃபோர்ட் பிரபுவின் மரண உத்தரவில் கையெழுத்துச் செய்துவிட்டார். "அரசர்களது மன உறுதியில் நம்பிக்கை வைப்பதேகூடாது"

என்று வாய்விட்டுக் கூறினர் ஸ்ட்ரா2போர்டு பிரபு. எனினும் 1641-ல் அவர் தூக்கிலிடப்பட்டு உயிர்துறந்தார். உண்மையில் ஸ்ட்ரா2போர்டு பிரபு பார்லிமெண்டுக்குப் பெரிய பகைவரல்லர்; பார்லிமெண்டின் சம்மதியைப் பெற்றே அரசுபுரிய வேண்டும் என்று அவர் ச்சார்லஸுக்கு அடிக்கடி உபதேசித்து வந்தவர். ஆனால் தாமாகவும் அறியாது, சொல்வதையும் தெரிந்துகொள்ளாது நடந்துவந்த ச்சார்லஸின் மதியீனத்தினால் ஸ்ட்ரா2போர்டு உயிரிழக்க நேர்ந்தது. அவரிடம் இராஜ்ஜிய நிர்வாகத் திறமை ஏராளமாக இருந்தது. அவருடன் ஒத்துழைத்த முக்கிய மதகுருவான லாடு சிறையில் அடைக்கப்பட்டார்.

"நீடித்திருந்த பார்லிமெண்ட்" சபையினர் இவ்வாறு ஆரம்பத்திலேயே ஒருயிரைக் கொள்ளைகொண்டனராலும், பலவகைகளில் அவர்கள் நல்ல சீர்திருத்தங்கள் செய்தனர். ச்சார்லஸின் சுயேச்சாதிபத்தியத்திற்கு முக்கிய சாதனங்களாயிருந்துவந்த ஹைகமிஷன் நியாயஸ்தலம், நக்ஷத்திர கூட நீதிஸ்தலம் முதலியவைகள் அழிக்கப்பட்டன. 'கப்பல் பணம்' முதலிய அநியாய வரிகள் தள்ளுபடி செய்யப்பட்டன. மேலும், பார்லிமெண்ட் சபையைக் கூட்டாமலேயே ச்சார்லஸ் பதினொரு வருஷகாலம் அரசியற்றி வந்ததை உத்தேசித்து, குறைந்தது மூன்று வருஷத்திற் கொருமுறையாவது பார்லிமெண்ட் சபை கூடவேண்டும் என்ற ஒரு புதிய சட்டம் செய்யப்பட்டது. மேலும், அரசர் தமது இச்சைப்படி பார்லிமெண்ட் சபையைக் கலைத்து வந்ததைத் தடுக்க எண்ணி, தங்களுடைய சம்மதியின்றி அரசர் சபையைக் கலைத்தல்கூடாது என்ற விதியைச் செய்து, அரசாது விஷப்பல்லையும் பிடுங்கிவிட்டனர். இவ்வாறு ச்சார்லஸின் இராஜ்யச் சீர்கேடுகளைக் களைந்தெறிவதில் பார்லிமெண்டார் ஒற்றுமையாக நடந்து, பிம் ஹாம்ப்டன் என்ற தலைவர்களுக்குக் கீழ்ப்படிந்து, சுயேச்சாதிபத்தியத்தை வேரறுக்க முனைந்தனர்.

இராஜ்ய முறைகளை ஒழுங்குப்படுத்திய பின்னர் பார்லிமெண்டார் மதச் சீர்திருத்தம் செய்ய எத்தனித்தனர். அந்தச் சந்தர்ப்பத்தில் சிறிதளவு பிரயாசை ஏற்பட்டது. ஏனெனில், அந்தச் சபைக்குள்ளேயே பிளவு தோன்றலாயிற்று. 1641-ல் பிம், ஹாம்ப்டன் ஆகிய இருவரும் சேர்ந்து அதுவரையில் இருந்த மத ஸ்தாபனத்தை

பழைய உருவமே தெரியாதபடி வேருடன் பிடுங்கி எறியவேண்டுமென்று கருத்துடன் ஒரு சட்டம் கொணர்ந்தனர். அதற்கு ரூட் அன்ட் ப்ரான்ச் சட்டம் (Root and Branch bill) என்றுபெயர். வேரிலிருந்து கிளைவரையில் பிடிங்கி எறிவது என்று அதற்குப் பொருள். ஆனல் பார்லிமென்டிலிருந்த சிலர் அவ்வளவு மகத்தான மாறுதல்களைச் செய்ய விரும்பவில்லை. அற்பசொற்பமான சீர்திருத்தங்களைச் செய்ய எல்லோரும் விரும்பினரேயன்றி, ஒரேயடியாக, பூர்த்தியான மாறுதல்களை கட்டாயமான முறையில் அமுலுக்குக் கொண்டுவருவதற்கு சிலரே பிடிவாதமாக இருந்தனர். ஹைட், பாக்லன்ட் (Hyde and Falkland) என்ற இரண்டு மிதவாதிகள் ஷெமசோதாவை எதிர்த்தனர். அதாவது, அதுவரையில்அரசரை எதிர்ப்பதில் ஒற்றுமையாக இருந்துவந்த சபை இரண்டு பட்டுப்போயிற்று. பிம், ஹாம்டன் ஆகிய இருவரும் அமிதக் கட்சிக்கும், ஹைட், பாக்லன்ட் ஆகிய இருவரும் மிதவாதக் கட்சிக்கும் தலைவர்களாயினர்.

ச்சார்லஸ் சாமர்த்தியமான அரசராயிருந்திருந்தால், தமது விரோதியான பார்லிமென்டில் பிளவேற்பட்டதைக் கொண்டு தமது பலத்தை அதிகப்படுத்திக் கொண்டிருப்பார். ஆனல் தெய்வம் அவருடைய பக்கத்தில் இருக்கவில்லையென்றே கருதவேண்டும். அந்த நிகழ்ச்சியும் அவருக்கு விரோதமாகவே முடிந்தது. 1641-ல் அவர் ஸ்காட்லன்டிற்குச் சென்றிருந்தபொழுது, அவாது நண்பர்களிற் சிலர் ஒரு சதியாலோசனை செய்தது வெளியாயிற்று. அதனல் ச்சார்லஸின்மீது ஜனங்களுக்கிருந்த சந்தேகம் அதிகப்பட்டது. அதே வருஷத்தில் அயர்லன்ட் தேசத்தில் ஒரு பெரிய கலகம் நடந்தது. ஸ்ட்ராபோர்ட் பிரபு அந்த தேசத்தை உறுதியாக ஆண்டுவந்த வரையில் அயரிஷ் மக்கள் அடங்கியிருந்தனர். அவர் இங்கிலண்டிற்குத் திரும்பி வந்த பிறகு, அதுவரையில் பெருத்த சுமையைத் தாங்கியவர்கள்போல இரண்டு அயரிஷ்மக்கள் சரேலென்று கிளம்பி இங்கிலீஷ் அரசாட்சிக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்தனர். முக்கியமாக, இங்கிலீஷ்காரர் குடியேறியிருந்த அல்ஸ்டர் மாகாணத்தில் வசித்த அயரிஷ் ஜனங்கள் பெரிதும் பொல்லாங்கிழைத்து வந்தனர். ஸ்ட்ராபோர்ட் கிலநாட்

டிய அமைதி அடியோடு போய்விட்டது. ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் பலர் கொல்லப்பட்டுப் போனதாகவும் ஒரு வதந்தி இங்கிலண்டிற்கு எட்டியது. அரசரும் அவருடைய மனைவியும் சேர்ந்து அயரிஷ் கிளர்ச்சிக்காரருக்கு ஆதரவு அளித்ததாகவும் பலர் நம்பினர். எனவே ச்சார்லஸின்மீது, பொது ஜனங்களுக்கு அளவிட இயலாத கோபம் பெருகியது. அப்பொழுது அயர்லன்டிலிருந்து வந்த செய்தி உண்மையானதா அல்லவா என்பதைக்கூட அவர்கள் ஆராய்ந்து பார்க்கவில்லை.

"நீடித்திருந்த பார்லிமெண்ட்" 1641-ல் கூடியபொழுது அயரிஷ் கிளர்ச்சியினால் அரசருக்கு ஏற்பட்டிருந்த அபவாதத்தை ஆதாரமாகக்கொண்டு அவரை எதிர்க்க வழி ஏற்பட்டது. பிம், ஹாம்ப்டன் முதலிய அமிதக் கட்சியினர் 'க்ராண்ட் ரிமான்ஸ்ட்ரான்ஸ்'(Grand Remonstrance) அல்லது மகத்தான கண்டனம் என்ற ஒரு பத்திரம் தயார் செய்து, அதில் ச்சார்லஸ் ஆதியிலிருந்து செய்திருந்த அக்கிரமச் செய்கைகளை யெல்லாம் எடுத்துக்காட்டி அவர் அரசாங்கத்தின் அடிப்படையான சட்டங்களையும் அநுஷ்டானங்களையும் அடியோடு கவிழ்த்துவிடக் கருதியதாகக் குற்றம் சுமத்தி தங்களுடைய நம்பிக்கையைப் பெற்ற மந்திரிகளையே அரசர் ஏற்கவேண்டுமென்றும், மதஸ்தாபனத்தில் சில முக்கியமான சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமென்றும் கூறி வற்புறுத்தியிருந்தனர். ஹைட், பாக்லன்ட் முதலிய மிதவாதிகள் அதை எதிர்த்தனர். ஆயினும், சொற்பமான மெஜாரிடியினரால், அந்தப் பத்திரம் பார்லிமெண்டு சபையில் நிறைவேற்றப் பட்டுப்போயிற்று. அப்பொழுது பார்லிமென்டில் தனித்தனியான இரண்டு கட்சிகள் இருந்தன. இரண்டு கட்சிகளும் ஏறக்குறைய சமமான ஆதரவைப் பெற்றிருந்தன. அதாவது, ஹைட், பாக்லன்ட் ஆகிய இருவரும் அரசருடைய சுயேச்சாதிகாரத்தையும், லாட் செய்த மதமாறுதல்களையும் எதிர்த்தனராலும், அவர்கள் பேதாபேதமின்றி எந்த விஷயத்திலும் அரசரை எதிர்ப்பதைத் தமது கடமையெனக் கொள்ளாமல், ஏற்கனவே இருந்துவந்த அரசியல் முறையையும் மத அமைப்பையும் நிலைநிறுத்த வேண்டுமென்னும் கொள்கையைக் கடைப்பிடித்தவர்கள். ஆனால் பிம், ஹாம்ப்டன் முதலியவர்கள் ச்சார்லஸ் அரசர்

ஒருநாளும் திருந்தமாட்டாரென்ற நம்பிக்கையைக் கொண்டு, அவரை எதிர்த்து வெற்றிபெற்று ஜனசுதந்திரத்தையும் செங்கோலரசையும் ஸ்தாபித்துவிட வேண்டுமென்ற அபிப்பிராயங் கொண்டார்கள். இராஜதந்திரமென்பதே சிறிதுமற்ற ச்சார்லஸ் அப்பொழுது இன்னொரு தவறையும் புரிந்து தமக்கு சாதகமாயிருந்தவர்களும் தம்மிடம் வெறுப்பைக் கொள்ளும்படி செய்துகொண்டார். 1642-ல் அவர் பிம், ஹாம்ப்டன் முதலான ஐந்து பார்லிமென்ட் அங்கத்தினரின்மீது இராஜத்துரோகக் குற்றம் சுமத்தி, அவர்களைச் சிறைப்படுத்தும்பொருட்டு பார்லிமென்ட் சபைக்கு வந்தார். ஆனால் அவர் வரப்போவதையறிந்த அவ்வைவரும் வெளியேறிவிட்டனர். மற்ற அங்கத்தினர்களெல்லோரும் பார்லிமென்டின் விசேஷ உரிமைகளை அரசர் அவ்வாறு அவமதித்ததற்காக அவரைக் கடிந்துகொண்டு, "சுதந்திரம், சுதந்திரம்" என்று கூச்சலிட்டனர். "பட்சிகள் பறந்தோடிவிட்டன" என்று கூறிக்கொண்டே ச்சார்லஸ் திரும்பினார். அவருடைய முயற்சி பயனற்றுப் போனதுமன்றி அவருக்கு அபவாதத்தையும் உண்டாக்கியது. பார்லிமென்டுக்கும் அரசருக்கும் இருந்துவந்த மனக்கசப்பும் கொதிப்பும் உச்சநிலைமை யடைந்துவிட்டன. இருதிறத்தாரும் வாளேந்திப் போர் புரியும் தருணம் நெருங்கிவிட்டது. ச்சார்லஸ் லண்டன்நகரத்தையும் தமது அரண்மனையையும் தமது பகைவர் வசத்தில் விட்டு வேறிடத்திற்குச் சென்றுவிட்டார். அது பெரிய முட்டாள்தனமான காரியமாக முடிந்தது. ஏனெனில் இராஜ்ஜியத்தின் தலைமைப்பட்டணம் பார்லிமென்டின் வசப்பட்டுப்போகவே, அரசருடைய செல்வாக்குக்குப் பெரிய பங்கம் ஏற்பட்டுப்போயிற்று. பார்லிமென்டார் புதிய புதிய சட்டங்களை இயற்றி அவைகளுக்கு அரசருடைய சம்மதியைக் கோரி வந்தனர். கடைசியாக ஒரு பத்திரம் தயாரித்து அதில் "பத்தொன்பது நிபந்தனைகளை" கண்டு, அதை அரசருக்கு அனுப்பினர். அதை அரசர் அங்கீகரித்தால் அவருடைய அதிகாரம் முழுதும் அடியோடு போய்விடுமாதலால், பிறகு அவர் தலையாட்டிக் கொண்டு கொலுப்பதுமைபோல இருக்கும் நிலைமையே அவருக்கு ஏற்படும். அதற்கு எவர்தான் இணங்குவர். ச்சார்லஸ் அரசர் தமது பிரஜைகளே தம்மை அவ்வாறு ஆட்டி வைத்ததைக்

கண்டு சிறிதும் பொருதவராய் 1642-ல் ஆகஸ்ட் மாதத்தில் நாட்டிங்ஹாம் (Nottingham) என்ற இடத்தில் தமது கொடியை நாட்டி, போருக்கு ஆயத்தமானார். ஒரே தேசத்திற்குள் அரசருக்கும் அவருடைய பிரஜைகளுக்குமே போர் ஆரம்பமாயிற்று. அது "கிரேட் ரிபெல்லியன்" அல்லது முதல் ஸிவில் வார் என்று குறிக்கப்படுகிறது; அபாரமான உள்நாட்டுக் கலகம் என்பது அதன் பொருள். அரசருடைய கட்சியும், பார்லிமென்டின் கட்சியும் அநேகமாய் சரிசமானமாக இருந்தமையால், அந்தப் போர் நீடித்தும் கடுமையாகவும் நடந்தது. இங்கு முக்கியமான ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. ச்சார்லஸினுடைய சீர்கேடான ஆட்சியை எல்லோரும் வெறுத்து வந்தது உண்மையானாலும், பலர் அவருடைய கட்சியில் சேர்ந்து கொண்டனர். ஏனெனில் தங்களது மன்னர் என்ற இயற்கையான பாசம் ஜனங்களுள் பலருக்கு இருப்பது சகஜமே. மேலும் பார்லிமென்ட் கட்சியினர் அவசரப்பட்டு தலைகீழான மாறுதல்களைச் செய்ய முனைந்தது பலருக்கு சம்மதியாயில்லை. இங்கிலீஷ்காரர்கள் நிதானமாகத் திருத்தமடையும் குணமுடையவராதலால், திடீரென்று விபரீதமான மாறுதல்கள் செய்வதிலும் புரட்சிகளிலும் அவர்களுக்கு எப்பொழுதும் விருப்பம் ஏற்படுவதில்லை. பார்லிமென்ட் கட்சியினரோ பழைய முறைகளை வேருடன் பெயர்த்து தெறிந்துவிட முயற்சித்தனர். ஆதலால், ஹைடு, பாக்லன்டு முதலிய மிதவாதிகள் அரசருடைய அக்கிரமங்களைக் கண்டு எவ்வளவுதான் வெறுப்படைந்தாலும், அந்த அபாயகாலத்தில் அவரைக் கைவிடாமல் அவரது கட்சியில் சேர்ந்து கொண்டனர். காமன்ஸ் சபையாரில் மூன்றிலொரு பங்கினரும் லார்டு சபையில் அரைப்பங்கினரும் அரசரது கட்சிக்கு வந்து விட்டனர். அரசரது கட்சி பார்லிமென்டின் கட்சி ஆகிய இரு கட்சியாரும் நியாயமான அரசாங்கத்தை நிலைநாட்டவே போர் புரிவதாகக் கூறிக்கொண்டனர். எனவே ஏறக்குறைய ஒரேவிதமான அபிப்பிராயத்தோ டிருந்தவர்களே இரண்டு கட்சிகளிலுமாகப் பிரிந்து நின்றனர். ஜனங்களுடைய இராஜ பக்தியொன்றே அரசருக்கு சாதகமாக நின்றது. அவருடைய சீர்கேடான ஆட்சியும் அவரிடம் பலர் கொண்டிருந்த அவநம்பிக்கையுமே பார்லிமென்டுக்கு

அநுகூலமாயிருந்தன. இராஜீய விஷயங்களில் இரண்டு கட்சிக்காரர்களுக்குள்ளும் சொற்ப வேற்றுமையே இருந்தது; ஆனால், மத விஷயத்தில் மாத்திரம் அவர்களுக்குள் விசேஷமான அபிப்பிராய பேதம் இருந்து வந்தது. ப்யூரிடன் மதத்தை யாதரித்தவர்கள் பார்லிமெண்டின் கட்சியிலும், எலிஸபெத்தின் மத ஏற்பாட்டை அநுசரித்தவர்கள் அரசரது கட்சியிலும் சேர்ந்தனர். காதலிக் மதத்தைச் சேர்ந்த சொற்பத் தொகையினர் ச்சார்லஸின் பக்கமே சேர்ந்தனர். ஆதலால், ஒருவரோடொருவர் போர் புரிய முன் வந்த இவ்விரு கட்சிகளுக்குள்ளும் பல விஷயங்களில் ஒற்றுமை இருந்தது; ஆனால் பார்லிமெண்டின் கட்சியினர் சற்று வேகமாக முன் சென்றனர்; மிதவாதக் கட்சியினர் நிதானமாகச் செல்ல முயன்றனர். பார்லிமெண்டின் கட்சியில் பல பெரிய பிரபுக்கள் இருந்தனர்; அரசருடைய சேனையில் சாமானிய ஜனங்கள் பலர் இருந்தனர். இங்கிலண்டின் தென்பாகம்—லண்டன் நகரத்தைச் சுற்றியுள்ள பிரதேசங்கள் — பார்லிமெண்டின் வசத்திலிருந்தது. வேல்ஸ் மாகாணம், இங்கிலண்டின் வடபாகம் ஆகியவைகள் அரசரை ஆதரித்தன. பார்லிமெண்டின் வசமிருந்த பிரதேசங்களே செல்வமும் வளப்பமும் பொருந்தியவை. பார்லிமெண்டுக்கே அதிகமான இட வசதியும் பொருள் வசதியும் இருந்தன. அரசரது கட்சியினருக்கு 'காவலியர்ஸ்' (Cavaliers), அல்லது குதிரை வீரர்கள் என்று குறிக்கப்பட்டனர். ப்யூரிடன் மதத்தினர் தலை மயிரை ஒட்டக் கத்தரித்துக்கொள்வது வழக்கமாகையால் அவர்கள் ரௌண்ட்ஹெட்ஸ் (Roundheads) அல்லது உருண்டைத் தலையர் என்று குறிக்கப்பட்டனர். ச்சார்லஸினுடைய மருமகரும், 'எலக்டர் பாலடைன்' ப்ரெடரிக்கின் புதல்வருமான ருபர்ட் (Rupert) என்பவர் அரசரது சேனைக்குத் தலைமை வகித்தார்; பார்லிமெண்டின் சேனைக்கு எஸ்ஸெக்ஸ் பிரபு தலைமை வகித்தார். முதலில் ச்சார்லஸ் தாமே லண்டன் நகரத்தின்மீது படை யெடுத்துச் செல்லலாமென்று யோசித்தார்; ஆனால் எஸ்ஸெக்ஸ் பிரபுவே சேனைகளோடு வந்து எட்ஜ் ஹில் (Edge Hill) என்ற இடத்தில் போர் தொடங்கினர். ரூபர்ட் முதலியவர்கள் போரில் அதிகமான தேர்ச்சி யுடையவர்களாதலால், அங்கு அர



அரசர்வசத்திலிருந்த
பிரதேசங்கள்.
பார்லிமென்டின்
வட
கடல்
யார்க்
அயரிஷ் கடல்
பிரஸ்டன்
வாரிங்டன்
லண்டன்
இங்கிலிஷ் வாய்க்கால்


(353-வது பக்கம்)

சருக்கே வெற்றி ஏற்பட்டது; அதற்குப் பிறகு அரசர் துணி படைந்து தென் திசையை நோக்கிச் சென்றார். 1643-வது வருஷத்தில் அவருக்குப் பல இடங்களில் வெற்றிக்குமேல் வெற்றிகள் ஏற்பட்டன. மேலும் அவ்வருஷத்தில் பிம், ஹாம்டென் ஆகிய இருவரும் இறந்தது பார்லிமெண்டின் கட்சிக்குப் பெரிய நஷ்டமாய் முடிந்தது. ஆனால் அக்கட்சியினர் தைரியத்தைக் கைவிடாமல் தமது சேனைகளை அதிகப்படுத்தலாயினர். நாலைந்து இடங்களில் ச்சார்லஸுக்கு வெற்றி கிடைத்ததிலிருந்து, போர் எவ்விதம் முடியுமோவென்று பலரும் சந்தேகிக்கத் தொடங்கினர். ஆனால் சீக்கிரத்தில் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. 1643-ல் ஸெப்டம்பர் மாதத்தில் ந்யூபரி (Newbury) என்ற இடத்தில் நடந்த போரில், அரசரது சேனை தோற்றுப்போய்விட்டது. பாக்லண்டும் அவ்விடத்தில் இறந்துபோனார். ந்யூபரியில் அடைந்த ஜெயத்திலிருந்து பார்லிமெண்டாருக்கு தைரியமும் வீராவேசமும் கிளம்பிவிட்டன. அப்பொழுது இரண்டு கட்சியினரும் அன்னியநாட்டிலிருந்து உதவி பெறுவதற்கு முயற்சிசெய்தனர். ஆனால், ஐரோப்பாவில் அப்பொழுது முப்பது வருஷப்போர் மும்முரமாக நடந்துகொண்டிருந்தமையால், ஐரோப்பிய அரசர்கள் இங்கிலண்டு தேசத்துச் சண்டையில் கலந்துகொள்ள அவகாசமில்லாமல் போய்விட்டது. இல்லையாயின், அன்னியர் தலையிடுவதால் எந்தக் கட்சியினருக்கு அதிக அனர்த்தம் விளைந்தாலும், அத்தனையும் இங்கிலண்டு தேசத்திற்கே கேடாய் முடிந்திருக்கும். ஆனாலும் ச்சார்லஸ் அயரிஷ்காரருடைய உதவியை நாடினார்; பார்லிமெண்டாரோ ஸ்காட் மக்களின் உதவியைக்கோரினர். ஸ்காட் ஜனங்கள் ஏற்கனவே ச்சார்லஸ்மீது அதிருப்தியடைந்திருந்தது தெரிந்தவிஷயம். ஆனாலும் இங்கிலீஷ் ஜனங்கள் ப்ரெஸ்பிடீரியன் முறையைப் பின்பற்றுவதாக வாக்களித்தாலன்றி எவ்வித உதவியும் செய்ய தம்மால் இயலாதென்று ஸ்காட் தலைவர்கள் கூறிவிட்டனர். பார்லிமென்ட்கட்சியினர் அதற்கு இணங்கி ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். அதற்கு ஸாலம் லீக் அன்டு கவனன்ட் (Solemn league and Covenant) என்று பெயர். அந்தக் கரணசுத்தியானகூட்டும் உடன்படிக்கையும் என்பது அதன்பொருள். ஸ்காட் சேனை அவர்களுக்கு நல்ல பக்கபலமாயிற்று. 1644-ல் மறு

படி போர் தொடக்கமாயிற்று. ஜூலை மாதத்தில் **மார்ஸ்டன் மூர் (Marston Moor)** என்ற இடத்தில் மிக முக்கியமான ஒரு யுத்தம் நடந்தது. அப்பொழுது பார்லிமெண்டின் கட்சியில் ஸ்காட் சேனை சேர்ந்திருந்ததைக் கண்டு வேறு சில பராக்கிரமசாலிகளும் அதில் சேர்ந்துகொண்டிருந்தனர். இங்கிலண்டினது கிழக்குப் பிரதேசங்களில் பார்லிமெண்டின் கட்சிக்கு பலமான ஆதரவு இருந்துவந்தது; அங்கிருந்த ஜனங்கள் 'கிழக்கு நாட்டார் சங்கம்' (Eastern Association) என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்தி, ப்யூரிடன் வீரர்கள் பலரைப் போருக்கு அனுப்பிவந்தனர். அந்தச் சங்கத்தில் **ஆலிவர் க்ராம்வெல் (Oliver Cromwell)** என்ற ஒரு வீரர் தமது இணையற்ற சௌரிய புஜபல பராக்கிரமத்தினால் மகா கீர்த்திவந்தராய் விளங்கினார். க்ராம்வெலின் சேனாவீரர்களும் பார்லிமெண்டின் கட்சிக்கு உதவியாக வந்து சேர்ந்தார்கள். மார்ஸ்டன் மூர் என்ற இடத்தில் நடந்த யுத்தத்தில் முதலில் அரசருக்கே வெற்றி கிடைக்கலாமெனத் தோன்றியது. ஆனால் ஸ்காட் சேனையின் சமயோசிதமான உதவியினாலும், க்ராம்வெலின் வீரத்தினாலும் அந்தப் போர் பார்லிமெண்டின் கட்சிக்கே வெற்றியாக முடிந்தது. ரூபர்ட் மிக உக்கிரமாகப் போர் புரிந்தாரானாலும், க்ராம்வெலின் வீரர்கள் ஜெயமடைந்துவிட்டனர். இங்கிலண்டின்வடபாகம்முழுதும் பார்லிமெண்டினதுவசமாயிற்று.

ஆனால் மார்ஸ்டன் மூர் யுத்தத்தோடு, போர் முடிவடைவதாகத் தோன்றவில்லை. ஏனெனில் மறுபடியும் சிறிதுகாலம் ச்சார்லஸுக்கு வெற்றி கிடைத்துவந்தது. ந்யூபரி என்ற இடத்திலேயே இரண்டாவது முறை நடந்த ஒரு யுத்தத்தில் பார்லிமெண்டின் சேனை ஜயமடையவில்லை. அதே சமயத்தில் ஸ்காட்லண்டில் **மாண்ட்ரோஸ் பிரபு (Earl of Montrose)** என்பவர் ப்யூரிடன் கட்சியினருக்கு விரோதமாகக் கிளம்பினார். பார்லிமெண்ட் கட்சியினர் தமது சேனை தோற்றுப்போனதைக் கண்டு பெரிதும்ஏமாற்றமடைந்தனர். எஸ்ஸெக்ஸ் முதலிய சேனைத் தலைவர்களின் மீது சிலர் குறை கூறினர். வேறு சிலர் பார்லிமெண்டின் சேனைக்குப் போதிய பயிற்சி இல்லையென்று கூறினர். ஆதலால் பார்லிமெண்ட் கட்சியில் மறுபடியும் ஒரு பிளவேற்பட, அப்பொழுது அமிதவாதக் கட்சியினர் செல்வாக்குடையவரா யிருந்தனர். அவர்கள் பல முக்கியமான

முன்னேற்றச் சீர்திருத்தங்களைச் செய்யலாயினர். அதுவரையில் சிறையில் வைக்கப்பட்டிருந்தவரான லாட் என்பவர் 1645 ல் தூக்கிலிடப்பட்டு உயிர் துறந்தார். அது அநாவசியமான கொடிய செய்கை என்பதைப் பலர் உணரவில்லை. மேலும் அமிதவாதக் கட்சியினரது முயற்சியின் பயனாக நியூ மாடல் ஆர்டினன்ஸ் (New Model Ordinance) அல்லது புதிய மாதிரி விதிகள் என்று சில ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அவைகள் பார்லிமென்ட் கட்சியின் சேனைக்குப் புதிய ஊக்கமளித்து, சிப்பாயிகளுக்கு சம்பளம் முதலிய சௌகரியங்கள் சரியாகக் கிடைக்குமாறு செய்வித்தன. அவற்றின் மூலம் யுத்த களத்தில் தமக்கு வெற்றி ஏற்படும் வழியைச் செய்து கொண்டனர்; அந்தச் சட்டத்துடனேயே ஸெல்ப்டினையிங் ஆர்டினன்ஸ் (Self - Denying ordinance) அல்லது சுயநல மறுப்புச் சட்டம் ஒன்று இயற்றப்பட்டது; அதன்படி, பார்லிமென்டில் அங்கத்தினரா யிருப்பவர்கள் சேனைத் தலைமை வகித்தல் கூடாது என்று உத்தரவிடப்பட்டது. பார்லிமென்ட் அங்கத்தினர் தம்மைத் தாமே கட்டுப்படுத்திக் கொண்டதனால் அந்தச் சட்டத்திற்கு அவ்விதமான பெயர் ஏற்பட்டது. அதன் பயனாக எஸ்ஸெக்ஸ் முதலிய தலைவர்கள் சேனைத் தலைமையை விட்டுவிட நேர்ந்தது. க்ராம்வெல் பார்லிமென்டின் அங்கத்தினராயிருந்தாலும், அவர் ஒருவரே சேனையை நடத்திச் செல்லத்தக்க திறமை வாய்ந்திருந்தாராதலால், அவருக்கு மாத்திரம் மேற்படி சட்டம் பிரயோகமாகவில்லை. அவருக்கு சேனையில் முக்கியமான பதவியும் அளிக்கப்பட்டது. அவ்வாறு சேனையைத் திருத்தியமைத்ததாலும், புதிய தலைவர்களை நியமித்ததாலும், பார்லிமென்டின் கட்சிக்கு அதிக பக்க பலம் சேர்ந்துவிட்டதாகையால், 1645-ல் நேஸ்பி (Naseby) என்ற இடத்தில் நடந்த கடும்போரில் ச்சார்லஸ் அரசர் முற்றிலும் தோற்றுப் போனார். க்ராம்வெலும் அவரது குதிரை வீரர்களும் நிரம்பவும் கீர்த்தியடைந்தனர். அதன் பிறகு ஒருவருஷ காலம் ச்சார்லஸ் அங்குமிங்கும் அலைந்து தாமே வெற்றி பெறுவதற்காகப் பல விதங்களில் முயன்று பார்த்தார். அது பலிக்காமல் போய்விட்டது. கடைசியில் அவர் ஸ்காட் சேனை வீரர்களிடம் சென்று தமக்கு உதவி புரியுமாறு வேண்டினார். ஆனால் அவர் ஸ்காட் ஜனங்களுக்குப்

பூர்த்தியான மத சுதந்திரம் அளிக்க மறுக்கவே, அவர்கள் ச்சார்லஸைப் பிடித்து பார்லிமென்டின் கட்சியாரிடம் ஒப்படைத்துவிட்டனர். ஆனாலும் ச்சார்லஸுக்கு மறுபடியும் தமது அதிகாரத்தை ஸ்தாபிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. அதாவது, க்ராம்வெலும் அவருடைய சகாக்களும் புகழடைந்த பிறகு, பார்லிமென்டின் கட்சியிலேயே ஒற்றுமை இல்லாமல் போய்விட்டது. எஸ்ஸெக்ஸ் முதலிய பழைய தலைவர்களும், க்ராம்வெல் முதலிய புதிய தலைவர்களும் பல விஷயங்களில் மனஸ்தாபமடைந்து அபிப்பிராய பேதம் கொண்டிருந்தனர். அவ்விரு பிளவுகளில் ஒன்றைத் தமது கட்சியில் சேர்த்துக்கொண்டு மற்றதை அழுத்திவிட ச்சார்லஸ் ஆலோசனை செய்து வந்தார். ச்சார்லஸின் ஆட்சியில் பார்லிமென்டில் பல விதமான கட்சிகள் தோன்றியதை நாம் நன்றாக ஞாபகத்தில் வைக்க வேண்டும். உள்நாட்டுச் சண்டை தொடங்கியபொழுது அமிதவாதக் கட்சியினர் பார்லிமென்டின் சேனையிலும், மிதவாதிகள் அரசரது சேனையிலும் சேர்ந்து கொண்டனர். ஆனால் சிறிது காலத்திற்கெல்லாம் அமிதவாதக் கட்சியினருக்குள்ளேயே மிகஅமிதமான ஒரு பகுதியார் தனியாகப் பிரிந்து நின்றனர். இப் புதிய வகுப்பாருக்கு 'சுயேச்சைக்காரர்கள்' (Independents) என்றும், சாதாரண அமித வாதிகளுக்கு ப்ரெஸ்விடீரியன்ஸ் (Presbyterians) என்றும், அவரவர்களுடைய மதக்கொள்கை காரணமாகப் பெயர் எற்பட்டது. சுயேச்சைக்காரர்கள் மத ஸ்தாபனத்தில் அடிப்படையான மாறுதல்கள் செய்ய விரும்பினர். ப்ரெஸ்விடீரியன்ஸ் ஓரளவு வரையில் சீர்திருத்தம் செய்யலாமென்றும், அதற்கு மேல் செல்வது அபாயகரமானதென்றும் கருதினார்கள். அவ்விரு பிளவுகளில் சுயேச்சைக்காரருக்கு சேனாபலம் அதிகமாயிருந்தது. அதாவது க்ராம்வெலும் அவருடைய சேனா வீரரும் சுயேச்சைக் கட்சியை ஆதரித்தனர். அவர்களுடைய பலம் வரவர அதிகரித்து வந்ததைக் கண்டு பார்லிமென்டார் அச்சமுற்று, நேஸ்பி யுத்தத்தில் ச்சார்லஸ் தோற்றுவிட்டாராதலால், அதோடு யுத்தத்தை நிறுத்திவிடலாம் என்று கருதி சேனையைக் கலைத்துவிட எண்ணினர்; சேனைக்குச் சேரவேண்டிய சம்பளத்தையும் கொடுக்காமல் தாமதம் செய்தனர். அதனால் சுயேச்சைக் கட்சியை

ஆதரித்த சேனை வீரர்கள் பார்லிமென்டின் மீது வெறுப்புக்கொண்டனர். க்ராம்வெல் அவர்களுக்குத் தலைவரானார். இவ்வாறு, முன்பு ஒற்றுமையாயிருந்து அரசரை எதிர்த்தவர்களே இப்பொழுது இரண்டு பிரிவுகளாகப் பிரிந்துபோயினர்.

க்ராம்வெலின் பலத்தைக் கண்டு நடுக்கமுற்ற பார்லிமென்டார், ச்சார்லஸுடனும், ஸ்காட் சேனையுடனும் சமாதானம் செய்துகொள்ள முயற்சித்தனர். அதை அறிந்த க்ராம்வெல் சில வீரர்களை அனுப்பி, முதலில் அரசரைப் பிடித்துவரச் செய்தார்; சுயேச்சைக் கட்சியினர் அரசரை மரியாதையாகவே நடத்தி, தம்முடன் ஒப்பந்தம் செய்துகொள்ளும்படி அவரிடம் கேட்டுக்கொண்டனர். ஆனால் ச்சார்லஸ் தமது பழைய விரோதிகளுக்குள் ஏற்பட்ட பிளவு காரணமாகத் தாம் மீண்டும் பழைய அதிகார தோரணையை வகித்துவிடலாமென்று கருதி அவர்களுக்கு இணங்கி வராமல், இரகசியமாக ஸ்காட் ஜனங்களுடன் உடன்படிக்கை செய்துகொள்வதற்கு எத்தனித்தார். அதனால் தங்களுக்கு அபாயம் ஏற்படலாமென்று அஞ்சிய சுயேச்சை வீரர்கள் அரசரை சிறையிலிட்டு பத்திரப்படுத்திவிட்டனர். 1648-ல் பார்லிமென்டாரும் ஸ்காட் ஜனங்களும் ஒன்றுகூடி சுயேச்சை வீரர்களது சேனையை எதிர்த்தனர். அதற்கு இரண்டாவது ஸிவில்வார், அல்லது, உள்நாட்டுக் கலகம் என்று பெயர். ஆனால் அபார சாமர்த்தியமுடைய வீரர்கள் நிறைந்திருந்ததான க்ராம்வெலின் சேனை ப்ரேஸ்டன் (Preston) என்ற இடத்தில் பூர்த்தியாக வெற்றியடைந்தது. இங்கிலண்டு தேசம் முழுதும் அப்பொழுது சுயேச்சைச் சேனையின் வசமாய் விட்டது; அந்தச் சேனையிலோ பிடிவாதக்காரரும், அதிக அமிதக் கொள்கையினரும், தேசத்தைப் புதிய முறையில் ஆள வேண்டுமென்று எண்ணியவர்களும் கலந்திருந்தனர். கத்தி முனையில் வெற்றியடைந்தவர்களே மேலோங்கிவிட்டனர்.

பார்லிமென்டாருக்கு தாம் என்ன செய்வதென்பது தோன்றவில்லை; தேசத்திற்கு எவ்விதமான கேடு உண்டாகுமோ என்று அவர்கள் அஞ்சி நடுங்கி ச்சார்லஸுடன் உடன்படிக்கைப் பிரஸ்தாபங்கள் செய்து வந்தனர். ச்சார்லஸ் அரசரோ சீக்கிரமாக ஒரு முடிவிற்கு

வரும் திறனற்றவராதலால், நிச்சயமான அபிப்பிராயம் கொடுக்கவில்லை. பார்லிமென்டுக்கும் சேனைக்குமோ கடும்பகைமை ஏற்பட்டுவிட்டது. 1648-ல் பார்லிமென்ட் சபை கூடியிருந்தபொழுது கல்னல் ப்ரைட் என்ற சேனை வீரர் (Colonel Pride) அங்கு சென்று காமன்ஸ் சபையில் ப்ரெஸ்பிடீரியன் கட்சியை ஆதரித்தவர்களான சுமார் நூறு அங்கத்தினரை பலவந்தமாக வெளியேற்றிவிட்டார். அந்தச் சம்பவம் 'ப்ரைட்ஸ் பர்ஜ்' (Pride's Purge) என்று குறிக்கப்படுகிறது. அசுத்தத்தை பலவந்தமாக வெளிப்படுத்தி சுத்தமாக்கியது என்பது அதன் கருத்து. அவ்வாறு வெளிப்படுத்தப்பட்டவர்போக மிகுதி இருந்த சிலர் தாமே பார்லிமென்டார் என்று கூறி வியவகாரங்களை நடத்தத் தொடங்கினர். பார்லிமென்டின் ஓர் அற்பப் பகுதியினர் அவ்வாறு முழு பார்லிமென்டின் அதிகாரத்தையும் வகித்தது பற்றி அது 'ரம்ப் பார்லிமேன்ட் (Rump Parliament) என்று குறிக்கப்படுகிறது. "ரம்ப" என்றால் முதுகெலும்பின் அடிபாகம், அல்லது, பிரஷ்டபாகம் என்று பொருள். 'ரம்ப்' சபையோ சேனையின், சொற்படி நடக்கத் தயாராயிருந்தது. சேனை வீரர்களோ முன் யோசனையின்றிப் பதற்றமான புரட்சிகள் செய்ய முனைந்து நின்றனர். அவர்கள் ச்சார்லஸ் அரசரைக் கொணர்ந்து நீதிஸ்தலத்தில் நிறுத்தி விசாரணை நடத்த வேண்டுமென்றும், அநாவசியமாகப் போரை நடத்தி பலருடைய உயிருக்குக் கேடு விளைவித்த குற்றத்தை அவர் மீது சுமத்த வேண்டுமென்றும் கூறினர். சுயேச்சைக்காரர்களிலேயே பலர் முடிதரித்த அரசரை அவ்வித கொடுமைகளுக்குள்ளாக்குவதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் வாள் வலியும் தோள் உரமும் பெற்ற சேனை வீரருடைய விருப்பத்திற்கு மாறாய் நடக்க எவருக்கும் தைரிய முண்டாகவில்லை. அரசரும் ஜனங்களும் ஒருவருக்கொருவர்பகைவர்களாய் வாளேந்தி எப்பொழுது போருக்கு முனைந்தனரோ, அப்பொழுதே அரசர் என்ற பெருமை போய்விட்டது. எவரிடம் வாள் பலம் அதிகமிருந்ததோ அவரே பெரியவராய்விட்டனர். சுயேச்சைக்காரர் தமது அமிதமான உணர்ச்சியினால் தூண்டப்பட்டு, ஜனப்பிரதிநிதிகள் என்ற ஹோதாவில்அதிகாரத்தை வகித்து, ஒரு நீதிஸ்தலத்தை ஸ்தாபித்து, அரசரை நிறுத்தி விசாரிக்குமாறு கட்டளையிட்டனர். பலருக்கு அந்தச் செய்கை அநீதி

யெனத் தோன்றியது. ச்சார்லஸூம் தமது கட்சியின் நியாயத்தை மிக சாமர்த்தியமாக எடுத்துக் கூறினர். சட்டத்தை இயற்றும் அதிகாரம் அரசருக்கே உரியதாகையால், சட்டத்திற்குட்பட்ட, பிரஜைகள் அரசரை விசாரணைக்குள் படுத்துவது நியாயமாகா தென்று அவர் வாதம் செய்தார். ஆனால் அவருடைய பகைவர்கள் அது நியாயமா அநியாயமா என்பதை கவனித்தவரான்று. அவர்கள் போலி விசாரணையொன்றை நடத்தி ச்சார்லஸ் மன்னருக்கு மரண தண்டனை விதித்துவிட்டனர். 1649-ல் ஜனவரி மாதத்தில் அரசர் தமது அரண்மனைக்கு எதிரிலேயே தூக்குமரத்திலிடப்பட்டுக் கொல்லப்பட்டார். ச்சார்லஸின் உள்ளத்தில் மறைந்து கிடந்த கம்பீரமான குணம் அந்திய காலத்தில் நன்றாக ஜ்வலித்தது. அவர் சிறிதும் அஞ்சாமல், வருந்தாமல், பணியாமல், நடுங்காமல் சுத்த வீரத்தனமாக உயிரை நீத்தார். அவரது அந்திய காலத்து சுத்த வீரத்தனம் அவரது பகைவர்களது கல் நெஞ்சத்தையும் கரைத்து உருக்கியது. ஜனங்கள் அவரது பிழைகளை மறந்து கோவெனக் கதறியழுது கண்ணீர் விடுத்தனர்; இராஜீயக் கொள்கைகளுக்காகவும் மத ஸ்தாபனக் கொள்கைகளுக்காகவும் உயிரைத் தியாகம்செய்த மகா உத்தம புருஷரென்ற பெயரும் கீர்த்தியும் அவருக்கு உண்டாயின.

முடிதரித்த அரசரொருவர் தமது பிரஜைகளினாலேயேகொல்லப் படுவதைக் காட்டிலும் வேறு தண்டனையும் இழிவும் இருக்கப் போகின்றனவா.ச்சார்லஸைச் சற்றும் தயையின்றி சுயேச்சைக்காரர்கள் கொன்றுவீழ்த்தியது மதியீனமான செய்கையென்பதில் சந்தேகமில்லை. அதன்பலனாக ஜனங்களின் வெறுப்பையே அவர்கள் அடைந்தனர். ஆனால் நாம் குற்றம் முழுதையும் சேனாவீரர்களின் மீது சுமத்துதல் சரியாகாது. ச்சார்லஸின் சீர்கெட்ட ஆட்சியே அவருடைய உயிருக்குப் பெரிய தீங்காய் முடிந்தது. சமயத்திற்கேற்றவாறு பணிந்துபோயிருந்தால், அவருடைய உயிர் தப்பியிருக்கும். ஆதிமுதல் அவர் தமது ஒவ்வொரு செய்கையினாலும் ஜனங்களுடைய பகைமையை வளர்த்துக்கொண்டே வந்தார். அவருடைய கொடுங்கோன்மை எவ்வளவு காலந்தான் நீடித்து நிற்கும்? ஸ்டூவர்ட் அரசர்களுக்கும் ஜனங்களுக்கும் சிறுகச் சிறுக வளர்ந்துவந்த,

பகைமை கடைசியில் இரத்த வெள்ளத்தில் போய் முடிவடைந்து ச்சார்லஸின் உயிரையும் கொள்ளைகொண்டு போய்விட்டது. 17-வது நூற்றாண்டில் பார்லிமெண்டார் தமது அதிகாரத்தை நிலை நாட்ட நிச்சயித்துவிட்டதைக் கண்டு ஸ்டூவர்ட் அரசர்கள் அதை அநுசரித்து நடந்துகொண்டிருந்தால் அவ்வளவு கோரமான சம்பவங்கள் நிகழ்ந்திரா. அரசருடைய சுயேச்சாதிபத்தியத்தை சகிக்கமாட்டாத குடிமக்கள் தங்களுடைய உரிமைகளை எவ்விதமாக வேனும் பெறத் தீர்மானித்திருந்தனர். அந்தப் பெரும் புயல்காற்று மோத ஆரம்பித்தபொழுது அரசர் சற்று வளைந்து கொடுத்திருந்தால் புயல்காற்றினால் அவருக்கு அபாயம் விளைந்திராது. ஸ்டூவர்ட் அரசர்கள் தமது மதியீனத்தால் அதை எதிர்த்து நிமிர்ந்து நின்றனர்; அந்தச் சண்டமாருதம் அவர்களைப் பெயர்த்தெறிந்துவிட்டது. ச்சார்லஸின் பயங்கரமான முடிவு அவருக்குப்பிறகு வந்த அரசர்களுக்கு ஒரு பெரிய படிப்பினையாக இருந்தது. ஜனங்கள் அரசருடைய அநீதிகளை அதிககாலம் பொறுத்திருக்க மாட்டார்கள் என்ற உண்மையை இங்கிலண்டின் சரித்திரம் உலகத்திற்கு விளக்கிக் காட்டியது. ச்சார்லஸின் ஆட்சியைப்பற்றி நாம் ஒரே வரியில் அபிப்பிராயம் கூறிவிடலாம். அவருடைய அரசாட்சி காலத்தில் நிகழ்ந்த சம்பவங்களெல்லாவற்றிலும் அவருக்கு ஏற்பட்ட முடிவே அவருக்குப் புகழை உண்டாக்கியது. அதாவது மரண சமயத்தில் அவர் காட்டிய சுத்த வீரத்தனமொன்றே அவரது ஆயுள்காலத்திற்குள் ஒளி வீசிய நிமிஷமாக இருந்தது. பொது ஜனங்களை வைத்துப் பரிபாலனம் செய்வது சுலபமான காரியமல்ல; அது ஒரு பேயை அடக்கி வசப்படுத்துவது போன்றது; அப் பேய்க்கு சாதகமாகநடந்து வரும்வரையில் அரசர்களுக்கு அபாயம் இல்லை. அவ்விதமின்றி அதன் கோபத்தைக் கிளப்பிவிட்டால் அரசருடைய தலையே போய்விடும் என்பதற்கு ஸ்டூவர்ட் அரசரின் சரித்திரம் ஒரு திருஷ்டாந்தமாக விளங்குகிறது.

ச்சார்லஸுக்கும் பார்லிமெண்டுக்கும் நடந்த போரில் ச்சார்லஸ் தோற்றதற்குப் பல காரணங்கள் இருந்தன. அவர் ஜனங்களுடைய அருவருப்பைப் பெற்றிருந்ததே அடிப்படையான காரணம்.

அவருடைய கட்சியில் சேர்ந்துகொண்ட பலர் அவர்மீது வைத்த அன்பு காரணமாகவோ, அல்லது, அவருடைய கட்சி நியாயமான தென்று உணர்ந்தோ, அவ்விதம் செய்யவில்லை யென்பதை நாம் மறத்தல்கூடாது. பார்லிமென்டுக் கட்சியார் வரம்பை மீறிச் சென்று விட்டமையால் மாத்திரமே ஹைடு, பாக்லன்டு முதலானவர்கள் அரசருடன் சேர்ந்து கொண்டனர். அவர்களும் ச்சார்லஸின் சுயேச்சாதிபத்தியத்தை மனப்பூர்வமாக வெறுத்தவர்களே. ரூபர்ட் முதலான சேனுவீரர்களைப் பெற்றிருந்தமையால் அவர் முதன் முதலில் வெற்றியடைந்துவந்தார். அதன்பிறகு அவருடன் ஏற்கனவே போர்புரிந்திருந்த ஸ்காட் ஜனங்களும் பார்லிமெண்டுடன் சேர்ந்துகொண்டமையாலும், க்ராம்வெலினுடைய அபார சாமர்த்தியத்தினுலும், அவர் சேனைகள் சம்பந்தமாகச் செய்த அபூர்வமான சீர்திருத்தங்களாலும் ச்சார்லஸின் கட்சி தோல்வியடைய ஆரம்பித்தது. மேலும் இங்கிலண்டின் தென்பாகம் முழுதும் பார்லிமென்டின் கட்சியில் சேர்ந்திருந்தது ச்சார்லஸுக்கு ஒரு பெரிய இடையூருயிருந்தது. ஏனெனில், இராஜ்ஜியத்தின் செழிப்பான மாகாணங்களும், முன்னேற்றமடைந்தபிரதேசங்களும், தேசத்தின் தலைமைநகரமும் தென்பாகத்திலேதான்இருந்தன. போர்தொடங்கியதும் தலைமைநகரத்தை விட்டு ஓடியது ச்சார்லஸினுடைய மதியீனத்தையே காட்டியது. கடைசியாக அரசரது சுறுசுறுப்பின்மையும், பிடிவாத குணமும் அவருடைய அழிவை துரிதப்படுத்திவிட்டன. திறமையுள்ள வேறு அரசராயிருந்தால், பார்லிமென்டுக்குள் பிளவேற்பட்டதைக் கொண்டு, தமது அதிகாரத்தை உறுதியாக நிலைநாட்டி யிருப்பார். ஆனுல் ச்சார்லஸிற்கு தெய்வகடாக்ஷமே பிரதிகூலமாயிருந்ததோவென சந்தேகிக்கும்படி அவர் முயற்சித்த ஒவ்வொரு விஷயத்திலும் அவர் தடுக்கிவிழுந்து கொண்டே வந்து கடைசியில் படுகுழிக்குப்போய்ச் சேர்ந்துவிட்டார். மிகவும் நிதானமாகவே நடந்துகொள்ளும் குணமுடைய இங்கிலீஷ்காரர்களே அவரை அவ்வளவு கொடுமையாக நடத்தினுரென்பதிலிருந்து அவருடைய திறமையின்மை நன்கு விளங்கும். ஜனங்களின் உணர்ச்சியையும், தேசத்தின் நிலைமையையும் நன்ருக

அறிந்து காலதேச வர்த்தமானங்களுக் கேற்றவாறு ஒத்துப்போய் அரசுபுரிவதான இன்றியமையாத முக்கிய குணம் ச்சார்லஸினிடம் எள்ளளவும் இல்லாததே அவருடைய தோல்விக்கும் அழிவிற்கும் காரணமாக இருந்தது.

---

## 31-வது அதிகாரம்

---

### க்ராம்வெல்.

(1) ஜனநாயக ஆட்சி உறுதிப்படுதல்: அயர்லன்ட், ஸ்காட்லன்ட் ஆகிய தேசங்களை வெல்லுதல் :—1649-ல் அரசர் கொல்லப்பட்ட பிறகு பதினொரு வருஷகாலம் இங்கிலண்டின் ஆட்சி அரசரே இல்லாமல் நடைபெற்றது. ச்சார்லஸுக்கு ஒரு புத்திரர் இருந்தாராலும், அவருக்குப் பட்டங்கட்ட எவரும் விரும்பவில்லை. அரசரேயில்லாத குடியாசை ஸ்தாபித்து துரைத்தனம் நடத்தலாமென்று சேனுவீரர்கள் நினைத்தனர். ச்சார்லஸின் காலத்தில் கூடிய 'நீடித்திருந்த பார்லிமென்ட்'' அப்பொழுதும் கலையவில்லை; ஆனால் அது குறைவுபட்டுப் போய், "ரம்ப்" என்று குறிக்கப்பட்டு வந்ததாக முன்பு கூறினோம். அந்த 'ரம்ப்' சபையும் சேனுவீரரும் சேர்ந்துகொண்டு இங்கிலன்டின் அரசியல் முறையை மாற்றியமைத்து, அரசரென்று ஒருவரை ஏற்படுத்துவதே அநாவசியமென்றும், லார்ட் சபையும் தேவையில்லையென்றும் நிச்சயித்து, காமன்ஸ் சபையாரே (அதாவது ஜனப்பிரதிநிதிகளே) நாட்டின் ஆளுகையை நடத்தவேண்டுமென்றும் தீர்மானித்து ஜன நாயக ஆட்சியை (Republic or Commonwealth) உண்டாக்கினர். சட்டங்களை இயற்றும் அதிகாரம் 41 பேர்களடங்கிய ஓர் இராஜாங்க சபை (Council of State) யின் வசம் ஒப்புவிக்கப்பட்டது. அதற்குப் பிறகு 'ரம்ப்' சபையைக் கலைத்துவிட்டு புதிய தேர்தல் நடத்துவது அவசியமாயிற்று; சேனுவீரர்கள் அதையும் நிறைவேற்றிவிட ஆவல் கொண்டிருந்தனர். ஆனால் 'ரம்ப்' சபையினர் மீண்டும் தேர்தல் நடந்தால் தமக்கு வெற்றி கிடைக்குமோ கிடைக்

காதோ என்ற அச்சத்தினுல் உடனே கலையாமல் சில வருஷகாலம் தாமே நிர்வாகம் நடத்தினர். அறிவாளிகளான ஜனப்பிரதிநிதிகளில் சிலரே இராஜ்ஜிய நிர்வாகத்தை வகித்து, மதவிஷயங்களையும் கவனித்துவரவேண்டுமென்பது அவர்களது நோக்கம். அப்பொழுது சேனு வீரர்கள் நாட்டிற்கு வெளியில் யுத்தம் நடத்தவேண்டியிருந்தமையால், ரம்ப் சபையினரோடு விவாதம் நடத்த அவர்களுக்கு அவகாசமில்லாமல் போயிற்று.

சேனுவீரர்களுக்கு க்ராம்வெல் தலைவராயிருந்தார். அவருடைய பராக்கிரமம் ஏற்கெனவே எல்லோருக்கும் நன்ருகத் தெரிந்திருந்தது. ஆனுல் ஜனநாயக ஆட்சியை ஸ்தாபித்தவுடனேயே தேசத்தில் அமைதியும் சமாதானமும் உண்டாகிவிடவில்லை. க்ராம்வெலுக்கும் புதிய துரைத்தன நிர்வாகஸ்தர்களுக்கும் பலவிதங்களில் சச்சரவுகள் ஏற்பட்டன. முதலில் அவைகளை அகற்றிய பின்பே க்ராம்வெல் துரைத்தன விஷயங்களை கவனிப்பது சாத்தியமாயிருந்தது. முதலாக, சேனுவீரர்களுடைய பல கொடுமைகளைக் கண்டு ஜனங்கள் அவர்களிடம் வெறுப்புக் கொண்டிருந்தனர். கொல்லப்பட்டுப்போன அரசரது கட்சிக்குப் பலர் தமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டனர். ச்சார்லஸினுடைய துர்க்குணங்கள் மறைந்துபோயின. சேனுவீரருடைய கொலைபாதகச் செய்கைகளே எல்லோரது மனதிலும் உறுத்திக்கொண்டிருந்தன. ஜனங்களில் பெரும்பான்மையோர் அவ்விதமிருக்க, ஒரு சாரார் சேனு வீரரையும் மீறி இன்னம் அதிக அமிதமாக நடந்துகொள்ளவேண்டுமென்றனர்; அவர்கள் "சமத்துவமாக்குவோர்" (Levellers) என்று குறிக்கப்படுகின்றனர். அவர்கள் பூர்த்தியான ஜனநாயக ஆட்சியை ஸ்தாபிக்க வேண்டுமென்று பிடிவாதம் செய்து வந்தனர். சேனு வீரர்களிலேயே பலர் அந்தக் கொள்கையை ஆதரித்துக் கலகமும் விளைவித்தனர். ஆனுல் க்ராம்வெல் அவர்களைக் கண்டித்து அடக்கி, சமத்துவமாக்குவோரைச் சிதர அடித்தார். க்ராம்வெலின் பராக்கிரமத்தைக் கண்டு, எவரும் அவருக்கு விரோதமாசக் கிளம்பவில்லை.

தமது சேனுபலத்தைக்கொண்டு இங்கிலண்டை அடக்கியபின்னர், க்ராம்வெல் அண்டையிலிருக்கும் தேசங்களின்மீது கவனம் செலுத்தினர். முதலில் எங்கும் தமது அதிகாரத்தை நிலைநாட்ட

வேண்டுமென்பது அவரது கருத்து. அயர்லன்டு தேசத்தில் பலர் காதலிக் மதத்தை ஆதரித்து, இறந்துபோன ச்சார்லஸின் புதல்வரான இரண்டாவது ச்சார்லஸைத் தமது அரசர் ஆக்கிக்கொண்டனர். அதாவது இங்கிலண்டின் ஜனநாயக அரசாங்கத்திற்கு அவர்கள் உட்படவில்லை. 1649-ல் க்ராம்வெல் ஒரு சேனையுடன் அயர்லன்டு சென்று, டுரோஹிடா, வெக்ஸ்போர்டு (Drogheda Wexford) என்ற நகரங்களை முற்றுகையிட்டு, பகைவர்களைப் படுகொலைக்கு ஆளாக்கினர். 1650-ல் அவர் அந்த நாட்டைப் பூர்த்தியாகத் தமது வசப்படுத்திக்கொண்டு இங்கிலண்டிற்குத் திரும்பினர். அயர்லன்டில் மறுபடியும் கடுமையான ஆட்சி ஸ்தாபிக்கப் பெற்றது. காதலிக் மதத்தினர் நிரம்பவும் துன்புறுத்தப்பட்டனர். அயர்லன்டு தேசத்து மிராசுதார்கள் தமது நிலங்களை இங்கிலீஷ்காரர் வசத்தில் விட்டு ஓடவேண்டியதாயிற்று. ஸ்ட்ராபோர்டு பிரபுவைவிட அதிக கடுமையாய் நடந்துகொண்ட க்ராம்வெல் அயர்லன்டு தேசத்தில் அமைதியையும் தமது அதிகாரத்தையும் ஸ்தாபித்தார். ஆனால் அவரது கொடுங்கோன்மையை அயரிஷ்காரர்கள் பொறாமல் முற்றிலும் வெறுப்படைந்தனர். க்ராம்வெலின் கொடுமைகளை அவர்கள் வெகுகாலம்வரையில் மறக்காமலேயே இருந்தனர். ஸ்காட் ஜனங்களும் க்ராம்வெலுக்கு அநுசரணையாக நடந்துகொள்ளவில்லை. இரண்டாவது உள்நாட்டுப்போரில் அவர்கள் க்ராம்வெலினால் தோல்வியுற்றுத் திரும்பினார்களல்லவா? அதுவன்றி, ச்சார்லஸ் கொல்லப்பட்டது அவர்களுக்கு சிறிதும் சம்மதியாக இல்லை. அவர்கள் ச்சார்லஸின் புதல்வனைத் தமது அரசராக ஏற்று 1651-ல் அவருக்கு மகுடம் சூட்டினார்கள். இரண்டாவது ச்சார்லஸ் நுட்பமான அறிவுடையவர்; அவருக்கு உண்மையில் ப்ரெஸ்பிடீரியன் மதத்தினிடம் பற்றுதல் கிடையாது. ஆனால் அச்சமயத்தில் வேறு வழியில்லாமையால், அவர் அம்மதத்தை ஆதரிப்பதாக வாக்குறுதி செய்து கொடுத்து ஸ்காட் ஜனத் தலைவர்களுடைய கையிலகப்பட்ட பதுமைபோல நடந்துவந்தார். ஆனால் இங்கிலண்டுக்கு சமீபத்திலேயே இரண்டாவது ச்சார்லஸ் இருந்துவந்தது நிரம்பவும் அபாயகரமானதென்று க்ராம்வெல் கருதினார். ஏனெனில், அவர் தமதி

தந்தையின் சிம்மாதனத்தை யடைய அதிக விரைவில் முயர்சிப்பா ரென்பது நிச்சயமாகத் தோன்றியது. ஆதலால், புதிதாக அமைத்த ஜனநாயக ஆட்சி நிலைப்பதைக் கருதி க்ராம்வெல் 1650-ல் ஸ்காட் லண்டின்மீது படையெடுத்துச் சென்று, டன்பார் (Dunbar) என்ற இடத்தில் எல்லோரும் பிரமிக்கத்தக்கபடி பூர்த்தியான வெற் றியையடைந்தார். ஸ்காட்லண்டின் தென்பாகம் அவரது வசமா யிற்று. அதன்பிறகு ஸ்காட்சேனையும் ச்சார்லஸும் நேராக இங்கி லண்டின்மீது படையெடுத்து வந்தனர். அங்கு அரசரது கட்சியை ஆதரித்த இங்கிலீஷ்காரர்கள் தங்களுடன் சேர்ந்துகொள்வார்கள் என்று அவர்கள் எதிர்பார்த்தனர். ஆனால் ஏற்கனவே சண்டை யிட்டுத் தளர்ந்துபோயிருந்த இங்கிலீஷ்காரர்கள் புதிய அரசரை அவ்வளவு அன்பாக வரவேற்கவில்லை. 1651-ல் க்ராம்வெல் மறுப டியும் வார்ஸ்டர் (Worcester) என்ற இடத்தில் ஸ்காட்சேனைகளைத் தோற்கடித்தார். அதற்குப்பிறகு இங்கிலண்டு, ஸ்காட்லண்டு, அயர்லண்டு ஆகிய மூன்று தேசங்களும் அவருடைய வசமாய் விட்டன. ஸ்காட்லண்டிலும் அவர் சில சீர்திருத்தங்களைச் செய் தார். ப்யூரிடன் மதத்தினர் அனைவருக்கும் அவர்களுக்குள் இருந்த அற்ப வேற்றுமைகளைப் பொருட்படுத்தாமல் மதசுதந்திரம் அளிக் கப்பட்டது. ச்சார்லஸ் அரசர் தமது தலைதப்புவதே போதுமான தென்று கருதி ஐரோப்பாக் கண்டத்திற்கு ஓடிவிட்டார். க்ராம் வெலின் ஆச்சரியமான பராக்கிரமத்தையும் திறமையையும் கண்டு எல்லோரும் பிரமித்துப் போயினர்.

(2) **க்ராம்வெலின் அரசியல் பரீட்சைகள்:**—தமது அதி காரத்தை தேசத்தில் ஸ்தாபித்துக் கொண்டபிறகு, சேனுவீரர்கள் அரசாங்க முறைகளைப் பரிசீலனை செய்பலானார்கள். 'ரம்ப்' சபை அப்பொழுதும் இருந்து வந்ததை சேனுவீரர்கள் பொறுக்கவில்லை; ஏனெனில், அந்தச் சபை எந்த விதத்திலும் தேசத்து ஜனங்க ளின் பிரதிநிதிகளாயிருக்க யோக்கியதையற்றிருந்தது. ஆதலால் சேனு வீரர்கள் ஜனங்களுடைய சம்மதியை அடிப்படையாகக் கொண்ட அரசாட்சியை ஸ்தாபிக்கும் நோக்கத்துடன் ரம்ப் சபையைக் கலைத்துவிட முயன்றனர். ஆனால் அந்தப் போலிப் பிரதிநிதி சபை தானுகக் கலைந்துபோவதாகத் தோன்றவில்லை.

ப்ரைட் மற்றவரை வெளியேற்றியபிறகு மிகுதி நின்ற ரம்ப் சபையார், சேனுவீராது தயவினுலேயே தாம் மிஞ்சிநிற்கிறோமென் பதை மறந்துபோயினர். தமக்குக் கிடைத்த இராஜ்ஜியாதிகாரத்தை விட்டுவிட அவர்களுக்கு மனமில்லை. க்ராம்வெல் சிறிது காலத்தில் தமது பொறுமையை இழந்து, ரம்ப் சபையை பலவந்தமாகக் கலைத் தாலன்றி விமோசனம் ஏற்படாதென்று நிச்சயித்து, 1653-ல் அச் சபையின் முன்சென்று அவர்களது சுயநலவேட்கையையும் பேரா சையையும் கண்டித்து, "இனி இங்கு உட்கார்ந்திருக்க உங்களுக்கு யோக்கியதை இல்லை" என்று கூறினுர். உடனே சில சேனுவீரர் கள், அங்கிருந்தோரை பலவந்தமாக வெளியில் துரத்திவிட்டனர். ஆகவே, இங்கிலன்டில் அரசருடைய ஸ்தானம் போய்விட்டது. லார்ட் சபையும் போய்விட்டது. காமன்ஸ் சபையும் போயிற்று; சில சேனுவீரர்மாத்திரம் கூட்டாக இருந்தே நிர்வாகம் நடத்த வேண்டியதாயிற்று. க்ராம்வெல் நல்ல புத்திமான்; தேசத்திற்கு நன்மை செய்யவேண்டுமென்று மனப்பூர்வமாக நினைத்தவர்; அர சாட்சி எவ்விதமான உருவத்தோடிருந்தாலும், அதனுல், ஒழுங்கான நிர்வாகம் நடக்க வேண்டுமென்பதே அவருடைய கருத்து. இராஜ் ஜியாதிகாரம் முழுதும் தமது வசமானதும், அவர் மற்றவர்களைப் போல சுயேச்சாதிகாரம் நடத்த எத்தனிக்கவில்லை. எவ்விதமான அரசியல் முறை தேசத்திற்கு நன்மை யளிப்பது என்று அவர் பரி சீலனை செய்யலானுர். பார்லிமென்ட் சபையொன்றைக் கூட்டி, ஜனப்பிரதிநிதிகளின் கையில் அரசாட்சியை ஒப்படைப்பதில் அவ ருக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. ஏனெனில், ஜனப்பிரதிநிதிகள் பலருக்கு சாமானிய வியவகார ஞானங்கூட இருப்பதில்லை என்பது பிரத்தியக்ஷமான விஷயம். ஆனுல் ஒருவரது கையில் ஆட்சியை விடுவதும் அபாயகரமாகத் தோன்றியது. ஆதலால், சிறந்த அறிவாளி களான ஒரு சிலரே சரியாக நிர்வாகத்தை நடத்தக்கூடும் என கிராம்வெல் கருதினுர். அவர் உண்மையான மதப்பற்றுத லுள்ள ப்யூரிடன்; ஆதலால், அவர் மதப்பற்றுதலும், வைராக் கிய புத்தியும், பாரமார்த்திக மனப்போக்கும் வாய்ந்த சில பெரியோர்களே தேசத்தை நன்ருகப் பரிபாலிப்பார்களென்று நிச்சயித்தார். அவருடைய கொள்கையில் அடிப்படையான தவறு

எதுவும் இல்லை. சுயநலப் பேயாயிருக்கும் ஓர் அரசனும், அவனை அண்டி வாழும் குள்ள நரிகளான மந்திரிகளுமோ அல்லது இராஜ்ஜியப்பொறுப்பற்று, அவரவாது விருப்பத்தின்படி நடந்துகொள்ளும் பார்லிமென்டென்னும் சந்தைக் கூட்டத்தினரோ இராஜ்ஜிய நிர்வாகம் நடத்துவதை விட, உலக அநுபவமும், அறிவு முதிர்ச்சியும், மதப்பற்றுதலும், முக்கியமாக இகலோகப் பற்றின்மையும், தயாள குணமும், இரத்த வெறியற்றவருமான சில பெரியோர் ஒன்றுகூடி அரசாட்சியை வகிப்பது மகா சிலாக்கியமான காரியமே. நம்தேசத்தில் ரிஷிகளும் யோகிகளும் பண்டைக்காலங்களில் அரசர்களுக்கு மந்திராலோசனை கூறி அவர்களை நல் வழிப்படுத்தியது நாம் நன்கறிந்த விஷயம். ஆனால் அந்தக் கொள்கை சரியாயிருந்தாலும், அதை அநுபவத்தில் சாதிப்பது அரிது. ஏனெனில் அத்தகைய உத்தம குணங்கள் நிறைந்த பெரியோர்கள் தொடர்ச்சியாக எப்பொழுதும் கிடைத்துக்கொண்டே இருப்பரென்பது சந்தேகம். க்ராம்வெல் தமது யோசனைப்படி தமக்குத் தெரிந்த சில ப்யூரிடன் மதப்பிரமுகர்களை அழைத்து இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்துமாறு வேண்டினர். எதிர்பாராத மேம்பாடு தமக்கு வந்து வாய்த்ததைக் கண்டு மகிழ்ந்துபோன ஷை பிரமுகர்கள், நினைத்த விதமெல்லாம் சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று கூச்சலிட்டனர். க்ராம்வெலுக்குத் தாம்செய்தது தவறுஎன்பது உடனேதெற்றெனவிளங்கிவிட்டது. அவர் உடனே அப்பெரியோர்களை வணங்கி வீடுபோகச் செய்துவிட்டு வேறு விதமான முறைகளை அநுஷ்டித்துப் பார்க்க முயன்றார். ஷை பெரியோரது சபையைச் சிலர் ஏளனமாக 'குட்டிப் பார்லிமென்ட்' (Little Parliament) என்று குறித்தனர். அப்பெரியோர்களில் ஒருவரான பேர்போன் (Barebone) என்பவருடைய பெயரையே வைத்து அதை 'பேர்போன் பார்லிமென்ட்' என்றும் சிலர் குறித்தனர். ஆனால் நீர்மேல் குமிழி போலத் தோன்றி மறைந்த ஷை சபை, பார்லிமென்ட் என்று குறிக்கப்படுவதற்கே தகுதியானதல்ல.

மதவெறி கொண்ட பெரியோர்களைவிட, சேனை வீரர்களுக்கே அதிகத் தெளிவான விவேகம் இருந்தது. 1653-ல் அவர்கள் ஒன்றுகூடி ஆலோசித்து இங்கிலன்டின் இராஜ்ஜிய நிர்வாகத்தை விவ

ரித்து ஒரு பத்திரம் தயாரித்தனர். அது "அரசாட்சி முறைப் பத்திரம்" (Instrument of Government) என்று குறிக்கப்படுகிறது. அதன்படி இங்கிலண்டு, ஸ்காட்லண்டு, அயர்லண்டு ஆகிய மூன்று தேசங்களும் ஒரே ஆட்சிக்குள்பட வேண்டும்; அவைகளுக்கு ஒரே சட்டசபையும் நிர்வாக உத்தியோகஸ்தரும் இருக்க வேண்டும். சட்ட மியற்றும் முழு அதிகாரம் பார்லிமெண்ட் சபைக்கே உரியது; அதற்கு 400 அங்கத்தினர்கள் ஏற்படவேண்டும்; அவர்கள் பொது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஆனால் தேச பரிபாலனத்தை விசேஷப் பொறுப்புடன் கவனித்துக்கொள்ள ஒரு "காவலர் அல்லது இரக்ஷகர்" (Protector) நியமிக்கப்பட வேண்டும்; அந்தப் பதவியை க்ராம்வெல் வகிப்பார்— என்று நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அது நிரம்பவும் நல்ல ஏற்பாடு என்பதில் சந்தேகமில்லை. ஆனால் 1649-ல் ஸ்தாபிக்கப்பட்ட ஜனநாயக முறை எடுபட்டுப் போய்விட்டது. அம்முறை சரியாக வேலை செய்யவில்லை என்பது தெரிந்தது. மேலும் அரசரைக் கொன்று போட்ட சுயேச்சை வீரர்கள் இப்பொழுது க்ராம்வெலுக்கே ஏறக்குறைய அரசருடைய அதிகாரத்தை யெல்லாம் அளித்தனர். ஆனால் அரசர் என்ற பெயரில் அவர்களுக்கு வெறுப்புத் தோன்றியிருந்தமையால், காவலர் அல்லது இரக்ஷகர் என்ற புதுப்பெயரை அவருக்குக் கொடுத்தனர். க்ராம்வெல் சுதேச்சாதிகாரம் நடத்தாதபடி பல நிபந்தனைகளை ஏற்படுத்தி இருந்தாராலும், அநேகமாய் பழைய அரசர்களது நிலைமையே வேறு பெயருடன் உண்டாயிற்று. முதலில் க்ராம்வெல் அந்தப் பதவியை ஏற்கத் தயங்கினாராலும், அவர் கடைசியில் அரசாட்சி முறைப் பத்திரத்தை ஒப்புக்கொண்டு அநுஷ்டானத்திற்குக் கொண்டு வந்துவிட்டார்.

1653 முதல் 1658 வரையில் அவர் இரக்ஷகராக இருந்து நாட்டைப் பரிபாலித்து வந்தார். அவர் போர்க்களத்தில் காட்டிய அபார சாமர்த்தியத்தை இராஜ்ஜிய நிர்வாகத்திலும் காட்டினார். அதுவரையில் தனித்தனியாகப் பிரிந்துநின்ற மூன்று தேசங்களும் அவரது காலத்தில் ஒரே ஆட்சிக்கு உட்பட்டன. அதுவே க்ராம்வெலுக்கு மேம்பாட்டையளித்த ஒரு முக்கியமான சம்பவமாகும்.

மேலும், அற்ப மத வேற்றுமைகள் கொண்டவர்கள் கூட ஒருவரை யொருவர் விஷம்போல மதித்து வந்ததான அக்காலத்தில் க்ராம் வெல் ப்யூரிடன் வர்க்கத்தைச் சேர்ந்தவரெவருக்கும் எவ்வித மான துன்பமும் இழைக்காமல், சுதந்திரம் அளித்தார். நாஸ்திகர்களும் கூட சுதந்திரம் பெற்றிருக்கும் இக்காலத்தில் இருப்போரான நமக்கு அது ஒரு பெரிய அதிசயமாகத் தோன்றுவிடினும், அக்காலத்தில் க்ராம்வெல் அவ்வளவுதூரம் சென்றது மற்றவரைக் காட்டிலும் அவர் விசால நோக்கமுடையவர் என்பதையே காட்டியது. க்ராம் வெல் சுறுசுறுப்பான உழைப்பாளி; பெருந்தன்மையும் கம்பீர குணமும் வாய்ந்தவர். ஆனால் துரதிருஷ்ட வசமாக நேர்ந்த சில இடுக்கண்களால், அவர் தேச பரிபாலனத்தைச் செவ்வையாகச் செய்து முடிப்பது சாத்தியமற்றதாயிற்று. அவர் இரக்ஷகரான பிறகு கூடிய பார்லிமென்டுக்கும் அவருக்கும் தொடக்கத்திலேயே மனவருத்தம் ஏற்பட்டது. ஏனெனில், அந்தப் பார்லிமென்டில் பலர் அரசாட்சி முறைப் பத்திரத்தை உற்பத்தி செய்தவர்களுக்கு அவ்விதம் செய்ய சட்ட பூர்வமான அதிகாரம் இருந்ததா என்ற பெரிய சந்தேகத்தைக் கிளப்பிவிட்டனர். அது இரக்ஷகர் மன திற்கு சம்மதியாயில்லை. அவர் வெறுப்படைந்து அந்தப் பார்லி மென்டையே கலைத்துவிட்டு, ஜனப் பிரதிநிதிகளின் உதவியின்றித் தாமே அதிகாரத்தை வகிக்கலானார். பார்லிமென்டுக் கடங்கி இரக்ஷ கர் ஆட்சி புரியவேண்டும் என்ற நிபந்தனை எட்டுச் சுரைக்காயாகவே இருந்தது. பார்லிமென்ட் இருந்தது அநாவசியமான ஓர் இடை யூறு என்று க்ராம்வெல் எண்ணினார். அவர் எண்ணியது முழுதும் சரியானதே. ஏனெனில், அவர் கூட்டிய பார்லிமென்ட் அவ ரையே மீற எத்தனித்ததாகையால், அதை நிராகரித்துவிடுவதே அவருக்கு சரியெனத் தோன்றியது. எனவே சுயேச்சாதிபத்தியம் நடாத்திய அரசாது சிரத்தைக் கொய்த வீரரே மறுபடி ஏகாதிபத் தியம் நடத்த வேண்டியதாயிற்று. பார்லிமென்டின் சம்மதியின் றியே அவரும் வரிவிதித்து வசூல்செய்ய வேண்டியதாயிற்று. அது வன்றி அவருடைய அரசாட்சி முறையைப் பற்றிக் குறை கூறிய வர்களையும் அவர் கண்டித்து வந்தார். இங்கிலன்டு தேசத்தைப் பத்து மாகாணங்களாகப் பிரித்து ஒவ்வொரு மாகாணத்தையும் பரி

பாலனம் செய்வதற்கு மேஜர் ஜெனரல் (Major - General) என்ற பெயருடன் ஒரு சேனு வீரரை நியமித்தார். எனவே, க்ராம்வெலின் ஆட்சி எவ்விதமானதென்பது அப்பொழுது நன்கு விளங்கி விட்டது. அதாவது கத்தி முனையால் அடைந்த வெற்றியை, அவர் கத்தியைக்கொண்டே நிலைநிறுத்த வேண்டியதாயிற்று. ஜனங்களுடைய அன்பை ஆதாரமாகக் கெண்டு க்ராம்வெல் இரக்ஷகர் பதவியை வகிக்கவில்லை; பயிற்சியடைந்த சேனையின் உதவி அவருக்கு இருந்ததனுலேயே அவர் அதிகாரம் செலுத்த முடிந்தது; இல்லையானுல், அதிக விரைவில் அவர் சிம்மாதனத்தை விட்டு ஓட வேண்டியதாயிருக்கும்- அரசரை ஆதரித்தவர்கள் க்ராம்வெலைக் கொலைபாதகன் என்று தூற்றினர்; அரசரை ஒழித்து ஜனநாயக ஆட்சியை ஸ்தாபிக்க முன்வந்த சிலர், இரக்ஷகருடைய ஏகாதிபத்தியம் ச்சார்லஸின் ஆட்சியைவிடக் கேவலமானது என்று கருதினர்; சேனுவீரர்களிற் கூடச் சிலர் க்ராம்வெலினிடம் வெறுப்புக்கொண்டனர். பலவந்தத்தினுல் அதிகாரத்தை வகிப்பவர்களின் பாடு எப்பொழுதும் திண்டாட்டமாகவே முடியும். அயர்லன்ட், ஸ்காட்லன்ட் ஆகிய இருதேசங்களும் அரச குலத்தைச் சேராத ஒரு சாமானிய வீரருக்கு அடங்கி நடப்பதை மனப்பூர்வமாக வெறுத்து, க்ராம்வெலை வேரறுத்து விடுவதற்கு வழி தேடிக் கொண்டிருந்தனர். க்ராம்வெலோ உறுதியான மனப்போக்குடையவராதலின் தமது விருப்பத்தின்படி ஆட்சிபுரிய வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார். பார்லிமென்டை வைத்துக்கொண்டே நிர்வாகம் நடத்த வேண்டுமென்பது அவருடைய நோக்கமானுலும், பார்லிமென்ட் தமது வழியைப் பின்பற்ருது போகவே, அவர் ச்சார்லஸ் அரசரைவிடப் பன்மடங்கு அதிகமான கடுமை காட்டி அதை பலவந்தமாகக் கலைத்து விட்டார். ஆகவே ச்சார்லஸுக்கும் அவரது சீர்கெட்ட ஆட்சியை ஒழித்து நியாயமான ஆட்சியை நிலைநிறுத்த முனைந்த க்ராம்வெலுக்கும் எவ்விதமான வித்தியாசமிருந்ததென்பது ஜனங்களுக்குப் புலப்படவில்லை. ச்சார்லஸ் அரசரிடம் போதிய சேனுபலம் இல்லையாதலால், அவர் சிற்சில சமயங்களிலாவது குடிமக்களுக்கு இணங்கி வந்தார். ஆனுல் க்ராம்வெலோ வாளையேந்தியபடி ஆட்சி நடத்தினுர். குடிமக்கள் அவரிடமிருந்த அச்சத்தினுல் மௌனமாக இருந்

தனரேயன்றி, அவரிடமிருந்த உண்மையான பற்றுதலினாலன்று. ஆனால் ச்சார்லஸுக்கு மாறாக, க்ராம்வெலிடம் அபாரமான திறமை யும் பராக்கிரமும் இருந்தன. அரசரைப்போல அவர் சுயநலங்கருதி அம்மாதிரி கடுமை காட்டவில்லை. தேசத்தின் அமைதியையும் மேம்பாட்டையும் காப்பாற்ற வேண்டுமென்ற உயர்ந்த நோக்கத் துடனேயே அவர் தமக்கு எது உத்தமமெனத் தோன்றியதோ அதை முனைந்து செய்துகொண்டே போனார்.

முன்னர் கூறியபடி, ப்யூரிடன் வர்க்கத்தினருக்கு மத சுதந்தி ரம் அளித்ததில், க்ராம்வெல், அக்காலத்து மனிதரைவிட அதிக முற்போக்குடையவர் என்பதைக் காட்டினார். முதல் எட்வர்ட் அரசரின் காலத்தில் இங்கிலண்டிலிருந்த யூத ஜாதியினர் தேசத் திற்குத் தீங்கிழைத்தனரென்ற காரணத்தினால் வெளிப்படுத்தப் பட்ட பிறகு, அநேக நூற்றாண்டுகள் அந்த ஜாதியினர் இங்கிலண் டிற்குள் வராமலேயே இருந்தனர். விசால நோக்கமுடைய க்ராம் வெல் அவர்கள் தேசத்திற்குள் வந்து வாழலாமென்று அநுமதி யளித்தார்.

(3) க்ராம்வெலின் அன்னிய நாட்டு சம்பந்தம்: பழையமுறை திரும்புதல்;—இங்கிலண்டு தேசத்தின் ஆட்சி சம்பந்தமாக க்ராம் வெல் பல ஏற்பாடுகளைப் பரீட்சித்துப்பார்த்து ஒன்றிலாவது அதிக வெற்றியடைய வில்லையானாலும், அவர் இங்கிலண்டுக்கு வேறு சில விஷயங்களில் பெருத்த நன்மைகளைப் புரிந்து அழியாப் புகழை யடைந்தார். அயர்லன்டு, ஸ்காட்லன்டு ஆகிய தேசங்களை அவர் எவ்விதம் அடக்கினார் என்பதை முன்னரே கூறினோம். ச்சார்ல ஸின் காலத்தில் நடந்த உள்நாட்டு யுத்தத்தின் பயனாக, சில வருஷ காலம் இங்கிலீஷ் அரசாங்கத்தார் அன்னிய நாட்டு விஷயங்களிற் கலந்துகொள்ளாமல் இருக்கவேண்டியதாயிற்று. ஆனால் ஐரோப்பா வில், இங்கிலண்டு தேசம் கௌரவம் பெற்று வாழவேண்டுமென் பது க்ராம்வெலின் விருப்பம். மேலும் ஸ்டுவர்ட் அரசர்களைப்போலல் லாமல் அவர் எப்பொழுதும் தமது வசத்தில் ஒரு சேனையை ஆயத்த மாக வைத்திருந்தார். அது அவருக்கு நிரம்பவும் அநுகூலமாயிருந் தது. அதனால், அன்னிய தேசத்து வியவகாரங்களில் தாம் தலை

யிட்டால் தமக்குத் தோல்வி ஏற்படுமோ என்ற அச்சமே அவருக்கு இல்லாதிருந்தது. ஸ்காட்லன்ட் தேசத்தை ஜயித்தபின் அவர் டச்சுக்காரருடன் (ஹாலன்ட் தேசத்தினருக்கு டச்சுக்காரர் என்று பெயர்) போர்புரியலானார். டச்சுக்காரரும் ப்யூரிடன் முறையைப் போன்ற மதத்தையே பின்பற்றினராலும், இங்கிலீஷ்காரருக்கும், அவர்களுக்கும் வியாபார விஷயத்தில் பெரிய போட்டி இருந்து வந்தது. 16-ம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து, இங்கிலீஷ் வியாபாரிகள் கிழக்கிலும் மேற்கிலும் சென்று வாணிபம் நடத்திப் பொருள் தேடினர். அப்பொழுது டச்சுக்காரரும் அதே தொழிலைச் செய்து வந்தனராதலால், இரு தேசத்தினருக்கும் போட்டி ஏற்பட, அதனால் பகைமை தோன்றலாயிற்று. டச்சுக்காரர் தமது கப்பல்களைக் கொண்டு ஒரு தேசத்திலிருந்து இன்னொரு தேசத்திற்கு சரக்குகளை எடுத்துச்சென்று, கூலிபெற்று ஏராளமாகப் பணம் சம்பாதித்து வந்தனர். அவர்களது வருமானத்தைக் கெடுத்தாலன்றி தமக்கு நஷ்டமேற்படும் என்று உணர்ந்த இங்கிலீஷ் பார்லிமெண்ட் 1651-ல் "கப்பலோட்டும் கிரமச் சட்டம்" (Navigation Act) ஒன்றை இயற்றி, அதன்படி இங்கிலன்டில் இறக்குமதி செய்யப்படும் சரக்குகள் இங்கிலீஷ்காரருக்குச் சொந்தமான கப்பல்களிலாவது அல்லது ஷை சரக்குகள் எந்த தேசத்திலிருந்து வருகின்றனவோ அந்த தேசத்தாருக்குச் சொந்தமான கப்பல்களிலாவது மாத்திரமே வரவேண்டும் என்று திட்டம் செய்தது. அதன் நோக்கம் டச்சுக்காரரது கப்பல்களுக்கு வேலை இல்லாமற் செய்துவிடுவதன்றி சுதேசக் கப்பல் வியாபாரத்தை அபிவிருத்தி செய்வதுமாம். உடனே இரு தேசத்தினருக்கும் கடலில் கடுமையான போர்கள் நேர்ந்தன. டச்சுக்காரர் கடற்போர் செய்வதற்குரிய பயிற்சியை அதிகமாய்ப் பெற்றிருந்தாலும், 1653-ல் போர்ட்லன்ட் (Port Land) என்ற இடத்திற் கருகாமையில் இங்கிலீஷ் படைக்கே வெற்றி கிடைத்துவிட்டது. அதன்பிறகு இருபடைகளும் ஒன்றிற்கொன்று கீழ்ப்படியாமல் சமபலத்துடன் சண்டையிட்டு வந்தன.

க்ராம்வெல் இரக்ஷகர் பதவியைப் பெற்றதும், அவர் ஐரோப்பிய வியவகாரங்களில் நன்றாகத் தலையிட முற்பட்டார். முதலில் அவர்

ப்ராடஸ்டன்ட் மதத்தைப் பின்பற்றிய அரசுகளை யெல்லாம் ஒன்று கூட்டி, அம்மதத்தைக் காக்கும் வீரராக விளங்கிக் கீர்த்தி யடைய லாமென்று யோசித்தார். ஆனால் எலிஸபெத்தின் காலத்தில் இருந்ததுபோல அப்பொழுது மதவேற்றுமைகள் ஐரோப்பாவில் விரோதத்தை உண்டுபண்ணத்தக்க நிலைமையில் இல்லை. இங்கிலண்டில் உள்நாட்டு யுத்தம் நடந்துகொண்டிருக்கையில், ஐரோப்பிய அரசியல் நிலைமையில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டு விட்டது. ஜேம்ஸின் ஆட்சிகாலத்தில் ஐரோப்பாவில் ஆரம்பித்த முப்பது வருஷ யுத்தம் 1648-ல் முடிவடைய, வெஸ்ட்பேலியா (Westphalia) என்ற இடத்தில் நடந்த உடன்படிக்கையின்படி முக்கியமான பல மாறுதல்கள் ஏற்பட்டன. முக்கியமாக மதவேற்றுமையை மாத்திரம் காரணமாகக் கொண்டு ஐரோப்பிய அரசுகள் ஒன்றுடனொன்று போர்புரிவது அதன்பிறகு நின்றுபோய் விட்டது. மேலும் 1648 முதல் ப்ரான்ஸ் தேசம் மேன்மேலும் அபிவிருத்தியடைய ஆரம்பித்தது. அதனால் ஸ்பெயின் தேசத்திற்கும் ப்ரான்ஸுக்கும் பகைமை ஏற்பட்டிருந்தது. அவ்விரு தேசங்களும் காதலிக் மதத்தையே ஆதரித்தனவானாலும், தமக்குள்ளிருந்த மத ஒற்றுமையையும் கருதாமல் இராஜீய காரணங்களால் தூண்டப் பட்டு ஒன்றுடனொன்று சண்டையிட்டுக்கொள்ள இடமுண்டா யிற்று. ஆதலால் ப்ராடெஸ்டன்ட் அரசுகளை யெல்லாம் ஒன்று சேர்த்துப் பிணைத்துவிட எண்ணிய க்ராம்வெல் அந்த யோசனையை விட்டு மேலே கூறிய பரஸ்பர விரோதிகளான ப்ரான்ஸ், ஸ்பெயின் ஆகிய இரண்டு அரசுகளுக்குள் ஏதாவதொன்றுடன் சேரவேண்டி யிருந்தது. எலிஸபெத்தின் காலம் முதற்கொண்டு ஸ்பெயின் தேசம் இங்கிலண்டின் நீடித்த விரோதியாக இருந்துவந்ததாலும், இரு தேசங்களுக்கும் வியாபாரப் போட்டி இருந்ததாலும், அவர் ப்ரான்ஸ் தேசத்துடனேயே சேர்ந்துகொண்டார். 1654-ல் அவர் இரண்டு படைகளைத் திரட்டி ஒன்றை மத்தியதரைக் கடலுக்கும் மற்றொன்றை அமெரிக்காவுக்கும் அனுப்பி ஸ்பெயின் தேசத்துப் போரை நடத்திச் செல்லும்படி உத்தரவிட்டார். இரண்டு மூன்று வருஷத்திற்குள் இங்கிலீஷ் படைகள் சில வெற்றிகள் பெற்றுக் கீர்த்தியடைந்தன. அமெரிக்காவிற்குச் சென்ற கப்பற்படையும்

ஜமேய்க்கா (Jamaica) என்ற பிரதேசத்தை ஸ்பெயின் தேசத்தாரிடமிருந்து அபகரித்துக்கொண்டது. 1657-58 ல் இங்கிலீஷ்சேனை ப்ரெஞ்சு சேனையுடன் சேர்ந்துகொண்டு டூயூன்ஸ் யுத்தத்தில் (Battle of The Dunes) ஸ்பெயின் சேனையை முற்றிலும் தோற்கடித்து விட்டது. மறு வருஷத்திலேயே ஸ்பெயின் அரசாங்கத்தார் ப்ரான்ஸுடன் சமாதானம் செய்துகொண்டனர். அதன் பயனாக, டன்கர்க் (Dunkirk) என்ற இடம் இங்கிலீஷ்காரருக்குக் கிடைத்தது. இவ்வாறு க்ராம்வெல் தமது சேனாபலத்தைக்கொண்டு இங்கிலண்டிற்கு ஐரோப்பாவில் மதிப்பு ஏற்படுமாறு செய்து அரியசேவை புரிந்தார். ஸ்டூவர்ட் அரசர்கள் எப்பொழுதும் பலஹீனமாயிருந்ததற்கு மாறாக, க்ராம்வெல் அன்னிய தேச வியவகாரங்களை மிகவும் திறமையாக நடத்தி வந்தார்.

1656-ல் க்ராம்வெல் மறுபடியும் ஓர் அரசியல் முறையை அநுஷ்டித்துப் பரீட்சை பார்க்க எண்ணி இரண்டாவது பார்லிமெண்ட் சபையொன்றைக் கூட்டினார்; ஆனால் அந்தச் சபையில் அவருக்கு அடங்கி நடக்கக் கூடியவர்களுக்கே ஸ்தானம் கிடைத்தது. அந்தச் சபையார் 1657-ல் துரைத்தன பரிபாலனம் நடைபெறுவதற்கு ஒரு புதிய அரசியலமைப்பைத் தயாரித்தனர். அதை விவரித்திருந்த பத்திரம் "வணக்கமான விண்ணப்பமும் ஆலோசனையும்" (Humble Petition and Advice) என்று குறிக்கப்படுகிறது, அதாவது அதைத் தயார் செய்த சபையினர் அவ்வளவு அதிக பயபக்தி விநயத்துடன் அதை க்ராம்வெல் முன்பு சமர்ப்பித்தனராம். 1653-ல் தயாரிக்கப்பட்ட 'அரசாங்கப் பத்திர'த்தின் மூலம் க்ராம்வெல் இரக்ஷகர் பதவியை ஏற்றாரல்லவா? அந்த புதிய பத்திரத்தின்படி பழைய அரசியல் முறை முழுதையும் மீண்டும் ஸ்தாபிக்க முயற்சி செய்யப்பட்டது. ஆனால் 'அரசர்' என்ற சொல்லைச் சில தீவிர வாதிகள் வெறுத்தனராதலால், அந்தப் பெயரை விலக்கிவிட்டு, க்ராம்வெல் அவருடைய ஆயுள் முழுதும் இரக்ஷகரென்ற பெயரை வகித்திருப்பதென்றும், தமக்குப் பின் அப்பதவியை வகிப்பதற்கு ஒருவரை அவரே நியமிப்பதென்றும் ஷெ பத்திரத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மேலும், லார்டு சபையும் வேறுபெயருடன் மறுபடி நிலைநாட்டப்பட்டது. இவ்வாறு

பழையமுறை முழுவதும், சில நாமரூபபேதங்களுடன் தலையெடுக்க வழியேற்பட்டது. ஆனால் 1658-ல் க்ராம்வெல் இறந்து போனாாத லால், அந்த அரசியல் முறை செவ்வையாக நடைபெறுவதற்கு இடமில்லாது போயிற்று; அவருடைய குமாரர் அவரைப் பின் பற்றி இரக்ஷகர் பதவியை வகித்துப் பார்த்தார். ஆனால் மகா சூர ராகிய க்ராம்வெலேயே வதைத்தவையான அரசியல் வியவகாரங் களை அவருடைய குமாரரால் நிர்வகிக்க முடியவில்லை. ஆதலால் அந்தக் குழப்பத்தில் இருப்பதை வெறுத்த புதிய இரக்ஷகர் 1659-ல் தமது பதவியை இராஜீநாமாச் செய்துவிட்டு விலகிக்கொண்டார். அரசரும் ஏற்படாமல் இரக்ஷகரும் இல்லாமல் போகவே, அரசாங் கமே ஸ்தம்பித்துவிடும் நிலைமை ஏற்பட்டது. க்ராம்வெலுக்கு அடங்கி யிருந்த சேனை வீரர்களது வசத்தில் சகல அதிகாரமும் வந்து அடங் கிப் போனதானாலும், அவர்கள் அநுபவமின்மையால் தயங்கலாயி னர். அவர்கள் உத்தியோகங்களைக் குறித்தும் அதிகாரத்தைக் குறித்தும் ஒருவருடனொருவர் சண்டையிட்டனர். கடைசியாக வகையில்லாமல் போகவே, க்ராம்வெலினால் கலைக்கப்பட்ட 'ரம்ப் சபை மீண்டும் கூட்டப்பட்டது. அந்தச் சிறிய சபையினருடைய திறமையும் புத்தி கூர்மையும் முன்னரே தெரிந்து போயிருந்தன. எங்கும் குழப்பமும் கிளர்ச்சியும் அமைதியின்மையுமே அதிகரித்து நின்றன. கடைசியாக ஒரேயொரு வழி தோன்றியது. அதாவது முதல் ச்சார்லஸின் குமாரரை அழைத்து அவரிடம் அரசியலை ஒப்படைப்பதே நலமாகத் தோன்றியது. அரசனில்லாத ஆட்சி எவ்வளவு அழகாய் நடைபெற்றதென்பதைக் கண்ட ஜனங்களெல் லோரும் நெடுங்காலமாய் இருந்து வந்த பழைய ஆட்சி முறையே சிறந்ததென உணர்ந்தனர். மாங்க் (Monk) என்ற ஒரு தளகர்த்தர் அவ்விஷயத்தில் முயற்சிசெய்ய நினைத்து, லண்டனை நோக்கிச் சென்றார்; வழியில் பலர் அவருடன் சேர்ந்து கொண்டனர். மாங்க் தைரியத்துடன் தமது வேலையைச் செய்யத் தொடங்கி, முதலில் பார்லிமென்ட் சபையைப் பூர்த்தியாக்கினார். அதாவது ரம்ப் என்ற சிறிய சபையானது 'நீண்ட பார்லிமென்டின் 'ஒரு பகுதி என்பதும் ப்ரைட் என்பவர் அச்சபையில் பலரை பலவந்தமாக வெளியேற் றியதும் தெரிந்த விஷயங்கள். அவ்வாறு வெளியேற்றப்பட்ட அங்

கத்தினரெல்லோரையும் மாங்க் வரவழைத்து, சட்டப்படி, அந்தப் பார்லிமென்ட் முடிவுபெற வேண்டுமென்று ஏற்பாடுசெய்தார். ஏனெனில் 1640-ல் கூடிய 'நீண்ட பார்லிமென்ட்' அதுவரையில் முற்றிலும் அழிக்கப்படாமல், குற்றுயிராய்த் தொடர்ச்சியாக இருந்தே வந்தது. ஆகவே அதை நீடித்திருந்த பார்லிமென்ட் என்று குறிப்பது நியாயமானதே. அதை கிரமப்படி கலைத்து விடுவதற்கு முன் மாங்க் சேனைத் தலைவாது பதவியை யடைந்து அதைக் கலைத்தார்.

அதன் பிறகு, கொலையுண்ட அரசரின் குமாரரான இரண்டாவது ச்சார்லஸ் அப்பொழுது ஐரோப்பாவில் இருந்து வந்தார். 1660-ல் அவர் 'ப்ரேடா உறுதிமொழி' (Declaration of Breda) என்ற ஓர் அறிக்கையை வெளியிட்டு, அதில், தாம் அரசரான பின், தமது தந்தைக்குப் பகைவராயிருந்தவர்களை மன்னிப்பதாகவும், பார்லிமென்டின் விருப்பப்படியே தாம் நடந்து கொள்வதாகவும், கூடிய வரையில் மத சுதந்திரம் அளிப்பதாகவும் வாக்குறுதி செய்தார். உடனே ஜனப்பிரதிநிதிகளடங்கிய ஒரு * கன்வென்ஷன் சபை கூடி, ச்சார்லஸை வரவழைத்து அவருடைய பிறப்புரிமையையும் அவருடைய மூதாதையரின் முடியையும் ஒப்புக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டனர். இரண்டாவது ச்சார்லஸுக்கு பட்டாபிஷேகம் நடந்தேறியது. புதியனவாய்ப் புகுந்த அரசாட்சி முறைகள் ஒழிய, பழைய முறை மீண்டும் ஸ்தாபிக்கப் பெற்றது. அது ரேஸ்டோரேஷன் (Restoration) என்று குறிக்கப்படுகிறது. (திரும்பவும் மீளுதல் என்பது அதன்பொருள். இங்கிலன்டு தேசத்தின் சரித்திரத்தில் அரசாது தொடர்ச்சியான ஆட்சியின் நடுவில், சில வருஷகாலம் அரசரில்லாத ஜனநாயக ஆட்சியை ஸ்தாபிக்கச்செய்த முயற்சி பலிதமடையாமல் போயிற்று. அந்த இடைக்காலத்தில் பிரபலஸ்தர்களாய் இருந்தவர்களுள் க்ராம்

* ஜனப் பிரதிநிதிகளடங்கிய சபையை சட்டப்படி அரசர் கூட்டினால்தான் அதற்கு 'பார்லிமென்ட்' என்ற பெயர் வரும். ஆனால் மேலே கூறியசபை அரசாலன்றி, மாங்க் முதலியவர்களால் கூட்டப் பெற்றதாகையால், அது 'கன்வென்ஷன்' (Convention) என்று குறிக்கப்பட்டது.

வெல் ஒருவரே தமது அதீதமான திறமையாலும் பராக்கிரமத்தினு லும் மேன்மைபெற்றிருந்தார். ஆனல், அவர் எடுத்த முயற்சியில் வெற்றிபெறவில்லை. அதற்குப் பல காரணங்கள் இருந்தன. க்ராம் வெல் களங்கமற்ற மனத்தோடு நடந்து கொண்டா ரென்பது நிச்சயமான விஷயமே. அவர் அமைதியும், செங்கோலும், வியா பாரமும், க்ஷேமமும் ஏற்படவேண்டுமென்று உண்மையாகப் பாடு பட்டார். ஆனல் அப்பொழுதிருந்த தேசநிலைமையில், அவர் தவறி விழாமல் முன்செல்லுவது கடினமாயிருந்தது. சேனபலத்தை வைத்துக்கொண்டிருந்தாலும்கூட, நிரந்தரமான அரசியல் முறை யொன்றை ஸ்தாபிக்க அவரால் இயலவில்லை. அவர் மாறிமாறிப் பல பரீட்சைகள் செய்து பார்த்தார். ஒன்றாகிலும் அநுபவத்தில் நிலைத்துநிற்கவில்லை. ஏனெனில் இங்கிலண்டு தேசம் பண்டைக் காலத்திலிருந்து அரசனொருவனலேயே ஆளப்பட்டு வந்திருந்தது. ஆதலால், அக்கிரமமாக நடந்துகொள்ளும் அரசனை எதிர்ப்பதற்கு ஜனங்கள் முன் வந்தாலும், அரசனை அடியோடு அழித்து, ஜன நாயக ஆட்சியை ஏற்படுத்த எவரும் விரும்பவில்லை. அதுமாத்திர மன்றி, கொலையுண்ட ச்சார்லஸைப் போற்றுவதும், ச்சார்லஸை விடக் கடுமையாக ஏகாதிபத்தியம் நடத்திய க்ராம்வெலை வெறுப் பதும் அதிகரித்தன. எப்பொழுதும் புரட்சிகளையும் ஆடம்பரமான மாறுதல்களையும் வெறுக்கும் குணமுடைய இங்கிலீஷ்காரர்கள் புதிய புதிய இராஜீயப் பரீட்சைகள் செய்வதில் நாட்டங்கொள்ளா மல்,அவைகளைப் பெரும் தீங்குகளாக மதித்தனர். முடிதரித்த மன்ன னின் உதிரத்தின்மேல் நிர்மாணிக்கப்பட்டதான ஜனநாயக முறை எல்லோருக்கும் பயங்கரமாகவும் அசங்கியமாகவும் தோன்றியது. இங்கிலண்டின் இராஜீய வாழ்க்கை முற்றிலும் குழப்பமாக இருந் தது. ஒற்றுமை என்பது காண அரிதாயிருந்தது. 'ரம்ப்' சபையாரும் சேனவீரர்களும், வெவ்வேறு மதத்தினரும் தம்தம் மனப்போக்கை மாற்றுமல் பிடிவாதம் செய்தனர். இப் பல கட்சியினரும் ஒருவரை யொருவர் வெட்டி மடித்துக்கொள்ளாமல் பார்த்துக்கொள்ள ஒரு பராக்கிரமசாலி வேண்டியிருந்தது. அந்த வேலையை க்ராம்வெல் ஏற்றுக்கொண்டார். ஆனலும், தேசத்தினரது அந்தரங்கமான அன் பையும் ஆதரவையும் பெற அவரால் இயலாமல் போய்விட்டது.

அவரிடம் பலர் அச்சம் கொண்டனரேயன்றி, அன்பும் அநுதாபமும் கொள்ளவில்லை. அவர் அதிகாரம் பெற்ற சமயத்திலும் தேசத்தில் ஒற்றுமை இல்லை; அவர் அதிகாரம் வகித்திருந்தபொழுதும் ஒற்றுமையை ஸ்தாபிக்க அவரால் முடியவில்லை. பல விஷயங்களில் அவர் தமது தேசத்தினரைவிட முன் யோசனையான நோக்கங்களைக் கொண்டிருந்ததே அவர் வெற்றியடையாமல் செய்து வந்தது. இராஜ விசுவாசம் என்னும் ஆழ்ந்த ஊற்று ஜனங்களுடைய ஹிருதயத்திலிருந்து அவ்வளவு எளிதில் வற்றிப்போவதாயில்லை. ஆதலால் குடிஜனங்களெல்லோரும் மிகுந்த குதூகலத்தோடு புதிய அரசரைக் கொண்டாடி வரவேற்றனர். ஆனால் அன்னியநாட்டு வியவகாரங்களில் க்ராம்வெல் அழியாத புகழை உண்டாக்கிக்கொண்டார். துரைத்தன பரிபாலனமென்பது தேசத்தின் நலத்தையும் தேசீய கௌரவத்தையும் அதிகப்படுத்துவதென்று வைத்துக்கொண்டுபார்த்தால் க்ராம்வெலின் ஆட்சி புகழ்ச்சிக்குரியதென்றே கூறவேண்டும். அவர் பரீட்சித்துப் பார்த்த எந்த முறையும் நீடித்து நிற்கவில்லையென்பது உண்மையானாலும் அவர் நிர்வாகத்திறமை அற்றவர் என்று நினைத்தல் கூடாது. அவர் காட்டிய உறுதியும், பலமும், திடமான போக்கும், தீர்மான புத்தியும் எல்லோரையும் பிரமிக்கச் செய்தன. அவரிருந்த காலத்தில் அவரது மேம்பாட்டைப் பலர் அறிந்துகொள்ளாமல் போனாலும், பிற்காலத்தில் இங்கிலீஷ்காரர்கள் அவரைப் புகழ்ச்சியாகவே கொண்டாடத் தலைப்பட்டனர். ஸடூவர்ட் மன்னர்களின் ஆட்சி முழுதும் நீடித்த அக்கிரமமான விஷயமாகவே இருந்துவந்தது. அதனிடையில் சொற்பகாலம் க்ராம்வெல் தோன்றி நடித்துவிட்டுச் சென்றது காரிருளில் மின்னல் தோன்றி மறைந்ததுபோல இருந்தது. ஸ்டூவர்ட் மன்னர்களின் துணிபின்மை, பலஹீனம், தீர்மானமின்மை, சலன புத்தி முதலிய குணங்கள் அதிகரித்து நாட்டைச் சீர்குலைத்திருந்த தருணத்தில் அவைகளுக்கு முற்றிலும் மாறான குணங்கள் வாய்ந்த சுத்தவீரர் தோன்றி சொற்பகாலம் அரசாங்கத் தேரை ஓட்டிய சம்பவம் குன்றின்மேல் வைத்த விளக்குபோல என்றும் அழியாமல் ஒளிரத்தக்கதாயிருந்தது. ஜனநாயக தத்துவம் ஓங்கி நிற்பதாகக் கருதப்படும் இந்நாளிலும் அது பூர்ணமாக அநுஷ்டிக்கப்படாதிரு-

கையில், 17-ம் நூற்றூண்டில், உள்நாட்டுப் போரினுல் அலுத்துத் தளர்வுற்றும் மத வேற்றுமைகளால் பிளவுபட்டு மிருந்ததான அந்த தேசத்தில் ஜனநாயக தத்துவம் சரியாக நடைபெருமல் போனது அச்சரிய மானதல்ல. அதனுல், க்ராம்வெலின் திறமைக்கு அதிக மான களங்கமும் எற்பட்டு விடாது. மேலும் அவர் செய்த இராஜீயப் பரீட்சைகள் சரியானவைகளோ, தவறுனவைகளோ, ஆனுலும் அர சாது குலத்தைச் சேராத ஒருவர் பத்துவருஷ காலத்திற் கதிகமா கவே மூன்று தேசங்களேயும் தமது ஆட்சிக்குட்படுத்தி அடக்கிவைத் திருந்தது அசகாய சூாருக்கன்றி மற்றவரால் சாதிக்கக் கூடாத ஒப்பு யர்வற்ற பராக்கிரமச் செயலென்பதற்கு ஐயமே இல்லை.

---

## 32-வது அதிகாரம்

---

### இரண்டாவது ச்சார்லஸ்

(1) அரசாது ஆட்சி மீண்டதனுல் நேர்ந்த மாறுதல்கள்: புதிய அரசாது போக்கு :—1660-ல் அரசரை அழைத்துவந்து சிம் மாதனமேற்றியதில் அதிகமான பிரயாசை எற்படவில்லையானுலும், அதன் பிறகு, நிர்வாக விஷயங்களைச் சீர்திருத்துவது அவ்வளவு சுல பமாக இருக்க வில்லை. மேலும், அரசர் பட்டத்திற்கு வந்தபின் க்ராம் வெலின் எற்பாடுகள் அசட்டை செய்யப்பட்டன. பழையபடி பார்லிமென்ட் சபை முதலிய துரைத்தன அங்கங்கள் புத்துயிர் பெற் றுத் தளிர்த்தன. மேலும், 'நீடித்திருந்த பார்லிமென்ட்' சபை சில முக்கியமான சட்டங்களை இயற்றி முதல் ச்சார்லஸின் அதிகாரத் தைக் கட்டுப்படுத்தி யிருந்ததல்லவா? ஷெ சட்டங்கள் தள்ளுபடி ஆகாமல் இருந்தமையால், புதிய அரசர் தமது தந்தை பாட்டனுர் முதலியோரைப்போல சுயேச்சாதிகாரம் நடத்தக் கூடாமல் போயி ற்று. அதுவன்றி, பல நுட்பமான வியவகாரங்களைப் புதிய அரசர் தீர்க்கவேண்டிய தாயிற்று. ப்யூரிடன் பிரமுகர்களே அரசரைத் திருப்பியழைத்திருந்தாலும், அவர் அரசியலை எற்றுக்கொண்ட பின் னர், அதற்கு முன் ஸ்டூவர்ட் மன்னர்களுக்கு வலது கைகள் போல

இருந்துவந்த சிலர் முன் போல விசேஷமான செல்வாக்கை யடை யும் பொருட்டு பகிரங்கமாக முயற்சி செய்தனர். ப்யூரிடன் பிர முகர்களையும், அவர்களையும் திருப்தி செய்விப்பது ச்சார்லஸ் மன் னருக்கு சாத்தியமற்றதா யிருந்தது. தொடக்கத்தில் ஜனங்களெல் லோரும் ஒரே முகமாய் அரசரை ஆதரித்துப் பாராட்டியதன்றி தமக்கு நற்காலம் பிறந்துவிட்டதென்றும்பழைய சீர்கேடுகள்மறைந்து விடுமென்றும் நம்பினர். பார்லிமென்ட் சபையினர் புதிய ஊக்கத் தில் சில சட்டங்களை இயற்றத் தொடங்கினர்; அதாவது, ப்ரெடா உறுதி மொழியை ஆதாரமாகக்கொண்டு அவர்கள் "காப்புச்சட்டம்" (Act of Indemnity) என்று ஒரு சட்டத்தை நிறைவேற்றி, முதல் ச்சார்லஸ் மன்னருக்கு விரோதமாக நடந்துகொண்டவர்கள் இராஜத் துரோகக் குற்றத்திற்கு இலக்கானவர்களானலும், அவர்களுக்கு எவ்வித தண்டனையும் விதிப்பது கூடாதென்று தீர்மானித்தனர். ஆனல் அரசரைக் கொல்லுவதற்கு உடந்தையாயிருந்தவர்கள் மாத் திரம் தண்டனை யடைந்தனர். அவர்களில் சிலர் மரண தண்டனை பெற்றனர். க்ராம்வெலின் சவத்தை அதிருந்த கல்லறையிலிருந்து வெளியிலெடுத்து, தூக்கு மரத்தில் மாட்டினர்கள்! அரசாது கட்சி யைச் சேர்ந்தவர்களுக்கு க்ராம்வெல் மீது அவ்வளவு கோபம் ஏற்பட் டிருந்தது. மேலும் க்ராம்வெல் இரக்ஷகராக இருந்து செய்த சட்டங் கள், தீர்மானங்கள் ஆகியவற்றில் பல தள்ளுபடி செய்யப்பட்டுப் போயின. ஆனல் 'நீடித்திருந்த பார்லிமென்ட்' செய்திருந்த முக்கிய மான சட்டங்கள் பல மாருமல் இருந்தன. 1651-ல் டச்சுக்காரருக்கு விரோதமாக இயற்றப்பட்ட கப்பல் வியாபாரச் சட்டம் மீண்டுமொரு முறை வற்புறுத்தப்பட்டது, ச்சார்லஸுக்கு வேண்டிய பணத் தொகைக்கும் பார்லிமென்டார் அநுமதி கொடுத்துவிட்டனர். இவ் வாறு இரண்டாவது ச்சார்லஸின் ஆட்சி அமைதியாகவே ஆரம்ப மாயிற்று. புதிய மன்னர் ஏற்கனவே அன்னிய நாடுகளில் சென் றலைந்து பற்பல பாடுகள்பட்டு வந்தவராதலாலும், தமது தந்தையின் முடிவை அவர் மறவாமலிருந்தமையாலும், அவர் பார்லிமென்டுடன் ஒத்துப்போய் ஜனங்களுடைய மனதை அநாவசியமாகப் புண்படுத் தாமல் சாமர்த்தியமாகவும் நயமாகவும் நடந்து வந்தார்.

ஆனல் புயலுக்குப் பின் அமைதி தொடர்வதுபோல க்ராம் வெலின் ஆட்சியாகிய புயலுக்குப்பின் அதற்கெதிரிடையான ஓர் இயக்கம் ஜனங்களுக்குள் உண்டாயிருந்தமையால், மேலே விவரிக் கப்பட்டபடி சில கலகக்காரர்கள் மன்னித்து விடப்பட்டது பலருக்கு சம்மதமாக இல்லை. 1661-ல் கூடிய புதிய பார்லிமெண்டில் அந்த உணர்ச்சியைக் கொண்டவர்களே பெரும்பாலோரா யிருந்தனர். அவர்களுடைய முயர்சியின் பயனாக மதஸ்தாபனத்தில் ப்யூரிடன் இனத்தாருக்கு சிறிதளவு செல்வாக்குக் குறைந்து போயிற்று. அதி தீவிரமான கொள்கைகளை ஆதரிக்காத மிதவாதிகளே மதகுருமார் களாய் நியமிக்கப்பட்டனர். எனவே இரண்டாவது ச்சார்லஸைத் திருப்பி யழைப்பித்துச் சிம்மாதன மேற்றுவதற்கு, பல ப்யூரிடன் வர்க்கத்தினரே காரண பூதராயிருந்தனராலும் சீக்கிரத்தில் அவர் களுக்கு அதிருப்தி யுண்டாகும்படி துரைத்தன நிர்வாகம் நடை பெற்று வந்தது.

புதிய அரசர் பலஅம்சங்களில் அவரது தந்தையைப்பொலின்றி வேறுபட்டிருந்தார். அவர் சுய நலம் கருதியவரே யானலும் விஷயங்களை கிரகித்துக்கொண்டு சமயத்திற்கேற்றபடி நயமாக நடந்துகொள்ளும் திறமை யுடையவராயிருந்தார். மற்ற ஸ்டுவர்ட் மன்னர்களுக்கு அமையாதிருந்த அந்த ஓர் அம்சமே அவரைக் காப் பாற்றிக்கொண்டு வந்தது. ஜனங்களைப் பகைத்துக் கொண்டால், அபாயம் நேரிடுமென்பதை அறிந்தவரான அரசர் பார்லிமெண்ட் சபையையோ, அல்லது, அதன் பெரும்பான்மையினரையோ தமக்கு அநுகூலமாக்கிக்கொண்டார்.

1661 முதல் 1665 வரையில் பார்லிமெண்ட் சபையார், க்ராம் வெலுக்கு சாதகமாயிருந்த தீவிர வாதிகளின் மீதிருந்த ஆத்திரத்தால், அவர்களுக்கு துன்பம் தரத்தக்க சில சட்டங்களைத் தொடர்ச்சியாக இயற்றினர். அவைகளுக்குப் பொதுவாக க்ளாரென்டன் சட்டத் தொகுதி (Clarendon Code) என்று பெயர். அச்சட்டங்களினல் முதலாவது ச்சார்லஸூம், லாட் என்பவரும் செய்த மத ஏற்பாடு மீண்டும் ஸ்தாபிக்கப்பட்டது. அப்பொழுது இங்கிலண்டில் இருந்த மதக்கட்சிகளின் வேற்றுமை பின்வருமாறு. காதலிக்

மதத்தினர் பழைய முறையையும் போப்பின் ஆதிக்கத்தையும் ஆதரித்தவர்கள்; அவர்களது தொகை மிகவும் சொற்பமாகவே இருந்தது. போப்பின் ஆதிக்கத்தை மீறிய, ப்ராடெஸ்டன்ட் என்ற பொதுப் பெயரைக் கொண்ட வர்க்கத்தினருள் உள்பிரிவுகள் ஏராளமாக இருந்தன. போப்பின் அதிகாரத்தை வெறுப்பதில் மாத்திரம் அவர்கள் ஒற்றுமையாக இருந்தனரேயன்றி, மற்ற கொள்கைகள் சம்பந்தப்பட்டவரையில் அவர்களுக்குள்ளும் பேதமிருந்து வந்தது. இவ் வேற்றுமைகளை விவரிப்பதென்றால் கிரிஸ்தவருடைய மதஸ்தாபனம், மதச்சடங்குகள் முதலியவைகளை நாம் விரிவாக அறிந்து கொள்வதவசியமாகும், ஆனால் பொதுவாக சில விஷயங்களை நாம் தெரிந்து கொள்ளலாம். ப்யூரிடன் அல்லது ப்ரெஸ்பிடீரியன் என்ற அதிதீவிர வாதிகள், மத விஷயத்தில் எவருடைய ஆதிக்கமுமின்றி, அவரவருடைய விருப்பத்தின்படி கடவுளை வணங்கும் உரிமை வேண்டுமென எண்ணியவர்கள். வைதிக மார்க்கத்தைப் பின்பற்றி, அர்த்தம் தெரியாத சடங்குகளையும் அடையாளங்களையும் அநுஷ்டிப்பது கேவலம் மூடத்தனமென அவர்கள் கருதினர். ஒரு குறிப்பிட்ட முறைப்படியோ, அல்லது, எக்காலத்திலோ தயாரிக்கப்பட்ட பிரார்த்தனைப் புஸ்தகத்தை அநுசரித்தோ மத வாழ்க்கையை நிர்ணயித்துக்கொள்ள வேண்டுமென்பதை அவர்கள் வெறுத்தனர். ஆனால், அவர்களைக் காட்டிலும் மிதவாதிகளா யிருந்தவர்கள் காதலிக் மதத்தினர் செய்ததுபோலஅதிகமான சடங்குகளையும் அர்த்தம் தெரியாத பழைய பழக்கவழக்கங்களையும் அநுசரிக்காமற் போனாலும், வெளிப்படையான இவ் கிரியாம்சங்கள் ஓரளவிற்கு இருப்பது அவசியமென எண்ணினார்கள். இன்னும் பல சிக்கலான சம்பிரதாயங்களிலும், மதகுருமார்களின் உத்தியோக விஷயத்திலும், மதஸ்தாபன நிர்வாகசம்பந்தமாகவும் அவர்களுக்குள் அபிப்பிராய வேறுபாடுகள் காணப்பட்டன. ஒவ்வொரு பிரிவைச் சேர்ந்தவரும் மற்ற பிரிவுகளைச் சேர்ந்தோரை வெறுத்து வந்தனர். எனவே, பார்லிமெண்டில் மத விஷயத்தில் மிதவாதக் கொள்கையினரே நிறைந்திருந்தனராதலால், அவர்கள் ப்யூரிடன் இனத்தாருக்கு விரோதமான சில கட்டுப்பாடுகளை சட்டத்தின் மூலமாக ஏற்படுத்தினர். பிரார்த்தனைப் புஸ்தகத்தைப் பின்பற்றியே பூஜை முதலிய சடங்கு

-கள் நடைபெற வேண்டுமென்றும், மதஸ்தாபன வழக்கத்திற்கு மாறுக, ஐந்து பேருக்கதிகமாய்க் கூட்டம்கூடி பூஜை முதலிய மத காரியங்கள் நடத்தியவர்களைக் கடுமையாக தண்டிக்க வேண்டுமென்றும் சட்டம் செய்யப்பட்டது. ஷ்டி சட்டங்களின் பயனுக மதஸ்தாபனத்தில் வேலை பார்த்துவந்த பல ப்யூரிடன் குருமார்கள் விலகித் தனிமையில் பிரார்த்தனையை நடத்த யத்தனித்தனர். புதிய ஏற்பாட்டுக்கு இணங்கி வராமல் அம்மாதிரி தனித்துச் சென்றவர்கள் டிஸென்டர்ஸ் (Dissenters) அல்லது இணங்காதவர்கள் என்று குறிக்கப்பட்டனர். ச்சார்லஸ் அரசர் கூடிய வரையில் ப்யூரிடன்களுக்கு சுதந்திரமளிக்கத் தயாராயிருந்தனராலும், அவரது சகாக்களும், பார்லிமென்ட் சபையினரும் அவரை மீறி நடந்து கொண்டனர். 1665-ல் "ஐந்து மைல் சட்டம்" (Five Mile Act) என்ற சட்டமொன்று செய்யப்பட்டது. அதன்படி, மத ஸ்தாபனத்திலிருந்து விலகிக்கொண்ட குருமார்கள் பாடசாலைகளில் போதகராய் இருத்தல் கூடாதென்றும், பெரிய நகரங்களுக்கு ஐந்து மயில் தூரத்திற்குள் அவர்கள் வசிக்கக் கூடாதென்றும் விதி ஏற்படுத்தப்பட்டது. இவ்வாறு பார்லிமென்ட் சபையார் தமது ஆவேசத்தில் சிறிதும் யோசனையின்றி பல கடுமையான சட்டங்களை இயற்றி பலருக்குத் துன்பமிழைத்தனர். 'இணங்காதவர்க்கத்தினர்' பலர் தமது மதக்கொள்கைக்காக சிறை வாசமும் செய்தனர்.

ஓர் இயக்கம் கிளம்பி அடங்கியவுடன் அதே வேகத்துடன் அதற்கு எதிரிடையான இயக்கம் தோன்றுவது இயல்பாயிருக்கிறது. அதுபோல், ஒரு சமயம் அரசரை எதிர்த்துப் போர் புரிந்த இங்கிலீஷ் மக்கள், பத்து வருஷகாலம் அரசனில்லாத ஆட்சியைக் கண்டநுபவிக்கவே, மறுபடி அரசரை அடைவதில் எல்லையற்ற குதூகலம்கொண்டு, அரசருக்கு சிறிதளவாகிலும் விரோதமாயிருந்தவர்களையும் கடுமையாக தண்டிக்க உடன்தையாயிருந்தனர். எனவே அரசாது மீட்சியின் பயனுக சிம்மாதனத்தில் புதிய அரசர் ஏற்றப்பட்டதோடு, வேறு மாறுதல்களும் தோன்றின. புதிய அரசரது முயற்சியின்றி, பார்லிமென்ட் சபையே அம்மாதிரிவேலைச்

செய்தது. லாடும் முதலாவது ச்சார்லஸும் சேர்ந்து பார்லிமென்டின் அபிப்பிராயத்திற்கு விரோதமாய் பலவந்தமாய்ச்செய்த மாறுதல்களை, இரண்டாவது ச்சார்லஸின் காலத்தில் பார்லிமென்ட் சபை தானாகவே செய்துவிட்டது. கொல்லப்பட்ட அரசருக்குப் பெரிய பெரிய கௌரவங்கள் ஏற்பட்டன. இராஜ விசுவாசமென்பது எங்கும் ததும்பி நின்றது. ஸ்டூவர்ட் மன்னர்கள் தாம் தெய்வத்தின் பிரதிநிதிகள் என்று கூறி வந்ததை நம்பாமல் எதிர்த்த காலம்போக, அரசர் ஏதோ அதிமாநுஷப் பிறவியில் சேர்ந்தவர் என்று பெரும்பாலோர் எண்ணி அவரை வணங்கலாயினர். க்ராம்வெல் காலத்தில் ப்யூரிடன்கள் மேலோங்கி இருந்ததால், உண்மையான மத வைராக்கியமும் நாட்டில் பரவியிருந்தது. உதாரணமாக, நாடகசாலைகள் முதலானவை அப்பொழுது மறைந்திருந்தன. புதிய அரசர் வந்ததும் ஜனங்களுடைய மனம் முற்றிலும் கேளி விலாஸங்களிலும், விளையாட்டுகளிலும், வேடிக்கைகளிலும் திரும்பிவிட்டது. ச்சார்லஸ் அரசர் கோலாகலப் புருஷராய் விளங்கினர். அரண்மனையில் எப்பொழுதும் பாட்டும் கூத்துமாகவே நிறைந்திருந்தன. இங்கிலன்டே முழுவதும், கிழப்பருவத்தின் தளர்ச்சியை விட்டு, புதிய யௌவனமடைந்து சந்தோஷ ஆரவாரமும் களிப்பும் காட்டியதோவெனும்படி மாறியது.

அரசரை மறுபடி பெற்றதனால் இங்கிலன்டில் மாறுதல்கள் ஏற்பட்டதைப் போலவே, ஸ்காட்லன்ட் அயர்லன்ட் ஆகிய இரண்டு தேசங்களிலும் மாறுதல்கள் தோன்றின. க்ராம்வெல் மூன்று தேசங்களையும் ஒன்றாகச் சேர்த்துப் பிணைத்து ஆண்டு வந்தது அவருடன் போய்விட்டது. ஸ்காட்லன்டில் மறுபடியும் தனியான பார்லிமென்ட் ஏற்பட்டு விட்டது. ஆனால் புதிய அரசர் வந்தவுடன் இரண்டு தேசங்களும் சுதந்திரத்தைப் பெற்றுவிட்டில்லை. க்ராம்வெலினிடம் அடங்கியிருந்த அவர்கள் அவ்விதமே இருக்க வேண்டியதாயிற்று. ஸ்காட் ஜனங்களால் இங்கிலீஷ்காருடைய ஆதிக்கத்தை முற்றிலும் விலக்கிவிடக் கூடவில்லை. அவ்விதமே க்ராம்வெலின் காலத்தில் ப்யூரிடன்களால் ஆக்கிரமிக்கப்பட்ட அயர்லன்ட் இப்பொழுது மிதவாத இங்கிலீஷ்காரர்

வசம் அகப்பட்டுத் தவித்தது. அயரிஷ்காரருடைய நிலங்களில் பெரும்பாகம் இங்கிலீஷ்காரருக்குச் சொந்தமாய்விட்டது. அதனால் அயரிஷ்மக்கள் ஏழ்மை நிலைமையடைந்து பரிதவித்து, மறுபடியும் சுயாதீனமடைவதற்குரிய வழியைத்தேடிக்கொண்டிருந்தனர்.

மேலே கூறியபடி பழைய இராஜீய நிலைமை மறுபடி இங்கிலண்டில் திரும்பியதனாலேயே பார்லிமென்டார் செய்த உள்நாட்டுப் போரினால் எவ்விதமான பலனும் ஏற்படவில்லை என எண்ணுதல்கூடாது. அதனால் தேசத்திற்கு நாளடைவில் பெரிய நன்மையே உண்டாயிற்று. ஏனெனில். முதல் ச்சார்லஸின் கதி பிற்கால அரசர்களுக்கு எப்பொழுதும் நினைவிலிருந்து வந்ததாகையால் பொதுஜன அபிப்பிராயத்திற்கு மாறாக நடந்து கொள்வதன் அபாயத்தை அவர்கள் உணர்ந்தனர். ஆதலால் பிற்காலத்தில் இங்கிலீஷ் பார்லிமென்டுக்கே சகலமான அதிகாரமும் கிடைக்கும் வழியை அந்த உள்நாட்டுப் போர் காண்பித்தது. அது மகத்தான ஓர் அநுகூலம் என்பதில் தடையில்லையல்லவா? அந்த அநுகூலத்தை, ஒருகால், அத்தனை உயிர்ச் சேதமும் துன்பமுமின்றியே அடைந்திருத்தல்கூடும். ஆனால் பொதுவாக ஸ்டூவர்ட் அரசர்களுடைய மதியீனத்தினாலும், முக்கியமாக முதல் ச்சார்லஸின் திறமையின்மையாலும் அந்தச் சேதத்தைத் தடுப்பது எவராலும் சாத்தியமில்லாமல் போயிற்று. அவ்வளவு பயங்கரமான கொலையும் கொள்ளையும் உயிர்ச்சேதமும் சம்பவித்த பின்பே அதிதீவிரமாகச் செல்லுவதன் அபாயம் பொதுஜனங்களுக்கும் தெரியவந்தது; பொதுஜன விரோதத்தைப் பெறுவதால் எவ்விதமான கெடுதல் நேரிடும் என்பது அரசருக்கும் விளங்கியது.

(2) **ச்சார்லஸின் அன்னியநாட்டு சம்பந்தம்** :—உள்நாட்டு இராஜ்ஜிய பரிபாலனத்தில் வெற்றியடையாத க்ராம்வெல் அயல் நாட்டு வியவகாரங்களில் தலையிட்டுக் கீர்த்தியுடன் திரும்பியதையும் ப்ரெஞ்சு மன்னருடன் சேர்ந்து, ஸ்பெயின் தேசத்தைத் தாழ்த்தியதையும் முன் அதிகாரத்தில் விவரித்தோமல்லவா? புதிய அரசரும் க்ராம்வெலின் வழியைப் பின்பற்றி ப்ரெஞ்சு தேசத்துடன் சிநேகத்தை விடாது பாராட்டியே நடந்துகொண்டார். அதனால்

புதிய அரசாது வருகை காரணமாக அன்னியதேச சம்பந்தத்தில் வெளிப்படையாகப் பெரும் மாறுதல் ஏற்படாமற்போனாலும், க்ராம்வெலும் ச்சார்லஸும் வெவ்வேறு முறைகளைப் பின்பற்றி, வெவ்வேறு நோக்கங்கொண்டு நடந்தமையால், அவர்களடைந்த பலன்களும் ஒன்றிற்கொன்று நேர் விரோதமாயின. இது பின்னால் விளங்கும். ச்சார்லஸ் ப்$^{2}$ரெஞ்சு தேசத்தாருடன் சேர்ந்துகொண்டதில் உடனே சில அதிருப்திகரமான காரியங்களைச் செய்ய நேர்ந்தது. அப்பொழுது ப்$^{2}$ரான்ஸ் தேசத்தை பதினான்காவது லூயி (Louis XIV) என்ற கீர்த்திவந்தரான அரசர் ஆண்டுவந்தார். ஐரோப்பா முழுதிலும் லூயி அரசரே அதிக பலத்தையும் மதிப்பையும் செல்வாக்கையும் பெற்றிருந்தார். ஆகவே, ஐரோப்பிய அரசியல் நிலைமையின் சமநீதித் தன்மையைப் பாதுகாக்கும் கொள்கையை, ச்சார்லஸ் பின்பற்றியிருந்தால், அவர் ஏற்கனவே பலாட்டியாக இருந்த லூயியுடன் சேர்ந்து அவருக்கு அதிகபலத்தை உண்டாக்குவதற்கு மாறாக, லூயியின் அளவுமீறிய பராக்கிரமத்தை அடக்கும் வழியைத் தேடியிருக்கவேண்டும். ஆனால், லூயியின் கீர்த்திப் பிரதாபத்தைக் கண்டு மயங்கிப்போனவர்போல ச்சார்லஸ் அவரையே சார்ந்து நின்றார். அதனால், அவர் ஏதாகிலும் நன்மையை யடைந்திருந்தாலாகிலும், அது உசிதமாயிருந்திருக்கும்; அதுவுமின்றி, அவர் அவமானமே யடைந்து திரும்பினார். ஸ்பெயின் தேசத்துடன் போர் செய்து டன்கர்க் என்ற நகரத்தை க்ராம்வெல் பெற்றாரல்லவா? 1662-ல் அதை ச்சார்லஸ் ப்$^{2}$ரெஞ்சுக்காரருக்கு விற்றுவிட்டார். அது இங்கிலீஷ்காரருக்கு அவமானத்தை உண்டாக்கியது. சுதேசாபிமானத்தையும் கவனியாமல், லூயியைக் களிப்பிக்கும் பொருட்டு, ச்சார்லஸ் அவ்விதம் செய்ததாகவே பலர் கருதினர். அதன்பின்னர் ப்$^{2}$ரெஞ்சு தேசத்தரசாது தூண்டுதலின்மேல் ச்சார்லஸ், போர்ச்சுகல்தேசத்து இளவரசி யொருத்தியை மணந்துகொண்டார். போர்ச்சுகல் தேசம் ஸ்பெயின் தேசத்திற்கு விரோதமாயிருந்ததாலேயே ப்$^{2}$ரெஞ்சு தேசத்தரசர் அந்த விவாகத்தை ஏற்பாடு செய்துவைத்தார். ஆனால், ச்சார்லஸ் அரசர் ஏராளமான ஸ்திரீதனம் பெற்றார். பம்பாய் நகரம் அப்பொழுது, போர்ச்சுகல்லுக்குச் சொந்தமாயிருந்தது. அந்தப் பட்டணமும் ஸ்திரீதனமாய்க் கொடுக்கப்பட்டது.

ச்சார்லஸ் அரசர் இந்தியாவில் வியாபாரம் செய்துவந்த கிழக்கிந்தி யக்கம்பெனிக்கு அதை அளித்தார். ஷி கம்பெனியார் சிறுகச் சிறுக அபிவிருத்தியடைந்து கடைசியில் இந்தியா தேசத்தைக் கைப்பற்றுவதற்கு அது அநுகூலமாயிருந்தது. எனவே, டன்கர்க் நகரத்தைக் கைவிட்டாலும் ச்சார்லஸுக்கு அதைக் காட்டிலும் முக்கியமான பம்பாய் நகரம் பிரயாசையின்றிக் கிடைத்தது. அக்காலத்திலிருந்தவர்களுக்கு பம்பாய் நகரத்தின் விசேஷத் தன்மை என்னவென்பது தெரியாமற்போனாலும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இந்தியாவில் நிலைப்பதற்கு அந்த நகரம் முக்கியமான பந்தக்கால்போல இருந்தது.

இங்கிலண்டின் வியாபாரத்தை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று ச்சார்லஸ் அரசரும் விரும்பினர். க்ராம்வெலின் காலத்தில் வியாபாரப் போட்டியினால் டச்சுக்காரருடன் யுத்தம் நேரிட்டது தெரிந்த விஷயம். அரசருடைய தம்பியும், யார்க் பிரபு என்ற பட்டம் பெற்றவருமான ஜேம்ஸ் என்பவர் கப்பற் படைக்குத் தலைமை வகித்து அந்த யுத்தத்தைத் தொடர்ச்சியாக நடத்தி வந்தார். டச்சுக்காரர் தமது வியாபார மேன்மையை இழக்காமல் நிலைநிறுத்திக் கொள்வதற்கு பகீரதப் பிரயத்தனம் செய்து வந்தனர். 1651-இங்கிலண்டில் இயற்றப்பட்ட 'கப்பல் வியாபாரச் சட்டம்' அவர்களுக்குப் பெரும் முட்டுக்கட்டையாக இருந்து வந்தது. 1665ல் ஷி இரண்டுதேசங்களின் வியாபாரிகளது போட்டி காரணமாகப் போர்தொடங்கியது. டச்சுக்காரர் மிகவும் திறமையாகப் போர் புரிந்து இங்கிலீஷ் கப்பல்களைச் சிதற அடித்தனர். இங்கிலீஷ் தலைவர்களும் கை தேர்ந்தவர்களேயானாலும், முன் யோசனையோடு நடந்து கொள்ளாமல் அவர்கள் ஏமாறிப் போய்விட்டனர். 1667-ல் இருகட்சியினரும் ஒருவரையொருவர் வெல்லமாட்டாமல் சமாதானத்திற்குவந்து யுத்தசமயத்தில் அவரவர் பிடித்துக்கொண்ட பிரதேசங்களை அவரவரே வைத்துக் கொள்வதென்று தீர்மானித்துக் கொண்டனர். அதனால் அமெரிக்காவில் நியூயார்க் (Newyork) என்ற முக்கியமான பிரதேசம் இங்கிலண்டுக்குக் கிடைத்தது. முதலாவது ஜேம்ஸின் காலத்தில் அமெரிக்காவில் இங்கிலீஷ்காரர் பலர் வியாபாரத்தின் பொருட்டும் மத சுதந்திரத்தின் பொருட்டும்

சென்று நிலைத்தனரல்லவா? கொஞ்சம் கொஞ்சமாக ஷெ வியாபாரிகள் பொருள் விர்த்தியும் சந்ததி விர்த்தியும் அடைந்து, வட அமெரிக்காவின் கிழக்குக் கடலோரப் பிரதேசங்களில் குடியேறி அதையே தமது சொந்த நாடாக்கிக் கொண்டனர். புதிய புதிய நாடுகளும் அவர்களுக்குக் கிடைத்து வந்தன. இவ்வாறு இங்கிலீஷ்காரர் கடல் வியாபாரத்தில் டச்சுக்காரரைத் தோற்கடித்து முதன்மையடைந்ததைப் போலவே, புதிய உலகமான அமெரிக்காவில் குடியேறி அந்தக் கண்டத்திலும் வியாபித்துப் போனதன்றி, இந்தியாவிலும் குடியேறி நிலைத்துக் கொண்டிருந்தனர். ஷெ சம்பவங்களினால், பிற்காலத்தில் ஓங்கிவளர்ந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைப் பற்றி அக்காலத்தவர் கனவு கூடக் காணவில்லையாயினும், இங்கிலண்டு தேசத்துச் சரித்திரத்தில் அவை மிக முக்கியமான சம்பவங்கள் என்பது வெளிப்படை. இங்கிலண்டுக்குக் 'கடலின் அரசி' என்ற பெயரும் புகழும் ஏற்படுவதற்கு அப்பொழுதே அஸ்திவாரம் போடப்பட்டது.

**(3) ச்சார்லஸின் மந்திரிகள் : துரைத்தனச் சீர்கேடு : உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்கள் : அந்தியகால மேம்பாடு:—** மிகுந்த குதூகலத்துடன் முடிசூடிய ச்சார்லஸ் அரசரிடம் ஜனங்களுக்கிருந்த மோகம் அதிக சீக்கிரத்தில் மறையும்படி அவருடைய இராஜ்ஜிய பரிபாலனம் நடந்து வந்தது. ஸ்டூவர்ட் வம்சத்தினருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் இயற்கையான ஏதோ ஒரு வேற்றுமை இருந்தது போலும். டச்சுக்காரருடன் யுத்தம் நடந்து வந்த சமயத்தில் லண்டன் நகரத்தில் இரண்டு பெரிய அவகேடுகள் நேர்ந்தன. 1665-ல் அங்கு பிளேக் வியாதி தோன்றி ஜனங்களின் உயிரைக் கொள்ளை கொண்டது; மறு வருஷத்தில் லண்டன் நகரத்தில் தீப்பிடித்து அதன் பாதி பாகத்தை அழித்துவிட்டது. அவ்விரு அவகேடுகளாலும் வருந்திய குடிமக்கள், அரசாது தர்பாரில் நடந்த குதூஹலத்தையும் கேளி விலாஸங்களையும் கண்டு ஆத்திரமடைந்தனர். ச்சார்லஸ் ட்2பிரெஞ்சு தேசத்தரசருக்கு அடங்கிக் கிடந்ததையும், துரைத்தனம் சீர்கெட்டுப் போனதையுங் கண்ட ஜனங்கள் அரசனை வெறுத்தனர். பார்லிமெண்ட் அவரிடம் வைத்திருந்த பயபக்தி

யையெல்லாம் திறந்து, அவரை எதிர்க்க முயன்றது. அந்தச் சபைக் குள்ளேயே ஊக்கமுள்ள அங்கத்தினர் சிலர் "நாட்டார் கட்சி" (Country Party) என்று ஒரு கட்சியை ஏற்படுத்திக் கொண்டு அதற்கு முன் முதல் ச்சார்லஸை எதிர்த்த வீரர்களைப் பின்பற்றி நடக்கத் துணிந்தனர். அப்பொழுது க்ளா/2ரன்டன் என்பவரே அரசருக்கு வலது கைபோல் இருந்து வந்தமையால், சீக்கிரத்தில் அவர் அபகீர்த்திக்கு ஆளானார். முதல் ச்சார்லஸின் காலத்தில் பா2க்லன்ட் என்பவரும் ஹைட் என்பவரும் அரசாது கட்சி யைச் சேர்ந்தனரல்லவா? ஷை ஹைட் என்பவரே க்ளா/2ரன்டன் பிரபுவானார். ச்சார்லஸின் துரைத்தனச் சீர்கேட்டிற் கெல்லாம் அவரே உத்தரவாதி என்று எல்லோரும் எண்ணினர். கடைசியாக பொதுஜன விருப்பத்திற்கிணங்கி 1667-ல் அவரை ச்சார் லஸ் உத்தியோகத்திலிருந்து நீக்கி, அப்பல் நாட்டிற்குச் செல்லு மாறு செய்தார். ஆனால் உண்மையில் க்ளா/2ரன்டன் ஒருவர் மாத் திரம் மேலே குறித்தபடி உத்தரவாதியல்லர். தம்மீது பழி ஏற் படாதிருக்கும் பொருட்டு, ச்சார்லஸ் அவரைக் காட்டிக்கொடுத்து விட்டுத் தாம் தப்பித்துக் கொண்டார். க்ளா/2ரன்டனுடைய வீழ்ச்சியுடன் ச்சார்லஸின் ஆட்சியின் முன் பகுதி முடிவடைகி றது. அந்தப் பகுதியில் ச்சார்லஸ் ஏதோ அதிருஷ்ட வசமாக, ஜனங்களால் போற்றப்பட்டு வந்தார்; க்ளா/2ரன்டன் பிரபு வும் இராஜ்ஜியத்தில் ஓரளவிற்கு சர்வாதிகாரம் வகித்து வந்தார். ஆனால் அவர் சென்ற பிறகு நிர்வாகம் அதிக கேவலமாய் விட்டது. அப்பொழுது தேசத்தில் இரண்டு இராஜீயக்கட்சிகள் இருந்தன. ஒன்று அரசரைச் சேர்ந்த கட்சி; மற்றொன்று அதற்கு எதிரிடை யான நாட்டாரின் கட்சி. க்ளா/2ரன்டனை அகற்றும் விஷயத்தில் அவ்விரு கட்சியினரும் ஒத்துழைத்தனராலும் அதன்பின் அவர் களுக்குள்ளேயே அவ்வளவு அதிக ஒற்றுமை இல்லாது போயிற்று. ஆனாலும், அவ்விரு கட்சிகளைச் சேர்ந்த ஐவர் ஒன்றுகூடி துரைத் தன நிர்வாகத்தை நடத்தத் தொடங்கினார்கள். அவர்களது பெயர்கள் க்ளிப்2போ2ர்ட் (Clifford), ஆர்லிங்டன் (Arlington), பக்கிங் ஹாம் (Buckingham), ஆஷ்லி (Ashley), லாடர்டேல் (Lauder-

dale) என்பவை. அவர்கள் ஐவரும் நாட்டில் அமைதி ஏற்படுத்தவும் செங்கோல் நடத்தவும் முயன்றனர். அவர்களது சேர்க்கை கா/2வால் (Cabal) என்று குறிக்கப்படுகிறது. அதாவது, ஷெ ஐவர்களது பெயர்களின் முதல் எழுத்துக்களைச் சேர்த்துப் படித்தால் இங்கிலீஷில் கா/2வால் என்று ஆகிறது. ஷெ மந்திரிகளுடைய இராஜீய நடவடிக்கைகள் முதன்முதலில் நன்மை பயப்பனவாகவே இருந்தனவாலும், அநுபவத்தில் எவ்வித பலனும் ஏற்படவில்லை, ஏனெனில் அவர்கள் பேராசையும், கர்வமும், சுய நல நாட்டமும் உடையவர்கள். அதனாலேயே அவர்களை கா/2வால் என்று ஏளனமாகச் சுட்டிவந்தனர். அப்பொழுது ப்2ரெஞ்சு மன்னரான லூயி தமது பலத்தை மிதமிஞ்சி விருத்தி செய்துகொண்டு வந்தார். இதர தேசங்களுடைய க்ஷேமத்திற்கு அவரால் அபாயம் நேரிடக்கூடிய நிலைமையில், இங்கிலண்டின் துரைத்தனத்தார் அவருக்கு எதிரிடையாக இருந்து அவரது அதிக்கிரமமான வளர்ச்சியை அடக்குவதே நியாயமான செய்கையாகும். ஆனால் லூயி என்பவரிடம் வசியப்பட்டுப் போயிருந்த ச்சார்லஸ் 1670-ல் டோவர் என்ற இடத்தில் இரகசியமாக ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி டச்சுக்காரரையும் ஸ்பெயின் தேசத்தாரையும் எதிர்த்து அடக்கும் விஷயத்தில் லூயிக்கு ச்சார்லஸ் உதவுவதென்றும், அதைக்கருதி இங்கிலண்டில் கா/2தலிக் மதத்தை ஸ்தாபிக்கவும், எதிரிகளை அடக்குவதற்கும் லூயி ச்சார்லசுக்குப் பணத்தினாலும் ஆள்களினாலும் உதவி செய்வதென்றும் இருவரும் ஏற்பாடு செய்துகொண்டனர். கா/2வால் சபையினருக்குக்கூட அந்த உடன்படிக்கையின் விவரம் எதுவும் தெரிவிக்கப்படவில்லை.

டோவர் உடன்படிக்கையின்படி டச்சுக்காரர் மீது 1672-ல் லூயியும் ச்சார்லஸும் சேர்ந்து யுத்தம் தொடங்கினர். ச்சார்லஸ் அரசாது பொக்கிஷம் வறண்டு போயிருந்தது. அவர் வேறுவழியில்லாததைக்கண்டு, கஜானாவில் சில தனவந்தர்கள் ஒப்படைத்து வைத்திருந்த பணத்தைத் திருப்பிக் கொடுக்க மறுத்து, அதை யுத்தச் செலவுக்கு எடுத்துக் கொண்டார். அதிலிருந்து ஜனங்களுக்கு அவர் மீது மிகுந்த அதிருப்தி ஏற்பட்டது. மேலும் க்ராம்வெலின் காலத்தில் நடந்த டச்சுக்காரர் போரிலும், ச்சார்லஸின் காலத்தி

லேயே 1665—67-ல் நடந்த டச்சுக்காரர் போரிலும் ஜனங்கள் அக்கறை காட்டியதற்கு மாறாக, இப்பொழுது நேர்ந்த யுத்தத்தில் அவர்கள் ஊக்கமே கொள்ளவில்லை. வியாபாரப் போட்டி காரணமாக, டச்சுக்காரரை அடக்குவதில் அவர்களுக்கு ஆசை அதிகமாயிருந்த தானாலும், ப்ரெஞ்சு தேசத்தரசருடைய கருவியாக இருந்து கொண்டு அதைச் செய்வது அவர்களுக்குப் பிடித்தமாக இல்லை. கடைசியாக லூயியினுடைய முயற்சி பலிக்கவில்லை; அப்பொழுது ஹாலன்ட் தேசத்தில் ஒரு வீரர் தோன்றினார், அவருக்கு வில்லியம் ஆப் ஆரஞ்ச் (William of Orange) என்று பெயர்; ச்சார்லஸ் மன்னருக்கும்அவருக்கும் உறவு முறையும் இருந்தது. வில்லியம் ஆப் ஆரஞ்ச் தமது தேசத்தின் சுயாதீனத்தைக்காப்பாற்றியது மாத்திரமன்றி, ப்ரெஞ்சு மன்னருடைய பேராசையை அடக்கி, அவர் அடைந்திருந்த பெரிய செல்வாக்கையும் குறைக்க வழி தேடிவந்தார். எனவே லூயியின் வசப்பட்டு டச்சுக்காருடன் போர் செய்ததால் ச்சார்லஸுக்குப் பணச் செலவு ஏற்பட்டதேயன்றி வேறு நன்மையோ வெற்றியோ கிடைக்கவில்லை. அதனால் காபால் பிரமுகர்களும் ச்சார்லஸும் எல்லோராலும் தூற்றப்பட்டனர். டோவர் உடன்படிக்கை இரகசியமாகவே நடந்திருந்தாலும், அதன் உள்மர்மம் சிறுகச்சிறுக வெளிப்பட்டுப் போனது. காதலிக் மதத்தை இங்கிலண்டில் ஸ்தாபிக்கும்பொருட்டே, ச்சார்லஸ் ப்ரெஞ்சு தேசத்தரசருடன் சேர்ந்துகொண்டார் என்ற வதந்தி பரவியது. ப்யூரிடன் வர்க்கத்தார், ப்ராடெஸ்டன்ட் இனத்தார் ஆகிய அனைவரும் அதைக் கேட்டுக் கடுங்கோப மடைந்தனர். காபால் சபையினர் எல்லோருக்கும் மத சுதந்திரம் உண்டாக்கிக்கொடுப்பதாக முன் வந்தவரன்றோ. "இணங்காதார்" என்ற இனத்தைச் சேர்ந்தவர்களுக்கும்கூட அவர்கள் சுதந்திரமளிக்க விரும்பினராலும், பார்லிமென்ட் சபை அதற்குச் சம்மதிக்கவில்லை; ஏனெனில், அம்மாதிரி சுதந்திரமளிப்பது அபாயகரமானதென அவர்கள் கருதினர். ஆனால் மதஸ்தாபனத்தின் கொள்கைக்கு இணங்கி வராமல் தனித்து நின்றவர்களுக்கும்கூட தமது விசேஷ அதிகாரத்தைக்கொண்டு ச்சார்லஸ் அரசர் 1672-ல் சுதந்திரமளிப்பதாக அறிக்கை யொன்றை வெளியிட்டார். அது டிக்ளரேஷன் ஆப் இண்டல்ஜன்ஸ் (Declara-

tion of Indulgence) என்று குறிக்கப்படுகிறது. ஆனால் பார்லிமென்ட் சபை அதை ஆதரிக்கவில்லை; ஏனெனில் அந்த அறிக்கையின்மூலம் கா/2தலிக் மதத்தினருக்கும் சுதந்திரம் கிடைப்பதாயிருந்தது. கா/2தலிக் மதத்தைப் பின்பற்றியோர் பலர் அரசருக்கு உற்ற நண்பர்களாயிருந்தனர். அரசரது தம்பியான யார்க் பிரபு (ஜேம்ஸ்) பகிரங்கமாகவே கா/2தலிக் மதத்தைத் தழுவியிருந்தார். அதனால் ப்ராடெஸ்டன்ட் மதத்தைக் கவிழ்த்து, போப்பின் ஆதிபத்யத்தை நிலைநிறுத்தவே அரசர் முயற்சிப்பதாக எல்லோரும் கருதிக் கூக்குரலிட்டனர். அதன் பயனாக கா/2பால் சபை ஒற்றுமையில்லாமல் கலைந்து போயிற்று. அதில் ஓர் அங்கத்தினராயிருந்த ஆஷ்லி என்பவர் ஷா/2ப்2டஸ்பரி (Shaftes bury) பிரபுவாயிருந்தார். அவர் அரசருக்கு விரோதமாக, ப்ராடெஸ்டன்ட் கட்சியை ஆதரித்தார். அவரது முயற்சியால் 1673-ல் பார்லிமென்ட் சபையில் 'சோதனை அல்லது நிபந்தனைச் சட்டம்' (Test Act) என்ற சட்டம் ஒன்று இயற்றப்பட்டது; அதன்படி துரைத்தன உத்தியோகஸ்தர்கள், மதஸ்தாபனத்தின் கொள்கைகளுக்குக் கட்டுப்பட்டவர்களாயிருத்தல்வேண்டும் என்று திட்டம் செய்யப்பட்டது. ச்சார்லஸ் அந்தச் சட்டத்தை எதிர்க்கத் துணியவில்லை. அவரது தம்பியான ஜேம்ஸ் கா/2தலிக் மதத்தை விட்டுவிடுவதைக் காட்டிலும், தாம் வகித்துவந்த கப்பற்படைத்தலைமையை விட்டுவிடுவதே சிலாக்கியமெனக் கருதினர். 1674-ல் பார்லிமென்டின் தூண்டுதலின்மேல் ச்சார்லஸ டச்சுக்காரருடன் சாமாதானம் செய்துகொண்டார்.

கா/2பால் மந்திரிசபை கலைந்தபிறகு டா/2ன்பி (Danby) என்பவர் அந்தப் பதவியை யடைந்தார். பார்லிமென்ட் சபையினர் அவரிடம் நம்பிக்கை வைத்திருந்தனர். ஆனால், அன்னிய நாட்டு விஷயங்களில் டா/2ன்பியும் ச்சார்லஸூம் வெவ்வேறு முறைகளை அநுஷ்டித்தனர். அவ்வாறு அரசரும் மந்திரியும் ஒற்றுமையாக நடவாதது இருவருக்கும் துன்பகரமாக இருந்ததன்றி நாட்டின் கௌரவத்திற்கும் பங்கம் விளைவித்தது. டா/2ன்பி ப்2ரெஞ்சு அரசரைத் தமது வசப்படுத்த விரும்பினர். ஆனால் ச்சார்லஸ் தமது பழைய வழியையே பின்பற்றி, லூயியுடன் மறுபடி ஓர் இரகசிய

உடன்படிக்கையைச் செய்துகொண்டார்; அதன்படி, லூயியினது அநுமதியின்றி, வேறு அரசருடன் தாம் சேருவதில்லை யென்று அவர் உறுதி செய்துகொடுத்தார். லூயியிடமிருந்து அவரும் அவருடைய சகாக்களும் பண உதவியும் கைப்பரிசும் பெற்றனர். ஆனால் டா2ன்பியோ தமது தீர்மானப்படி ப்2ரெஞ்சுக்காரருக்கு விரோதமாகவே நடந்து வந்தார். ஆதலால் லூயி கோபங்கொண்டார். ஐரோப்பாவிலும் அவருடைய செல்வாக்குக் குறைந்து வந்தது. ஆகவே, எவ்வித அநுகூலமுமின்றி, ச்சார்லஸுக்குப் பொருள்தருவதை அவர் நிறுத்திவிட்டதன்றி, இங்கிலண்டில் ச்சார்லஸுக்கு விரோதமாக இருந்தவர்களிடம் தமக்கும் ச்சார்லஸுக்கும் ஏற்பட்ட இரகசிய உடன்படிக்கைகளை வெளிப்படுத்தி விடவே, அவைகளிற் சிலவற்றில் டா2ன்பியும் கலந்துகொண் டிருந்தமையால், 1678-ல் அவர் பார்லிமெண்டினால் கண்டிக்கப்பட்டு உத்தியோகத்தை விட்டு விலகிக்கொண்டார். அடுத்த வருஷம் பார்லிமெண்ட் சபையையும் அரசர் கலைத்து விட்டார். 1661-ல் உற்சாகமாக அரசரை வரவேற்ற பார்லிமெண்ட் சபையே 1679-வரையில் நிலைத்திருந்ததானாலும், அதன் பழைய இராஜபக்தி அநேகமாய்க் குன்றிப் போய்விட்டது.

1678-ல் இங்கிலண்டில் இன்னுமொர் அமளியும் ஏற்பட்டது. கா2தலிக் மதத்தினர் பலர் சேர்ந்து அரசரைக் கொன்றுவிடத் தீர்மானித்திருந்ததாக ஒரு வதந்தியை டைடஸ் ஓட்ஸ் (Titus Oates) என்பவர் கிளப்பிவிட்டார். ஆனால் அந்த வதந்தி எள்ளளவேனும் உண்மையானதுதானா வென்பது சந்தேகம்; ஏனெனில் கா2தலிக் மதத்திற்கு முற்றிலும் சாதகமாயிருந்த ச்சார்லஸிடம் அம்மதத்தினர் பகைமை பாராட்டக் காரணம் இல்லை. டைடஸ் ஓட்ஸ் என்பவரோ, முதலில் கா2தலிக் மதத்தைப் பின்பற்றி, பின்பு அதை விட்டு ப்ராடெஸ்டண்ட் மதத்தைத் தழுவியும் வேறு பல வகையாலும் ஜனங்களது வெறுப்பை சம்பாதித்திருந்தவர். கா2தலிக் மதத்தினர் அரசரைக் கொல்லுவதற்காகப் பல ஏற்பாடுகள் செய்திருந்ததாக அவர் கூறியது கட்டுக்கதையே யன்றி வேறல்ல. ஆனால் ஜனங்கள் அதை உண்மை யென்று நம்பிவிட்டனர். எனவே, நிரபராதிகளாயிருந்த கா2தலிக் மதத்தினர் பலர் விசாரணைக்குட்படுத்தட்டு தூக்குமரத்தில்

மாரணமடைந்தனர். ப்ராடெஸ்டன்ட் தலைவரான ஷாஃப்ட்ஸ்பெரியே அந்த உத்தம கைங்கரியத்தைக் கடைசி வரையில் முடித்து வைத்தவர்.

1679-ல் ஒரு புதிய பார்லிமென்ட் சபை கூடியது. காதலிக் மதத்தினரைப் பற்றிய பொய் வதந்திகளை உண்மையென நம்பிய வேறு பலரும் அதில் சேர்ந்துகொண்டு ஷாஃப்ட்ஸ்பரி பிரபுவுக்கு அநுசரணையாயிருந்தனர். அந்தச் சபையில் இரண்டு முக்கியமான தீர்மானங்கள் நிறைவேறின. ஒன்று ஹேபியஸ் கார்ப்பஸ் * சட்டம் (Habeas Corpus Act) எனப்படும்; நிரபராதியாயிருப்பவர்களை எவ்வித விசாரணையுமின்றி சுயேச்சாதிகாரமாகச்சிறையிலிடுதல்கூடாதென்பதே அந்தச் சட்டத்தின் நோக்கம்; பிரஜைகளின் சுதந்திரத்தைப் பாதுகாக்க அந்தச் சட்டம் இன்றியமையாததெனக் கருதப்பட்டது."விலக்குச் சட்டம்" (Exclusion Bill) என்ற இன்னொரு சட்டமும் நிறைவேறியது; அதன்படி ச்சார்லஸ் அரசரின் அடுத்த வாரிசுதாரரும் யார்க் பிரபுவுமான ஜேம்ஸ் காதலிக் மதத்தை அநுஷ்டித்தமையால், அவர் பட்டத்திற்கு வர அருகமற்றவர் என்று திட்டம் செய்யப்பட்டது. அந்த அவமானத்திலிருந்து தமது சகோதரரைத் தப்பவைக்கும் பொருட்டு ச்சார்லஸ் உடனே பார்லிமென்டைக் கலைத்துவிட்டார். 'விலக்குச் சட்ட'த்தை ஆதரித்த பார்லிமென்ட் அங்கத்தினர்கள், சில மாதகாலம் கழித்து பார்லிமென்ட் சபையை மறுபடியும் கூட்டும்படி அரசருக்கு விண்ணப்பம் செய்துகொண்டனர். ஆனால், உண்மையில் இராஜவிசுவாசம் கொண்டிருந்தவர்களிற் பலர் அம்மாதிரி அரச குலத்தினர் சிம்மாதனமேறாமல் தடுப்பது அநீதியென எண்ணினர். எனவே தேசத்தில் இரண்டு பெரிய இராஜீயக் கட்சிகள் ஏற்பட்டன. முதல் ச்சார்லஸின் காலத்தில் பிம், ஹாம்ப்டன் முதலிய அமித வாதிகளும், ஹைட், பாக்

---

* 'ஹேபியஸ் கார்ப்பஸ்' என்பது, நீதி விசாரணை யின்றி துரைத்தனத்தாரின் உத்தரவின் மேல் சிறையிடப்பட்டிருக்கும் ஒருவனை நியாய ஸ்தலத்தின் முன் கொண்டுவந்து அவனைச் சிறையிட்ட காரணத்தைத் தெரிவிக்கும்படி, சிறைச்சாலை யதிகாரிக்கு அனுப்பப்படும் கட்டளை.

லண்டன் முதலான மித வாதிகளும் இருந்ததைப்போலவே இப்பொழுதும் ஒருசாரார் அரசரை ஆதரித்தும், மற்ருெரு சாரார் அரசரை எதிர்த்துப் பிரஜா உரிமையைக் காப்பதுமாக இருந்தனர். நாளடைவில் அவ்விரு கட்சிகளுக்கும் சுருக்கமான பெயர்கள் ஏற்பட்டன. அரசரை எதிர்த்தவர்கள் விக் (Whig) கட்சியினரென்றும், அரசரை ஆதரித்தவர்கள் "டோரி" (Tory) கட்சியினரென்றும் குறிக்கப்பட்டனர். முதலில் அவை தூஷணையான சொற்களாய் உபயோகப்படுத்தப்பட்டன வாஞலும், நாளடைவில் அவை ஸ்திரமாக நிலைத்துவிட்டன. இப்பொழுது உலகத்தின் மற்ற தேசங்களிலும் இராஜீயக் கட்சிகள் இருப்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இங்கிலண்டு தேச சரித்திரத்தில் 17-வது நூற்ருண்டு முதல் அத்தகைய கட்சிகள் பிரபலமடைந்து, இராஜ்ஜிய நிர்வாகத்தில் முக்கிய சாதனங்களாயிருந்து வந்தன. பொதுவாக, விக் கட்சியினர் முற்போக்கானவர்கள்; சுதந்திரத்தை நாடி அரசாது சுயேச்சாதிகாரத்தை வெறுப்பவர்கள்; மதவிஷயத்திலும் அம்மாதிரியே விசாலமான மனப்போக்குடையவர்கள். டோரிக் கட்சியினர் சற்று மிதமான மனப்போக்குடையவர்கள்; அரசரைச் சார்ந்து நின்று, நிதானமாக நடந்து கொள்பவர்கள். ஆனல் அந்த வேற்றுமை பொதுவான வேற்றுமை யென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். பின்னல் சில சமயம் விக் கட்சியினர் பிற்போக்காக இருப்பதையும், டோரிகள் முன்னேற்றமாகச் செல்வதையும், விக் இனத்தார் அரசருடன் சேருவதையும் டோரிகள் அரசருக்கு விரோதமாயிருப்பதையும் காணலாம். ஆனல் இரண்டாவது ச்சார்லஸின் காலம் முதற்கொண்டு இவ்விரு இராஜீயக் கட்சிகளும், துரைத்தன நிர்வாக விஷயத்தில் முக்கிய ஸ்தானம் பெற்று வந்திருக்கின்றன. முதல் ச்சார்லஸின் ஆட்சியிலேயே அத்தகைய கட்சிகள் பார்லிமென்ட் சபையில் தோன்றி நிலைத்து, இரண்டாவது ச்சார்லஸ் காலம் முதற்கொண்டு பிரபலமடையத் தொடங்கின. அவைகள் எந்தக் காரணத்திஞல் எவ்விதம் தோன்றின என்பதை ஏற்கனவே விவரித்தோம். பின்னல் அவைகளின் வளர்ச்சி விவரிக்கப்படும். முன்காலத்தில் அரசனும் அவனது முக்கிய மந்திரிகளுமே இராஜ்ஜிய நிர்வாகத்தில் கலந்துகொண் டிருந்தனர். நாளடைவில்

மேலே கூறியபடி இராஜீயக் கட்சிகள் தோன்ற, ஜனப்பிரதிநிதிகளும் அரசியல் நிர்வாகத்தில் சம்பந்தப்பட்டு, கடைசியில் பூர்த்தியான நிர்வாகத்தையும் தாமே நடத்துவதற்கு அஸ்திவாரம் கோலப்பட்டது.

தேசத்தில் கட்சிப் பிரதிகட்சிகள் தோன்றியதனால் பெரிய குழப்பமேற்பட்டது. 1679-ல் ஸ்காட் மக்களிற் சில அமிதவாதிகள் ஒன்று சேர்ந்துகொண்டு கலகமிழைத்தனர். இரண்டாவது ச்சார்லஸுக்கு வைப்பாட்டிகள் மூலம் பிறந்த சில குமாரர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவரான மான் மத் பிரபு (Monmouth) என்பவர் ஸ்காட் தேசத்துக் கலகக்காரர்களைத் தோற்கடித்தார். ஆனால் 'விலக்குச் சட்ட'த்தை அமுலுக்குக் கொண்டுவர பார்லிமெண்டார் எவ்வளவோ முயன்றனராலும், ச்சார்லஸ் தமது நியாயமான வார்சுதாரரான ஜேம்ஸின் கட்சியையே ஆதரித்து வந்தார்.

ஷாஃப்ட்ஸ்பரியின் தலைமையின்கீழ் அமிதக் கட்சியினர் அதுவரையில் முற்போக்கான சீர்திருத்தங்களைச் செய்துவந்தனர்; ஆனால் அந்தத் தலைவருடைய மூர்க்க குணத்தினால் அவர்களுடைய மதிப்புக் குறையத் தொடங்கியது. மேலும் கத்தலிக் மதத்தினர் சதியாலோசனை செய்தனர் என்ற வதந்தி பொய்த்துப்போகவே, ஜனங்களுடைய ஊக்கமும் குறைந்துவிட்டது. ச்சார்லஸ் மிகவும் தந்திரமாக ஒருகட்சிக்கும் மற்றொரு கட்சிக்கும் விரோதமேற்படுத்தி அதன்மூலம் தமது எதிரிகளின் பலத்தைக் குறைத்துத் தமது ஸ்தானத்தை உறுதி செய்துகொள்வதில் கைதேர்ந்தவர். ஆதலால் அவர் டோரிக்கட்சியினர் மேலோங்கும்படி செய்து, ஷாஃப்ட்ஸ்பரிக்குத் தாழ்வு ஏற்பட வழிதேடினார். ஷாஃப்ட்ஸ்பரி அன்னியநாட்டிற்குச் சென்ற இடத்தில் உயிர் துறந்தார். விக் கட்சியினர் தமது பலம் குறைந்துபோனதைக் கண்டு, "ரை ஹவுஸ் ப்ளாட்" (Rye House Plot) என்று குறிக்கப்படும் ஒரு சதியாலோசனையை நடத்தி அரசரைக்கொல்ல யத்தனித்தனர். ரை என்ற ஒரு மாளிகையில், அந்தச் சதியாலோசனையை நிறைவேற்ற அவர்கள் கருதியிருந்தமையால், அது அவ்வாறு குறிக்கப்படுகிறது. ஆனால் அந்தச் சூழ்ச்சி வெளிப்பட்டு விட்டது; அதன் பயனாக சில

விரு பிரமுகர்கள்மரணதண்டனைக்காளாயினர். அதிலிருந்துடோரிக் கட்சியினருக்கு அதிக செல்வாக்கு ஏற்பட்டது. இவ்வாறு ச்சார்லஸின் ஆட்சியில் கடைசிக்காலத்தில் டோரிகளே செல்வாக்குடையவர்களாயிருந்தனர். ச்சார்லஸின் இராஜ்ஜிய பரிபாலனத்தை மூன்று பெரிய பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவில், அவர் ஜனங்களால் போற்றப்பட்டு, அவர்களது ஆதரவைப் பெற்றிருந்தார். பார்லிமென்ட் சபை அவருக்கு சாதகமான காரியங்களைச் செய்து வந்தது. இரண்டாவது பிரிவில் அன்னியநாட்டு வியவகாரங்கள் காரணமாகவும், கா/2தலிக் மதத்தை அவர் ஆதரித்ததாலும் அவர்மீது பலருக்கு அதிருப்தி ஏற்பட, அவருடைய மந்திரிகளும் தூஷணைக்காளாயினர். அப்பொழுது இருகட்சிகள் தோன்றியதையும் விவரித்தோம். மூன்றாவது பகுதியில் டோரிகள் முன்னுக்குவர, ச்சார்லஸ் மறுபடியும் ஜனங்களுடைய நம்பிக்கையைப் பெற்றுவிட்டார். எனவே அவருடைய ஆட்சியின் தொடக்கத்திலும் முடிவிலும் அவர் நன்கு மதிக்கப்பெற்றிருந்தார். 1685-ல் அவர் திடீரென இறந்துபோனபொழுது எல்லோரும் விசனமே யடைந்தனர்.

ச்சார்லஸின் ஆட்சி பெரும்பாலும் அமைதியாகவே நடந்ததென்று கூறலாம். ஆனால் அவரது குணத்தினலோ, செய்கைகளினலோ மாத்திரம் அந்த அமைதி ஏற்பட்டு விடவில்லை. முதல் ச்சார்லஸின் காலத்தில் நடந்த உள்நாட்டுப் போரினல் சோர்வடைந்திருந்தமையாலும் க்ராம்வெலின் கடுமை பொறுக்க இயலாததாயிருந்தமையாலும், எவ்விதமேனும் சமாதானத்தை யடைய ஆவல்கொண்டிருந்த குடிமக்கள் புதிய அரசரை அவ்வாறு போற்றி வந்தனர். ஆகவே தமது முயற்சியின்றியே, ச்சார்லஸுக்கு நல்ல பெயருண்டாயிற்று. ச்சார்லஸினிடம் சில நற்குணங்களும் இல்லாமற் போகவில்லை. அவர் எப்பொழுதும் உற்சாகமுகத்துடனிருந்து தம்முடன் பழகியவர்களிடம் சந்தோஷகரமாகவே நடந்துவந்தார். ஆனல், அதற்கு மாருக அவரிடம் சோம்பலும் சுயநல விருப்பமும் போாசையும் நிறைந்திருந்தன. அவரது நடத்தையும் பரிசுத்தமானதாக இருக்கவில்லை. தர்பாரில் நடந்த விளையாடல்களும் வேடிக்கைகளும் தேசத்தில் சமூக வாழ்க்கையின் பரிசுத்தம் கெடுவ

தற்குத் தூண்டுகோலாயிருந்தன. ப்ரெஞ்சு மன்னரான லூயியினிடம் அவர் தம்மை விற்றுக்கொண்டது மானக்கேடான செய்கையே. ஆனாலும், ஸ்டுவேர்ட் அரசர்களெல்லோரிலும், அவரே ஓரளவு திறமையும் நுட்பபுத்தியும் உடையவராயிருந்தார். அவர், உள்ளூற, காதலிக் மதத்திலேயே பற்றுதலுடையவரா யிருந்தாலும் தமது தந்தையைப்போலப் பிடிவாதமாய் நடக்காமல், பொது ஜனங்களை அதிகமாகப் பகைத்துக்கொள்ளாமல் திறமையாக நடந்துகொண்டார். கெஞ்சினால் மிஞ்சி, மிஞ்சினால் பணிந்து கொடுக்கும் குணம் அவரிடம் இருந்ததாகையால், தேசத்திற்கு அப்பொழுது அவசியமாயிருந்த சமாதானம் அவரது முயற்சியின்றியே ஏற்பட்டது. அவரது தந்திரகுணமே கடைசிவரையில் அவரைக் காப்பாற்றி வந்தது. ஸ்டுவேர்ட் அரசர்களுள் அவர் ஒருவரே சில அம்சங்களில் சிலாக்கியமானவரா யிருந்தார். முதலாவது ஜேம்ஸ் கற்றறிமூடர் என்ற பெயர்பெற்றார்; முதலாவது ச்சார்லஸ் தமது உயிரையே பலிகொடுத்துவிட்டார்; இரண்டாவது ச்சார்லஸுக்குப் பிறகு பட்டத்திற்குவந்த அரசர் தமது நாட்டைவிட்டு ஓடநேர்ந்ததை அடுத்த அதிகாரத்தில் விவரிப்போம்; எனவே இரண்டாவது ச்சார்லஸ் ஒருவரே ஸ்டுவேர்ட் வம்சத்தில் மிக அதிருஷ்டசாலி என்று மதிக்க வேண்டும். ஷெ அதிருஷ்டசாலியே இடைநடுவில் ஜனங்களது அதிருப்திக்கு ஆளாகவேண்டி யிருந்ததென்றால், ஸ்டுவேர்ட் அரசர்களது ஆட்சிக்காலம் எவ்வளவு துன்பகரமாயிருந்ததென்பது நன்கு விளங்கும்.

---

## 33-வது அதிகாரம்

### இரண்டாவது ஜேம்ஸ்.

(1) **ஜேம்ஸின் சீர்கேட்ட ஆட்சி:**—இரண்டாவது ச்சார்லஸின் சகோதரரும் யார்க் பிரபுவுமான ஜேம்ஸுக்குப் பட்டம் கிடைக்காமல் செய்ய 'விலக்குச் சட்டம்' ஒன்றை இயற்ற ஷாஃப்ட்ஸ்பரி முயற்சித்தாராலும், டோரிகளின் செல்வாக்கு அதிகரித்திருந்ததனால் எவ்வித பிரயாசையுமின்றி, ஜேம்ஸ் சிம்மாதனமேறினர். அவருக்கு அப்பொழுது வயது 52. அவர் நல்ல உழைப்

பாளி; போர்புரிவதில் திறமையுடையவர்; கப்பற்படைக்குத் தலைமை வகித்துப் புகழ்பெற்றவர்; நிர்வாகத்திறமையும் வாய்ந்தவர். கத்தோலிக் மதத்தில் உண்மையான பற்றுதலுடையவர்; சோதனைச் சட்டத்தின்படி அவர் தமது மதத்தை விடுவதைவிட உத்தியோகத்தை விலக்கிவிடுவதே சிறந்ததென எண்ணி அவ்வாறே செய்தவர். ஆனால் அவரது தந்தையைப்போலவே பிடிவாதகுணமும், வணங்கா முடித்தன்மையும் உடையவர். ஸ்டுவர்ட் வம்சத்தினரது மேம்பாட்டில் அவருக்குப் பெரிய மூட நம்பிக்கை இருந்துவந்தது; தமது சகோதரரைப்போல சமயோசிதமாக நடந்துகொள்ளும் திறமை அவரிடம் அதிகமாய் அமையவில்லை. துரைத்தனம் நடாத்துவதான பெருஞ்சுமையை வகிப்பதற்கு அவசியமான சில முக்கிய குணங்கள் அவரிடம் காணப்படவில்லை. எனவே அவரது ஆட்சியில் குழப்பமும் கலகமும் உண்டாயின.

ஜேம்ஸ் 1685-ல் பட்டத்திற்கு வந்தவுடன் தமது சகோதரரது அடிச்சுவடுகளையே பின்பற்றி நடந்து டோரிகளுடைய ஆதரவையும் பெற்றுவந்தார். 1685-ல் கூடிய பார்லிமெண்ட் சபை அவருக்கு வேண்டிய பணத்தொகையைப் பூர்த்தியாக அளித்துவிட்டது; எனவே அதற்குப்பிறகு ஜேம்ஸ் மறுபடி பார்லிமெண்டின் தயவை நாடவேண்டிய அவசியம் ஏற்படாமல் போய்விட்டது. ஆனாலும் சீக்கிரத்தில் ஜேம்ஸுக்குப் பல இடுக்கண்கள் தோன்றலாயின. அவர் அரசரானது விக் கட்சியினருக்கு சம்மதியாக இல்லை. ஆக்வே, அவர்களிற் சிலர் பலவந்தமாக அரசரை விலக்குவதற்கான வழியைத் தேடினார்கள். 1685-ல் ஆர்கைல் (Argyll) என்பவரது தலைமையில் ஒரு கலகம் நடந்தது. ஜேம்ஸ் அதை அடக்கிவிட்டார்.

இரண்டாவது ச்சார்லஸுக்குப் பிறந்தவரான மான்மத் பிரபு சிலமாதகாலத்திற்குப் பின்பு இங்கிலண்டில் வந்திறங்கி, தாமே நியாயமாகப் பட்டத்திற்கு உரியவரென்று கூறினர்; ப்யூரிடன்களில் பலர் அவரது கட்சியில் சேர்ந்துகொண்டனர். அரசரது சேனைக்கும் மான்மத் பிரபுவுக்கும் ஸெட்ஜ்மூர் (Sedgmoor) என்ற இடத்தில் போர் நடந்தது. கலகக்காரர்கள் தோல்வியடைந்தனர். இங்கிலண்டு தேசத்திற்குள் நடந்த உள்நாட்டுச் சண்டைகளில்

ஸெட்ஜ்மூர் போரே கடைசியானது. மான்மத் பிரபு ஒரு சாக்கடையில் ஒளிந்துகொண்டாராஹலும், சண்டுபிடிக்கப்பட்டு மரண தண்டனையடைந்தார். கலகக்காரரனைவரும் கடுமையாக தண்டிக்கப்பட்டனர். ஜெப்ரீஸ் (Jefres) என்ற நீதிபதியொருவர் தயைதாக்ஷிண்ய மென்பதையே காட்டாது விசாரணை நடத்தி, குற்றவாளிகளைக்கொன்று வீழ்த்தினர். ஆதலால் அவர் 'இரத்தவெறி பிடித்த ஜெப்ரிஸ் என்ற பெயர்பெற்று, கொடுமைக்கும் குரூர குணத்திற்கும் பிரபல திருஷ்டாந்தமாக விளங்கினர். அவ்வாறு இரத்தவெள்ளம் ஓடும்படி செய்ததற்காக அவருக்கு பிரபுவின் பதவியும் உத்தியோக உயர்வும் கிடைத்தன.

கலகக்காரரை அடக்கி வெற்றியடைந்த ஜேம்ஸ் தம்மையே மறந்து சுயேச்சாதிகாரம் செலுத்தலானர். முதல் ச்சார்லஸின் காலநிலைமை மறுபடி திரும்பிவிட்டதுபோலாயிற்று. ஆனல் அவர் ஒரு விஷயத்தை மாத்திரம் மறந்துவிட்டார்; அதாவது ஜனங்களின் ஒரு சாராரது விருப்பத்திற்கு மாருக, தாம் சிம்மாதனம் ஏறியதை அவர் ஞாபகத்தில் வைக்காமல், தம்மை அசைக்க எவராலும் இயலாதென எண்ணி சிறுகச்சிறுகத் தமது விஷக் கொடுக்கை நீட்டத் தொடங்கினர். இங்கிலண்டில் காதலிக் மதத்தினர் எவ்வித சுதந்திரமும் உரிமையும் இன்றி அடங்கி ஒடுங்கி இருந்ததைக் காண, அவருக்கு இரக்கம் உண்டாயிற்று; ஏனெனில் அவரும் காதலிக் மதத்தையே பின்பற்றியவர். தம்மைப்போன்ற காதலிக் மதத்தினர் அரசாங்கத்தில் எவ்வித உத்தியோகமும் வகிக்க முடியாமற்செய்த 'சோதனைச் சட்ட'த்தை மாற்ற அவர் விருப்பம்கொண்டு பார்லிமென்டுக்கு அதைத் தெரிவித்தார். ஆனல், பார்லிமென்ட் சபையினர் அதற்கு இணங்கவில்லை. அவர்களுக்கு அரசரிடம் இருந்த பக்தியைவிட ப்ராடெஸ்டன்ட் மதத்தின்மீது அதிகப் பற்றுதல் இருந்து வந்தது. மேலும் அரசரே காதலிக் மதத்தைப் பின்பற்றிய சமயத்தில் 'சோதனைச் சட்ட'த்தைத் தள்ளுபடி செய்வது அபாயகரமானதென அவர்கள் கருதினர். எனவே ஜேம்ஸ் கோபமடைந்து பார்லிமென்டைக் கலைத்ததன்றி, டோரி மந்திரிகளையும் துறத்திவிட்டார். அதன் பயனுக, ஜேம்ஸ் எல்லோராலும்

வெறுக்கப்பட்டார். விகு கட்சியினர் அவரை எற்கனவே பகைத்து வந்தனர். இப்பொழுது அவரை ஆதரித்து வந்த சிலரையும் அவர் பகைத்துக்கொண்டார். அவருக்கு துரதிருஷ்டதசை ஆரம்பமாய்விட்டது.

பார்லிமென்டைக் கலைத்தபின், ஜேம்ஸ் தமது தந்தையின் போக்கையே பின்பற்றி சுயேச்சாதிபத்தியம் நடத்தலானார். அவருக்குத் தகுந்த சில சகாக்களும் சேர்ந்தனர். அவர்கள் ஒன்று கூடி ஆலோசனை செய்து, இங்கிலெண்டில் காதலிக் மதத்தைத் திரும்பவும் ஸ்தாபித்து, சுயேச்சாதிகாரம் செலுத்தும் காலம் சீக்கிரத்தில் வரும் என்று எதிர்பார்த்தனர். ஜேம்ஸ் நாட்டின் சட்டங்களைப் பலவிதங்களில் மீறி நடக்கலானார். அக்காலத்தில் அரசர்களுக்கு இரண்டு விசேஷ அதிகாரங்கள் உண்டு என்ற ஒரு கொள்கை இருந்து வந்தது. அதாவது, ஒரு குறித்த மனிதனது விஷயத்தில் ஒரு சட்டம் பிரயோகமாகாதபடி உத்தரவிடும் அதிகாரமும், ஒரு சட்டம் ஒரு குறித்த காலத்திற்கு தேசம் முழுதும் பிரயோகமாகாதபடி ஒதுக்கி வைக்கும் அதிகாரமும் இருந்தன. உதாரணமாக, ஆயிரம் ரூபாய் வருமானம் பெறுவோர் ஐம்பது ரூபாய் வரி செலுத்தவேண்டுமென்று சட்டமிருக்கிறது. அந்த வருமானம் பெறுகின்ற ஒரு குறித்த மனிதன் அந்த வரியைச் செலுத்த வேண்டாமென்று அவனை மாத்திரம் அந்தச் சட்டத்திலிருந்து விலக்கிவிடும் அதிகாரம் அரசருக்கு இருந்தது. அதற்கு 'விலக்கிவிடும் அதிகாரம்' (Dispensing power) என்று பெயர். அதே மாதிரி அந்தச் சட்டத்தை ஒரு வருஷத்திற்குத் தள்ளுபடி செய்து அந்த வருஷத்தில் அவ்வரியையே விதித்தல் கூடாதென்று உத்தரவிடும் அதிகாரத்திற்கு 'நிறுத்தி வைக்கும் அதிகாரம்' (Suspending power) என்று பெயர். ஆனால் மேற்படி அதிகாரங்கள் பெயருக்கு மாத்திரம் அரசருக்கு இருந்தனவேயன்றி, அவைகளை உண்மையில் அநுஷ்டிப்பது அரிதாகவே இருந்தது. அதை அரசர் அநுஷ்டிப்பது இல்லையென்றே கூறலாம். இரண்டாவது ச்சார்லஸ் அவ்வதிகாரங்களைச் சிறிதளவு உபயோகிக்க முயர்சித்தார். அவரது சகோதரரோ நினைத்தபொழுதெல்லாம் எடுத்த காரியத்திற்கெல்லாம் அவைகளைக் கொண்டு தமது விருப்

பத்தைப் பூர்த்தி செய்துகொண்டு வந்தார். கா/2தலிக்மதத்தார் உத்தியோகங்கள் வகித்தல் கூடாதென்ற 'சோதனைச் சட்ட'த்தைக் கூட அவர் மீறலானார். ஹேல்ஸ் (Hales) என்ற ஒரு கா/2தலிக் கனவானை அவர் இராணுவ இலாகாவில் ஒரு முக்கிய உத்தியோகத்தில் நியமித்தார். ஹேல்ஸின் வண்டிக்காரன் ஒருவன் அவர் அம் மாதிரி உத்தியோகம் வகிப்பது சட்ட விரோதமான செய்கையென்று நியாயஸ்தலத்தில் வழக்குத் தொடர்ந்தான். ஆனால், ஜேம்ஸ் தமது விசேஷமான 'விலக்கி விடும் அதிகார'த்தைச் செலுத்தி ஹேல்ஸ் என்பவரை நியமித்தது சரியானதேயென்று நீதிபதி தீர்ப்புக் கூறிவிட்டார். அதனால், ஜேம்ஸ் அதிகத் துணிபடைந்து, அந்த விசேஷ அதிகாரத்தை மேன்மேலும் உபயோகித்து கா/2தலிக் மதத்தினருக்கு அரசாங்கத்திலும், மத ஸ்தாபனத்திலும் பல முக்கியமான பதவிகளை அளிக்கத் தொடங்கிவிட்டார். எவ்விடத்திலும், எல்லாத் துறைகளிலும், கா/2கலிக் மதத்தினரே அதிகமாய் நிறைந்துபோயினர். சட்ட விரோதமான அந்தச் செய்கைகளை ஜனங்கள் எதிர்க்காதபடியும், எதிர்த்தவர்களை தண்டிக்கும்படியும் செய்ய, ஹைகமிஷன் நீதிஸ்தலத்தை அவர் புதுப்பித்துவிட்டார். முதலாவது ச்சார்லஸின் காலத்தில் 'நீடித்திருந்த பார்லிமெண்ட்' சபை அந்த நீதி ஸ்தலத்தை அழித்தது தெரிந்தவிஷயம். அது தமது கட்சிக்குப் பெரிய பக்கபலமாக இருக்குமென்று நினைத்து ஜேம்ஸ் அதை மீண்டும் உற்பத்தி செய்தார். கா/2தலிக் இனத்தார் பலரடங்கிய ஒரு சேனையும் அவரது வசத்தில் இருந்தது.

(2) **ஜேம்ஸின் வீழ்ச்சி ; அரசியல் புரட்சி:**—பிறகு ஜேம்ஸ் துணிபடைந்து ப்ராடெஸ்டன்ட் மதத்தை வேருடனறுத்து, தமது சுயேச்சாதிகாரத்தை நிலை நாட்டிவிட நிச்சயம் செய்துகொண்டார். ஹைகமிஷன் நீதி ஸ்தலம் அவருக்கு உடந்தையாக இருந்தது ; இரத்த வெறிபிடித்த ஜெப்2ரிஸ் அதிலும் ஸ்தானம் வகித்து, பல நிரபராதிகளை கும்பல் கும்பலாகப் பரலோகத்திற்கு அனுப்பும் திருப்பணியை வெளிப்படையாகவே செய்து வந்தார். ஜேம்ஸின் சித்தத்தின்படி நடந்துகொண்டவர்கள் மாத்திரம் தப்பித்துக்கொண்டனர். இங்கிலீஷ்காரருக்கு அச்சம்பவங்கள் பெரிதும் அச்சத்தையுண்டாக்கின. ப்ராடெஸ்டன்ட், ப்யூரிடன் ஆகிய எல்லோரும்

ஜேம்ஸைத் தூற்றினர். மேலும் இங்கிலண்டில் காதலிக் மதத்தினர் சொற்பத் தொகையினராகவே இருந்தமையால் ஜேம்ஸுக்கு அவர்களிடமிருந்து அதிக உதவி கிடைக்கவில்லை. அவரது பகைவரோ பெரும்பாலோராயிருந்தனர். எனவே, தமது கட்சிக்குப் பலம் உண்டாக்கிக்கொள்ளும் நோக்கத்துடன் அதுவரையில் அடக்கி வைக்கப்பட்டிருந்த அயரிஷ் காதலிக் இனத்தவரைக் கிளப்பி விட்டார். அயர்லண்டில் குடியேறியிருந்த ப்ராடெஸ்டன்ட் இனத்தாரான இங்கிலீஷ்காரருக்கு அதனுல் கெடுதல் உண்டாயிற்று. ஆனுல் கடைசியில் அயரிஷ்காரரது உதவியிலும் அவர் நம்பிக்கை வைக்க முடியாதுபோயிற்று. அவர் தமது பலத்தை அதிகப்படுத்திக்கொள்ள வேறு வழி கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று.

அப்பொழுது காதலிக் இனத்தாரைத் தவிர மற்ற ப்ராடெஸ்டன்ட் முதலிய கட்சியினர் எல்லோரும் அவரை எதிர்த்து வந்தனரல்லவா? தமது எதிரிகளில் சிலரைத் தமது பக்கம் இழுக்க அவர் முயற்சித்தார். இரண்டாவது ச்சார்லஸின் ஆட்சியில் 'இணங்காத' வர்க்கத்தினர் தோன்றிய காரணத்தை விளக்கினேம். அவர்களும் காதலிக்இனத்தாரும் சட்டபூர்வமானமத சுதந்திரமின்றித் தவித்து வந்தனர். அவர்களை வருத்திய சட்டங்களை விலக்கி விடுவதாக ஜேம்ஸ் 1687-லும் மறு வருஷத்திலும் இரண்டு அறிக்கைகளை வெளியிட்டுத் தெரிவித்தார். ஆனுல், இணங்காத வகுப்பைச் சேர்ந்தவர்கள் அவரது வலையில் விழவில்லை; ஜேம்ஸுக்கு காதலிக்இனத்தார்மீதே உண்மையான அபிமானமிருந்ததென்பதை நன்கறிந்தபடி இணங்காத இனத்தார் ஜேம்ஸ் தம்மை ஒரு கருவியாகக்கொண்டு, தமக்கு சுதந்திரமளிப்பதாக ஆசை காட்டி, கடைசியில் தமது ஸ்தானத்தை பலப்படுத்திக்கொள்ள முயற்சிப்பதாக உணர்ந்து, அவரது உதவியை எற்காமல், காதலிக்வகுப்பாரைவிடத் தமக்கு அதிக நெருக்கமானவர்களான ப்ராடெஸ்டன்ட் இனத்தாருடனேயே சேர்ந்துகொண்டனர். 1688-ல், தாம் வெளியிட்ட மத சுதந்திர அறிக்கையை (Declaration of Indulgence) எல்லா ஆலயங்களிலும் படித்துக் காட்டவேண்டுமென்று ஜேம்ஸ் உத்தரவு பிறப்பித்தார். உடனே ஸான்க்ராப்ட் (Sancroft) என்ற முக்கிய மதகுருவும், வேறு ஆறு குருமாரும் சேர்ந்துகொண்டு அர

சருக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பி, அவரது தவறை எடுத்துக் காட்டினார்கள். ஜேம்ஸ் சினம் கொண்டு அவர்கள்மீது இராஜத்துவேஷக்குற்றம் சுமத்தி விசாரணை நடக்குமாறு செய்தார். மற்ற மதகுருமார்களும் அவர்களைப் பின்பற்றி அறிக்கையைப் படிக்க மறுத்தனர். விசாரணையின் முடிவில், அவ்வேழு மதகுருமார்கள் எவ்விதமான குற்றமும் புரியவில்லை என்று தீர்ப்புக் கூறப்பட்டது. நாட்டினரெல்லோரும் அவ்வேழு மதகுருமார்களின் துணிவைப் மெச்சி, அவர்கள் தேச நலத்திற்காகப் போராடிய வீரர்களெனக் கொண்டாடினர். ஜேம்ஸுக்கு அது ஒரு பேரிடி போலிருந்தது. அவரது வீழ்ச்சியும் நெருங்கிக் கொண்டிருந்தது.

அப்பொழுது ஒரு விசேஷ சம்பவம் நிகழ்ந்தது. ஜேம்ஸுக்கு அதிக வயதாய்விட்டதானாலும், புத்திர சந்தானம் அதுவரையில் உண்டாக வில்லை. அவருடைய புத்திரியான மேரி என்பவள் அடுத்த வார்சுதாரியாக இருந்தாள். இரண்டாவது ச்சார்லஸின் ஆட்சியில் ப்ரெஞ்சுக்காரருடன் போர் புரிந்த வீரரும் ஹாலண்டு தேசத்தினருமான வில்லியம் ஆப் ஆரஞ்சு என்பவரை அவள் மணந்து கொண்டிருந்தாள். அவள் ப்ராடெஸ்டன்ட் மதத்தை ஆதரித்தவள். ஜேம்ஸுக்குப் பிறகு அவள் பட்டத்திற்கு வந்துவிடுவாளென்ற நம்பிக்கையின் மேலும், அவருடைய சீர் கெட்ட ஆட்சி அதோடு ஒழிந்து போகுமென்று எண்ணியும் இங்கிலீஷ்காரர்கள் பொறுமையாக இருந்துவந்தனர். வயது முதிர்ந்த அரசர் சொற்ப காலம் இருந்து ஒழிந்துபோகட்டுமென்று அவர்கள் நினைத்து வாளாவிருந்தனர். 1688-ல் ஜேம்ஸுக்கு இரண்டாவது மனைவியின் மூலம் ஒரு புத்திரர் பிறக்கவே, அவர்களுக்கு அச்சம் தோன்றிவிட்டது. இளவரசரும் காதலிக் மதத்தையே பின்பற்றுமாறு பழக்கப்படுவாராதலால், தங்களுக்கு சீக்கிரத்தில் விமோசனம் ஏற்படாதென்று அவர்கள் எண்ணினர்: உடனே அவர்கள் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள எண்ணி மேரி இளவரசியின் கணவரான வில்லியம் ஆப் ஆரஞ்ச் என்பவருக்கு ஒரு கடிதம் அனுப்பி, இங்கிலண்டு தேசம் காதலிக் மதத்திற்கும், சீர்கெட்ட ஆட்சிக்கும் உள்படாதபடி காக்கும்படி வேண்டிக் கொண்டார்கள். வில்லியம் ஆப் ஆரஞ்ச் என்பவரை விக், டோரி ஆகிய இரு சாராரும் சேர்ந்தே

அழைத்தனர். ஜேம்ஸ் அவ்வளவுதூரம் ஜனங்களின் அதிருப்தியை உண்டாக்கிக்கொண்டார். வில்லியம் ஆப் ஆரஞ்ச் என்பவர் ஹாலன்ட் தேசத்தின் துரைத்தனத்தை வகித்து, ப்ரெஞ்சு அரசரான லூயியினிடமிருந்து டச்சுக்காரரைக் காப்பாற்றிய வீரர். ப்ரெஞ்சு மன்னருடைய கொட்டத்தை அடக்குவதொன்றையே அவர் முக்கிய நோக்கமாகக் கொண்டவராதலால், இங்கிலண்ட் தேசத்தாரின் உதவி தமக்கு ஏற்படுவது, நிரம்பவும் அநுகூலமானதென்று கருதினார். எனவே, இங்கிலீஷ் ஜனங்களுடைய அழைப்பிற்கிணங்கி அவர் 1688-ல் டச்சுக்காரர்களுடன் டார்பே (Torbay) என்ற இடத்தில் வந்திறங்கினார். ஜனங்களெல்லோரும் ஜேம்ஸைக் கைவிட்டு வில்லியத்தின் பக்கம் சேர்ந்துவிட்டனர். வில்லியத்தை எதிர்ப்பது பலியாத காரியமெனக்கண்ட ஜேம்ஸ் நாட்டைவிட்டு அயல்தேசத்திற்கு ஓடிவிட்டார், மிக சுலபத்தில் வில்லியம் லண்டன் நகரத்தைத் தமது வசப்படுத்திக்கொண்டார்.

உடனே, வில்லியம் ஒரு கன்வென்ஷன் பார்லிமென்டைக் கூட்டினார். 1689 ல் அதுகூடி 'சுதந்திரஉறுதிப்பாடு' (Declaration of Right) ஒன்றை வெளியிட்டு அதில் ஜேம்ஸ் செய்த அக்கிரமச் செய்கைகளை யெல்லாம் எடுத்துக் கூறியிருந்தது. அப்பொழுது ஜேம்ஸை அரசபதவியிலிருந்து நீக்குவது சட்டசம்மதமானதா என்ற கேள்வி பிறந்தது. அவர் இராஜ்ஜியத்தை விட்டு வெளியேறியதிலிருந்து தாமாகவே சிம்மாதனத்தைத் துறந்துவிட்டாரென்றே கருதவேண்டுமென்றும்,காலியாயிருந்த பட்டத்தை வில்லியம் ஏற்கவேண்டியதென்றும் தீர்மானமாயிற்று. வில்லியமும் அவரது மனைவியான மேரியும் 'சுதந்திரஉறுதிப்பாட்டை' அங்கீகரித்து இருவரும் கூட்டாக ஆட்சி புரியலாயினர். ஏனெனில், மேரியின் மூலமாகவே, வில்லியம் இங்கிலீஷ் பட்டத்திற்கு உரியவரானமையால், இருவரும் கூட்டாக அரசாட்சி நடத்தினர். இவ்வாறு ஓர் அரசரைத் தூத்தி வேறு அரசரை நியமித்த சம்பவம் "சிரேயஸ்கரமான புரட்சி" (Glorious Revolution) என்றும், எவ்வித யுத்தமுமின்றி சேதமுமின்றி நடந்தேறியதுபற்றி 'இரத்தம் சிந்தாத புரட்சி' (Bloodless Revolution) என்றும் பெருமையாகக் குறிக்கப்படுகிறது. ஸ்டுவர்ட் அரச குலத்தின் கதி முதற்கோணல் முற்றும் கோணலாகவும் நிரம்பவும் பரிதாபகரமாகவும் முடிவடைந்தது.

---

## 34-வது அதிகாரம்.

### மூன்ருவது வில்லியமும் மேரியும்.

(1) அரசியல் புரட்சியும் பலாபலன்கள்; வில்லியத்தின் செல்வாக்கு உறுதிப்படுவது; ஸ்காட், அயரிஷ் கிளர்ச்சிகள்:— 1688-89-ல் இங்கிலண்டில் நடந்த அரசியல் புரட்சி அதன் சரித்திரத்தில் ஒரு முக்கியமான சம்பவமாயிருப்பதுடன், ஒரு புதிய சகாப்தத்தையும் உண்டாக்குவதாகிறது. அதைப்பற்றி நாம் முதலில் கவனிக்கவேண்டிய அம்சம் அதனுடைய அமைதியான தன்மையேயாகும். முடிதரித்த ஓர் அரசனைத் துரத்திவிட்டு, அவன் உயிருடனிருக்கையிலேயே, வேருேர் அரசனை ஏற்படுத்திக் கொண்டது அற்பமான காரியமல்ல. பிரமாதமான யுத்தமும் இரத்தக்களமும் நேர்ந்தாலன்றி அவ்வித மாறுதல் ஏற்படுவது சாத்தியமானதல்ல. அங்ஙனமிருக்க, போர் என்ற சொல்கூடப் பிறவாமலிருக்கையில், மிக எளிதில், வில்லியம் அரசரானது ஆச்சரியகரமும் அதிர்ஷ்டவசமுமான சம்பவமாஞலும், அதற்கு முகாந்தரமுமில்லாமல் போகவில்லை. அந்தப் புரட்சி நடந்ததொன்றே ஸ்டுவர்ட் மன்னர்களிடம் இங்கிலீஷ்காரர் எவ்வளவு அன்பும் நம்பிக்கையும் வைத்திருந்தனர் என்பதைத் தெளிவாகக் காட்டும். ஜேம்ஸ் அரசரது அந்தரங்கமான நண்பர்களும் உறவினரும்கூட அவரை முடிவில் கைவிட்டுவிட்டனர். ஸ்டுவேர்ட் அரசர்கள் தாங்கள் கடவுளின்பிரத்தியக்ஷமான பிரதிநிதிகள்என்றுநினைத்து பார்லிமென்டை மதிக்காமல் பொதுஜன அபிப்பிராயத்தை அசட்டைசெய்து சுயேச்சாதிகாரம்செலுத்தமுயன்றது முடிவில் அவர்களை அழிவில்கொண்டு போய்விட்டது. ஓர் அரசர் கொல்லப்பட்டார்; ஒருவர் தேசத்தை விட்டு ஓடினர். மற்ற இருவரும் ஷெ அவகேடுகளுக்கு ஆளாகாமல் தங்களது அதிர்ஷ்டவசத்திஞல் ஆயுட்காலத்தைக் கடத்திஞலும் ஜனங்கள் அவர்களையும் எதிர்த்தபடியே இருந்தனர். எனவே, ஸ்டுவேர்ட் வம்சத்தார்களது சீர்கெட்ட ஆட்சி ஒன்றே அவர்களை வேரறுக்க முக்கிய சாதனமாயிருந்ததன்றி இரண்டாவது ஜேம்ஸ் அரசர் இன்னும் விலக்க சாத்தியமற்றதான அந்த அழிவை துரித

மாக வரவழைத்துக் கொண்டார். ஸ்டூவர்ட் ஆட்சியில் அரசருக்கும் பார்லிமென்டுக்கும் இடைவிடாத போராட்டம் நடந்துகொண்டே வந்தது. அது சில சமயங்களில் அமைதியாகவும் சில சமயங்களில் தீயைப்போலப் பற்றி எரிந்தும் நிகழ்ந்தது. அரசருடைய சுயேச்சாதிகாரம் நிலைத்து நிற்பதா, அல்லது பொதுஜனப் பிரதிநிதிகள் அடங்கிய பார்லிமென்டின் ஆலோசனைப்படி துரைத்தன நிர்வாகம் நடப்பதா என்ற விஷயம் நிச்சயிக்கப்படுவதற்கே அவ்வளவு போராட்டமும் நடைபெற்றது. நீடித்த அந்தப் போராட்டத்தின் விவரத்தை அவ்வப்பொழுது எடுத்து விளக்கி இருக்கிறோம். முடிவில், பார்லிமென்டுக்கே வெற்றி ஏற்பட்டது. ஒழுங்கீனமாக ஆட்சி புரிந்த அரசரை ஓட்டிவிட்டு, பார்லிமென்ட் சபை தனக்கு விருப்பமான வேறொருவரை அந்த ஸ்தானத்தில் வைத்தது. அது பொதுஜனங்களிடம் உள்ள அடிப்படையான உரிமையைக்காட்டும் திருஷ்டாந்தமாக இருந்தது. அதாவது சாதாரணமாக அரசகுலத்தைச் சேர்ந்தவர்களே தலைமுறை தலைமுறையாகவும் காலுக்குக் காலாகவும் அரசராயிருந்து நாட்டைப் பரிபாலிப்பதே வழக்கம்; ஆனால் அந்தக் காரணத்தைக்கொண்டு, தேசம் முழுதும் தமது சொந்தப் பொருள் என்று கருதி, அரசகுலத்தினர் கிரமத்தவறாக நடந்துகொண்டால் அவர்களை அகற்றிவிட்டு வேறொருவரை நியமிக்கும் சக்தியும் உரிமையும் ஜனங்களுக்கு உண்டு; ஸ்டூவர்ட் மன்னர்கள் கருதியபடி அரசர்கள் கடவுளின் பிரதிநிதிகள் என்பதும், தெய்வத்தினிடமிருந்து உத்தரவுபெற்றே அரசை வகிப்பதால், சாமானிய மனிதரைவிட அவர்கள் மேலானவர்கள் என்பதும், சட்டத்திற்கும் மேம்பட்டவர்கள் என்பதும் பொய்த்துப்போயின. எனவே இங்கிலண்டின் அரசியலில் பார்லிமென்ட் சபையே அடிப்படையான அதிகார ஸ்தானம் ஆய்விட்டது. நாட்டின் சட்டத்திற்கு அரசராயினும் மற்றவராயினும் கீழ்ப்படிந்தேயாக வேண்டுமென்பதும் நிச்சயமாயிற்று. 17-வது நூற்றாண்டின் இறுதியிலிருந்து பார்லிமென்ட் சபை அதிகமான அதிகாரத்தை வகிக்க ஆரம்பித்தது. ஆகவே இங்கிலீஷ் அரசியல் முறையின் தற்கால அமைப்பு, மேலே விவரித்த "சிரேயஸ்கரமான புரட்சி"யிலிருந்து தொடங்கி வளரலாயிற்று.

வில்லியம் இங்கிலண்டின் சிம்மாதன மேறியபொழுது அவருக்கு நாற்பது வயது ஆயிருந்தது. ஏற்கெனவே ஐரோப்பாவில் அவர் ஹாலண்டு தேசத்தின் தலைவராயிருந்து யுத்தங்களிலும் இராஜீய விஷயங்களிலும் பழகிப் பழகித் தேர்ச்சிபெற்றிருந்தவர். ப்ரெஞ்சு மன்னரான லூயியின் செல்வாக்கைக் குறைப்பதொன்றையே அவர் முக்கிய நோக்கமாகக் கொண்டவர். அரசபதவியைப் பெற்றவுடன், அவர் பலகாரியங்களை அவசரமாகச் செய்து முடிக்க வேண்டியதாயிற்று. அவரால் கூட்டப்பட்ட பார்லிமென்ட் சபை சில சட்டங்களை இயற்றியது. முன் அதிகாரத்தில் விவரித்த 'சுதந்திர உறுதிப்பாட்டை' ஆதாரமாகக்கொண்டு அந்தச் சபையினர் 'சுதந்திர மசோதா' (Bill of Rights) ஒன்றை நிறைவேற்றி ஜேம்ஸின் நியாய விரோதமான உத்தரவுகளை நிராகரித்தனர்; பார்லிமென்டின் அநுமதியின்றி வரி விதிப்பது சேனையைத் தயாரித்து வைத்துக்கொள்வது ஆகிய காரியங்கள் தவறானவை என்றும், அரசருக்கு விண்ணப்பம்செய்துகொள்ளும் உரிமை பிரஜைகளுக்குஉண்டென்றும்,பார்லிமென்ட் சபையை அடிக்கடி அரசர்கூட்டவேண்டுமென்றும், வாக்குசுதந்திரம் அளிக்கப்படவேண்டுமென்றும் அதில் குறிப்பிட்டிருந்தனர்; சட்டத்தை நிறுத்திவைக்கும் உரிமை அரசருக்கு இல்லையென்றும் தீர்மானித்தனர். கடைசியாக, அந்த மசோதாவில் இன்னுமொரு முக்கியமான விதியும் காணப்பட்டது; அதாவது 'ப்ராடெஸ்டன்ட் இராஜ்ஜியமான இங்கிலண்டின் க்ஷேமத்தின்பொருட்டும் நன்மையின் பொருட்டும், காத்தலிக் மதத்தை ஆதரிப்பவரும் அல்லது காத்தலிக் மதத்தினரை மணந்துகொள்வோரும் அரசராக அருகமற்றவர்கள்' என்றும் அதில் நிர்ணயம் செய்யப்பட்டிருந்தது. ஆதலால் பிற்காலத்தில் ப்ராடெஸ்டன்ட் மதத்திற்கு அடிப்படையான அபாயம் நேரிட இடமில்லாது செய்யப்பட்டது.

அதே வருஷத்தில் 'கலகச் சட்டம்' (Mutiny Act) என்று ஒரு சட்டம் நிறைவேறியது. அதன்படி நிரந்தரமான ஒரு சேனையை அரசர் வைத்துக்கொள்ளலாமென்று அநுமதி கொடுக்கப்பட்டது. ச்சார்லஸுக்கும் ஜேம்ஸுக்கும் ஆயுள் முழுதும் வேண்டியிருந்த செலவு தொகையை ஒரே தடவையில் தாம் கொடுத்து

விட்டதனால்தான், அவர்கள் அதன்பிறகு தம்மை அலட்சியம் செய்து தமது தயவை நாடாமல் சுயேச்சாதிகாரம் செலுத்தி வந்தனர் என்பதை உணர்ந்த பார்லிமென்ட் சபையார் வில்லியத்திற்கு ஒரு வருஷத்திற்குத் தேவையான செலவு தொகையை அளித்தனர். எனவே, மறுவருஷத்தின் செலவு தொகையைப்பெற, அவர் பார்லிமென்டைக் கூட்டுவது அவசியமாயிற்று. முந்திய வருஷத்தில் அவர் கிரமத்தவறாக நடந்திருந்தால், பார்லிமென்ட் சபையினர் மறுவருஷச் செலவைச்கொடுக்க மறுத்துவிடலாம். இவ்விதமாக அரசரைப் பார்லிமென்டார் ஒரு கட்டுப்பாட்டிற்கு உள் படுத்தி, அவர் எப்பொழுதும் தம்மைச் சார்ந்து நிற்கும்படியும் செய்து கொண்டனர். அதே வருஷத்தில் 'சகிப்புச் சட்டம்' (Toleration-Act) என்ற ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி 'இணங்காதவர்க்கத்தினர்' தமது கொள்கைப்படி பிரார்த்தனை நடத்தலாம் என்று அவர்களுக்கு சுதந்திரமளிக்கப்பட்டது. ஆனால், அந்தச் சட்டத்தினால் இக்காலத்தில் இருப்பதுபோன்ற பூர்த்தியான மதசுதந்திரம் ஏற்படவில்லையானாலும் பண்டைக்காலத்து மதவெறியை அது ஒருவாறு குறைத்தது. மதவேற்றுமை காரணமாக ஒருவரையொருவர் வெறுப்பதும் ஒருவரோடொருவர் போராடுவதும் மதியீனமான செய்கை என்ற சித்தாந்தத்தை அது பரவச்செய்தது. அந்த அற்ப சுதந்திரத்தை யளித்ததற்குக்கூட பலர் இணங்கவில்லை. இரண்டாவது ச்சார்லஸின் காலத்தில் திருத்தி அமைக்கப்பட்ட மதஸ்தாபனம், மிதமான அளவிற்குமட்டும், ப்ராடெஸ்டன்ட் கொள்கைகளை ஆதரித்ததேயன்றி அமிதமான ப்யூரிடன்களையும், அவர்களுக்கு நேர்விரோதமான கா/2தலிக்வகுப்பாரரையும் விரோதித்து வந்தது. அவ்வாறு சட்டப்படி அமைக்கப்பட்ட மதஸ்தாபனத்தைச்சேர்ந்த பலர் மேலே கூறிய சட்டத்தைஆதரிக்கவில்லை. தம்முடன் இணங்காமல் வெளியேறிய ப்யூரிடன்களுக்கு சுதந்திரமும் தனிப் பிரார்த்தனை செய்யும் உரிமையும் அளிப்பது அபாயகரமானதென அவர்கள் கருதினார்கள். ஜேம்ஸ் அரசர் கா/2தலிக் மதத்தை ஸ்தாபிக்க முயன்றதுபோல, வில்லியம் அமிதமான ப்யூரிடன் முறையை பலப்படுத்திவிடுவரோ என அவர்கள் அஞ்சினர். அந்த கோஷ்டியார் சிலர், ஜேம்ஸ் உயிருடனிருக்கும்பொழுதே வில்லி

யம் முடிசூடியது தெய்வ சம்மதமான செய்கையல்லவென எண்ணினர். ஆனால், அவர்களில் வெகு சிலரே அந்த நம்பிக்கையைக் கொண்டிருந்தனர். பெரும்பாலோரான ப்ராடெஸ்டன்ட் இனத்தாரும், ப்யூரிடன் இனத்தாரும் வில்லியத்தின் கட்சியையே ஆதரித்தனர்.

இங்கிலீஷ்காரர் தமது நன்மையைக் கருதி வில்லியத்தை அரசராக ஏற்றுக்கொண்டனராதலால், ஸ்காட் மக்களும் அயரிஷ்காரரும் தமது பழைய அரசரை விலக்கிப் புதிய அரசரைப் பணியத் தயாராக இல்லை. எனவே ப்ரிட்டிஷ் தீவுகள் முழுதிலும் தமது ஆட்சியை செலுத்துவது வில்லியத்திற்குச் சிறிது பிரயாசையாகவிருந்தது. அயரிஷ்காரர் அநேகமாக காதலிக் மதத்தினராகவே இருந்தனராதலால், அவர்கள் ஜேம்ஸ் அரசருக்கு மாத்திரமே கீழ்ப்பட்டிருந்தனர். அவர்களது உதவியைக் கொண்டு மறுபடி தமது பதவியைப் பெறும் நோக்கத்துடன் 1689-ல் ஜேம்ஸ் அயர்லண்டில் வந்திறங்கினார்; ப்ரெஞ்சு சேனையொன்றையும் அவர் அழைத்து வந்தார். அவர் ஓர் அயரிஷ் பார்லிமென்டைக் கூட்டி, அங்கு தமது அதிகாரத்தை ஏற்படுத்துவதற்கான முயற்சிகளைச் செய்து கொண்டார். ஆனால் அயர்லண்டில் உள்ள அல்ஸ்டர் என்ற மாகாணத்தில் பல ப்ராடெஸ்டன்ட் இங்கிலீஷ்காரர் குடியேறியிருந்தனரல்லவா? அவர்கள் வில்லியத்தின் கட்சியை யாதரித்து ஜேம்ஸுடன் போர் புரிந்தனர். லண்டன் டெர்ரி (London derry) என்ற இடத்தை ஜேம்ஸ் முற்றுகையிட்டாராலும், கடைசியில் இங்கிலீஷ்காரரே வெற்றிபடைந்தனர். 1690-ல் வில்லியம் தாமாகவே ஒரு பெரும்படையை அழைத்துக் கொண்டு, ஜேம்ஸை எதிர்க்க அயர்லண்டிற்கு வந்து சேர்ந்தார். பாய்ன் (Boyne) என்ற இடத்தில் இருவரது சேனைகளுக்கும் சண்டை தொடங்கியது. ஜேம்ஸ் தோல்வியடைந்து ப்ரான்ஸ் தேசத்திற்கு ஓடிவிட்டார். அதன்பிறகு அவரைப் பின்பற்றிய காதலிக்வகுப்பார் சிற்சில இடங்களில் போர் புரிந்து தோல்வியுற்றனர். 1691-ல் அவர்கள் லிமெரிக் (Limerick) என்ற இடத்தில் சமாதானம் செய்துகொண்டனர். அதன்படி, வில்லியத்தை அரசராக ஏற்றுக்கொண்ட காதலிக்வகுப்பார் மன்னித்துவிடப் பட்டனர். அதன் பிறகு மறு

படியும் ப்ராடெஸ்டன்ட் மதத்தினர் அயரிஷ்காரரைப் பல கொடுமைகளுக்கு உட்படுத்தினர். அயர்லண்டின் சுதேச ஜனங்கள் தமது சொந்த நாட்டிலேயே சுதந்திரமின்றி ஒடுக்கப்பெற்றிருந்தனர். வில்லியத்தின் அரசாட்சி அங்கும் ஸ்திரமாக வேரூன்றிவிட்டது. அதுபோலவே ஸ்காட்லண்டிலும் வில்லியத்தின் ஆட்சி நிலைப்பதற்கு சண்டை செய்ய வேண்டியதாயிற்று. ஆனால் ஜேம்ஸ் அரசரை இங்கிலீஷ்காரர் எவ்வளவு வெறுத்தனரோ அவ்வளவு அளவிற்கு ஸ்காட்மக்களும் வெறுத்தமையால், அவ்வரசர் விலகிப் போனது அவர்களுக்கு நன்மையாகவே தோன்றியது. அதன் பிறகு ப்ரெஸ்பிடீரியன் தலைவர்கள் சேர்ந்துகொண்டு வில்லியத்தையே அரசராக ஏற்று, தமது விருப்பத்தின்படி மதச்சீர்திருத்தமும் செய்துகொண்டனர். ஆனால் ஸ்காட்லண்டின் வடபாகத்தில் இருந்த மலைநாட்டு இனத்தார் சிலர் வில்லியத்திற்கு விரோதமாகக் கிளம்பினர்கள். டன்டி (Dundee) என்ற பிரபு அவர்களுக்குத் தலைவராயிருந்தார். ஆனால் வில்லியத்தின் சேனை, அந்தக் கலகக்காரரை கில்லிக்ராங்கி (Killiecrankie) என்ற இடத்தில் சந்தித்து, டன்டியைக் கொன்று எதிரிகளைச் சின்னபின்னமாக்கிவிட்டது. எதிரிகள் கலைந்து போனவுடன், வில்லியத்தின் ஆட்சியை அங்கீகரிக்காதவர்களின் தோல்வியும் நிச்சயமாய்விட்டது. ஆனால் மலைநாட்டு இனத்தார்கள் வில்லியத்தின்மேல் கொண்டிருந்த பகைமையினால் அவ்வாறு கலகம் விளைக்கவில்லை; அவர்கள் முரட்டுக்குணம் வாய்ந்தவர்களாதலால், போர் புரிவதில் வேட்கை கொண்டு டன்டியைப் பின்பற்றி வந்தனர். எனவே, அவர்களை அடக்கி சமாதானத்தை நிலைநிறுத்தும் வேலை மெதுவாக நடந்து வந்தது. பலர் வில்லியத்தை அரசராக ஏற்றுக்கொண்டனர். ஆனால் அம்மலைநாட்டு இனத்தாருள் மாக்டனல்ட் (Macdonald) என்ற இனத்தின் தலைவர் மாத்திரம் சிறிதுகாலம் வில்லியத்தை அரசராய் அங்கீகரிக்காமல் இருந்து வந்தார். க்ளென்கோ (Glencoe) என்ற இடத்தில் அந்தத் தலைவர் வசித்து வந்தார். கொஞ்சகாலம் கழிந்த பிறகு, அவரும் புதிய அரசருக்குப் பணிந்து போனர்; ஆனால் வில்லியத்தின்கீழ் வேலை செய்த உத்தியோகஸ்தர்களில் சிலர் அந்த இனத்தாருடன் பகைமை கொண்டிருந்தமையால், அம்மாதிரி கால

தாமதம் செய்ததற்காக அவ்வினத்தாரை தண்டிக்க வேண்டுமென்று வில்லியத்தைத் தூண்டி விட்டனர். அவர்களது உண்மையான கருத்தை அறியாத வில்லியம் அவர்களது சொல்லை நம்பி, அதற்கு உத்தரவளித்தார். 1692-ல் அரசரை ஏமாற்றி அநுமதி பெற்ற வீரர்கள் மா/2க்டொனல்டீ இனத்தாரை நயவஞ்சகமாகக் கொன்று வீழ்த்தினர். அது 'க்ளென்கோ படுகொலை' (Massacre of Glencoe) என்று குறிக்கப்படுகிறது. அவ்வாறு, காரணமின்றி மகா குரூரமான அந்தப் படுகொலையை அநுமதித்தது பற்றி பலர் வில்லியத்தை இகழ்ந்து தூற்றினார்கள்.

(2) வில்லியத்தின் அரசாட்சி முறை; அரசியல் வளர்ச்சி:— வில்லியம் அடிக்கடி ஐரோப்பிய யுத்தங்களில் கலந்து கொண்டிருந்தமையால், அவருக்கு ஏராளமான பணம் தேவையாயிருந்தது. வரிகளின் மூலம் அதைச் சேகரிக்க முடியாமல்போகவே, அவர் சில தனவந்தர்களிடத்திலிருந்து கடன் வாங்கலானார். ஆனால் அந்தக் கடனை விரைவில் திருப்பிக் கொடுக்க அவரால் முடியவில்லை. எனவே, ஒவ்வொரு வருஷத்தின் செலவு கணக்கிலும், அந்தக் கடன் தொகைக்குச் செல்லவேண்டிய வட்டித்தொகையும் சேர்ந்து வந்தது. மேலும், அரசருக்குக் கடன் கொடுத்து உதவிய சில வர்த்தகக் கூட்டத்தாருக்கு வில்லியம் ஒரு விசேஷ உரிமையை அளித்தார்; அதாவது அக்கூட்டத்தார் ஒரு பாங்கியாக அமைந்து கொண்டு, கொடுக்கல் வாங்கல் வியாபாரம் செய்ய அநுமதி கொடுத்தார். அந்த பாங்கி இங்கிலண்டு பாங்கி (Bank of England) என்று பெயர் பெற்று, தேசத்தின் பணவிவகாரங்களை கவனித்து வந்தது. இப்பொழுதுகூட அந்த பாங்கியே அரசாங்கத்தாருக்கு அநுசரணையாக அங்கு பண சம்பந்தமான விவகாரங்களைச் செய்து வருகிறது. மேலும் வில்லியம் திருப்பிக் கொடுக்கமுடியாத கடன் தொகை 'தேசீயக் கடன்' (National Debt) என்ற பெயருடன் அப்படியே நின்றுவிட்டது; பிற்காலத்தில் அரசாங்கத்தார் தம்தம் சக்திக்கேற்றபடி அந்தந்த சமயத்தில் அக்கடனைத் தீர்க்கவேண்டியதாயிற்று. அதிலிருந்து வில்லியத்திற்கு ஒரு நன்மை உண்டாயிற்று. அதாவது, அவரிடம் பணம் கொடுத்தவர்கள் அதன்பின் ஜேம்ஸின் கட்சியை ஆதரிக்கக்கூடாமல் போய்விட்டது. ஏனெனில் ஜேம்ஸ்

அரசரானால் வில்லியம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கமாட்டார். ஆதலால் பல வர்த்தகர்கள் வில்லியத்தை சிம்மாதனத்திலிருத்துவதிலேயே அக்கரை கொண்டனர்.

ஜேம்ஸ் அரசரைத் துரத்தி வில்லியத்தை அரசாக்கியது பலருக்கு திருப்திகரமா யிருந்ததானாலும், வில்லியம் இங்கிலீஷ்காரர்களுடைய பூர்த்தியான அன்பைக் கவரும் குணங்களுடையவராயிக்கவில்லை. இங்கிலீஷ் சமூகத்தின் பழக்க வழக்கங்கள் அவருக்கு சரிப்படவில்லை. மேலும் இங்கிலண்டைவிட ஹாலண்டு தேசத்தைப்பற்றியே அவர் அதிக அக்கரையும் கவலையும் கொண்டிருந்தார். அவரது முழு கவனமும் ஐரோப்பாவின்மீது சென்றது. ப்ரெஞ்சு மன்னரை வீழ்த்துவதில் இங்கிலீஷ் சேனையும் பணமும் தமக்கு உதவியாயிருக்குமென்ற கருத்துடனேயே அவர் முடிசூடியதாகப் பல இங்கிலீஷ்காரர்கள் எண்ணினர். டச்சுக்காரரையே வில்லியம் தமது அந்தரங்க நண்பர்களாக வைத்துக்கொண்டார். அவர் எப்பொழுதும் உற்சாகம், கம்பீரத்தோற்றம், குதூகலம் முதலியவையின்றி மௌனமாகவே இருந்தமையால், அவருடைய பிரஜைகளுக்கு அவருடைய திறமையும் மேம்பாடும் உள்ளபடி விளங்கவில்லை. அவரது மனைவியான மேரி எல்லோரையும் சந்தோஷிப்பிக்கும் குணம் வாய்ந்தவள். அவள் 1694-ல் உயிர் துறந்துவிட்டமையால், அதன் பின்னர் வில்லியம் தனியாகவே அரசு புரியலானார். அவருக்கு சந்ததி உண்டாகவில்லையாதலால், அவருக்குப் பிறகு மேரியின் இளைய சகோதரியான ஆன் (Anne) என்பவள் பட்டத்திற்கு வரவேண்டுமென்று ஏற்பாடாயிற்று.

இரண்டாவதுச்சார்லஸின் காலத்தில் விக், டோரி என்ற இரண்டு இராஜீயக் கட்சிகள் பார்லிமெண்ட் சபையில் தோன்றியதைப்பற்றி முன்பு விவரித்தோம். வில்லியத்தின் ஆட்சியில் இக்கட்சிகள் முக்கியமான அபிவிருத்திகளை யடைந்தன. முதலில் வில்லியம் ஏதாவது ஒரு குறித்த கட்சியை மாத்திரம் ஆதரிப்பது தவறு என்று நினைத்து இரண்டு கட்சிகளிலிருந்தும் தமது மந்திரிமாரைப் பொறுக்கி யெடுத்துக்கொண்டார். ஆனால் விக், டோரி ஆகிய இரண்டு கட்சிகளுக்கும் அடிப்படையான அபிப்பிராய வேற்றுமைகள் இருந்து வந்ததாகையால் இரு கட்சியினரும் ஒத்து நடப்

பது கடினமாயிற்று. உதாரணமாக, வில்லியம் அநாவசியமாக, அன்னிய தேச வியவகாரங்களில் தலையிட்டுக்கொள்ளக் கூடாதென்றும் ஐரோப்பிய வியவகாரங்களில் இங்கிலீஷ்காரர் வரம்பை மீறிய நாட்டம் கொள்வது அபாயகரமானதென்றும் டோரிகள் கூறினர். வில்லியத்திற்கு அந்த ஆலோசனை உசிதமானதாகத் தோன்றவில்லை. எனவே தமது மந்திரி சபையினரை ஒரேயொரு கட்சியிலிருந்து மாத்திரம் பொறுக்கி எடுப்பதே சிறந்த வழியென்று அவர் உணர்ந்து கொண்டார். அவர் டோரிகளை விலக்கிவிட்டு விகு கட்சினரை மாத்திரம் வைத்துக்கொண்டு மந்திரி சபையாரை நியமித்துக்கொண்டார். 1696-ல் சில விகு தலைவர்கள் அம்மந்திரி சபையினங்கத்தினராயிருந்தனர். அவர்கள் ஜன்டோ (Juntc) என்று குறிக்கப் படுகிறார்கள். ஜன்டோ மந்திரி சபையின் ஆலோசனையை அநுசரித்தே வில்லியம் நடக்கலானார். 1694-ல் பார்லிமென்டார் "மூன்று வருஷாந்தரச் சட்டம்" (Triennial Act) என்று ஒரு சட்டத்தை நிறைவேற்றி மூன்று வருஷத்திற்கொருமுறை பார்லிமென்ட் சபை புதுப்பிக்கப்பட வேண்டுமென்று தீர்மானித்தனர். வேறு சில முற்போக்கான உத்தரவுகளையும் வில்லியம் பிறப்பித்தார்.

இப்பொழுது இங்கிலண்டில், பார்லிமென்ட் கூடிய வுடன், அதில் எந்தக் கட்சிக்கு அதிக பலம் இருக்கிறதோ, அதாவது எந்தக் கட்சியார் பெரும்பாலோராய் வந்திருக்கின்றனரோ அந்தக் கட்சியின் தலைவர் வேறு சில அங்கத்தினரைச் சேர்த்துக்கொண்டு மந்திரி சபையை யமைத்து அந்தப் பார்லிமென்ட்கலையும் வரையில் இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்துவது வழக்கமாக இருந்து வருகிறது. அந்த ஏற்பாட்டின் முளை வில்லியத்தின் காலத்தில் மெதுவாகக் கிளம்பியதெனக் கூறலாம். ஆகவே, இனி அந்த மந்திரிசபையின் அமைப்பில் நேரிடும் மாறுதல்களையும் அபிவிருத்திகளையும் கவனித்து வரவேண்டியது அவசியம்; மந்திரி சபை எந்தெந்த சந்தர்ப்பங்களினால் இப்பொழுது பெற்றுள்ள பூர்த்தியான அதிகாரத்தை யடைந்தது என்பது இனி விளக்கப்படும். இக்காலத்தில் இங்கிலண்டில், அரசரை விட பிரதம மந்திரியே சர்வ அதிகாரமும் வாய்ந்தவர். ஆனால் வில்லியம் இப்போதைய அரசரைப்போல வெறும்

பதுமையாக இருந்து விடவில்லை. அந்த மாறுதல் பிற்காலத்தில்தான் ஏற்பட்டது. வில்லியம் தமக்கு சட்டப்படி கிடைத்திருந்த அதிகாரத்தைத் தாமே வகிக்க வேண்டுமென்ற தீர்மானம் கொண்டவர்தான். அதையொட்டி அவர் தமதிச்சைப்படியே மந்திரிகளைப் பொறுக்கி நியமித்துக் கொண்டார். ஆனாலும் பார்லிமெண்டில்—அதாவது ஜனப்பிரதிநிதிகளடங்கிய காமன்ஸ் சபையில்—எந்தக் கட்சிக்கு அதிக பலம் இருக்கிறதோ அந்தக் கட்சியினரையே அவர் நியமித்ததன் காரணம், தாமும் பார்லிமெண்டும் சச்சரவு இல்லாமல் ஸமரஸ பாவமாய் நடந்துகொள்ள வேண்டுமென்பதுதான். அந்த முறை அழியாமல் தொடர்ச்சியாக இருந்து வந்து, தற்கால நிலைமையையடைந்தது. இங்கிலண்டின் மந்திரி சபைக்கு கா/2பினட் (Cabinet) என்று பெயர். கா/2பினட் சபையே இப்பொழுது அங்கு துரைத்தன நிர்வாகம் நடத்திவருகிறது. எனவே 1688-ல் நடந்த இராஜ்யப் புரட்சியினால் ஏற்பட்ட பல நன்மைகளுள், அரசரிடமிருந்த அதிகாரம் பார்லிமெண்டுக்கும், அதன் மூலம் கா/2பினட் சபைக்கும் மாறியதே மிகவும் முக்கியமானது. அந்த மாறுதல் பூர்த்தியாக வளர்ந்து அபிவிருத்தி யடைவதற்கு சிறிது காலம் கழிய வேண்டி யிருந்ததானாலும் வில்லியத்தின் ஆட்சியிலேயே அது நன்றாக ஊன்றிப்போயிற்று. அதன் பின் பல அநுகூலமான சமய சந்தர்ப்பங்களால் அது ஓங்கி வளர்ந்த விவரம் பின்னால் விளக்கப்படும்.

வில்லியத்தின் ஆட்சியில் ஸ்காட்லன்டில் ஒரு துக்ககரமான சம்பவம் நடந்தது. அந்த தேசம் அப்பொழுது மிகவும் எளிய நிலையிலேயே இருந்தது. அதாவது இங்கிலண்டைப் போல அங்கு வியாபாரப் பெருக்கும் பொருளபிவிருத்தியும் ஏற்படவில்லை. இங்கிலீஷ்காரரோ அமெரிக்கா, இந்தியா முதலான தூர தேசங்களோடு வியாபார சம்பந்தம் வைத்துக்கொண்டு பொருளீட்டியதைக் கண்ட ஸ்காட்மக்களிற்சிலர் தாமும் அம்மாதிரி பொருள் தேட ஆசைகொண்டனர். ஆனால் இங்கிலண்டுக்கு இருந்த சில விசேஷ அநுகூலங்கள் அவர்களுக்கு இல்லை. உதாரணமாக, க்ராம்வெல் காலத்தில் ஏற்பட்ட கடல் வியாபாரச் சட்டங்களால் இங்கிலீஷ்காரருக்கு சிலசௌகரியங்கள் ஏற்பட்டன. ஸ்காட்லன்டோ இங்கிலீஷ் மன்னருக்கு உட்பட்டிருந்தும், வியாபார லாபத்திலும் சம்பத்துப் பெருக்

கிலும் இங்கிலண்டுடன் சம உரிமைகளைப் பெறாமல் அடிமை போல இருந்து வந்தது. 1695-ல் பாடர்ஸன் (Paterson) என்பவர், வடஅமெரிக்காவையும் தென்அமெரிக்காவையும் ஒன்றாகச் சேர்க்கும் பனமா அல்லது டேரியன் பூஸந்தியில் (Isthmus of Panama or Darien) ஸ்காட் வர்த்தகஸ்தானமொன்றை ஏற்படுத்தி அதன் மூலம் ஏராளமான பொருள் சம்பாதிக்கலாமென்று திட்டம் போட்டு அதை வெளிப்படுத்தினர். பலர் அந்த டேரியன் திட்டம் பலிக்குமென்ற நம்பிக்கைகொண்டு அதில் கலந்து கொண்டனர். 1688-ல் ஒரு வர்த்தகக் கம்பெனியும் ஸ்தாபிக்கப்பட்டது. பாடர்ஸனும் மற்றும் சிலரும் சென்று அந்த பூஸந்தியையடைந்தனர். ஆனால் அங்கு அவர்களுக்கு பல அவகேடுகள் சம்பவித்தன. சீதோஷ்ண ஸ்திதி ஒத்துக் கொள்ளாமையால் அவர்களில் பலர் உயிரிழந்தனர். ஸ்பெயின் தேசத்தார் அந்தப் பிரதேசம் தமக்குச் சொந்தமானதென்று கூறி, புதிய வியாபாரிகளை எதிர்த்தனர். சுயநல துரந்தரராயிருந்த இங்கிலீஷ் வர்த்தகர்களோ டேரியன் திட்டம் பூர்த்தியாக வெற்றி யடையுமானல், அது தமக்குப் போட்டியாக ஏற்படும் என்ற கருத்தைக்கொண்டு, அது பலிதமாகாமல் போகவேண்டுமென்று விரும்பினர்கள். எனவே, மேற் காரணங்களால், டேரியன் திட்டம் பெரும் குழப்பமாக முடிந்தது. சீதோஷ்ண மாறுதலுக்கு இலக்காகாது உயிர்தப்பியவர்களையும் ஸ்பெயின் தேசத்தார் எதிர்த்துத் துரத்திவிட்டனர். ஆனல் ஸ்காட்லன்டு தேசத்தைக் கீழ்ப்படுத்துவதில்மாத்திரம் அதிக அக்கரை காட்டிய இங்கிலீஷ்காரர் ஸ்காட் வர்த்தகர்களுக்கு எவ்வித உதவியையும் செய்ய வில்லை. அந்த திட்டம் தவறிப்போனதனல், பலர் பெரிதும் நஷ்டத்திற்கு ஆளாயினர். அதோடு இங்கிலண்டுக்கும் ஸ்காட்லன்டுக்கும் இருந்து வந்த சொற்ப நட்பும் போய்விடவே, கடுமையான பகைமையும் பொறாமையுமே ஏற்பட்டன.

(3) **அன்னிய நாட்டு யுத்தங்கள் : அந்திய காலம் :**—ஐரோப்பிய வியவகாரங்களில் வில்லியத்திற்கு அமிதமான அக்கரை இருந்ததென்பதையும், ப்ரெஞ்சு மன்னருடைய அதிகாரத்தை ஒடுக்குவதையே அவர்முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தாரென்பதையும் முன்பே விவரித்தோம். ப்ரெஞ்சு அரசான லூயியை எதிர்ப்

பதற்கு அவர் பல ஐரோப்பிய அரசுகளை ஒன்று சேர்த்துக் கூட்ட முயர்சித்து வந்தார். அந்த முயர்சியில் இங்கிலண்டும் தம்முடன் சேர்வது பெரிய நன்மை என்பதைக் கருதியே அவர் இங்கிலண்டின் அரசாட்சியை ஏற்றுக்கொண்டார். ஜேம்ஸ் அரசர் இராஜ்ஜியத்தை விட்டு ஓடியபின் அவர் ப்ரெஞ்சு தேசத்தில் போய் தங்கியதாலும், ஸ்டூவர்ட் மன்னர்களுக்கு லூயி உதவிசெய்திருந்ததாலும், அவர் ஒருகால், ஜேம்ஸுக்கும் உதவலாம் என்ற அச்சம் கொண்டிருந்த இங்கிலீஷ்காரரும் லூயியினிடம் பகைமை பாராட்டினர். 1689-ல் வில்லியம் சிம்மாதன மேறிய வுடன் ஐரோப்பாவில் லூயியை எதிர்த்து ஒரு போர் நடந்தது. அதில் வில்லியமும் கலந்துகொண்டார். வேறு நான்கைந்து தேசங்களும் அவரது கட்சியில் சேர்ந்திருந்தன. அப்படியிருந்தாலும், லூயியை அவர்களால் இலகுவில் வெல்ல முடியவில்லை. 1690ல் ப்ரெஞ்சு தேசத்துக் கப்பற்படை ஒன்று, நிரம்பவும் கீர்த்தி பெற்ற இங்கிலீஷ் டச்சுக் கப்பற் படைகளை பீச்சி ஹெட் (Beachy Head) என்ற இடத்தில் தோற்கடித்தது. அவ்வாறு கடலின் ஆதிபத்யத்தை இழந்தது இங்கிலண்டிற்குப் பெரிய அபாயமாயிற்று; ஏனெனில் கடல் ஆதிபத்யத்தை இழந்தால் லூயி அதன் மீது படையெடுத்து வருவது சாத்தியமாயிருந்தது. ஆனால், 1692-ல் லாஹோக் (La Hougue) என்ற இடத்தில் இங்கிலீஷ் படை பூர்த்தியாக வெற்றி யடைந்து கடலதிகாரத்தைத் திரும்பவும் மீட்டுக் கொண்டது. கடலில் யுத்தம் நடந்ததுபோலவே ஐரோப்பாவிலும் யுத்தம் நடந்தது; வில்லியம் ஒவ்வொரு வருஷமும் தோல்வி யுற்றாராலும், விடாமுயற்சியுடன் உழைத்து வந்தார். அதனால் யுத்தம் அதிக காலம் நீடித்து வந்ததேயன்றி ஒரு கட்சிக்காகிலும் முடிவான வெற்றி கிடைக்கவில்லை. அதனால் இரு கட்சியினரும் தளர்வடைந்து 1697 ல் ரீஸ்விக் (Ryswick) என்ற இடத்தில் சமாதானம் செய்து கொண்டனர். அதன்படி லூயி, தாம் பிடித்துக்கொண்ட பிரதேசங்களை விட்டு விட்டதுடன், வில்லியத்தை இங்கிலீஷ் மன்னராக அங்கீகரித்தார்; அதாவது தமது தேசத்தில் அடைக்கலம் புகுந்திருந்த ஜேம்ஸுக்கு அவர் அதன் பிறகு உதவுதல் முடியாததாயிற்று. அந்த உடன்படிக்கையினால் லூயியின் அதிகாரத்திற்கு ஒரு வரம்பு

ஏற்படுத்தப்பட்டது. இங்கிலண்டு தேசத்தாசாது முயற்சியிஞ லேயே அது முடிந்ததாகையால் அந்த தேசத்திற்கு ஐரோப்பாவில் அதிக மதிப்பு ஏற்பட்டது.

ஆனுல் ரிஸ்விக் உடன்படிக்கையுடன் ஐரோப்பாவில் யுத்தக் குழப்பம் முடிந்து விட வில்லை. சிலவருஷ காலத்திற்குப் பிறகு மறு படியும் ஒரு பெரிய யுத்தம் ஏற்பட்டது. அதற்கு "ஸ்பெயின் தேசத்து வார்சுரிமை யுத்தம்"(War of the Spanish Succession) என்று பெயர். அதன் காரணங்கள் மிக சிக்கலானவை; அவற்றை அடியில் வருமாறு விவரிக்கலாம். 16-வது நூற்ருண்டில் ஸ்பெயின் தேசம் பிரபலமடைந்திருந்து, பின்னர் ஒடுங்கிப்போனதாலுலும், அந்த இராஜ்ஜியத்தின் விஸ்தீரணம் மிகவும் பெரிதாகவே இருந்தது.ஸ்பெ யின் தேசத்தில் அப்பொழுது அரசராயிருந்த இரண்டாவது ச்சார் லஸ் சக்கரவர்த்திக்கு சந்ததி இல்லை. அவர் சீக்கிரத்தில் மரணமடை வாரென்று தோன்றவே அவரது காலத்திற்குப்பின் அந்த இராஜ்ஜி யம் யாரைச் சேருமோ என்ற விஷயத்தைக் குறித்து ஐரோப்பிய அரசர்கள் கவலை கொள்ளலாயினர். ஷை சர்காவர்த்தியின் இரு சகோதரிகள் முறையே ப்ரெஞ்சு மன்னரான லூயியையும், ஆஸ்ட் ரியா தேசத்து மன்னரான லியோபால்டு (Leopold) என் பவரையும் மணந்துகொண்டிருந்தனர். எனவே அச்சரவர்த்தியின் காலத்திற்குப் பின்னர் அவரது சகோதரிகளுக்கு அரசாட்சி உரிமை கிடைத்தால், ஸ்பெய்ின் இராஜ்ஜியம் முழுதும் ப்ரான்ஸுடனே அல்லது ஆஸ்ட்ரியாவுடனே சேர்ந்துவிடும். அவ்விதம் இரண்டு இராஜ்ஜியங்கள் ஒன்றுகூடி அபரிமிதமாகப் பெருகிவிட்டால், ஐரோப்பாவில் சமரீதியான அரசியல் நிலைமை இல்லாமல் போய் விடும் என்று எல்லோரும் அஞ்சினர். ஸ்பெயின் சக்கரவர்த்தியின் குடும்பத்தை அனுசரித்துப் பார்த்தால் ஸ்பெயின் இராஜ்ஜியத்திற் குரிய வார்சுதாரர்களில் முக்கியமான உரிமை யுடையவர்கள் கீழ்க் கண்டவாறு இருந்தனர்.

---

# ஸ்பெயின் அரச குடும்பம்.

---




மரணத்தறுவாயில் இருந்த இரண்டாவது ச்சார்லஸ் சக்கரவர்த்திக்கு அவருடைய சகோதரி புத்திரனான ப்ரெஞ்சு இளவரசரோ, அல்லது, இன்னொரு சகோதரியின் பேரனான பவேரியாதேசத்து இளவரசர் ஜோஸப்2 என்பவரோ வார்சுதாரராய் வரலாம். ஆனால் ப்2ரெஞ்சு மன்னரான லூயி தமது குமாரரின் சார்பாகவும், ஆஸ்ட்ரியா மன்னரான லியோபால்ட் தமது பேரனின் சார்பாகவும் ஸ்பெயின் இராஜ்ஜியத்தைப்பெற முந்துவார்கள்போலத் தோன்றியது. வில்லியம் ஐரோப்பிய அரசியலின் சமரீதித்தன்மையைக் காக்கும்பொருட்டு, ப்2ரான்ஸோ ஆஸ்ட்ரியாவோ ஸ்பெயின் இராஜ்ஜியம் முழுவதையும் அடையாமற் செய்ய முயற்சித்தார். அவர்

ப்2ரெஞ்சுமன்னருடன் கலந்து பேசி, போர் புரியாமலேயே அந்த வியவகாரத்தைத் தீர்க்க முயற்சித்தார். 1698-ல் அவரும் லூயியும் சேர்ந்து 'முதலாவது பாகப் பிரிவினை உடன்படிக்கை' (First Partition Treaty) ஒன்று ஓர் உடன்படிக்கையைத் தயாரித்து அதன்படி ஆஸ்ட்ரியாவின் அரசரது பேரனுன பவேரியா இளவரசருக்கே ஸ்பெயின் தேசத்தின் பட்டம் சேரவேண்டுமென்று ஏற்பாடு செய்தனர். அம்மாதிரி செய்ததன் கருத்து விசாலமாயிருந்த ஸ்பெயின் தேசம் இன்னொரு பெரிய அரசுடன் சேராமல் செய்வதுதான். அவ்வளவு முன்யோசனையுடன் நடந்துகொண்ட வில்லியத்திற்கு அதனுல் பெரிய மதிப்பே ஏற்பட்டது. மேலும் ஸ்பெயின் இராஜ்ஜியத்தின் பகுதிகளான நேபிள்ஸ், ஸிஸிலி (Naples, sicily) என்ற பிரதேசங்கள் லூயிக்கும், மைலன் (Milan) என்ற பிரதேசம் லியோபால்டுக்கும் கொடுக்கப்பட்டன. அவர்கள் அந்த உடன்படிக்கைக்கு இணங்கி தமது பேராசையை அடக்கிக்கொண்டமையால், ஷ பிரதேசங்களை அவர்கள் பரிசுகளாகப்பெற்றனர். குழப்பமான ஒரு பெரிய வியவகாரத்தை இவ்வாறு திருப்திகரமாகத் தீர்த்து வைத்ததற்காக எல்லோரும் சந்தோஷப்பட்டுக்கொண் டிருக்கையிலேயே அதே வருஷத்தில், ஸ்பெயின் இராஜ்ஜியம் முழுவதையும் பெறவிருந்த பவேரியா இளவரசர் இறந்துபோய் விட்டார். எனவே அதே வியவகாரத்தை மறுபடி தீர்த்துவைப்பது அவசியமாயிற்று.

ஐரோப்பாவில் யுத்தம் நேரிடாமல் எவ்வாறுகிலும் தடுக்க நிச்சயம் செய்துகொண்ட வில்லியம் சலிப்பின்றி மறுபடியும் 1700-ல் 'இரண்டாவது பாகப் பிரிவினை உடன்படிக்கை' (Second Partion Treaty) ஒன்றைத் தயாரித்தார். லியோபால்ட் என்பவர் ஏற்கனவே ஸ்பெயின் தேசத்தரச வம்சத்திற்கு உறவினராதலால், அவருக்கு இரண்டாவது மனைவியின்மூலம் பிறந்த இரண்டாவது குமாரரான ஆர்ச்டியூக் ச்சார்லஸ் என்பவருக்கு ஸ்பெயின் இராஜ்ஜியம் கிடைத்தது; ஏனெனில் அந்த இரண்டாவது குமாரருக்கு வேறு இராஜ்ஜியம் கிடைக்காது. ஆஸ்ட்ரியா இராஜ்ஜியம் லியோபால்டின் மூத்த குமாரருக்கே கிடைக்கும். ஆகவே இளைய குமாரரை ஸ்பெயின் தேசத்தரசராய் ஏற்படுத்துவதில் அபாயமொன்று மில்லையென்று

நினைத்து அந்த ஏற்பாடு செய்யப்பட்டது. தமது குமாரருடைய உரிமையை விட்டுக் கொடுத்ததற்காக, லூயிக்கு மைலன் பிரதேசத்தையும் கொடுத்தனர். ஆதலால் இரண்டாவது உடன்படிக்கைப்படி வியவகாரங்கள் அமைதியாகவே தீர்ந்துபோனதாகத் தோன்றின.

ஆனால், மேலே குறித்த உடன்படிக்கையைத் தயாரித்தவர்கள் ஒரு பெரிய மூடக்காரியத்தைச் செய்துவிட்டனர். அதாவது, தங்களுடைய ஆத்திரத்தில், அவர்கள் ஸ்பெயின் தேசத்து ஜனங்களது விருப்பமென்னவென்பதை உணராமலேயே தீர்மானம் செய்துவந்தனர். வீட்டுக்காரனுடைய சம்மதியோ அழைப்போ இன்றி விருந்துண்ணச் சென்றவரது கதியே அவர்களுக்கு நேர்ந்தது. தமக்குத் தெரியாமலேயே, சில அரசர்கள் ஒன்றுகூடி தமது தேசத்தைப் பங்கிட்டுக்கொண்டது ஸ்பெயின்தேசத்தாருக்கு மிகுந்த கோபத்தை விளைவித்தது. ஆதலால், அவர்களுடைய சக்கரவர்த்தியான ச்சார்லஸ் மரணகாலத்தில், மேற்படி உடன்படிக்கை பயனற்றுப்போகும்படி செய்து, தமது இராஜ்ஜியம் முழுதும் லூயியின் பேரனை பிலிப் என்பவருக்குக் கிடைக்கவேண்டுமென்று தீர்மானித்துவிட்டார். அதனால் லூயியின் அதிகாரம் அபாரமாய்ப்பெருகும்போலாய்விட்டது. ப்ரெஞ்சுதேசத்தில் அவரும், ஸ்பெயின் தேசத்தில் அவரது பேரனும் அரசாட்சி புரிவது ஐரோப்பாவின் அரசியல் நிலைமையை அபாயகரமாகச் செய்துவிடத்தக்கதாயிருந்தது. லூயி அரசர், 'இரண்டாவதுபாகப் பிரிவினை உடன்படிக்கை'க்கு சம்மதியளித்திருந்தும், பெரிய இராஜ்ஜியம் கிடைத்தவுடனே அந்த உடன்படிக்கையை மீறத் துணிந்துவிட்டார். ஏனெனில் அதன்படி அவருக்கு இரண்டுமூன்று பிரதேசங்களே கிடைத்தன; ச்சார்லஸ் சக்கரவர்த்தியின் மரணசாஸனப்படியோ அவருக்கு அவைகளைவிட எவ்வளவோ அதிகமான நாடு கிடைத்தது. அம்மாதிரி அவர் ஏற்கெனவே செய்திருந்த பிரதிக்ஞையை மீறவே, வில்லியம் நீண்டகாலமாகச் செய்த முயற்சிகள் வீணாய்ப்போய்விடும் போலிருந்தன. ஸ்பெயினும் ப்ரான்ஸும் ஒன்றுகூடி அபரிமிதமான அதிகாரம் பெற்றுவிடுவது நிச்சயமாகத் தோன்றிவிட்டது. வில்லியம் மறுபடியும் லூயியுடன் போர்புரிவது அவசியமாயிற்று.

ஆனல், மறுபடியும் ஓர் ஐரோப்பிய யுத்தத்தில் கலந்துகொள்வதற்கு இங்கிலீஷ்காரர்களுக்கு மனமில்லை. 1698-ல் கூடிய பார்லிமென்டில், பல டோரிப்பிரமுகர்கள் ஸ்தானம்பெற்று, வில்லியத்தின் சேனையையும் மட்டுப்படுத்தி, யுத்தம் நடக்கமுடியாதபடி செய்துவந்தனர். அது வில்லியத்திற்குப் பெரிதும் துன்பகரமாக இருந்ததாலும், அவர் டோரிகளையே மந்திரிகளாய் ஏற்றுக் கொள்ளவேண்டியதாயிற்று.

1701-ல் பார்லிமென்ட், "ஸெட்டில்மென்ட் சட்டம்" (Act of Settlement)-அதாவது இராஜ்ஜிய வார்சுரிமைச் சட்டம் ஒன்றை இயற்றியது. வில்லியமும் அவருக்குப்பின் அரசாட்சி நடத்த வேண்டிய அவருடைய மைத்துனி ஆன் இராணியும் சந்ததியில்லாதிருந்தமையால். ஆனுக்குப் பிறகு யார் முடிசூடுவதென்ற கேள்வி பிறந்தது. ஸ்டுவேர்ட் அரசகுலத்தில் பல நெருங்கிய வார்சுதாரர்கள் இருந்தனராலும், அவர்களெல்லோரும் காதலிக் மதத்தையே பின்பற்றினராதலால், பட்டத்திற்கு அருகமற்றவர்களாயினர். எனவே இங்கிலண்டின் பட்டம் அரசவம்சத்திற்கு தூரபந்துவாயிருந்த வார்சுதாரருக்குச் செல்லவேண்டியதாயிற்று. முதலாவது ஜேம்ஸின் புத்திரியொருத்தி முப்பதுவருஷ யுத்தத்தில் பிரபலமடைந்த 'எலக்டர் பாலடைன்' ப்ரெடரிக் என்பவரை மணந்துகொண்டாளல்லவா? அவளுக்கு ஸோபியா (Sophia) என்ற ஒரு பெண் இருந்தாள்; அவள் ஹானேவர் (Hanover) என்ற பிரதேசத்தலைவரை விவாகம் செய்துகொண்டிருந்தாள். அந்த ஸோபியாவுக்கும் அவளுடைய சந்ததியாருக்கும் இங்கிலண்டின் பட்டம் கிடைக்கவேண்டுமென்று ஷெ சட்டத்தில் தீர்மானமாயிற்று. எனவே, தூரமான வார்சுக்கு பட்ட உரிமை சென்றுலும் அவர்கள் அதுவரையில் ஆண்டுவந்த அரசகுலத்துடன், இரத்த சம்பந்தமுடையவர்களாகவே இருந்தனர். ஸோபியா ப்ராடெஸ்டன்ட் மதத்தினளாயிருந்தமையால், அவளுக்கு அந்த அதிர்ஷ்டம் வந்து வாய்த்தது. அம்மாதிரி, அரசகுலத்தில் நெருங்கிய பாந்தவ்வியமுடைய காதலிக்காரரை அசட்டை செய்து பட்டத்தை வேறு ஒருவருக்கு அளித்ததனுல் பார்லிமென்ட்சபை தனக்கு இராஜ்ஜியாதிபதியை நியமிக்கும் அதிகாரம் உண்டென்பதை

வெளிப்படுத்தியது. மேலும், அரசருடைய சுயேச்சாதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் பல விதிகளும் அந்த 1701-ம் வருஷச் சட்டத்தில் அடங்கியிருந்தன. அவ்விதிகள் பிற்கால அரசியலமைப்பில் அநேக முக்கிய அபிவிருத்திகளைச் செய்தன. அவ்விதிகள் பின்வருமாறு:- இங்கிலீஷ் மன்னர்கள், இங்கிலண்டின் மதஸ்தாபனத்தையே பின்பற்றவேண்டும்; பார்லிமெண்டின் அநுமதியின்றி அன்னிய தேச யுத்தங்களில் அவர்கள் தலையிடுதல் கூடாது; வேறு தேசத்தினர் பார்லிமெண்டில் ஸ்தானம் வகித்தல்கூடாது; நீதிபதிகள் நிர்ணயமான ஒரு சம்பளம் பெறவேண்டும்; அவர்களை வேலையிலிருந்து நீக்கவேண்டுமென்று பார்லிமெண்ட் விண்ணப்பித்துக் கொண்டாலன்றி அவர்களுடைய உத்தியோகம் நிலைத்ததாகவே இருக்கவேண்டும் என்பதுபோன்ற கட்டுப்பாடுகளைச் செய்ததமையால் பார்லிமெண்ட் சபையின் அதிகாரம் பெருகிவந்தது.

வில்லியத்தின் கடைசிக்காலத்தில் அவருக்கு திருப்திகரமாக வியவகாரங்கள் நடைபெறவில்லை. அன்னியநாட்டு யுத்தம் செய்வதில் பொது ஜனங்களுடைய அநுமதிகிடைக்காதுபோலிருந்த சமயத்தில் நேர்ந்த ஒரு சம்பவம் அவருக்கு அநுகூலமாயிற்று. 1701-ல் ப்ரான்ஸில் தங்கியிருந்த இரண்டாவது ஜேம்ஸ் உயிர்துறந்தார். உடனே லூயி அரசர் அவருடைய புத்திரரை (அவருக்கும் ஜேம்ஸ் என்று பெயர்) இங்கிலீஷ் மன்னரென அங்கீகரித்தார். அதாவது ரிஸ்விக் உடன்படிக்கையில் அவர் வில்லியத்தையே நியாயமான அரசராக ஏற்றிருந்தாலும், அதை அசட்டைசெய்துவிட்டார். அதனால் இங்கிலீஷ் காரருடைய தேசிய உணர்ச்சி கிளப்பிவிடப்பட்டது போலாயிற்று. ஏனெனில் இரண்டாவது ஜேம்ஸின் புத்திரருக்கு சாதகமாக லூயி தமது சேனையை யனுப்பி இங்கிலண்டின் ஆட்சியை அபகரிக்க முயர்சிக்கலாம் என்று அவர்கள் அஞ்சினர். உடனே டோரிகளும்கூட ப்ரான்ஸ் அரசருடன் யுத்தம் செய்ய ஆயத்தமாயினர். அதுவரையில் அவர்கள் பிடிவாதமாக வில்லியத்தை சண்டைக்கு விடாமல் தடுத்து வந்திருந்தாலும், இப்பொழுது தமக்கே அபாயம் நேரிடும்போலிருந்ததுபற்றி, அதற்கு ஒப்புக்கொண்டனர். வில்லியம் நிரம்பவும் களிகொண்டு வேறு சில தேசங்களுடன் சேர்ந்துகொண்டு லூயியின் ஆதிபத்யத்தை ஒழிக்

கத் தகுந்த ஏற்பாட்டைச் செய்பலானுர். அந்த ஏற்பாடு முடிந்த தும், யுத்தத்திற்குத் தயாராகும் சமயத்தில், (1702-ல்) அவர் திடீ ரென்று, குதிரைமீதிருந்து விழுந்த அதிர்ச்சிகாரணமாக இறந்து போனுர்.

---

## 35 வது அதிகாரம்

### ஆ/2ன் இராணி.

(1) ஸ்பேயின் வார்சுரிமை யுத்தம்:—ஆ/2ன் இராணியினிடம் உத்தமமான இங்கிலீஷ் ஸ்திரீயின் குணங்கள் பூர்த்தியாக நிறைந் திருந்தன. மனிதரிடம் அன்பும், தெய்வபக்தியும், சுத்தமான ஒழுக் கமும் உடையவளாதலால், அவள் குடிகளுடைய பிரியத்தைப்பெற் றிருந்தாள். ஆனல் அவளிடம் பிடிவாதகுணமும் அற்ப புத்தியும் இருந்தன. டோரிகளிடமே அவளுக்குப்பற்றுதல் ஏற்பட்டது; எனவே வில்லியம் செய்ததற்கு மாருக, அவள் டோரிக்கட்சியின ரிடமே நம்பிக்கைவைத்தாள். மார்ல்பரோ பிரபு (Marlborough) என்பவரிடம் அவளுக்குப் பூர்த்தியான விசுவாஸமும் நம்பிக்கை யும் இருந்துவந்தன. அந்தப் பிரபு யுத்தத்தில் முதிர்ச்சிபெற்ற தளகர்த்தானுலும்,பேராசையும் சுயநலநாட்டமும் வாய்ந்தவர். வில் லியத்தினிடம் அவர் உத்தியோகத்திலிருந்துகொண்டே, அயல்நாட் டிற்கு ஓடிப்போன அரசரான ஜேம்ஸுடன் இரகசியமான சம்பந்தம் வைத்துக்கொண்டிருந்தவர். சுத்தமான ஹிருதயமும் களங்கமற்ற சுபாவமும் இல்லாதவர். அவரது மனைவியான மார்ல்பரோ சீமாட்டி தமது கணவரைப் பின்பற்றி தந்திரமாகவும் உறுதி யாகவும் நடந்துகொள்பவள். அவ்விருவாது வசத்தில் ஆ/2ன் இராணி அகப்பட்டுக்கொண்டிருந்தாள். ஆனல் மார்ல்பரோ எவ்வ ளவு கெடுதலானவராயிருந்தாலும், அவர் ஆழ்ந்த முன்யோசனை யுடன் இராஜீய நிர்வாகம் செய்யும் திறமை வாய்ந்தவர். மேலும் வில்லியத்திற்குப் பிறகு ப்2ரெஞ்சு யுத்தத்தைத் தொடர்ச்சியாக

நடத்தும் திறமை மார்ல்பரோ பிரபு ஒருவரிடத்தில் மாத்திரமே அமைந்து இருந்தது. அவரது காலத்தில் அவரே மற்ற எல்லோரைக் காட்டிலும் அதிகபராக்கிரமம் வாய்ந்தவராயிருந்தார். எனவே, வில்லியம் ஷெ யுத்தத்தை ஆரம்பித்து உயிர்துறந்தசமயத்தில், அதிலும் ஒரு ஸ்திரீ சிம்மாதனத்திலிருந்தபொழுது, அவர் அரசிக்கு உற்ற நண்பராயிருந்தது தேசத்திற்கு நிரம்பவும் நன்மையாக இருந்தது. மார்ல்பரோ பிரபு டோரிக்கட்சியைச் சேர்ந்தவராதலால், ஆ/2ன் இராணியின் மற்ற மந்திரிகளும் டோரிகளாகவே இருந்தனர். மார்ல்பரோவின் நண்பரான ஜேடால்பி2ன் (Godolphin) என்பவர் அவ்விதம் உத்தியோகம் வகித்தவர்களுள் முக்கியமானவர். மால்பரோ யுத்தத்தை நடத்துவதென்றும் ஜேடால்பி2ன் அவருக்கு வேண்டிய பண உதவிக்கு ஏற்பாடு செய்வதென்றும் முடிவுசெய்யப்பட்டது. ஆனால் மார்ல்பரோ யுத்தம்செய்ததோடு இராஜ்ஜிய நிர்வாகத்திலும் கலந்துகொண்டார். டோரிகள் இயற்கையாக சண்டையை வெறுத்து, சமாதானத்தை நாடுகிறவர்களானாலும், மார்ல்பரோ நீண்டகாலம் போர்புரியவதவசியமாயிற்று.

ஸ்பெயின் வார்சுரிமை யுத்தம் நேரிட்டதற்குக் காரணங்களை முன் அதிகாரத்தில் விரிவாகக் கூறினேம். இங்கிலண்ட், ஹாலண்ட், ஆஸ்ட்ரியா ஆகிய மூன்று அரசுகளும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டன. ஜெர்மனியைச் சேர்ந்த ப்ரஷ்யா (Prussia) என்ற தேசம் அப்பொழுது பிரபலமடைந்து வந்தது. அந்த அரசும் இங்கிலண்டுடன் சேர்ந்துகொண்டது. ஆனால் ஷெ நான்கு தேசங்களையும் எதிர்த்து நிற்கும் வல்லமை லூயியிடம் இருந்தது. ஏனெனில், அவரிடம் ஏராளமான பணமும், அநேக வெற்றிகளை யடைந்து தேர்ச்சிபெற்ற சேனையும், பராக்கிரமசாலிகளான தளகர்த்தர்களும் தயாராக இருந்ததுடன், ஸ்பெயின் இராஜ்ஜியத்தின் பொருளும் படையும் அவருக்குக் கிடைத்தன. வேறு சில சிறிய அரசுகளும் அவருடன் சேர்ந்துகொண்டன. ஆகவே இரண்டு கட்சிகளும் சமமான பலத்தையடைந்து, உக்கிரமாகப் போர்புரிய ஆயத்தமாயிற்று.

1702-ல் யுத்தம் தொடங்கியது. ஹாலண்ட் தேசத்தை எதிரிகளிடமிருந்து காப்பாற்றுவதிலேயே மால்பரோ முதலில்

கவனம் செலுத்தினர். இரண்டு கட்சிகளுக்கும் முக்கியமான வெற்றிகள் ஏற்படவில்லை. 1703-ல் போர்ச்சுகல் தேசமும் இங்கிலண்டுடன் சேர்ந்துகொண்டது. 1704-ல் ஆஸ்ட்ரியாதேசத்துச் சக்கரவர்த்தியின்மீது ப்ரெஞ்சுசேனை படையெடுத்துச்சென்று வெற்றி பெருந்தருணத்தில் இருந்தது. அப்பொழுது டச்சுக்காரருக்கு உதவிபுரிந்துகொண்டிருந்த மார்ல்பரோ அபார சாமர்த்தியத்துடன் மிகவேகமாகப் படையை அழைத்துக்கொண்டுவந்து ப்ளேன்ஹீம் (Blenhiem) என்ற இடத்தில் ஒரு பெரிய வெற்றியை யடைந்தார். லூயிக்கு அவ்வளவு பெரிய தோல்வி அதுவரையில் ஏற்பட்டதே இல்லை. மார்ல்பரோ காட்டிய திறமையும், அபாய சமயத்தில் அவர் ஆஸ்ட்ரியா சக்கரவர்த்திக்கு உதவியதும் பலருக்கு ஆச்சரியத்தை விளைவித்தன. மற்ற தளகர்த்தர்களைக் காட்டிலும் அவர் அபார சாமர்த்தியம் வாய்ந்தவரென்று புகழப்பெற்றார். லூயியின் பராக்கிரமத்திற்கு அவர் ஒருசவுக்கடி கொடுத்தது போலாயிற்று. 1706-ல் ராமிலீஸ் (Ramillies) என்ற இடத்தில் மார்ல்பரோ மறுபடியும் வெற்றியடைந்தார். அதன்பிறகு பல சிறிய யுத்தங்கள் நடந்தன. 1708-ல் ஊடினர்டு (Oudenarde) என்ற இடத்திலும், 1709-ல் மால்ப்ளாக்வே (Malplaquet) என்ற இடத்திலும் மார்ல்பரோ முக்கியமான வெற்றிகளை யடைந்தார். ஆனல் ப்ரெஞ்சு தேசத்தரசர் தோற்றுப்போனலும் வில்லியத்தின் கருத்து நிறைவேறுவதாகத் தோன்றவில்லை; ஏனெனில், ஸ்பெயின் சக்கரவர்த்தி மரணகாலத்தில் ஏற்பாடுசெய்தபடியே, லூயியின் பேரனை ப்லிப் என்பவரே ஸ்பெயின் இராஜ்ஜியத்திற்கு அரசானர். நிலைமை அங்ஙனமிருக்க, 1710-ல் இங்கிலண்டில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. டோரி பிரமுகர்கள் சிலர் அதிகாரத்திற்கு வந்து அரசி மார்ல்பரோவிடம் வைத்திருந்த பிரியத்தைக் குலைத்து அவரை சேனைத்தலைமையிலிருந்து விலக்கிவிட்டனர். டோரிகள் நெடுங்காலமாய் நடந்துவந்த யுத்தத்தை முடிக்கப் பெரிதும் ஆவல் கொண்டனர். அதுவன்றி எல்லா அரசுகளும் நீடித்துப் போர் நடாத்தித் தளர்வடைந்திருந்தமையால், சமாதானத்தில் நாட்டங் கொண்டன. ப்ரெஞ்சு, ஸ்பெயின் அரசுகளும்—இங்கிலீஷ் டச்சு அரசுகளும் 1713-ல் யுட்ரேக்ட் (Utrecht) என்ற இடத்தில்

சமாதான உடன்படிக்கை செய்துகொண்டன. அதன்படி பிலிப் (லூயியின் பேரன்) ஸ்பெயின் தேசத்தின் சக்கரவர்த்தியாக அங்கீகரிக்கப்பட்டார். ஆஸ்ட்ரியா சக்கரவர்த்திக்கு மைலன், நேபிள்ஸ், ஸார்டினியா என்ற பிரதேசங்கள் கிடைத்தன. இங்கிலண்டுக்குக் கிடைத்த இலாபமே நமக்கு முக்கியமானவை. அமெரிக்காவில் உள்ள நியூபௌண்ட்லண்ட் (Newfoundland) என்ற பிரதேசமும், நோவா ஸ்கோஷியா (Nova Scotia) என்ற பிரதேசமும் பிரெஞ்சுக்காரரிடத்திலிருந்தும் ஜிப்ரால்டர், மைனர்க்கா (Gibralter, Minorca) என்ற இடங்கள் ஸ்பெயின் தேசத்தாரிடத்திலிருந்தும் இங்கிலண்டிற்குக் கிடைத்தன. இன்னும் சில வியாபார வசதிகளையும் இங்கிலீஷ்காரர்கள் பெற்றனர். யுட்ரெக்ட் உடன்படிக்கை ஐரோப்பிய சரித்திரத்திலும் இங்கிலண்டு தேசச் சரித்திரத்திலும் அநேகமான மாறுதல்களை உண்டாக்கிய முக்கியமான சம்பவம். அபாரமான பராக்கிரமமும் கீர்த்தியும் அடைந்த லூயியின் மேம்பாட்டை அது குறைத்துவிட்டது. அதனால் ஐரோப்பாவின் சரித்திரம் புது வழியில் திரும்பியது. இங்கிலண்டுக்கு மார்ல்பரோ உண்டாக்கிக்கொடுத்த வெற்றிகளின் பயனாக, சில பிரதேசங்கள் கிடைத்தனவன்றோ. ஜிப்ரால்டர் என்ற இடம் மத்திய தரைக்கடலின் வாசற்படிபோல இருப்பதனால் இந்தியாவுடன் சம்பந்தம் வைத்துக்கொண்டிருந்த இங்கிலண்டுக்கு அது சுவர்க்க வாசல்போல இருந்தது. அதனால் இங்கிலீஷ்காரர்கள் கடல்களின் அதிபதி ஆவதற்கு நல்ல வசதி ஏற்பட்டது. கடலின் ஆதிபத்யம் பெற்றபின் அவர்கள் உலகிலேயே முதன்மையான ஸ்தானத்தை அடைவது எளிதாயிற்று.

(2) ஆன் இராணியின் மந்திரிகள்: இராஜ்யக் கட்சியாரின் சீர்கேடுகள்: ஸ்காட்லண்டு ஒன்றுபடுவது:—மார்ல்பரோ அவரது மனைவி ஆகிய இருவரிடம் ஆன் வசியப்பட்டிருந்ததை முன்பே குறிப்பிட்டோம்: முதலில் மார்ல்பரோவும் கோடால்பினும் சேர்ந்து நிர்வாகம் நடத்தினர். அவர்கள் ஐரோப்பாவில் நடந்த போர்களில் தமது முழுகவனத்தையும் செலுத்தவேண்டியதாயிற்று. ஆகவே அன்னியதேச வியவகாரங்களில் தலையிடுவதில் எப்பொழுதும் விருப்பம்கொண்டிருந்த விக் கட்சியுடன் அவர்கள்

சிநேகமாகவே இருந்தனர். அதை டோரிகள் பொறுக்கவில்லை. மார்ல்பரோ, தாம் யுத்தத்தில் வெற்றியடைய வேண்டுமானால், விக் கட்சியினரிடமே ஆதரவு பெற முடியுமென்று கண்டு, வில்லியம் செய்ததுபோல, விக் கட்சியினருக்கே இராஜாங்க பதவிகளை அளிக்கலானார். டோரிகளுக்கும் மார்ல்பரோவுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. ஒரு சமயம் டோரியாக இருந்து பிறகு தம்மைக் கைவிட்ட மார்ல்பரோவை அழிப்பதற்காக, டோரிகளிற் பலர் சேர்ந்து ஆலோசனை செய்தனர். மார்ல்பரோவின் மனைவி அரசியிடம் அதிக நட்புக்கொண்டிருந்ததாகக் கூறினோமல்லவா? ஆனால் நாளடைவில் அரசிக்கு அவள்மீதிருந்த பிரியம் மிஸஸ் மாஷம் என்ற ஸ்திரீயிடம் திரும்பியது. மாஷம் என்பவள் விக் கட்சியினரைப்பற்றி அரசியிடம் கோள்கள் சொல்லிவந்தாள்.

மார்ல்பரோவுக்கும் டோரிகளுக்கும் மனஸ்தாபம் முற்றிவிடவே, அவர் டோரி மந்திரிகள் அனைவரையும் அகற்றிவிட்டு விக் மந்திரிகளை நியமித்துக் கொண்டார். அப்பொழுது ஸ்பெயின் யுத்தம் நடந்துவந்தது. டோரிகள் சமாதானம் செய்வதற்குத் தயாராயிருந்தனர். விக் கட்சியாரோ சண்டையைத் தொடர்ந்து நடத்த நிச்சயித்தனர். அதனால் இரு பிரிவினருக்கும் வேற்றுமை முற்றிக்கொண்டு வந்தது. அகாரணமாக சண்டையை நடத்திச் செல்ல நிச்சயித்ததற்காக விக் கட்சியினரைப் பலர் தூற்றினர். அரசிக்கும் அவர்களிடம் பற்றுதல் இல்லாமல் போயிற்று. 1710-ல் நடந்த தேர்தலில் டோரிகளே அதிகஸ்தானங்கள் பெற்றனர். மார்ல்பரோவும் அவருடைய சகாக்களும் தங்களது உத்தியோகங்களை இழக்கவேண்டியதாயிற்று. டோரிகள் துரைத்தன நிர்வாகத்தைக் கவனிக்கலாயினர். டோரித் தலைவர்களில் இருவர் முக்கியமானவர். ஹார்லி (Harley) என்பவர் பிரதம மந்திரியானார்; அவர் இராஜீயக்கட்சிகளை நடத்திச் செல்வதில் திறமை வாய்ந்தவரானாலும், மார்ல்பரோவைப்போன்ற தைரியமும் வீரத்தனமும் அவரிடம் அமையவில்லை. அவருக்கு அடுத்தபடியாக உத்தியோகம் வகித்தவர் ஸேயின்ட் ஜான் (St. John). அவர் பின்பு பாலிங்ப்ரோக் பிரபு (Viscount Bolingbroke) ஆனார். அவர் நல்ல படிப்பாளி; கவிவாணர்; வாக்கு வன்மையோடு பேசுகிறவர். ஆனால்

அவர் இராஜீய விஷயங்களில் உண்மையான அக்கறை கொள்ளாதவர். அவர்களிருவரும் சேர்ந்து மார்ல்பரோவின்மீது வீண் பழிகள் சுமத்தி அவரை சேனைத் தலைமையினின்றும் நீக்கி, உடனே ஸ்பெயின் யுத்தத்தையும் முடிவுக்குக் கொணர்ந்தனர். அவர்கள் மேலும் சிறிதுகாலம் போர் புரிந்திருந்தால், அதிக நன்மை யடைந்திருக்கலாமென்று விஹ்க் கட்சியினர் குறைகூறினராலும், சமாதானம் செய்துகொண்டது பலருக்கு திருப்திகரமாகவே இருந்தது. ஏனெனில் மார்ல்பரோ பிரபு பல முக்கியமான வெற்றிகளை அடைந்தாலும், தேசத்திற்கு யுத்தத்தினால் அதிக பிரயாசை ஏற்பட்டு வந்தது. ஆகவே, ஹார்லியும் பாலிங்ப்ரோக் பிரபுவும் நீண்டகாலம் அமைதியாக நிர்வாகத்தை நடத்திக்கொண் டிருக்கலாமென்று எண்ணினர். ஆனால் சீக்கிரத்தில் அவர்களுக்குள் மனஸ்தாபமும் சச்சரவும் ஏற்பட்டன.

1701-ம் வருஷத்து அரசியல் வார்சுரிமைச் சட்டத்தின்படி, ஆன் அரசிக்குப் பிறகு ஹானேவர் வம்சத்தைச் சேர்ந்த ஸோபியா என்பவளுக்குப் பட்டம் கிடைக்கவேண்டுமல்லவா? அந்த ஸோபியா அப்பொழுது இறந்துவிட்டாளாதலால், அவளுடைய குமாரர் ஜார்ஜ் என்பவரே அரசராவார்போலிருந்தது. ஆனால் ஜார்ஜ், விஹ்க் கட்சியினரிடமே நம்பிக்கை வைப்பாரென்பதும் தெரிந்தது. எனவே அவர் அரசரானவுடன் டோரிகள் உத்தியோகத்திலிருந்து விலகிப் போக வேண்டியிருக்குமென்று பாலிங் ப்ரோக் அஞ்சினர். ஆதலால் தமது கட்சியின் அதிகாரத்தை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக அவர் 1701-ம் வருஷச் சட்டத்தை தள்ளுபடி செய்து, ஜார்ஜுக்குப் பட்டம் போகாதபடி தடுத்துவிட முயற்சித்தார். ஆனால் ஹார்லியோ அந்தச் சதியாலோசனைக்கு இணங்கவில்லை. அந்தக் குழப்பத்தினிடையில் ஆன் 1714-ல் இறந்துபோனாள். பாலிங் ப்ரோக்கின் முயற்சி பலியாமல் போயிற்று. மார்ல் பரோ, பாலிங் ப்ரோக், ஹார்லி ஆகியோர் இராஜீயக் கட்சிகளின் தலைவர்களேயானாலும், அவர்கள் தங்களது பதவிக்கேற்றபடி பெருந்தன்மையாகவும், தியாகபுத்தியுடனும் நடந்து கொள்ளவில்லை என்பது வெளிப்படை. மார்ல்பரோ பிரபு கீர்த்திவாய்ந்த தளகர்த்தரேயானாலும், இராஜீய விவகா

காரங்களில் சுயநலமின்றி நடக்கவில்லை; வில்லியத்தினிடம் வேலையி லிருந்துகொண்டே அவர் ஜேம்ஸுடன் சம்பந்தம் வைத்துக்கொண் டிருந்தவரென்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. மேலும் தாம் தலைமை வகித்து நடாத்திய யுத்தத்தை மேலும் நடத்தும்பொருட்டு அவர் தமது டோரி நண்பர்களைவிட்டு விக்களுடன் சேர்ந்து கொண்டார். ஹார்லி என்பவரோ மார்ல்பரோவின் வீழ்ச்சியை துரிதப்படுத்தும்பொருட்டு தமது உறவினளான மாஷம் என்ற மாதை அரசியினிடம் வேலையிலமர்த்தி, தமது முயற்சி பலிக்கு மாறு செய்தார். பாலிங்ப்ரோக் பிரபுவோ தமது கட்சியின் நலத்தை மாத்திரம் கருதி ஜார்ஜுக்கு அரச பதவி போகாமல் செய்துவிட எத்தனித்தார். இவ்வாறு கட்சித் தலைவர்கள் பெருந் தன்மையற்றிருந்தும், வில்லியத்தின் காலத்தில் நிலைத்துப்போன இராஜீயக் கட்சிகள் ஆனின் காலத்தில் அபிவிருத்தியடைந்தன. விக் மந்திரிகளோ அல்லது டோரி மந்திரிகளோ துரைத்தன நிர் வாகத்தில் உதவி புரியவேண்டியதாயிற்று.

ஆனின் அரசியின் ஆட்சியில் வேறொரு முக்கிய சம்பவமும் நிகழ்ந்தது. அதாவது ஸ்காட்லண்டும் இங்கிலண்டும் ஒன்று பட்டுப்போயின. அவ்விரு தேசங்களும் ஒன்றையொன்று அடுத் தாற்போல இருந்தும், ஆதிமுதல் அவைகளுக்குள் நட்பைவிட பகைமையே அதிகமாயிருந்து வந்தது. முதல் எட்வர்ட் முதலிய பல அரசர்கள் அதை வென்று தமது வசப்படுத்திக்கொள்ள முயன் றனர். ஆனால் ஸ்காட் ஜனங்கள் எப்பொழுதும் தனிமையாக நின்று, இங்கிலண்டின் எதிரியான ப்ரான்ஸுடன் நட்புச்செய்துகொண் டும் இருந்தனர். 1603-ல் முதலாவது ஜேம்ஸ் இரண்டு தேசங்க ளுக்கும் அரசராகி இரண்டையும் ஒன்றுபடுத்த முயற்சி செய்தாரா னாலும், அவை வெவ்வேறு பார்லிமெண்டைப் பெற்றுத் தனிமை யாகவே இருந்தன. வில்லியம் பலவந்தமாக அந்த தேசத்தைத் தமது வசப்படுத்தினார். ஆனால் டேரியன் திட்டம் பலியாமல் போனபிறகு இரண்டு தேசங்களும் ஒன்றன்மீதொன்று அதிகப் பொறாமை கொண்டிருந்தன. அதனால் ஒரு விஷயம் தெளிவாயிற்று; ஸ்காட் லண்ட் தனித்து நிற்கும்வரையில் இங்கிலண்டுக்கு ஏற்பட்டு

வந்த வியாபாரப் பெருக்கும் தனவிருத்தியும் நிலைக்காவென்பது விளங்கிற்று. எனவே ஒன்று, இரண்டு தேசங்களும் ஐக்கியப்பட்டு விடவேண்டும்; அல்லது, 1603-க்கு முன் இருந்ததுபோல இரண்டும் அறவே பிரிந்துவிடவேண்டும். வில்லியம் முதலிய முன்னோக்கமுடையோர் சிலர் ஐக்கியம் ஏற்படுவதே நலமானதெனக் கருதினர். ஆனால் சில ஸ்காட் தேசிய வாதிகள் தமக்குப் பூர்த்தியான சுதந்திரம் வேண்டுமெனப் போராடினர். 1701-ல் இங்கிலீஷ் பார்லிமென்டில் நிறைவேறிய சட்டத்தையொட்டி, ஸ்காட் பார்லிமென்டும் ஜார்ஜையே தமது அரசராக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பலர் எதிர்பார்த்தனர். ஆனால் தேசிய வாதிகளோ தாம் ஜார்ஜை அரசராக ஏற்க முடியாதென்றும், வேறு ஒருவருக்குத்தான் ஸ்காட் அரச பதவி அளிக்கப்படும் என்றும், அவ்விதம் ஜார்ஜ் அரசர் ஆகவேண்டுமானால் அவர் தம்மிடமே முக்கியமான அதிகாரத்தை ஒப்புவிக்க வேண்டுமென்றும் 1703-ல் ஒரு சட்டமியற்றினர். அப்பொழுது ஸ்பெயின் தேசத்து வார்சுரிமை யுத்தம் நடந்துகொண்டிருந்தமையால், மந்திரி ஗ோடால் பி2ன் ஸ்காட் மக்களுடன் போர் தொடுப்பது மதியீனம் என்று கருதி வாளாயிருந்தார். நாளடைவில் ஸ்காட் ஜனங்களே தாம் செய்த தீர்மானம் அபாயகரமானதென்பதை உணர்ந்தனர். ஏனெனில் பலமும் பொருளும் படைத்த ஒரு சமீபதேசத்தை நிரந்தரமாகப் பகைத்துக்கொண்டால், அது தமது நன்மைக்கு உகந்ததல்ல என்பது அவர்களுக்கு விளங்கியது. 1706-ல் இரண்டு தேசங்களின் தலைவரும் கூடி ஆலோசித்து 1707-ல் 'ஐக்கியச் சட்டம்' (Act of Union) என்ற ஒரு சட்டத்தை நிறைவேற்றினர். அது இங்கிலீஷ், ஸ்காட் ஆகிய இரண்டு பார்லிமென்டுகளிலும் நிறைவேறியது.

அந்தச் சட்டத்தின்படி இரண்டு தேசங்களுக்கும் ஒரே அரசாங்கம், ஒரே பார்லிமென்ட், ஒரே அரசகுலம் முதலியவை ஏற்பட்டன. இரண்டு தேசங்களும் சேர்ந்து கிரேட் பிரிட்டன் (Great Britain) என்று குறிக்கப்பட்டன. இங்கிலீஷ் பார்லிமென்டில் காமன்ஸ் சபைக்கு 45 அங்கத்தினரையும் லார்ட்ஸ் சபைக்கு 16 பிரபுக்களையும் ஸ்காட் மக்கள் தேர்ந்தனுப்பவேண்டும். இரண்டு தேசங்களும் சமமான வியாபார உரிமைகளைப் பெற்றனர். ஸ்காட் சட்ட

மும் பழக்கவழக்கங்களும் ப்ரெஸ்விடீரியன் மதமும் அழிக்கப்படாமல் நின்றன. ஐக்கிய அரசாங்கத்திற்கு 'யூனியன் ஜாக்' (Union Jack) என்ற கொடி ஏற்பட்டது. அதில் இங்கிலண்டின் தேசீய அடையாளமும், ஸ்காட்லன்டின் அடையாளமும் கலந்திருந்தன. அந்தச் சட்டம் முதலில் பலருக்குச் சம்மதியாயில்லை யாகுலும், நாளடைவில் ஸ்காட்லன்டின் வளம் பெருகுவதற்கு அது நிரம்பவும் அநுகூலமாக இருந்தது. சமமான வர்த்தக உரிமைகளைப் பெற்ற ஸ்காட் ஜனங்களும் இங்கிலீஷ்காரரைப்போல அன்னிய தேசங்களுடன் வியாபாரம் செய்வதில் அக்கரை கொண்டு, தமது தேசத்தின் க்ஷேமத்தைப் பெருக்கினர்.

(3) ஸ்டுவர்ட் வம்சத்தாரின் ஆட்சியில் இங்கிலண்டின் நிலைமை:— சில பொதுக் குறிப்புகள்:—1603 முதல் 1714 வரையில், அதாவது 17-வது நூற்றாண்டு முழுவதும் இங்கிலண்டில் ஸ்டுவர்ட் வம்சத்தினர் ஆண்டுவந்தனர். அப்பொழுது அரசருக்கும் பார்லிமென்டுக்கும் சச்சரவு நடந்ததையும், கடைசியில் பார்லிமென்ட் வெற்றி யடைந்து அதிகாரத்தைக் கைப்பற்றியதையும் முந்திய அதிகாரங்களில் விவரித்தோம். அம் முக்கியமான இராஜீய மாறுதல்களுடன், அப்பொழுது இன்னும் சில துறைகளிலும் அபிவிருத்தி ஏற்பட்டது. உதாரணமாக, 16-ம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கிய வியாபாரப் பெருக்கும் தனலாபமும் தொடர்ச்சியாக விருத்தியடைந்து கொண்டே போயின. அதுவன்றி பல இங்கிலீஷ்காரர் அமெரிக்கா போன்ற அன்னிய தேசங்களில் குடியேறி அந்த நாடுகளை ஆக்கிரமித்து அவைகள் இங்கிலண்டுக்குச் சொந்தமாகும்படி செய்தனர். அவ்விரண்டு துறைகளிலும் இங்கிலண்டு தேசமே ஐரோப்பிய அரசுகள் எல்லாவற்றிலும் முதலாவதாயிற்று. போர்ச்சுகல், ஸ்பெயின், ஹாலன்டு முதலிய தேசத்தினர் முதலில் கடல் வியாபாரத்தில் பிரபலமடைந்திருந்தாலும் அவைகளுக்கு பின்னால் கடைசியாக அந்தத் துறையில் இறங்கிய இங்கிலீஷ் மக்கள் அபாரமான தமது திறமையாலும் விடா முயற்சியினாலும் மிகவும் சீக்கிரத்தில் முன்னேற்றமடைந்து விட்டனர். டச்சு யுத்தங்களுக்குப் பின் கடல் வியாபாரமும் அவர்களு

டையதாய்விட்டது. இந்தியாவில் பல வியாபார ஸ்தலங்களும் ஏற்பட்டன. யுட்ரெக்ட் உடன்படிக்கையின் படியும் அவர்களுக்கு சில முக்கியமான இடங்கள் கிடைத்தன. இராஜ்ஜியப் பெருக்கிலும் வியாபார விருத்தியிலும் தனலாபத்திலும் இங்கிலண்ட் அதிக வேகமாய் முன் சென்று கொண்டிருந்தது. அதனால், இங்கிலீஷ் மக்கள் வர்த்தக சம்பந்தமான விஷயங்களில் அதிக அக்கரை காட்டினர்; தேசத்தின் மொத்த வருமானமும் அதிகமாயிற்று; அதனுல் பொது ஜன க்ஷேமம் ஏற்பட்டது. உழுது பயிரிடுவோரும் கைத்தொழில் செய்வோரும் தம் தம் வேலைகளில் அதிக ஊக்கம் காட்டினர்.

இராஜ்ஜியத்தின் தலைமை நகரமான லண்டனில் கனவான்களும் சீமாட்டிகளும் பல விதங்களில் சுகமநுபவித்து சந்துஷ்டியாயிருந்து வந்தனர். ஷேக்ஸ்பியர் முதலான கவிவாணர்கள் எழுதியிருந்த நாடகங்கள் நடிக்கப்பட்டன. குதிரைப்பந்தயம், கோழிச் சண்டை, சூதாட்டம் ஆகியவை போன்ற விளையாடல்களில் மனிதர் நாட்டங்கொண்டனர். 'காபி2கிளப்' என்ற சிற்றுண்டிச் சாலைகள் தோன்ற, அவைகளில் பல கனவான்கள் ஒன்றுகூடி, பொது விஷயங்களைப்பற்றி விவாதம் செய்து வந்தனர். கல்வியும் மெதுவாகப் பாவிவந்தது. கவிராயர்கள் பல நூல்களை இயற்றினர். அவர்களுள் ஜான் மில்ட்டன் (John Milton) என்பவர் மிகுந்த புகழ் பெற்றவர். அவர் க்ராம் வெலினிடம் ஒரு காரியதரிசியாக இருந்தார். இரண்டாவது ச்சார்லஸ் பட்டத்திற்கு வந்ததும், அவர் உத்தியோகத்தை யிழந்து தனியாக வாழ்ந்து பல அரிய இலக்கிய நூல்களை இயற்றினுர். அவருக்குப் பிறகு ட்ரைடன் (Dryden) என்பவர் பிரசித்தி பெற்றிருந்தார். இரண்டாவது ச்சார்லஸின் காலத்தில் ஜான் பன்யன் (John Bunyan) என்ற நிபுணர், தமது மதக்கொள்கையின் காரணமாய் சிறையிலடைபட்டு, பல நீதிகள் பொதிந்த கதை போன்ற ஒரு நூலை அங்கு இயற்றினுர். அதன் பெயர் "யாத்திரீகனது முன்னேற்றம்" (Pilgrim's progress) என்பது. ஆ/2ன் இராணியின் காலத்தில் பல பத்திரிகைகளும் தோன்றி ஜனங்களுக்கு அறிவூட்டி வந்தன. எனவே ஸ்டூவர்ட் ஆட்சியில் இராஜீய விஷயங்களில் அடிக்கடி குழப்பமும் சச்சரவும் ஏற்பட்டுக் கொண்டிருந்தாலும் இங்கிலீஷ் மக்கள் எல்லாத் துறைகளிலும் படிப்படியாக அபிவிருத்தியடைந்து தற்கால மேன்மைக்கு அடி கோலிக் கொண்டிருந்தனர்.

## ஸ்டூவர்ட் வம்சத்து அரசர்கள்.

---

முதலாவது ஜேம்ஸ்.

(1603 - 1625)




* 1649-லிருந்து 1660 வரை க்ராம்வெல் அரசாட்சி புரிந்து வந்தார். அது அரசரில்லாத காலம்.

## 36-வது அதிகாரம்

### முதலாவது ஜார்ஜ்.

(1) விக் கட்சியின் நீடித்த செல்வாக்கு: அரசியல் முறை யபிவிருத்திகள் :—1714-ல் முடிசூடிய முதலாவது ஜார்ஜ் அரசர் ஏற்கெனவே ஹா/2னோவர் என்ற சிறிய நாட்டின் தலைவராக இருந்து, ஐம்பதாவது வயதில் இங்கிலண்டு தேசத்திற்கு அரச ரானவர். எனவே அவர் இங்கிலீஷ்காரருடன் சிறிதளவு இரத்த சம்பந்தம் பெற்றிருந்ததைத் தவிர மற்ற விஷயங்களில் இங்கிலீஷ் காரரது குணங்களை அதிகமாய்ப் பெற்றவரல்லர். இங்கிலீஷ் பாஷையே அவருக்குத் தெரியாது; அதைக் கற்றுக்கொள்ளவும் அவர் கவலை கொள்ளவில்லை. இங்கிலீஷ்காரரது பழக்கவழக்கங் களோ, அரசியல் முறையோ அவருக்கு விளங்கவில்லை. ஐரோப் பிய வியவகாரங்களில் அவர் ஓரளவு அக்கரை கொண்டவர். ஆனால் விகு கட்சியினரே தமக்கு அந்தப் பட்டத்தை ஏற்படுத்திக் கொடுத்தனர் என்றும், டோரிகள் தம்மை விலக்குவதற்கு முயற்சித் தனர் என்றும் அவர் அறிந்திருந்ததாலும், இங்கிலண்டின் தேச பாஷையையோ, பழக்க வழக்கங்களையோ, சட்டதிட்டங்களையோ சிறிது அறியாமையாலும், அவர் இராஜ்ஜிய நிர்வாகத்தை விகு கட்சியினரிடம் ஒப்படைத்துவிட்டு, சிம்மாதனத்தில் பாங்காக வீற் றிருக்கும் வேலையைமாத்திரம் தமக்கு வைத்துக்கொண்டார். நாம் அந்த விஷயத்தை நன்றாய் கவனத்தில் வைக்கவேண்டும்; ஏனெ னில் இங்கிலீஷ்பாஷையை அறியாத ஓர் அரசர் தற்செயலாக,முடி சூடியதால், இங்கிலண்டின் அரசியல் அமைப்பும் அரைத்தன நிர் வாக முறையும் புதுவிதமாக மாறி அபிவிருத்தியடையத் தொடங் கின. வெளிப்பார்வைக்கு அற்பமாகத் தோன்றும் ஒரு சிறு சம்ப வம் ஒரு தேசத்தின் சரித்திரத்தையே அடியோடு புதியவழியில் திருப்பிவிடுவதற்குக் காரணம் ஆவது ஆச்சரியகரமானதன்றோ; முதலாவது ஜார்ஜ் முன்பு குறிக்கப்பட்டபடி விக் கட்சியினரிடம்

மாத்திரம் நம்பிக்கை வைத்தார். ஆன் இராணியின் கடைசிக்காலத்தில் பாலிங்ப்ரோக் முதலிய டோரிகள் சேர்ந்துகொண்டு, ஜார்ஜுக்கு பட்டம் கிடைக்காமற்செய்ய சதியாலோசனை புரிந்தனரல்லவா? அதுபற்றியே அவர்கள் இப்பொழுது தமது அதிகாரத்தை இழக்கவேண்டியதாயிற்று. ஆன் இராணியின் டோரி மந்திரியான ஹார்லி சிறையிலிடப்பட்டார். அவரைவிட அமிதமாகவும், ஜார்ஜுக்கு விரோதமாகவும் வேலைசெய்த, பாலிங்ப்ரோக் நாட்டைவிட்டு ஓடிப்போனார். தலைவர்களுக்கு அந்த கதி நேர்ந்தபிறகு, டோரிக்கட்சி தளர்வடைந்துபோயிற்று. டோரிக் கட்சியினர் பழைய ஸ்டூவர்ட் வம்சத்தின் சந்ததியாரையே மீண்டும் அரசராக்கி காதலிக் மதத்தை ஸ்தாபிக்க முயற்சித்ததாகப் பலர் கருதினர். எனவே குடிமக்களுக்கும் அரசரைப்போலவே டோரிகளிடம் சம்சயம் பலமாகத் தோன்றிவிட்டது. அதன் பயனாக முதலாவது ஜார்ஜ் சிம்மாதனமேறியபின் ஏறக்குறைய ஐம்பது வருஷகாலம் விக் கட்சியாரிடத்திலேயே சகலமான அதிகாரமும் இருந்து வந்தது. அந்தப் பாதி நூற்றாண்டை (1714 - 1761) விக் கட்சியினரின் மகோன்னத தசை என்று கூறலாம். டோரிகள் நித்திரையில் ஆழ்ந்துபோனவர்போலவே இருந்து வந்தனர்.

முதலாவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தமையால், அரசியல் முறையில் முக்கியமான அபிவிருத்திகள் ஏற்பட்டனவென்று கூறினோமல்லவா? 1688-ல் வில்லியம் அரசரானபொழுது பார்லிமெண்ட் சபைக்கு செல்வாக்கும் அதிகாரமும் பெருகிப்போயினவென்பதை முன்பு விவரித்தோம். அப்பொழுது ஆரம்பித்த வளர்ச்சி ஹானோவர் அரசர்களுடைய காலத்தில் முன்னிலும் துரிதமாக அதிகரித்தது. காபினட் என்ற மந்திரிசபை முன்னிலும் அதிகத் தெளிவாய் உருவாயிற்று. மூன்றாவது வில்லியம் முதலில் விக், டோரி ஆகிய இரு கட்சி மந்திரிகளையும் கலந்துகொண்டு அரசாட்சி புரிந்ததையும், பின்பு அவர்களுக்குள் ஒற்றுமை ஏற்படாமற்போகவே, ஒரேவிதமான அபிப்பிராயத்தைக்கொண்ட ஏதாவது ஒரு கட்சியிலிருந்து மாத்திரம் மந்திரிகளைப் பொறுக்கியெடுத்ததையும் நாம் கண்டோம். இப்பொழுது விக் கட்சி

யினரே அரசருடைய நம்பிக்கைக்குப் பாத்திரராயிருந்தமையால், அவர்கள் மந்திரி சபையை அமைத்து இராஜ்ஜிய பரிபாலனம் செய்துவந்தனர். மேலும், அதுவரையில் மந்திரிசபைக் கூட்டங்களில் அரசரும் விஜயம்செய்து, தலைமை வகித்து, நடவடிக்கைகளில் கலந்துகொள்வது வழக்கம். முதலாவது ஜார்ஜுக்கு இங்கிலீஷ் பாஷை தெரியாதாகையால், அவர் மந்திரிசபைக் கூட்டங்களில் தலைமை வகித்தல்கூடாமல் போயிற்று. எனவே, மந்திரிகளில் முக்கியஸ்தரான முதல் மந்திரியே அரசருக்கு பதிலாகத் தலைமை வகிக்கவேண்டியதாயிற்று. அரசர் மந்திரிசபையிலிருந்து விலக்கப்பட்டவர்போலானார். பெயருக்கு மாத்திரம் அரசர் நிர்வாகம் நடத்துவதாக இருந்ததேயன்றி, உண்மையில் சகல அதிகாரங்களும் ஜனப்பிரதிநிதிகளடங்கிய பார்லிமென்ட் சபையில் பெரும்பாலோராயிருந்த கட்சியின் தலைவர்களான சிலரிடம் சென்றுவிட்டன. அவ்வாறு அரசாட்சிமுறையில் மாறுதலேற்படுவதற்கு சட்டபூர்வமான அநுமதி எதுவும் ஏற்படவில்லை. பழைய சட்டங்கள் மாறாமல் அப்படியே இருந்தன. ஆனால் காரியத்தில் மாத்திரம், சமயோசிதமான மாறுதல்கள் செய்யப்பட்டுவந்தன. எனவே சட்டத்தையொட்டிப் பார்க்கும்பொழுது, சகலமான அதிகாரங்களும் அரசருக்கே உரியவையாயிருந்தனவானாலும் பிற்காலத்து அரசர்கள் கூடத் தமது இச்சைப்படி நடக்க இயலாதபடி ஸ்தாபிக்கப்பட்ட ஒரு வழக்கத்தைப் பின்பற்றி, அதிக ஆதரவுடைய பார்லிமென்ட் கட்சித்தலைவரையும், அவருடைய சகாக்களையுமே மந்திரி சபையாக ஏற்கவேண்டியது அவசியமாயிற்று. அந்த மந்திரிசபைக்கு காபினட் என்ற பெயரே நிலைத்துப்போயிற்று. ஷை மந்திரி சபையினர் ஒரே கட்சியைச் சேர்ந்தவராதலால் ஒரேவிதமான அபிப்பிராயங்களைக்கொண்டு, ஒற்றுமையாக நிர்வாகத்தை நடத்திவருவார்கள். பார்லிமென்டின் நம்பிக்கையையும் அவர்கள் பெற்றிருப்பார்கள். ஏனெனில் அவர்களது கட்சியைச் சேர்ந்தவர்களே பெரும்பாலான ஸ்தானங்களைப் பெற்றிருப்பார்கள். காபினட் சபையின் ஆலோசனைப்படியே அரசர் நடக்கவேண்டியதாயிற்று. ஷை மாறுதல்களெல்லாம் ஒரே தினத்தில் நேர்ந்துவிடவில்லை; படிப்படியாகவே அவைகள் அமைந்துகொண்டுவந்தன. ஆனாலும் சட்ட

புஸ்தகத்தில் அரசியல் முறை நடக்கவேண்டிய விதம் ஒருமாதிரி யாக இருக்க, அது கிரியாம்சையில் நடப்பது வேறு மாதிரியாகி விட்டது. உதாரணமாக, பார்லிமென்ட் சபையில் நிறைவேறும் தீர்மானங்கள் அரசருடைய கையெழுத்தைப் பெற்றாலன்றி, அவை சட்டங்களாகா என்ற ஒரு நியதி இருந்து வருகிறது. பழைய அரசர்கள் அந்த அதிகாரத்தை உண்மையில் அநுஷ்டித்து, சில தீர்மானங்களில் கையெழுத்திடாமல் அவைகளை நிராகரித்து வந்தார்கள். ஆனால் மேற்கூறிய மாறுதல்கள் ஏற்பட்டபின், அந்த விசேஷ அதிகாரம் அரசரிடமிருந்து சட்டபூர்வமாய்ப் பிடுங்கப் படாமற் போனாலும், அவர் பார்லிமென்டின் தீர்மானங்களை நிரா கரிப்பது சாத்தியமற்றதாகிவிட்டது. முன்னர் அரசர்கள் தமது மனப்போக்கின்படி மந்திரிகளைப் பொறுக்கி நியமித்துக்கொள்வார் கள்; இப்பொழுதோ பார்லிமென்டில் பிரபலமாயிருக்கும் கட்சியின் தலைவரை அரசர் விரும்பினாலும் வெறுத்தாலும், அவரே பிரதம மந்திரியாய் விடுவார்; அவருடைய சகாக்களே இதர மந்திரிகளாவார் கள். இவ்வாறு அரசருக்குப் பாம்பரையாய் இருந்துவந்த பல விசேஷ உரிமைகள் ஏட்டுச்சுரைக்காய்களாக மாத்திரம் இருந்து வந்தன. அரசரது அதிகாரமும், நிர்வாகப் பொறுப்பும் மெதுவாகவும் சிறுகச்சிறுகவும் மந்திரிகளிடம் சென்றுவிட்டன. ஆனால் சகலமான இராஜ்ஜிய வியவகாரங்களும் அரசரது பெயராலேயே நடந்துவந் தன. பார்லிமென்டின் ஒரு பகுதியும் ஜனப்பிரதிநிதிகளடங்கியது மான காமன்ஸ் சபையே சகல சக்தியையும் பெற்றுவிட்டது. அரச ருக்கும் லார்ட்ஸ் சபைக்கும் அதிகாரம் குறைந்துபோய்விட்டது. இராஜ்ஜிய நிர்வாகத்தின் விரிவான முறைகளைத் தீர்மானிக்கும் வேலை பொதுஜனப் பிரதிநிதிகளையே சேர்ந்துவிட்டது. வரவு செலவுகளை நிர்ணயம் செய்யும் அதிகாரமும் அவர்களிடமே போய்ச் சேர்ந்தது. எனவே மற்ற அரசாங்க நிர்வாகஸ்தர்களெல்லோரும் காமன்ஸ் சபைக்குக் கீழ்ப்படிய வேண்டியதாயிற்று. ஸ்டுவர்ட் அரசரது காலம் முதல் தனது அதிகாரத்தை விருத்தி செய்து கொண்டு சர்வ வல்லமைபெறப் போராடி வந்த பார்லிமென்ட் சபை கடைசியில் முதலாவது ஜார்ஜ் மன்னரது காலத்தில் வெற்றி யடைந்தது.

ஆனால், இவ்வாறு பார்லிமெண்டுக்கு அதிகாரவிருத்தி ஏற்பட்டதால் இங்கிலண்டில் உடனே ஜனநாயக ஆட்சி—அதாவது சாமானிய ஜனங்களும் ஏழைக்குடிமக்களும் தங்களது பிரதிநிதிகளால் ஆளும் முறை—ஸ்தாபிக்கப்பட்டதாக எண்ணுதல் கூடாது. ஏனெனில், அப்பொழுது பார்லிமெண்டில் ஸ்தானம் வகித்த பிரதிநிதிகள் உண்மையில் பொது ஜனங்களுடைய அல்லது ஏழைமக்களுடைய பிரதிநிதிகள் அல்லர். அக்காலத்தில், அதாவது 18-வது நூற்றாண்டின் துவக்கத்தில் பிரபுக்களும், தனவந்தர்களும், சில வியாபாரிகளும் மாத்திரமே இராஜீய வியவகாரங்களில் அக்கரை கொண்டிருந்தனர். இக்காலத்தில் நடப்பதுபோல, எல்லோரும் பத்திரிகைகளை வாசித்து அறிவைப் பெருக்கிக் கொள்ளவில்லை. தனவந்தர்களே ஆட்சி செலுத்தத் தகுந்தவர்கள் என்ற எண்ணமே பொது ஜனங்களிடம் பரவியிருந்தது. ஆகவே பணம் படைத்த தனிகர்களும் விக் பிரபுக்களுமே பார்லிமெண்டில் சுலபமாய் ஸ்தானம்பெற்று வந்தனர். எனவே அப்பொழுது பொது ஜனங்களுடைய பணிவையும் நம்பிக்கையையும் பெற்ற சில பிரமுகர்களுடைய ஆட்சி நடந்ததாகவே கூறலாம். ஆனால் ஏறக்குறைய ஐம்பது வருஷகாலம் விக் கட்சியினர் பிரபலமாக இருந்து நிர்வாகம் நடத்தியதனால் முக்கியமான நன்மை ஒன்று ஏற்பட்டது. ஸ்டூவர்ட் அரசர்களது காலத்தில் நடந்த உள்நாட்டுச்சண்டைகளும் குழப்பமும் பூர்த்தியாக மறைந்து போக, நாடு அமைதி யடைந்தது. நாட்டின் க்ஷேமமும் வளமும் தழைத்தோங்கின.

(3) ஜாகோபைட் கலகம்:—முதலாவது ஜார்ஜ் அரசரானபின், நீண்டகாலம் டோரிகள் தளர்வடைந்து போனதற்குரிய காரணத்தை மேலே கூறினோம். அதாவது, அவர்கள் புதிய அரசகுலத்திற்கு விரோதமாக உழைத்து வந்தனரென்றும், கதலிக் மதத்தையும், சீர் குலைந்துபோன ஸ்டூவர்ட் அரச குலத்தையும் மறுபடி நிலை நிறுத்த முயற்சித்தனரென்றும் பொது ஜனங்கள் எண்ணினர். ஸ்டூவர்ட் வம்சத்தார்மீது ஜனங்களுக்கு இயற்கையிலேயே வெறுப்பும், அவரிடம் ஒருவித அச்சமும் இருந்து வந்தன. இரண்டாவது ஜேம்ஸ் அரசர் ப்ரான்ஸ் தேசத்திலிருந்து இறந்துபோனாராலும் அவருக்கு ஜேம்ஸ் என்ற

பெயருடைய புத்திரர் ஒருவர் இருந்து வந்தார். அவரை மூத்த போலி அரசர் (The old Pretender) என்று குறிப்பதுவழக்கம். ஏனெனில் அவர் தாமே அரசரென்று சிறிது காலம் கூறிக் கொண்டிருந்தார். டோரிகளில் சிலர் அவரை சிம்மாதனத்தி லேற்றிவிட முயன்று வந்தனர். ஆகவே, ஜனங்கள் டோரிகளிடம் சந்தேகம் கொண்டதற்கும் காரணமில்லாமற் போகவில்லை. தமது பழைய அதிகாரத்தையும் செல்வாக்கையும் இழந்தபின், அவர்கள் புதிய அரசரைத் துரத்துவதற்கு முயற்சிகளைச் செய்துவந்தனர். பாலிங்ப்ரோக் என்ற டோரித் தலைவர் தேசத்தை விட்டு ஓடிய பின் மூத்த போலியரசரிடம் போய்ச் சேர்ந்துகொண்டார். இவ்வாறு, இரண்டாவது ஜேம்ஸையும் அவரது குமாரரையும் ஆதரித்தவர்களுக்கு ஜாகோபைட்ஸ் (Jacobites) என்று பெயர். 1715-ல்—அதாவது முதலாவது ஜார்ஜ் முடி சூட்டியதற்கு மறுவருஷம்—ஜாகோபைட் பிரமுகர்கள் ஒன்று கூடி இங்கிலண்டிலும் ஸ்காட்லண்டிலும் புதிய அரசருக்கு விரோதமாகக் கலகங்களைக் கிளப்ப முயற்சி செய்தனர். அந்தச் சம்பவத்திற்கு சுருக்கமாக 'பதினைந்து' (The Fifteen) என்றும் பெயர் உண்டு. ஏனெனில் அது 1715-ல் நடந்தது பற்றி, அப்பெயர் வந்தது. ஆனால் அம்முயற்சி பலிக்காமல் போயிற்று. ஐரோப்பாவில் தமது பழைய கீர்த்தியைஇழந்து அடங்கிப்போயிருந்த ப்ரெஞ்சு தேசத்தரசரான லூயி கலகக்காரருக்கு உதவி செய்வதாக வாக்களித்திருந்தார். ஆனால் அவர்களுடைய துரதிருஷ்டத்தினால், அவர் அப்பொழுது இறந்துபோய்விட்டார். அதன் பிறகு ப்ரெஞ்சுக்காரர் இங்கிலீஷ் அரசருடன் சிநேகமாகவே இருக்க விரும்பினர். ஆகவே இரண்டாவது ஜேம்ஸின் கட்சிக்கு ஆதரவாயிருந்து வந்த ப்ரெஞ்சு துரைத்தனத்தாரும், இப்பொழுது மூத்த போலி யரசரைக் கைவிட்டுவிட்டனர். ஷெ மூத்த போலியரசரும் திறமை வாய்ந்தவரல்லர்; அவர் சுறுசுறுப்போ புத்தி கூர்மையோ அற்றவர். தமக்கு அந்தரங்க நண்பராயிருந்த பாலிங்ப்ரோக்கினிடத்தில் கூட அவருக்குப் பூர்த்தியான நம்பிக்கை இல்லை. ஆகவே, சிறிது தலையை நீட்டி விட்டு, அவர் தமது கட்சி வெற்றி பெறுமென்று கண்டு முதலாவது ஜார்ஜுடன் சமாதானம் செய்து கொள்ளவும் ஆயத்தமானார். உடனே கலகக்காரர்கள் கடுமையாக தண்டிக்கப்

பட்டனர். 'கலகச் சட்டம்' (Riot Act) என்று ஒரு சட்டம் இயற்றப்பட்டது; பல ஜாகோபைட் வீரர்கள் கைதியானார்கள்; ஆகவே கலகம் ஆரம்பமாவதற்கு முன்னரே அது அடக்கப்பட்டுப் போயிற்று. இங்கிலண்டின் வடபாகத்தில் மாத்திரம் சிலர் கிளர்ச்சி செய்து வந்தனர். பெரும்பாலோரான இங்கிலீஷ்காரர்கள் கலகக்காரருடன் சேர மறுத்துவிட்டனர். ஆனால் ஸ்காட்லண்டின் வடபாகத்தில் இருந்த மலைநாட்டு ஜாதியார் சிறிது துன்ப மிழைத்தனர். 1707-ல் ஸ்காட்லண்ட் இங்கிலண்டுடன் ஒன்றுபட்டுப்போனதல்லவா? அதைப் பலர் ஆதரிக்கவில்லை. மேலே கூறிய மலைநாட்டு ஜாதியார் இங்கிலீஷ் அரசருக்கு உட்பட்டிருந்தாலும், உண்மையில் தமது சுயாதீனத்தை விடாமல் பழைய முறைகளையே அநுஷ்டித்து வாழ்ந்து வந்தனர். அவர்களிற் பலர் முரட்டு மனிதர்களாகவும் சண்டைக்காரர்களாகவும் இருந்தனர். உண்மையான வீரமும் அஞ்சாமையும் அவர்களிடம் நிறைந்திருந்தன. விக், டோரி முதலிய கட்சிகளைப்பற்றிய விவரம் எதுவும் அவர்களுக்குத் தெரியாது. ஆனால் அவர்களது தலைவர்களிற் பலர், வேறுபல காரணங்களை முன்னிட்டு ஜாகோபைட் கூட்டத்தாருடன் சேர்ந்து கொண்டனர். அதனால், இயற்கையிலேயே யுத்த வெறி கொண்ட மலைநாட்டார் கிளர்ச்சி செய்யத் தலைப்பட்டனர். ஆனால் அவர்களால் நிரந்தரமான வெற்றியை யடைய இயலவில்லை. 1716-ல் கலகக்காரரது தலைவரெல்லோரும் சிறைப்படுத்தப்பட்டோ அல்லது கொல்லப்பட்டோ போயினர். மூத்த போலியரசர் சிம்மாதனத்தை யடைவது கனவிலும் கூடாததாயிற்று. அவரை முன்னிட்டு ஏற்பட்ட கலகங்களால் ஏற்கனவே டோரிகளிடம் இருந்து வந்த அவநம்பிக்கை உறுதிப்பட்டது, 'பதினைந்து' என்ற கலகத்தின் பலன் அது ஒன்றுதான். ஹானோவர் அரசகுலம் எவ்வித இடையூறுமின்றி நிலைத்துப்போயிற்று.

(3) மந்திரி ஸ்டானேப்: ஏழு வருஷவாரிச் சட்டம்; தென்கடல்குமிழ்:—1694-ல் மூன்றாவது வில்லியத்தின்காலத்தில் பார்லிமென்ட் சபை மூன்று வருஷத்திற்கொருமுறை புதுப்பிக்கப் படவேண்டுமென்று ஒரு சட்டம் இயற்றப்பட்டதல்லவா. அதன்

படி 1716-ல் ஒரு தேர்தல் நடக்க வேண்டியதாயிற்று. ஆனால் அப்பொழுது ஜாகோபைட் கலகத்தின் பயனாக நாட்டில் கலவரமேற்பட்டிருந்தமையால், மந்திரிகள், தேர்தல் நடத்துவதற்கு அது ஏற்ற காலமல்லவென்று கருதி, அந்தச் சட்டத்தை மாற்றி 'ஏழுவருஷ வாரிச் சட்டம்' (Septennial Act) என்று ஒரு சட்ட மியற்றி, ஏழு வருஷ காலத்திற்கொருமுறையே தேர்தல் நடக்கவேண்டு மென்று செய்தனர். அதன்படியே 1911-ம் வருஷம் வரையிம் தேர்தல்கள் நடந்துவந்தன. (அதன் பிறகு ஐந்து வருஷ காலத்திற்கு ஒரு முறை தேர்தல் நடக்கவேண்டு மென்ற சட்டமேற்பட்டது), ஏழு வருஷவாரிச் சட்டத்தினால் விக் கட்சியினர் பார்லிமென்டில் தமக்கு இருந்த அதிக ஸ்தானங்கள் நீடித்திருக்கும்படி செய்துகொண்டனர். இங்கிலண்டில் பார்லிமென்ட் சபைக்கு சகல அதிகாரமும் உண்டாதலால், அது மேற்கூறியவாறு தனது ஆட்சி காலத்தையும் அதிகப்படுத்திக்கொண்டது.

முதலாவது ஜார்ஜ் அரசரானபின், விக் கட்சித் தலைவர்களில் நெடுங்காலமாயிருந்துவந்தவர்கள் மறைந்தனர்; மார்ல்பரோ பிரபு உயிருடனிருந்தாரானாலும் முன்போல முக்கிய ஸ்தானம் வகிக்க அவரால் இயலவில்லை. அப்பொழுது மந்திரிசபையில், டௌன்ஷென்ட், வால்போல், ஸ்டான்ஹோப் (Townshend, Walpole, Stanhope) என்பவர்கள் முக்கியஸ்தர்களாய் இருந்தனர். சிறிது காலத்திற்குப்பின் ஏதோ சில மனஸ்தாபங்கள் காரணமாக முதலிருவரும் வேலையைவிட்டு விலகிக் கொண்டனர். ஆகவே, ஸ்டான்ஹோப் என்பவர் முக்கிய மந்திரியானார்; ஸண்டர்லண்ட் (Sunderland) என்பவர் அவருக்குதவியாயிருந்தார். இனி இங்கிலண்ட் தேச சரித்திரத்தில் அரசரைக்காட்டிலும் மந்திரிகளே அதிக செல்வாக்குடையவர்களாய் இருந்து நிர்வாகம் நடத்துவார்களாதலால், அக்காலத்தில் முக்கியமாக இருந்த மந்திரிகளின் பெயராலேயே அந்தந்தக் காலம் குறிக்கப்படும். எனவே ஜார்ஜின் காலம் என்று குறிப்பதைக் காட்டிலும், ஸ்டான்ஹோப்பின் காலம், வால்போலின் காலம் என்றே கூறுவது பொருத்தமானது. ஸ்டான்ஹோப் தலைமை வகித்தபோது 'பிரபுப் பதவிச் சட்டம்' (Peerage-

Biil) என்று ஒரு சட்டம் இயற்ற முயற்சித்தார். தேசத்தில் சில ருக்கு பிரபு (லார்஡்) என்ற பட்டமளித்து அவர்கள் லார்஡் சபையில் ஸ்தானம் வகிக்குமாறு செய்யும் அதிகாரம் அரசருக்கிருந்து வருகிறது. ஸ்டா/2ன்ஹோப் இயற்ற உத்தேசித்த சட்டப்படி அரசருடைய ஷெ அதிகாரம் குறைவுபடுவதாயிருந்தது. ஏனெனில் அப்பொழுதிருந்த லார்஡் சபையில் விஹ் கட்சியே அதிக பலம் பெற்றிருந்ததாகையால் அந்த நிலைமை மாறாதபடி செய்ய வேண்டுமென்று ஸ்டா/2ன்ஹோப் எண்ணினார். ஆனால் வால்போல் எதிர்த்து அந்தச் சட்டம் நிறைவேறாதபடி செய்துவிட்டார். அன்னியநாட்டு வியவகாரங்களில் ஸ்டா/2ன்ஹோப்மிக ஊக்கமாக வேலை செய்தார். 1716-ல் இங்கிலண்ட், ஹாலன்ட், ப்2ரான்ஸ் ஆகிய மூன்று தேசங்களும் சிநேக உடன்படிக்கை யொன்றைச் செய்து கொண்டன. ஸ்பெயின் வார்சுரிமை யுத்தத்தில் இங்கிலண்டுக்கு விரோதமாகப் போர்புரிந்த ப்2ரான்ஸ் இப்பொழுது அதனுடன் சேர்ந்துகொண்டது ஆச்சரியகரமான செய்கையே ஆனாலும் அப்பொழுது ஸ்பெயின் சக்கரவர்த்தி தமது அதிகாரத்தை அதிகப்படுத்த முயற்சித்தமையாலேயே அம்மாதிரியான சேர்க்கை ஏற்பட்டது. ஆனால் அப்பொழுது ஐரோப்பாவில் நடந்த இராஜீய வியவகாரங்கள் இங்கிலண்டின் சரித்திரத்தை அதிகமாய் பாதிக்கவில்லை.

1720 ல் இங்கிலண்டில் ஒரு பெரிய வியாபார நஷ்டம் ஏற்பட்டது. அந்தச் சம்பவத்திற்கு "தென் கடல் குமிழி" (The South Sea Bubble) என்று பெயர். 1713-ல் யுட்ரெக்ட் உடன்படிக்கை நடந்தபிறகு இங்கிலண்டின் கடல் மார்க்கமான வியாபாரம் விரைவில் பெருகியது. பலர் தமது பணத்தை வியாபாரத்தில் போட்டு அதன்மூலம் பெரிய வருமானம் சம்பாதிக்க எண்ணினர். ஆகவே, பல கூட்டுறவுச் சங்கங்கள் தோன்றின. அவைகளில் பலர் பங்குகள் (Shares) எடுத்துக்கொண்டனர். அம்மாதிரி தோன்றிய கம்பெனிகளுள், 'தென்கடல் கம்பெனி' (South Sea Company) என்பது முக்கியமானது. அது அமெரிக்காவில் தென் அட்லா/2ன்டிக் சமுத்திரத்தின் ஓரமாக ஸ்பெயின் தேசத்திற்குச் சொந்தமான பிரதேசங்களில் வியாபாரம் செய்யும் உரிமையைப்

பெற்றிருந்தமையால், அது அந்தப் பெயரைப்பெற்றது. ஏழெட்டு வருஷகாலம் அதற்கு நல்ல வருமானம் கிடைத்துவந்தது; பங்கு எடுத்துக்கொண்டவர்கள் எதிர்பாராத அளவிற்கு அதிக ஊதியம் பெற்றனர். ஆனால் அந்தக் கம்பெனியின் அதிருஷ்டம் அதிக காலம் நீடித்து நிற்கவில்லை. கம்பெனி விருத்தியாக ஆக, வேறு பல விஷயங்களில் அது தலையிட்டுக்கொண்டது. அது துரைத்தனத்தாருடைய பண வியவகாரங்களைக்கூட ஓரளவிற்கு நிர்வகிப்பதாக ஒப்புக்கொண்டது. ஆகவே, அதில் பங்குகள் எடுத்துக் கொண்டால் குபேர சம்பத்தைப்பெற்றுவிடலாம் என்று எல்லோரும் கருதினர். அந்தக் கம்பெனியின் பங்குகளுக்கு, பத்துமடங்கு அதிகப் பணம் கொடுத்தாவது, அதில் பங்காளிகளாகச் சேர்ந்துகொள்ள அனைவரும் முன் வந்தனர். இவ்வாறு ஜனங்களிடம் இருந்த உற்சாகத்தைக் கண்ட பலர் வேறு பல கம்பெனிகளை ஏற்படுத்தினர். அவைகளிற் சில வஞ்சகமாக ஜனங்களை ஏமாற்றிப் பணத்தைக் கொள்ளையடிக்க முயன்றன. ஜனங்களோ எந்தப் புதிய கம்பெனி தோன்றினாலும், எவ்வித யோசனையுமின்றி அதனிடம் பணத்தைக்கொடுத்து வந்தனர். உதாரணமாக, ஒரு கம்பெனி எவ்வித உத்தேசத்தையும் தெரிவிக்காமலேயே, 'கூடிய சீக்கிரத்தில் தெரிவிக்கப்படும் ஒரு வியாபாரத்தின்பொருட்டு' என்று ஆரம்பிக்கப்பட்டது. அதில்கூட ஜனங்கள் பங்குகள் எடுத்துக்கொண்டனர்! 1720-ல் பேரிடிபோன்ற ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. திறமையின்றி, யோசனையின்றி. நினைத்தபொழுதெல்லாம் தோன்றிய கம்பெனிகளிற் பல, நீர்க் குமிழிகள்போல, சொற்பகாலமிருந்து மறையத்தொடங்கின. அவைகளில் பங்கு எடுத்துக்கொண்ட ஜனங்கள் நஷ்டமடைந்தனர். இவ்வாறு சிறிய கம்பெனிகள் திடீர்திடீரென்று நஷ்டமடைந்து அழிந்ததைக் காண, உண்மையில் இலாபமடைந்துவந்த கம்பெனிகளின் பங்காளிகளுக்கும் திகில் உண்டாய்விட்டது. தென் கடல் கம்பெனி எவ்வளவோ இலாபமடைந்திருந்தும், அதன் பங்காளிகளும் கூட அந்தக் கம்பெனியும் கவிழ்ந்துவிடுமென்று கருதி, தமது பங்குகளை விற்றுவிட முனைந்தனர். எல்லோரும் விற்க முயற்சித்தால் வாங்குகிறவர் யார்? எனவே தென்கடல் கம்பெனியின் பங்குகள் மதிப்பை இழக்க, அவற்றின் விலை குறைந்துபோய்விட்டது.

முன்பு ஒரு பவுனுக்கு பதிலாக பத்து பவுன் கொடுத்தாவது பங்கை வாங்கிக் கொண்டவர்கள், ஏராளமாக நஷ்டமடைந்து விட்டனர். வஞ்சகக் கம்பெனிகள் சொற்ப காலத்தில் அழிந்துபோனதுபற்றி உறுதியாக இருந்த தென் கடல் கம்பெனிக்கும் அநர்த்தம் விளைந்தது. சந்தேகமும், கவலையும், அமளியுமே எங்கும் குடிகொண்டன. ஏழைகள் தம்மிடம் இருந்த பணத்தையெல்லாம் இழந்து பரிதவித்தனர். ஷை வஞ்சகக் கம்பெனியின் அதிகாரிகளை தண்டிக்கவேண்டுமென்று எல்லோரும் கதறினர். ஷை கம்பெனியின் அதிகாரிகளும் பிறரது வஞ்சகம் காரணமாகத் தமது மானத்தையும் பொருளையும் இழக்கநேரிட்டது. மந்திரிகளிற் பலரும் ஷை வஞ்சகச் சூழ்ச்சிகளில் கலந்து கொண்டிருந்ததும் வெளிப்பட்டது. பார்லிமென்டில் எல்லோரும் ஷை மந்திரிகளின்மீது குறைகூறினர். ஒருவர் வேலையிலிருந்து விலக்கப்பட்டார். ஒரு மந்திரி தற்கொலை செய்துகொண்டார். ஸ்டா/2ன்ஹோப் அந்தக் குழப்பத்தினிடையில் இறந்துபோனார். தென் கடல் குமிழி வெடித்துப்போனதுபற்றி தேசத்தினரனைவருக்கும் அவகேடு நேரிட்டது.

இவ்வாறு ஸ்டா/2ன்ஹோப் மந்திரிசபை ஷை வியாபார நஷ்டத்தினால் கலைந்துபோனதும், முன்பு ஸ்டா/2ன்ஹோப்புடன் சச்சரவிட்டுக்கொண்டு பிரிந்துபோன ஸர் ராபர்ட் வால்போல் (Sir Robert Walpole) என்பவர் 1721-ல் பிரதம மந்திரியின் பதவியை ஏற்று, நாட்டின் அமளியை ஒருவாறு அடக்கினார். முதலாவது ஜார்ஜ் அரசர் இறக்கும் வரையிலும் இறந்தபிறகும் வால்போல் பிரதம மந்திரியாக இருந்தார். இங்கிலண்டைப் பரிபாலித்த மந்திரிகளுள் அவர் மிக முக்கியமானவர். அவரைப்பற்றி விரிவாக அடுத்த அதிகாரத்தில் கூறுவோம்.

1727-ல் முதலாவது ஜார்ஜ் மரணமடைந்தார்.

---

# 37 - வது அதிகாரம்

## இரண்டாவது ஜார்ஜ்.

(1) வால்போல்; அவரது ஆட்சி முறை; அரசிய லபிவிருத்திகள்:—1721-ல் மந்திரியின் பதவியை ஏற்றுக்கொண்ட வால்போல் இருபது வருஷகாலம் அந்தப் பதவியை வகித்து அரிய ஊழியம் செய்தார். ஆகவே, அந்தக் காலத்தை இரண்டாவது ஜார்ஜின் காலம் என்று குறிப்பதைக் காட்டிலும், வால்போல் மந்திரியின் ஆட்சிக் காலம் என்று குறிப்பதே பொருத்தமானது. ஏனெனில் முன்பு கூறியபடி ஹானேவர் வம்சத்தரசர்களால் இராஜ்ஜிய நிர்வாகத்தில் கலந்துகொள்ள இயலவில்லை. இரண்டாவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தபொழுது அவருக்கு நாற்பது வயது ஆயிருந்ததாகையால், அவர் தமது தந்தையைப்போலவே இருந்தார்; ஆனல் அவருக்கு இங்கிலீஷ் பாஷை தெரிந்திருந்தது. அவர் நன்ருக உழைக்கும் இயல்புடையவர்; தைரியசாலி; ஆனல், சிலசமயங்களில் மாத்திரம் கர்வமும், சுயநலநாட்டமும், பேராசையும், அற்ப புத்தியும் காட்டுவார். அவரது பட்டமகிஷி கரோலேன் (Caroline) என்பவள் அவரை வசியப்படுத்திக் கொண்டிருந்தாள். அரசருக்கு வால்போலிடம் பிரியம் ஏற்படவில்லை. ஆனல் வால்போல் அரசியின் பிரீதியைப் பெற்றதனல்தான் அவர் நீண்டகாலம் உத்தியோகம் வகிப்பது சாத்தியமாயிற்று.

வால்போல் முதல் மந்திரியின் பதவியை வகித்த காலம் மிக முக்கியமானதென்ருமல்லவா. அவர் அமைதியும், அபிவிருத்தியும், பொருள் விருத்தியும், வியாபாரப் பெருக்கும் ஏற்படுமாறு செய்தார். அவர் நல்ல குலத்தில் பிறந்தவர்; சிறுவயதிலேயே அவர் பிற்கால மேம்பாட்டிற்குரிய குணங்களைப் பெற்றிருந்தார். 45-வது வயதிலேயே அவர் மந்திரியின பதவியை ஏற்றுக்கொண்டு, ஏறக்குறைய இருபது வருஷகாலம் நிர்வாகம் நடத்திவந்தார். அவர் விக் கட்சியைச் சேர்ந்தவரென்பது கூருமலே விளங்கும். தமது

கட்சியின் பலம் குன்றாமல் இருக்கும் சாதனங்களைத் தேடுவதிலும், தாம் தலைமை வகிப்பதற்கு அவசியமான காரியங்களைச் செய்வதிலும் அவர் எச்சரிப்பாகவே இருந்தார். பிரசங்கம் புரிவதில் மிக்க சமர்த்தரல்லராஞலும், அவர் வாததர்க்கம் நடத்தும் திறமையிலும், தமது கட்சியினரை ஒன்றுபடுத்தி வைப்பதிலும், காமன்ஸ் சபையின் கோபத்திற் காளாகாமல் தப்பித்து கொள்வதிலும் அபார வல்லமை வாய்ந்தவர், ஆகவே, அவர் சிறந்த நிர்வாகஸ்தராயிருந்ததன்றி பொருளாதாரத் துறையில் வெற்றிபெறுமாறு விபவகாரங்களை நடத்திச் சென்றார். அவசரப்பட்டு மாறுதல்கள் செய்வதில் அவ்ருக்கு விருப்பம் கிடையாது. நாட்டில் முக்கியமான எந்த வகுப்பாரையும் பகைத்துக்கொள்ளுதல் கூடாதென்பது அவாது கொள்கை "தூங்கும் நாய்களை அவ்விதமே விட்டுவிடவேண்டும். அவைகளைத் தட்டியெழுப்பித் துன்பத்தை உண்டாக்கிக்கொள்வது கூடாது." (Let Sleeping dogs lie) என்று அவர் அடிக்கடி கூறுவார்; உதாரணமாக, மத சம்பந்தமான சச்சரவுகளில் எதிலும் அவர் அமிதமான பற்றுதல் கொள்ளாதவர்போல நடந்துவந்தார். 'இணங்காத' வகுப்பை (Dissenters)ச் சேர்ந்த ப்ராடெஸ்டன்ட் மதத்தினர், உத்தியோகங்கள் வகிப்பதை, சோதனைச்சட்டம் தடுத்துவந்தது. ஆகவே, அந்தச் சட்டத்தைவிலக்குமாறு அவர்கள் வால்போலிடம் கேட்டுக்கொண்டனர். அவர் அதன்படி செய்வதாய்க் கூறி அவர்களுக்கு ஆசைகாட்டி வந்தார். ஏனெனில் அதைத் தள்ளுபடிசெய்தால், மற்ற வகுப்பாருடைய பகைமை ஏற்படும் ; அதைச் செய்ய மறுத்தால், இன்னொரு பிரிவினருடைய கோபத்திற்காளாக நேரும். ஆகவே, ஒரு தந்திரம் செய்தார். சோதனைச் சட்டத்தை மாற்றாமல் விட்டுவைத்து, அதன் நியதிக்கு மாறாக உத்தியோகம் வகித்த சிலர்மீது நடவடிக்கை எடுக்க வேண்டாமென்று ஒரு 'மன்னிப்புச் சட்ட'த்தை அவர் வருஷா வருஷம் இயற்றிவந்தார். இம்மாதிரி அவர் இருகோடிகளையும் விட்டு மத்தியஸ்தமாகச் சென்று மிதமான சீர்திருத்தங்களைச்செய்தது அவருக்கு அநுகூலமாக இருந்துவந்தது. அதுபோலவே, காமன்ஸ் சபை யங்கத்தினரை வசப்படுத்துவதிலும், பார்லிமென்டின் தேர்தல் நடக்கும் பொழுதெல்லாம், தமக்கு அநுகூலமாயிருக்

கக்கூடியவர்கள் வெற்றியடையும்படி செய்வதிலும் வால்போல் முனைந்துநின்றார். பொதுஜன அபிப்பிராயம் தமக்கு விரோதமாகத் திரும்பிவிடாதபடி அவர் எப்பொழுதும் கவனித்துவந்தார்; குடி மக்களைக் கூடியவரையில் திருப்தி செய்விக்கவும் முயன்றுவந்தார். ஆனால் நியாயமான வழிகளில் அவர் தமது காரியம் நிறைவேறாது போனால், இலஞ்சம் கொடுத்தோ, பயமுறுத்தியோ அதை நிறைவேற்றிக்கொள்ளப் பின்வாங்கமாட்டார். அவர் மேலான அறநெறியை அநுஷ்டித்து ஒழுகியவரல்லர்; கிரமத்தவறான காரியங்களைச் செய்யவும் அவர் பின்'வாங்குகிறவரல்லர். அவரது காலத்தில் இலஞ்சம் கொடுக்கும் வழக்கம் தாராளமாகவும் தட்டுத்தடங்கலின்றியும் நடந்துவந்தது. அவர் பார்லிமெண்ட் அங்கத்தினரில் பலருக்கு உத்தியோகத்தையோ, பொருளையோ உதவி அவர்கள் தமது கட்சிக்கு ஆதாவாயிருக்குமாறு செய்துகொள்வார். ஆனால் அவர் அம்மாதிரி கிரமத்தவறான காரியங்களைச் செய்தாரானாலும், சுய நலத்தை அதிகப்படுத்திக்கொள்ள விரும்பினவரன்று; நாட்டின் க்ஷேமத்தைக் கருதியே அவர் அம்மாதிரி நடந்துகொண்டார். மகத்தான வியாபார நஷ்டமாகிற சுழலிலகப்பட்டுத் தவித்திருந்த நாட்டில் அமைதி எற்படும்பொருட்டு அவர் தமக்கு யுக்தமாகத் தோன்றிய வழிகளில் உழைத்துவந்தார். புதிய அரச வம்சத்தாரிடம் ஜனங்களுக்கு அபிமானம் எற்படும்படியும் வியாபாரிகளுக்கநுகூலமான பலநன்மைகளைச் செய்து அவர்கள் விக் கட்சியை ஆதரிக்கும்படியும் அவர் செய்துகொண்டார். அவருடைய பரிபாலன முறை அவ்வளவு சிரேஷ்டமானதல்லவானாலும், அதனால் முடிவில் நன்மையே உண்டாயிற்று. ஆனால், நல்ல முடிவைக்கருதியும் கிரமத்தவறான காரியங்களை அநுஷ்டிப்பது நியாயமாகாது என்று நினைப்போர்கள் வால்போலை வெறுக்கலாம். ஆனாலும் இராஜ்ஜிய நிர்வாகத்தில் அவ்வளவு பரிசுத்தமான தர்மவழிகளைப் பின்பற்றுவது சாத்தியமற்ற காரியமென்றும், பொய்யும்,புரட்டும்,வஞ்சகமும் ஓரளவிற்கு இருந்தேயாகவேண்டுமென்றும் சிலர் கருதுவர்.

இப்பொழுது இங்கிலண்டின் காபினட் சபையில் பல மந்திரிகள் இருக்கின்றனரானாலும் அவர்களெல்லோரும் முதல் மந்

திரி (Prime Minister)க்கு அடங்கியே நடப்பார்கள். முதல் மந்திரியே அவர்களை ஒன்றுகூட்டி, ஒற்றுமையாக நடத்தும் சூத்திரதாரி. "கா/2பினட் என்ற வளைவு மண்டபத்திற்கு முதல் மந்திரியே மையக்கல் போன்றவர்." என்று ஒரு நிபுணர் குறிக்கிறார். ஆனால், 8-வது நூற்றாண்டின் முன்பகுதி வரையிலும் முதல் மந்திரி பதவி அவ்வாறு இருக்கவில்லை. ஏனெனில், மந்திரிகளெல்லோரும் சமமான அந்தஸ்தும், அதிகாரமும் வகிக்கவேண்டுமென்றும், ஒருவர் மற்றவர்மீது அதிகாரம் செலுத்துதல் கூடாதென்றும், அம்மாதிரி முதல் மந்திரி யொருவர் சர்வாதிகாரமும் வகித்தால், அது அரசருடைய மேம்பாட்டை இளக்காரப்படுத்துவது போலாகும் என்றும், அக்காலத்தவர்கள் மதித்தனர். எனவே மூன்றாவது வில்லியம் ஆ/2ன் முதலியவர்கள் தாமே கா/2பினட் சபைக் கூட்டங்களில் அக்கிராசனம் வகித்து, மந்திரிகளெல்லோரையும் சமமாக நடத்தி, அவர்களது ஆலோசனையைக் கேட்டுவந்தனர்: ஆனால் முதல் இரண்டு ஹா/2னோவர் வம்ச அரசர்களுக்கு இங்கிலீஷ் பாஷையோ வியவகாரமோ தெரியாமற் போனதுபற்றி அவர் மந்திரிசபையில் அக்கிராசனம் வகித்தல் கூடவில்லை. அவரது ஸ்தானத்தில் மந்திரிகளுள் ஒருவர் தலைமை வகிப்பது அவசியமாயிற்று. அதைச் செய்தவரே நாளடைவில் முதல் மந்திரியானார். கா/2பினட் சபைக்கூட்டங்களில் அரசர்கள் கலந்துகொள்ளாமல் விலகி இருக்கும் வழக்கமும் நிரந்தரமானதாகிவிட்டது. இப்பொழுது இருக்கும் இங்கிலீஷ் அரசருக்கு தேசபாஷையும் வியவகாரமும் நன்றாகத் தெரியுமானாலும், அவர் மந்திரிகளின் சபையில் தலைமை வகிப்பதில்லை. நாளடைவில் அதுவே வழக்கத்திற்கு வந்துவிட்டது. கா/2பினட் சபையின் தீர்மானங்களை மந்திரி அரசருக்கு விளக்கிக் கூறுவதான வேலையையும் செய்யவேண்டியதாயிற்று. மேலும், அப்பொழுது பார்லிமென்டில் இராஜீயக் கட்சிகளின் அமைப்பும் உறுதிப்பட்டுக் கொண்டுவந்தமையால், அவைகளுக்கு ஒரு கட்சித் தலைவர் இருப்பதும் அவசியமாயிற்று. பார்லிமெண்டில் அதிக பலம் கொண்ட கட்சியின் தலைவரே, மந்திரி சபையின் தலைவரான முதல் மந்திரி ஆனார். வால்போல் அபாரமான தமது திறமையாலும், பெருந்தன்மையான குணங்களாலும் இங்கிலண்டு தேச சரித்திரத்தில் முதல் மந்திரி

யின் ஸ்தானத்தை முதன் முதலில் வகித்தார். ஆனால், அவர் வியவகாரங்களில் சகலமான அதிகாரத்தையும் பெற்றிருந்தாரானாலும் முதல்மந்திரி என்ற பெயரை வகித்துக்கொள்ளவில்லை. ஏனெனில், அதுபற்றி, மற்றவர்கள் பொறாமை கொள்வார்களென்பதை அவர் நன்குணர்ந்திருந்தார். ஆனாலும் உண்மையிலோ அவரே மற்ற மந்திரிகளெல்லோருக்கும் மேலாக இருந்து அதிகாரம் செலுத்தி வந்தார்.

ஆனால் வால்போல் அவ்வாறு தமது அதிகாரத்தை நிலைநிறுத்தியது சுலபத்தில் பலித்துவிடவில்லை. அவர் பழைய கால வழக்கத்திற்கு மாறாய்த் தமது சகாக்களை சம அந்தஸ்துடன் நடத்தாமல், தலைமை வகித்தது மந்திரிகளுக்கும் மற்ற உத்தியோகஸ்தர்களுக்கும் சிறிதும் சம்மதமாயிருக்கவில்லை. அதற்குமுன் மந்திரிகள் அரசரிடம் சென்று ஒருவர்மீதொருவர் பழிசுமத்திக் கோள் சொல்லிக் கலகம் விளைவிப்பதே சர்வசாதாரணமாக இருந்துவந்தது. ஆனால் வால்போல் எல்லா மந்திரிகளையும் ஒரே கட்சியில் இருந்து பொறுக்கியெடுத்தமையால் மற்றவர்கள் முதல் மந்திரிக்கு விரோதமாய் நடந்துகொள்ளாமல் பொதுவாக அவரது கொள்கையை அநுசரித்து நடக்கும்படி வற்புறுத்திவந்தார். அதனால், அவருடன் சமமான அந்தஸ்தை வகிக்கவேண்டிய சகாக்கள், அவருடைய உத்தரவை நிறைவேற்றும் சேவகர்களாய் மாறுவதை வெறுத்து அவருடைய வீழ்ச்சிக்கு வழி தேடலாயினர். ஒவ்வொரு மந்திரியும் அவருடன் சச்சரவு செய்வது சகஜமாய்விட்டது. வால்போல் அதற்கு இணங்காமல் அவர்களை மந்திரி பதவியினின்றும் நீக்கி விடுவார். கார்டரேட் பிரபு (Lord Carteret) என்பவர் அன்னிய நாட்டு வியவகார சம்பந்தத்தில் தம்முடன் ஒத்துழைக்கவில்லையென்றும், அதுபோன்ற வேறு சிலவை வேறுகாரணம் பற்றியும் அவர் பகைத்துக்கொண்டார். கடைசியாக அவருடைய உறவினரும் அந்தரங்க நண்பரும் கூட்டாளியுமான டௌன்ஷென்டு கூட விலகிக் கொள்ளவேண்டியதாயிற்று. அப்பொழுது 'முதல் மந்திரி' என்ற பதவி, சட்டப்படி அங்கீகரிக்கப்படவில்லையாதலால், வால்போல் பொக்கிஷ மந்திரியென்ற பட்டம் வகித்துவந்தார். டௌன் ஷென்டு அரசாங்கக் காரியதரிசியாக இருந்தார். டௌன்

ஷென்ஷ் தாம் அரசருக்கே உத்தரவாதியானவரின்றி, பொக்கிஷ மந்திரிக்கு உட்பட்டவரன்றென்று சாதித்தார். தமது முயற்சி பலியாததைக் கண்டு அவர் விலகிக்கொண்டார்.

இவ்வாறு வால்போலின் அதிகாரம் அதிகரித்து வந்ததாலும், அவருடைய எதிரிகளும் எண்ணிக்கையில் பெருகிவந்தனர். பதவியையிழந்த மந்திரிகளும் வேறு பலரும் ஒன்றுகூடி வால்போலை எதிர்த்து, அவர் பேராசைகொண்டு கிரமத்தவறாய் நடந்துகொள்வதாக அவர்மீது குறைகூறினர். அவர்கள் தங்களை தேசாபிமானம் நிறைந்த விக் கட்சியார் (Patriotic Whigs) என்று குறித்துக்கொண்டனர். வால்போல் அவர்களை இலட்சியம் செய்யவில்லை; 'இவர்களெல்லோரையும் விலைக்கு வாங்கிவிடலாம்' என்று அவர் கூறி வாளா இருந்துவிட்டார். சிற்சிலரைத் தவிர, மற்ற பிரமுகர்கள் அவருக்குப் பகைவர் ஆய்விட்டனர்.

தமது சகாக்களை அம்மாதிரி பகைத்துக்கொண்டது போதாமல், அப்பொழுதே தலையெடுத்துக்கொண்டிருந்த யௌவன இராஜீயத் தலைவர்களையும் வால்போல் அசட்டை செய்து, தமது வாக்கு வன்மையைக் காட்டி அவர்களை "இளம்பிள்ளைகள்" (The Boys) என்று இளக்காரமாகச் சுட்டினர். அதாவது அவர்கள் அநுபவமற்ற சிறுவர்கள் என்பது அவரது கருத்து. ஆனால், அவ்வி "இளம்பிள்ளைகள்" கோஷ்டியில் வால்போலையும் வெல்லத்தக்க அபாரவல்லமைவாய்ந்தவர் ஒருவர் இருந்தார். அவர் வில்லியம் பிட் (William Pitt) என்பவர். அவர் உன்னதமான கருத்துகள் உடையவர்; அருமையாகப் பிரசங்கம் புரியக் கூடியவர்; ஜனங்களது மனதை எளிதில் கவர்ந்துகொள்ளத்தக்க வசீகர சக்திவாய்ந்தவர்; உள்ளும் புறமும் ஒத்து உழைக்கும் இயல்பினர்; இலஞ்சத்தையும் மற்ற கிரமத்தவறான நடத்தைகளையும்வெறுப்பவர். அவரும் விக் கட்சியைச்சேர்ந்தவரே. மேலே குறிப்பிட்டபடி விக் கட்சியிலேயே ஒரு சாரார் பிரிந்து வால்போலை எதிர்த்ததன்றி, டோரிக்கட்சியும் அப்பொழுது மெதுவாகத் தலையெடுக்கத் தொடங்கியது. 1714-ல் ஹானோவர் அரசர் முடிசூடியபின் பார்லிமென்டில் 50, 60, டோரிகளே இருந்தனர். அவர்கள் ஜாகோபைட் கட்சியை ஆதரித்ததாக எண்ணி எல்லோரும் அவர்களை வெறுத்தனர். ஆனால் வால்போல் மந்திரியான காலத்

தில், டோரிக் கட்சியின் வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்த ஃபோலிங் ப்ரோக் பிரபுவே அதற்குப் புத்துயிரளித்தார். மூத்த போலியரசர் தோற்று ஓடியபிறகு, அவர் ஹானோவர் அரசருடன் சமாதானம் செய்துகொண்டு 1723-ல் இங்கிலண்டுக்கு வந்துசேர்ந்தார். வந்தவர் தமது கல்வித் திறனையும், சாமர்த்தியத்தையும் உபயோகித்து டோரிக் கட்சியாரைத் தட்டி எழுப்பி பலப்படுத்திவிட்டார். விக் கட்சியினர் அரசாது அதிகாரத்தைக் குறைத்துவிட்டனர் என்றும், அரசர் மீண்டும் பழைய உரிமைகளை வகிக்கவேண்டுமென்றும் அவர் எல்லோருக்கும் உபதேசம் செய்தார். இரண்டாவது ஜார்ஜ் அதற்கு செவிகொடுக்க வில்லையானாலும், அவரது புத்திரரும் இளவரசருமான ப்ரெடரிக் (Frederick) என்பவர் ஃபோலிங்ப்ரோக்கின் சிஷ்யரானார். இவ்வாறு வால்போலை எதிர்ப்பதற்கும் அவரைத் துன்புறுத்துவதற்கும் மூன்று கட்சியார் (இளவரசர் சேர்ந்த டோரிகள், இளம்பிள்ளைகள், "தேசாபிமானி விக்கள்) முயற்சி செய்து வந்தனர். அப்படியிருந்தும், வால்போல் பார்லிமெண்டில் பெரும்பாலோரது ஆதரவையும் அரசாது நட்பையும் பெற்று 1742 வரையில் தமது பதவியை வகித்து வந்தார். ஆனால் அதுவரையில் அவருக்கு சாதகமாயிருந்து வந்த காரோலைன் இராணி 1737ல் இறந்து போகவே, அது அவருக்குப் பெரிய நஷ்டமாகவும் இடராகவும் முடிந்தது.

(2) **சுங்கவரி திட்டம்: அன்னிய நாட்டு வியவகாரங்கள்: வால்போலின் வீழ்ச்சி:**—வால்போலுக்குப் பகைமையான கட்சியார் அவரது செய்கைகளைக் குறித்து அவதூறு பேசிக் குறை கூறுவதையே வேலையாகச் செய்து வந்தனர். 1733-ல் வால்போல் சுங்கவரி திட்டம் (Excise Scheme) ஒன்றைத் தயாரித்தார். ஏற்கெனவே நாட்டில் 'தென்கடல்க் குமிழி' என்ற சம்பவத்தால் தன நஷ்டமும், பொருளாதாரத் துறையில் குழப்பமும் ஏற்பட்டிருந்தமையால், அவர் சில சீர்திருத்தங்களைச் செய்து நாட்டின் வளப்பத்தைப் பெருக்க வேண்டுமென்று கருதினார். ஷை சுங்கவரி திட்டம் அவைகளில் ஒன்று. அதன்படி பின்வரும் மாறுதல் ஏற்படுவதாயிருந்தது. அன்னிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சாமான்களுக்கு இங்கிலண்டின் துறைமுகங்களில் கடற் சுங்க வரி

விதிக்கப்படுவது வழக்கம். புகையிலையும் சாராயமும் இறக்குமதி செய்யப்படும்பொழுதும் அதே மாதிரி இறக்குமதித் தீர்வை விதிக்கப்பட்டு வந்தது. வால்போல், அம்மாதிரி கப்பலிலிருந்து இறங்கியதும் துறைமுகங்களில் தீர்வை விதிக்காமல், ஷெசாமான்கள் நாட்டிற்குள் வந்தபின், அவைகள் விற்பனைக்கு எடுத்துக் கொள்ளப்படும் சமயத்தில், சுங்கவரி வசூல் செய்யவேண்டுமென்று சட்டம்இயற்ற முயற்சித்தார். அந்த திட்டத்தினால் அரசாங்கத்தாருக்கு அதிக வருமானம் கிடைத்திருக்கும். ஏனெனில் கடற்சுங்க வரி விதிப்பதில், சில சாமர்த்தியசாலிகள் வரி கொடாமல் ஏமாற்றிவிட இடமிருந்தது. கப்பல்கள் வந்து தங்கும் துறைமுகங்களில் இறக்குமதி வரி வசூலிப்பது வழக்கம். சில கப்பலோட்டிகள் துறைமுகங்களை விட்டு, கடலோரங்களில் மறைவான இடங்களுக்குச் சென்று அங்கு சாமான்களை இறக்கி, உள்நாட்டுக்கு அனுப்பி விடுவார்கள். அப்படிச் செய்வோரைக் கண்டுபிடிப்பது கூடாத காரியமாயிருந்தது. அதனால் அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய வரித்தொகை கிடைக்காமல் போய்க் கொண்டிருந்தது. வால்போல் ஆலோசனை செய்த முறையில், எல்லா சாமான்களும் கிடங்குகளிலிருந்து விற்பனைக்கு வெளியில்வரும்பொழுது அவைகளுக்குத் தீர்வை வசூலிக்கப்படும்; எவரும் வரி கொடுக்காமல் தப்புவது சாத்தியமில்லை. மேலும், அந்தப் புது முறையை அநுஷ்டித்தால், தேசத்தின் வியாபாரம் அதிகரிக்குமென்றும் வால்போல் நம்பினார். அதனால், ஜனங்களிடமிருந்து வேறு வகையில் அதிக வரி வசூல்செய்யாமலேயே தேசத்தின் அபிவிருத்தியை அதிகப்படுத்தலாம் என்றும் அவர் எண்ணி வந்தார். உண்மையில், அவரது திட்டத்தில் எவ்விதமான தவறும் இல்லை. ஆனால் அம்மாதிரி ஒவ்வொரு வியாபாரியின் கிடங்குகளிலிருந்தும் சாமான்கள் வெளிப்படும்பொழுது தீர்வை வசூலிப்பதென்பது பலருக்கு சம்மதியாயில்லை. ஏனெனில் வரி வசூல்செய்யும் உத்தியோகஸ்தர்கள் கடை கடையாகவும் வீடு வீடாகவும் நுழைந்து, வியாபாரிகளையும் பொதுமக்களையும் ஓயாது துன்புறுத்துவார்களென்றும், முதலில் புகையிலைக்கும் சாராயத்திற்கும் ஏற்படும் கட்டுப்பாடு பின்பு மற்ற சாமான்களுக்கும் உபயோகிக்கப்படும் என்றும், அதனால் இங்கிலீஷ்காரர் அரும்பாடுபட்டுப் பெற்றிருந்த

சுதந்திர வசதிகள் பாழாய் விடுமென்றும், அரசாங்கத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு அற்ப அதிகாரம் படைத்த வரி வசூல் சிப்பந்திகள் வீடுகளின் அமைதியைக் குலைத்து அமளி செய்வார்கள் எனவும் ஜனங்கள் அஞ்சினர். வால்போல் எதிர்பாராத அந்தப் பொதுஜன எதிர்ப்பைக் கண்டு தயங்கினர். அவர் தமது கட்சியின் பலத்தைக் கொண்டு பார்லிமென்டில் அந்த திட்டம் அங்கீசரிக்கப்படும் வண்ணம் ஏற்பாடு செய்திருக்கலாம்; ஆனல் அம்மாதிரி சட்டத்தை இயற்றி விட்டாலும், பொதுஜனங்கள் யுத்தத்திற்கும் தயாராய் விடுவார்கள் என்று அஞ்சி, தமது திட்டம் எவ்வளவு சிலாக்கியமாயிருந்தாலும், அதைக் காரியத்தில் நடத்துவது அபாயகரமென்று நம்பி தமது உத்தேசத்தை நிறுத்திக் கொண்டார். வால்போலின் பகைவர்கள் அவர் தோற்றுப் போனதாக எண்ணிக் களிகொண்டனர்.

1737-ல் அதாவது மேலே குறிக்கப்பட்ட தோல்விக்கு நான்கு வருஷங்களுக்குப் பின்—வால்போலுக்கு வேருெரு மும்முரமான எதிர்ப்பு ஏற்பட்டது. ஸ்காட்லன்டில் உள்ள எடின்பரோ (Edinburgh) நகரத்தில் அப்பொழுது ஒரு குழப்பம் உண்டாயிற்று. அந்த நகரத்தில் இருந்த சிப்பாய்த்தலைவன் போர்ட்டியஸ் (Porteous) என்பவன் நிரம்பவும் குரூரமாய் நடந்து வந்தமையால், அந்நகரத்து ஜனங்கள் சிப்பாய்களின் விடுதியைத் தாக்கி, போர்ட்டியஸ் என்பவனையும் கொன்று சாய்த்துவிட்டனர். அந்தக் கலகத்திற்கு தண்டனையாக வால்போல் அந்த நகரத்தின் பிரஜாசுதந்திரங்களைப் பிடுங்கி விட முயற்சித்தார். ஆனல் அம்மாதிரி ஒரு முக்கிய நகரத்தின் உரிமைகளைப் பிடுங்குவது அதிக்கிரமமான செய்கையென்று அவருடைய பகைவர்கள் கூக்குரலிட்டனர். பார்லிமென்டில் வால்போலுக்கு சிநேகமாயிருந்த ஸ்காட் அங்கத்தினரும் அவரைக் கைவிட்டுவிட்டனர். வால்போல் அப்பொழுது தமது முந்திய தீர்மானத்தை நழுவவிட்டு விரோதிகளுக்கு இணங்க வேண்டியதாயிற்று. கொல்லப்பட்ட தலைவனுன போர்ட்டியஸின் மனைவிக்கு உபகாரச் சம்பளம் வாங்கிக்கொடுப்பது கூட அவருக்குப் பிரயாசையாகி விட்டது.

வால்போல் அன்னிய நாடுகளுடன் சம்பந்தம் வைத்துக் கொண்ட வகையை இனி கவனிப்போம். முதலாவது ஜார்ஜின் காலத்திலேயே வால்போல் அநாவசியமாக அன்னியநாட்டு விவகாரங்களில் கலந்து கொள்வதை வெறுத்து வந்தார். விக் கட்சியினர் எப்பொழுதும் ஐரோப்பாவின் இராஜீயக் குழப்பங்களில் தலையிட்டுக் கொள்வதை ஆதரித்து வந்தனர். ஆனால் அவ்விஷயத்தில் மாத்திரம் வால்போல், டோரிகளின் முறையைப் பின்பற்றி, கூடிய வரையில் சமாதானத்தையே நிலைநிறுத்தி, சண்டைகளைக் குறைக்க முயன்று வந்தார். ஆனால் அவர் உத்தியோகம் வகித்த காலத்தில் ஐரோப்பாவில் அவசியம் போர் நேரிடும்போலத் தோன்றியது. யுட்ரெக்ட் உடன்படிக்கையினால் 1713-ல் ஐரோப்பாவில் ஒருவித தேச வரையறுப்பும் அரசியல் திட்டமும் ஏற்பட்டன. எந்த அரசரும் அந்த உடன்படிக்கையை மீறாமல் நடந்து கொண்டிருந்தால் போர் நேரிட்டிருக்காது. ஆனால் ஸ்பெயின் தேசத்தரசரும், ஆஸ்ட்ரியாவின் சக்கரவர்த்தியும் யுட்ரெக்ட் உடன்படிக்கையின்படி தமக்குக் கிடைத்த இலாபத்துடன் திருப்தியடையாமல் மேலும் இராஜ்ஜியத்தைப் பெருக்க ஆசைகொண்டனர். அவ்விருவரும் தமக்குள்ளிருந்த பழைய பகைமையையும் மறந்து, ஒன்று சேர்ந்துகொண்டு, இங்கிலண்டு, ஹாலண்டு ஆகிய இரு தேசங்களையும் எதிர்க்கத் தயாராயினர். அதனால் இங்கிலண்டும் ஹாலண்டும் ப்ரான்ஸுடன் சேர்ந்துகொண்டு, ஆஸ்ட்ரியாவையும் ஸ்பெயினையும் எதிர்க்கலாயின. அதாவது ஐரோப்பாவின் முக்கிய அரசுகள் இரண்டு கட்சிகளாய்ப் பிரிந்து போர் புரிய முனைந்து நின்றன. 1727-ல் ஸ்பெயினும், இங்கிலண்டும் ஒரு சிறிய போரை நடத்தின. நற்காலமாக, இரண்டு மூன்று வருஷ காலத்திற்குள் சமாதானம் ஏற்பட்டுவிட்டது. இவ்வாறு சாமர்த்தியமாக ஒரு பெரிய ஐரோப்பிய யுத்தம் நடக்காமல் தடுத்ததுபற்றி வால்போலுக்குப் பெருமைப்பாடு ஏற்பட்டது.

ஆனால் வால்போல் எவ்வளவுதான் யுத்தத்தை வெறுத்தாலும், ஐரோப்பிய அரசுகள் சதாகாலமும் யுத்தத்திலேயே நாட்டமாயிருந்தன. 1738-ல் ஸ்பெயினும், ஆஸ்ட்ரியாவும் ஒன்றோடொன்று போராடின. வால்போல் அதில் கலந்து கொள்ளவில்லை. "இந்த

வருஷத்தில் ஐரோப்பாவில் பதினாயிரம் ஆள்கள் கொல்லப்பட்டுப் போயினர்; ஆனால் அவர்களுள் இங்கிலீஷ்காரன் ஒருவன் கூட இல்லை" என்று அவர் பெருமை பாராட்டிக் கூறிக்கொண்டார். இம்மாதிரி அவர் சமாதான முறையை அநுஷ்டித்து யுத்தத்தில் கலந்துகொள்ளாமல் இருந்தது நாட்டிற்கு நன்மையானதே யானாலும், அவரது பகைவர்கள் குறை கூறலாயினர். ஏனெனில், அவருடைய சமாதான ஆசை மிதமிஞ்சியதாகி விட்டது என்றும், ஸ்பெயின் தேசம் மறுபடி தலையெடுத்து அதிகார வளர்ச்சியடைந்து, இங்கிலண்டைத் தாக்கும் என்றும் பலர் நினைத்தனர். 1738-ல் ஐரோப்பாவில் நடந்த யுத்தத்தின்படி ஸ்பெயின் தேசம் சிறிதளவு அதிகமான அதிகாரம் பெற்றிருந்ததென்பது உண்மையே. அதுபற்றி, இங்கிலீஷ்காரருக்கும் ஸ்பெயின் தேசத்தாருக்கும் எலிஸபெத் இராணியின் காலத்தில் இருந்ததைப் போன்ற பகைமை ஏற்பட்டது. அமெரிக்காவுடன் வியாபாரம் செய்ததில் இருவருக்கும் போட்டி கிளம்பியது. அமெரிக்காவில் ஸ்பெயினுக்குச் சொந்தமாயிருந்த பிரதேசங்களில் வியாபாரம் செய்த இங்கிலீஷ் மாலுமிகள் பலவிதங்களில் துறைத்தன அதிகாரிகளை ஏமாற்றி வந்தனர்; தீர்வை செலுத்தாமலும், பொய் சொல்லியும் அவர்கள் அக்கிரமமாக இலாபமடைந்து வந்தனர். அதனால் ஸ்பெயின் தேசத்து அதிகாரிகள் இங்கிலீஷ் கப்பல்களை சோதித்துப் பார்க்கவேண்டுமென்றனர். அவ்வாறு சோதனை நடத்துவதில், அவ்வதிகாரிகள் மிகவும் குரூரமாகவும் கொடுமையாகவும் நடந்துகொள்வதாக இங்கிலீஷ் மாலுமிகளும் வியாபாரிகளும் முறையிட்டுக்கொண்டனர். 1738-ல் ஜெங்கின்ஸ் (Jenkins) என்பவர் பார்லிமென்ட் சபையின்முன் வந்து சிலவருஷங்களுக்குமுன் ஸ்பெயின் தேசத்து அதிகாரி ஒருவர் தமது கப்பலைப் பரிசோதனை செய்தபொழுது, தமது காதை அறுத்துவிட்டதாகக் கூறி, ஒரு சீசாவில் போட்டு வைத்திருந்த அறுபட்டதமது காதையும் காட்டினார். அவருடைய பரிதாபகரமான வரலாற்றைக் கேட்ட இங்கிலீஷ்காரரனைவரும் வால்போலின் சமாதான நாட்டத்தைக் கண்டித்து, தேசத்தின் மானத்தைக் காப்பதற்காகவாவது அவர் ஸ்பெயினுடன் சண்டையிடுவது அவசியமென்று பலமாகக் கூக்குரலிட்டனர். வால்

போலின் நிலைமை திண்டாட்டமாகி விட்டது. ஒன்று, அவர் யுத்த முழக்கம் செய்யவேண்டும்,அல்லது, வேலையை இராஜீநாமாச்செய்ய வேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டது. வேறு வழியில்லாததுபற்றி அவர் 1739-ல் ஸ்பெயின் தேசத்துடன் யுத்தம் நடத்தத் தொடங்கினார். அது "ஜெங்கின்ஸ் காதுச் சண்டை" (Jenkin's Ear War) என்று குறிக்கப்படுகிறது. வால்போல், "இன்று இவர்கள் ஜயபேரி முழக்கிக்கொண்டு செல்கின்றனர்; சீக்கிரத்தில் கையைப் பிசைந்து கொண்டு திரும்புவார்கள்" என்று கூறினார். அவர் அந்தச் சண்டையில் ஊக்கம் கொள்ளாமல் மிகவும் அசட்டையாக இருந்துவந்தமையால் அவருடைய பகைவர்கள் நியாயமாகவே குறைகூறி அவரைக் கண்டித்து வந்தனர்.

1740-ல் ஐரோப்பாவில் மறுபடி இன்னொரு பெரியயுத்தம் ஆரம்பமாயிற்று. அதன் விவரம் அடியில் வருமாறு. வால்போல் அதிலும் கலந்துகொள்ள மறுத்துவிட்டார். அவர் அவ்வாறு நடந்துகொண்டது பலருக்கு அவமானகரமாகத் தோன்றியது. ஏனெனில், மிக சமீபத்தில் உள்ள ஐரோப்பாவில் நடக்கும் வியவகாரங்களில் தாங்கள் ஊக்கமும் அக்கரையும காட்டாமல் இருந்தது தேசத்திற்கு மானக் குறைவானதென எண்ணினார்கள். அதனால் வால்போலுக்கு அபவாதம் அதிகமாக உண்டாயிற்று. அவரது பகைவர்களின் பலமும் அதிகரித்தது. அவருடைய சமாதான முறையை ஆதரிக்காத அரசரும் அவருக்கு எதிரியாகத் திரும்பினார். வால்போலுக்கு நிரம்பவும் ஆதரவாயிருந்துவந்த கா/2ரோலைன் இராணி ஏற்கெனவே இறந்து விட்டமையால் அவருக்கிருந்துவந்த முக்கியமான பக்கபலம் போய் விட்டது.

1742-ல் அவர் தமது மந்திரி வேலையை விட்டு விலகிக்கொள்ளும்படி அவரை வற்புறுத்தினார்கள். அரசர் அவருக்குப் பிரபு ஸ்தானம் வழங்கி, ஆக்ஸ்போர்டு (Oxford) பிரபு ஆக்கினார். 1745-ல் வால்போல் இறந்துபோனார். வால்போல் இருபது வருஷ காலத்திற்கு அதிகமாகவே முதல்மந்திரி பதவியை வகித்துச் செய்த காரியங்களை இதுவரை விரிவாக எடுத்துக் கூறினோம். அவரிடம் எவ்விதமான குற்றமிருந்தாலும், அவர் இங்கிலண்டிற்கு வியாபாரப் பெருக்கையும் தனலாபத்தையும் உண்டாக்கியதன்றி, அநாவசிய

மான யுத்தங்களால் பணச்செலவும் உயிர்ச்சேதமும் நேரிடாதபடி யும் கவனித்துவந்தார். பொதுவாக, அவர் உள்நாட்டு இராஜீய நிர்வா கத்தில் அமைதியையே நிலைநாட்ட உழைத்துவந்தார். ஹா/2னோ வர் வம்சத்தரசர் புதிதாகப் பட்டத்திற்கு வந்திருந்ததுபற்றியும் நாட்டில் ஒரு சாரார் அவர்களுக்குப் பகைவராக இருந்ததைக் கருதி யும், அநாவசியமான பெரிய மாறுதல்களைச் செய்வது அபாயகர மென்று வால்போல் எண்ணினர். எல்லோரையும் நயமாக வசியப் படுத்திக்கொண்டு போவதே சிறந்ததென்பது அவருடைய கருத்து. அவருடைய முறையினால் தேசத்திற்கு நன்மையே விளைந்தது. அவர் நிலவரியைக் குறைத்து, பல தனவந்தருடைய நம்பிக்கைக் குப் பாத்திரரானர். மத சம்பந்தமான பகைமைகளைப் பாராட்டாம லும், அவைகளை துரைத்தன நிர்வாகத்தில் முக்கிய அம்சமாக ஆக் கிக்கொள்ளாமலும், அவர் வேலைசெய்து வந்தார்; தேசீயக்கடனின் மொத்தத்தொகையைக் குறைத்தார். அவரது காலத்தில் தேச நலத்திற்கு அநுகூலவான சம்பவங்கள் பல வழிகளில் நேரிட்டன. அவர் பார்லிமென்டுடனும் கா/2பினட் சபையுடனும் நடந்து கொண்டவிதம் அரசியல் முறையின் அபிவிருத்திக்கு முக்கிய சாதனமாயிருந்தது. அவரது காலத்தில், காமன்ஸ் சபை இப் பொழுது அநுபவித்துவரும் உயர்வு நிலைமையை அடைந்துவிட்டது. கா/2பினட் சபையும் சிறுகச்சிறுக தற்கால அமைப்பையும் உருவத்தையும் பெற்றது. மந்திரிகள் எல்லோரும் ஒரேவித மான அபிப்பிராயத்தோடு நடந்துகொள்ள வேண்டுமென்றும், எல் லோரும் ஒரே மொத்தமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும், முதல் மந்திரியே எல்லோருக்கும் தலைமை வகிக்கவேண்டுமென் றும் இக்காலத்தில் கருதப்படும் அவசியமான அம்சங்கள் அவரது காலத்தில் முதன்முதலாகத் தொடக்கமாயின; வால்போல் தமது ஆட்சியை நிலைநிறுத்த இலஞ்சம் கொடுப்பது முதலிய கிரமத் தவறான காரியங்களைச் செய்தாரானலும், அவ்வாறு செய்தது சுய நலத்தினாலல்ல; தமது கட்சியின் பலத்தை அதிகரித்துக்கொண்டு அதன்மூலம் நாட்டின் க்ஷேமத்தை விருத்தி செய்யவே அவர் முயற் சித்தார். இங்கிலண்டைப் பரிபாலித்துவந்த பிரதம மந்திரிகளுள் வால்போல் முதல் பிரதம மந்திரி என்ற கௌரவம் ஒன்றுமாத்திர

மன்றி, அவரது செயல்களும், அவர் அநுஷ்டித்த முறைகளும் பொதுவாக அவருக்குக் கீர்த்தியை உண்டாக்கின.

(3) **ஆஸ்ட்ரியர் வார்சுரிமைப்போர்: ஜாகோபைட் கிளர்ச்சி: மந்திரிசபைகள்;**—வால்போல் தமது பதவியிலிருந்து விலகிக் கொண்டவுடன் இராஜீய முறையில் பெரிய மாறுதல் எதுவும் ஏற்படவில்லை. வால்போலை எதிர்த்து வந்த பல கட்சிக்காரர்களும், அவரை எதிர்த்ததில் மாத்திரம் ஒற்றுமையாக நடந்து கொண்டனரேயன்றி மற்ற விஷயங்களில் அது போல ஒற்றுமையை வகிக்கவில்லை. வால்போல் விலகிக் கொண்ட பிறகும், விக் கட்சியினரே அதிகாரம் வகித்து வந்தனர். டோரிகளுக்கோ, அல்லது, 'இளம்பிள்ளைகள்' என்று குறிக்கப்பட்ட கட்சியினருக்கோ மந்திரி பதவிகள் கிடைக்கவில்லை. ஜார்ஜ் அரசர் வால்போலின் பதவிக்கு லார்ட் வில்மிங்டன் (Lort Wilmington) என்பவரை நியமித்தார். அவர் எவ்விதத்திலும் திறமையற்றவர். அவர் 1743-ல் மரணமடைந்த பின், வால்போலின் சிஷ்யரும் நண்பருமான ஹென்றி பெல்ஹாம் (Henry Pelham) என்பவரே முதல் மந்திரியானார் லார்ட் கார்ட்டரேட் (Lord Carteret) என்பவர் அரசாங்கக் காரியதரிசியாக இருந்து சகலமான நிர்வாகங்களையும் கவனித்து வந்தார். அவர் அரசரது விசேஷ அன்பிற்குப் பாத்திரராயிருந்தார். ஆனால் ஊக்கத்துடன் வேலை செய்யாத காரணத்தால் அவர் அதிக காலம் தமது உத்தியோகத்தை வகித்திருக்கவில்லை. 1744-ல் அவர் வேலையைவிட்டு விலகிக்கொண்டார். அதன்பிறகு பெல்ஹாம், ஏறக்குறைய பத்து வருஷ காலம் (1744 முதல் 1754 வரையில்) நிர்வாகம் முழுதையும் கவனித்து வந்தார். அவர் வால்போலின் கோரணைகளைப் பின்பற்றியே நடந்து வந்தார்; ஆனாலும் அவரைப் போலத் தமக்கு பகைவர்களை உண்டாக்கிக் கொள்ளாமல் எல்லோரையும் சமாதானப்படுத்திக் கொண்டே ஆட்சி புரிந்தார். 1754 வரையில் மந்திரி சபையில் விசேஷமான மாறுதல் எதுவும் ஏற்படவில்லை.

வால்போல் வேலையைவிட்டு நீங்கியதற்கு முன்னால், ஐரோப்பாவில் ஒரு பெரிய யுத்தம் நடந்ததென்று கூறினோமல்லவா? அது ஆஸ்ட்ரியா வார்சுரிமைப் போர் (War of the Austrian

Succession) எனப்படும். முன்பு ஆ/2ன் இராணியின் காலத்தில் ஸ்பெயின் இராஜ்ஜிய வார்சுரிமைப் போர் ஒன்று நடந்ததல்லவா? அதாவது, ஸ்பெயின் தேசத்து வார்சுரிமை சம்பந்தமாகக் குழப்பமும் யுத்தமும் நடந்ததைப் போலவே, இப்பொழுது ஆஸ்ட்ரியாவிலும் வார்சுரிமை சம்பந்தமாக யுத்தம் நடந்தது. அந்த யுத்தம் 1740 முதல் 1748 வரையில் நீடித்திருந்தது. ஆஸ்ட்ரியாவின் சக்கரவர்த்தி ஆறவது ச்சார்லஸ் என்பவர் 1740-ல் மரணமடைந்தார். அவருக்குப் புத்திர சந்தானம் இல்லை. ஆஸ்ட்ரியா இராஜ்ஜியம் விஸ்தீரணத்தில் மிகப் பெரியது. இறந்துபோன ச்சார்லஸ் சக்கரவர்த்தி தமக்குப் பிறகு தமது இராஜ்ஜியம் சிதருண்டு வேறொருவரது வசத்திற்குச் செல்லக்கூடாதென்று கருதி, தமது மூத்தமகள் மேரியா தெரிஸாவுக்குப் பட்டம் கிடைக்குமாறு வழிசெய்தார். அவர் அது பற்றிஒரு விசேஷசாஸனம்(Pragmatic Sanction)தயாரித்து அதில் தமது புதல்வியே தமக்குப்பிறகு வார்சுதாரிஎன்று கண்டு அந்தப் பத்திரத்தை ஐரோப்பாவில் உள்ள முக்கிய அரசுகள் யாவும் அங்கீகரிக்குமாறு செய்திருந்தார். அதாவது, அந்தப் பத்திரத்தில் கையெழுத்திட்ட அரசுகள் மேரியா தெரிஸாவையே ஆஸ்ட்ரியாதேசச் சக்கரவர்த்தினியாக ஒப்புக்கொள்ளவேண்டும். ஆனால் ச்சார்லஸ் சக்கரவர்த்தி மரணமடைந்தபின், அம்மாதிரி உறுதிசெய்து கொடுத்திருந்த சில அரசுகள் அதை மீறி நடக்கவாரம்பித்தன. உதாரணமாக, ஜெர்மனி தேசத்தில் உள்ள பிரஷ்யா என்ற இராஜ்ஜியத்தின் அரசர் மகா ப்2ரடெரிக் (Frederick the Great) என்பவர் சேனைகளின் பலம் அதிகமாயுடையவராதலால் மேற்படி கட்டுப்பாட்டை மீறி ஆஸ்ட்ரியா இராஜ்ஜியத்தைச் சேர்ந்த ஸைலீஷியா (Silesia) என்ற மாகாணத்தைத் தாக்கச் சென்றார். மற்ற சில அரசுகளும் அவரைப் பின்பற்றி கலகத்தில் இறங்கின. மேரியா தெரிஸா பெண்பாலாதலால் அவள் பெரிதும் தலக்கமடைந்தாள். நான்கு புறங்களிலும் பலிஷ்டர்களான பகைவர்கள் தாக்கியசமயத்தில், அவளுடைய குடிமக்களும் அவளுக்கு உதவ முன்வரசெய்யவில்லை.

இங்கிலீஷ் அரசாங்கத்தாரும் மேரியா தெரிஸாவே சக்கரவர்த்தினியென்று அங்கீகரித்துக் கொண்டிருந்ததால், அவர்கள் நியாயமாக அவளுடைய கட்சியில் சேர்ந்து ஸைலீஷியாவை அவ

ளுக்கு மீட்டுக்கொடுக்கவேண்டிய தவசியமாயிற்று. போரில்-மிக விருப்பம்கொண்ட இரண்டாவது ஜார்ஜ் அரசர் 1743-ல் பெரிய சேனையொன்றைத் திரட்டிக்கொண்டு ஐரோப்பாவுக்குச் சென்று ப்2ரெஞ்சுக்காரரது சேனையை டெட்டிஞ்சன் (Dettingen) என்ற இடத்தில் தோற்கடித்தார். அந்தப் போர் ஒருவிதத்தில் முக்கியமானது. அதாவது, இங்கிலீஷ் அரசர் தாமே நேரில் யுத்தத்தில் தலைமைவகித்துப் போர் நடாத்தியது அதுதான் கடைசிமுறை. ஜார்ஜ் அரசர் அடைந்த வெற்றியினால், ப்2ரான்ஸுக்கும் இங்கிலண்டுக்கும் மீண்டும் பகைமை ஏற்பட்டது. ஆனாலும் ஸைலீஷியா என்ற பிரதேசத்தை மறுபடி ஆஸ்ட்ரியாவுக்கு மீட்டுக்கொடுக்க அவர்களால் இயலவில்லை. அது பிரஷ்யா அரசருக்கே போய்ச் சேர்ந்தது. அதன்பிறகு மேரியா தெரிஸா பட்டத்திற்கு வருவது எளிதாயிற்று. அவள் சக்கரவர்த்தினியானவுடன் யுத்தம் நின்று விடவில்லை. ஏனெனில் அவளது ஆட்சியிலும் அவளுக்கு எதிரிடையாகவும் போர்புரிந்த அரசுகள் தமக்குள் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்திச் சென்றன. 1745-ல் பான்டினாய் (Fontenoy) என்ற இடத்தில் இங்கிலீஷ் சேனை தோல்வியுற்றது.

ஆஸ்ட்ரியா வார்சுரிமைப் போர் 1748-ல் எய்-லா-ஷா/2பல் (Aix- La- chapelle) என்ற இடத்தில் ஏற்பட்ட சமாதானத்துடன் முடிவடைந்தது. அதன்படி இங்கிலண்டும் ப்2ரான்ஸும் யுத்தத்தில் பிடித்துக்கொண்ட பிரதேசங்களை ஒருவருக்கொருவர் திருப்பிக் கொடுத்துவிட்டனர். மேரியா தெரிஸா ஸைலீஷியா என்ற மாகாணத்தை பிரஷ்யாவுக்கே அளித்துவிட வேண்டியதாயிற்று. அதனால் அவள் இங்கிலீஷ்காரர்கள் மீது கோபம் கொண்டாள். ஸைலீஷியாவை விட்டுக் கொடுப்பதில் அவளுக்கு சிறிதும் மனமில்லை. ஆகவே, எய்-லா ஷா/2பல் உடன்படிக்கையானது நிரந்தரமாக யுத்தத்தை நிறுத்தி விடவில்லை. அதன்பிறகு ஏழு எட்டு வருஷ காலத்தில் மறுபடியும் யுத்தம் நடக்க வேண்டியதாயிற்று.

ஆஸ்ட்ரியா வார்சுப்போர் நடந்து கொண்டிருக்கையில், இங்கிலண்டில் ஒருபெரிய ஜா/2கோபைட் கிளர்ச்சிஏற்பட்டது. 1715ல் முதலாவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தபின் இரண்டாவது ஜேம்

வின் புத்திரரான மூத்த போலி அரசர் இராஜ்ஜியத்தைப் பெறுவ தற்கு சூழ்ச்சிசெய்து தோற்றுப்போனதை முன்பு குறிப்பிட் டோம். 1745-ல் அதுபோலவே இன்னொரு சம்பவம் நிகழ்ந்தது. மூத்த போலி அரசருக்கு அப்பொழுது வயதாய் விட்டமை யால் அவரது புத்திரர் ச்சார்லஸ் எட்வர்ட் என்பவர் (இளைய போலி அரசர் Young Pretender) தந்தையின் ஸ்தா னத்தில் அமர்ந்து, தாமே ஸ்டூவர்ட் அரசர்களுடைய நியாயமான வார்சுதாரர் என்று கூறிக்கொண்டு சிம்மாதானத்தை அடைய முயற்சிசெய்து வந்தார். அப்பொழுது ப்2ரான்ஸ் தேசத்திற்கும் இங்கிலண்டிற்கும் பகைமை ஏற்பட்டிருந்தமையால், ப்ரெஞ் சுக்காரரும் இளைய போலியரசருக்கு உதவ முன் வந்தார். இளைய போலியரசருக்கு இருபத்தைந்து வயதே ஆயிருந்தது. அவர் தமது தந்தையைக் காட்டிலும் அதிக சாமர்த்தியமாகவே நடந்துகொள்ளக் கூடியவரானாலும், முதலிலிருந்தே அவருக்கு அபகேடுகள் நேர்ந்தன. அவருக்கு உதவியாகச் சேகரித்து வைக்கப்பட்டிருந்த கப்பற்படை 1744-ல் புயல்காற்றின் வசப் பட்டு சின்னபின்னமாயிற்று. பிறகு ப்2ரெஞ்சுக்காரரும் அவருக்கு உதவி புரிய உற்சாகம் கொள்ளவில்லை. இளைய போலியரசரோ நிரம்பவும் அவசரப்பட்டு, இரண்டு கப்பல்களை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு, எழு நண்பர்களுடன் 1745-ல் ஸ்காட் லண்டின் வடக்கேயுள்ள மலைப்பிரதேசத்தில் வந்திறங்கினார். சில மலைநாட்டு ஜாதியார் அவருடன் சேர்ந்து கொண்டனர். இளைய போலியரசர் துணிந்து தெற்கு நோக்கிவந்து, தாமே அரசரெனக் கூறிக்கொண்டதன்றி, ப்ரேஸ்டன் பா2ன்ஸ் (Preston Pans) என்ற இடத்தில் இங்கிலீஷ் சேனையை எதிர்த் துத் தோற்கடித்தார். 1715-ல் கிளர்ச்சிசெய்த மூத்த போலியரச ரைக்காட்டிலும் இளையவர் அதிகத் திறமையாகவே நடந்துகொண் டார். அவர் இராஜதர்பார் கூட்டி, இரண்டு மாதகாலம் அரசியல் நடாத்தினார். ஆனால் ஸ்காட்லண்டிலும் கூட அவருக்குப் பூர்த்தி யான ஆதரவு கிடைக்கவில்லை. ஆகவே, வீணாகக் காத்திருப்பதில் பய னில்லை என்பதைக் கண்ட போலியரசர் தமது தைரியபலத்தையே கொண்டு இங்கிலண்டின்மீது படையெடுத்து வந்தார். அவரது

சகாக்களிற் பலர் அது பெரிய மூடச்செய்கை என்று கூறினாரா லும், இங்கிலண்டில் இருந்த டோரிகளில் எவரும் அவருடன் சேர்ந்துகொள்ளவில்லை. எனவே, லண்டன் நகரத்திற்கு 127 மைல் தூரத்தில் உள்ள டேர்பி (Derby) நகரம்வரை வந்துவிட்டு இளைய போலியரசர் வந்த வழியே சென்றார். 1746-ல் பால்கர்க் (Falkirk) என்ற இடத்தில் அவர் மறுபடியும் போர்புரிந்து சிறி தளவு வெற்றியடைந்தார். ஆனால், இங்கிலீஷ் அரசருடைய இரண்டாவது பிள்ளையான கம்பர்லன்ட் (Cumberland) என் பவர் அவரைத் துரத்திச்சென்று கல்லோடன்மூர் (Calloden Moor) என்ற இடத்தில் அவரது சேனைகளைத் தோற்கடித்துவிட் டார். அங்கு அவர் பகைவர்களை மிகவும் குரூரமாகத் தண்டித்தமை யால், அவரை 'கசாப்புக்காரன்' (Butcher) என்று குறிப்பது வழக் கம். அவர் இளைய போலியரசரைப் பிடித்துத் தமதுகையில் ஒப்பு விப்போருக்கு பெருத்த இனும் அளிப்பதாக விளம்பரப்படுத்தினு ராஞலும், அவர் தப்பி ஓடிப்போய்விட்டார். அதன்பிறகு அவர் தளர்ந்து குடிகாரராய் மாறி சீர்கெட்டு அழிந்துபோனூர். ஸ்டுவேர்ட் வம்சத்தின் சந்ததியாரில் மிகுதியிருந்த இரண்டொருவர் இருந்த இடம் தெரியாதபடி மறைந்துபோயினர். 1715-ல் நடந்த கலகத் திற்கு சுருக்கமாகப் 'பதினைந்து' (The Fifteen) என்று பெய ரிட்டதுபோல, 1745-ல் நடந்த சம்பவம் 'நாற்பத்தைந்து' (The Forty five) என்று குறிக்கப்படுகிறது. அதன்பிறகு ஹானோவர் வம்சத்தரசர்களுக்கு எவ்வித எதிர்ப்பும் உண்டாகவில்லை. துர்ப்பாக் கியத்திற்கே ஆள்களாயிருந்த ஸ்டுவேர்ட் அரசவம்சம் அடியோடு பூண் டற்றுப் போய்விட்டது. இளைய போலியரசரைத் துரத்தியவுடன் இங்கிலீஷ் அரசாங்கத்தார் அதோடு நிற்காமல், அவருக்கு உதவி புரிந்த மலைநாட்டு ஜாதியாரைப் பிடித்து நிரம்பவும் கடுமையாக தண்டித்தனர்; மலைநாட்டு ஜாதியார் ஆயுதங்கள் வைத்துக்கொள் ளக் கூடாதெனவும் தடுத்துவிட்டனர். தங்களது தேசிய ஆடை களையும் அவர்கள் தவிர்க்கவேண்டியதாயிற்று. கலகத்தில் சேர்ந்து கொண்டவர்களில் முக்கியமானவர் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்ட னர். மலைநாட்டு ஜாதியாரை அடக்கவும் நல்வழிப்படுத்தவும் இராணுவ ஸ்தலங்களும், பாடசாலைகளும் ஸ்தாபிக்கப்பட்டன. இவ்

வித ஏற்பாடுகளால் சில ஆண்டுகள் கழிந்தபின்பு மலைநாட்டினர் தமது முரட்டுத்தன்மையை விலக்கி அமைதியாக நடக்கும் பிரஜைகளாய் மாறிப்போயினர்.

**(4) மந்திரி சபைகள்: ஏழுவருஷ யுத்தம்: பிரதம மந்திரி பிட்:** 1754 வரையில் பெல்ஹாம், பிரதம மந்திரியாக இருந்து துரைத்தனம் நடாத்திவந்தார். அவரது காலத்தில் சமாதானம் நிலைத்து நின்றதனால் பல முக்கியமான சீர்திருத்தங்கள் நிறைவேற, அவைகளால் தேசத்திற்கு நன்மை ஏற்பட்டது. 1754-ல் பெல்ஹாம் இறந்தவுடன் இரண்டாவது ஜார்ஜ் அரசர் "இனி எனக்கு சமாதானமோ அமைதியோ ஏற்படாது" என்று கூறினாராம். அது உண்மையாகவே முடிந்தது. பெல்ஹாமின் காலத்திற்குப் பின்னர் உள்நாட்டுச் சச்சரவுகளும் வெளிநாட்டுப் போர்களும் அரசருக்கு நிரம்பவும் துன்பகரமாக முடிந்தன. பெல்ஹாமின் ஸ்தானத்தை வகிப்பதற்குத் தகுதியானவர் எவரும் அகப்படவில்லை. அவருடைய சகோதரரான நியூகாஸில் (Newcastle) பிரபு என்பவர் பிரதம மந்திரியின் பதவியை ஏற்றுக்கொண்டார்; ஆனால் அவர் உண்மையான திறமைவாய்ந்தவரல்லர்; தாமே சகலமான அதிகாரத்தையும் வகிக்கவேண்டுமென்ற பேராசை கொண்டவராதலால், தம்முடன் உழைத்த மந்திரிகளுக்கு சிறிதளவு அதிகாரமோ சுதந்திரமோ கொடுக்க அவர் இணங்கவில்லை. ஆகவே நிர்வாக அநுபவம் வாய்ந்த பிரமுகர்கள் எவரும் அவருடன் மந்திரிகளாயிருக்க முன்வரவில்லை. கடைசியாக, அவர் பல மந்திரிகளிடம் அதிருப்திகொண்டு ஹென்றி பாக்ஸ் (Henry Fox) என்பவருக்கு முக்கியமான அதிகாரத்தைப் பகிர்ந்துகொடுத்தார். பாக்ஸ் உண்மையிலேயே நிர்வாகத்திறமை உடையவர்; காமன்ஸ் சபையில் பிரசங்கம்புரிவதில் அவரே பெயர்பெற்றிருந்தார்; கட்சித்தலைமை வகிப்பதில் சாமர்த்தியசாலி; ஆனால் அவர் சுயநல நாட்டம் மிகுதியாயுடையவர். அதுபற்றி, அறநெறி தவறி நடப்பவர்; எனவே, அவர் ஜனங்களுடைய அவதூறுக்கு சீக்கிரத்தில் ஆளாய்விட்டார். ஆனால், பாக்ஸ், தமது தலைவரான நியூகாஸில் பிரபுவுக்குக் கீழ்ப்பட்டு நடந்து ஏராளமான சொத்துகள் சேர்த்துக்கொண்டார்.

முன்னர் வால்போல் மந்திரி பதவி வகித்த காலத்தில் அவரை எதிர்த்தவர்களுள் "இளம்பிள்ளை"க் கட்சித் தலைவரான வில்லியம் பிட் என்பவரைப் பற்றிக் குறிப்பிட்டோம். அந்த வில்லியம் பிட் 1746 முதல் 1754 வரையில் பெல்ஹாமின் மந்திரி சபையில் ஒரு ஸ்தானம் வகித்து வந்தார். அவர் நியூ/2காஸில் பிரபுவுடன் சச்சர விட்டு மந்திரி பதவியிலிருந்து விலகிக்கொண்டார். அதன்பிறகு, முன்னர் வால்போலை எதிர்த்துவந்ததைப் போலவே, அவர் நியூ கா/2ஸில் பிரபுவையும் எதிர்க்கலானார். வால்போலுக்கு அடுத்தாற்போல வில்லியம் பிட் என்பவரே மந்திரிகளுள் முக்கியமானவர்; ஆதலால் அவரது மேம்பாட்டிற்குக் காரணமாயிருந்த குணங்களை நாம் தெரிந்துகொள்வது அவசியமானது. பிட் மிகவும் வாக்கு வன்மையுடையவர். அவரது சகாக்களான மற்ற இராஜீயத் தலைவர்களுக்கும் அவருக்கும் பல முக்கியமான வேறுபாடுகள் இருந்ததனாலேயே அவர் சிறந்து விளங்கினார். வால்போல் இராஜீய விஷயங்களில் அறநெறி தவறி நடந்ததைக் கண்டித்து காமன்ஸ் சபையில் பல தடவைகளில் பிரசங்கங்கள் புரிந்து, ஜனங்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றிருந்தார். வில்லியம் பிட் உயர்ந்த பிரபுக்களது வம்சத்தில் ஜனித்தவரல்லர் ; அரசாங்க நிர்வாகத்தில் கலந்துகொள்வதற்கு அக்காலத்தில் மிகவும் அநுகூலமாயிருந்த உயர்குலப் பிறவி என்ற ஒரு முக்கிய அம்சம் அவருக்கு இல்லையானாலும், அவரது மேலான நற்குண நன்னடத்தைகளும் அறநெறியிலிருந்து வழுவாமல் நடக்கும் தன்மையும் பெரும்பாலோரை வசீகரப்படுத்தின. அவரது காலத்தில் மற்ற இராஜீயத் தலைவர்கள், பதவிக்காகவும், பொருளுக்காகவும், சுயநலத்திற்காகவும், உயர்ந்த இலக்ஷியங்களைக் கைவிட்டு இழிவாக நடந்துவந்தனராதலால், பிட் உத்தமசீலராக இருந்தது பலருக்கு அவரிடம் பயபக்தி ஏற்படும்படி செய்தது. ஆகவே, பார்லிமெண்டில் ஸ்தானம் வகித்த சுயநலவாதிகள் அவரை இளக்காரப்படுத்தி வந்தனரானாலும், பொதுமக்கள் அவரைப் போற்றலாயினர்.

மேற்கூறிய காரணங்களால், நியூகா/2ஸில் பிரபுவின் மந்திரி சபையிலிருந்து பிட் விலகிக்கொண்டது அந்த மந்திரி சபைக்கே ஒரு களங்கம்போல ஆயிற்று. உள்நாட்டு வியவகாரங்களையும் வெளி

நாட்டு சச்சரவுகளையும் சமயோசிதமாக நிர்வகிக்கும் திறனற்ற மந்திரிசபையும் 1756-ல் கலைந்துபோக வேண்டியதாயிற்று. அதன் பிறகு டேவன்ஷயர் பிரபு (Duke of Devonshire) என்பவர் மந்திரி சபையை அமைத்தார்; அதில் வில்லியம் பிட்டுக்கும் முக்கியமான ஸ்தானம் கிடைத்தது. ஆனால் மறுவருஷமே (1757-ல்) அந்த மந்திரிசபை கலைந்துபோக வேண்டியதாயிற்று. அப்பொழுது ஓர் ஐரோப்பிய யுத்தம் நடக்கும் நிலைமை ஏற்பட்டிருந்தமையால், உள்நாட்டில் குழப்பம் உண்டாகாதவாறு கவனித்துக்கொள்வது நிரம்பவும் அவசியமாயிருந்தது. ஆகவே, 1757-ல் பிட், நியூகா/2ஸில் ஆகிய இருவரும் தத்தம் மனஸ்தாபத்தை மறந்து, மந்திரிசபையைக் கூட்டி, அதிகாரங்களை சமமாகப் பிரித்துக்கொண்டனர். பார்லிமெண்ட் சம்பந்தமான வியவகாரங்களெல்லாம் நியூகா/2ஸிலின் வசமாயிற்று. வில்லியம்பிட் மேலே குறித்த யுத்தத்தை நடத்திச் செல்வதில் தமது முழுத்திறமையையும் கவனத்தையும் செலுத்தி, தமது தேசத்திற்குப் பெரிய வெற்றிகிடைக்கும்படி செய்தார்.

அந்த யுத்தத்திற்கு 'ஏழுவருஷ யுத்தம்' (Seven Years' War) என்று பெயர். ஏனெனில் 1756 முதல் 1763 வரையில் ஏழு வருஷகாலம் அது தொடர்ச்சியாக நடந்தது. இரண்டு காரணங்களினால் அந்த யுத்தம் நேர்ந்தது. அது எட்டுவருஷங்களுக்கு முன் முடிவடைந்திருந்த ஆஸ்ட்ரியவார்சுரிமைப்போரின் தொடர்ச்சியே. அந்த யுத்தத்தில் இங்கிலன்டுக்கும் ப்2ரான்ஸுக்குப் பகைமை ஏற்பட்டதல்லவா? அந்தப் பகைமை எய்லாஷா/2பல் உடன்படிக்கையோடு அற்றுப்போய் விடவில்லை. அதற்கு இருநூறு முன்னூறு வருஷகாலத்திற்கு முன் இங்கிலன்டுக்கும் ப்2ரான்ஸுக்கும் 'நூறுவருஷ யுத்தம்' ஒன்று தொடர்ச்சியாக நடந்தது தெரிந்த விஷயம். அதைப்போலவே 18-வது நூற்றாண்டிலும் இங்கிலன்டுக்கும் ப்2ரான்ஸுக்கும் நீண்டபகைமை ஏற்பட்டது. அதன் விவரம் பின்னால் விளங்கும். அதை 'இரண்டாவது நூறுவருஷ யுத்தம்' என்றுகூடக் கூறுவதுண்டு. அதற்குக் காரணம் இராஜ்ஜியத்தைப் பெருக்கும்ஆசையேயன்றி வேறல்ல. முன்பு நடந்த நூறுவருஷ யுத்தத்திற்குக் காரணம்,ப்2ரான்ஸ் தேசத்தை இங்கிலீஷ் அரசர்கள் ஆளுவதற்குச்செய்த முயற்சியே. இப்பொழுது கிழக்கே இந்தியா

விலும், மேற்கே அமெரிக்காவிலும் தம்தம் ஆட்சியை ஸ்தாபிக்க ப்2ரெஞ்சுக்காரரும் இங்கிலீஷ்காரரும் முயன்று வந்தமையால் இரு வருக்கும் முரண்பாடு ஏற்பட்டது. வியாபாரத்திலும், கடல் பிரயாண உரிமையிலும், குடியேற்ற நாடுகளைப் பிடித்துக்கொள்வதிலும் இரண்டு தேசத்தாருக்கும் போட்டி ஏற்பட்டது. அது போதாதென்று, ஐரோப்பாவின் இராஜீய நிலைமையும் யுத்தம் உண்டாவதற்குத் தகுதியாக இருந்துவந்தது. ஆதலால் 'ஏழுவருஷ யுத்தம்' என்பது ஐரோப்பாவில் நடந்ததன்றி, அதேகாலத்தில் அமெரிக்காவிலும் இந்தியாவிலும் நடந்தது. அந்த யுத்தம் நேரிடுவதைத் துரிதப்படுத்திய காரணங்களையும் நாம் ஆராய்வோம்.

16-வது நூற்றாண்டு முதற்கொண்டே இங்கிலீஷ்காரருடைய விசேஷ முயற்சியினால் அவர்களது தேசம் வியாபாரத்திலும், அன்னிய தேசங்களில் குடியேறுவதிலும் கப்பல்களின் மூலம் கடலில் செல்லுவதிலும் முதன்மை பெற்றுவந்தது. ஹாலண்ட் தேசம் முதலில் அதனுடன் போட்டி நடாத்தித் தோல்வியடைந்து போயிற்று. ஆனால் ப்2ரெஞ்சுக்காரர் மாத்திரம் அமெரிக்காவிலும், இந்தியாவிலும், கடலிலும் இங்கிலீஷ்காரருடன் போராடித் தமது அதிகாரத்தை நிலைநிறுத்த முயன்றுவந்தனர். அதுவே அவ்விரு நாட்டினருக்கும் ஏறக்குறைய 1688 முதல் 1815 வரையில் (ஏதோ சிற்சில வருஷங்கள் இடையில் போக,) பகைமை நீடித்துநிற்கும்படி செய்தது. இந்தியாவில் ப்2ரெஞ்சுக்காரரும் இங்கிலீஷ்காரரும் முதலில் வியாபாரத்திற்கு வந்து, பிறகு இராஜீய விவகாரங்களில் தலையிட்டுக்கொண்டு, வெவ்வேறு சிற்றரசர்களுடன் சேர்ந்து, தமது ஆட்சியை ஏற்படுத்திக்கொள்ள முயன்றுவந்தனர். இங்கிலீஷ்காரருக்கு க்ளைவ் (Clive) என்பவரும், ப்2ரெஞ்சுக்காரருக்கு டூப்ளே (Dupleix) என்பவரும் நிரம்பவும் உதவிசெய்தது, முடிவில் க்ளைவின் முயற்சியே பலித்தது, டூப்ளே தோல்வியடைந்து திரும்பியது முதலிய வரலாறுகளை நாம் இந்தியதேச சரித்திரத்தில் விரிவாகக் காணலாம். முக்கியமாக 1757-ல் நடந்த ப்ளாஸி (Plassey) யுத்தத்தையும், 1760-ல் நடந்த வந்தவாசி (Wandewash) யுத்தத்தையும் முக்கியமாகக் குறிப்பிடலாம். ப்ளாஸி யுத்

தத்திணுல் இந்தியாவில் இங்கிலீஷ்காரருடைய ஆட்சி உறுதியாக நிலைநாட்டப்பட்டது.

இங்கிலீஷ்காரருக்கும் ப்ரெஞ்சுக்காரருக்கும் இந்தியாவில் போராட்டம் நடந்ததுபோலவே அமெரிக்காவிலும் நடந்தது. 1713-ல் ஏற்பட்ட யுட்ரெக்ட் உடன்படிக்கையின்படி இங்கிலீஷ்காரருக்கு அமெரிக்காவில் ந்யூபௌண்ட்லண்ட், நோவாஸ்கோஷ்யா என்ற பிரதேசங்கள் கிடைத்தன. அதற்கு முன்பே வட அமெரிக்காவின் கீழ்க்கரையோரமாக இங்கிலீஷ்காரர் பலர் குடியேறியிருந்தனர். ஆனுல் அப்பொழுது அவ்வெவ்வேறு இங்கிலீஷ் குடியேற்றப் பிரதேசங்களுக்குள் அதிகமான பாந்தவ்வியமோ ஒற்றுமையோ ஏற்படவில்லை. மேலும் அப்பிரதேசங்களுக்கு வடக்கிலும் மேற்கிலும் ப்ரெஞ்சுக்காரர் குடியேறியிருந்தனர். இப்பொழுது ப்ரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தில் அடங்கியதான கானடா (Canada) அப்பொழுது ப்ரெஞ்சுக்காரருடைய வசத்திலேயே இருந்தது. அதுபோல லூஸியானு (Louisiana) என்ற மாகாணமும் ப்ரெஞ்சுக்காரரது வசத்திலிருந்தது. ப்ரெஞ்சுதுரைத்தனத்தார் மேலே குறித்தபடி வடஅமெரிக்காக் கண்டத்தின் வடபாகத்தையும் மத்தியபாகத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டதுடன் நிற்காமல், மேலும் தமது ஆட்சியை அதிகப்படுத்திக்கொள்ள முயன்றனர்; புதிய புதிய கோட்டைகளைக் கட்டவும் யோசனைசெய்தனர். அவர்கள் அதைச் செய்தால் கிழக்கில் கடலோரமாகக் குடியேறியிருந்த ஆங்கிலேயருக்கு அது பெரிதும் துன்பகரமாகி விடும்போலிருந்தது. எனவே அமெரிக்காவிலும், அவ்விரண்டு தேசத்தாருக்கும் வியவகாரங்களுக்கு இடமிருந்தது.

இந்தியாவிலும் அமெரிக்காவிலும் ஒருவரோடொருவர் போர் புரிந்துவந்த அவ்விரு தேசத்தினருக்கும் ஐரோப்பாவிலேயே யுத்தம் நேரிடத் தக்க சந்தர்ப்பங்கள் சீக்கிரத்தில் நேர்ந்தன. அதன் காரணங்கள் பின்வருமாறு: ஆஸ்ட்ரிய வார்சுரிமைப்போரில் இங்கிலண்ட் மேரியா தெரிஸாவுக்கு உதவிபுரிந்தது ஏற்கெனவே குறிக்கப்பட்ட விஷயம். ஆனுல் ப்ரஷ்ய இராஜ்ஜியத்தை ஆண்டுவந்த மகா ப்ரெடரிக் என்பவர் அவ்யுத்தத்தின்பயனுக ஸைலீஷியா

மாகாணத்தை அபகரித்துக்கொண்டதையும், அதனுல் மேரியா தெரிஸா அரசிக்கு மனவருத்தம் ஏற்பட்டதையும் முன்னரே கூறினேம். மகாப் ப்2ரடெரிக் அரசர் சிறுகச் சிறுகப் பிரபலமடைந்து, தமது இராஜ்ஜியத்தை ஐரோப்பாவில் முக்கிய வல்லரசுகளுள் ஒன்ருகச்செய்துவந்தாராதலால், மற்றதேசத்தார்கள் அவர்மீது பொருமை கொண்டு, அவரை அடக்க முயன்றுவந்தனர். முதன் முதலாக மேரியா தெரிஸா இராணியே, மீண்டும் ஸைலீஷியா மாகாணத்தைத் தன்வசப்படுத்த எண்ணி ப்2ரெஞ்சு தேசத்தாசருடன் சேர்ந்து இங்கிலண்டு, பிரஷ்யா ஆகிய இரண்டையும் பகைத்துக் கொண்டாள். எனவே, ஆஸ்ட்ரிய வார்சுரிமைப்போரிலும் எழு வருஷயுத்தத்திலும் எதிரியாயிருந்த கட்சிகள் மாறுபட்டுப்போயின. இங்கிலண்டு இரண்டு சமயங்களிலும் நியாயமான கட்சியுடனேயே சேர்ந்துகொண்டது. எப்படியெனில் அதுமுதலில் மேரியா தெரிஸாவை சிம்மனத்தில் ஏற்றும்பொருட்டு அவளுடன் சேர்ந்து பிரஷ்யா, ப்2ரான்ஸ், முதலான அரசுகளை எதிர்த்துப் போர் புரிந்தது; எய்லாஷா/2பல் உடன்படிக்கையின்படி பிரஷ்யாவுக்குச் சேர்ந்துபோன ஸைலீஷியாவை மீண்டும் அடைய விரும்பிய ஆஸ்ட்ரிய இராணியின் முயற்சியைத் தடுக்கும்பொருட்டு, இங்கிலண்டு பிரஷ்யாவுடன் சேர்ந்துகொள்ள வேண்டியதாயிற்று. உருஷியா தேசம் மேரியா தெரிஸாவுடன் சேர்ந்துகொண்டது. எனவே, சிறுகச்சிறுக அபிவிருத்தியடைந்துவந்த பிரஷ்யாவை அடக்கும் பொருட்டு முக்கியமான ஐரோப்பிய அரசுகள் யாவும் ஒன்று சேர்ந்துகொண்டன. இங்கிலண்டு மாத்திரம் பிரஷ்யாவுடன் சேர்ந்திருந்தது. பிரஷ்யா அரசரான ப்2ரடெரிக் நிரம்பவும் எச்சரிப்பாக எதிரிகளைத் தாக்க எத்தனித்து, 1756-ல் யுத்தம் நடத்தத் தொடங்கினுர். அதுமுதல் 'எழுவருஷயுத்தம்' ஐரோப்பாவில் ஆரம்பமாயிற்று. ஆனுல் முன்னரே கூறப்பட்டபடி இங்கிலண்டும் ப்2ரான்ஸும் அதற்கு முன்பே அமெரிக்காவிலும் இந்தியாவிலும் போரில் ஈடுபட்டிருந்தன. இவ்வாறு பல பெரிய யுத்தங்களை நடத்திச் செல்லவேண்டிய அபாயகாமான தருணத்தில் இங்கிலண்டிலிருந்து சகலமான வியவகாரங்களையும் திறமையாக நிர்வகிப்பதற்கேற்ற பிரதம மந்திரி எவரும் அகப்படவில்லை. இந்தியாவி

லிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் யுத்தச் செய்திகள் வந்துகொண்டிருந்தன. ஐரோப்பாவிலோ ப்ஃரடெரிக் அரசர் அரும்பாடுகள் பட்டுக்கொண்டிருந்தார். கடலிலும்கூட இங்கிலீஷ்காரருக்குத்தோல்வி ஏற்பட்டது. அவர்களுக்குச் சொந்தமான மைனர்க்கா என்னும் தீவு 1713-ல் ப்ஃரெஞ்சுக்காரரால் தாக்கப்பட்டது. அங்கு இருந்துவந்த கப்பல் சேனாதிபதி பிங் (Admiral Byng) என்பவர் போர்புரிய அஞ்சி, அந்தத் தீவை விட்டு ஓட்டம் பிடித்தார். ப்ஃரெஞ்சுக்காரர் இங்கிலன்டின்மீது படையெடுக்கவும், ஆஸ்ட்ரியாவும் ருஷியாவும் சேர்ந்துகொண்டு பிரஷ்யாவை வளைத்துக்கொள்ளவும் ஏற்பாடாயிருந்தது. இங்கிலீஷ்காரரிடையே பெரும் கலவரம் தோன்றிவிட்டது. பிங் இங்கிலீஷ்காரர்களது கோபாக்கினிக்கு இரையானார். அவர் மைனர்க்கா தீவைக் கைவிட்டு ஓடியதற்காக பிரத்தியேக நியாயஸ்தலத்தில் உத்தரம் சொல்லநேர்ந்தது. அங்கு அவர் மரணதண்டனை விதிக்கப்பெற்று, அவருடைய கப்பலிலேயே நிறுத்தி சுட்டுக்கொல்லப்பட்டார். அத்தகைய அபாயகரமான நிலைமையில், பிட், நியூகாஸில் ஆகிய இருவரும் சேர்ந்து மந்திரி சபையை யமைத்தது தேசத்திற்குப் பரம விசேஷமானதாயிற்று. ஏனெனில், அதனால் அரசாட்சி உறுதியாக நடக்க வழியேற்பட்டது. யுத்த சம்பந்தமான நிர்வாகம் முழுதையும் பிட் ஏற்றுக் கொண்டார். அவருடைய உதவியில்லாவிடில் இங்கிலன்டு அடியோடு தோல்வியடைந்து அவமானத்திற்கு இலக்காயிருக்கும். பிட் தமது திறமையில் உறுதியான நம்பிக்கைகொண்டு, "நான் தேசத்தைக் காப்பாற்றுவேன் என்பதும் திண்ணம்; வேறெவராலும் அதைச் செய்ய முடியாதென்பதும் நிச்சயம்" என்று கூறினார். உண்மையும் அதுவே. போரை நடத்தும் முறைகளையும் திட்டங்களையும் தயாரிப்பதில் அவர் அளவற்ற அக்கரை காட்டியதன்றி அவைகளை நிறைவேற்றத் தகுதியான ஆட்களையும் தளவாடங்களையும் சேகரிப்பதிலும் மிக எச்சரிப்பாக நடந்துகொண்டார். அவர் க்ளைவுக்கு "தெய்விகமாய் உதித்த சேனாதிபதி" என்ற புகழ்ச்சிப்பெயரளித்து, இந்தியாவில் அவர் நடாத்திய யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தும்படி தூண்டினார். 1759-ல் ஐரோப்பாவில் மின்டன் (Minden) என்ற இடத்

தில் அடைந்த வெற்றியால், ஹா/2னேவர் இராஜ்ஜியம் பகைவரிடத்திலிருந்து மீட்கப்பட்டது. இங்கிலண்டின் நண்பராயிருந்த ப்2ரடெரிக் அரசருக்கு பிட் பண உதவிசெய்தார். இங்கிலீஷ்காரர் ஐரோப்பிய வியவகாரங்களில் கலந்துகொள்வது வியாபார விருத்தியும், கடலதிகார நிலைப்பும், குடியேற்ற நாடுகளில் இராஜ்ஜியப் பெருக்கும் உண்டாக்க வேண்டுமென்பதற்கே என்ற நோக்கத்தை அவர் எப்பொழுதும் கவனத்தில் வைத்தவராகவே நடந்து வந்தார். பிரஷ்யா தேசத்தரசருக்கு அவர் செய்த ஏராளமான பண உதவியைக் கண்டு பிரமிப்படைந்தவர்களுக்கு அவர் "அமெரிக்காவை ஜெர்மனியிலேதான் ஜெயிக்கவேண்டும்" என்று கூறினர். பிரஷ்யா தேசத்தரசருக்குப் பண உதவியளித்து அவருக்கும் ப்2ரான்ஸ் முதலான அரசுகளுக்கும் ஐரோப்பாவில் உக்கிரமான போர் நடக்கும்படி செய்தால், ப்2ரெஞ்சுக்காரர் அமெரிக்காவில் இருந்த தமது பிரதேசங்களைக் காப்பாற்றப் போதிய சேனைகளை அனுப்புவது கூடாமல் போய்விடுமாதலால் இங்கிலீஷ்காரர் அதே சமயத்தில் அமெரிக்காவில் பல பிரதேசங்களை சுலபமாகக் கைப்பற்றி விடலாமென்பது அவரது கருத்து. இது ஒரு பெரிய இராஜதந்திரம்; அவருடைய எண்ணத்தின்படியே காரியமும் நிறைவேறியது. மேலும் யுத்தம் புரிவதில் உண்மையான திறமை வாய்ந்த வீரர்களையும் சேனாதிபதிகளையும் நியமித்து அனுப்புவதில், பிட் மகா திறமைசாலியாயிருந்தார். 1759-ல் க்விபரான் விரிகுடா (Quiberon Bay) வில் நடந்த கப்பல் போரில் இங்கிலீஷ்காரர்கள் வெற்றியடைந்தனர். அதனால், மறுபடியும் கடலாதிபத்யத்தை இங்கிலண்டு பெற்றுவிட்டது. அதே சமயத்தில் வட அமெரிக்காவிலும் இங்கிலீஷ்காரரும் ப்2ரெஞ்சுக்காரரும் போர் புரிந்தனரென்று கூறினேமல்லவா? அங்கும் இந்தியாவில் ஏற்பட்டதைப் போலவே, ப்2ரான்ஸுக்குத் தோல்வியே ஏற்பட்டது. அங்கு குடியேறியிருந்த இங்கிலீஷ்காரர் ஒற்றுமையாக நடந்துகொண்டு ப்2ரெஞ்சுக்காரரது கோட்டைகளில் முக்கியமானவற்றைப் பிடித்துக் கொண்டனர். கா/2னடா மாகாணத்தில் உள்ள க்யூபெக் (Quebec) நகரத்தைத் தாக்குவதற்கு 1759-ல் உல்ப2(Wolfe) என்ற சேனாதிபதி அனுப்பப்பட்டார். ப்2ரெஞ்சுக்காரரது சேனை தங்களது வல்லமை முழு

தையும் காட்டிப் போர் புரிந்ததானாலும் முடிவில் தோல்வியடைந்தது. ஒல்ப்2 அந்தப் போரில் இறந்து போனானாலும், அவரது கட்சிக்கு வெற்றி உண்டான பெருமை அவருக்கே உரியது. மறு வருஷத்திற்குள் கா/2னடா முழுதும் இங்கிலீஷ்காரரது வச மாயிற்று. அதன் பயனாக அமெரிக்காவில் ப்2ரெஞ்சுக்காருடைய அதிகாரம் பெரும்பாலும் குறைந்து போய்விட்டது. வட அமெரிக்காவின் கிழக்கோரமும் வடபாகமும் இங்கிலீஷாரது வசமாயின. நாட்டிற்கு பிட் செய்த நன்மைகளுள், கா/2னடாவைப் பிடித்து வசப்படுத்தியதே மிகவும் முக்கியமானது.

ஏழுவருஷ யுத்தம் நடந்து கொண்டிருக்கையிலேயே 1760 ல் இரண்டாவது ஜார்ஜ் மரணமடைந்தார். அவரது ஆட்சியில் முதலில் வால்போலும் பின்னர் பிட்டும் அரிய செயல்களை நிறைவேற்றி வைத்தனர். இராஜ்ஜிய நிர்வாகத்தில் அரசரைவிட மந்திரிகளே அதிகமான பொறுப்பும் முக்கியத்தன்மையும் வாய்ந்தவர்களென்பது உறுதியாக நிலைத்துப் போயிற்று. ஏழு வருஷ யுத்த முடிவை அடுத்த அதிகாரத்தில் கூறுவோம்.

---

## 38-வது அதிகாரம்

### மூன்றாவது ஜார்ஜ்.

(1) புதிய அரசரின் மனப்போக்கு :- பிட் விலகுதல்: ஏழு வருஷ யுத்தத்தின் முடிவு : வில்க்ஸ் வழக்கு:—இரண்டாவது ஜார்ஜின் புதல்வர் 1751-ல் இறந்து போனாராதலால், பேரனான மூன்றாவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தார். அவருக்கு அப்பொழுது வயது இருபத்திரண்டே யானாலும், நன்றாக உழைக்கும் குணமும், மதப்பற்றுதலும் உடையவர். முதல் இரண்டாவது ஜார்ஜுகளைப்போலில்லாமல், அவர் நன்னடக்கையோடு நடந்துகொண்டார். ஆனால் அற்ப புத்தியும், பிடிவாத குணமும், அவரிடம் குடிகொண்டிருந்தன. தாம் அரசருக்குரிய அதிகாரம் முழுதையும் உண்மையில்

வகிக்க வேண்டுமென்று அவர் ஆசைகொண்டார். அவரது முன்னோர்களுக்கு இங்கிலீஷ் பாஷை தெரியாத காரணத்தாலும், தற்செயலாக நேர்ந்த வேறு சம்பவங்களாலும், பார்லிமென்டுக்கும் மந்திரிகளுக்கும் சகல அதிகாரத்தையும் அவர்கள் அளித்துவிட்டது மூன்ருவது ஜார்ஜுக்கு சம்மதியாக இல்லை. பழைய இங்கிலீஷ் அரசர்களைப் போலவே தாமும் பூர்த்தியான அதிகாரம்செலுத்துவதே தமக்கு கௌரவமானதென்று கருதினர். 1688 ல் சட்டப்படி ஸ்தாபிக்கப்பட்ட அரசியல் முறையை அவர் அங்கீகரித்துக் கொண்டதுடன் நின்று, தமது பாட்டனரும் அவரது தந்தையும் செய்ததைப் போல சகலமான நிர்வாகங்களையும் மந்திரிகளிடம் ஒப்புவித்துத் தாம் வெறும் பதுமையாக வீற்றிருக்க மறுத்துவிட்டார். தமக்கு இஷ்டமானவர்களையே மந்திரிகளாக நியமிக்க அவர் முயன்ருர். எனவே மூன்ருவது ஜார்ஜ் காலத்தில், 18-வது நூற்ருண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட அரசியலபிவிருத்திகள் மறைந்து விடுமோவென்று சந்தேகிக்க இடமேற்பட்டது.

மூன்ருவது ஜார்ஜ் கூர்மையான புத்தியுடையவராதலால், தமது நோக்கத்தை அடைய வேண்டுமானல், முதலில் விஹ்க் கட்சியினரைத் தாக்கி ஒடுக்க வேண்டுமென்று உணர்ந்து கொண்டார்; ஏனெனில் ஹானேவர் வம்சத்தினர் பட்டத்திற்கு வந்தது முதற்கொண்டு ஏறக்குறைய அரை நூற்ருண்டு காலம் விஹ்க் கட்சியினரே அதிகாரம் வகித்து துரைத்தன நிர்வாகம் நடாத்தி வந்திருந்தனர். அவ்வாறு, நீண்டகாலம் விஹ்க் கட்சியினர் மேன்மையடைந்ததன் காரணங்களை முன்னரே விளக்கி இருக்கிரேம். தமது கருத்தை நிறைவேற்றுவதற்கு முதற்படியாக, ஜார்ஜ் அரசர் தமது முன்னோர்களைப் போல ஏதோ ஒரு கட்சியுடன் மாத்திரம் சேர்ந்து கொள்ளாமல், சகலமான கட்சிகளுக்கும் மேலே இருந்துவந்தார்; இராஜீயக் கட்சிகள் மாறி மாறி அரசியல் நடத்துவது தேசத்திற்குப் பெரும் தீங்கை விளைவிக்கும் என்று அவர் கருதினர். விஹ்க்களை ஒடுக்குவதில் டோரிகளுக்கு திருப்தியேயாதலால், அவர்கள் புதிய அரசரை ஆதரித்தனர். ஆனல் டோரிகளால் அரசரைத் தமது வலையிற் சிக்கவைக்க முடியவில்லை. ஏறக்குறைய 50 வருஷகாலமாய் உன்னத நிலைமையில் இருந்துவந்த விஹ்க் கட்சி

யினரைக் தாழ்மைப்படுத்துவதில் டோரிகள் புதிய அரசருக்கு உதவியாயிருந்தனர். எனவே, ஹானோவர் வம்சத்தின் முதல் இரண்டு அரசர்களது காலத்தில் உன்னத பதவியிலிருந்து ஆட்சி நடாத்தி, பல அரசியலபிவிருத்திகளைச் செய்த விக் கட்சியின் செல்வாக்கு மூன்றாவது ஜார்ஜ் காலத்தில் குறையத் தொடங்கியது.

விக், டோரி ஆசிய இருகட்சியாரின் ஆதரவையும் நாடாமல் ஜார்ஜ் அரசர் தமக்கென்று ஒரு தனிக்கட்சியை அமைத்துக் கொண்டார். அதாவது தமது சொற்படி நடந்து, தமது கட்டளைகளை அப்படியே நிறைவேற்றக் கூடியவர்களை அவர் ஒன்றாகக் கூட்டினார். அவர்கள் 'அரசாது நண்பர்கள்' (King's Friends) என்று குறிக்கப்பட்டனர். அவர்களது கொள்கை அரசாது சொற்படி நடப்பதொன்றே. அவர்களுக்கு ஜார்ஜ் பணமும் பதவியும் லஞ்சமும் அளித்து அவர்களை வசப்படுத்திக் கொண்டு, அவர்களது உதவியால் விக்களின் பலத்தைக் குறைத்துவந்தார். முன்பு பிரதம மந்திரி வால்போல் தமது கட்சியை பலப்படுத்தும் பொருட்டு லஞ்சம் கொடுத்தல்முதலிய அதர்ம முறைகளை அநுஷ்டித்து வந்ததைப்போலவே, இப்பொழுது அதே கட்சியை ஒடுக்க ஜார்ஜ அரசர் அம்முறைகளையே திருப்பி அநுஷ்டித்தார்;விடா முயர்சியுடனும் சலியாத ஊக்கத்துடனும் சுமார் 50 வருஷகாலம் பாடுபட்டுமுடிவில் தமது கோரிக்கையை நிறைவேற்றினார். விக் கட்சியின் அழிவுக்கு ஜார்ஜ் அரசாது பகைமையே காரணமாயிருந்ததன்றி, அந்தக் கட்சியின் ஒழுங்கீனமும் அதற்கு அநுகூலமாக இருந்தது. ஜார்ஜ் அரசருடைய பரிசுத்தமான நடத்தையைமெச்சி அவரைஎல்லோரும் ஆதரித்ததைப்போலவே, விக் தலைவர்கள் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக் கொண்டது பற்றி காமன்ஸ் சபையில் பொறுப்பென்பதே இல்லாமற் போனமையால் ஜனங்கள் அவர்களை வெறுத்தனர். அதனால் விக் கட்சியின் மேம்பாடு குறைந்து போனதன்றி, அரசரும் தமது இச்சையின்படி மந்திரிகளை நியமிக்கும் அதிகாரத்தை யடைந்தார். எனவே, அரசியல் முறை யபிவிருத்திக்கு மூன்றாவது ஜார்ஜின் காலத்தில் ஒரு பெரிய முட்டுக்கட்டைஎற்பட்டது போலானது.

ஆனல் 1760-ல் மூன்றுவது ஜார்ஜ் முடிசூடியவுடன் அவருடைய மனப்போக்குக்கு முற்றிலும் மாருகவே விஷயங்கள் நடந்துவந்தன. அப்பொழுது ஏழுவருஷப் போர் நடந்துவந்தது. பிட், நியூ கா/2வில் ஆகிய இருவரும், ஒருவர் யுத்தத்தையும் ஒருவர் உள்நாட்டு வியவகாரங்களையும் மேல்பார்வை பார்த்துவந்தனர். அவர்கள் சகலமான அதிகாரங்களையும் வகித்து தமது மனப்போக்கின்படி நடந்து, கடலிலும் நிலத்திலும் வெற்றியின்மேல் வெற்றியாயடைந்து வந்தனர். ஆனல், ஜார்ஜுக்கு, பிட் மந்திரியின் மகத்துவத்தை அறியும் ஆற்றல் கிடையாது. அவர் தமது அற்பகுணத்திற்கியைந்தபடியே சகலமான விஷயங்களையும் மதித்தார்; மேலும் எவ்விதமாவது விக் கட்சியின் பலத்தைக் குறைப்பதிலேயே அவர் கவனமாயிருந்தார். யுத்தத்தை விரைவில் முடித்தாகிலும் தமது கோரிக்கையை நிறைவேற்ற வேண்டுமென்று அவர் கருதினர். பிட் மிகவும் கியாதிபெற்றிருந்தமையால், அவர் அரசருடைய வெறுப்புக்குப் பாத்திரரானர். ஆனல் உண்மையில் பிட்டும் ஜார்ஜும் சில விதங்களில் ஒரேவிதமான அபிப்பிராயத்தைக் கொண்டிருந்தனர். ஜார்ஜ் பெருந்தன்மையான அரசராயிருந்தால், பிட்டின் மகிமையை சீக்கிரத்தில் அறிந்துகொண்டிருப்பார். அவர் தமது கருத்து நிறைவேறுவதற்குப் பெரிய தடையாக இருப்பார் என்று கண்ட ஜார்ஜ் அவரை ஒழித்துவிட வழிதேடலானர். 1761-ல் அரசருடைய முயற்சியினல், மந்திரி சபையில் மனஸ்தாபம் ஏற்பட, பிட் இராஜீநாமாச் செய்துவிட்டார். தமது விருப்பத்தின்படி நடக்கமாட்டாமல், மந்திரி சபையில் இருப்பதைவிட, விலகிக்கொள்வதே சிலாக்கியமானதென பிட் கருதினர். மறுவருஷம், அவருடைய கூட்டாளியான நியூ கா/2வில் பிரபுவும் விலக்கப்பட்டார். 1762-ல் பியூட் (Bute) என்பவர் பிரதம மந்திரியானர்; அரசியல் நடத்தும் பயிற்சி அவருக்கு அதிகமாகக் கிடையாது. ஆனலும், ஜார்ஜ் தமது அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்ள அத்தகைய மந்திரிகளையே நியமிக்க வேண்டியதாயிற்று.

பியூட் மந்திரி பதவியை ஏற்றதும், ஏழுவருஷ யுத்தத்தை முடித்துவிட்டார். 1763-ல் நடந்த பாரீஸ் உடன்படிக்கை (Peace of Paris)யில் இங்கிலண்டுக்கும் ப்2ரான்ஸுக்கும் சமாதானம்

ஏற்பட்டது. அதனால் இங்கிலீஷ் அரசாங்கத்திற்கு, கா/2னடா மாகாணமும், கேப் பிரேடனும் (Cape Breton) இன்னும் சில சிறிய தீவுகளும் கிடைத்தன. அதனால் அமெரிக்காவில் இங்கிலீஷ் காரரை எதிர்த்து அடக்குவோர் இல்லாமல் போயினர். கடலின் அதிகாரமும் அவர்களுக்கே கிடைத்தது. ஆனால் அந்த வெற்றிக்கு பிட் மந்திரியே முக்கிய ஆதாரபூதராயிருந்தவர் என்பதை மறத்தல் கூடாது. அவர் 1761-ல் இராஜீநாமாச் செய்யாமல் இருந்திருந்தால் இன்னமும் அதிகமான அநுகூலங்கள் ஏற்பட்டிருக்கலாம். பிட் தமது தேசத்திற்குப் பல அரிய சேவைகளைச் செய்தார். கட்சிப் பிரதி கட்சிச் சண்டைகளில் அற்ப குணத்தோடு நடந்துகொள்ளாமலும், பார்லிமெண்ட் சபையை பொதுஜன அபிப்பிராயத்திற்கு இணங்கும்படி செய்தும், அவர் இராஜீய வாழ்வின் சீர்கேடுகளை மறையச் செய்தார். சுயநல நாட்டமும், கிரமத்தவறான முறைகளும், இழிவான செய்கைகளும் சர்வசாதாரணமாக இருந்துவந்த நிலைமையில், பிட் கம்பீரகுணத்துடன் தோன்றி, தமது பெருந்போக்கான நடத்தை ஒளிருமாறு செய்து தேசபக்தி, பராக்கிரமம், பரிசுத்த குணம் முதலியவை தலையெடுக்கும்படி ஊக்கினர். குடிமக்கள் அனைவரும் அவரே தமது உண்மையான தலைவரெனப் போற்றி வாழ்த்தினர். பிட் தமது தேசத்தினரிடையே ஒரு புதிய ஊக்கத்தைப் புகுத்தினர். அதற்குமுன் இலஞ்சம் கொடுப்பதும் கிரம விரோதமான முறைகளை அநுஷ்டிப்பதும் இராஜீயத் துறையில் இன்றியமையாத அம்சங்களெனக் கருதப்பட்டன. ஆனால் தனிப்பட்ட மனிதாது விஷயத்தைப் போலவே இராஜீயத் துறையிலும் தூய்மை நிர்ணயம் முதலிய குணங்கள் அவசியமானவை என்பதை பிட் மெய்ப்பித்துக் காட்டினர். அவருடைய தியாக புத்தியும் சுய நம்பிக்கையும் அந்தந்த வேலைக்கு ஏற்ற ஆட்களைப் பொறுக்கியெடுத்து நியமிக்கும் திறமையும் அவர் மற்றவருக்கு வழிகாட்டியாயிருக்கும்படி செய்தன. உள்நாட்டு வியவகாரங்களில் அவர் முடித்த செய்கைகளைப் போலவே, ஏழுவருஷ யுத்தத்தை வெற்றியுடன் நடத்தியதிலும் அவர் நாட்டினருக்கு என்றுமழியாத பேருதவி புரிந்தார். ஏழுவருஷ யுத்தத்தை நிறுத்திவிட்டு, ஜார்ஜ் அரசர் இங்கிலண்டில் தமது அதிகாரத்தை அதிகப்படுத்

திக்கொள்ள முயற்சித்தார். பிட் விலகிக்கொண்ட பின்னர் மந்திரிபதவியை ஏற்ற ஃப்யூட் என்பவரும் 1763-ல் இராஜீனாமாச் செய்துவிட்டு விலகிக்கொண்டார். ஏனெனில் அவர் விஃக் கட்சியை ஒடுக்குவதில், அரசருக்கு உதவிபுரிந்து மிகுந்த அபகீர்த்தியைத் தேடிக் கொண்டார். அதன்பிறகு ஃரேன்வில் (Grenville) என்பவர் பிரதம மந்திரியானார். ஃரென்வில், பிட்டுக்கு உறவினராயிருந்தும், அவருடன் சச்சரவிட்டுக்கொண்டு பிரிந்தவர்; சாமர்த்தியம் வாய்ந்தவர். ஆனால் அரசரைப்போலவே அற்பகுணமும் பிடிவாதமான மனப்போக்கும் உடையவர். அதனால் அவர் சீக்கிரத்தில் அரசருடைய அதிருப்திக்கும் ஜனங்களுடைய கோபத்திற்கும் பாத்திரரானார்.

ஃரென்வில் மந்திரி சபையை நடாத்திய காலத்தில் வில்க்ஸ் வழக்கு (The Wilkes case) என்ற ஒருசம்பவம் நிகழ்ந்தது. ஜான் வில்க்ஸ் என்பவர் பார்லிமென்ட் சபையின் அங்கத்தினர்; அவர் ஒரு பத்திரிகைக்கும் ஆசிரியராக இருந்தார். அவர் உண்மையில் எவ்வித உயரிய கொள்கையுமற்றவரானாலும், தேசியத் தலைவர் போலவும், தியாகிபோலவும் நடிப்பதில் சமர்த்தர். அவர் ஒருசமயம் அரசரையும் பிரதம மந்திரியையும் தாக்கி பத்திரிகையில் அவதூறாக எழுதியிருந்தார். அதன்பொருட்டு அரசாங்கத்தார் அவர் மீது வழக்குத் தொடர்ந்து அவரைக் கைதியாக்கினர். உடனே ஜனங்கள் அவரைப் புகழ்ந்து அவர் எதிர்பாராதபடி கௌரவப்படுத்தினார்கள். அவரைக் கைதுசெய்தது சட்டவிரோதமானதென்று நியாயாதிபதிதீர்ப்புக் கூறிவிட்டார்; அதனால் அவரது மகிமை இன்னும் அதிகரித்தது. மந்திரிகளின்மீது வில்க்ஸ் மானநஷ்ட வழக்குத் தொடுத்து, அதிலும் ஜயமடைந்தார். ஆனால் அவர் அதன்பிறகு, அசங்கியமான சில பாடல்களை வெளியிட்டாரென்ற காரணம்பற்றி தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டார். ஆனாலும், அந்த வழக்குக் காரணமாக தேசத்தினரிடையே ஒரு பரபரப்புத் தோன்றியது. அரசாங்கத்தாருக்கும் ஓரளவு அபகீர்த்தி ஏற்பட்டது. ஃரென்வில் இன்னொரு முக்கிய காரியமும் செய்தார். 1765-ல் அவர் 'முத்திரைக்காகிதச் சட்டம்' (Stamp Act) ஒன்று இயற்றி, அமெரிக்காவில் குடியேறியிருந்த இங்கிலீஷ்காரர்கள் பத்திரங்கள் தயார்

செய்யும்பொழுது முத்திரைக் காகிதங்களை உபயோகிக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்தார். அந்தச் சட்டத்தினால் எத்தகைய அனர்த்தங்கள் விளைந்தன என்பது பின்னால் விளங்கும். ஆனால், அதே வருஷத்தில் க்ரென்வில் உத்தியோகத்தை விட்டு விலகிக் கொள்ள வேண்டியதாயிற்று. அரசருக்கும் அவருக்கும் ஏற்பட்ட நட்பு நீடித்து நிற்கவில்லை. அவருக்குப் பிறகு வேறு மந்திரிகளைப் பொறுக்கியெடுப்பது ஜார்ஜுக்குக் கடினமாயிருந்தது. அவர் விக் கட்சியினருக்கே மறுபடியும் பதவிகள் அளிக்கவேண்டியதாயிற்று. 1765-ல் ராக்கிங்ஹாம் (Rockingham) என்பவருடைய தலைமையின்கீழ் ஒரு கூட்டுமந்திரி சபை அமைந்தது.

(2) **அமெரிக்காவின் சுயாதீனப்போர்:-** ராக்கிங்ஹாம் என்பவரும் இரண்டுவருஷகாலமே உத்தியோகம் வகித்திருந்தார். அவரிடம், பிரசித்திபெற்ற நூலாசிரியரும் இராஜீயவாதியுமான எட்மண்ட் பர்க் (Edmund Burke) என்பவர் காரியதரிசியாயிருந்தார். பர்க் பெரும் பதவியை யடையாமற்போனாலும் விக் கட்சிக்கு அவரே அறிவுச்சுடர்போல இருந்து வேலைசெய்துவந்தார். ராக்கிங்ஹாம் என்பவர் உயர்குலத்திலுதித்தவரானாலும் அதிக துரைத்தன நிர்வாகத்திறமை வாய்ந்தவரன்று. அவர் க்ரென்வில் இயற்றிய முத்திரைக் காயிதச் சட்டத்தை நீக்கிவிட்டார். ஆனால் அவர் அரசருடைய விசேஷமான பிரீதியையோ, அல்லது, பொது மக்களது அபிமானத்தையோ தேடிக்கொள்ளவில்லை. எனவே, 1766-ல் அவர் விலகிக்கொண்டார். மூன்றாவது ஜார்ஜ் தமது உள் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளும்பொருட்டு, அடிக்கடி மந்திரி சபைகளை மாற்றிக்கொண்டே வந்தார். வால்போல் இருபது வருஷகாலம் சர்வாதிகாரமும் பெற்றிருந்ததற்கும், மேற்கூறிய மந்திரிகள் இரண்டொரு வருஷகாலம் அதிகாரம் வகித்து மறைந்ததற்கும் உள்ள வேறுபாட்டிலிருந்தே, அது நன்குவிளங்கும்.

ராக்கிங்ஹாம் விலகிக்கொண்ட பிறகு மந்திரிசபையையமைக்கும்படிவில்லியம் பிட் என்பவரைத் தூண்டினார்கள். அவரும், அதற்கு இணங்கினார். ஆனால், அவர் முதலில் அமைத்த மந்திரி சபையைப் போல இரண்டாவதுசபை அவ்வளவு கீர்த்திபெற்று விளங்கவில்லை, தேக அசௌக்கியம் காரணமாக, அவரால் முன்போல ஊக்கத்

துடன் வேலைசெய்ய இயலவில்லை. அவரை அரசர் ச்சாதம் (Earl of Chatham) பிரபுவாகச் செய்தார். அவர் பிரபுவின் பதவியை ஏற்றுக்கொண்டதுகூட சிலருக்கு சம்மதியாயில்லை. அவருடைய கூட்டாளிகளான மற்ற மந்திரிகள் பல கட்சிகளைச் சேர்ந்தவர்களாயிருந்தனர். எனவே விக், டோரி, அரசரது நண்பர்கள், பார்லிமென்டின் சுதந்திரத்தை ஆதரித்தவர்கள் ஆகிய எல்லோரும் ஒன்றுகூடிய குளறுபிடியான மந்திரி சபையை வைத்துக்கொண்டு ச்சாதம் பிரபு எதையும் சாதிக்கமாட்டாதவராயிருந்தார். ஆனால், அவர் எத்தனையோ விஷயங்களில் திட்டம் போட்டுப்பார்த்தார். அன்னியநாட்டு வியவகாரங்களை அரசர் கவனிக்காமல் இருந்துவந்தார்; ச்சாதம் பிரபு, ரஷ்யா பிரஷ்யா முதலிய அரசுகளுடன் சேர்ந்துகொள்ள வேண்டுமென்றும், அயர்லன்ட் தேசத்தில் அமைதியை நிலைநாட்டவேண்டுமென்றும் ஆலோசனை செய்துவந்தார். ஆனால், அவருடைய தேக அசௌக்கியம் பெருத்த இடையூறாக இருந்துவந்தது. அவரது பெயரால் மற்ற மந்திரிமார்கள் தாறுமாறாக நிர்வாகம் நடத்தினர். அமெரிக்க ஜனங்களின்மீது புதிய வரிகள் விதிக்கப்பட்டன. மேலும், வில்க்ஸ் என்ற தலைவர் அப்பொழுது இங்கிலன்டுக்குத் திரும்பிவர அவரை அரசாங்கத்தார் மீண்டும் சிறையிலிட்டு அதனால் பொதுமக்களது கோபத்தைக் கிளப்பிவிட்டனர். 1768-ல் அதுகாரணமாகச் சில இடங்களில் கலகங்களும் கிளர்ச்சிகளும் தோன்றலாயின. ஜனங்கள் ஒருமிக்க மந்திரிகளைத் தூற்றினார்கள். ச்சாதம் பிரபு, தமது பெயரால், அவ்வாறு கிரமத்தவறாக நடந்துகொண்ட மந்திரிசபையினரை விட்டு விலகிக்கொண்டார்.

1768 முதல் 1770 வரையில் க்ராப்டன் (Grafton) என்பவர் மந்திரி சபையை அமைத்து அரசியல் நடாத்தினார். 1770-ல் லார்ட் நார்த் (Lord North) என்பவரை முதல் மந்திரியாக அரசர் நியமித்தார். துரைத்தன நிர்வாகம் நடத்துவது நார்த் என்பவருக்கு மிக பிரயாசையாகத் தோன்றியதானாலும், அதிர்ஷ்டவசமாக, நாட்டில் அப்பொழுது ஓரளவு அமைதி ஏற்பட்டிருந்தமையால் அவர் ஏறக்குறைய பன்னிரண்டு வருஷகாலம் அதிகாரம் வகித்திருந்தார். அவர் டோரிக் கட்சியையே சேர்ந்தவர். ஆனால்

இராணி இறந்தபிறகு, டோரிக்கட்சியைச் சேர்ந்த ஒருவர் முதன் முதலாக அப்பொழுதே அதிகாரம் வகித்தார். ஆனால் நார்த் சர்வ அதிகாரங்களையும் பெறவில்லை. முன்னரே கூறப்பட்டபடி ஜார்ஜ் அரசர் தம்மிடமே முக்கியமான அதிகாரத்தை வைத்துக் கொள்ள முயற்சித்தவராதலால், தமது சொற்படியே மந்திரிகள் நடக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். ச்சா|2கம் பிரபுவுக்கு அதி சம்மதியாக இருக்கவில்லை. மந்திரிகளும் காமன்ஸ் சபையும் அம்மாதிரி அரசரை அண்டி இருப்பதைத் தவிர்க்கவேண்டுமானால் பார்லிமென்ட் சபையைச் சீர்திருத்துவது அவசியமானது என்று அவர் கூறிவந்தார். ஆனால், அவரது சொல்லை எவரும் கவனிக்கவில்லை. பொதுமக்கள் விக் கட்சியாரைக் காட்டிலும் அரசரையே அன்போடு ஆதரித்துவந்தனர். அவ்வாறு விக் கட்சி எவ்வித அதிகாரமுமின்றி விலக்கித் தள்ளப்பட்டது நாளடைவில் அதற்கு நன்மையாகவே முடிந்தது. ஏனெனில் அக்கட்சியில் நெடுங்காலமாய் இருந்துவந்த குற்றங் குறைபாடுகள் விலகிப்போயின. தமது கோரிக்கையை நிறைவேற்றிக்கொண்டு ஜார்ஜ் அரசர் தமது அதிகாரத்தை முன் யோசனையின்றித் தாறுமாறாக உபயோகித்தார். அதனால் இங்கிலண்டுக்கு அமெரிக்காவில் சொந்தமாயிருந்து வந்த குடியேற்ற நாடுகள் இங்கிலண்டின் ஆட்சியிலிருந்து விலகி சுயாதீனமடைந்து விட்டன. அச்சம்பவத்திற்கு 'அமெரிக்க சுயாதீனப் போர்' (War of the American Independence) என்று பெயர். அதன் விவரம் பின் வருமாறு:—

16-ம் நூற்றாண்டிலிருந்து ஐரோப்பியர்களிற் பலர் வியாபார வியவசாய நிமித்தமாய் அமெரிக்காவில் குடியேறினர் என்பதை முன்னர் குறிப்பிட்டோம். சில இங்கிலீஷ்காரர்கள் மத சுதந்திரத்தின் பொருட்டு, தமது தாய்நாட்டை விட்டுச் சென்று அமெரிக்காவில் தங்கினர். வடஅமெரிக்காவின் கிழக்கோரமாக அம்மாதிரி வெவ்வேறு காலங்களில் வந்து குடியேறியிருந்தஇங்கிலீஷ்காரர்கள் தனித்தனி மாகாணங்களை ஏற்படுத்திக்கொண்டு வசித்து வந்தனர். தாம் சுயாதீனமாகவும் சுதந்திரமாகவும் இருக்க வேண்டுமென்பதே அவர்களது முக்கியமான அவா. அதுபற்றியே அவர்களில் பெரும்பாலோர் தாய்நாட்டை விட்டு தேசாந்தரம் சென்று அங்கு குடியேறி

னர். இங்கிலீஷ்காரர் வட அமெரிக்காவில் அம்மாதிரி பதின் மூன்று தனித்தனியான சிறிய மாகாணங்களை ஸ்தாபித்திருந்தனர். அவைகள் பெயருக்கு மாத்திரம் இங்கிலீஷ் அரசருக்கு அடங்கியவையாயிருந்தன. ஆனால், அவை இங்கிலண்டிற்கு அதிக தூரத்தில் இருந்தது பற்றி சுயேச்சையாகவே தமது நாட்டு நிர்வாகத்தை நடத்திக்கொண்டு போயின. இங்கிலண்டினுடைய வர்த்தக சம்பந்தமான சட்டதிட்டங்களை அமெரிக்கர்கள் (அதாவது அமெரிக்காவில் குடியேறியிருந்த இங்கிலீஷ்காரர்கள்) வெறுத்து வந்தனர். இங்கிலீஷ் அரசாங்கத்தார் குடியேற்ற நாடுகளிலிருந்து தாம் அதிகமான பொருளை அபகரிக்க வேண்டுமென்று நினைத்தனரேயன்றி அவைகளது நன்மைகளைப் பொருட்படுத்தவில்லை. உதாரணமாக, அமெரிக்கர்கள் தமது விளைபொருள்களை அயல்நாடுகளுக்கு அனுப்பவேண்டுமானால், இங்கிலீஷ்காரர்களுக்குச் சொந்தமான கப்பல்களிலேயே அனுப்ப வேண்டியதா யிருந்தது. மேலும் அமெரிக்காவில் ஏராளமான விளைபொருள்கள் உற்பத்தியானால், தமது தேசத்திற்கு நஷ்டம் ஏற்படும் என்று கருதி இங்கிலீஷ்காரர்கள் அமெரிக்காவில் தொழில்அபிவிருத்தி ஏற்படாதபடி தடுத்துவந்ததன்றி, அவர்கள், தங்களது பொக்கிஷத்தை நிரப்புவதற்காக மாத்திரம் அங்கு இருப்பதாக இங்கிலீஷ் அரசாங்கத்தார் கருதினர். மேலும், மூன்றாவது ஜார்ஜ் அரசரும் க்ரென்வில் மந்திரியும் அமெரிக்காவின் வியாபார உரிமை முழுதும் இங்கிலண்டையே சேர்ந்தது என்றுகூறி, அதை யொட்டியே வியாபாரச் சட்டங்களை உபயோகித்தனர். 1765-ல் க்ரென்வில் 'முத்திரைக் காகிதச் சட்டம்' ஒன்றை இயற்றி, அமெரிக்காவில் பத்திரங்கள் எழுதப்படும் தஸ்தாவேஜிகளெல்லாம் முத்திரைக்காகிதங்களிலேயே எழுதப்பட வேண்டுமென்று கட்டுப்படுத்தினர். அதிலிருந்து அவகேடு தொடக்கமாயிற்று. ஷை முத்திரைக் காகிதங்களின் விற்பனையினால் வசூலான பணம் பிரிட்டிஷ் அரசாங்கத்தையே சேருவதாயிருந்தது; மேலும், அந்தச் சட்டம் அமெரிக்கர்களது தகவலின்றி, பிரிட்டிஷ் பார்லிமென்டாரால் இயற்றப்பட்டது.

அமெரிக்கர்கள் அந்தச் சட்டம் அநீதியானதென்று கூறி அதை எதிர்த்தனர். வரி செலுத்துவதென்றாலே அதற்கு இங்கிலீஷ்கார

எளிதில் இணங்குவதில்லை. அதிலும், வரி செலுத்துவோருடைய அல்லது, அவர்களது பிரதிநிதிகளுடைய சம்மதமின்றி விதிக்கப் படும் வரியைச் செலுத்த அவர்கள் மறுப்பது நிச்சயம். அமெரிக்கர்களும் அதே ஜாதியைச் சேர்ந்தவர்களாதலால், தமது சம்மதியின்றி, பல்லாயிரம் மைல் தூரத்திற்கப்பால் உள்ள பார்லிமென்டினால் ஆலோசனையின்றி விதிக்கப்பட்ட அவ்வரி அக்கிரமமான சுமையென்று குறை கூறினர். 'பிரதிநிதித்துவ மில்லாமல் வரி விதிப்பது கொள்ளையடிப்பது போன்றதே'' என்று அவர்கள் கூக்குரலிட்டனர். அதாவது அமெரிக்கர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் எவரும் ஸிரிட்டிஷ் பார்லிமென்டில் இல்லையாகையால் அமெரிக்கர்களின்மீது வரிவிதிக்கும் உரிமை அந்தச் சபைக்குக் கிடையாது என்று அவர்கள் உக்கிரமாக வாதித்தனர். ஆனால், ழ்ரென்வில் மந்திரி அவ்விஷயத்தில் பெரிய தவறு செய்துவிட்டதாக நாம் எண்ணுதல்கூடாது. அவர் அமெரிக்கர்களுடைய சுதந்திரத்தைக் குறைக்கவேண்டுமென்று கருதவே இல்லை. அப்பொழுது அமெரிக்கர்கள் ஒற்றுமையின்றி 13 மாகாணங்களில் பிரிந்திருந்தமையாலும், நியாயமாக அவர்கள் ஸிரிட்டிஷ் அரசர்களது பிரஜைகளாய் இருந்ததுபற்றியுமே அவர் பார்லிமென்டின் சட்டத்தினால் வரி வசூல்செய்ய முயன்றார். மேலும், அமெரிக்காவின் பாதுகாப்பிற்காக ஒரு நிரந்தரமான சேனையை அங்கு வைக்க அவர் எண்ணி இருந்தார்; அதன் செலவை அமெரிக்கர்களிடமிருந்து வசூலிக்க வேண்டுமென்பதைக் கொண்டே, அவ்வாறு அவர் முத்திரைக்காகிதச் சட்டத்தை இயற்றினார். அவருடைய கொள்கையிலோ செய்கையிலோ புதிய தவறு எதுவும் இல்லை. ஆனால் அமெரிக்கர்கள் முன்போலின்றி சுயாதீனவேட்கையை அதிகமாகக் கொண்டிருந்தனர். வயதுவந்த பெண் தாயின் கட்டளைகளை உல்லங்கனம் செய்வதுபோல அமெரிக்கா நடந்துகொண்டது. எனவே 1766-ல் ராக்கிங்ஹாம் அந்தச் சட்டத்தை விலக்கிவிடுவது அவசியமாயிற்று.

ஆனால், அதோடு வியவகாரம் முடிந்துவிடவில்லை. குடியேற்ற நாடு சம்பந்தமாய் சட்டமியற்றும் அதிகாரம் ஸிரிட்டிஷ் பார்லிமென்டுக்கு உண்டென்று இங்கிலீஷ்காரர்கள் வாதித்தனர். ச்சாதம் பிரபு மாத்திரம் அமெரிக்கருடைய சம்மதியின்றி அவர்கள்மீது

வரிவிதிப்பது அநுசிதமான செய்கையென்று கூறிவந்தார். ஆனால் அரசாங்கத்தார், தமது பிடியை விடாமல், அமெரிக்கர்களின்மீது புதிய புதிய வரிகளை விதிக்கலாயினர். அமெரிக்கர்களோ வரி செலுத்த மறுத்துவந்தனர். 1770-ல் கலகம் நடந்தது; துப்பாக்கிப் பிரயோகமும் அவசியமாயிற்று. தாய் நாட்டிற்கும் குடியேற்றநாட்டிற்கும் பகைமை முற்றிக்கொண்டே போயிற்று.

1770-ல் லார்ட் நார்த் மந்திரியானபின் விஷயங்கள் இன்னும் கேவலமான நிலைமையை யடைந்தன. நார்த் தமது முன்னோர்களின் அடிச் சுவடுகளைப் பின்பற்றியே நடந்தார். அவருக்கு முன் வேலைபார்த்த மந்திரிகள் அமெரிக்காவிற்குள் இறக்குமதியாகும் கண்ணாடி, காகிதம், தேயிலை முதலிய பண்டங்களின்மீது தீர்வை விதித்திருந்தனர். லார்ட் நார்த் அமெரிக்கர்களை சமாதானப்படுத்தும் பொருட்டு தேயிலைமீது விதித்த தீர்வையை மாத்திரம் உறுதிப்படுத்தி மற்ற பண்டங்களின்மீது விதித்திருந்த தீர்வைகளைத் தள்ளுபடி செய்துவிட்டார். ஆனால் அமெரிக்கர்கள் வரித் தொகை அதிகமாயிருந்த காரணம்பற்றிக் குறைகூறவில்லை; பிரதிநிதித்துவமின்றி வரிவிதிப்பது தவறு என்றும், அவ்வாறு விதிக்கப்படுவது அரைக்காசேயானாலும் அதைக் கொடுப்பது வெட்கக்கேடான காரியமென்றும் அவர்கள் வாதாடினர். எனவே, லார்ட் நார்த் செய்த முயற்சி பலிக்கவில்லை. அமெரிக்கர்கள் தேயிலைத் தீர்வையையும் செலுத்த மறுத்துவிட்டனர்.

1773-ல் மேற்கூறியவாறு தீர்வை விதிக்கப்பெற்ற தேயிலையைச் சுமந்துகொண்டு சில கப்பல்கள் அமெரிக்காவில் பாஸ்டன் (Boston) என்ற துறைமுகத்திற்குவந்தன. உடனே சில அமெரிக்கர்கள் சுதேசிகளான சிவப்பு இந்தியர்கள்போல மாறுவேஷந்தரித்து ஓடி கப்பல்களுக்குள் புகுந்து, தேயிலைக் கட்டுகளை வாரிக் கடலில் எறிந்துவிட்டு ஓடிப்போயினர். அது சட்ட விரோதமான கிளர்ச்சியென்று பிரிட்டிஷ் துரைத்தனத்தார் உணர்ந்தனராயினும், குற்றவாளிகளைக் கண்டுபிடிக்க அவர்களால் இயலவில்லையாதலால், அந்தத் துறைமுகத்தையே மூடிவிடும்படி உத்தரவு பிறப்பித்தனர். அதனால் சில குற்றவாளிகளின்பொருட்டு, பாஸ்டான் பட்டணம் முழுதுமே தண்டிக்கப்பட்டதுபோலாயிற்று. அதன்பிறகு மஸ்ஸாச்சூஸெ

ட்ஸ் (Massachusetts) என்ற இடத்தின் உரிமைகளும் பிடுங்கப்பட்டன. அமெரிக்காவில் அடக்குமுறையை உபயோகிப்பதற்கு ஃப்ரிட்டிஷ் துரைத்தனத்தார் முனைந்தனரென்பது தெளிவாயிற்று. அதைக் காண அமெரிக்கர்களுடைய வீராவேசம் அதிகமாயிற்று.

உடனே, அமெரிக்காவின் பதின்மூன்று சிறுமாகாணங்களுள் பன்னிரண்டு, பிலடெல்பியா (Philadelphia) என்ற இடத்திற்குத் தன்தன் பிரதிநிதிகளை அனுப்பி, ஃப்ரிட்டிஷ் துரைத்தனத்தாரை ஒற்றுமையாக எதிர்ப்பதுபற்றி ஆலோசிக்கலாயின. தாய் நாட்டின் அதிக்கிரமமான செய்கைகளைக் கண்டித்துத் தங்களது சுயாதீனத்தை நிலைநாட்டுவதற்கு அமெரிக்கர்கள் போர்புரியவும் ஆயத்தமாயினர். அப்பொழுது இங்கிலண்டில் ச்சாதம் பிரபுவும் ஃபர்க் முதலிய பிரமுகர்களும் அமெரிக்கர்களுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆலோசனைகூறினர். அவர்களது சொல்லை எவரும் பொருட்படுத்தவில்லை. 1775-ல் லார்ட் நார்த் சற்றுப் பணிந்துகொடுத்து, அமெரிக்கர்களுக்கு சிறிதளவு அநுகூலமாய் நடக்க முயன்றார். ஆனால் அவ் அரைகுறையான நன்மைகளை அமெரிக்கர்கள் உல்லங்கனம்செய்து, இரண்டுமாத காலத்தில் யுத்தத்தைத் தொடங்கிவிட்டனர்.

ஃப்ரிட்டிஷ் துருப்புகள் எற்கெனவே பாஸ்டன் நகரத்தில் தங்கியிருந்தன. 1775-ல் எப்ரல்மாதத்தில் லெக்சிங்டன் (Lexington) என்ற இடத்தில் ஃப்ரிட்டிஷ் சேனை தோல்வியடைந்தது. இரண்டு மாதங்களுக்குப் பின்னர் பங்கர்ஹில் (Bunker Hill) என்ற குன்றினருகில் ஒரு யுத்தம் நடந்தது. அங்கும் அமெரிக்கர்களது கட்சி மேலோங்கி நின்றது. மேலும் கீர்த்திபெற்ற வீரரான ஜார்ஜ் வாஷிங்டன் (George Washington) என்பவர் அமெரிக்க சேனாதிபதியாக நியமிக்கப்பட்டார். அவர் மகா கூர்மையான புத்தியும் அதிக ஊக்கமும் உடையவர். அவர் தமது ஊக்கம் தமது போர்வீரர்களுக்கும் உண்டாகும்படி செய்தார்.

1776-ம் வருஷம் ஜூலை மாதம் 4-ம் தேதியன்று பதின்மூன்று தனி அரசுகளும் ஒன்றுகக்கூடி காங்கிரஸ் (Congress) என்ற சபையை அமைத்து தமது சுயாதிபத்தியத்தை ஸ்தாபித்துக்கொண்

டன. பிலெடெல்பியாவில் அந்த மகாசபை நடைபெற்றது. அங்குக் கூடிய பிரதிநிதிகள் பதின்மூன்று தனி அரசுகளாலும் அனுப்பப்பட்டு வந்தவர்கள். "சுயாதீன உறுதிப் பத்திரம்" (Declaration of Independence) ஒன்றை அவர்கள் தயாரித்து வெளியிட்டனர். அதுமுதல், அமெரிக்காவின் மீது இங்கிலண்டுக்கு எவ்வித அதிகாரமும் இல்லாமல் போயிற்று. மேலும், அதுவரையில் தனித்தனியாகவும் வெவ்வேறு துரைத்தனமாகவும் இருந்த அப் பதின்மூன்று மாகாணங்களும் ஒன்றுகப் பிணைக்கப்பட்டு, அமெரிக்க ஐக்கியமாகாணங்கள் (United States of America) என்று குறிக்கப்படுகின்றன. எல்லாவற்றிற்கும் பொதுவான மத்திய அரசாங்கம் ஒன்றும் ஏற்பட்டது. இப்பொழுது உலகில் முதன்மையான ஸ்தானம் பெற்றுள்ள அமெரிக்க அரசு 18-வது நூற்றுண்டு வரையில் இங்கிலண்டுக்கு உட்பட்டு, பராதீனமான நாடாகவே இருந்து வந்தது. 1776 முதல் அமெரிக்க நாடுகள் பூர்த்தியான சுயாதீனத்தையடைந்து தாய்நாடான இங்கிலண்டின் சம்பந்தத்தையும் விலக்கித் தள்ளிவிட்டு, நாகரிகத்திலும் செல்வத்திலும் மற்றெல்லாச் சிறப்புகளிலும் துரிதமாக அபிவிருத்தி யடைந்தன. ஆனல் அமெரிக்கர்கள் தமக்குத் தாமே சுயாதீனத்தை உண்டாக்கிக் கொண்டாலும், அதை பிரிட்டிஷ் துரைத்தனத்தார் ஒப்புக்கொள்ளுமாறு செய்ய, சில வருஷ காலம் அவர்கள் போர்புரிய வேண்டியதாயிற்று. எண்ணிறந்த வகைகளில் தமக்குப் பொருளைச் சொரிந்துவந்த அமெரிக்க நாடுகளை விட்டுவிட பிரிட்டிஷ் அரசாங்கத்தார் எளிதில் இணங்குவார்களா ?

அமெரிக்க சுயாதீனப் போரில் இருதிறத்தாரின் சேனைகளும் தொகையிலும், பலத்திலும், பயிற்சியிலும் ஏறக்குறைய ஒரேமாதிரியாக இருந்தன. அவ்வாறு போர் நேரிடுமென இரண்டு கட்சியாரும் எதிர்பார்க்கவில்லை யாதலால், விரைவில் கூட்டப்பட்ட சேனைகளே யுத்தகளத்தில் சந்தித்தன- மேலும் அமெரிக்காவிலும், இங்கிலண்டிலும், அந்த யுத்தத்தின் நியாய அநியாயத்தைப் பற்றி பலமான அபிப்பிராய வேற்றுமை இருந்துவந்தது. தாய்நாட்டுடன் போரிடுவது அநீதம் என்று சிலரும், அது ஒழுங்கானதே என்று சிலரும் வாதித்ததைப் போலவே, அமெரிக்காவின் மீது வரி விதிப்பது

நியாயமானதென்று சிலரும், அநியாயமானதென்று மற்றவரும் கூறினர். பிரிந்து இரண்டு நாடுகளில் வாழ்ந்துவந்த ஒரே ஜாதியார் தமக்குள் அம்மாதிரி போர்புரிந்தது பலருக்கு அவமானகரமாகத் தோன்றியது. ஆகவே, இரு கட்சியாரிலும் பல பிரமுகர்கள் தாம் என்னசெய்வது என்பதை அறியாமல் தயங்கலாயினர். ஜார்ஜ் அரசர் தமது திறமை முழுதையும் உபயோகித்து வெற்றி பெற முயற்சித்தார். ஆனால் விக் கட்சியினர் அவருடன் மனப்பூர்வமாக ஒத்துழைக்கவில்லை. இங்கிலீஷ் சேனைத்தலைவர்களும் விசேஷ சாமர்த்திய முடையவர்களாயிருக்கவில்லை. அமெரிக்காது சேனாதிபதியான வாஷிங்டனும் பல இடர்களுக்குட்பட வேண்டியிருந்தது. அவருடையே சிப்பாய்களும் அதிகமான பயிற்சி பெற்றவர்களல்லர். மேலும் சில அமெரிக்கர்கள் சுயாதீன இயக்கத்தில் சேர்ந்துகொள்ளவில்லை. ஆனாலும், அமெரிக்கர்களே வெற்றியடைவார்கள் என்பது முதலிலிருந்தே தெரிந்துகொண்டு வந்தது. ஏனெனில் யுத்தம் நடந்தது அவர்களுடைய நாட்டிலாதலால், இங்கிலீஷ்காரரது சேனைக்குத் தேவையான உணவுப் பொருள்கள் யாவும் தொலை தூரத்திற்கப்பாலிருந்து வரவேண்டியதாயிற்று.

1776-ம் வருஷம் ஆகஸ்ட்மாதத்தில் ப்ரூக்லின் Brooklyn என்ற இடத்தில் இங்கிலீஷ் சேனை வெற்றியடைந்தது. ஆனால் 1777-ல் அதற்குப் பெரிய தோல்வி ஏற்பட்டது. பர்காயின் (Burgoyne) என்ற சேனைத்தலைவர் தமது சேனையுடன் கானடாவிலிருந்து தெற்கே வந்தபோது, ஸாரடோகா (saratoga) என்ற இடத்தில் எதிரிகளிடம் பணிந்துபோக வேண்டியதாயிற்று. அந்தத் தோல்வி அமெரிக்கர்களுக்கு மிகுந்த பலத்தை அளித்தது.

அதுவரையில் இங்கிலண்டுக்கும் அமெரிக்காவுக்கும் மாத்திரம் நடந்துவந்த யுத்தம் மிக உக்கிரமான ஐரோப்பிய யுத்தமாய் மாறிவிடுமோ வெனும்படி இருந்தது. 1763-ல் ஏழு வருஷயுத்தம் முடிய, பாரீஸில் சமாதானம் ஏற்பட்டதல்லவா? அந்த சமாதானத்தின்படி இங்கிலண்டுக்குப் பல நன்மைகள் ஏற்பட்டனவல்லவா? அந்த யுத்தத்திற்குப் பிறகு ப்ரெஞ்சுக்காரருடைய அதிகாரம் அமெரிக்காவில் முற்றிலும் க்ஷீணித்துப் போய்விட்டது. அமெரிக்

கர்கள் தாய் நாட்டிற்கு விரோதமாகக் கிளம்பியதற்கு அது ஒருமுக்கிய காரணம். ஏனெனில் அமெரிக்காவில் குடியேறியிருந்த ப்ரெஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் சச்சரவு நேரிட்டபோதெல்லாம் ஸிரிட்டிஷ் துரைத்தனத்தாரின் உதவி ஷி ஆங்கிலேயருக்கு வேண்டியதா யிருந்தமையால், அவர்கள் தாய்நாட்டிற்கு அடங்கியிருப்பது அவசியமாயிருந்தது. ஏழுவருஷ யுத்தத்திற்குப்பின் அமெரிக்காவில் ப்ரெஞ்சுக்காரரது அதிகாரம் ஒடுங்கிவிட்டமையால், அங்கு குடியேறியிருந்த இங்கிலீஷ்காரர்கள் தமது தாய்நாட்டின் உதவியை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது.

மேலும் ஏழுவருஷ யுத்தத்தில், இங்கிலண்டு அடைந்த வெற்றிகளைக் கண்டு மற்ற ஐரோப்பிய அரசுகள் பொறாமை கொண்டிருந்தன. மேலே விவரிக்கப்பட்டபடி, ஸிரிட்டிஷ் துரைத்தனத்தார் அமெரிக்காவுடன் சண்டையிட்ட விஷயம் ஐரோப்பிய அரசுகளுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கியது. அந்த இக்கட்டான தருணத்தில், தாமும் இங்கிலண்டுக்குத் தீங்கிழைக்க வேண்டுமென அவைகளும் தீர்மானித்துக் கொண்டன. தொலை தூரத்திலுள்ள அமெரிக்காவுடன் போராடுவதன்றி, ஐரோப்பாவிலும் போர் புரிய வேண்டியதைப்பற்றிய கவலை இங்கிலண்டிற்கு ஏற்பட்டது. ப்ரான்ஸ், ஸ்பெயின், ஹாலண்டு ஆகிய மூன்று அரசுகளும் ஒன்றன்பின் ஒன்றாக இங்கிலண்டுடன் சண்டை செய்ய முனைந்தன. பிரஷ்யா, ரஷ்யா ஆகிய இரண்டும் போர்தொடுக்கவில்லையாயினும், இங்கிலண்டினிடம் பகைமை பாராட்டின.

இங்கிலீஷ்காரருக்கு அது மகா பயங்கரமான அபாய காலமாயிருந்தது. எல்லோரும் சாதம் பிரபுவே (வில்லியம் பிட்) நாட்டைக் காப்பாற்றத் தகுந்தவரென எண்ணினர். ஏனெனில், ஏழுவருஷயுத்தம் நடந்தகாலத்தில் அவர் செய்த அரிய சேவை எல்லோருக்கும் நினைவிருந்தது. இப்பொழுதும், அவரது சௌரியத்தினாலேயே நாடு தீங்கின்றி மீளலாம் என அனைவரும் நம்பினர். ஆனால் சாதம் பிரபுவுக்கு வயது முதிர்ந்து போய்விட்டது. மேலும், அவர் அமெரிக்கர்களுக்கு உற்ற நண்பராயிருந்து, அவர்கள்மீது வரி விதித்தது தவறு என்று கூறியவர். அமெரிக்கா ஸிரிட்டிஷ் சம்

பந்தத்தை விட்டுப் பிரிந்து போகாமல், மறுபடி தானாக வந்து ஒன்று சேர்ந்துவிடும் என்று அவர் எண்ணினார். ஆகவே, அமெரிக்க யுத்தத்தை நடத்திச் செல்வதைக் காட்டிலும், ஐரோப்பிய யுத்தத்தைஊக்கத்தோடு நடத்துவதே அவருக்கு சிலாக்கியமாகத் தோன்றியது. ஜார்ஜ் அரசரோ அமெரிக்கர்களை அடக்கிவிட விரும்பினார்; விக் கட்சியினர் அமெரிக்காவுக்கு சுயாதீனம் அளிக்கத் தயாராயிருந்தனர். ச்சாத்தம் பிரபுவினால் மற்ற இருவருடனும் ஒத்துழைக்கக் கூடவில்லை. அவரது தேகமும் தளர்ச்சியடைந்து போயிற்று. 1778-ல் அவர் லார்ட் சபைக்குச்சென்று, அமெரிக்காவும் ஸிரிட்டனும் போர்புரிந்து பிரிவதால் ஏற்படக்கூடிய அபாயத்தைப்பற்றி, உக்கிரமாகப் பிரசங்கம் புரிந்தார்; பிரசங்கத்தின் முடிவில் களைத்துப் போய்ச் சாய்ந்தார். அதிலிருந்து தேறாமல் இருந்து சில தினங்களுக்குப் பிறகு இறந்துபோனார். அவர் போனபிறகு அமெரிக்காவிற்கும் ஸிரிட்டனுக்கும் சமாதானம் ஏற்படுவது முற்றிலும் பலியாததாயிற்று.

இங்கிலண்டைப் பரிபாலித்த பிரமுகர்களுள் (வில்லியம் பிட்) ச்சாத்தம் பிரபு முக்கியமான ஒருவர். பல துறைகளிலும் பல வகைகளிலும் அவர் தமது தேசத்திற்குச் செய்த அரிய ஊழியங்களும் அவரது ஒப்பற்ற மேன்மைக் குணமும் அவருக்கு என்று மழியாத புகழை உண்டாக்கின.

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஒரேசமயத்தில் யுத்தம்புரிவது ஜார்ஜ் அரசருக்கு மகா பிரயாசையான காரியமாயிருந்தது. 1781ல் லார்ட் கார்ன்வாலிஸ் (Lord Cornwallis) என்ற சேனைத்தலைவர் யார்க்டௌன் (Yorktown) என்ற இடத்தில் தமதுசேனையுடன் அமெரிக்கர்களைப் பணியவேண்டியதாயிற்று. அதோடு அமெரிக்க சுயாதீனப்போர் முடிந்ததென்றே கூறலாம். இங்கிலண்ட் கடைசியில் தோற்றுப்போயிற்று. அமெரிக்கர்கள் தங்களது பராக்கிரமத்தினால் சுயாதீனம் என்னும் விலைமதிப்பற்ற நிதியைத் தேடிக்கொண்டனர்.

1783-ல் வர்ஸெயில்ஸ் (Versailles) என்ற இடத்தில் ஏற்பட்ட சமாதானத்தினால் யுத்தங்கள் முடிவடைந்தன. 1782-லேயே அமெரிக்காவின் சுயாதீனத்தை ஸிரிட்டிஷ் துரைத்தனத்தார் அங்கீகரித்திருந்தனர்.

சுயாதீனப்போரில் அமெரிக்கா வெற்றியடைந்ததற்கான காரணங்கள் பல. இங்கிலண்டில் மந்திரிகள் திறமையற்றவர்களாயிருந்தனர். சேனையும் விசேஷப் பயிற்சி பெற்றிருக்கவில்லை. அமெரிக்க சேனாதிபதியான வாஷிங்டனுக்கு நிகரான வீரர்கள் பிரிட்டிஷ் சேனையில் காணக்கிடைக்கவில்லை. மேலும் அமெரிக்காவுடன் போர்புரிந்தது இங்கிலீஷ்காரர் பலருக்கே சம்மதியாக இல்லை. அதோடு ப்ரான்ஸ் முதலான இதர தேசங்கள் அமெரிக்காவுக்கு உதவிபுரிந்தன. இவ்வளவு மகத்தான அபாய நிலைமையில் அகப்பட்டுக்கொண்ட பிரிட்டிஷ் துரைத்தனத்தார் அமெரிக்காவை இழந்தது ஆச்சரியமானதல்ல. அச்சமயத்தில் இந்தியாவையும், கடல் ஆதிபத்யத்தையும், அவர்கள் இழக்காமல் தப்பியதே பெரிய இலாபமாகத் தோன்றியது.

(3) **மந்திரி சபைகள் : பாக்ஸ் : இளைய பிட்:**—லார்ட் நார்த் அமெரிக்க சுயாதீனப் போரில் மூழ்கிநின்று, அதிலிருந்து மீளமாட்டாதவராய்த் தத்தளித்த சமயத்தில் இங்கிலண்டிலேயே சில கலவரங்கள் ஏற்பட்டன. 1780-ல் நார்த், காதலிக் மதத்தினருக்கு சில உரிமைகளை அளிக்க முயற்சித்தார். அவருடைய முறை ஆட்சேபனைக்கு இடமற்றதாக இருந்ததானாலும், ஒருகூட்டத்தார் அமிதமான வீராவேசங்கொண்டு ஜார்ஜ் கார்டன் (George Gordon) என்பவரைத் தலைமையாகக் கொண்டு, காதலிக் கோவில்களை இடித்தெறிந்து, சிறைச்சாலைகளைத் திறந்துவிட்டு, லண்டன் நகரத்தைக் கொள்ளையிட்டு பெரிய அமளி செய்துவிட்டனர். அந்தக் கலகத்தை அடக்கியதில் அநேக ஜனங்கள் மாண்டுபோயினர். அமெரிக்கர்கள் சுயாதீனமடையப் போர் தொடுத்ததைக் கண்ட அயர்லன்டும் அதேவிதமான வேட்கையை கொள்ளத் தொடங்கியது. அயரிஷ் ஜனங்களும் சுயாதீனத்திற்காகப் போராடலாயினர். இங்கிலீஷ்காரர்கள் அயர்லன்டை நிரமத்தவருக்கவேதமது வசப்படுத்திக் கொண்டிருந்தனர். அயர்லன்டில் காதலிக் இனத்தார்களே பெரும்பாலோராக இருந்தனராஞலும், ப்ராடெஸ்டன்ட் வகுப்பாரே இப்பொழுது துன்பமிழைத்து வந்தனர். ஏனெனில், மூன்றாவது வில்லியம் அயர்லன்டை ஜயித்தபிறகு, அங்கிருந்த காதலிக் அயரிஷ்காரர் எவ்வித இராஜீய சுதந்திரமுமின்றி அடக்

கப்பட்டிருந்தனர். பலர் தமது தாய்நாட்டை விட்டு அயல்நாடுகளுக்குச்சென்றுவிட்டனர். மிகுதியிருந்த அயரிஷ்காரர்கள் ஏழைக் குடியானவர்கள்; ஜீவனத்திற்கே வழியின்றித் தவித்தவர்கள்; அவர்களது எஜமானர்கள் அவர்களை அதிகமாய் வெறுத்து வந்தனர். ஆனால் அவ்வளவு பரிதாபகரமாக ஒடுக்கப்பட்டிருந்த கா/2தலிக் குடியானவர்கள் அரசாங்கத்தை எதிர்க்க முயன்றால், அதனால் எவ்வித நலனும் ஏற்பட்டிராது. சிறுதொகையினரான ப்ராடெஸ்டன்ட் மதத்தை ஆதரித்தவர்களும் கூட அரசாங்கத்தாரின் மீது குறைகூறி வந்தனர். ஏனெனில், அயர்லன்டில் முக்கிய உத்தியோகங்களெல்லாம் அயரிஷ்காரருக்கு அளிக்கப்படாமல் இங்கிலீஷ்காரருக்கே கொடுக்கப்பட்டன. அயர்லன்ட் தேசத்து துரைத்தன நிர்வாகம் இங்கிலண்டுக்குப் பல வழிகளில் இலாபகரமாயிருப்பதற்கு அநுகூலமாக நடத்தப்பட்டது. அயர்லன்டில் கைத்தொழில்கள் அழிந்துபோயின. அயரிஷ் பார்லிமென்டுக்கு உண்மையில் எவ்வித அதிகாரமும் இல்லை. மூன்றாவது ஜார்ஜ் அரசர் முடிசூடியபின் அந்த நாட்டின் நிலைமை முன்னிலும் அதிக கேவலமாயிற்று. ஏனெனில் ஜார்ஜ், மேலே குறிக்கப்பட்ட பிராடெஸ்டன்ட் அயரிஷ்காரரையும் துன்புறுத்தத் தொடங்கினர். எனவே இங்கிலீஷ்காரரது சுயநலங் கருதிய ஆட்சியில் அதிருப்தியடைந்து வந்த அயரிஷ் மக்கள் அமெரிக்கர்களைப் பின்பற்றி பிரிட்டிஷ் துரைத்தனத்தை எதிர்க்க எண்ணினர். ஹென்றி க்ரா/2ட்டன் (Henry Grattan) என்பவர் அயரிஷ் பார்லிமென்டில் அதிக செல்வாக்கடைந்து சேனையைக் கூட ஆயத்தப்படுத்தினர். அமெரிக்கர்களைப் பின்பற்றி அயரிஷ் பார்லிமென்டில் 1781-ல் அயர்லன்டின் சட்ட சுயாதீன உறுதிப்பத்திரம் (Declaration of Legislative Independence) ஒன்று நிறைவேற்றப்பட்டது. அதில் அயரிஷ்பார்லிமென்ட் சபை, பிரிட்டிஷ் பார்லிமென்டின் ஆதிபத்தியத்திற்கு உட்பட்டதல்லவென்று குறிப்பிடப்பட்டிருந்தது. அயரிஷ் குடியானவர்களுக்கு ஏற்பட்டிருந்த துன்பங்களை நிவர்த்திக்கும் பல மார்க்கங்களையும் க்ரா/2ட்டன் கண்டுபிடித்தார்.

அமெரிக்க யுத்தமும், ஐரோப்பிய அமளியும், அயர்லன்டின் சச்சரவும் பிரதம மந்திரி லார்ட் நார்த்தின் மூளை கலங்கும்படி

செய்துவிட்டன. நாட்டில் சமாதானம் நிலைத்திருக்கும் காலத்தில், அவர் நிர்வாகம் நடத்தக்கூடியவரே யன்றி, நாற்புறங்களிலும் போர்க்குண்டுகள் வந்து தாக்கிக்கொண்டிருந்த அந்தக் காலத்தில் திருப்திகரமாக ஆட்சிபுரியும் திறமையும் அநுபவமும் உடையவரல்லர். ஆகவே, 1782-ல் அவர் திடீரென்று வேலையை இராஜிநாமாச் செய்துவிட்டார்; அம்மாதிரி அவர் திடீரென்று விலகிக்கொண்டது ஜார்ஜ் அரசருக்குக் கோபத்தை விளைவித்தது.

அதன் பிறகு ராக்கிங்ஹாம் பிரபு இரண்டாவது முறை மந்திரி சபையை அமைத்தார். அவர் நாட்டிற்கு நன்மை பயக்கத்தக்க பொருளாதார சம்பந்தமான சில சீர்திருத்தங்களைச் செய்ததன்றி, அயரிஷ் கலவரத்தை ஒருவாறு முடிவுறச் செய்தார். கிரேட் பிரிட்டனின் முயற்சிப்படியே அயரிஷ் பார்லிமெண்டுக்கு சட்டமியற்றும் சுதந்திரம் அளிக்கப்பட்டது. ஆனால், ராக்கிங்ஹாம் திடீரென்று இறந்து போனமையாலும், அவருடைய சகாக்களில் ஒருவருக்கொருவர் மனஸ்தாபம் இருந்து வந்தமையாலும், 1782-ல் ஜூலையில் அரசருக்கு ஆப்த நண்பராயிருந்த சிவர் ஷெல்பர்ன் (Shelburne) என்பவரைத் தலைவராய் வைத்து மந்திரிசபை யமைத்தனர்.

ஷெல்பர்ன் மந்திரிசபை அமெரிக்க யுத்தத்தை முடிவுறும்படி செய்து, சீக்கிரத்தில் கலைந்து போய்விட்டது. ஷெல்பர்னுக்கு அரசரது ஆதரவு இருந்ததானாலும், பொதுவாக, மற்ற எல்லோராலும் அவர் வெறுக்கப்பட்டார். அவருக்கு விரோதமாக இரு வகுப்பார் வேலைசெய்து வந்தனர்; லார்ட் நார்த்தின் தலைமையிலிருந்த டோரிகளும், பாக்ஸ் (Fox) என்ற அநுபவசாலியான தலைவரைக் கொண்ட விக் கட்சியாரும் ஷெல்பர்ன் மந்திரி சபையை எதிர்த்து வந்தனர். பாக்ஸ், நார்த் ஆகிய இருவரும் வெவ்வேறு கட்சியைச் சேர்ந்தவர்களாதலால் நெடுங்காலமாக ஒருவருக்கொருவர் வெறுப்பும் பகைமையும் கொண்டு வேலைசெய்து வந்தவர்கள். ஆனால், ஷெல்பர்னது மந்திரி சபையைக் கவிழ்க்கும் பொருட்டு, அவர்கள் தமது வேற்றுமைகளைப் பாராட்டாமல் ஒன்றுகூடி 1783-ல் கூட்டாக ஒரு மந்திரிசபையையமைத்தனர். டோரித் தலைவர் நார்த்தும், விக் தலைவர் பாக்ஸும் அவ்வாறு ஒன்று

சேருவார்களென்று எவரும் எதிர்பார்க்கவில்லை. பாக்ஸ் கூட அதை எதிர்பார்த்தவரன்று. ஆனால் இரண்டு கருத்துகளை நிறைவேற்றும் பொருட்டு, அவர் அவ்வாறு சேர்ந்துகொண்டார். ஒன்று, ஷெல்பர்னது மந்திரி சபையைக் கலைப்பது. மற்றொன்று, அதைக் காட்டிலும் முக்கியமானது; அவ்விருவரும் பொறுப்புள்ள கட்சித் தலைவர்களாதலால், ஜார்ஜ் அரசர் தமதிச்சைப்படி அநாமதேயர்களுக்கெல்லாம் மந்திரி பதவியைக் கொடுத்தது அவர்களுக்கு சம்மதியாக இல்லை. லார்ட் நார்த் முன்பு அரசருக்கு அநுகூலமாக இருந்தாரானாலும், இப்பொழுது பாக்ஸுடன் சேர்ந்துகொண்டு, பார்லிமென்டில் இராஜீயக் கட்சித் தலைவர்களுக்கு உண்மையான நிர்வாக அதிகாரம் கிடைக்கும் பொருட்டுப் போராடத் தொடங்கினர். ஜார்ஜ் அந்தக் கூட்டு மந்திரிசபையை உள்ளூற வெறுத்தாரானாலும், வேறு வழியில்லாமையால், அதை ஏற்றுக் கொண்டார். மேலும், ஜார்ஜினுடைய ஆடம்பரமும் டாம்பீகமும் நிறைந்த புதல்வர் அந்தக் கூட்டுக்கட்சி மந்திரி சபைக்கு அநுகூலமாக இருந்தார். இளவரசரது செய்கைகள் அரசருக்குச் சம்மதியாக இல்லை. போர்ட்லன்டு பிரபு (Duke of Portland) என்பவர் பெயருக்கு பிரதம மந்திரியாயிருந்தார். சகலமான அதிகாரமும், நார்த், பாக்ஸ் ஆகிய இருவரிடமே இருந்தது. ஜார்ஜ் அக்கூட்டு மந்திரி சபையை வேரறுக்க எப்பொழுதும் முயன்றுகொண்டே வந்தார்.

1783, இந்தியதேச பரிபாலனத்தின் பொருட்டு பாக்ஸ் 'இந்திய மசோதா' (India Bill) ஒன்றைப் பார்லிமென்டில் புகுத்தினர். அது பர்க் என்ற பிரமுகரால் தயாரிக்கப்பட்டது. இந்தியாவில் வியாபாரம் செய்யவந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் கிரமமாகவோ கிரமத்தவறாகவோ இந்தியா தேசத்தில் அரசாட்சிபுரிவது அவசியமாயிற்று. வியாபாரக் கூட்டத்தார் அரைத்தன நிர்வாகத்தை நடத்தமுடியாதாகையால், பார்லிமென்டாரால் நியமிக்கப்படும் எழு கமிஷனர்கள் இந்திய பரிபாலனத்தை நடத்த வேண்டுமென்று பாக்ஸ் பிரேரணை செய்திருந்தார். ஆனால் கிழக்கிந்தியக் கம்பெனியார் தமது செல்வாக்கை இழந்துவிட மனமற்றவராய், அந்த மசோதாவை எதிர்த்தனர். அரைத்தன நிர்வாகத்தைக் கம்பெனியாரிட

மிருந்து எடுப்பதானல், அதை அரசர் வகிப்பது நியாயமே யன்றி எழு கமிஷனர்களுக்கு அதையளிப்பது அசம்பாவிதமான செய்கை என்று வாதித்தனர். "இந்த மசோதா நிறைவேறினல், அரசாது சிரத்திலிருக்கும் கிரீடத்தை எடுத்து, பாக்ஸின் சிரத்தில் சூட்டவேண்டும்" என்று ஒருவர் இளக்கரமாகக் கூறினர். காமன்ஸ்சபையில் அந்த மசோதா நிறைவேறியதானலும் லார்ட்ஸ் சபையில் தள்ளிவிடப்பட்டது. உடனே அரசர் கூட்டுமந்திரி சபையைக் கலைத்துவிட்டு, வேறு மந்திரிகளுக்காகத் தேடியலைந்தார். எழுவருஷ யுத்த சமயத்தில் மந்திரி பதவியை வகித்து, கீர்த்தி பெற்றிருந்த ச்சாதம் பிரபுவுக்கு அவரைப்போலவே அதிகத் திறமைவாய்ந்த புதல்வர் ஒருவர் இருந்தார். அவருக்கும் வில்லியம்பிட் என்பதே பெயர். (இவ்விருவரையும் வேற்றுமைப்படுத்தும்பொருட்டு ச்சாதம் பிரபுவை "மூத்த பிட்" (Elder Pitt) என்றும், அவரது குமாரரை "இளைய பிட்" (Younger Pitt) என்றும் குறிப்பிடுவது வழக்கம். இளைய பிட், தமது 23-வது வயதிலேயே பார்லிமெண்டில் ஸ்தானம் வகித்திருந்தார். ஷெல்பர்ன் மந்திரி சபையில் அவர் பொக்கிஷ மந்திரியாக இருந்தார். இளைய பிட் வயதில் மிகச் சிறியவராயினும், வயதுசென்ற பலரைக்காட்டிலும் அதிகமான அறிவும் ஆற்றலும் படைத்திருந்தார். பாக்ஸ், மந்திரி சபையைவிட்டுச் சென்றதும், வேறெவரும் ஜார்ஜ் அரசரிடம் மந்திரியாக இருக்கமாட்டார்கள் என்று அவர்கள் பெருமையாகக் கூறினர்கள். ஆனல் பிட் தைரியமாக முதல்மந்திரி வேலையை ஏற்றுக்கொண்டாரானலும், தம்மோடு ஒத்துழைக்கத் தகுந்த சகாக்களைப் பொறுக்கி யெடுப்பது அவருக்கு அதிக பிரயாசையாக இருந்தது. ஆனல் காமன்ஸ் சபையில் பெரும்பாலோர் அவரை ஆதரிக்கவில்லை. அரசர் விரும்பும் வரையில் தாம் மந்திரியாயிருப்பது நியாயமானதேயென்று பிட் கூறிவந்தார். அதிக சீக்கிரத்தில், அவரது மகிமை பொதுஜனங்களுக்குத் தெரிந்து போயிற்று. அவரதுஇளமையும், ஊக்கமும், துணிபும் அவர் உதித்தகுலமும், அவரது தந்தையின்புகழும், அவர் காட்டிய நிர்வாக சாமர்த்தியமும் எல்லோரையும் வசியப்படுத்தின. அரசாது ஆதரவும் அவருக்குப் பூர்த்தியாக இருந்தது. டோரிக்கட்சியின் தலைவரான நார்த்தின் செல்வாக்கு சிறு

சுச்சிறுகக் குறைந்துவந்தது. அந்தக் கட்சியும் அரசரது சொற்படி நடக்கலாயிற்று. விகு கட்சி ஏற்கெனவே சீர்குலைந்து போயிருந்தது. எல்லோரும் பாக்ஸ், நார்த் முதலியோருடைய கூட்டு மந்திரி சபையைவிட பிட்தலைமை நடாத்திய மந்திரி சபையே சிலாக்கியமானதெனக் கருதினர். 1784 ல் பார்லிமென்ட் தேர்தல் நடந்தது. அதில், பிட்டை ஆதரிப்பவர்களே அதிகமாய்த் தேர்தலில் வெற்றிபெற்று வந்தமையால், அவருக்கு பலம் அதிகரித்தது. எனவே, ஜார்ஜ் அரசரால் ஆதரிக்கப்பட்டிருந்தவரான பிட்டுக்கு பார்லிமெண்டின் ஆதரவும் ஏற்பட்டது.

மூன்ருவது ஜார்ஜ் தமது இச்சையின்படி மந்திரிகளை நியமித்து வந்தபொழுது மந்திரிசபைகள் தோன்றுவதும் கலைந்துபோவதுமாய் அற்பாயுள் படைத்தவையாகவே இருந்தன. ஆனுல் பிட் பதினேழு வருஷகாலம் அரசாட்சி நடத்திஞரென் பதிலிருந்து அவருடைய அபாரமான திறமை எவ்வளவு என்பது தாஞக விளங்கும். ஒருவர் தமது 25-வது வயதில் ஒருதேசத்தின் பிரதம மந்திரியின் பதவியையடைவதான கௌரவம் எல்லோருக்கும் கிடைக்கத் தகுந்ததன்று. அவரது தந்தையிடமிருந்த சில சிறந்தகுணங்கள பிட்டினிடம் இல்லையாஞலும் தந்தையைவிட புத்திரர் அதிகமான காரிய நிர்வாகத் திறமை உடையவராயிருந்தது உண்மையான விஷயம். தந்தை பிரசங்கம் புரிவதில் அபாரவல்லமையுடையவர்; பிட் அதில் அவ்வளவு திறமையுடையவரான்ருஞலும், வாக்கு வாதம் செய்வதிலும், தமது செய்கைகளுக்குஆதாரமான அம்சங்களை பார்லிமென்டுக்கு எடுத்துரைப்பதிலும் அதிக சமர்த்தர். அவருடன் கூட வேலைபார்த்த மற்ற மந்திரிகள் அவருக்கு அடங்கியே நடந்தனர். காபினட் சபையிலும் பார்லிமென்டிலும் அவருடைய செல்வாக்குக்கு எதிர்ப்பே இல்லாதிருந்தது. நிர்வாக முறைகளை அநுஷ்டிப்பதில் அவர் சிறிதும் அஞ்சாமல் நடந்தார். அவர் கிரமத்தவருன காரியங்களில் பிரவேசித்தவரல்லர். பணம், பதவி, பட்டம் முதலியவைகளில் அவருக்கு அதிக அவா ஏற்படவில்லை. ஆஞல் சர்வ அதிகாரத்தையும் வகித்து ஆட்சி புரிய வேண்டுமென்ற ஆசை அவருக்கு இருந்தது. தன்னடக்கம் சுயநம்பிக்கை, நிர்ணய புத்தி, நிதானப்போக்கு முதலிய சிறந்த

குணங்கள் அவரிடம் அதிகமாக இருந்தமையால் அவர் பார்லிமென்டின் தலைவராயிருக்க அருகமானவராயிருந்தார். துன்பம் நேரிட்டபொழுது, அவர் மனக்கலக்கமடையாமல் நாட்டைக் காப்பாற்றத் தகுந்தவராயுமிருந்தார். வரவு செலவு சம்பந்தமான சீர்திருத்தங்கள் செய்வதிலும், கட்சித்தலைமை வகிப்பதிலும் அவர் அதிகத் தேர்ச்சி பெற்றவர். பார்லிமென்டின் தலைவர்களுள் அவர் முக்கியமானவர். அரசருடன் நெருங்கிப் பழகிய காலத்திலும், அவர் தமது சுயநிர்ணய உறுதியைவிட்டுக் கொடுத்ததில்லை. டோரிக் கட்சியையே சேர்ந்தவராலும், அவர் தாராளமான மனதும் விசாலபுத்தியும் படைத்தவர். பார்லிமென்டின் சீர்திருத்தம், அயர்லன்டின் சுயாதீனம், வியாபார விருத்தி, கைத்தொழில் பெருக்கு முதலிய விஷயங்களில் அவர் முன்னேற்றமான அபிப்பிராயம் கொண்டிருந்தார். துரைத்தன நிர்வாகத்தில் இருந்துவந்த அக்கிரமமும், கெடுதல்களும் அவரது காலத்தில் அற்றுப்போயின. ஆனால் தமது அபிப்பிராயத்தின்படி பூர்த்தியான சீர்திருத்தங்களைச் செய்வதற்கு அவருக்குமன உறுதி இல்லையெனவே கூறவேண்டும். அவரது துணைவர்கள் அவரை எதிர்த்தால் அவர் உடனே தமதுபிடியை விட்டுவிடுவார். அதனால் அவர் அதிகமான சீர்திருத்தங்களை இயற்றவில்லையானாலும், துரைத்தன பரிபாலன முறையை அவர் ஒரு புதிய போக்கில் திருப்பிவிட்டதன்றி, நிர்வாகச்செலவைக் குறைத்து, அரசாங்கத்தின் வேலைத்திறமையை அதிகப்படுத்தினார்; இலஞ்சம் கொடுத்தல் வாங்கல் முதலிய கிரமத்தவறுமான செய்கைகள் அற்றுப்போம்படி செய்தார். தனவந்தர்களில் பலருக்கு அவர் பிரபுவின் பதவிகளை அளித்து அவர்களது ஆதரவு டோரிக் கட்சிக்குக் கிடைக்கும்படி செய்துவந்தார். இவ்வாறு குணத்திலும், திறமையிலும், கொள்கையிலும் பிட் மற்றவரைவிட எத்தனையோ மடங்கு சிறந்து விளங்கினார்.

பிட்டுக்குமுன், பாக்ஸ் இந்திய மசோதா ஒன்றைக்கொணர்ந்து பிரேரணைசெய்ய, அது தோல்வியடைந்த விருத்தாந்தம் முன்னரே கூறப்பட்டிருக்கிறது. அவரைப் பின்பற்றி பிட் 1784-ல் 'இந்தியச் சட்டம்' (India Act) என்ற சட்டமொன்றைக் கொணர்ந்து அதை நிறைவேற்றிவைத்தார். அதன்படி பாக்ஸ் விரும்பிய

அளவு மாறுதல் ஏற்படவில்லையானாலும், கிழக்கிந்தியக் கம்பெனியின் அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டது. அதாவது வியாபாரம் நடத்துவதில் அந்தக் கம்பெனிக்குப் பூர்த்தியான சுயாதீனம் இருந்தது; ஆனால் அதன் அரசாட்சி சம்பந்தமான நடவடிக்கையை கவனிப்பதற்கு இங்கிலண்டில் "மேல் விசாரணை சபை" (Board of Control) ஒன்று நியமிக்கப்பட்டது. அந்தச் சபைத் தலைவர் காபினட் அங்கத்தினராயிருந்தார். அந்த ஏற்பாடு 1858-ல் கிழக்கிந்தியக் கம்பெனி எடுபட்டுப் போனவரையில் நிலைத்திருந்தது. ஏனெனில் அந்தச் சபை திருப்திகரமாக வேலைசெய்து வந்தது. அப்பொழுது **வாரன் ஹேஸ்டிங்ஸ்** (Warren Hastings) என்பவர் இந்தியாவில் கவர்னர் ஜெனரலா யிருந்தார். அவர் பற்பல கொடுங்கோன்மைச் செயல்களை நடத்தியதாக பார்லிமெண்டில் குற்றஞ்சுமத்தப்பட்டார். அவருடைய வழக்கைப்பற்றிய விசாரணையும் வாதங்களும் நீடித்து நடந்துவந்தன. கடைசியில் அவர்மீது குற்றமில்லை யென்றுதீர்ப்புச் சொல்லப்பட்டது. ஆகவே, இந்தியாவின் அரசாட்சி சம்பந்தமாகவும் பிட் ஒரு நிரந்தரமான, திருப்திகரமான ஏற்பாட்டைச் செய்து வைத்தார்.

அமெரிக்க சுயாதீனப் போரினால், இங்கிலண்டுக்கு அன்னிய நாடுகளில் இருந்துவந்த மதிப்பு குறைந்து போயிருந்தது. பிட் மறுபடியும் இங்கிலண்டின் மதிப்பை ஸ்தாபித்தார். ப்ரான்ஸுடன் அவர் வர்த்தக உடன்படிக்கை யொன்றைச் செய்து முடித்தார். பிரஷ்யா, ஹாலண்டு முதலிய அரசுகளுடன் மீண்டும் சிநேகப்பான்மை உண்டாகும்படி அவர் ஏற்பாடு செய்தார்.

1788ல் மூன்றாவது ஜார்ஜ் அரசருக்கு புத்தி மாறாட்டம் ஏற்பட்டமையால், அவர் அரசியல் விஷயங்களை கவனிக்க இயலாதவரானார். அரசருடைய புதல்வர் இராஜப்பிரதிநிதியாக இருக்க வேண்டுமென்று பாக்ஸ் முதலானவர்களை வற்புறுத்தினார்கள். இளவரசர் விக் கட்சிக்கு அநுகூலமானவர். பிட் அதை உணர்ந்து எவரையாகிலும் இராஜ்ஜியத் தலைவராக நியமிக்க பார்லிமெண்டுக்கே உரிமை உண்டென்று சுட்டிக்காட்டி, அதைக்கொண்டே சட்டமியற்றுவித்து இளவரசரை இராஜப் பிரதிநிதியாக்கினர். பாக்ஸ் கூறியதற்கும் பிட் செய்ததற்கும் எவ்வித வேற்றுமையு

மில்லையானலும், பிட் அநுசரித்த முறை ஒருவிதத்தில் மிக முக்கியமானது. நாட்டின் அரசியல் நிர்வாகத்தை யார் வகிப்பதென்பதைத் தீர்மானிக்கும் அதிகாரம் பார்லிமென்டைச் சேர்ந்தது என்பதை அவர் அநுஷ்டானத்தில் செய்து காட்டினர். மூன்றுவது ஜார்ஜ் விரைவில் குணமடைந்து, பிட்டினிடம் முன்னிலும் அதிக அன்பு காட்டினர்.

பிட்டின் மேம்பாடு அப்பொழுது உச்சநிலைமையடைந்திருந்ததென்றே கூறவேண்டும். பார்லிமென்டும் அரசரும் ஜனங்களும் அவரது சொற்படி நடந்தனர். அவரை எதிர்த்தவர் சொற்பமானவர்களே. நாட்டில் வளமும் அமைதியும் திருப்தியும் பாவியிருந்தன. பிட் தமது ஆயுள்காலம் முழுதும் பிரதம மந்திரியாயிருப்பாரென்று எல்லோரும் கருதினர். அப்பொழுது ப்2ரான்ஸில் மகா பயங்கரமான பேரிடி போன்ற ஒரு சம்பவம் நிகழ்ந்து, ஐரோப்பா முழுதையும் நடுங்கச் செய்தது; அந்தச் சம்பவம் உலக சரித்திரத்தில் அழியாத பிரசித்தி யடைந்ததாயிற்று.

**(4) ப்ரான்ஸ் தேசத்தில் அரசியல் புரட்சி:-மீண்டும் போர்:-** 1789-ல் ப்2ரான்ஸ் தேசத்தில் மகா பெரியதான ஒரு புரட்சி ஏற்பட்டது. அதற்குப் பல காரணங்கள் இருந்தன. ப்2ரெஞ்சு தேசத்து அரசாங்கம் ஜனங்களைப் பலவகைகளில் குரூரமாக நடத்தி வந்தது. பிரபுக்களும் மதகுருமார்களும் ஏழை ஜனங்களை வருத்தி வந்தனர். ஏழைகளே அதிக வரிகள் செலுத்தினர். நாடு முழுதிலும் அக்கிரமமும் அநீதியும் அதிருப்தியுமே குடிகொண்டிருந்தன. பதினுன்காவது லூயி என்பவர் அரசாயிருந்த வரையில் ப்2ரெஞ்சு தேசத்தின் அரசாட்சி சிறந்து விளங்கியது. அவருக்குப் பிறகு பட்டத்திற்கு வந்த அரசர்களெல்லோரும் முற்றிலும் கேவலமாக நடந்து கொள்ளவே, நாட்டில் அதிருப்தி அதிகரித்தது. அப்பொழுது சில மேதாவிகள் தோன்றி, ஜனங்களுக்குப் பலவகைகளில் அறிவுச் சுடர் கொளுத்தி வந்தனர். பழைய மூட நம்பிக்கைகளையெல்லாம் ஜனங்கள் விட்டுவிட வேண்டுமென்று வால்டேர் (Voltaire) என்பவர் உபதேசித்து வந்தார். மனிதர்களனைவருக்கும் சமமான உரிமைகள் உண்டென்றும், எனவே, பொதுஜனங்களது நம்பிக்கைக்குப் பாத்திரமான அரசாட்சியே நியாயமானதென்

றும் ரூஸோ (Rousseau) என்பவர் உபதேசம் செய்துவந்தார். "சுயாதீனம், சமத்துவம், சகோதரத்துவம்" ஆகிய மூன்றும் எல்லோருக்கும் இருக்க வேண்டுமென்று அவர் வற்புறுத்திக் கூறிவந்தார். ஆதலால் அவ்வாறு அறிவு முதிர்ச்சியடைந்த ஜனங்கள் முன்போல அரசாங்கத்தின் கொடுமைகளைப் பொறுமையாய் சகித்துக்கொண்டிராமல், தங்களது பிரஜா உரிமைகளைப் பெறும்பொருட்டு போராடத் தொடங்கினர்.

1789-ல் ப்ரெஞ்சு பிரதிநிதி சபையொன்று கூடியது. அதில் அங்கத்தினராயிருந்தவர்களெல்லோரும் அடிப்படையான சமூக இராஜீயச் சீர்திருத்தங்களைச் செய்ய முனைந்தனர். ஆனால் ப்ரெஞ்சு தேசத்து அரசியல் முறையைச் சீர்திருத்துவதில் ஜனத் தலைவர்கள் மிக தூரம் முன்சென்றுவிட்டனர். அமிதக் கட்சியினர் தமது இச்சையின்படி நடக்கத் தொடங்கினர். துரைத்தனத்தாரது தலைமை நகரமான பாரிஸில் ஜனங்கள் கலகத்தில் இறங்கி புராதனகாலத்துக் கோட்டையொன்றை இடித்துத் தகர்த்தெறிந்துவிட்டனர். அரசரும் அவரது பட்டமகிஷியும் தூக்கிலிடப்பட்டு இறந்துபோயினர். அதிகாரம் வகித்த தலைவர்கள், தம்மை எதிர்த்தவர் எவராயினும், அவரைக்கொன்று வீழ்த்தினர். 'பயங்கரமான அரசாட்சி' (Reign of Terror) தலையெடுத்தது. நாடு முழுதும் அலங்கோலமாகிவிட்டது. அப்பொழுது நிகழ்ந்த மகாகோரமான சம்பவங்களை ஐரோப்பிய சரித்திரத்தில் விரிவாகக் காணலாம். இங்கு நாம் இங்கிலண்டின் சரித்திரத்திற்கு சம்பந்தப்பட்ட வரையில் சிலவற்றை சுருங்கக் கூறினோம்.

ப்ரான்ஸில் நடந்த அரசியல் புரட்சி ஐரோப்பாக் கண்டம் முழுதும் கிடுகிடென நடுங்கும்படி செய்துவிட்டது. அங்கு அரசியும் அரசரும் கொல்லப்பட்ட வரலாற்றைக் கேட்ட இதர நாடுகளின் அரசர்கள் தத்தம் நாடுகளிலும் அம்மாதிரியான புரட்சி ஏற்படுமோவென அஞ்சினர். வால்டேர், ரூஸோ முதலியோரது கொள்கைகள் எங்கும் பரவிவிட்டன. ஆனால், இங்கிலீஷ்காரர் இராஜீயப் புரட்சியைக் கண்டு திருப்தியே யடைந்தனர். ஏனெனில், 1688-ல் தாம் ஸ்டுவர்ட் அரசரது கொடுங் கோன்மையை

ஒழித்து திருப்திகரமான ஆட்சியை ஸ்தாபித்தது போலவே, ப்2ரெஞ்சுக்காரரும் செய்வார்கள் என அவர்கள் எதிர்பார்த்தனர். ஆனால் 1688-ல் நடந்த இங்கிலீஷ் அரசியல் புரட்சியில் உயிர்ச் சேதம் ஏற்படவில்லை. ப்2ரான்ஸிலோ மனிதரது இரத்தம் வெள்ளமாக ஓடியது. ப்2ரெஞ்சுக்காரர் திருப்திகரமான அரசாட்சியை ஏற்படுத்த முயற்சித்தது முற்றிலும் நியாயமான செய்கையே யானாலும், அவர்கள் அநுஷ்டித்த முறைகள் மாத்திரம் ஏராளமான தீங்குகளை விளைவித்தன. அதுபற்றி, சிலவருஷ காலத்திற்குப் பிறகு இங்கிலீஷ்காரரிற் பலர் ப்2ரெஞ்சுக்காரது செய்கைகளை ஆதரிப்பதை நிறுத்திவிட்டனர். முதலில் பிட்டும், விக் கட்சியினரும் ப்2ரெஞ்சுக்காரரது புரட்சியை மிக உற்சாகத்துடன் கொண்டாடினர். உலகத்தில் ஒரு புதிய சகாப்தம் தொடங்கிவிட்டதாக எல்லோரும் கூறிக் கூத்தாடினர். சில வருஷங்களுக்குப் பின் ப்2ரான்ஸில் அரசரும் அரசியும் கொல்லப்பட்டதையும், பயங்கரமான அரசியல் நிர்வாகம் நடந்ததையும் கண்ட பலருடைய அபிப்பிராயம் மாறிப்போயிற்று. பர்க் என்ற பிரமுகர் 'ப்2ரெஞ்சுப் புரட்சியைப் பற்றிய சிந்தனைகள்' என்ற நூலை வெளியிட்டு, அதில் 1688 ல் நடந்த இங்கிலீஷ் அரசியல் புரட்சிக்கும், 1789-ல் நடந்த ப்2ரெஞ்சுக்காரரது புரட்சிக்கும் இருந்த முக்கியமான வேற்றுமைகளை எடுத்துக் காட்டினர். இங்கிலீஷ்காரர் பழைய முறையில் உள்ள குறைகளை மாத்திரம் நிவர்த்தித்துக் கொண்டு அவ்வளவோடு நின்றுவிட்டனர்; ப்2ரெஞ்சுக்காரரோ அடியோடு பழைய முறையைப் புரட்டித் தள்ளிவிட்டு, புதிய புதிய ஸ்தாபனங்களை உண்டு பண்ணினர். எனவே சில அமிதவாதிகளைத் தவிர மற்றவரனைவரும் ப்2ரான்ஸுக்கு விரோதமாகக் கிளம்பிவிட்டனர். முதலில் ப்2ரெஞ்சுப் புரட்சி நன்மையானதென்றே கருதிய இங்கிலீஷ் துரைத்தனத்தார் நாளடைவில் அதை வெறுக்கலாயினர். பிட் ப்2ரெஞ்சுப் புரட்சியைக் கண்டு பயமடைந்து அதற்குமுன் கொண்டிருந்த முற்போக்கான கொள்கைகளை விட்டு, அமிதமான கொள்கைகளை ஆதரித்த இங்கிலீஷ் மக்களைக் கடுமையாக நடத்தத் தொடங்கினர். இங்கிலண்டிலும் அம்மாதிரியான புரட்சியை உண்டாக்கத் தக்க கொள்கைகள் பரவாதிருக்க அவர் வழிசெய்தார். எனவே, முன்பு

மிக விசால நோக்கும், தாராள மனதும் கொண்டிருந்தவரான பிட் பின்னர் மாறுபட்டுப் போனார். பார்லிமென்ட் சபையின் சீர்திருத்தம் அவசியமென்று முன்பு அவர் கூறிலந்தாராலும், பின்னர், அது தேவையற்றதென்று வாதம் செய்தார்; ஜனங்களுடைய சுதந்திரத்தையும் ஓரளவு கட்டுப்படுத்தினார்; ப்ரெஞ்சு முறைகளை ஆதரித்த தலைவர்களைச் சிறையிலிட்டார். ப்ரெஞ்சுப் புரட்சியினால் இங்கிலண்டில் இவ்விதமான பலன்கள் ஏற்பட்டன. அதுவன்றி, இங்கிலண்டுக்கும், ப்ரான்ஸுக்கும் யுத்தம் நேரக்கூடிய நிலைமை ஏற்பட்டது. ப்ரான்ஸின் உள்நாட்டு வியவகாரத்தில் புரட்சி ஏற்பட்டதானாலும், மற்ற அரசுகள் அதில் தலையிடவேண்டிய அவசியம் சீக்கிரம் ஏர்பட்டது. பழைய முறையில் அதிகாரம் வகித்த ப்ரெஞ்சுப் பிரபுக்கள் முதலியவர்கள் தமது தேசத்தில் நடந்த பயங்கரமான ஆட்சியை சகித்திருக்க மாட்டாதவர்களாய் அன்னிய நாடுகள் சென்று ப்ரான்ஸுடன் யுத்தம் செய்யும்படி அந் நாடுகளின் அரசர்களைத் தூண்டினர். ஓரிடத்தில் ஜனங்கள் கிளர்ச்சி செய்தால், அண்டையிலுள்ள நாட்டின் ஜனங்களும் அதனால் அதிகமாய் பாதிக்கப்படுவது இயற்கையானதே. ஆகவே தத்தம் சிம்மாதனத்தைக் காப்பாற்றிக் சொள்ளவும், ப்ரெஞ்சு தேசத்தரசருக்கு நேர்ந்த கதி தமக்கும் நேராமல் தடுக்கவும் எண்ணி, ஐரோப்பிய அரசர்கள் ப்ரெஞ்சுக்காரருடன் போர் புரியத் தொடங்கினர். 1792-ல் ஆஸ்ட்ரியாவும், பிரஷ்யாவும் சேர்ந்துகொண்டு, புரட்சிக்காரரால் ஸ்தாபிக்கப்பட்ட அரசாங்கத்தை எதிர்த்தன. ஆனால் ப்ரெஞ்சு தேசத்துச்சேனை மிகவும் திறமையாகப் போர்புரிந்து வெற்றியும் அடைந்தது. 1793-ல், இங்கிலண்டு, ஹாலண்டு ஆகிய இரண்டு தேசங்களும் அந் சண்டையில் கலந்துகொண்டன. யுத்தம் நடத்துவதை பிட் விரும்பவே இல்லை. ஆனால் பர்க் முதலியோர் ப்ரெஞ்சுக்காரரை எதிர்ப்பது தர்ம சம்மதமான கடமையெனக் கருதினர். பிட் யுத்தத்திற்கு வேண்டிய பணத் தொகையைச் சேகரித்துத் தமது கூட்டாளிகளுக்குக் கொடுத்து உதவினார். ஆனால் ப்ரெஞ்சு தேசத்துச் சேனையை வெல்வது சாத்தியமற்ற முயற்சியாகத் தோன்றியது. இரண்டு மூன்று வருஷத்திற்குள் ப்ரெஞ்சுக்காரர் வெற்றியின்மேல் வெற்றியாக அடைந்தனர். நேப்

போலியன் (Napoleon) என்ற உலகப் பிரசித்திபெற்ற வீரர் ப்ரெஞ்சுக்காரரது சேனைக்குத் தலைவராய் இருந்து எதிரிகளைச் சின்னாபின்னமாக்கி வந்தார். எனவே, பிரஷ்யா, ஸ்பெயின் முதலான அரசுகள் ப்ரான்ஸுடன் சமாதானம் செய்துகொண்டு இங்கிலன்டைத் தனியாக விட்டுவிட்டன. ஐரோப்பா முழுதும் நெப்போலியனது பராக்கிரமத்தின் முன் நிற்கமாட்டாமல் பணிந்து விட்டது போலாயிற்று. இங்கிலன்ட் மற்ற தேசத்தாரது உதவியின்றித் தனிமையில் ப்ரான்ஸுடன் போர்புரிய வேண்டியதாயிற்று. அரை மனதுடன் யுத்தத்திற்கு சென்ற பிட் நிரம்பவும் வருந்தலானார்; அவர் யுத்தத்தில் ஏற்கெனவே ஏராளமான பணத்தை விரயம் செய்திருந்தார். தேசத்திலிருந்த தங்கமும் வெள்ளியும் செலவழிந்து போனமையால், பாங்க் நோட்டுகளை (காகிதப் பணம்) வெளியிடவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

1796-ல் ப்ரெஞ்சுக்காரர் இங்கிலன்டின் மீது படையெடுத்து வர முயன்றனர். ஸ்பெயின் தேசத்துக் கப்பற்படையும் டச்சுக்காரரது கப்பற்படையும் அவர்களுக்கு உதவி செய்தன. ஆனால் எப்பொழுதும் கடலின் ஆதிபத்யத்தை விடாமல் வகித்து வந்த இங்கிலீஷ்காரர்கள் கேப் ஸெயின்ட் வின்ஸென்ட் (Cape St Vincent) காம்பர்டௌன் (Camperdown) என்ற இடங்களுக்கருகில் வெற்றிபெற்று, எதிரிகளின் முயற்சி பலியாமல் போம்படி செய்துவிட்டனர்.

ஆனால் நெப்போலியன் எப்பொழுதும் இங்கிலீஷ்காரரை வென்று அவர்களது இராஜ்யத்தையும் கடல் ஆதிபத்யத்தையும் பிடித்துக்கொள்ள முயன்றார். 1798-ல் அவர் ஆப்ரிக்காவில் உள்ள ஈஜிப்ட் (Egypt) மாகாணத்தை சுலபமாகக் கைப்பற்றிக்கொண்டு, கிழக்கேயுள்ள இந்தியாவின் மீது கண் வைத்திருந்தார். திப்பு ஸுல்தான் இங்கிலீஷ்காரருக்கு விரோதமாக இருந்தமையால், நெப்போலியன் அவருடன் சேர்ந்துகொள்ள ஆலோசனை செய்து வந்தார். உலகம் முழுதையும் வென்றுவிட வேண்டுமென்ற பேராவலை அவர் கொண்டிருந்தார். ஈஜிப்ட் தேசத்தை அவர் வசப்படுத்திக் கொண்டமையால் இந்தியாவுடன் போக்குவரத்து செய்

வது ஸிரிட்டிஷ்காரருக்குப் பிரயாசையாகி விட்டது. நற்காலமாக, 1798-ல் நைல்நதிப் பிரதேசத்தில் அபூகீர்பே (Aboukir Bay) என்ற விரிகுடாக் கடலில் இருந்த ப்ரெஞ்சுக்காரரது கப்பற் படையை நேல்ஸன் (Nelson) என்ற பராக்கிரமசாலியான இங்கிலீஷ் சேனாதிபதி தாக்கித் தோற்கடித்தார். அந்த நைல் யுத்தத்தினால் மத்தியதரைக்கடலின் ஆதிபத்யத்தை மீண்டும் இங்கிலீஷ்காரர் அடைந்தனர். நெப்போலியன் இந்தியாவைப் பிடித்துக்கொள்ளும் பொருட்டு செய்த முயற்சி நிறைவேறாமல் போய் விட்டது.

நெப்போலியன் நைல் யுத்தத்தில் தோல்வியடைந்தாராலும், அவர் ப்ரான்ஸின் அதிபதி ஸ்தானத்தை அடைந்து, தமது இச்சையின்படி ஆட்சிபுரிந்து வந்தார். இங்கிலன்டை எதிர்க்க வேண்டுமென்ற விருப்பம் அவரது மனதில் இருந்துகொண்டே வந்தது. 1801-ல் ஸ்வீடன், டென்மார்க், ரஷ்யா முதலிய அரசுகள் இங்கிலன்டிற்கு விரோதமாக ஒன்று சேர்ந்துகொண்டன. ஆனால் அதிருஷ்ட வசமாக கோபன்ஹேகன் (Copenhagen) என்ற இடத்தில் இங்கிலீஷ்காரர் கடலில் வெற்றியடைந்து, பகைவரது எண்ணம் பலியாது போம்படி செய்தனர். அந்த யுத்தத்தினால், கடலில் இங்கிலீஷ்காரர் சர்வாதிகாரம் பெற்றனர். அதற்கு நெல்ஸன் என்ற சேனாதிபதியே காரண புருஷராயிருந்தார். ஆனால் நிலயுத்தத்தில் நெப்போலியன் எல்லோரையும் வென்றுவிடத் தக்க திறமையுடையவரா யிருந்தார். அப்பொழுது, நீடித்த போரினால் இருதிறத்தாரும் தளர்வடைந்திருந்தனர். நெப்போலியன் தமது ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளு முன் சிறிது காலம் ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்பினார். எனவே 1801-ல் எமியேன்ஸ் (Amiens) என்ற இடத்தில் இருசாராரும் சமாதானம் செய்துகொண்டனர்.

எமியென்ஸ் உடன்படிக்கை ஏற்படுவதற்கு முன்னரே பிட் ஜார்ஜுடன் சச்சரவிட்டுக் கொண்டு வேலையிலிருந்து விலகிப் போய்விட்டார். ஆனால் ப்ரெஞ்சுப் புரட்சியினால் விளைந்தபோரில் அவரே நிர்வாகம் நடத்திவந்தார். ச்சாத்தம் பிரபுவைப் போல

பிட் யுத்தத்தை நடத்தும் திறமை அதிகமாய்ப் பெறவில்லையாளு லும், அதிருஷ்ட வசமாக, அவரது காலத்தில் தேசத்திற்கு விபரீத மான தீங்கு எதுவும் விளையவில்லை. யுத்தத்தின் பொருட்டு செலவு ஏற்பட்டதாளுலும், இங்கிலீஷ் படை முடிவில் வெற்றி யையே அடைந்தது.

(5) அயரிஷ் ஐக்கியம்:-அயர்லன்ட் எப்பொழுதும் பிரிட் டிஷ் துரைத்தனத்தாருக்குத் துன்பம் விளைத்துவந்தது தெரிந்த விஷயம். ப்ரெஞ்சுப் புரட்சிப்போரில் துரைத்தனத்தார் மூழ்ந்து நின்ற சமயத்தில் அயரிஷ்மக்கள் கிளர்ச்சிசெய்து வந்தனர். 1782ல் அயர்லன்டின் பார்லிமென்டுக்கு சுயாதிகாரமளிக்கப் பட்டதென் பது முன்னரே கூறப்பட்டது. ஆளுல் சுயாதிகாரம் பெற்ற அந்தப் பார்லிமென்டில் ப்ராடெஸ்டன்ட் மதத்தினரே அங்கத்தினரா யிருந்தனர். காதலிக் மக்கள் எவ்வித அதிகாரமுமின்றி இருந்து வந்தனர். சில தலைவர்கள் காதலிக் குடிகளுக்கும் பார்லிமென்டில் ஸ்தானமளிக்க வேண்டுமென்றனர். மற்றவர் அதை ஆட்சேபித் தனர். எனவே ப்ராடெஸ்டன்ட் அயரிஷ்காரருக் குள்ளேயே மேற்படி விஷயம் காரணமாக அபிப்பிராய வேற்றுமை உண்டா யிற்று. மேலும் பார்லிமென்ட் சுயாதிகாரம் பெற்றுவிட்டதி லிருந்தே, தேசத்தின் பொருளாதார நிலைமையில் அபிவிருத்தி ஏற்படவில்லை. ஏழ்மையும் சோர்வுமே எங்கும் காணப்பட்டன. இங்கிலீஷ்கார மந்திரிகள் பார்லிமென்ட் அங்கத்தினரைத் தமது வசப்படுத்திக் கொண்டிருந்தனர். நாட்டில் அதிருப்தியே நிறைந் திருந்தது. ப்ரெஞ்சுப் புரட்சி ஏற்பட்டதும் அயர்லன்டின் நிலைமை இன்னும் கேவலமாயிற்று. பல அயரிஷ்காரர் அமிதமான கொள்கைகளை ஆதரித்தனர். 'ஐக்கிய அயரிஷ்காரர்' (United Irishman) என்று ஒரு சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. எல்லா அய ரிஷ்காரரையும் ஒன்று சேர்த்து நாட்டின் சுயாதீனத்திற்கும் காதலிக் வகுப்பாரின் விடுதலைக்கும் போராடுவதே, அந்தச் சங்கத்தின் நோக்கம். காதலிக் மதத்தைச் சேர்ந்த அயரிஷ்காரர் பலவிதங்களில் துன்பமநுபவித்து வந்தனர். அவர்களது நிலைமையை சீர்ப்படுத்தும் பொருட்டு, பிட் 1793-ல் ஒரு சட்டமியற்றி காதலிக்வகுப்பாருக்கு ஓட்டுரிமை மாத்திரம் அளித்தார். ஆளுல், அயர்லன்டில் இருந்த

இங்கிலீஷ்காரரும் ப்ராடெஸ்டன்ட் இனத்தாரும் காதலிக் வகுப்பாருக்கு உரிமைகள் அளிப்பதை எதிர்த்தனர். ஜார்ஜ் அரசர் அவர்களது விருப்பத்தின்படியே நடக்கலானார். அதனால் ஐக்கிய அயரிஷ்காரர் சங்கத்தாருக்குக் கோபமுண்டாக, அவர்கள் ப்ரெஞ்சுக்காரரது விஷயத்தில் அநுதாபம் காட்டி, அவர்களது உதவியையும் கோரினர். 1798-ல் அயர்லன்டில் கிளர்ச்சியும் கலகமும் ஏற்பட்டன. ஆனால் ப்ராடெஸ்டன்ட் வகுப்பார் பலர் துரைத்தனத்திற்கு உதவிசெய்தமையால், கலகக்காரர் மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர்.

அயர்லன்டில் நிர்வாகத்தை நடத்துவதற்கும், ப்ராடெஸ்டன்ட் வகுப்பாரும் காதலிக் வகுப்பாரும் சண்டையிடுவதைத் தடுப்பதற்கும், பிட், லார்ட் கார்ன்வாலீஸ் என்பவரை அனுப்பிவைத்தார். அந்த நாட்டின் நிர்வாகம் திறமையாக நடக்கவேண்டுமானால், இரண்டிடங்களிலும் தனித்தனியான பார்லிமென்டுகள் இருத்தல் கூடாதென்றும், ப்ரிட்டிஷ் பார்லிமென்டிலேயே அயர்லன்டுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டுமென்றும் கார்ன்வாலீஸ் கூறினார்; அதாவது, 1707-ல் ஸ்காட்லன்ட் எவ்வாறு இங்கிலன்டுடன் ஒன்றுசேர்ந்ததோ, அவ்வாறு அயர்லன்டையும் பிணைத்துவிட முயன்றார். பிட் அந்த யோசனையை அங்கீகரித்தார். ஆனால் அம்மாதிரி ஒன்றுபடுவதற்கு காதலிக் அயரிஷ்காரர்கள் சம்மதிக்க வேண்டுமென்று கருதி, அவர், காதலிக் வகுப்பாரது பரிதாபகரமான நிலைமையை நிவர்த்திக்கவும், பார்லிமென்டில் அங்கத்தினராகும் உரிமையையும் துரைத்தன உத்தியோகம் வகிக்கும் உரிமையும் அவர்களுக்கு அளிக்கவும் கார்ன்வாலீஸ் ஏற்பாடு செய்தார். ப்ராடெஸ்டன்ட் அயரிஷ்காரர் மாத்திரம் தாராள புத்தியில்லாதவராய் அந்த ஏற்பாட்டை எதிர்த்தனர். ஆனால் பிட், அயரிஷ் பார்லிமென்ட் அங்கத்தினருக்கு இலஞ்சம் முதலியவற்றைக் கொடுத்து அந்தச் சட்டம் நிறைவேறும்படி செய்துவிட்டார்.

1800-ல் நிறைவேறிய 'ஐக்கியச் சட்ட'த்தின்படி (Act of Union) அயரிஷ் பார்லிமென்ட் எடுபட்டுப்போயிற்று. ப்ரிட்டிஷ் பார்லிமென்டில் அயரிஷ்காரர்களுக்குப் ஸ்தானங்கள் அளிக்



ஸெயின்ட் ஆ/2ன்ட்ரூ சிலுவை

ஸ்காட்லண்ட்

ஸெயின்ட் பா/2ட்ரிக் சிலுவை

அயர்லண்ட்



ஸெயின்ட் ஜார்ஜ் சிலுவை

இங்கிலண்ட்



ஜாக்



யூனியன் ஜா/2க் என்று குறிக்கப்படும்
பிரிட்டிஷாரின் கொடி

கப்பட்டன. அதாவது, காமன்ஸ் சபையில் அவர்களுக்காக நூறு ஸ்தானங்கள் உற்பத்தி செய்யப்பட்டன. இரண்டு தேசங்களுக்கும் இடையில் வியாபார சுதந்திரம் ஏற்பட்டது. ஆனால் அயரிஷ் நீதிஸ்தலங்கள் முதலியவை முன்போலவே இருந்தன.

அந்தச் சட்டம் நிறைவேறியபின்னர், பிட் தமது திட்டத்தின்படி கா/2தலிக் வகுப்பாருக்கு எல்லாத் துறைகளிலும் இருந்துவந்த நிர்ப்பந்தங்களை விலக்குவதற்காக (Catholic Emancipation) ஒரு ஏற்பாட்டைத் தயாரித்தார். ஆனால் எல்லா மந்திரிகளும் அவரைப்போல தயாளகுணத்தோடு நடந்துகொள்ளவில்லை. ஒரு மந்திரி ஜார்ஜ் அரசரிடம் சென்று அயரிஷ் கா/2தலிக் வகுப்பாரின் நிர்ப்பந்த விலக்கு திட்டத்தை எதிர்த்துப் பலவகையாக எதிர்வாதம் புரிந்தார். ஜார்ஜ் அரசர் "அந்த திட்டத்தை எவர் ஆதரித்தாலும் அவரை நான் என் சொந்த சத்துருவெனவே மதிப்பேன்" என்று மறுமொழி கூறினர். பிட் அரசரிடம் சென்று, தமது திட்டத்தை அவர் ஏற்றுக்கொள்ளாவிடில், தாம் இராஜீநாமாச் செய்யவேண்டியதாகுமென்று தெரிவித்துக்கொண்டார். அதுவரையில் பிட் தமக்கு உற்ற நண்பராயிருந்ததைக் கருதி அரசர் அவருக்கு எவ்வளவோ நயமான மொழிகள் கூறினாராலும், அவர் தமது மனச்சாட்சிக்கு விரோதமாக நடப்பதைவிட தமது பதவியைவிட்டு விலகிவிடுவதே சிறந்ததெனக் கூறி 1801-ல் இராஜீநாமாச் செய்துவிட்டார். பிட் விலகிக்கொண்டவுடன், அயரிஷ் கா/2தலிக் வகுப்பாரது கட்சியை எவரும் ஆதரிக்கவில்லை. அவர்கள் அயரிஷ் ஐக்கியச் சட்டத்திற்கு அநுகூலமாக இருந்தனராலும், அதனல் உண்மையில் எவ்வித நன்மையும் உண்டாகவில்லை; ப்ராடெஸ்டன்ட் வகுப்பைச் சேர்ந்த சிறுகூட்டத்தாரே மீண்டும் அதிகாரம் நடாத்தினர். ஆகவே, ஐக்கியச் சட்டத்தை கா/2தலிக் வகுப்பார் எதிர்க்கத் தொடங்கினர். அதற்குக் காரணமாயிருந்தவர் ஜார்ஜ் அரசரேயன்றி பிட் அல்லர். பிட் தயாள மனதுடன் கா/2தலிக்வகுப்பாருக்கு விமோசனம் உண்டாக்கிக் கொடுக்கமுயல, ஜார்ஜ் அரசர் குறுக்கே நின்று அதைக் கெடுத்து விட்டார்.

(6) நெப்போலியனுடன் யுத்தம்:—மறுபடி பிட் மந்திரியாவது:—ஜார்ஜின் அந்தியகாலம்:—எமியென்ஸ் என்ற இடத்தில்

நெப்போலியன் உடன்படிக்கை செய்துகொண்டது, மீண்டும் போருக்கு ஆயத்தப்படுத்திக்கொள்ளும் கருத்துடனேயே என்று முன்னர் குறித்தோம். அதன்பிறகு நெப்போலியன் தமது அதிகாரம் நன்ருய் நிலைக்கும்படி செய்துகொண்டார். இங்கிலன்ட் ஒன்றே அவரைப் பணியாமலும், அவரது பேரவா நிறைவேறுவதற்குத் தடையாகவும் இருந்தது. இங்கிலன்டின் பலம் முழுதும் அதன் கப்பற்படையிலேயே அடங்கி இருந்தது. ஆகவே, நெப்போலியன் எவ்விதமாகிலும் இங்கிலன்ட் தம்மைப் பணியும்படி செய்துவிட்டால், தாம் உலகத்தில் முதன்மையான ஸ்தானம் பெற்றுவிடலாமென எண்ணினர். 1803-ல் மறுபடியும் ஷெ தேசங்கள் யுத்தத்திற்கு முனைந்தன. அது ஸிரிட்டிஷ் துரைத்தனத்தாருக்கு மிக அபாயகரமான சமயம். ஏனெனில் ஐரோப்பா முழுதையும் ஜயித்த ப்ரெஞ்சு சேனையுடன் அவர்கள் தனித்துநின்று போராட வேண்டியதாயிற்று. ஆனல் நற்சாலமாகக் கடைசியில் ஸிரிட்டனே வெற்றியடைந்தது. அதற்குப் பலகாரணங்கள் இருந்தன. நெப்போலியனது அதிக்கிரமச் செய்கைகள் அவருக்கு இகழ்ச்சியை உண்டுபண்ணின. அதுவன்றி ஸிரிட்டிஷ் ஜனங்களும் தமது துரைத்தனத்தாருக்கு அநுகூலமாயிருந்து மனதார உதவிபுரிந்தனர். ஆனல், நெப்போலியனுடன் நடந்த போர் நீடித்ததாயும் உக்கிரமானதாயும் இருந்தது. அதன் விவரங்கள் கீழே வருமாறு.

நெப்போலியனுடைய சேனைகள் இங்கிலன்டில் வந்திறங்கி விட்டால், அவருக்கு வெற்றிகிடைப்பது திண்ணம். ஆனல் தமது சேனையை இங்கிலன்டுக்கு அனுப்ப, அவருக்குப் பூர்த்தியான கடல் ஆதிபத்யம் அவசியமாயிருந்தது; அதில் இங்கிலன்ட் முதன்மையான ஸ்தானம் பெற்றிருந்தது. 1803-ல் அவர் கப்பற்படை யொன்றைச் சேகரித்து வைத்துக்கொண்டு இங்கிலன்டுக்குச் செல்ல சமயம் பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது ஸிரிட்டிஷ் துரைத்தனத்தாரது கவனத்தை சிதற அடிக்கும் கருத்துடன் அவர் அயர்லன்டில் ஒரு கலகத்தைக் கிளப்பி விட்டார். அதை இங்கிலீஷ் அரசாங்கத்தார் சுலபமாக அடக்கி விட்டார்கள்.

பிட் மந்திரிவேலையிலிருந்து நீங்கியபின் ஆடிங்ட்டன் (Addington) என்பவர் மந்திரி சபையை அமைத்தார். ஆனல் நெப்போலியனது யுத்தத்தை எல்லோரும் எதிர்பார்த்திருந்த சமயத்தில், ஆடிங்ட்டன் மந்திரிசபை தடுமாற்றமடைந்து கொண்டிருந்தது. பிட் மறுபடி மந்திரியின் பதவியை வகிக்க வேண்டுமென எல்லோரும் ஏகமனதாகக் கூறினர். 1804-ல் பிட் இரண்டாவது தடவை மந்திரியின் பதவியை ஏற்றுக்கொண்டார். நாட்டிற்கு அபாயம் நேரும் காலத்தில் அதைக் காப்பாற்ற முனைவதே தமது கடமையென்று அவர் கருதினர். அவர் எல்லாக் கட்சிகளிலிருந்தும் மந்திரிகளைப் பொறுக்கியெடுத்து நிர்வாகம் நடத்தி, நாட்டைப் பாதுகாக்கவேண்டுமென்று யோசித்தார். ஆனல் அரசர் விகு தலைவரான பாக்ஸுக்கு ஒரு மந்திரிபதவி யளிக்க மறுத்துவிட்டார். ஆகையால் டோரிகளைக்கொண்டே பிட் மந்திரிசபையை யமைத்தார். நெப்போலியன், இங்கிலண்டை வெல்ல வேண்டுமானல் அதைக் கடல் போரில் தோற்கடிக்க வேண்டுமென்பதை உணர்ந்து, ஸ்பெயின் தேசத்துக் கப்பற்படையையும் தமது தேசத்துக் கப்பற்படையையும் ஒன்று சேர்த்து இங்கிலண்டை எதிர்க்க முயன்ருர். ஆனல் நெல்ஸன் என்ற மகா பராக்கிரமசாலியான இங்கிலீஷ் வீரர் ஒரு கப்பற்படையை நடத்திச்சென்று ட்ராபல்கர் (Trafalgar) என்ற இடத்திற்கருகில் மிகப் பாடுபட்டு ப்ரெஞ்சு—ஸ்பெயின் கப்பற்படையைத் தோற்கடித்தார். அந்த யுத்தத்தில் நெல்ஸன் மரணமடைந்தாராலும், அவரது போர்த்திறமையினல் நெப்போலியன் இங்கிலண்டை எதிர்க்கும் யோசனையை விட்டுவிடவேண்டியதாயிற்று. கடலின் ஆதிபத்யம் இங்கிலண்டிற்கே உரியது என்பதும் அப்பொழுது தெளிவுபட்டது. கடலில் தோல்வியடைந்த நெப்போலியன் அதற்கு ஆறுதல்போல, ஐரோப்பாவில் பூர்த்தியான வெற்றியடைந்து வந்தார். இங்கிலண்ட் அவரது வசப்படாமல் தப்பித்துக்கொண்டாலும், ஐரோப்பா முழுதும் அவரைப் பணிவதாயிற்று. அந்த சமயத்தில் 1806 ல் பிட் திடீரென்று மரணமடைந்தார். ("என் தேசமே! என் தேசத்தை நான் இப்படி விட்டுச் செல்கிறேனே!") உன்று கூறிக்கொண்டே அவர் மரணமடைந்தார். அதன்பிறகு மந்திரி சபையில் எல்லாக் கட்சியினரும்

சேர்ந்து கொண்டனர். விரஹ், டோரி, 'அரசாது நண்பர்கள்'— ஆகிய மூன்று கட்சியினரும் அதில் ஸ்தானம் வகித்தனர். பாக்ஸ் அரசாங்கக் காரியதரிசியானார். அந்த மந்திரிசபை "நிபுணர்களெல்லோரும் சேர்ந்த மந்திரிசபை" (Ministry of all the Talents) என்று குறிக்கப்படுகிறது. பாக்ஸ் எப்பொழுதும் நெப்போலியனுக்கு அநுகூலமாக இருந்து, அவருடன் இங்கிலன்ட் யுத்தம் செய்வதைக் கண்டித்து வந்தார். எனவே அவர் நெப்போலியனுடன் சமாதானம் உண்டாக்க முயற்சித்தது பலிக்காமையால், அவர் அவமானமடைந்து 1806-ல் இறந்து போனார்.

1807-ல் அந்த மந்திரிசபை கலையவேண்டியதாயிற்று. ஏனெனில் சேனையில் இங்கிலீஷ் காதலிக் வகுப்பாருக்கு சில உயர்ந்த பதவிகள் அளிக்கவேண்டுமென்று மந்திரிகள் கூறினர். ஜார்ஜ் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. அவர் "நான் ஒரு ப்ராடெஸ்டன்ட் தேசத்தின் ப்ராடெஸ்டன்ட் அரசனாக இருப்பேனேயன்றி, வேறு விதத்தில் அரசனாயிருக்கமாட்டேன்" என்று பிடிவாதமாகக் கூறினார். நிபுணர்களின் மந்திரிசபையைக் கலைத்துவிட்டு, ஜார்ஜ் அரசர் அதன் பிறகு விக் கட்சியினரை முற்றிலும் அலட்சியம்செய்து, டோரிகளுக்கே சகலமான அதிகாரத்தையும் கொடுத்து வந்தார். 1807 முதல் 1830 வரையில் நீண்டகாலம் டோரிகளே அதிகாரம் வகித்து வந்தனர். 1807-ல் போர்ட்லன்ட் பிரபு பிரதம மந்திரியானார்; அவருடன் பிட்டின் சகாக்களான இருவர் கானிங், காஸில்ரீ (Canning; Castlereagh) என்பவர்கள் கூட்டு மந்திரிகளாக இருந்தனர். அதன்பிறகு பேர்ஸிவல் (Perci-val) என்பவர் 1812-வரையில் மந்திரி சபையை அமைத்திருந்தார். அவரை ஒரு பைத்தியக்காரன் காமன்ஸ் சபையிலேயே கொன்றுபோட்டு விட்டான். அவருக்குப் பிறகு லார்ட் லிவர்பூல் (Lord Liverpool) என்பவர் 1827-வரையில் பிரதமமந்திரியாக இருந்தார்.

1811-ல் ஜார்ஜ் அரசர் மறுபடியும் நீண்டகாலம் புத்தியாரூட்டமடைந்திருக்க, இளவரசர் சகலமான நிர்வாகத்தையும் வகித்து நடத்திவந்தார். அக்காலத்திலும், விக் கட்சியினர் பிரபலமாய்

வராதபடி ஒதுக்கி வைக்கப்பட்டே இருந்தனர். முதல் இரண்டு ஜார்ஜ்களின் காலத்தில் விக் கட்சியினர் தொடர்ச்சியாக அதிகாரம் வகித்ததற்கு மாறாக இப்பொழுது டோரிகள் நீடித்து செல்வாக்கிலிருந்து வந்தனர். இனி நெப்போலியனுடன் நடந்த யுத்தத்தை விளக்குவோம்.

1806-ல் பாக்ஸ் நெப்போலியனுடன் சமாதானம் செய்து கொள்ள முயன்று தவறியபின் இங்கிலீஷ் துரைத்தனத்தார் சிறுகச்சிறுக யுத்தத்தை நடத்திச்சென்றனர். ஆனால் ச்சாதம் பிரபு, பிட் முதலியவர்களுக்கு நிகரான அறிவு ஆற்றல் படைத்த மந்திரிகள் கிடையாமல் போகவே, யுத்தம் மும்முரமாய் நடவாமல் மிகவும் நிதானமாக நடந்துவந்தது. டோரிகள் பதவிக்கு வந்தபிறகும் இங்கிலண்டுக்குப் பெரிய வெற்றிகள் கிடைக்கவில்லை. அடிக்கடி அவர்கள் நெப்போலியன்மீது சீறிக்கொண்டிருந்தனரேயன்றி, ஒரே அடியில் அவரை வீழ்த்திவிட முயற்சி செய்யவில்லை. ஐரோப்பாவிலோ நெப்போலியன் வெற்றியின் மேல் வெற்றியாயடைந்து, ஜயக்கொடி நாட்டி பூலோக சக்கரவர்த்தியெனவே இருந்துவந்தார். 1807-ல் பிரஷ்ய இராஜ்ஜியமும் அவருக்குமுன் பணிந்துபோயிற்று. ரஷ்யாவும் அவருடன் சேர்ந்துகொண்டது. ஐரோப்பா முழுதும் அவருக்கு அடங்கியோ அல்லது அவரிடம் அச்சங்கொண்டோ இருந்தது. அதன்பிறகு, நெப்போலியன் இங்கிலண்டை ஜயித்துவிட வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு, அதற்கான முயற்சிகளைச்செய்தார். இங்கிலண்டின் பலம்முழுதும் அதன் வியாபாரப் பெருக்கிலேயே அடங்கியிருந்ததை அவர் உணர்ந்து, அந்த உயிர்நிலையைத் தாக்கிவிட்டால், இங்கிலண்டும் பணிந்துவிடுமென நிச்சயித்து, ஓர் ஏற்பாடு செய்தார். அதாவது, ஐரோப்பாவில் எந்த தேசமும் இங்கிலண்டுடன் வியாபாரம் வைத்துக்கொள்ளுதல் கூடாதென்றும், பிரிட்டிஷ் சாமான்களைக் கொள்ளையிட வேண்டுமென்றும், இங்கிலீஷ் பிரஜைகளைப் பிடித்து வதைக்கவேண்டுமென்றும் கட்டளை இட்டார். பிரிட்டிஷ் தீவுகளின் வெளியுலக சம்பந்தத்தை அறுத்து, அதை மூலையில் உட்காரவைத்து விடவேண்டுமென்பது நெப்போலியனது கருத்து. அவரது ஏற்பாடு "ஐரோப்பிய ஏற்பாடு"

(Continental System) என்று குறிக்கப்படுகிறது. ஸிரிட்டிஷ் துரைத்தனத்தார் அதற்குப் பிரதியாக "சபையின் உத்தரவுகள்" (Orders in Council) என்ற உத்தரவுகளை வெளியிட்டு, ப்ரான்ஸுடன எவரும் வியாபாரம் வைத்துக்கொள்ளுதல் கூடாதென்று கட்டளையிட்டனர். இவ்வாறு ஷெ இரண்டு தேசத்தினரும் ஒருவரையொருவர் பகைத்து உத்தரவுகள் பிறப்பித்தமையால், ப்ரான்ஸுக்கே அதிகமான தீங்கு சம்பவித்தது. ஏனெனில் கடலில் இங்கிலீஷ்காரரே சகலமான வசதிகளும் பெற்றிருந்தமையால், ப்ரான்ஸுக்குச்சென்ற கப்பல்களைத்தடுப்பது அவர்களுக்கே சுலபமானதாயிருந்தது. கடலின் ஆதிபத்யம் இங்கிலண்டின் வசத்தில் இருந்திராவிடில் நெப்போலியன் அந்த தேசத்தை முதன்முதலிலே வென்றிருப்பார். ஆகவே, ஸிரிட்டிஷ் கப்பற்படை, நெப்போலியனது கருத்து நிறைவேறாமல் போம்படி செய்ததுடன் அது அவருக்கே தீங்காய் முடியும்படி செய்துவிட்டது. மேலும், இங்கிலண்டிலிருந்து சாமான்கள் வராவிடில், ஐரோப்பா தேசத்தார் சுகமாய் ஜீவிக்க இயலாதாகையால், அவர்கள் நெப்போலியனது கட்டளையை மீறி, இரகசியமாய் ஸிரிட்டிஷ் சாமான்களை இறக்குமதி செய்தனர். நெப்போலியன் செய்த ஏற்பாட்டினால், ஐரோப்பாவின் பொருளாதார நிலைமையே சீர்குலைந்து போயிற்று. அவருடைய புகழுக்கே அழிவு ஏற்படும் போலாய்விட்டது. பல வருஷகாலம் நெப்போலியன், சக்கரவர்த்தியின் பதவியை வகித்திருக்க, முடிவில் துரதிருஷ்டகாலம் ஆரம்பமாயிற்று. ஐரோப்பாவில் அவர் புரிந்த கொடுமைகள் கணக்கிலடங்கா. அவருடைய வாளுக்கு அஞ்சி எல்லோரும் அடங்கி இருந்தனராலும், கொடுங்கோலரசு எவ்வளவு காலம்தான் நீடித்து நிற்கும்? சுயேச்சாதிபத்தியத்தை ஒழித்து ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்துவதற்காகவே ப்ரான்ஸில் புரட்சி நடந்தது. ஆனால் அந்தப் புரட்சி நடந்தபின், நெப்போலியன் முன்னிருந்த அரசர்களைக் காட்டிலும் அதிக கொடுமையாக ஆளத் தொடங்கிவிட்டார். அதுவன்றி, அவர் இதர தேசங்களில் தமது உறவினரையோ நண்பர்களையோ அரசர்களாய் ஏற்படுத்தி, ஷெ தேசத்து ஜனங்களது கோபத்தையும் தேடிக்கொண்டார். உதாரணமாக, அவர் தமது சகோ-

தார் ஒருவரை ஸ்பெயின் தேசத்து அரசராய் நியமித்தார். அவரது துரதிருஷ்டகாலமே அம்மாதிரி செய்யும்படி அவரைத் தூண்டிய தென்னலாம். அதுகாறும் அவரது சொற்படி நடந்து வந்த ஸ்பெயின் தேசத்தார் மேலே குறிக்கப்பட்ட நியமனத்திற்குப் பிறகு உக்கிரமாக அவரை எதிர்த்தனர். அவ்வாறு ஐரோப்பாவிலேயே, ஒரு நாடு முழுதும் நெப்போலியனுக்குப் பகையாகத் திரும்பியது, அதுவரையில் தனித்திருந்த இங்கிலண்டிற்கு நிரம்பவும் அநுகூலமாக முடிந்ததன்றி அதற்கு ஓர் உற்றதுணையும் ஏற்பட்டதுபோலாயிற்று. அதுவரையில் கடலில் மாத்திரம் ப்ரெஞ்சுக்காரரைத் தாக்க இங்கிலீஷ்காரரால் முடிந்தது; நிலப் போர் நடத்த இயலவில்லை. இப்பொழுது ஸ்பெயின் தேசத்தவருடன் சேர்ந்து கொண்டு ப்ரெஞ்சுக்காரரது சேனையை ஐரோப்பாவிலேயே தாக்குதல் சாத்தியமாயிற்று. அவர்கள் 1808-ல்ஸர் ஆர்தர் வெல்லெஸ்லி (Sir Arthur Wellesley) என்ற இங்கிலீஷ் சேனாதிபதியை போர்ச்சுகல் தேசத்திற்கு ஒரு படையுடன் அனுப்பினார்கள். வெல்லெஸ்லி ஏற்கெனவே இந்தியாவில் மஹாராஷ்டிரர்களைத் தோற்கடித்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நிலைநாட்டிவிட்டுச் சென்றவர். அவர் ஐரோப்பிய யுத்தத்திலும் சீக்கிரத்தில் கீர்த்தியடைந்தார். போர்ச்சுகலில் இருந்த ப்ரெஞ்சுக்காரரது சேனை வெளியேறும்படி அவர் செய்தார். 1808-ல் ஸர் ஜான் மூர் (Sir John Moore) என்பவர் சேனைத் தலைவராய் நியமிக்கப்பட்டு ஸ்பெயினுக்கு வந்து சேர்ந்தார். ஆனால் நெப்போலியன் அதற்கு முன்னமேயே அங்குவந்து வெற்றியடைந்து விட்டமையால் மூர் திரும்பிப்போக நேர்ந்தது. ப்ரெஞ்சுக்காரர் சேனை அவரைத் துரத்திகொண்டு வந்து கொருனு (Coruna) என்ற இடத்தில் அவரைத் தோற்கடித்தது. மூர் அங்கு இறந்துபோனார்.

1809-ல் ஆர்தர் வெல்லெஸ்லிக்கு சேனைத்தலைவர் பதவி கிடைத்தது. அவர் ஐந்தாறு வருஷகாலம் போர்புரிந்து நெப்போலியனை வென்றார். அந்த யுத்தத்திற்கு, 'த்வீபகற்பப் போர்' (Peninsular war) என்று பெயர். ஏனெனில் ஸ்பெயினும்-போர்ச்சுகலும் சேர்ந்த பாகம் ஒரு த்வீப கற்பமாதலால், அங்கு நடந்த

போருக்கு அந்தப் பெயர் ஏற்பட்டது. போர்ச்சுகலில் வெல்லெஸ்லி தமது ஆதிபத்யத்தை ஸ்தாபித்துக் கொண்டு ஸ்பெயின் தேசத்திற்குள் போர் நடத்தச் சென்றார். அவரிடம் சொற்ப சேனையே இருந்தது; அவருக்கு உதவ ஸ்பெயின் சேனை வரவில்லை. ஆனாலும், தலவேரா (Talavera) என்ற இடத்தில் வெல்லெஸ்லி எதிரிகளைத் தோற்கடித்தார். ப்ரெஞ்சுக்காரரது சேனையின் கீர்த்தி முழுதும் அதனால் அழிந்துபோவதாயிற்று. அவரது நிகரற்ற ஊழியத்தை மெய்ச்சி இங்கிலீஷ் துரைத்தனத்தார் வெல்லெஸ்லிக்கு லார்டு வெல்லிங்டன் (Lord wellington) என்ற பட்டமளித்து மேன்மைப் படுத்தினார்கள். தமக்கேற்ற பகைவர் ஒருவர் தோன்றியதை நெப்போலியன் காணவே தமது சேனை முழுதையும் ஸ்பெயினில் கொணர்ந்து சேர்த்துக்கொண்டார். வெல்லிங்டனுக்குத் தேவையான உதவிகளை ப்ரிட்டிஷ் துரைத்தனத்தார் ஊக்கத்தோடு செய்யவில்லை. அவர் தமது யுக்திக்கெட்டியபடி பகைவருடன் போராடி வந்தார். 1810-11-ல் அவர் புஸாகோ (Busaco,) ஆல்புஏரா (Albuera) முதலிய இடங்களில் பகைவரைத் தோற்கடித்தார். அதனால் அவர் போர்ச்சுகலில் தங்கியிருக்க இடமேற்பட்டதைத் தவிர வேறு பெரிய நன்மை எதுவும் உண்டாகவில்லை.

1812-ல் நெப்போலியனுக்கும் ரஷ்யாவுக்கும் இருந்த சிநேகப்பான்மை போய்விட்டமையால் அவர்களுக்குள்ளும் போர் நிகழ்ந்தது. அதில் ப்ரெஞ்சுப் படை வெற்றியடையாமற் போனதன்றி, அதிகமான சேதத்திற்கும் உள்ளாயிற்று. அது வெல்லிங்டனுக்கு அநுகூலமாக முடிந்தது. ப்ரெஞ்சுக்காரரது சேனையின் பலம் குறைந்தது அவருடைய பலம் அதிகரித்ததுபோல முடிந்தது. அதே வருஷத்தில் அவர் ஸலமாங்கா (Salamanca) என்ற இடத்தில் ப்ரெஞ்சுச் சேனை யொன்றைத் தோற்கடித்து, ஸ்பெயின் தேசத்தின் தலைமை நகரத்தைப் பிடித்துக்கொண்டார். 1813-ல் ஜெர்மனி தேசத்துச்சேனை ப்ரெஞ்சுக்காரரது சேனையைத் தோற்கடித்தது. எங்கும் நெப்போலியனுடைய ஆதிபத்யத்திற்குக் குறைவும் பங்கமும் எதிர்ப்புமே தோன்றின. வெல்லிங்டன் மீண்டும் எதிரிகளைத் துரத்திச்சென்று விடோரியா (Vitoria) என்ற

இடத்தில் ஜயமடைந்தார். 1814-ல் நாலாபக்கங்களிலும் பகைவர்கள் நெப்போலியனை வளைத்துக்கொண்டனர். உலகம் முழுதையும் ஏகசக்ராதிபதியாக ஆளவிரும்பி, ஐரோப்பாக்கண்டம் முழுவதையும் நடுங்கச்செய்த புருஷ சிங்கமாகிய நெப்போலியன் தம்மாலியன்ற வரையில் போர்புரிந்து முடிவில் சிம்மாதனத்தை விட்டு விட்டார். அந்த சமயத்தில் டூலூஸ் (Toulouse) என்ற இடத்தில் வெல்லிங்டன் பிரபு மற்றொரு முறை ஜயமடைந்தார். ஆனால் நெப்போலியன் தோற்றுப்போன பிறகு, ப்ரான்ஸ் சமாதானம் செய்துகொள்ள விரும்பியது.

ப்ரெஞ்சு யுத்தம் நடந்து கொண்டிருக்கையிலேயே, இங்கிலண்டுக்கும் அமெரிக்காவுக்கும் ஒரு சிறிய போர் நடந்தது. நெப்போலியனது முயற்சிக்குப் பிரதியாக ப்ரிட்டிஷார் 'சபையின் உத்தரவுகள்' (Orders in Council) என்ற உத்தரவுகளைப் பிறப்பித்து ப்ரான்ஸுடன் எவரும் வியாபாரம் செய்தல் கூடாதென்று கட்டளை யிட்டனரல்லவா. அதனால் அமெரிக்க வியாபாரிகளுக்குப் பெரிய பொல்லாங்கு நேரிட்டது. அவர்கள் எந்தக் கட்சியாருடனும் சேராமல் நடுநிலைமை வகித்தாலும், அவர்களுடைய கப்பல்களையும் இங்கிலீஷ்காரர் சோதித்துப் பார்த்துத் துன்பமிழைத்து வந்தனர். அதைக் கண்டு கோபமடைந்த அமெரிக்க துரைத்தனத்தார் இங்கிலண்டுடன் 1812-ல் யுத்தம் நடத்தலானார்கள். உடனே இங்கிலீஷ்காரர் சண்டைக்குக் காரணமாயிருந்த 'சபையின் உத்தரவுகளை' (Orders in Council)த் தள்ளுபடி செய்தனர்; அமெரிக்கர்களோ, முன் வைத்த காலைப் பின் வைக்காமல் கானடாவின் மீது படைபெடுத்துச் சென்றனர். அவர்கள் அங்கு தோல்வியடைந்தனராலும், அவர்களுக்கு சில கடல்போர்களில் சிறிய வெற்றிகள் கிடைத்தன. 1814-ல் வெல்லிங்டனுக்குக் கீழ் வேலை செய்த சேனைகள் அமெரிக்காவுக்கு அனுப்பப்படவே, அங்கும் இங்கிலண்டுக்கு வெற்றி ஏற்பட்டது. அதே வருஷத்தில் இரண்டு அரசுகளும் சமாதானம் செய்துகொண்டன. அந்த யுத்தம் முற்றிலும் அநாவசியமாகவே நேர்ந்தது. இரண்டு கட்சிகளுக்கும் நேரிட்ட சேதத்தைத் தவிர வேறு எவ்வித நன்மையும் உண்டாகவில்லை. இங்கிலண்டோ அல்லது அமெரிக்காவோ சற்றுமுன்யோச

ளையாக நடந்திருந்தால், அந்த யுத்தம் நேராதபடி தடுத்திருத்தல் கூடும். நெப்போலியன் அரசபதவியை இழந்து எல்பா (Elba) என்ற தீவுக்குப்போய் வசித்து வந்தார். ஆனால் அவ்வளவு அமிதமான உற்சாகமும் யுத்த வேட்கையும் கொண்டிருந்த மகா வீரரான அவர் அரை நாழிகையேனும் வீணில் கழித்தல் கூடுமா? 1815-ல் அவர் மீண்டும் ப்ரான்ஸுக்குத் திரும்பி வந்து சிம்மாதனத்தை யடைந்தார். ஆனால் வேருடன் பிடுங்கப்பட்ட அவருடைய ஆட்சி மீண்டும் உயிர்பெற்றுத் தழைக்காமலேயே போய் விட்டது. ஐரோப்பாவின் சமாதானத்தைக் குலைக்க முயன்ற அந்த வீரரை எல்லோரும் பகைத்து எதிர்க்கத் தலைப்பட்டனர். 1815-ல் ஜூன் மாதத்தில் வெல்லிங்டனது சேனையும் நெப்போலியனது சேனையும் வாட்டர்லூ (Waterloo) என்ற இடத்தில் சந்தித்தன. ப்ரெஞ்சுவீரர்கள் அதிகப் பயிற்சியுள்ளவர்களானாலும், அந்த யுத்தத்தில் அடியோடு தோற்றுப் போயினர். நெப்போலியன் இரண்டாவது தடவை நூறு தினங்களே மகுடம் தரித்திருந்து, அதை இழந்து, ஸெயின்ட் ஹெலினா (St. Helena) என்ற தீவிற்குப் போய்ச் சேர்ந்தார். யுத்தம் புரிவதில் உலகசரித்திரத்தில் அவருக்கு நிகராக ஒப்பிடக்கூடியவர்கள் மிக சொற்பமானவரே இருப்பரென்பது நிச்சயம். அவருடைய தோல்விக்கு முக்கியமான காரண பூதராயிருந்தவரான வெல்லிங்டன் என்று மழியாத புகழ்பெற்று விளங்கினார்.

1815-ல் ஐரோப்பிய அரசுகள் எல்லாம் வியன்னா (Vienna) என்ற இடத்தில் காங்ரெஸ்சபை கூடின (Congress of Vienna). அதற்கு சிறிது காலத்திற்குமுன்பு பாரிஸ் நகரத்தில் சமாதானப் பேச்சு நடந்திருந்தது. வியன்னா காங்ரெஸ் சபையார் ஐரோப்பாவின் அரசியல் அமைப்பைத் தகுந்தபடி சீர்திருத்தினர்.

நீடித்தகாலம் நெப்போலியனுடன் போர் புரிந்ததனால், இங்கிலண்டுக்கு அபாரமான பொருள் நஷ்டமும் ஜனச்சேதமும் ஏற்பட்டன. வரிச்சுமையும் அகவிலைகளும் அதிகமாயின. யுத்தத்தினால் விளையக்கூடிய அனர்த்தங்கள் யாவும் அங்கு காணப்பட்டன. டோரி மந்திரிகள் தேசத்தின் துர்ப்பாக்கிய நிலைமையை அபிவிருத்திசெய்ய வழிதேடவில்லை. மேலும், ஜனங்கள் அமிதமான கொள்கைகளைப் பரப்பாதபடி தடுக்கப்பட்டனர். 1820-ல்

மூன்றுவது ஜார்ஜ் அரசர்மரண மடைந்தார். அந்தியகாலத்தில் அவருக்கு மறுபடி பைத்தியம் ஏற்பட்டதன்றி, கண்பார்வையும், காது கேட்பதும் இல்லாமல் போய்விட்டன. அவருக்கு முன்னிருந்த அரசர்கள் இழந்த அதிகாரத்தை அவர் மறுபடி உண்டாக்கிக்கொண்டாராலுைம், அது நீடித்து நிற்கவில்லை. அவரது சந்ததியாரின்காலத்தில் மீண்டும் பார்லிமென்டும், கா/2பினட் சபையுமே அதிகாரங்களை அபகரித்துக்கொண்டன.

**(7) இங்கிலண்டில் 18-ம் நூற்றண்டில் ஏற்பட்ட கைத்தொழிலபிவிருத்தி ; மதச்சீர்திருத்த இயக்கங்கள் :**—இதுவரையில் நாம் இங்கிலண்டின் முக்கியமான இராஜீய வரலாறுகளையும், இராஜ்ஜியப் பெருக்கையும் பற்றிக் கூறிவந்தோம். துரைத்தனத்தார் அன்னிய நாடுகளில் புரிந்த யுத்தங்களையும் கவனித்தோம். ஷை சம்பவங்கள் நடந்து கொண்டிருக்கையிலேயே, 18-ம் நூற்றுண்டில் இங்கிலண்டில் பொது ஜனங்களுடைய சமூக வாழ்க்கையிலும் பொருளாதாரத் துறையிலும் பற்பல மாறுதல்கள் ஏற்பட்டு வந்தன. அவைகள் இங்கிலண்டின் நிலைமையையே பாதித்தனவாதலாலும், அதனுல் நாட்டின் நிர்வாக முறையே சீர்திருத்தப்பட வேண்டியிருந்தமையாலும், நாம் ஷை மாறுதல்கள் என்னென்னவென்பதைத் தெரிந்துகொள்வ தவசியமாகிறது.

ஆதிகாலத்திலிருந்து 17-வது நூற்றுண்டு வரையிலும் இங்கிலீஷ்காரர்கள் உழுது பயிரிட்டும் வியாபாரம் செய்தும் ஜீவனம் நடத்தி வந்தனர். 18-வது நூற்றுண்டின் ஆரம்பத்தில் பிரிட்டிஷ் துரைத்தனத்தாருக்குக் கடலின் ஆதிபத்யம் கிடைத்ததன்றி, உலகத்தில் வியாபாரம் செய்வதில் முதன்மையான ஸ்தானமும் வந்து வாய்த்தது. வடக்கில் அமெரிக்காவிலும் கிழக்கில் இந்தியாவிலும் சென்று வியாபாரம் செய்து ஏராளமான இலாபம் சம்பாதிக்கும் வசதிகள் இங்கிலீஷ்காரருக்கு ஏற்பட்டன. பலர் தனவந்தர்களாய்விட்டனர். லண்டன் முதலிய நகரங்கள் அதிக துரிதத்தில் தழைத்துப் பெருகின. அமெரிக்கர்கள் இங்கிலண்டின் ஆட்சியை மீறி சுயாதீன மடைந்து விட்டாலும், இரண்டு தேசங்களுக்கும் நடந்துவந்த ஏராளமான வியாபாரம் நிற்காமல் நடந்துகொண்டே

வந்தன. வியாபாரப் பெருக்கு ஏற்பட்டபின் இங்கிலன்டின் கைத்தொழில்களும் தேர்ச்சிபெற்று வளர்ந்தன. ஆனால், 18-வது நூற்றாண்டின் தொடக்கத்தில், இக்காலத்தில் இருப்பதுபோல, பெரிய பெரியஇயந்திரங்களும், கைத்தொழிற்சாலைகளும், போக்கு வரவு சாதனங்களும் உண்டாகவில்லை. ஜனங்கள் தமக்குத் தெரிந்த பழைய முறைகளையே அநுஷ்டித்து வந்தனர். ஆனால் மூன்றாவது ஜார்ஜ் அரசர் பட்டத்திற்கு வந்தபின், சில நூதனமான கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டன வாதலால், முன்பு சொற்பமாக உற்பத்தி செய்யப்பட்டுவந்த சாமான்கள் ஏராளமாயும் சுலபமாயும் உண்டாக் கப்பட்டன. முக்கியமாய் நெசவு தொழிலிலேயே இம்மாதிரியான மாறுதல்கள் ஏற்பட்டன. அதற்குமுன் தொழிலாளிகள் தமது வீடு களில் தாமே நூல்நூற்றுத் துணி நெய்வது வழக்கம். அந்தத் தொழில் நிதானமாகவே நடந்துவந்தது. 18-வது நூற்றாண்டில் ஆர்க்ரைட் (Arkwright), ஹார்கிரீவ்ஸ் (Hargreaves), க்ராம்ப்டன் (Crompton), கார்ட் ரைட் (Cart Wright) என்பவர்கள் சில நூதனமான யந்திரங்களைக் கண்டுபிடித்தனர்; அவற்றின் பயனாக, நூல் நூற்பதும் துணி நெய்வதும் முன்னிலும் அதிக துரிதத்தில் நடத்தப்பட்டன. அப்பொழுது, நீராவியின் சக்தியையும் உபயோகத்தையும் சிலர் தெரிந்து கொண்டனர். ஜேம்ஸ் வாட் (James watt) என்பவர் நீராவி இயந்திரம் அதிகத் திறமையாய் வேலை செய்யுமாறு சூழ்ச்சி செய்தார். அதனால், கைத் தொழில்களுக்கு அநுகூலங்கள் ஏற்பட் டன. இரும்பு நிலக்கரி ஆகியவற்றின் முழு உபயோகத்தையும் எண்ணிறந்த ஜனங்கள் தெரிந்து கொண்டனர். எனவே ஒவ்வொரு கைத் தொழிலிலும் சாமான்கள் அதிக சீக்கிரத்திலும் குறைந்த விலையிலும், அதிக திருத்தமாகவும் உற்பத்தி செய்யப்பட்டன.

வியாபாரப் பெருக்கு ஏற்பட்டதும், அதற்கு அநுசரணையாக வேறு பல மாறுதல்கள் ஏற்படுவதும் அவசியமாயிற்று. பண்டங்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு சுலபமாய் எடுத்துச் செல் லும்பொருட்டு, இராஸ்தாக்கள் ஒழுங்குபடுத்தப்பட்டன. நதிகளைக் கடக்கப் பாலங்கள் தோன்றின. தபால் வசதிகளும் அதிகமாயின. பிறகு, தரை மார்க்கமாக சாமான்களை எடுத்துச் செல்வதைவிடத் தண்ணீரின் வழியாகக் கொண்டுபோவது சுலபமென்பது தெரி

யவே, வாய்க்கால்கள் வெட்டுவதிலும், படகுகளின் மூலம் பண்டங்களை அப்புறப்படுத்துவதிலும் ஜனங்கள் கவனம் செலுத்தினர்.

புதிய இயந்திரங்கள், புதிய சாதனங்கள், போக்குவரவு வசதிகள், வியாபாரப்பெருக்கு முதலியவை காரணமாக, 18-ம் நூற்றுண்டில் இங்கிலன்ட் முக்கியமான ஒரு கைத்தொழில் நாடாக மாறிவிட்டது. முன்பு கிராமங்களிலும் தனித்தனி வீடுகளிலும் சொற்ப அளவிற்குக் கைத்தொழில்கள் நடந்துவந்தன. இப்பொழுதோ கைத்தொழிலபிவிருத்திக்கு அநுகூலமாய்ப் புதிய நகரங்கள் தோன்றலாயின. முக்கியமாக, இரும்பும், நிலக்கரியும் கிடைத்த இடங்களிலும், போக்கு வரவு சாதனங்கள் பெற்ற—அதாவது, ஆறுகளின் ஓரமாகவோ, சாலைகளின் அருகிலோ, உள்ள—இடங்களில் கைத்தொழிலாளிகள் பலர் ஒன்று கூடினர். ஒருகாலத்தில் கவனிப்பாரின்றி இருந்த இடங்கள் யாவும் அப்பொழுது எதிர்பாராவிதமாய்ப் பெரிய நகரங்களாய்விட்டன. தேசத்தில் முதலாளிகளுக்கு அபரிமிதமான இலாபம் கிடைத்தது. ஜனத்தொகையும் பெருகியது. மற்றவைகளைவிட, முக்கியமான இன்னெரு மாறுதல் ஏற்பட்டு, சமூகத்தின் அமைப்பையே பாதித்தது. அதாவது, பழைய காலங்களில் தொழிலாளிகள் தம்தம் வீடுகளிலேயே இருந்துகொண்டு, தமது மனைவி மக்களது உதவியையும் பெற்று, இராட்டினம் சுற்றியோ, அல்லது, தரிவேலை செய்தோ, அல்லது வேறு சில்லரை வேலைகள் செய்தோ ஜீவனேபாயம் தேடி வந்தனர். ஆனல் 18-ம் நூற்றுண்டில் எல்லாத் தொழில்களுக்கும் நூதனமான பெரிய இயந்திரங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. பழைய முறையில், வீட்டுத் தொழிலாளிகள் உற்பத்தி செய்ததைக் காட்டிலும் இயந்திரத்தின் மூலம் மிக விரைவாகவும் குறைந்த விலைக்கும் பண்டங்களை உற்பத்தி செய்வது சாத்தியமாயிற்று. ஆதலால் வீட்டுத் தொழிலாளியின் பண்டங்களை அதிக விலை கொடுத்து வாங்குவது நின்றுபோய்விட்டது. இயந்திரங்களை வாங்கி சமாளிக்கும் வசதி ஏழைத் தொழிலாளிகளுக்கு இல்லை. ஆதலால் தனவந்தர்கள் இயந்திரங்களை வாங்குவதும், கைத்தொழிலாளர் அவர்களிடம் வேலைக்கமர்ந்து உழைப்பதுமே வழக்கத்திற்கு வந்தது. அவர்கள் தங்களது வீடுகளைவிட்டு, இயந்திரங்கள் வேலைசெய்யும் கைத்தொழிற் சாலைகளைக்

(Factories) கொண்ட பெரிய நகரங்களுக்குச் செல்ல வேண்டியதாயிற்று. அந்தப் பெரிய மாறுதலினால் பல நன்மைகளும் தீமைகளும் உண்டாயின. வீட்டுத் தொழிலாளி தனது இச்சைப்படி வேலைசெய்து, சுயாதீனமாக நடந்து வந்தான்; வேலை செய்யும்படி அவனைக் கட்டாயப்படுத்துவோர் எவருமில்லாதிருந்தனர். அவன் எவருக்கும் கீழ்ப்படியாமல் சுகமாகவும் திருப்திகரமாகவும் இருந்து ஜீவனம் நடத்திவந்தான். ஒருவன் அரும்பாடுபட்டு வேலை செய்தாலும், அதன் இலாபம் முழுதும் அவனுக்கு வந்து சேர்ந்தது. இப்பொழுதோ, அவன் பிறருக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் கூலிக்காரனானான். முதலாளியின் விருப்பத்தின்படியெல்லாம் அவன் நடந்தாலன்றி, வயிற்றுப்பிழைப்பு நின்றுவிடும். அவன் தனது வீட்டைவிட்டு, அதிகப் பணச்செலவு பிடிக்கக்கூடிய நகரத்தில் வாழ்க்கை நடத்த வேண்டியவனானான். அவன் தன்னரசாயிருந்தது போக, கூலிக்காக உழைக்கும் அடிமை போலானான். அவன் படும்பாட்டினால் குவியும் இலாபம் முழுதும் முதலாளிக்கே போய்ச் சேர்ந்தது. முதலாளியோ சிறிதும் வேலை செய்யாமல் பிறருடைய சரீர முயற்சியைக் கொண்டு தமது பணப்பையை நிரப்பிவந்தான். அதைக் கண்ட தொழிலாளிகளுக்கு வயிற்றெரிச்சல் ஏற்படுவது இயல்பானதே. ஆனாலும் அவர்கள் வாயில்லாப் பூச்சிகளாய் மௌனமாக இருந்தே வருந்தலாயினர். இவ்வாறு கைத்தொழில், வியாபாரம் முதலிய துறைகளில் அடிப்படையான பூர்த்தியான மாறுதல்கள் ஏற்பட்டதை "கைத்தொழில் புரட்சி" (Industrial Revolution) என்று குறிப்பது வழக்கம். நூற்றுக்கணக்கான தொழிலாளர் சேர்ந்தாற்போல வேலை செய்வதற்கேற்ற பிரம்மாண்டமான தொழிற்சாலைகள் நாடுமுழுதும் ஏற்பட்டுப் போயின. தொழிற்சாலைத் திட்டப்படி ஒரு முதலாளியின்கீழிருந்து பல தொழிலாளர் கூலிபெற்று உழைத்து வந்தனர். கைத்தொழில் புரட்சியின் பலனாக, முக்கிய நகரங்களிலேயே பண்டங்கள் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன. பழைய காலங்களில் சிறிய ஊர்களில் கைத்தொழிலாளிகள் தனித்தனியாகவோ அல்லது சிலர் கூட்டாகவோ சம உரிமையுடனிருந்து உழைத்து திருப்திகரமாக இருந்து வந்தது போக, ஆயிரக்கணக்கில் மனிதர்கள் ஆட்டுமந்தைகள் போல

ஒன்றுகூடி ஒருவர் வசப்பட்டு உழைக்க வேண்டியதாயிற்று. முதலாளிகள் பணமும் பணத்தைப் பெருக்கும் சாதனமும் பெற்றிருந்தனராலும், அறிவிலிகளாயும், சுயநலப் பேய்களாயும், அற்ப புத்தி படைத்தவர்களாயும், கடின மனத்தினராயும் இருந்தனர். தமது தொழிலாளிகளின் தேகாரோக்கியத்தையோ, மன அமைதியையோ, அறிவு வளர்ச்சியையோ அவர்கள் கவனித்தவரல்லர். தொழிலாளிகளோ ஏழைகளாயிருந்தது பற்றி, புதிய நகரங்களுக்கு வந்து ஆரோக்கியத்திற்கு உகந்ததல்லாத அசங்கியமான காற்றோட்டமற்ற நெருக்கடியான அறைகளில் வசித்து, இருண்டதும், துர்நாற்றம் நிறைந்ததுமான தொழிற்சாலைகளில் அதிக காலம் வேலை செய்தனர். அதனுல் காலத்திற்குமுன் தளர்ச்சியோ, அங்கஹீனமோ அடைந்து தமது கூலி வேலையையும் சீக்கிரத்தில் இழந்து தவிப்போராயினர். அவர்கள் எதைப்பற்றியாகிலும் குறைகூறினுல் அவர்களுடைய உத்தியோகம் போய்விடும். நாற்காலியில் உட்கார்ந்தபடி பவுன்களை எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டிருந்த முதலாளிப் பிரபுக்கள் ஏழைமக்களின் துயரத்தையும் துன்பங்களையும் உணராதிருந்தனர். தொழிலாளிகளுக்கு ஜீவனுேபாயப் போராட்டமே பெரிய போராட்டமாகி விட்டது. தந்திர குணமும், வஞ்சக நினைவும், பொய்பேச அஞ்சாமையும் நிறைந்தவர்களே, அந்தப் போராட்டத்தில் வெற்றியடைந்தனர்; சாதுக்களாகவும் அறநெறி தவருதவர்களாகவும், சுயமதிப்புக்குப் போராடுகிறவர்களாயும் இருந்தவர்கள் காற்ருய்ப் பறக்க வேண்டியதாயிற்று. துரைத்தனத்தார் தொழிலாளிகளின் நன்மையைக் காப்பாற்றுவது தமது கடமையென்பதை அக்காலத்தில் உணரவில்லை. போதாக் குறைக்கு, தொழிலாளிகள் ஒன்றுசேர்ந்து சங்கங்கள் ஏற்படுத்திக்கொள்வதுகூட அப்பொழுது சட்டவிரோதமான செய்கையாய்க் கருதப்பட்டது. ஸ்திரீகளும் சிறுபிள்ளைகளும் தினந்தோறும் அநேக மணிநேரம், புகை நிறைந்த கிடங்குகளிலும் காற்ருேட்டமில்லாத இருண்ட இடங்களிலும் இடைவிடாதிருந்து, அற்பக் கூலிக்கு வேலைசெய்யும்படி வற்புறுத்தப்பட்டனர்; அநாதைக் குழந்தைகளையும் ஏழைக் குழந்தைகளையும் தொழிற்சாலைகளுக்கு அனுப்பி வந்தனர். இத்தகைய கொடிய நிலைமையில் தொழிலாளர் கல்விப்

பெருக்கோ, புத்திவிசாலமோ, ஆத்மஞானமோ, தேகாரோக்கியமோ அடைவது எவ்விதம் கூடும்? அவர்கள் மிருகங்களை ஒத்து, தாமஸ குணம் நிறைந்த மூடர்களாய், ஏழ்மை, பசி, பிணி முதலியவற்றால் பீடிக்கப்பட்டவர்களாய் நரகவேதனை முழுவதையும் இம்மையிலேயே அநுபவித்து வந்தனர். குதூகலமோ, புன்சிரிப்போ, இயற்கையழகில் ஈடுபட்டு ஆநந்திக்கும் மகிழ்ச்சியோ, படிப்பு வாசனையோ, தேகபுஷ்டியோ, நாகரிகமான வாழ்க்கையோ அவர்களுக்கு எள்ளளவும் இல்லாமல் போயின. வியாபார நிலவரமும் அடிக்கடி மாறிக்கொண்டே இருந்தது; பண்டங்கள் அதிகமாய் உற்பத்தியாவதனால், வியாபாரம் மந்தித்துப்போனால், உடனே பல தொழிலாளர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டனராதலால், பிழைக்க வழியில்லாமல் தவித்தனர். அரசாங்கத்தார் தொழிலாளரைக் கவனியாமல் இருந்தமையால், அவர்கள் தமது மனப்போக்கிற்கிணங்கபடி பலவந்தமாகவோ, அல்லது, பயமுறுத்தியோ தமது குறைகளுக்குப் பரிகாரம் தேட முயற்சித்தனர். அதிருப்தியடைந்திருக்கும் குடிமக்களை எந்த அரசாங்கத்திற்கும் பெரிய விரோதிகளாய் முடிவது இயல்பான விஷயம். புதிய புதிய கொள்கைகளையெல்லாம் தொழிலாளர்கள் ஆவலுடன் ஏற்றுக் கொள்வதற்கும் அந்தப் பகைமை தூண்டுகோலாயிருந்தது. அதனால், பிற்காலத்தில் துரைத்தனத்தார் தொழிலாளிகளின் குறைகளைத் தீர்க்கும்பொருட்டு பல சட்டங்களை இயற்ற வேண்டியதாயிற்று. தொழிற்சாலைகளில், வேலை நடக்கவேண்டிய முறையையும், முதலாளிக்கும் தொழிலாளருக்கும் இருக்கவேண்டிய சம்பந்தத்தையும் துரைத்தனத்தாரே தீர்மானித்தனர். பிற்காலத்தில், தொழிலாளர் இயக்கம் தோன்றி இப்பொழுது அடைந்துள்ள முக்கிய நிலைமையை அடைவதற்கும், மேற்படி புரட்சியே காரணமாயிருந்தது. தொழிற்சாலையின் முதலாளிகள் சில வருஷகாலத்திற்குப்பின் ஓட்முதலான இராஜீய உரிமைகளுக்குப் போராடினராதலால், பார்லிமென்ட் சபை சம்பந்தமாக சீர்திருத்தங்கள் செய்யப்படுவது அவசியமாயிற்று. இவ்வாறெல்லாம் பொருளாதாரத் துறையிலும் கைத்தொழில் முறையிலும் நேரிட்ட சம்பவங்கள் துரைத்தன நிர்வாகத்தின் போக்கையும் காட்டு வியவகாரங்களின் போக்கையும் பெரும்பாலும் மாற்றியமைத்தன. ஆனால்,

இங்கிலண்டின் ஆகாயமும் பூமியும் புகையாலும் புதிய இயந்திரங்களாலும் நிரப்பப்பெற்று முற்றிலும் புதுவிதமாய் மாறுவதற்குக் காரணமாயிருந்த கைத்தொழில் புரட்சி இராஜீய சம்பவங்களைப்போல ஒரு குறித்த தினத்திலோ வருஷத்திலோ நடந்து முடிந்துவிடவில்லை. அது மெதுவாகவும் காலக்கிரமத்திலும் படிப்படியாகவுமே நடந்தது.

கைத்தொழில் புரட்சிநடந்தபொழுதே இங்கிலண்டின் வியவசாய முறையிலும் சில மாறுதல்கள் ஏற்பட்டன. அதற்குமுன் வியவசாயிகள் பழைய வழக்கங்களின்படியே உழுது பயிரிட்டுவந்தனர். ஆனால் ஜனத்தொகை அதிகரிக்க அதிகரிக்க, உணவுப் பொருள்களும் தானியங்களும் அதிகமாய்த் தேவையாயின. அதனால், வியவசாயத் துறையிலும், புதுமையான சாதனங்களும், கருவிகளும் உபயோகிக்கப்படலாயின. ஆடுமாடுகளும் நன்றாய் போஷிக்கப்பட்டு விருத்தியடைந்தன. தொழிற்சாலைகளில் முதலாளிகள் நிர்வாகம் நடத்தியதைப்போலவே, வியவசாயத்திலும் பல தனவந்தர்கள் முதல்போட்டு, பண்ணையாட்களை வைத்துக்கொண்டு வேலை செய்து இலாபம் சம்பாதித்து வந்தனர். அந்தத் துறையிலும், கூலியாட்களுக்குப் பிரயாசையும் வறுமையுமே மிகுதிப்பட்டன. எனவே, கைத்தொழில்கள் விருத்தியடைந்ததனால், நாட்டில் பணப்பெருக்கு அதிகமானாலும், அது தனவந்தர்களிடமே போய்ச் சேர்ந்தது. இங்கிலண்டு வளம் நிறைந்ததாகவே இருந்தது; ஆனால் குடிமக்களிற் பெரும்பாலோர் வறுமையால் பீடிக்கப்பட்டு வந்தனர். மேலும் அடிக்கடி நேர்ந்த யுத்தங்களால், சாமான்களின் விலை அதிகரித்துவிட்டதாகையால் ஏழைகளின் துயரம் பெருகியது. அவர்களது குறைகளை நிவர்த்திக்க துரைத்தனத்தார் செய்த ஏற்பாடுகள் பின்னால் விளக்கப்படும். 18-ம் நூற்றாண்டில் இங்கிலண்டு முற்றிலும் மாறுபட்ட புதிய நாடாகிவிட்டதென்பதை மாத்திரம் நினைவில் வைக்கவேண்டும்.

18-ம் நூற்றாண்டில் இங்கிலீஷ் மக்களுடைய வெளிவாழ்க்கையில் மாறுதல்கள் ஏற்பட்டதற்கேற்ப, அவர்களுடைய கொள்கைகளிலும், நம்பிக்கைகளிலும் மனோபாவத்திலும்கூட சீர்திருத்தங்கள் ஏற்பட்டன. முன்பு கா/2தலிக் வகுப்பாரும், ப்ராடெஸ்டன்ட்

வகுப்பாரும் மதசம்பந்தமாக ஒருவரையொருவர் பகைத்து வந்த தெல்லாம் திடீரென்று மறைந்துபோயிற்று. கிரிஸ்தவமதக்கொள்கை களில் நம்பத்தகாதவைகளை எல்லோரும் அசட்டைசெய்து தள்ளி விட்டனர். மூட நம்பிக்கைகள் சம்பந்தமாகவே முன்பு பல வகுப் பார்களுக்குள்ளும் சச்சரவு நடந்து வந்தது. மனிதர் தர்மத்திற்குக் கட்டுப்பட்டு ஒழுங்கு தவறாது நடப்பதொன்றே போதுமென்றும், பைபிள் புஸ்தகத்தில் விவரித்துள்ள குறிப்பிட்ட சில விஷயங் களை நம்புவது அநாவசியமானதென்றும் சில மேதாவிகள் உபதேசம் செய்தனர். மாதாகோயிலுக்குப்போய் பிரார்த்தனை செய்வதில் கூட பலருக்கு நாட்டம் அற்றுப்போய்விட்டது. மதப்பற்றுதலும் கடவுளை நினைத்து உருகுவதும் வெளிவேஷம் என்று பலர் கருதி னர். ஒவ்வொரு விஷயத்தையும் கொள்கையையும் பகுத்தறிவுச் சுடரால் ஆராய்ந்து பார்த்தே அவர்கள் அதை ஒப்புக்கொண்டோ அல்லது நிராகரித்தோ வந்தமையால், அந்தக்காலம் "பகுத்தறியும் காலம்" (Age of Reason) என்று குறிக்கப்படுகிறது. ஆனால் அவ்விதம் ஹிருதய பூர்வமான உணர்ச்சிகளை அடியோடு முற்றிலும் அசட்டை செய்து, வெறும் பகுத்தறிவிற்கு முதன்மை கொடுப்ப தான அந்த இயக்கம், ஆத்மவளர்ச்சிக்குப் பெரிய தீங்கை விளைவிக் கத்தக்கதாயிருந்தமையால் சீக்கிரத்திலேயே, அதற்கு எதிரிடை யான இயக்கம் ஒன்று இங்கிலண்டில் தோன்றலாயிற்று.

1729-ல் ஆக்ஸ்போர்ட் நகரத்தில், சில பிரமுகர்கள் ஒன்று கூடி ஒரு சிறிய சபையை அமைத்தனர். அதில் சேர்ந்தவர்கள் தெய்வ பக்தியும், பரிசுத்தமான குணஒழுக்கங்களும் உடையவர்கள். அவர் கள் ப்ராடெஸ்டன்ட் வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு **ஜான் வெஸ்லி** (John Wesley) என்பவர் தலைவரானார். மற்றவர் கள் அவர்களைக் கண்டு ஏளனம்செய்து "கருக்கானவர்கள் அல்லது நிர்ணயஸ்தர்கள்" (Methodists) என்ற காரணப்பெயர் வழங்கினர். ஜான் வெஸ்லிக்கு உதவியாக அவருடைய சகோதரரான இன் னொருவரும் உழைத்து வந்தார். அவர்கள் தமது கொள்கைகளைப் பற்றி ஜனங்களுக்கு அடிக்கடி உபதேசம் செய்தனர். மதஸ்தாபன உத்தியோகங்களை வகித்துத் தூங்கி வழிந்துகொண்டிருந்த குருமார் கள் வெஸ்லியின் கூட்டத்தாரை வெறுத்தனர். அதனால் மெதா

லிஸ்ட் சங்கத்தார் தமக்கெனத் தனியான மடாலயங்களை ஸ்தாபித்துக்கொண்டதுடன், தமது சங்கத்தையும் ஸ்திரமாக வைத்துக்கொண்டனர். அவர்களுடைய உபதேசத்தால் பல ஜனங்கள், திருந்தி நல்வழிப்படலாயினர். பகுத்தறியும் காலத்தில் பலர் மதசம்பந்தமான விஷயங்களில் குருட்டு நம்பிக்கை வைக்காமல் பகுத்தறிவினால் வாததர்க்கங்கள்செய்து நாஸ்திகர்களாய் இருந்து வந்தபொழுது வெஸ்லியின் இயக்கம் அவர்களது மனப்போக்கைப் பரிசுத்தமான வழியில் திருப்பிவிட்டது. 18-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் இவாஞ்ஜெலிகல் (Evangelical) என்று இன்னோரியக்கமும் கிளம்பி, வெஸ்லி தொடங்கிய காரியத்தைப் பூர்த்தி செய்து வைத்தது. இவ்விரண்டு இயக்கங்களுக்கும் சில வேற்றுமைகள் இருந்தனவானாலும், இவாஞ்ஜெலிகல் இயக்கத்தின் பயனாகப் பலருக்கு மதஉணர்ச்சியும் தர்மத்தில் சிரத்தையும், நற்கருமங்கள் புரிவதில் ஆசையும், தயாளகுணமும் பிறந்தன. அந்த இயக்கத்தின் தலைவர்கள் பல பிரசார சபைகளையும் பாடசாலைகளையும் ஸ்தாபித்தனர். நீக்ரோக்களைக் கொண்டுபோய் அடிமைகளாய் விற்று வியாபாரம் செய்வது மகா பாதகமான செய்கை என்பதையும் அவர்கள் ஜனங்களுக்கு உபதேசித்தனர். வில்லியம் கௌபர் (William Cowper) வில்பர்போர்ஸ் (Wilberforce) என்ற இருவர் சுயநலங் கருதாது அந்தக்கொள்கை ஜனங்களிடை பரவுவதற்காக உழைத்து வந்தனர்.

இவ்வியக்கங்கள் காரணமாக, இங்கிலீஷ் ஜனங்களுக்குள், பொதுவாக, அநுதாப குணமும், தயாள சிந்தனையும் தோன்றிப் பெருகின. மனிதர் பரம பிதாவான கடவுளின் மக்களாதலால் எல்லோரும் சகோதரரென்ற உணர்ச்சியும் பாவியது. ப்ரான்ஸில் வால்டேர், ரூஸோ முதலியவர்கள் ஜனநாயகக் கொள்கைகளைப் பரப்பினதுபற்றி கொடுமையையும் சுயேச்சாதிபத்யத்தையும் எல்லோரும் வெறுக்கலாயினர். இந்தப் புது உணர்ச்சி பலர் மூலமாகப் பலவிதங்களில் கிளப்பிவிடப்பட்டது. ஜான்ஹோவர்டு (John Howard) என்பவர் இங்கிலண்டின் சிறைச்சாலைகளைப் பார்வையிட்டு, அங்கு கைதிகளின் ஆரோக்கியத்திற்கு அவசியமான சீர்திருத்தங்களைச் செய்ய மனதார உழைத்துவந்தார். ஆப்ரிக்காவி

விருந்து நீக்ரோக்களைப் பிடித்து அமெரிக்காவில் அடிமைகளாக விற்பதை நிறுத்தும்பொருட்டு வில்பர்போர்ஸ் முதலியவர்கள் உழைத்துவந்தனர். 1787-ல் 'அடிமை வியாபாரத்தை ஒழிக்கும் சங்கம்' ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. அந்தச் சங்கத்தின் முயற்சியினால் 1807-ல் அடிமை வியாபாரம் நிறுத்தப்பட்டது. அதன்பிறகு, அடிமைகளை வைத்துக்கொண்டிருப்பதே தவறு எனவும் சட்டமியற்றப்பட்டு, அதனால் அடிமைகளுக்கு சுதந்திரம் அளிக்கப்பட்டது. தொழிற்சாலைகளில் கூலியாட்களுக்கு சில வசதிகளையும் செய்துகொடுக்க அரசாங்கத்தார் முயற்சித்ததற்கும் ஷெ தர்ம சிந்தனையே காரணமாயிருந்தது. இவ்வாறு சகோதரத்துவமும் சமூக உணர்ச்சியும் ஜனங்களிடையே மெதுவாகவும் உறுதியாகவும் பரவி வந்தன. பல கவிராயர்களும் நூலாசிரியர்களும் நூதனமுறையில் பிரபஞ்ச சிருஷ்டியை வர்ணித்தனர். பத்திரிகைகளும் அபிவிருத்தியடைந்தன. ஜனங்கள் புத்தியிர் பெற்றவர்கள்போலாயினர். நாகரிக வளர்ச்சிக்கு அறிகுறியான மாறுதல்கள் யாவும் இங்கிலண்டில் ஏற்பட்டுவிட்டன.

---

# 39-வது அதிகாரம்

---

## நான்காவது ஜார்ஜ்.

**(1) அரசியின் வழக்கு; கானிங்; அன்னியநாட்டு வியவகாரம்:**—மூன்றாவது ஜார்ஜின் அந்தியகாலத்தில் அவருக்கு புத்தி மாருட்டம் ஏற்பட்டதுபற்றி இளவரசரே அரசியலை கவனித்து வந்து, 1820-ல் தந்தை இறந்தபிறகு அரசரானர். அரசருக்கு முக்கியமாயிருக்கவேண்டிய குணங்களில் பல நான்காவது ஜார்ஜ் அரசரிடம் காணப்படவில்லை. சுயநலமும், சோம்பலும், டாம்பீகமுமே அவரிடம் பூர்த்தியாய் நிறைந்திருந்தன. அவரது சகாக்கள் அவரை "ஐரோப்பாவின் முதல் கனவான்" என்று கூறி முகஸ்துதி செய்தனராலும், பல தீய குணங்களுக்கு அரசர் வழிகாட்டியாக இருந்தார். குடிகளுக்கு அவரிடம் மரியாதையோ அன்போ ஏற்

படவில்லை. ஆனால் மிக சீக்கிரத்தில், அவர் தமது தேகாரோக்கியத்தை இழந்து அரண்மனையிலேயே அடைபட்டுக் கிடந்தார். ஆகவே, மந்திரிகளே துரைத்தன நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பைப் பூர்த்தியாக ஏற்றுக்கொண்டனர். நான்காவது ஜார்ஜ் அரசருடைய துர்நடத்தைகள் அவ்வாறிருக்க, அவருக்கும் அவரது மனைவிக்கும் ஒரு சச்சரவு ஏற்பட்டது. கா/2ரோலைன் என்னும் பெயர்கொண்ட அவரது மனைவி விவாகத்திற்குப் பின் கணவனுடன் சச்சரவிட்டுக்கொண்டு பிரிந்துபோய்விட்டாள். அவர்களுக்குப் பிறந்த ஒரு பெண்குழந்தையும் இறந்துபோய் விட்டது. ஆனால், ஜார்ஜ் அரசரானபிறகு அவள் இங்கிலண்டுக்கு வந்து, தன்னைப் பட்டமகிஷியாக ஏற்றுக்கொள்ள வேண்டினாள். அரசருக்கு அவளிடம் பிரியம் ஏற்படவில்லையாதலால் அவர் கா/2ரோலைனுக்கும் தமக்கும் ஏற்பட்ட விவாக சம்பந்தத்தை விலக்கிவிட நிச்சயித்து, மந்திரிகளை வற்புறுத்தி, லார்ட்ஸ் சபையில் விவாக பந்த விலக்குச் சட்டம் ஒன்றை நிறைவேற்றச் செய்தார். தனக்கே முழுதும் அநுகூலமாயிருக்கத்தக்கபடி கா/2ரோலைனுக்கு சாட்சியம் கிடைக்கவில்லை. கணவன் மனைவி ஆகிய இருவர் மீதும் தவறிருந்தது. ஆனால், எந்த விதத்திலும் நற்குணமே இல்லாதவராயிருந்த அரசர் தமது மனைவியின்மீது தோஷம் கற்பித்ததை நம்பாமல் ஒரு சாரார் கா/2ரோலைனை ஆதரித்தனர். அவளது விஷயத்தில் ஜனங்களுக்கும் பிரியம் ஏற்பட்டுப்போனதாகையால் விவாக சம்பந்த விலக்குச் சட்டத்தை லார்ட்ஸ் சபையில் நிறைவேற்றிய மந்திரிகள், அதை காமன்ஸ் சபையில் ஆஜர்படுத்த அஞ்சினர்; ஆனால் அவளுடைய செல்வாக்கு வரவரக்குறைந்து போயிற்று. மறு வருஷத்தில் அவள் மரணமடைந்து விட்டமையால், அந்த வழக்கு அதோடு தீர்ந்துபோயிற்று. ஆனாலும் அந்தச் சம்பவத்தினால் அரசரிடம் பிராஜைகளுக்கு இருந்த சொற்ப மதிப்பும் மறைந்து போய்விட்டது. நான்காவது ஜார்ஜ் பட்டத்திற்குவந்த வருஷத்திலேயே பயங்கரமான ஒரு சதியாலோசனை நடந்தது. அப்பொழுதும் டோரிகளே மந்திரி சபையை அமைத்திருந்தனர். லிவர்பூல் பிரபு பிரதம மந்திரியாயிருந்தார். ஆர்தர் திஸ்ல்வுட் (Arthur Thistle Wood) என்பவர் மந்திரிகளெல்லோரையும் கொன்றுவிட

வேண்டுமென்று சூழ்ச்சிசெய்தார். அந்தச் சூழ்ச்சியில் சேர்ந்தவர்கள் லண்டன் நகரத்தில் காடோ தெருவில் ஓரிடத்தில் கூட்டம் கூடி வந்ததுபற்றி, அது "காடோ தெரு சதியாலோசனை" (Cato -Street Conspiracy) என்று குறிக்கப்படுகிறது. அவர்களுள் ஒருவனே அதை வெளியிட்டுவிட்டமையால், மந்திரிகள் தப்பித்துக்கொண்டனர். திஸ்ல்வுட் முதலியவர்கள் தூக்கிலிடப்பட்டு மாண்டுபோயினர்.

டோரி மந்திரிசபை சிறுகச் சிறுகக் கலைந்துகொண்டு வந்தது. பிரதம மந்திரி லிவர்பூல் எவ்வளவோ முயன்றானாலும், திறமையாகவும் திருப்திகரமாகவும் பரிபாலனம் செய்ய அவரால் முடியவில்லை. அவருடைய மந்திரி சபை மந்தமாக வியவகாரங்களை நடத்திவந்தது. அதில் பிட்டினது சிஷ்யர்களுள் பிரபலமாயிருந்தவரான ஜார்ஜ் கானிங் (George Canning) என்பவரொருவர் ஸ்தானம் வகித்திருந்தார். ஆனால், காரொலின் இராணிக்கு விரோதமாக சட்டம் இயற்றும்படி அரசர் தூண்டிய சமயத்தில், அவர் விலகிவிட்டார். கானிங் டோரிக்கட்சியைச் சேர்ந்தவரானாலும், முற்போக்கான கொள்கைகளை ஆதரித்தவர்; அவர் பிட்டின் உண்மையான சிஷ்யராகவே இருந்து வந்தவர். காதலிக் மதத்தாருக்கு விடுதலை அளிப்பது அவசியமானதென்று அவர் கருதினார். அவர் விக் கட்சியாரைவிட விசாலமான மனப்போக்குடையவராயிருந்தார். விக் கட்சியினர் பார்லிமென்டை சீர்திருத்த வேண்டுமென்று ஆவல்கொண்டிருந்தார். பிட்டும் அதே அபிப்பிராயத்தைக் கொண்டிருந்தார்; ஆனால் கானிங் அவ்விஷயத்தில் மாத்திரம் டோரிகளைப்போல குறுகிய மனப்பான்மை யுடையவரா யிருந்தார்.

1822-ல் பிரதம மந்திரி லிவர்பூல், தமது மந்திரி சபையில் கானிங் முதலியோருக்கு இடமளித்தார். ஏனெனில் அவ்விதமில்லாது போனால், மந்திரி சபையைக் கலைக்க வேண்டிய நிலைமை ஏற்படும்போலத் தோன்றியது. கானிங் அன்னியநாட்டு மந்திரியானார். அவருடைய நண்பர் ஹஸ்கிஸ்ஸன் (Huskisson) என்பவர் வர்த்தக சபைத் தலைவராகி (President of the Board of Trade) மந்திரிசபையில் ஸ்தானம் வகித்தார். லிவர்பூல் பிரதம மந்திரியா யிருந்தாரானாலும், மேலே குறிக்கப்பட்ட இருவருமே

முக்கிய மந்திரிகளா யிருந்தனர். ராபர்ட் பீல் (Robert Peel) என்ற பிரமுகரும் உள்நாட்டுக் காரியதரிசியா யிருந்தார். டோரிகளுக்குள், பீல் ஒருவரே உயர்ந்த ஸ்தானத்தைப் பெறத் தக்க திறமை வாய்ந்தவரா யிருந்தார். மேலேகூறியவாறு அமைந்திருந்த மந்திரிசபை 1827 வரையில் நீடித்திருந்து நல்ல சட்டங்கள் சிலவற்றைக் இயற்றக் கபாரணமாயிருந்தது.

அன்னியநாட்டு மந்திரி கானிங், அக்கரையுடன் தமது வேலையைச் செய்து வந்தார். நெப்போலியின் தோல்வியுற்ற பிறகு ஐரோப்பாவில் இருந்த அரசர்கள் ஒன்றுகூடி இராஜ்ஜியப் பிரிவினை செய்து கொண்டனரன்றோ? அவர்கள் ப்ரெஞ்சு தேசத்தரசருக்கு 1789-ல் நேர்ந்தகதி தமக்கும் நேரிடாமல் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு தமது தேசங்களில் நியாயமான பொதுஜன இயக்கங்கள் தோன்றினுல்கூடக் கடுமைகாட்டி அவைகளை அடக்கி வந்தனர். ஆகவே பல அரசர்கள் ஒன்றுகூடித் தம்முடைய சுயேச்சாதிகாரத்தை நிலைநிறுத்த முயன்றனர். முக்கியமாக, ஆஸ்ட்ரியா, ரஷ்யா, பிரஷ்யா முதலிய தேசங்களின் அரசர்கள் ஒன்றுகூடினர். 'பரிசுத்தமான சங்கம்' (Holy Alliance) என்று அவர்களின் சேர்க்கைக்குப்பெயர் உண்டாயிற்று. உண்மையில் அது அதன்பெயருக்கு நேர்விரோதமாகவே நடந்து வந்தது. அவ்வரசர்கள் ஐரோப்பாவின் இராஜீய நிலைமையைச் சீர்ப்படுத்தும் வேலையை ஏற்றுக் கொண்டனர். அவர்களுடைய கொடுமையைக் கண்டித்து ஸ்பெயின், போர்ச்சுகல், முதலிய தேசங்களின் பிரஜைகள் கலகம் செய்னர். பரிசுத்த சங்கத்தின் அரசர்கள் அப் பிரஜைகளைக் கடுமையாக அடக்க முயன்று வந்தனர். அவ்விஷயங்கள் ஐரோப்பிய சரித்திரத்தைச் சேர்ந்தவையாதலால், அவைகளில் இங்கிலண்டு சம்பந்தப்பட்ட வரையில் மாத்திரம் நாம் விவரிப்போம். இங்கிலீஷ் துரைத்தனத்தார் பரிசுத்தமான சங்கத்தின் நடவடிக்கைகளை அங்கீகரிக்கவுமில்லை; ஒரு தேசத்தின் உள் வியவகாரங்களில் இதர தேசத்தார் தலையிடுவது தவறு என்று கூறிக் கண்டித்தும் வந்தனர். ஆனுல் பரிசுத்த சங்கத்தாரை எதிர்த்துப் போருக்குசெல்ல இங்கிலண்டு விரும்பவில்லை. மேலும், அப்பொழுது தென் அமெரிக்

காவில் ஸ்பெயினுக்குச் சொந்தமாயிருந்த பிரதேசங்கள் தம்தாய்நாட்டின் ஆதிபத்தியத்திலிருந்து விடுதலைபெற்றன. அதையும்கா/2னிங் ஆமோதித்தார். மேலும், ஸ்பெயின் தேசத்தரசர், சமீபத்திலுள்ள போர்ச்சுகல் தேசத்தின் வியவகாரங்களில் தலையிட முயன்றதைக் கண்டு, கா/2னிங் அவரை எதிர்க்க எத்தனித்தார். அதைக்கண்ட ஸ்பெயின் தேசத்தரசர் தமது முயற்சியை விட்டுவிட்டார். இவ்வாறு யுத்தமின்றியே சில தேசங்களில் சுயாதீனத்தை கா/2னிங் காத்து நிலை நிறுத்தினர்,

அவருடைய தயாளகுணம் இன்னொரு விதத்திலும் வெளியாயிற்று. ஐரோப்பாவில் ஃரேக்கர்கள் துருக்கியின் அதிகாரத்திற்கு உட்பட்டிருந்தனர்; அந்தக் கொடுமையைப் பொறாத ஃரேக்கர்கள் சுயாதீனப்போர் புரிந்துகொண்டிருந்தனர். துருக்கியர்களை அடக்கவேண்டுமென்று ஐரோப்பியர்கள் எல்லோரும் விருப்பங்கொண்டு முனைந்தனர். முக்கியமாக, இங்கிலீஷ்காரர்கள் பலர் ஃரேக்க சேனைக்கு உதவியாகச் சென்று, துருக்கியர்களுடன் போராடினர். லார்ஃ பைரன் (Lord Byron) என்ற பிரசித்திபெற்ற கவிராயர்கூட யுத்தத்திற்குச் சென்றார். கா/2னிங் ஃரேக்கர்களுக்கு உதவிபுரிய வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டார். ரஷ்ய அரசரான முதல் நீக்கோலஸ் (Nickolas I) என்பவரும் ப்2ரெஞ்சு அரசாங்கத்தாரும் இங்கிலண்டுடன் சேர்ந்துகொண்டனர். 1827-ல் நவரினோ (Navarino) குடாக்கடலில் துருக்கியரது கப்பற்படை சிதருண்டுபோயிற்று. ஃரேக்கர்களுக்கு சுயாதீனம் கிடைத்தது. கா/2னிங் அப்பொழுது இறந்துபோய் விட்டாராகிலும் பராதீனப்பட்டிருந்த நாடுகளின் சுயாதீனத்தைக் காப்பாற்றுவதில் அக்கறை கொண்டவர் என்ற பெருமையை அவர் அடைந்தார்.

கா/2னிங் அன்னிய நாட்டு வியவகாரங்களினால் மேம்பாடு அடைந்ததைப்போலவே, அவருடைய கூட்டாளியான பீல் உள்நாட்டு வியவகாரங்களில் பல சீர்திருத்தங்கள் செய்து கீர்த்தியடைந்தார். பீல் நிர்வாக சக்தி வாய்ந்தவர். அவர் பணசம்பந்தமான சில சீர்திருத்தங்களைச் செய்ததுடன், குற்றவாளிகளை தண்டிக்கும்

முறையையும் மாற்றினர். தினசரி நிர்வாக காரியத்தையும் அவர் நிரம்பவும் திறமையாக நடத்தி வந்தார்.

வர்த்தக சபைத் தலைவரான ஹஸ்கிஸ்ஸன் என்பவரும் வியாபார சம்பந்தமான பல சீர்திருத்தங்களைச் செய்தார். அவைகளின் மூலம் தேசத்திற்குப் பெரிய நன்மை ஏற்பட்டது. பொருளாதார விஷயங்களை அவர் நன்குயறிந்தவர். அவர் இயற்றிய நன்மைகளில் சிலவற்றை நாம் இங்கு குறிப்பிடலாம். பல பண்டங்களின்மீது விதிக்கப்பட்டிருந்த தீர்வைகளை அவர் குறைத்தார்; தொழிலாளிகள் ஒன்றுகூடி சங்கங்கள் அமைக்கக்கூடாதென்ற சட்டத்தைத் தள்ளுபடி செய்துவிட்டார். ஆகவே, அதன்பிறகு தொழிலாளரது சங்கங்கள் சட்டத்திற்கு விரோதமான சங்கங்களாய்க் கருதப்படவில்லை. மேலும், இதர தேசங்களுடன் வியாபார சம்பந்தமான விசேஷ உடன்படிக்கைகள் செய்துகொள்ளும் வழக்கத்தையும் அவர் அநுஷ்டானத்திற்குக் கொணர்ந்தார்.

1827-ல் லிவர்பூல் பிரபு தேக அசௌக்கியமடைந்து வேலையிலிருந்து விலகிக்கொண்டார். உடனே, கா/2னிங் பிரதம மந்திரியானார். ஆனால், அவர் அந்தப் பதவியை அதிக காலம் வகிக்காமல் ஆறுமாதகாலத்திற்குள் இறந்துபோனார். அப்பொழுது கா/2னிங் மற்றெல்லா இராஜீய வாதிகளையும்விட பலவிதங்களில் மேன்மையுற்றிருந்தார்.

(2) **கா/2தலிக் மத ஸ்தாபனக் குறை நிவர்த்தி: வெல்லிங்டன் மந்திரி சபை:**—கா/2னிங்குக்குப் பின் லார்ட் கோடரிச் (Lord Goderich) என்பவர் மந்திரி சபையை அமைத்தார். ஆனால் அவருடைய கூட்டாளிகள் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுப் பிரிந்தனர். ஆகவே, கோடரிச் மந்திரிசபை சொற்பகாலமே இருந்தது. அதன் பிறகு வெல்லிங்டன் பிரபு பிரதம மந்திரியானார்; அவருடன் பீல் முதலிய டோரிப் பிரமுகர்களும் சேர்ந்து நிர்வாகம் நடத்தினர்.

பிட் பிரதம மந்திரியாக இருந்தபொழுது கா/2தலிக் மதத்தாருக்கு விடுதலையளிக்க முயன்றதும், மூன்றாவது ஜார்ஜ் அதைத் தடுத்தும் தெரிந்த விஷயங்கள். சில டோரிகளைத் தவிர மற்ற

தலைவர்கள் கா/2தலிக் மதத்தாருக்கு விடுதலையளித்து, அவர்களுடைய குறைகளை நிவர்த்திக்க விரும்பினர். ஆனால், பல இடையூறுகளினால், அது நிறைவேறவில்லை. 1823-ல் அயர்லன்டு தேசத்தில் கா/2தலிக் மதத்தாருடைய குறைகளை நிவர்த்திக்கும் பொருட்டு சில அயரிஷ்காரர்கள் கிளர்ச்சி செய்து வந்தனர். அவர்களுக்கு, டேனியல் ஓ கானல் (Daniel O' Connell) என்பவர் தலைவராக இருந்தார். 'உலகத்தில் சுயாதீனப் போராட்டம் நடத்தியவர்களுள் ஓ கானல் முக்கியமான ஒருவர்; அவர் வக்கீல் உத்தியோகம் பார்த்தவர். ஜனங்களுக்கு ஆவேசம் உண்டாகும்படி பேசுவதில் அவர் அதிக சமர்த்தம்; அயரிஷ்காரருடைய அன்பையும் நன்மதிப்பையும் பெற்றவர்; பொதுஜனங்களைத் தூண்டிக் கிளர்ச்சி புரியச்செய்து வெற்றியடைவதில் நிபுணர். அவருடைய சொல்லின்படியே அயர்லன்டு முழுதும் ஆடியது. 'கா/2தலிக் சங்கம்' (Catholic Association) ஒன்றை ஸ்தாபித்து, அதை ஒரு முக்கிய ஸ்தாபனமாகச் செய்தார். அவர் பலவந்த முறைகளைக் கண்டித்து, அமைதியான முறைகளிலேயே கிளர்ச்சி செய்து வந்தமையால், பிரிட்டிஷ் துரைத்தனத்தார் அச்சங்கொண்டு, 1825-ல் அந்த சங்கத்தைக் கலைத்துவிட்டனர். ஆனால் "நான் உருவத்தில் மாத்திரம் மாறுவேனேயன்றி, இறந்து போய்விடமாட்டேன்" என்று கூறுவதைப் போல, வேறொரு புதிய சங்கம் உற்பத்தியாகி, அதே வேலையை முன்னிலும் அதிக ஊக்கமாகச் செய்து வந்தது. ஓ கானலிடம் பயிற்சிபெற்ற சாமானிய அயரிஷ் மக்கள்கூட சுயாதீன தாகம்கொண்டனர். 1828-ல் ஓ கானல் பார்லிமென்டு அங்கத்தினரது பதவிக்கு அபேட்சகராய் நின்று, ஏராளமான ஓட்டுகளைப் பெற்றார். ஆனால், அவர் கா/2தலிக் மதத்தினராதலால், பார்லிமென்டில் ஸ்தானம் வகிக்க அருகமற்றவராயிருந்தார். அயர்லன்டில் பெரும் குழப்பமாக இருந்தது. அப்பொழுது டோரிகளே மந்திரிகளாயிருந்தனரானாலும், வெல்லிங்டன், ஏதாவது சீர்திருத்தம் செய்தாலன்றி அயரிஷ்மக்கள் அடங்கமாட்டார்களென் றுணர்ந்து 1829-ல் ஒரு மசோதாவை உற்பத்தி செய்து, கா/2தலிக் மதத்தினர் பார்லிமென்டில் ஸ்தானம் வகிக்கலாமென்று தீர்மானித்தார். ஆனால், பார்லிமென்டில் அது நிறை

வேறியதானுலும், டோரிகள் தமது தலைவர்களது செய்கையைக் கண்டித்து, அரசரிடம் சென்று அந்தச் சட்டத்திற்கு சம்மதி யளிக்கக் கூடாதென்று வற்புறுத்தி வேண்டினர். அயரிஷ் கா/2த லிக் மதத்தினர்மீது இங்கிலீஷ்காரருக்கு அவ்வளவு வெறுப்பு ஏற் பட்டிருந்தது. அரசரும் அவர்களது ஆலோசனைக் கிணங்கி, தமது தலை போவதானுலும் அந்தச் சட்டத்தை அங்கிகரிப்பதில்லை என்று உறுதியாகக் கூறிவிட்டார். ஆனல் அந்த உறுதிப்படி நடக்கும் துணிபு மாத்திரம் அவரிடம் இல்லாமல் போய்விட்டது. ஆகவே அவர் அந்தச் சட்டத்தில் கையெழுத்துச் செய்துவிட்டார். ஓ கானல் வெற்றிமாலை பூண்டவராய்ப் பார்லிமென்டில் ஸ்தானம் வகித்தார். ஆனல் அப்பொழுது முதற்கொண்டே அவர் அயர் லன்டிலுக்கு இராஜீய சுயாதீனம் வேண்டுமென்றும், 1800-ல் நடந்த அயரிஷ் ஐக்கியச் சட்டத்தைத் தள்ளுபடி செய்ய வேண்டுமென் றும் கிளர்ச்சி செய்யலானுர்.

அன்னிய நாட்டு வியவகாரங்களில் வெல்லிங்டன், கா/2னிங் செய்ததற்கு முற்றிலும் மாருக நடந்து கொண்டார். கா/2னிங் சுயாதீனத்திற்காகப் போராடிய தேசங்களுக்கு உதவிபுரிந்தார். அந் தக்காரணத்தினுலேயே அவர் துருக்கியுடன் யுத்தம்புரிந்து, கிரேக்க சுயாதீனத்தைக் காப்பாற்றினுர். வெல்லிங்டனே அதற்கு எதி ரிடையான கொள்கையை ஆதரித்தார். போர்ச்சுகல் தேசத்தில் ஒரு சுயேச்சாதிபதி ஜனங்களது சுதந்திரத்தை மறுத்துக் கொடுங் கோன்மை செலுத்தியபொழுது கூட, வெல்லிங்டன் அசட்டை யாக இருந்துவிட்டார். அவருடைய கூட்டாளியான பீல் மாத்திரம் முன்போலவே உள்நாட்டு நிர்வாகத்தில் முக்கியமான பல சீர்திருத் தங்களைச் செய்தார். உதாரணமாக, அவர் போலீஸ் படையைப் புதுப்பித்து, அது அதிகத் திறமையுடன் வேலைசெய்ய வழி ஏற் படுத்தினுர்.

———

## 40-வது அதிகாரம்

### நான்காவது வில்லியம்

(1) பார்லிமேன்டின் சீர்திருத்தம்:—1830-ல் நான்காவது ஜார்ஜ் மரணமடைந்தார். அவருக்குச் சந்ததிகள் இல்லாமற் போயினவாதலால், அவருடைய சகோதரர் வில்லியம் என்பவர் பட்டம் பெற்றார். அரசருக்குத்தேவையான சிறப்புகளில் எதுவும் அவரிட காணப்படவில்லை. அரசபதவி கிடைத்ததே அவருக்கு சிறித ளவு தடுமாற்றத்தை உண்டுபண்ணிவிட்டது. ஆனால் அவர் கொடிய நடத்தையிலோ வஞ்சகத்திலோ இறங்காமல் நிதானமாகவே நடந்து வந்தமையால், அவரது காலம் அமைதியாகவே கழிந்தது. 1830-ல் வெல்லிங்டன் மந்திரிசபை கலைந்துபோயிற்று. விக் தலைவரான க்ரே பிரபு (Earl Gray) பிரதம மந்திரியானார். ஏறக்குறைய இருபது வருஷங்களுக்குப் பிறகு மறுபடியும் விக் கட்சிக்கு அதிகாரம் திரும்பவும் கிடைத்தது. ஆனால் க்ரேயின் மந்திரி சபையில் சில முன்னேற்ற நோக்கமுடைய டோரிப் பிரமுகர்களையும் சேர்த்துக்கொண்டார். அந்த மந்திரிசபை செய்த முக்கியமான காரியம் பார்லிமென்டின் சீர்திருத்தமேயாகும்.

18-வது நூற்றாண்டின் முடிவில் ப்ரெஞ்சுப் புரட்சி ஏற்பட்டதனால், ஐரோப்பாவில் ஜனநாயகக் கொள்கைகள் துரிதமாய்ப் பரவின. அதாவது, அரசர்கள் சுயேச்சாதிகாரம் நடத்துவது கெடுதலானதென்றும், ஜனங்களிடமே உண்மையான அதிகாரம் இருக்க வேண்டுமென்றும், ஆளப்படுவோருடைய விருப்பத்தையும் சம்மதியையும் அநுசரித்தே துரைத்தன நிர்வாகம் நடக்கவேண்டுமென்றும் எல்லோரும் கூறிவந்தனர். ஆகவே, ஐரோப்பாவில் நெப்போலியனுடைய ஏகாதிபத்யம் முடிந்து சுமார் 15 வருஷ காலத்திற்குப் பின் பலதேசங்களில் பிரஜைகள் தம் அரசர்களை எதிர்த்துக் கொடுங்கோன்மையைக் கண்டித்து சுதந்திரத்திற்காகப் போராடினர். ஆனால் இங்கிலீஷ்காரர்கள் நிதானபுத்தியோடு நடந்து புரட்சிகளை வெறுப்பவர்களாதலாலும், இங்கிலண்டில் கேவலமான துரைத்தனம் நடவாமையாலும், அங்கு மாத்திரம் புரட்சி எற்பட

வில்லை. ஆனால், ஐரோப்பாவில் பரவியிருந்த நாகரிகமான கொள்கைகள் இங்கிலண்டிலும் பரவிப்போனது பற்றி, அங்கு பலர் பார்லிமென்டின் சீர்திருத்தத்திற்காகப் போராடலாயினர்.

பார்லிமென்ட் சபை ஸ்டுவர்ட் அரசர்களுடன் போராடி பிரசித்திபெற்றிருந்ததானாலும் அது உண்மையில் பூர்த்தியான ஜனப் பிரதிநிதி சபையாக இல்லை. பிரதிநிதித்துவம், தேர்தல் முறை ஆகிய இரண்டிலும் பலகுறைகள் இருந்துவந்தன. நெடுங்காலமாய் வழக்கத்தி லிருந்துவந்த முறை மாறாமல் அப்படியே பின்பற்றப் பட்டுவந்தது. ஆனால் நாட்டிலோ சகலமான துறைகளிலும் கணக்கற்ற மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. பல நூற்றாண்டுகளாய் அநுஷ்டானத்தில் இருந்துவந்த புராதன முறை, 18, 19-ம் நூற்றாண்டுகளின் நிலைமைக்குச் சிறிதும் பொருத்தமாக இல்லை. உதாரணமாக, பிரதிநிதித்துவ விஷயத்தில் ஒவ்வொரு ஜில்லாவிலிருந்தும் இரண்டு பிரதிநிதிகள் வீதம் பார்லிமென்டுக்கு அங்கத்தினர்களாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நாளடைவில் சில ஜில்லாக்கள் அபிவிருத்தி யடைந்தன; சில பாழடைந்துபோயின. ஆனாலும், பெரியது, சிறியது என்ற பேதமின்றி அவைகள் சமமான பிரதிநிதித்துவமே பெற்றிருந்தன. மேலும், கைத்தொழில் புரட்சி சம்பந்தமாக நாட்டில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. புதிய நகரங்கள் தோன்றியிருந்தன. அங்குதான் ஜனத்தொகுதியும், வியாபாரமும், பணமும் பெருகியிருந்தன. ஆனால் மேற்படி நகரங்களுக்கு பார்லிமென்டில் பிரதிநிதித்வமே இல்லாதிருந்தது. ஐந்தாறு நூற்றாண்டுகளுக்குமுன்பு செழித்திருந்து, இப்பொழுது பாழடைந்து போயிருந்த பிரதேசங்களில் சில, தேர்தல் பிரதேசங்களாக இருந்து, இரண்டு பிரதிநிதிகளை அனுப்பின. ஜனக்கூட்டம் அதிகமாயுள்ள இடங்கள் அநாதரவு செய்யப்பட்டுக் கிடக்க, பாழ் இடங்களுக்கு பார்லிமென்டில் அங்கத்தினர்களைப் பெறும் கௌரவம் இருந்து வந்தது. உதாரணமாக, அம்மாதிரி பாழடைந்த பிரதேசம் ஒன்று ஒரு பிரபுவின் மேய்ச்சல் தரையாயிருந்ததானாலும், அதற்கும் இருவர் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இன்னொரு இடத்தில் ஒரு கோட்டை மாத்திரம் இருந்தாலும், அதற்கும் இரண்டு அங்கத்தினரை அனுப்பும் உரிமை இருந்துவந்தது. ஆனால் அதன் அண்டையில் இருந்த

புதிய பட்டணங்களுக்கு எவ்வித உரிமையும் ஏற்படாதிருந்தது. பாழடைந்த பல ஜில்லாக்களை ஒரு தனவந்தர் விலைக்கு வாங்கிக் கொண்டால், அவர் தமது இச்சைப்படி சிலரை பார்லிமெண்டுக்கு அனுப்பிவிடலாம். எனவே, பார்லிமென்ட் சபையில் உண்மையான ஜனப்பிரதிநிதிகளுக்குப் பதிலாக, மேல்கூறியவாறு நிர்மானுஷ்யப் பிரதேசங்களின் சொந்தக்காரர்களோ அல்லது அவர்களது ஆட்களோ வீற்றிருந்தனர். மேலும் பார்லிமென்ட் தேர்தலில் ஓட்டுக்கொடுக்கும் உரிமையும் சொற்ப ஜனங்களுக்கே அளிக்கப்பட்டிருந்தது. முக்கியமாக, பூஸ்திதி படைத்தவர்களே ஓட்டர்களாயிருந்தனர். கைத்தொழில் முதலாளிகளான தனவந்தர்களுக்குக்கூட ஓட்டு சுதந்திரம் கிடைக்காதிருந்தது. தொழிலாளர் பலரும் அசட்டையாய் விடப்பட்டிருந்தனர். ஆகவே, பிரதிநிதித்துவம், ஓட்டுரிமை ஆகிய இரண்டு விஷயங்களிலும், சீர்திருத்தம் ஏற்படுவது அவசியமாயிருந்தது. கைத்தொழில் புரட்சியினாலும், புதிய கொள்கைகள் ஜனங்களிடையே பரவியதாலும், மேற்படி சீர்திருத்தத்தை மேலும் தாமதப்படுத்துவது கூடாததாயிற்று.

பிட் முதலியோர் ஏற்கெனவே பார்லிமெண்டின் சீர்திருத்தத்தில் அக்கரை காட்டி யிருந்தனர். ஆனால், ப்ரான்ஸில் இரத்த வெள்ளத்துடன் புரட்சி ஏற்பட்டதைக் காணவே, தாம் ஏதாகிலும் மாறுதல் செய்தால், தமது நாட்டிலும் அநர்த்தம் நேரிடக்கூடுமென்று பயந்து தரைத்தனத்தார் வாளா இருந்துவிட்டனர். சீர்திருத்தம் செய்வதை விக் கட்சியார் ஆதரித்தனர். டோரிகள் அதை எதிர்த்தனர். இரண்டொரு டோரிகள் அதற்கு சாதகமாகவும் இருந்தனர். வெல்லிங்டன் பிரபு மந்திரியாயிருந்தபொழுது, அவர் தம்மால் பார்லிமெண்டின் சீர்திருத்தம் செய்ய இயலாது என்று கூறிவிட்டார். ஆனாலும், நாட்டில் பலர் மேற்படி சீர்திருத்தங்களுக்காகக் கிளர்ச்சி செய்துவந்தனர்.

1831-ல் க்ரே மந்திரி சபையாரின் முயற்சியினால், ஒரு 'சீர்திருத்த மசோதா' (Reform Bill) கொண்டுவரப்பட்டது. ஆனால் அது நிறைவேறுவதற்குப் பல இடையூறுகள் ஏற்பட்டன. உடனே பார்லிமென்ட் சபையைக் கலைத்துப் புதிய தேர்தல்

நடத்தினார்கள். புதிய சபையில் பலர் சீர்திருத்தத்தை ஆதரித்தனர். ஆனால், காமன்ஸ் சபையில் நிறைவேறிய மசோதா, லார்ஸ் சபையில் நிராகரிக்கப்பட்டுப் போயிற்று. உடனே நாடு முழுதிலும் கலகங்கள் உண்டாயின. ருஊரே இராஜிநாமாச் செய்யவும் தயங்கவில்லை. கடைசியில் வெல்லிங்டன் பிரபு, மசோதாவை எதிர்ப்பதில் பயனில்லை என்று கண்டு, அசட்டையாக இருந்துவிட்டார். 1832-ல் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறியது. அதன்படி 2000 குடிமக்கள்கூட இல்லாத ஜில்லாக்களுக்கு பிரதிநிதித்வம் இல்லையெனச்செய்துவிட்டனர். 2000 முதல் 4000 குடிகளடங்கிய ஜில்லாக்களுக்கு ஒருபிரதிநிதியை அனுப்பும் உரிமைகிடைத்தது. புதிய வியாபார ஸ்தலங்கள் அதனதன் ஜனத்தொகைக் கேற்றபடி பிரதிநிதித்வம் பெற்றன. ஓட்டுரிமையும் முன்னிருந்ததைவிட அதிக ஜனங்களுக்குக் கிடைத்தது. முன்பு பூஸ்திதி இருப்பதே அவசியமான யோக்கியதையாகக் கருதப்பட்டது. 10 பவுன் வரி விதிக்கக்கூடிய வீடுகளில் வசித்தவர்களுக்கு ஓட்டு கிடைத்தது. டோரிகள் அந்த முறையைப் பெரும் புரட்சியென்று கூச்சலிட்டனர். பூஸ்திதி வாய்ந்தவர்கள் மாத்திரம் வகித்துவந்த அதிகாரம் அதோடு ஒழிந்தது; கடை வியாபாரிகள் முதலான இதர சொத்துகள் படைத்த பொதுமக்களுக்கும் ஷெ அதிகாரம் கிடைத்தது. ஆனால் 1832-ம் வருஷத்துச் சட்டத்தினாலும், பூர்த்தியான ஜனநாயக ஆட்சி ஏற்படவில்லை. ஏனெனில், அப்பொழுதும் சாமானியமான கூலியாட்கள் ஓட்டு சுதந்திரமின்றியே இருந்தனர். ஆகவே, சில வருஷங்களுக்குப் பிறகு மேன்மேலும் சீர்திருத்தங்கள் செய்யவேண்டியதாகவே இருந்தது. ஆனால் நெடுங்காலமாய் ஒரே வழியைப் பின்பற்றி, பழைய தண்ணீரே தேங்கிக் குட்டைபோலிருந்த பார்லிமெண்ட் சபையை முதன் முதல் சீர்திருத்திய பெருமைப்பாடு ருஊரே மந்திரிசபைக்கே உரியதாயிற்று. லார்ஸ் ஜான் ரஸ்ஸல் (Lord John Russell) என்ற மந்திரியே அந்தச் சட்டத்தை நிறைவேற்றும் விஷயத்தில் அதிக அக்கரையோடு உழைத்து வந்தார்.

(2) இதர சீர்திருத்தங்கள்:—1833-ல் புதிய முறைப்படி நடத்தப்பட்ட தேர்தலின் பிறகு பார்லிமெண்ட் கூடியது. அந்தச் சபையினர் நாட்டின் க்ஷேமத்திற்கு வேண்டிய இன்னும் பல சீர்திருத்

தங்களைச் செய்ய முனைந்தனர். அந்தச் சபையில் டோரிகள் சிலரே இருந்தனர். ஏனெனில், சீர்திருத்த மசோதாவை அவர்கள் எதிர்த்தனராதலால், அவர்களுக்கு அதிக ஓட்டுகள் கிடைக்கவில்லை. ஆனால், விக் கட்சியாருக்கும் அதில் பூர்ணபலம் இல்லை. அயரிஷ் தலைவர் ஓகானல் தமது சகாக்களுடன் தமது நாட்டு வியவகாரங்கள் விஷயமாக சச்சரவிட்டுக்கொண்டே இருந்தனர். ஆகவே, விக் கட்சிக்கும் பார்லிமெண்டில் எதிர்ப்பு இருந்தே வந்தது. அந்த சமயத்தில் அயர்லண்டில் ஒரு கிளர்ச்சி நடந்தது. ப்ராடெஸ்டன்ட் மதஸ்தாபனத்திற்கு உபயோகமாக எவ்வித வரியும் செலுத்த முடியாதென்று அயர்லண்டில் கா/2தலிக் மதத்தினர் கூறிவிட்டனர். அதனால் அரசாங்கத்தாருக்குப் பெரிய இடைஞ்சல் ஏற்பட்டது.

1833-ல் பார்லிமெண்டார் ஒரு சட்டமியற்றி பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திலுள்ள அடிமைகளையெல்லாம் விடுவிக்க வழி செய்தனர். அடிமைகளுக்கு விடுதலையளிப்பதற்காக அவர்களது எஜமானர்களுக்கு இரண்டு கோடி பவுன்கள் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டியதாயிற்று. ஏழைகளுக்கும் பிச்சைக்காரர்களுக்கும் நாளடைவில் நன்மை பயக்கத்தக்க ஒரு சட்டம் மறு வருஷத்தில் இயற்றப்பட்டது. 1835-ல் நகரபரிபாலன சபைகளும் பார்லிமென்டைப்போல சீர்திருத்தமடைந்தன.

க்ரேயின் மந்திரி சபையிலிருந்தவரான பால்மர்ஸ்டன் (Palmerston) என்பவர் அன்னிய நாட்டின் வியவகாரங்களை கவனித்து வந்தார். அவர் பிற்காலத்தில் பிரதம மந்திரியானார். கா/2னிங்கைப் போலவே அவரும் பராதீனமாயிருந்த தேசங்களின் உரிமைகளைக் காப்பதில் அக்கரை காட்டினார். 1834-ல் க்ரே மந்திரிசபை கலைந்துபோயிற்று. ஏனெனில் மந்திரிகளுக்குள்ளேயே மனஸ்தாபம் இருந்துவந்தது. அதன்பிறகு லார்ட் மேல்போர்ன் (Lord Melbourne) பிரதம மந்திரியானார். ஆனால் அவரிடம் சிர்வாகத்திறமை விசேஷமாகக் காணப்படவில்லை. எனவே, டோரிக்கட்சி மறுபடியும் தலையெடுக்கத் தொடங்கியது.

டோரிகளுக்குள் வெல்லிங்டன் பிரபு முதலியவர்களுடைய காலம் கடந்துவிட்டது; அவர்களுக்கு நாட்டில் அதிகமதிப்பு இல்

லாமல் போய்விட்டது. ஆனால், பீல் என்பவரைப்பற்றி நாம் முன்பே கூறியிருக்கிறோமல்லவா? அவர் மற்ற எல்லோரையும் விட அதிக சிறப்பு வாய்ந்தவரென்பது முதலிலிருந்தே தெரிந்தது. ஏற்கனவே, அவர் மந்திரிசபைகளில் ஸ்தானம் வகித்து உள்நாட்டு வியவகாரத்தை நடத்தியிருந்தார். (அவர் 1830-ல் ஸர் பட்டம் பெற்றார்.) ஆனால் அவர் டோரியாயிருந்தாலும், முன்னேற்றச் சீர்திருத்தங்களை ஆதரிக்கும் இயல்புடையவர். கா/2தலிக் மதஸ்தர்களின் குறைகளை நிவர்த்திப்பதில் அவர் அதிக அக்கறையுடையவர். உண்மையாக, உழைக்கும் குணமும், பொது ஜனங்களிடம் அநுதாபமும், சூட்சும புத்தியும், ஆழ்ந்து ஆலோசனை செய்யும் சக்தியும் அவரிடம் இருந்தமையால் அவரிடம் எல்லோரும் வசியமானார்கள். ஆகவே, மிக சீக்கிரத்தில் அவர் தமது கட்சியை பலப்படுத்திக் கொண்டார். முதலில், அவர் டோரி யென்ற பெயரை நீக்கிவிட்டு கன்ஸர்வேடிவ் (Conservative) என்ற பெயரைத் தமது கட்சிக்கு ஏற்படுத்தினார். பழையமுறைகளையும் ஸ்தாபனங்களையும் மாற்றாமல் பாதுகாப்பவர்கள் என்பது அதன்பொருள். (அதுபோலவே விக் கட்சிக்கு லிபரல் (Liberal) என்ற பெயர் கிடைத்தது—முற்போக்கான முறைகளை ஆதரிப்பவர்கள் என்பது அதன் பொருள்.) அதனால் கன்ஸர்வேடிவ் கட்சி பிற்போக்கான கட்சி யென்று கொள்வது சரியாகாது. பீலைச் சேர்ந்தவர்களை ஒருவர் 'விக் முறைகளை ஆதரிக்கும் டோரிகள்' என்று கூறினார். ஆகவே, பீல், நாட்டின் நன்மைக்கு வேண்டிய அளவு சீர்திருத்தம் செய்வதற்கு விருப்பமுடையவராகவே இருந்தார். 1834-ல் அரசர் பீல் மந்திரிசபையை அமைக்கவேண்டுமென்று கோரினார். ஆனால், அவருக்கு வேண்டிய பக்கபலம் இல்லையாதலால் பீல் சீக்கிரத்தில் மந்திரி பதவியிலிருந்து விலகிக்கொண்டார். மறுபடியும். மெல்போர்ன் (விக் கட்சியைச்சேர்ந்தவர்) பிரதம மந்திரியானார். ஆனால், பார்லிமென்டில் பீலுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது, 1837-ல் வில்லியம் அரசர் இறந்துபோனார்.

---

# 41 - வது அதிகாரம்

## விக்டோரியா

(1) விக்டோரியா: சமூகக்கிளர்ச்சிகள்: பிரதம மந்திரி பீல்;—நான்காவது வில்லியம் புத்திரப்பேறின்றி மாணமடைந்தமையால், அவரது சகோதாரின் புதல்வி விக்டோரியா 1837-ல் அரசியானாள். அரசிக்கு அப்பொழுது பதினெட்டு வயதே முடிந்திருந்ததானாலும், அவளிடம் பல நற்குணங்கள் நிறைந்திருந்தன. நிதானபுத்தியும், சாந்தகுணமும், மனோதைரியமும், எதையும் ஆழ்ந்து கவனிக்கும் குணமும் பெற்றிருந்தவளான விக்டோரியா சீக்கிரத்தில் தனது பதவிக்குரிய கம்பீரத்தன்மையை வகித்து நிர்வாகம் நடத்தலானாள். முதலில், பிரதம மந்திரி மெல்போர்ன் அவளுக்கு இராஜீய வியவகாரங்களைக் கற்றுக்கொடுக்க வேண்டியதாயிற்று. அவள் ஆல்பர்ட் (Albert) என்பவரை 1840-ல் மணந்துகொண்டாள். ஆல்பர்ட் அரசர், விக்டோரியாவுக்கு அரிய துணைவராயிருந்தார். அவர் மறைவில் இருந்துகொண்டே, சுயநல சிந்தனையின்றி தமது மனைவிக்கு உதவிபுரிந்து வந்தார். அவர் தமது கடமையை படாடோபமின்றி மனதாரச் செய்தமையால், முதலில் அவரிடம் அதிக பிரியம் வைக்காத இங்கிலீஷ்காரர்களும், நாளடைவில் அவரை நன்கு மதிக்கலாயினர். முக்கியமாக அன்னியநாட்டு வியவகாரங்களில் ஆல்பர்ட் மிகுந்த அநுபவசாலியாயிருந்தார். எப்பொழுதும், அரசியும் அரசரும் அன்னியோன்னியமாகவே இருந்து வந்தனர். விக்டோரியாவின் பரிசுத்தமான நடத்தையும், அவளது மேன்மைக் குணங்களும் பலருக்கு வழிகாட்டியாக இருந்தன. விக்டோரியாவின் முன்னோர்கள் அவ்வளவு பரிசுத்தமாக நடந்து கொள்ளவில்லை. அதுவன்றி, அவர்கள் ஏதாகிலும் ஓர் இராஜீயக் கட்சியிடம் அதிக அபிமானம்வைத்து மற்ற கட்சியின் பகைமையைத் தேடிக்கொண்டனர். ஆனால், விக்டோரியாவோ சக்கரவர்த்தினிக்குரிய கம்பீரகுணம் வாய்ந்து பரிசுத்தமாக நடந்து, கட்சிச்சண்டைகளில் கலந்துகொள்ளாமல் விலகி இருந்தபடியே கீர்த்தியோடு நடந்து கொண்டாள். விக்டோரியாவிடம் பிரத்தி

யேகமாகக் காணப்பட்ட மேம்பாட்டினுல், இங்கிலண்டின் அரச குலத்திற்குரிய சில விசேஷ அம்சங்கள் வெளியாயின. இதர தேசங்களில், அரசனின்றி, ஜனநாயக ஆட்சி நடந்து வருகையில், இங்கிலீஷ் அரசருக்குமாத்திரம், அளவற்ற மதிப்பும், கௌரவமும் இருந்து வருவது ஆச்சரியகரமானதல்லவா? குடிமக்களின் மனப்பூர்வமான அன்பை விக்டோரியாவும் அவரது சந்ததியாரும் உண்டாக்கிக்கொள்வதே அதற்குக் காரணம். ஜனப்பிரதிநிதிகளான மந்திரிகளிடத்திலேயே சகலமான அதிகாரத்தையும் கொடுத்து, அரசர்கள் மேல்பார்வை பார்த்து வருவதே சிறந்த வழியென்பதை விக்டோரியா மகாராணி உணர்ந்தாள். மூன்ருவது ஜார்ஜ் அரசர் தமது இச்சைப்படி மந்திரிகளைப் பொறுக்கியெடுக்க முயன்றது வீணனது தெரிந்த விஷயம். 1688-லும், ஹா/2னோவர் வம்சத்தினர் பட்டத்திற்கு வந்த பின்னும், ஏற்பட்ட அரசியலபிவிருத்தி தடைப்படாமல் பெருக்கமடைந்தது. கா/2பினட் சபைக்கும், பிரதம மந்திரிக்கும் சகலமான செல்வாக்கும் வந்து சேர்ந்தது. அரசியோ (அல்லது அரசரோ) நாட்டின் தலைவராகவும், கடல்களுக்கப்பால் பரவியிருக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தை ஒன்று சேர்க்கும் சக்தியாகவும் இருந்தார். அரசியின் பெயரால் மந்திரிகள் நிர்வாகம் நடத்தி வந்தனர். ஆனுல் மந்திரிகள் தவறுதலாக நடந்தால், அரசி அவர்களைத் திருத்தி சரியான வழியில் செல்லும்படி வற்புறுத்தப் பின் வாங்கவில்லை. அவளுடைய ஆட்சியில் பல சம்பவங்கள் நிகழ்ந்தன. பல துறைகளில் தேசத்தில் முன்னேற்றம் ஏற்பட்டது. ஜனநாயக தத்துவமும் அபிவிருத்தியடைந்தது.

1714-ல் முதலாவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தது முதற்கொண்டு, பிரிட்டிஷ் அரசருக்கு ஹா/2னோவர் இராஜ்ஜியமும் உட்பட்டிருந்ததல்லவா? அந்த தேசத்தின் சட்டப்படி, ஸ்திரீகள் அரசுபுரிதல் கூடாதாகையால் விக்டோரியா அரசியானதும், ஹா/2னோவர் தனிமையாகப் பிரிந்து வேறு அரசருக்குக் கீழ்ப்பட்டது. விக்டோரியா அரசாட்சியை ஏற்றுக்கொண்டபின் சில வருஷகாலம் வரையில் நாட்டில் குழப்பங்களும் கிளர்ச்சிகளும் இருந்து வந்தன. கைத்தொழில் புரட்சியின் பலனுக நாளடைவில்

தொழிலாளிக்கு ஏற்பட்ட கஷ்டநிஷ்டூரங்களை முன்னோரதிகாரத்தில் விரிவாகக் கூறினோம். துன்பமடைந்த ஜனங்கள் கிளர்ச்சி செய்வது சகஜமே. 1832-ல் பார்லிமெண்டின் சீர்திருத்தம் ஏற்பட்ட பின்னும் தமக்கு எவ்விதமான அநுகூலமும் ஏற்படாததைக் கண்ட தொழிலாளிகள் நிரம்பவும் அதிருப்தியடைந்தனர். அவர்களுக்குக் கிடைத்த கூலியோ சொற்பமாயிருந்தது. விலைவாசிகளும் அதிகப்பட்டுப்போயிருந்தன. எனவே, பலர் பலவிதமான பரிகாரமுறைகளைத் தேடலாயினர். அவ்வியக்கங்களுள் முக்கியமானது சார்ட்டிஸ்ட் இயக்கம் (Chartist Movement) என்பது. அந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் பொதுமக்களின் உரிமைப் பத்திரம் (People's Charter) ஒன்று தயாரித்து அதன்மூலம் சில சீர்திருத்தங்களைக் கோரினாராதலால், அவர்களுக்கு அந்தப் பெயர் உண்டாயிற்று. அவர்கள் ஆறு சீர்திருத்தங்கள் வேண்டினர். அவை யாவன: (1) ஆண்பாலார் எல்லோருக்கும் ஓட்டுரிமை (2) இரகசியமாய் ஓட்டுக்கொடுக்கும் வசதி (3) வருஷவாரிப் பார்லிமெண்ட் (4) சமமான தேர்தல் பிரதேசங்கள் (5) பார்லிமெண்டில் ஸ்தானம் வகிப்பவர்கள் இவ்வளவென்று குறிக்கப்பட்ட சொத்து உடையவர்களாய் இருக்கவேண்டும் என்ற நிபந்தனையை விலக்குவது (6) பார்லிமெண்டின் அங்கத்தினர்களுக்கு சம்பளம்கொடுப்பது ஆகிய ஆறு சீர்திருத்தங்களுக்காக அவர்கள் போராடியது நியாயமான காரியமே. அவைகளில் பெரும்பாலானவை இப்பொழுது வழக்கத்தில் இருந்து வருகின்றன. ஆண்பாலாரனைவருக்கும் இப்பொழுது ஓட்டுரிமை இருந்து வருகிறது; (ஸ்திரீகளுக்குங்கூட அநேக தேசங்களில் அந்த உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது.) இரகசியமாக இல்லாமல் பகிரங்கமாய் ஓட்கொடுக்கும் முறையில், ஓட்டர்கள் பயமின்றி, தமது மனச்சாட்சியின்படி ஓட்டுக்கொடுப்பது அரிது. ஏனெனில் அப்படிச்செய்தால், அபேட்சர்களுடைய கோபத்தையோ பகைமையையோ சம்பாதித்துக்கொள்ள வேண்டியதாகும். பிரதி வருஷமும் பார்லிமெண்ட் கூடினால்தான், அவ்வப்போதைய பொதுஜன அபிப்பிராயம் துரைத்தன நிர்வாகத்தில் சம்பந்தப்படுவது சாத்தியமாகும். அதுபோலவே, மேலே குறிக்கப்பட்ட 5-வது சீர்திருத்தம் ஏற்பட்டாலன்றி, சாமானிய ஜனங்களும் பார்லிமெண்டில் ஸ்தானம்

வகிக்கமுடியாது போகும். அதுவன்றி, தொழிலாளிகள் வருஷம் முடிய பார்லிமெண்டின் நடவடிக்கைகளில் கலந்துகொள்ளவேண்டு மானால், அவர்கள் தங்களுடைய தொழிலைச் செய்ய இயலாதாகை யால், அவர்களுக்கு சம்பளம் கொடுப்பதும் அவசியமாயிருந்தது. ஆனால், ச்சார்டிஸ்ட் இயக்கம் தோன்றிய காலத்தில், மேற்படி சீர்திருத்தங்களைச் செய்வது அபாயகரமானதென்று துரைத்தனத் தாரும் பிறரும் எண்ணினர். ஆகவே, ச்சார்டிஸ்ட் கிளர்ச்சிக்காரர் களைப் புரட்சிக்காரரென்றும், சமூகத்தை அழிக்க வந்தவரென்றும் எல்லோரும் தூற்றினர். 1839-ல் சில ச்சார்டிஸ்ட்கள் பகிரங்க மாய்க் கலகங்கள் செய்யத் தொடங்கினர். துரைத்தனத்தார் கடுமை யான முறைகளை அநுஷ்டித்து, அவர்களை அடக்கவேண்டிய தாயிற்று. ஆனாலும் சில வருஷங்களுக்குப் பிறகு, அவர்களது கோரிக்கைகள் அப்படியே நிறைவேறிப் போயின. ச்சார்டிஸ்ட் இயக்கம் ஏற்பட்டதனால் மெல்போர்ன் மந்திரிசபையின் வேலை கடினமாயிற்று. மேலும், கா/2னடாவிலும் இந்தியாவிலும் அப் பொழுது சண்டைகள் நடந்துவந்தன. மெல்போர்னால் சில சீர் திருத்தங்களையே செய்ய முடிந்தது. பிரிட்டிஷ் தீவுகளில் முதன் முதலாக பென்னி தபால் - Penny Postage - (பென்னி என்பது ஏறக்குறைய ஓர் அணாவுக்கு சமமானது) அவரால் ஏற்பட்டது. ரோலன்ட் ஹில் (Rowland Hill) என்பவர்தான் அந்தச் சீர்திருத்தம் செய்வதில் அதிகமாய் உழைத்து வந்தார். 1839-ல் மெல்போர்னுக்கு வேண்டிய அளவு பார்லிமெண்டில் ஆதரவு இல்லாமல் போனமையால், அவர் இராஜீநாமாச் செய்தார். உடனே அரசி டோரிக்கட்சித் தலைவரான பீலை யழைத்து மந்திரிசபையை யமைக்குமாறு கேட்டுக்கொண்டாள். பீல் அப்பொழுது நிரம்பவும் புதுமையாக நடந்துகொண்டார். அரசிக்கு சேவை செய்யும் பொருட்டு அரண்மனையில் பல உயர்குல மாதர்கள் தாதிகளாய் இருப்பது வழக்கம். அவர்களுக்குப் பொதுவாக "அந்தப்புர மடந் தையர் என்று பெயர்—BedChamber Maids—(அதாவது அரசி யின் உணவு, படுக்கை, உடை முதலியவற்றை கவனிப்பவர்கள்) அவர்களில் பலர் விக் கட்சியை ஆதரிப்பவர்களா யிருந்தனர். மெல்போர்னின் விக் மந்திரிசபை கலைந்தபின், பீல், டோரி

மந்திரி சபையை யமைக்கவிருந்த பொழுது, அவர் அரசியிடம் வேலைபார்த்த விக் கட்சி மடந்தையரை நீக்கி, அவர்களுக்கு பதிலாக டோரி மடந்தையரை நியமித்துக்கொள்ளவேண்டுமென்று கூறினர். அரசியோ தனது சொந்த சௌகரியத்திற்காக ஏற்பட்டுள்ள பணிப்பெண்களை மாற்றவேண்டிய அவசியம் ஏற்படவில்லை என்று கூறி அதற்கு இணங்க மறுத்துவிட்டாள். உடனே பீல் தம்மால் மந்திரிசபையை யமைக்க இயலாதென்று விலகிக்கொண்டார். அந்த சம்பவம், 'அந்தப்புர விஷயம்' (Bedchamber Question) என்று குறிக்கப்படுகிறது. அப்பொழுது அது பிரபலமான விவாதத்திற்கு இடங் கொடுத்தது. ஆனால் மிகவும் விசால நோக்கம் உடையவராயிருந்த பீல் மேற்கூறியவாறு நடந்துகொண்டது ஆச்சரியமானலும், அவர் இராஜீய காரணங்களைக் கருதியே அவ்விதம் செய்தார். 1839-ல் பார்லிமெண்டில் அவருக்கு அவசியமான ஆதரவுஇல்லை. விக் மடந்தையர் அரசியிடம் வேலையிலிருந்தால், அவர்கள் விக் கட்சிக்கு சாதகமாகவும், டோரிக் கட்சிக்கு விரோதமாகவும் அரசிக்கு புத்தி போதிப்பது ஸகஜமாய் நடக்கக்கூடிய விஷயமாதலால், அவர் அந்த விஷயத்தில் பிடிவாதமாக நடந்து கொண்டார். பீல் விலகியவுடன் மறுபடி மெல்போர்ன், 1841 வரையில் பிரதம மந்திரியாயிருந்தார்.

1841-ல் ஒரு பொதுத் தேர்தல் நடந்தது. அதில் கன்ஸர்வேடிவ் (டோரி) கட்சிக்கு அதிக பலம் ஏற்பட்டதாகையால், பீல் மந்திரி சபையை யமைக்க வேண்டியதாயிற்று. 1839 ம் வருஷத்து சம்பவம் காரணமாக அரசிக்கு அவரிடம் வெறுப்பு உண்டாயிருந்தாலும் சீக்கிரத்தில் சமாதானம் ஏற்பட்டுவிட்டது. பிறகு பீல் ஐந்து வருஷகாலம் பிரதம மந்திரியாயிருந்து கீர்த்திபெற்று விளங்கினர். அவருடைய துரைத்தன நிர்வாகத்தில் நடந்த சம்பவங்களை இனி கவனிப்போம்.

அன்னிய நாட்டு வியவகாரங்களில் பீலின் மந்திரிசபை சமாதானத்தை நிலை நிறுத்தவே முயன்றது. அப்பொழுது அபர்டீன் பிரபு (Lord Aberdeen) அன்னியநாட்டு மந்திரியாயிருந்தார். ப்ரெஞ்சு துரைத்தனத்தார் ஈஜிப்ட் தேசத்தில் தமது அதிகாரத்தை நிலைநிறுத்த முயன்றதன் காரணமாக 1840-ல் ஷ்டி இரண்டு

தேசங்களுக்கும் பலமான சச்சரவும் ஏற்பட்டிருந்தது. ஆனால், அபர்டீன் பிரபுவின் முயற்சியால் யுத்தம் நேரிடாமல் தடுக்கப் பட்டது. அதுபோலவே வட அமெரிக்காவில் கானடா மாகாணத்தின் எல்லைப்புறத்தை நிர்ணயிக்கும் விஷயத்திலும் அமெரிக்க அரசாங்கத்தாருடன் அவர் சமாஸமாகவே நடந்து வியவகாரத்தைத் தீர்த்துக்கொண்டார்.

பீலின் பரிபாலனத்தில் அயர்லன்டிலும் சற்று குழப்பமேற் பட்டது. ஓ கானல் என்ற அயரிஷ் தலைவரைப்பற்றி முன்பே கூறியிருக்கிறோம். அவர் 1800-ம் வருஷத்து அயரிஷ் ஐக்கியச் சட்டத்தைத் தள்ளுபடி செய்து அயர்லன்டுக்கு மறுபடியும் தனியான பார்லிமென்ட் வேண்டுமென்று போராடி வந்தாரல்லவா? 1842-ல் அவருக்கு உதவியாக அயர்லன்டில் ஒரு சங்கம் ஸ்தாபிக் கப்பட்டது. அதற்கு "யௌவன அயர்லன்ட் கட்சி" (Young Ireland Party) என்று பெயர். அதன் தலைவர்கள் தைரியம் மிகுந்த யௌவனப் புருஷர்கள்; பலவந்த முறைகளைக்கூட அவர்கள் ஆதரித்தனர்; அவர்களுடைய உற்சாகம் தேசம் முழுதும் பரவி புத்துணர்ச்சியை உண்டாக்கியது. ஓ கானல் கூட அவர்களுடைய துணிவையும் ஆவேசத்தையும் கண்டு ஆச்சரிய மடைந்தார். நாட்டில் பல பெரிய கூட்டங்கள் நடைபெற்றன. தமது முயற்சி ஒரு வருஷத்திற்குள் பலித்துவிடுமென்று ஓ கானல் உறுதிமொழி கூறினர். துரைத்தனத்தார் அதன் பின்னும் பிடி வாதமாயிருப்பது தகாதென எண்ணி, "விடுவித்தவர்" (Liberator) என்று புகழ்ச்சியாகக் குறிப்பிடப்பட்டவரான ஓ கானலைக் கைது செய்தனர். அதன் பின்னர் அவருடைய மதிப்புக் குறைந்து போயிற்று. 1847-ல் அவர் இறந்துபோனர். அயர்லன்டின் சுயா தீனத்திற்காகப் போராடிய உத்தமர்களுள் அவர் முக்கியமானவர். அயரிஷ் மக்களுக்கு அவருடைய ஞாபகம் இப்போதும் வீராவே சத்தை உண்டாக்கத் தக்கதாக இருக்கிறது. அயர்லன்டில் அடிக் கடி கலகங்களும் கிளர்ச்சிகளும் குழப்பமும் ஏற்பட்டதிலிருந்து, அங்கு உண்மையிலேயே சீர்கேடு இருக்கவேண்டுமென்று உணர்ந்த பீல் ஒரு விசாரணை நடத்தினர். அதிலிருந்து அயரிஷ் மக்களின் குறைகள் வெளியாயினவானாலும், ஏதோ சில குறைகளை மாத்

திரமே நிவர்த்திக்க பீலினல் முடிந்தது. பூர்த்தியான சீர்திருத்தம் செய்து அயரிஷ் மக்களுக்குத் திருப்தியளிக்க அவர் முயலவில்லை.

பீல் பிரதம மந்திரியாவதற்கு முன்பே சில சமயங்களில் சாதாரண மந்திரி பதவி வகித்து உள்நாட்டு நிர்வாகத்தை நடத்தி வந்தாரென்பதை முன்பு குறிப்பிட்டிருக்கிறோம். பிரதமமந்திரியாயிருந்தபடி அவர் ஒரு முக்கியமான நன்மை செய்தார். ச்சார்டிஸ்ட் இயக்கம் காரணமாக தேசத்தில் அமளி நடந்ததல்லவா? அதற்கு முக்கிய காரணம் பொருளாதாரத் துறையில் ஏற்பட்டிருந்த கஷ்டமான நிலைமையேயாகும். விலைவாசிகள் அதிகப்பட்டுப் போயிருந்தன. ஏனெனில் அப்பொழுது 'தானியச் சட்டங்கள்' (Corn Laws) என்ற சில சட்டங்கள் காரணமாக, வெளி தேசத்திலிருந்து தானியங்கள் இறக்குமதி செய்வது அசாத்தியமாயிருந்தது. ஷை சட்டங்கள் நாட்டின் வியவசாயத்தை விருத்தி செய்வதன்பொருட்டு பல வருஷங்களுக்கு முன் இயற்றப்பட்டவை. உதாரணமாக, ஒரு தேசத்தில் துணி நெசவுத்தொழில் மிகவும் க்ஷீணித்து இருப்பதாக வைத்துக்கொள்வோம். அப்பொழுது அந்த தேசத்தினர் அன்னிய நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் துணிகளை வாங்குவார்கள். தமது சொந்த தேசத்தில் நெய்யப்படும் துணிக்கு அதிக விலை கொடுக்க வேண்டியிருக்குமாதலால், அவர்கள் மலிவாயுள்ள அன்னியநாட்டுத் துணியையே வாங்குவார்கள். உள்நாட்டு நெசவுக்காரர்கள் தமது துணி விற்பனையாகாதெனக் கண்டு தொழில் செய்யாது நின்றுவிடுவார்கள். ஏனெனில் மற்ற தேசங்களைப் போலவே வேகமாகவும் குறைந்த விலைக்கும் உற்பத்தி செய்ய அவர்களால் முடியாது. அந்த சமயத்தில் துரைத்தனத்தார் தமது நாட்டின் நெசவு தொழிலைக் காப்பாற்ற வேண்டுமானல், அன்னிய தேசத் துணிகள்மீது இறக்குமதித் தீர்வை விதிக்கவேண்டும். உதாரணமாக, உள்நாட்டுத் துணி ஒரு கஜம் 1 ரூ. விலையாவதாக வைத்துக்கொள்வோம்; அன்னிய நாட்டிலிருந்து வரும் துணி 14 அணுவுக்குக் கிடைப்பதாகவும் வைத்துக் கொள்வோம். ஜனங்கள் 14 அணு விலையுள்ள துணியையே வாங்குவார்கள். துரைத்தனத்தார் அன்னியநாட்டுத் துணியின்மீது 3 அணு வீதம் இறக்குமதித் தீர்வை விதித்தால், வியாபாரிகள் அந்த வரித் தொகையையும்

சேர்த்துவைத்தே விற்பனை செய்வார்களாதலால் அதன் விலை 1 ரூ. 1 அணு ஆய்விடும். அப்பொழுது உள்நாட்டுத் துணியையே எல்லோரும் விரும்புவார்கள். நெசவுக்காரர்கள் அந்தத் தொழிலை மீண்டும் ஊக்கத்துடன் செய்வார்கள். சில வருஷங்களுக்குள் உள்நாட்டு நெசவுத்தொழிலும் விருத்தியடைந்து, அன்னியநாட்டு நெசவுக்காரர்களுடன் பயமின்றிப் போட்டிபோடும் நிலைமையை யடைந்து விடும். அதற்குப் பிறகு இறக்குமதித் தீர்வையை எடுத்துவிட்டால்கூட, உள்நாட்டுத் தொழிலுக்குக் கெடுதலேற்படாது. நாம் ஒரு செடியைப் பாதுகாக்கும் பொருட்டு அதற்கு. வேலி முதலிய சாதனங்களை ஏற்படுத்துகிறோம். அது மரமாக வளர்ந்த பின், உறுதியாகத் தலைதூக்கி நிற்குமாதலால், அதன்பின் அதற்கு நம்முடைய செயற்கைப் பாதுகாப்புகள் அவசியமில்லாது போகும்; அதுபோல ஒரு நாட்டின் கைத்தொழில் குழந்தைப் பருவத்திலிருந்தால், அன்னிய நாட்டுப் பண்டங்கள் வந்து குவிந்து அதைக் கொன்று விடாமல் காப்பாற்றும் பொருட்டு இறக்குமதித் தீர்வை விதிப்பது போன்ற செயற்கைச் சாதனங்களை துரைத்தனத்தார் அநுஷ்டிக்கவேண்டும். அதற்கு 'பாதுகாப்பு முறை' (Protection) என்று பெயர். எவ்விதத்தீர்வையும் இல்லாமல் உள்நாட்டுப் பண்டங்களும் வெளிநாட்டுப் பொருள்களும் தம்தம் உண்மையான யோக்கியதையின்மேல் போட்டி போட்டுவந்தால், அப்பொழுது நிபந்தனையில்லாத 'சுயேச்சை வியாபாரம்' (Free trade) நடப்பதாகக் கூறுவார்கள். ஆகவே, இங்கிலீஷ் துரைத்தனத்தார்—முதலில் விவசாயத்திற்கு உதவியளிக்கும்பொருட்டு அன்னிய நாட்டு தானியங்களின்மீது தீர்வை விதித்து அவை உள்ளே வராதபடி செய்தது நன்மையானதே. ஆனால் அந்தச் செயற்கைப் பாதுகாப்பின் அவசியம் தீர்ந்தவுடன் அவர்கள் அந்தத் தீர்வையை விலக்கி தானியச் சட்டங்களையும் மாற்றியிருக்கவேண்டும். துரைத்தனத்தார் அதைக் செய்யவில்லை; இங்கிலண்டில் ஜனத்தொகை அதிகரித்துக்கொண்டுவந்தது; அதற்கேற்றபடி உணவுப் பொருள்களின் உற்பத்தி அதிகப்படவில்லை. எனவே தானியங்களின் விலை துரிதத்தில் ஏறிப்போயிற்று. இங்கிலண்டில் விளைந்த த்ானியம் எல்லா ஜனங்களையும் உண்பிக்கப் போதவில்லை. வெளிநாட்டு

தானியத்திற்கோ தீர்வைகொடுக்க வேண்டியிருந்தது. இரும்பும் நிலக்கரியும் முன்னர் கிடைத்ததைவிட அதிகமாய் அகப்பட்டால், அவை வயிற்றுக்கு ஆகுமா? ஆனல், ஷெ சட்டங்களால் வியவசாயிகள் அதிக இலாபம் அடைந்துவந்தனர். ஏழைகளே நிரம்பவும் துன்பமநுபவித்தனர். பூஸ்திதி படைத்த சிலர் சுயநல துரந்தரராய் நாட்டின் கொடுமையை கவனியாதிருந்தனர். மிராசுதாரர்களே அநேகமாய்ப் பார்லிமென்டில் ஸ்தானம் வகித்திருந்தார்களாதலால், எந்த மந்திரியும் அந்தக் கொடிய சட்டத்தை, (அது பிரயோஜனமற்றுப்போனபின்னும்கூட) மாற்றுவதற்கு தைரியம் கொள்ளவில்லை. மாற்றவேண்டுமென்ற பிரஸ்தாபத்தை எடுத்தாலே பூஸ்திதி படைத்தவர்கள் பலமாகக் கூக்குரலிட்டு வந்தனர். பொது ஜனங்களோ நிரம்பவும் துயருற்று வருந்தினர்.

அந்த நிலைமை எவ்வளவு காலம்தான் நீடித்திருக்கும். துணிகரமான சிலர் 1839-ல் ஒன்றுகூடி 'தானியச் சட்ட எதிர்ப்புச் சங்கம்' (Anti - Corn - Law League) என்று ஒரு சங்கத்தை ஸ்தாபித்தனர். அதன் நோக்கம் தானியச் சட்டங்களை உடனே நீக்கிவிடும்படி கிளர்ச்சி செய்வதே. அவர்கள் 'பாதுகாப்பு' முறையின் தீங்குகளை எடுத்துக் கூறி தேசங்கள் பரஸ்பரம் வியாபாரம் செய்வதற்கு எவ்விதத் தடங்கலும் இருத்தல் கூடாதென வாதித்தனர். அதன் தலைவர்களான காப்டன் (Cobden) ப்ரைட் (Bright) என்ற இருவர்கள் கூட்டங்கள் கூடுவது, பத்திரிகைகள் வழங்குவது, உபதேசம் செய்வது முதலான முயற்சிகளால் தமது கொள்கை நியாயமானதென்பதை நாட்டில் ஸ்தாபித்தனர். நாட்டின் ஒரு பகுதியாரது இலாபத்தை உத்தேசித்து எல்லோரும் பட்டினி கிடப்பது மகா கொடிய அநீதியென்பதை அனைவரும் உணர்ந்தனர்.

பீலின் பாடு துன்பகரமாக முடிந்தது. அவரோ டோரிக் கட்சியின் தலைவர். டோரிகளோ தானியச் சட்டத்தை மாற்றக்கூடாதென்று ஒரே பிடிவாதமாயிருந்தனர். நாட்டிலோ கிளர்ச்சி மும்முரமாக நடந்துவந்தது. இருதலைக்கொள்ளி எறும்புபோலிருந்தது பீலின் நிலைமை. ஆனல் அந்த சமயத்தில்தான் அவரது உண்மையான திறமை வெளிப்பட்டது. பீல் டோரித்

தலைவராக இருந்தாராலும், அவர் வறட்டுக் கொள்கைகளில் கண்மூடித்தனமாக நம்பிக்கை வைத்து, பழையது கெடுதலா யிருந்தாலும் அதையே பின் பற்றி நடக்கும் குறுகிய நோக்கத்தின ரல்லர்; ஏதோ ஒரு கொள்கையை அநுசரித்தாலும், பிரத்தியக்ஷ மான சில சம்பவங்களுக்கேற்றபடி தம்மைத் திருத்திக்கொள்ளும் மனப்பான்மையும் அநுபவ உணர்வும் உடையவர்; தாம் டோரித் தலைவராயிருப்பதைவிட, நாட்டின் உண்மையான நன்மையையும் க்ஷேமத்தையும் நாடுபவராய் இருப்பதையேஉயர்ந்த கடமையாகஅவர் எண்ணினர். தமது கட்சிக்காரரது ஆதரவை இழப்பதாலும், கோடிக்கணக்கான ஜனங்களுக்கு நன்மை செய்வதையே பிரதான மாகக் கருதினர். ஏற்கெனவே அவர் பணநிர்வாக சம்பந்தமாகவும் பொருளாதாரத் துறையிலும் பல சீர்திருத்தங்கள் செய்திருந்தார். அவரது கட்சியினர் வியாபாரப் பாதுகாப்பு அவசியமென்ற கொள் கையை ஆதரித்தாலும், பீல் சிறுகச் சிறுக "சுயேச்சை வியா பாரமே" சிறந்ததென்ற எண்ணம் கொள்ளலானர். அதை உணர்ந்த டோரிகளும் வியாபாரிகளும் குறைகூறத் தொடங்கினர்.

இங்கிலண்டில் தானியச்சட்ட எதிர்ப்புச் சங்கம் கிளர்ச்சி செய்து கொண்டிருக்கையிலேயே, அவர்களுக்கு வெற்றி கிடைக் கும்படிசெய்த ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அயர்லன்டில் 1845-ல் பெரும்பாலோரான ஜனங்களுக்கு முக்கிய உணவுப்பொருளா யிருந்த உருளைக் கிழங்குக்குப் பெரிய பஞ்சம் ஏற்பட்டுவிட்டது. அயரிஷ் ஏழைமக்கள் உயர்ந்த தானியத்தை விலைகொடுத்து வாங்க மாட்டாதவர்களாய், உருளைக்கிழங்கையே உணவாகக் கொண்டிருந் தனர். அவ்வருஷத்தில் ஏதோ ஒருநோய் பரவ, உருளைக்கிழங்கை உண்பது அபாயகரமாய் விட்டது. அன்னியநாட்டிலிருந்து உண வுப்பொருள்களை இறக்குமதி செய்தாலன்றி அயரிஷ்மக்கள் பசி யால் மடிவது திண்ணமாயிற்று. ஆனல் தானியச்சட்டம் இருந்த வரையில் குறைந்தவிலைக்கு தானியம் இறக்குமதி செய்தல்கூடா மல் போயிற்று.

தானியச்சட்டத்தை மாற்றவேண்டுமென்ற கருத்தோடு கட வுளே அயரிஷ்பஞ்சத்தை உண்டுபண்ணியதோவென்று கருதும் படி, அந்தச் சம்பவம் ஏற்பட்டது. அயர்லன்டில் தானியம்போய்ச்

சேரும்பொருட்டு, தானியச்சட்டங்களை உடனே பூர்த்தியாக நீக்கி விடத் தாம் நிச்சயித்து விட்டதாகவும், எந்த மந்திரியும் அதை மறு படியும் புதுப்பிக்க முயற்சிக்கமாட்டாரெனவும் பீல் தமது மந்திரி களிடம் தெரிவித்தார். மந்திரிகளிற் பலர் அவருடைய தீர் மானத்தை ஆதரிக்கவில்லை. உடனே பீல் இராஜீநாமாச் செய்தார். ஆனால் மறுபடியும் அவரே பிரதமமந்திரியாய் வரவேண்டியதா யிற்று. தானியத்தின் மீதிருந்த தீர்வையை 1846-ல் அவர் மிக சொற்ப அளவிற்குக் குறைத்துவிட ஒரு சட்டம் கொண்டுவந்தார். கன்ஸர்வேடிவ் கட்சியினர் அது காரணமாய் இரண்டு பட்டுப் போயி னர். பெரும்பாலோரானவர்கள் பீலுக்கு விரோதமாகத் திரும்பி, அவர் தமது கட்சிக்காரர்களுக்கு துரோகமாய் நடந்துவிட்டதாகவும், அவ ரிடம் வைத்த நம்பிக்கையை அவர் காப்பாற்றிக் கொள்ளவில்லை யென்றும் கூறித் தூற்றினர். ஆகவே, விக் கட்சியின் பலத்தைக் கொண்டே அந்த சட்டத்தை பீல் நிறைவேற்றினர். காப்டன், ப்ரைட் முதலியோரது கிளர்ச்சி பலிதமாயிற்று. சில நாட்களுக் கெல்லாம் பீல் அயர்லண்ட் சம்பந்தமான ஒரு மசோதாவை பார்லி மென்டில் பிரேரேபணை செய்தபொழுதும், விக் கட்சி அவரை எதிர்த்தது. கன்ஸர்வேடிவ் கட்சியும் அவர்மீதிருந்த ஆத்திரத்தினால் அந்த மசோதாவை எதிர்த்துத் தோற்கடித்தது. உடனே பீல் இராஜீநாமாச் செய்துவிட்டார். அவர் தமது கட்சியின் ஆதரவை இழந்தாலும், நாட்டிற்கு நன்மை செய்ததுடன், கேவலம் பதவிக்கு ஆசைப்பட்டு, மனச்சாட்சிக்கு மாறாய் மந்திரிகளுடைய கோஷ்டி யில் சேராமல் கீர்த்தியடைந்தார். தாம் நியாயமென்று கருதிய விஷயத்தை எவ்விதமேனும் செய்து முடிக்கும் மனோதிடம் அவ ரிடம் இருந்தது. தமது பதவியை இழந்தேனும் தேசசேவை செய் யும் விசாலநோக்கமும், சுயநலம் கருதாத தியாகபுத்தியும் அவருக்கு அழியாப் புகழை உண்டாக்கின.

பீல் தமது கட்சிக்கு மாறாக நடந்ததிலிருந்து அதில் பிளவேற் பட்டது என்று கூறினோமல்லவா? அவருடைய பகைவர்கள் 'பாதுகாப்புக்காரர்கள்' (Protectionists) என்றும், அவரைப் பின்பற் றிய டோரிகள் 'பீலைட்ஸ்' (Peelites) என்றும் பெயர்பெற்றனர். கன்ஸர்வேடிவ் கட்சி இரண்டுபட்டமையால், விக் அல்லது லிபரல்

கட்சியினர் அதிகாரம் வகிப்பது சுலபமாயிற்று. அவர்களுக்குள் சில சிறு பிரிவுகள் இருந்தாலும், பலவருஷகாலம் அவர்களே மேலோங்கி இருந்தனர். 'பீலட்' கோஷ்டியார் தொகையிலும், பலத்திலும் பின் தங்கினார்களானாலும், அவர்களில் பலர் தமது அரியதிறமையினால் கீர்த்தியடைந்தனர்.

(2) பால்மர்ஸ்டன்: கிழக்கு நாடுகளின் வியவகாரம்: க்ரிமியன் யுத்தம்:—பீலுக்குப் பிறகு 1846-ல் லார்ட் ஜான் ரஸ்ஸல் (Lord John Russell) என்ற விக் தலைவர் பிரதம மந்திரியானார். ஆனால் அவருடைய மந்திரிசபையில் பால்மர்ஸ்டன் என்பவர் அன்னியநாட்டு மந்திரியாக இருந்தார். (அவர் ஏற்கனவே, க்ரேயின் மந்திரி சபையில் ஸ்தானம் வகித்தவர்). பால்மர்ஸ்டனே உண்மையில் பிரதம மந்திரிபோல சகலமான அதிகாரங்களையும் வகித்துவந்தார்.

ரஸ்ஸல் மந்திரிசபை, முதன்முதலாக, அயர்லன்டின்மீது கவனம் செலுத்தவேண்டியதாயிற்று. தானியச் சட்டத்தின் கடுமை குறைந்தபின்னுங்கூட அயரிஷ்காரருக்கு கதிமோட்சம் உண்டாகவில்லை. அங்கு 1846-ல் ஒரு கொடிய பஞ்சமும் ஏற்பட்டது. பசியினால் பலர் இறந்தனர்; பலர் கண்டதையெல்லாம் தின்று நோயுற்று மடிந்தனர். அயரிஷ் ஜனங்களது பரிதாபகரமான நிலைமையைக் கண்டோரனைவரும் அவர்களது விஷயத்தில் இரக்கங்கொண்டனர். ஆனால், துரைத்தனத்தார் தாம் என்னசெய்வதென்பதை அறியாமல், சொற்ப உதவியையே புரிந்தனர். உணவுப் பொருள்களின் விலையும் பரபரவென்று உயர்ந்துபோய்விட்டது. முதலாளிகளும் வியவசாயிகளும் நஷ்டத்திற்காளாயினராதலால், கூலியாட்களிற் பலர் நாட்டைவிட்டு வெளியில் சென்றுவிட்டனர். சிலர் அமெரிக்காவிற்குப்போய்க் குடியேறினர். மிகுந்திருந்த அயரிஷ்காரரோ தமது வறுமையைத் தீர்க்காதிருந்த ப்ரிட்டிஷ் துரைத்தனத்தாரின்மீது கடுமையான வெறுப்புக் கொண்டிருந்தனர்.

1848-ல் ஐரோப்பாவில் எங்குபார்த்தாலும் இராஜீயப் புரட்சிகள் தோன்றலாயின. பல அரசர்கள் விலக்கப்பட்டனர். அவர்களது ஆட்சிக்கு பதிலாக ஜனநாயக ஆட்சிமுறை ஸ்தாபிக்கப்பட்டது.

மற்ற சிலதேசங்கள் அன்னியர்களின் ஆதிபத்யத்தை மீறி சுயாதீனம் அடைந்தன. 1848-ம் வருஷம் 'புரட்சிகள் நடந்த வருஷம்' (Year of Revolutions) என்று குறிக்கப்படுகிறது. ஐரோப்பாவில் நடந்த புரட்சியின் வேகம் இங்கிலண்டிலும் வீசியது. ச்சார்டிஸ்ட் இயக்கத்தினர் மறுபடியும் கிளர்ச்சி செய்தனர். அயர்லண்டிலும் கலகம் ஆரம்பமாயிற்று. லண்டனுக்கருகில் ச்சார்டிஸ்ட் தலைவர்கள் ஒரு கூட்டம் கூடி, ஒரு பெரிய மகஜர் தயாரித்து, பலருடைய கையெழுத்துடன் பார்லிமெண்டுக்கு அனுப்பினார்கள். ஆனால் அதில் பொய்க் கையெழுத்துகளே அதிகமாயிருந்தன. பின்னர் ச்சார்டிஸ்ட் இயக்கத்தின் வலுக்குறைய, அது மறைந்துபோயிற்று. ஐரோப்பாவில் பல அரசர்கள் விலக்கப்பட்ட காலத்திலும் இங்கிலீஷ் துரைத்தனத்திற்கு அதிகமான பிரயாசை ஏற்படவில்லை. ஆனால் நாளடைவில் ச்சார்டிஸ்ட் இயக்கத்தின் கோரிக்கைகள் அங்கீகரிக்கப்பட்டன.

1848-ல் ப்ரான்ஸ், இற்றலி, ஜெர்மனி முதலிய தேசங்களில் இராஜீயக் குழப்பம் ஏற்பட்ட சமயத்தில், பால்மர்ஸ்டன் அன்னிய நாட்டுமந்திரியாக இருந்தார். அவர், அன்னியநாட்டு ஆதீனத்தை மீற முயற்சிசெய்த ஜனங்களையும், அரசருடைய சுயேச்சாதிகாரத்தை ஒழித்து, பொதுஜன ஆட்சியை ஸ்தாபிக்க முயற்சி செய்தவர்களையும் ஊக்கி, அத்தகையோருக்கு ஆதரவளித்துவந்தார். ஆதலால் அவரைப்போல் விசால நோக்கமற்ற டோரிகளும் மற்றவர்களும், அவர் பெரிய புரட்சிக்காரரென்று அவரைத் தூற்றினர்.

ஆனால் அதிக சீக்கிரத்தில் ஐரோப்பிய நிலைமையில் மாறுதலேற்பட்டது. நியாயமான ஆட்சியை ஸ்தாபிக்க முயற்சிசெய்த இயக்கங்கள் கடைசியில் குழப்பத்தில் இறங்கி இரத்தப் பெருக்குக்கு இடங்கொடுத்தன. முக்கியமாக ப்ரான்ஸில் ஜனநாயக ஆட்சி ஸ்தாபிக்கப்படுவதற்கு பதிலாக, நெப்போலியன் சக்கரவர்த்தியின் நெருங்கிய உறவினர் ஒருவர் சுயேச்சாதிகாரம் செலுத்தத் தொடங்கினார். அவர் கேவலம் மிருகபலத்தைக்கொண்டே தமது அதிகாரத்தை நிலைநிறுத்தி மூன்றாவது நெப்போலியன் என்ற நாமதேயத்துடன் அரசனானார். பால்மர்ஸ்டன் முன்பு சுயாதீனப்போராட்டங்களை ஆதரித்ததற்கு மாறாக, இப்பொழுது ஷெ நெப்போலியன்

பலவந்தமாக இராஜ்ஜியத்தைக் கைப்பற்றியது சரியானதே என்று கூறி அதை ஆமோதிக்கலானார். சுயாதீனப் போராட்டங்கள் குழப்பத்தில் முடிவடைந்ததே அவருடைய அபிப்பிராய மாறுதலுக்குக் காரணமாயிருந்தது. ஆனால் அவ்வாறு அன்னிய நாட்டின் வியவகாரங்களில் அவர் அபிப்பிராயம் கூறிய சமயங்களில், அவர் தமது பொறுப்பை யுணராமலும், பிரதம மந்திரியையோ அரசியையோ கலந்துகொள்ளாமலும் தமது இச்சைப்படி நடந்துவந்தார். அது அரசிக்கும் மந்திரிகளுக்கும் பெரிய பிரயாசையாக முடிந்தது. ஏனெனில் மூன்றாவது நெப்போலியனுடைய பலவந்தச் செய்கையை ஸிரிட்டிஷ் துரைத்தனத்தார் அங்கீகரிப்பதாகவே, பால்மர்ஸ்டனுடைய சொந்தஅபிப்பிராயத்தைஅறிந்தோரனைவரும் எண்ணிவிடுவார்கள். அவ்விதம் சுயேச்சையாகக் காரியம் நடத்துவதைக் கண்டித்து, பால்மர்ஸ்டனுக்கு அரசி ஏற்கெனவே ஓர் அறிக்கை அனுப்பியிருந்தாள்; அதில், அவர் செய்ய உத்தேசிக்கும் காரியத்தை முன்னாகவே தெரியப்படுத்த வேண்டுமென்றும், தனது சம்மதியைப் பெற்ற எந்த விஷயத்தையும் அவர் அதற்குப்பின் மாற்றக் கூடாதென்றும் கூறியிருந்தாள். எனவே ப்ரான்ஸின் விஷயத்தில் அவர் மறுபடியும் தமது சொந்த அபிப்பிராயத்தின்படி நடந்துகொண்டதனால், அரசி அவரை வேலையிலிருந்து நீக்கிவிட்டாள். அந்தச் சம்பவத்திலிருந்து முக்கியமான அரசியல் தத்துவமொன்று வெளியாயிற்று. அதாவது இங்கிலண்டில் மந்திரிகளுக்குப் பூர்த்தியான அதிகாரம் இருந்தபோதிலும், அவர்கள் தவறுதலான வழியில் சென்றால், அவர்களைத் திருத்தும் அதிகாரம் அரசருக்கு உண்டு என்பது பரிஷ்காரப்பட்டது. 1851-ல் பால்மர்ஸ்டன் நீக்கப்பட்டார்; அடுத்த வருஷம் ரஸ்ஸலின் மந்திரிசபையும் கலைந்து போயிற்று.

1852-ல் டேர்பி பிரபு (Lord Derby) பிரதம மந்திரியானார். அவருடைய மந்திரி சபையில் டிஸ்ரேலி (Disraeli)என்ற பிரமுகர் பொக்கிஷ மந்திரியாக இருந்து முக்கிய அதிகாரம் வகித்தார். அவர்கள் பீலுடன் சண்டையிட்டு 'பாதுகாப்புக்காரர்' என்று பிரிந்த டோரிக்கட்சித் தலைவர்கள். டிஸ்ரேலி என்பவர் யூதஜாதியைச் சேர்ந்தவர்; நூல் எழுதுவதிலும், பிரசங்கம் புரிவதிலும் அவர்

அபாரமான திறமைவாய்ந்தவர். பீல் பிரதம மந்திரியாக இருந்த பொழுதே, அவர் பார்லிமெண்டில் ஸ்தானம் வகித்து பீலை தயை தாட்சணியமின்றிக் கண்டித்து வந்தார். டிஸ்ரேலி மறுபடியும் தானியச்சட்டத்தை நிறைவேற்றி விடுவாரோவென்று எல்லோரும் அஞ்சினர். ஆனால், அவர் ஒருமுறை நிறைவேறிய விஷயத்தை மீண்டும் உயிர்ப்பிக்க எண்ணவில்லை. டெர்பி—டிஸ்ரேலி மந்திரி சபைக்குப் போதிய ஆதரவு இல்லாதகாரணத்தால், அதே வருஷத்தில் அது கலைந்துபோயிற்று.

கன்ஸர்வேடிவ், லிபரல் ஆகிய இருகட்சிகளுக்குள்ளும் பிளவேற்பட்டிருந்ததுபற்றி, தனியாக, எந்தக் கட்சியாரும் நீடித்து மந்திரிசபையை அமைக்கத்தக்க ஆதரவைப் பெற்றிருக்கவில்லை. ஆகவே, விக் கட்சியினரும், 'பீலைட்' கோஷ்டியாரும் சேர்ந்து கொண்டு 1852-ல் கூட்டு மந்திரிசபை யமைத்தனர். 'பீலைட்' தலைவரான ஆபர்டீன் பிரதம மந்திரியானார். ரஸ்ஸல் பிரபுவும் அதில் ஸ்தானம் வகித்தார். பால்மர்ஸ்டன் உள்நாட்டு மந்திரியானார்; ஆனால் அந்தப் பதவியில் அவர் அக்கரை கொள்ளவில்லை. வில்லியம் எவர்ட் க்ளாட்ஸ்டன் (William Ewert Gladstone) என்ற பிரமுகர் அதில் பொக்கிஷ மந்திரியானார். க்ளாட்ஸ்டன் பின்னால் அதிககாலம் பிரதம மந்திரியாக இருந்து அழியாப்புகழ் அடைந்தவர். பீலைட் கோஷ்டியார்களுக்குள் அவர் ஒருவரே திறமையும் பரிசுத்தமான நடத்தையும் வாய்ந்தவர். பீலின் பகைவர்களுக்குள் டிஸ்ரேலி என்பவர் முக்கியமானவராயிருந்தார்; பீலைட்களுக்குள் க்ளாட்ஸ்டன் முக்கியமானவர். ஷை கூட்டு மந்திரி சபையில் க்ளாட்ஸ்டன் ஸ்தானம் வகித்து, முக்கியமாக வரவு செலவு கணக்குகளைத் தயாரிப்பதில் தமது திறமையைக் காட்டினார். வரவு செலவுக் கணக்கை பார்லிமெண்டின்முன் ஆஜர்செய்து, அதன் சிக்கலான அம்சங்களை சாமானியரும் அறியும்படி தெளிவாக எடுத்துக் கூறுவதில் அவர் நிகரற்றவராயிருந்தார்: மேலும் அவர் தமது குருவான பீலின் அடிச்சுவட்டைப் பின்பற்றி "சுயேச்சையான வியாபார"த்திற்கு வேண்டிய சீர்திருத்தங்களையும் செய்தார்.

அப்பொழுது ஐரோப்பாவில் மீண்டும் குழப்பம் ஏற்பட, எல்லா அரசுகளும் தங்கள் கவனத்தை அதில் செலுத்தவேண்டிய தாயிற்று. அது பொதுவாக சரித்திரத்தில் 'கீழ்த்திசை வியவகாரம்' (The Eastern question) என்று குறிக்கப்படுகிறது. ஐரோப்பிய தேசங்களுக்கு சமீபத்தில், கிழக்குத்திசையில் அப்பொழுது துருக்கி இராஜ்ஜியம் பரவியிருந்தது. அது பழையகாலத்து இராஜ்ஜியமாத லால் க்ஷீணித்த நிலைமையிலேயே இருந்தது. துருக்கியின் வசத் தில் பல கிரிஸ்தவ சமூகத்தார் அடங்கியிருந்தனர். ஷெ கிரிஸ்த வர்கள் தாமே நாகரிகம் படைத்தவர்களென்ற எண்ணங்கொண்டு, துருக்கியினிடம் அடங்கிக்கிடப்பது தகாதசெய்கை என்று நிச்ச யித்து, சுயாதீனம் அடைய ஆவல் கொண்டிருந்தனர். துருக்கியின் ஆட்சியும் சில விஷயங்களில் கேவலமாகவே இருந்தது. ஆகவே, துருக்கியின் ஆட்சியிலிருந்து சுயாதீனமடைய விரும்பிய கிரிஸ்த வர்களுக்கு ஐரோப்பிய அரசுகள் உதவிசெய்ய வேண்டியது நியாய மான செய்கையே. ஆனால் அந்த சந்தர்ப்பத்தில் இன்னோர் இடை யூறு ஏற்பட்டிருந்தது. வடக்கேயுள்ள ரஷ்யா தேசம் விஸ்தீர ணத்தில் நிரம்பவும் பெரியது. அதன் சக்கரவர்த்திகள் தங்களது அதிகாரத்தைப் பெருக்கவேண்டுமென்ற ஆசையுடையவர்களாய், தெற்கேயிருந்த துருக்கியின்மீது எப்பொழுதும் கண்ணோட்டம் வைத்திருந்தனர். துருக்கியைவென்று அந்த இராஜ்ஜியத்தில் ஒரு பகுதியைப் பெறவேண்டுமென்பது அவர்களது நோக்கம். எனவே, கிரிஸ்தவ சமூகங்கள் துருக்கிக்கு விரோதமாகக் கிளர்ச்சிசெய்த பொழுதெல்லாம் அவர்களுக்கு உதவிபுரிய ரஷ்யா தயாராகக் காத்திருந்தது. ஏனெனில் துருக்கியின்மீது அதற்கு த்வேஷம் மிகுந்திருந்தது. மற்ற ஐரோப்பிய அரசுகளும் ஷெ கிரிஸ்தவ சமூகங்களுக்கு உதவ விரும்பினவானாலும், அவைகளுக்கு ரஷ் யாவின் உள்ளார்ந்த கபட நினைவைப்பற்றி எப்பொழுதும் சந் தேகமே அதிகமாயிருந்தது. துருக்கியினால் மற்றவர்களுக்கு அதிக அபாயம் உண்டாகாது; ஆனால் துருக்கியின் அழிவினால், ரஷ் யாவின் அதிகாரம் அதிகரித்துப்போனால், அது நிரந்தரமான அபா யத்திற்கிடமாய்விடும். ஆகவே, துருக்கியின் கீழ் துன்புற்றிருந்த கிரிஸ்தவர்களது விஷயத்தில் அநுதாபம் காட்டினாலும், ஐரோப்

பிய அரசர்கள், ரஷ்யாவின் மீதிருந்த சந்தேகத்தால், துருக்கியை அழித்துவிட முனையாமல் தயங்கி இருந்தனர். நான்காவது ஜார்ஜின் காலத்தில், கானிங் மந்திரியாக இருந்தபோது, கிரேக்கர்கள் துருக்கியினிடமிருந்து சுயாதீனம்பெற முயன்ற காலத்தில், ரஷ்யா, கிரேக்கர்களுக்கு உதவியது. இங்கிலண்டும் ரஷ்யாவுடன் சேர்ந்தது. அப்பொழுதே பலர் அந்த முறை தவறானது என்றும், ரஷ்யா கிரேக்கர்களுக்கு உதவுவதன் நோக்கம் சுயநலப் பெருக்கத்திற்கு வழிசெய்வதே என்றும், ஆகவே ரஷ்யாவின் ஆசையைக் குலைப்பதற்காகவாவது துருக்கியைப் பாதுகாக்க வேண்டுமென்றும் கூறினர்.

1852-ல் மறுபடியும் அந்த வியவகாரம் வாக்குவாதத்திற்கு வந்தது. ரஷ்யாவின் அரசரான முதல் நிக்கோலஸ் (Nicholas I) துருக்கிய இராஜ்ஜியத்தைக் கைப்பற்றி, அதை ஐரோப்பிய அரசுகளுக்குள் பங்கிட்டுக் கொள்ளலாமென்ற ஒரு யோசனையைக் கூறினார். துருக்கிய இராஜ்ஜியத்தை அவர் ஒரு வியாதிஸ்தனுக்கு ஒப்பிட்டு, அந்த நோயாளி மரணமடைவதற்குள், அவனுடைய சொத்துக்களை ஐரோப்பிய அரசுகளான தாயாதிகள் பங்கிட்டுக் கொள்வது அவசியமென்று கூறி வந்தார். துருக்கி இராஜ்ஜியத்தை அபகரிக்க எல்லோருக்கும் விருப்பமேயானாலும், அதில் பெரும் பாகம் ரஷ்யாவுக்குச் சேர்ந்துவிடுமென்று எல்லோரும் சந்தேகித்தனர். ஐரோப்பாவின் சமரீதித் தன்மையைக் காக்கும்பொருட்டு ரஷ்யாவின் பேராசை நிறைவேறாதபடி செய்வது அவசியமாயிற்று. எனவே, துருக்கியிடம் அதிக அன்புகொள்ளாவிட்டாலும், ஐரோப்பிய அரசுகள் தமது சுயநன்மையின் பொருட்டாகிலும், துருக்கியைப் பாதுகாப்பது இன்றியமையாத விஷயமாய்விட்டது. துருக்கியின் ஆட்சியிலிருந்து கிரிஸ்தவ சமூகங்கள் விடுதலை பெற முயன்ற சம்பவம், இவ்வாறு வேறு பல காரணங்களால் சிக்கலான விஷயமாய் முடிந்ததுடன் எதிர்பார்க்காத புதிய வழியிலும் திரும்பிவிட்டது.

ரஷ்யாவுக்கு விரோதமாக, துருக்கிக்கு உதவி செய்யும் முறையை முக்கியமாக பால்மர்ஸ்டன் ஆதரித்து வந்தார். ஆனால் அந்த முறை தவறானதென்று சில சரித்திராசிரியர்கள் கூறுவார்

கள். ஏனெனில் துருக்கி துரைத்தனத்தாருடைய இராஜ்ஜிய பரிபாலனம் நிரம்பவும் கேவலமாக இருந்தது உண்மையே; ஆகவே, அவர்களிடம் அகப்பட்டுத் தவித்துவந்த கிரிஸ்தவ பிரஜைகள் சுயாதீனமடைய உதவிசெய்வதே ஹிரிட்டிஷ் துரைத்தனத்தாருடைய நியாயமான கடமையாகும். மேலும் இங்கிலண்டு, ப்2ரான்ஸ் முதலிய வல்லரசுகள் ஒன்றுகூடி ஜாக்கிரதையாக நடந்திருந்தால் ரஷ்யாவின் பேராசையும் நிறைவேறுதபடி செய்துவிடலாம். முதலில் ரஷ்யாவுடன் சேர்ந்துகொண்டு துருக்கியைத் தோற்கடித்துப் பின்னர் ரஷ்யாவுக்கும் அமிதமான இராஜ்ஜியப் பெருக்கு ஏற்படாதவாறு தடுத்திருக்கலாம். ஆனல், அக்காலத்தவர்களுக்கு ரஷ்யாவின் மீதிருந்த சந்தேகத்தால் இவ்வழி சிறந்ததாகப் புலப்படவில்லை. மேலும் துருக்கி இராஜ்ஜியத்தின் உடைமைகளை அபகரிப்பதற்கு ஐரோப்பிய அரசுகளுக்கு நியாயமான பாத்தியதை ஏது?

ஜெருஸலேம் என்ற கிரிஸ்தவப் புண்ணிய க்ஷேத்திரத்தில் இருந்த கிரேக்க மதகுருமார்களுக்கும் லா/2ட்டின் மத குருமார்களுக்கும் ஓர் அற்ப விஷயம் காரணமாக சச்சரவேற்பட்டது. ரஷ்ய அரசர் நிக்கோலஸ் கிரேக்க குருக்களைச் சார்ந்துநின்றார். ப்2ரெஞ்சு துரைத்தனத்தார் லா/2ட்டின் கட்சியை ஆதரித்தனர். ரஷ்யாவினிடம் இருந்த பகைமையால், துருக்கியும் லா/2ட்டின் கட்சிக்கு ஆதரவளித்தது. உடனே நிக்கோலஸ் அரசர் துருக்கியின்மீது போர் தொடங்கினர். யுத்தம்செய்ய ஏற்ற ஒரு சந்தர்ப்பத்திற்கே அவர் காத்திருந்தார். 1853-ல் துருக்கிக்கு உட்பட்ட மால்டேவியா (Moldavia) வாலேஷியா (Wallachia) என்ற பிரதேசங்களை ரஷ்யசேனை தனது வசப்படுத்திக் கொண்டது. ப்2ரெஞ்சு தேசத்தரசரான மூன்ருவது நெப்போலியன் பலவந்தத்தின் மூலம் சிம்மாதனமேறியவர். ஆகவே தமது ஸ்தானத்தை உறுதிப்படுத்திக் கொள்ளும் பொருட்டும், தமது தேசத்தினரை சந்தோஷிப்பிக்க எண்ணங்கொண்டும் அவர் இராஜ்ஜியத்தைப் பெருக்க ஆவல்கொண்டார். அவரும் ரஷ்யாவுக்கு விரோதமாகத் துருக்கியுடன் சேர்ந்தார். பால்மர்ஸ்டனுடைய தூண்டுதவின்பேரில் இங்கிலண்டும் ப்2ரான்ஸுடன் சேர்ந்துகொண்டது.

ரஷ்ய சேனை, மால்டேவியா, வாலேஷியா என்ற பிரதேசங்களை விட்டுச் செல்ல மறுத்ததும், இங்கிலீஷ் — ப்ரெஞ்சு படைகள் யுத்தம் நடத்தத்தொடங்கின. அதற்குள் துருக்கியர் படையொன்றை ரஷ்யர்கள் ஸினேப் (Sinope) என்ற இடத்தில் தாக்கினர் கருங் கடலுக்கு அருகாமையில் உள்ள க்ரீமியா (Crimea) என்ற பிரதே சத்தில் சண்டை நடந்தமையால், அது க்ரிமியன் யுத்தம் என்று குறிக்கப்படுகிறது.

முதலில் நிலப்போர் நடந்தது. இங்கிலீஷ்—ப்ரெஞ்சுப்படை கள் வார்னு (Varna) என்ற இடத்திற்கு அனுப்பப்பட்டன. உடனே ரஷ்ய சேனை, மால்டேவியா—வாலேஷியாவை விட்டு தமது எல்லைக்குச் சென்றுவிட்டன. எனவே அதோடு யுத்தம் நின்றிருக்கவேண்டும். ஆனால் பிரிட்டிஷ் துரைத்தனத்தார் க்ரி மியா பிரதேசத்தின்மீது படையெடுத்துச் செல்லும்படி தமது சேனைக்குக் கட்டளையிட்டனர். அங்கு கருங்கடலோரமாக ரஷ் யர்கள் ஸிபாஸ்டபூல் (Sebastapool) என்ற ஓர் இராணுவக் கோட்டையைப் புதிதாகக் கட்டியிருந்தனர். அந்தக் கோட்டை யைத் தாக்குவதே பிரிட்டிஷ் சேனை செய்ய வேண்டியிருந்த வேலை. 1854-ல் வார்னு என்ற இடத்தில் களைத்துப் போயிருந்த சேனைகளை, அக்கோட்டைக்கு வடக்கே கொண்டுபோய்ச் சேர்த் தனர். ஆல்மா யுத்தத்தில் ரஷ்யர்கள் தோற்றுப்போயினர். உடனே இங்கிலீஷ்—ப்ரெஞ்சு சேனை ஸிபாஸ்டபூல் கோட் டையைத் தாக்கியிருந்தால் அதைப் பிடித்திருக்கலாம். ஆனால் சேனைத் தலைவர்கள் அந்தக் கோட்டையை முற்றுகை போட்டுப் பிடிக்க எண்ணினார்கள். அது முட்டாள்தனமான யோசனை என் பது சீக்கிரம் தெளிவாயிற்று. ஏறக்குறைய ஒரு வருஷ காலம் முற் றுகை நடந்தது. அவ்வளவு நீடித்த முற்றுகைக்கு அவசியமான சாதனங்கள் அவர்களிடம் இல்லை. கோட்டைக்கு வெளியிலிருந்த ரஷ்ய சேனையும் அவர்களை அடிக்கடி வருத்திவந்தது. கோட் டைக்குள்ளிருந்தவர்கள் வெளியிலிருந்து, வேண்டிய உணவுப் பொருள்களைக் கூடப் பெற்றுவந்தனர். அப்பொழுது இரண்டு யுத்தங்கள் நடந்தன. 1854 அக்டோபரில் பாலக்லாவா (Balac- lava) என்ற இடத்திலும், அடுத்த மாதத்தில் இங்கர்மான் (Inker-

man) என்ற இடத்திலும் போர் நடந்தது. இரண்டிலும் ரஷ்யர்கள் தோற்றுப்போயினர். முதல்போரில் இங்கிலீஷ் குதிரைப் படை வீரர்கள் அபார தைரியம்காட்டி மிகவும் கீர்த்தியடைந்தனர். ஆனால் ஷீ வெற்றிகளடைந்தும், இங்கிலீஷ்—ப்ரெஞ்சு சேனைக்கே அதிக கஷ்டம் நேர்ந்தது. முற்றுகை முடிவுறாமல் வளர்ந்து கொண்டே போயிற்று. அச்சமயத்தில் கடுமையான குளிர்காலமும் வந்துவிட்டது. குளிரைத் தாங்குவதற்கு வேண்டிய சௌகரியங்களை அதிகாரிகள் செய்து கொடுக்காமையால், சிப்பாய்கள் சகிக்கவொண்ணாத துயரமடைந்தனர். வியாதியால் அநேகர் மாண்டுபோயினர். 1856-ல் அந்த யுத்தம் முடிவடைந்தது; இரு கட்சியினரும் தளர்வடைந்து சமாதானத்தை ஆவலுடன் எதிர்பார்த்தனர். பாரிஸ் உடன்படிக்கைபின்படி சமாதானம் ஏற்பட்டது. கருங்கடலில் ரஷ்யாவின் யுத்தக் கப்பல்கள் தங்கக்கூடாதென்றும், அது எல்லோருக்கும் பொதுவானதென்றும் நிர்த்தாரணம் செய்யப்பட்டது. போரில் மிகுந்த சேதம் ஏற்பட்டதைத் தவிர எவருக்கும் எவ்வித நன்மையும் உண்டாகவில்லை. ஆனால் துருக்கி இராஜ்ஜியம் காப்பாற்றப்பட்டது; ரஷ்யாவின் பேராசை நிறைவேறவில்லை.

க்ரிமியன் யுத்தம் முடிவதற்குமுன்பே, ஆபெர்டீன்—ரஸ்ஸல் கூட்டு மந்திரிசபை கலைந்து போய்விட்டது. 1855-ல் க்ரிமியாவில் சேனைவீரர் குளிரினால் பட்டதுன்பங்களைக் கேட்டதும், எல்லோரும் மந்திரி சபையைத் தூற்றினர். அதனால் ஆபெர்டீன் அவமானமடைந்து உத்தியோகத்திலிருந்து விலகநேர்ந்தது. அதன்பின் பால்மர்ஸ்டன் பிரதம மந்திரியானார். அவர் யுத்தத்தை முடிவுக்குக் கொண்டுவந்து சமாதானத்தையும் உண்டாக்கினாராதலால், எல்லோராலும் போற்றப்பட்டார். பால்மர்ஸ்டன் முன்பு விக்டோரியாவின் அதிருப்திக்குப் பாத்திரமானது தெரிந்த விஷயம். அடிக்கடி அவர் ஏதாவது துன்பத்தில் அகப்பட்டுக்கொண்டாலும், அவருடைய அதிகாரமும் முக்கியத்துவமும் குறைவுபடவில்லை. 1858-ல் அவர், ப்ரெஞ்சுதேசத்தரசரைத் திருப்தி செய்விக்க முயன்றதில் தோல்வியடைந்து உத்தியோகத்தை விட்டுவிலகினார்.

1858-ல் டெர்பி, டிஸ்ரேலி ஆகிய இருவரும் இரண்டாம் முறை மந்திரிசபையை யமைத்தனர். அவர்களுக்குப் போதிய ஆதரவு இல்லாதுபோனமையால், மறுவருஷமே பால்மர்ஸ்டன் இரண்டாவது முறை பிரதம மந்திரியாகி, அவரது கடைசிக்காலம் வரையிலும் அதை வகித்திருந்தார். உறுதியான புத்தி, தைரியம், உற்சாகம் முதலிய குணங்கள் அவரிடம் இருந்தன. ஆனால் உயர்ந்த இலக்ஷியங்கள் அவரிடம் காணப்படவில்லை. தாம் அதிக திறமை வாய்ந்தவர் என்ற நம்பிக்கையை அவர் பூர்த்தியாகக் கொண்டிருந்தார்.

1861-ல் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஒரு போர் உண்டாயிற்று. வடக்கிலிருந்த நாடுகள் மனிதரை அடிமையாகக் கொள்ளும் முறையை ஒழிக்கவேண்டுமென்றன; தெற்கிலிருந்த நாடுகள் அதற்கு விரோதமாக இருந்தன. இங்கிலண்டு அந்த யுத்தத்தில் கலந்துகொள்ளவில்லை. ஆனால், அமெரிக்காவுக்கும் அதற்கும் சிறிதளவு மனஸ்தாபம் ஏற்பட்டது. ஐரோப்பாவிலும் அந்த சமயத்தில் புரட்சிகள் நடந்துகொண்டே இருந்தன.

1865-ல் பால்மர்ஸ்டன் இறந்து போனார். கடைசிக்காலத்தில் அவர் உள்நாட்டு நிர்வாகத்தில் அதிக அக்கறை காட்டவே இல்லை; தமது கட்சியை பலப்படுத்துவதையும் அசட்டையாக விட்டுவிட்டார். ஆகவே, அவருடன் ஒத்துழைத்த பீலைட் கோஷ்டியார் அதிருப்தியடைந்தனர். பீலைட் தலைவர் க்ளாட்ஸ்டன் அவருடைய பொக்கிஷ மந்திரியாக இருந்து வரவு செலவு கணக்கைத் தயாரிப்பதில் பெருமை யடைந்தார். அவரிடத்தில் பால்மர்ஸ்டனுக்கு ஓரளவு வெறுப்பே ஏற்பட்டிருந்தது. தாம் இறந்தபிறகு பீலைட் கோஷ்டியாருடைய இஷ்டப்படியே நிர்வாகம் நடக்குமென்பது அவருக்குத் தெரியும். "சீக்கிரத்தில் க்ளாட்ஸ்டன் முக்கிய பதவியடைவார். அவர் நான் வகிக்கும் பதவியைப் பெற்றதும், விசித்திரமான காரியங்கள் நடக்கும்" என்று பால்மர்ஸ்டன் கூறினாராம்.

பால்மர்ஸ்டனது காலத்தோடு ஒரு சகாப்தம் முடிவடைகிறது. 1832-ல் பார்லிமென்ட் சீர்திருத்தப்பட்டபின், மத்தியமான ஸ்திதியுடைய பிரமுகர்கள் முக்கிய அதிகாரம்பெற்றனர். பால்மர்ஸ்டன்

விக் கட்சியினரானாலும், முக்கியமான சீர்திருத்த முறைகளைச் செய்வதில் ஊக்கம் கொள்ளவில்லை. ஆனால் இங்கிலண்டின் மேம்பாட்டைக் காப்பாற்ற அவர் உழைத்தார். விக்டோரியா இராணியினது ஆட்சியின் முதற்பகுதியில், பால்மர்ஸ்டன் பிரபலஸ்தராக விளங்கினார்.

(3) பார்லிமேண்டின்சீர்திருத்தம்: க்ளாட்ஸ்டனின்முதல் மந்திரி சபை:—1865-ல் ரஸ்ஸல் பிரதம மந்திரியானார். 1832-ல் நிறைவேறிய பார்லிமென்ட் சீர்திருத்தச்சட்டம் அதற்கு முன்னிருந்த கெடுதல்களைக் குறைத்திருந்ததானாலும், அது பூர்ணமான திருப்தியை யளிக்கவில்லையென்பது கூறப்பட்ட விஷயம். சாமானிய ஜனங்களுள் பலருக்கு அதனால் ஓட்டுரிமை கிடைக்கவில்லை. ஆகவே, அதன்பின்னும் சீர்திருத்தக் கிளர்ச்சி இருந்துகொண்டே வந்தது. ஆனால் விக் கட்சியில் வயதுசென்ற பிரமுகர்கள் புதிய சீர்திருத்தம் வேண்டாமென்று கூறிவந்தனர். முக்கியமாக, பால்மர்ஸ்டன் அதற்குத் தடையாக இருந்துவந்தார். அவர் இறந்த பிறகு 1866-ல் க்ளாட்ஸ்டன் ஒரு சீர்திருத்த மசோதாவைக் கொண்டுவந்தார். கன்ஸர்வேடிவ் கட்சியினரும் மற்றவரும் சேர்ந்து அது நிறைவேறுமல் தடுத்துவிட்டமையால், ரஸ்ஸெல் இராஜீநாமாச் செய்து தமது பதவியிலிருந்து விலகிக்கொண்டார்.

உடனே டெர்பி—டிஸ்ரேலியின் கூட்டு மந்திரிசபை மூன்ருவது தடவையாக அமைக்கப்பட்டது. டிஸ்ரேலி சிறுகச் சிறுக பிரபலமடைந்து வந்தார். அவர் பார்லிமென்டின் சீர்திருத்த விஷயமாய் நாட்டில் இருந்த உணர்ச்சியை அறிந்து தைரியமாக 1867-ல் ஒரு மசோதாவைக் கொண்டுவந்து அதை நிறைவேற்றி வைத்தார். அது இரண்டாவது சீர்திருத்தச் சட்டம் என்று பெயர் பெற்றது. இங்கு ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. கன்ஸர்வேடிவ் கட்சியார் பொதுவாக, பிற்போக்கான கொள்கையுடையவர்களானாலும், இந்த விஷயத்தில் முற்போக்காக நடந்துகொண்டனர். டிஸ்ரேலியின் நண்பர்கள்கூட அவரைக் கடிந்தனர். ஆனால் டிஸ்ரேலி தைரியமாகத் தமது மனச்சாட்சியின்படி அவசியமான காரியத்தைச் செய்து முடித்தார்.

அந்தச் சட்டத்தினால் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் இன்னும் அதிகமான அளவிற்கு பொதுஜனப் பிரதிநிதித்துவம் பெற்றது. ஓட்டுரிமை பெறுவதற்கு அவசியமான வரியின் தொகையும் குறைக்கப்பட்டதாகையால், சாதாரணமான கூலியாட்களுக்கும் ஓட் சுதந்திரம் கிடைத்தது. பிரதிநிதித்துவம் சீர்திருத்தி அமைக்கப்பட்டது. 10,000 பேர்களுக்குக் குறைவான ஜனத்தொகையுடைய பிரதேசங்களுக்கு ஒரு பிரதிநிதி என்று திட்டம் செய்யப்பட்டது. சில பெரிய நகரங்களுக்கு மூன்று பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் விசேஷ உரிமை கொடுக்கப்பட்டது. பொதுவாக பட்டணங்களில் வீடுகளுக்கு சொந்தமாயிருந்தவர்கள் எல்லோரும் ஓட்டர்களாயினர். ஜனநாயக தத்துவம் நன்றாக உறுதிப்பட்டுப் போயிற்று.

டெர்பி—டிஸ்ரேலி மந்திரிசபையின் ஆட்சியிலும் அயர்லன்டில் குழப்பமேற்பட்டது. அந்த நாட்டில் அநேகமாய் இடைவிடாமல் ஏதாவது குழப்பம் இருந்துகொண்டே வந்தது தெரிந்த விஷயம். பிரிட்டிஷ் ஆட்சியில் அயரிஷ்மக்களின் நிலைமை கேவலமாக இருந்ததே அதற்குக் காரணம். அதனாலேதான், அடிக்கடி அவர்கள் கலகம்புரிந்து சுயாதீனம் வேண்டுமென்று போராடியபடி இருந்தனர். 1863-ல் சில அயரிஷ்காரர்கள் ஓர் இரகசிய சங்கத்தை ஸ்தாபித்தனர். அயர்லன்டில் சுயாதீனமான ஜனநாயக ஆட்சியை ஸ்தாபிப்பதே அந்தச்சங்கத்தின் நோக்கம். அது நாளடைவில் வலுத்து வந்தது. அதன் அங்கத்தினரில் பலர் இராணுவப் பயிற்சியும் பெற்றிருந்தனர். 1567-ல் ஒரு பெரிய கலகம் நடக்கும்போல் இருந்தது. பல அயரிஷ்காரர்கள் இங்கிலண்டிலும் வந்து அநர்த்தம் விளைவித்தனர். க்ளாட்ஸ்டன் முதலிய லிபரல்கள் அயரிஷ் மக்களின் குறைகளைத் தீர்க்க முயன்றனர். அது நிறைவேறுமுன் பார்லிமெண்டின் தேர்தல் நடந்தது. அதில் லிபரல் கட்சிக்கே அதிக ஸ்தானங்கள் கிடைத்தமையால், டெர்பி—டிஸ்ரேலியின் மந்திரிசபை கலைந்து போயிற்று.

1868-ல் க்ளாட்ஸ்டன் பிரதம மந்திரியானார். அவருடைய திறமையைப் பற்றியும், முதலில் அவர் பீலட் கோஷ்டியில் சேர்ந்து பிரக்கியாதிபெற்று, பிறகு பலதடவைகளில் பொக்கிஷ

மந்திரியாக இருந்து வரவு செலவு கணக்குகளைத் தயாரிப்பதில் சாமர்த்தியம் காட்டியதையும் முன்பு கூறியிருக்கிறோம். பல வருஷ காலம் இங்கிலண்டின் இராஜீய உலகில் க்ளாட்ஸ்டன், டிஸ்ரேலி ஆகிய இருவரும் முக்கிய புருஷர்களாயிருந்தனர். ஒருவர் லிபரல் கட்சித்தலைவர்; மற்றவர் கன்ஸர்வேடிவ் கட்சியின் தலைவர். இருவரும் ஒவ்வொரு துறையில் மேன்மை யடைந்திருந்தனர்.

க்ளாட்ஸ்டன் மந்திரி சபையில், முன்னேற்ற வாதிகளுக்கு ஸ்தானம் கிடைத்தமையால், அவர்கள் நாட்டிற்கு அவசியமான பல சீர்திருத்தங்களைச் செய்தனர்; முதலில் அயர்லண்டின் குறைகளை நிவர்த்திக்க வழி தேடினர். அயரிஷ் மக்களிற் பெரும்பாலோரானவர்கள் காதலிக் வகுப்பார். ஆனால் அயர்லண்டில் அரசாங்கத்தாருடைய ஆதரவைப் பெற்ற ஒரு ப்ராடஸ்டென்ட் மதஸ்தாபனம் இருந்துவந்தது. காதலிக் இனத்தார் அந்த மதஸ்தாபனத்தின் செலவுக்குத் தமது வரிப்பணம் உபயோகப் படுத்தப்படுவதை வெறுத்ததுடன் ப்ராடெஸ்டன்ட் மதஸ்தாபனம், அன்னிய நாட்டாரின் ஆட்சிக்கு அறிகுறியெனக் கருதினர். 1869-ல் க்ளாட்ஸ்டனின் முயற்சியினால் அயரிஷ் மதஸ்தாபனத்தை எடுத்துவிட அவர்கள் ஒரு சட்டம் இயற்றினர். (Disestablishment and Disendowment of the Irish Church.) ஆனால் அது மிகவும் அவசியமான சீர்திருத்தமேயானாலும் அயரிஷ் மக்களின் குறை முழுதும் அதோடு தீர்ந்துவிடவில்லை. பொருளாதாரத் துறையிலும் அவர்களுக்கு அதிகமான இடர்கள் இருந்துவந்தன. அயரிஷ்மக்களில் பலர், சில மிராசுதாரர்களுடைய நிலங்களை உழுது பயிரிட்டு ஜீவித்துவந்தனர். எஜமானர்களுக்கு அவர்களிடம் தயையோ தாக்ஷிண்யமோ இல்லையாதலால், பண்ணையாட்களது நிலைமை மகாதுன்பகரமாக இருந்தது. பண்ணையாட்கள் நிலத்தை உழுவதனால் பெற்ற வருமானத்தின் பெரும்பாகத்தை எஜமானர்களுக்குக் கொடுத்துவிட வேண்டியதாயிருந்தது. மேலும் நிலத்தில் களஞ்சியம், கிணறு முதலான அபிவிருத்தி சாதனங்களை பண்ணையாட்கள் தமது சொந்தச் செலவிலேயே உண்டாக்கிக் கொண்டனர்; ஆனால் அவைகள் உடனே எஜமானருக்குச் சொந்தமாய்விட்டன.

பஞ்சகாலங்களில் எஜமானர்கள் ஏழைக்குடியானவர்களிடம் அதிகமான குத்தகையை வசூல் செய்தும், அவர்களைத் தமது விருப்பத்தின்படி நீக்கியும் துன்புறுத்திவந்தனர். மிராசுதார்களுக்கும் பண்ணையாட்களுக்கும் அன்னியோன்னியத் தன்மையென்பதே இல்லாமல், பகைமையே நிறைந்திருந்தது. 1870-ல் க்ளாட்ஸ்டன் அயரிஷ் நிலச் சட்டம் (Irish Land Act) ஒன்று இயற்றி, அயர்லண்டின் நிலைமையைச் சிறிதளவு சீர்ப்படுத்தினார். அதன்படி மிராசுதார்கள் நிலஅபிவிருத்தி சாதனங்களின் பொருட்டு பண்ணையாட்களுக்கு பதிலுதவி செய்ய வேண்டுமென்றும், தகுந்த காரணமின்றி பண்ணையாட்களை அவர்கள் நீக்கக்கூடாதென்றும் விதி ஏற்படுத்தப்பட்டது. நிலத்தின் உரிமையை, எஜமானன் பண்ணையாள் ஆகிய இருவருக்குமாகப் பகிர்ந்து கொடுப்பதே அந்தச் சட்டத்தின் நோக்கம். அதனால் பண்ணையாட்களின் குறை சிறிதளவு நிவர்த்திக்கப்பட்டதானாலும், அவர்களது நிலைமை அநேகமாய் முன்போலவே இருந்து வந்தது. ஆனாலும் க்ளாட்ஸ்டன், அயர்லண்ட் விஷயத்தில் உண்மையான அக்கறை காட்டியது அவருக்குப் பெருமையை யளித்தது.

1870-ல் 'ஆரம்பக் கல்விச்சட்டம்' (Elementary Education Act) ஒன்று நிறைவேறியது. பார்ஸ்டர் (Forster) என்பவர் அதுபற்றி அதிக முயற்சி எடுத்துக்கொண்டார். அதன் மூலம் ஒவ்வொரு ஜில்லாவிலும் பாடசாலைக் கமிட்டிகளை (School Board) ஏற்படுத்தி, கல்வி வரியும் விதித்ததுடன், கட்டாயப் படிப்புக்கும் வழி செய்தனர். அதற்குமுன் பொது மக்களுடைய பரோபகாரச் சிந்தையினால் மாத்திரமே நாட்டில் கல்வி பரவிவந்தது; இப்பொழுது துரைத்தனத்தாரே, பொது ஜனங்களது கல்வி நிர்வாகத்தை வகிக்கலாயினர்.

1872-ல் இரகசிய ஓட்டு திட்டம் (Ballot Act) ஏற்பட்டது. ச்சார்டிஸ்ட் இயக்கத்தினரது வேண்டுகோள்களில் அதுவும் ஒன்று என்பது முன்னரே குறிக்கப்பட்ட விஷயம். இராணுவம், நீதி இலாகா ஆகியவை சம்பந்தமாகவும் சில முக்கியமான சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன். இவ்வாறு உள்நாட்டு நிர்வாகத்தில் க்ளாட்ஸ்டன் மந்திரிசபை மிகவும் திருப்திகரமாக நடந்து கொண்டது.

ஆனால் அன்னியநாட்டு வியவகாரங்களில் க்ளாட்ஸ்டன் அம்மாதிரியான பெருமை யடையவில்லை. 1870-ல் ப்ரான்ஸ், ஜெர்மனி ஆகிய இருதேசங்களுக்கும் போர் விளைய, ஜெர்மனியே வெற்றியடைந்தது. ரஷ்யா ப்ரான்ஸுடன் சேர்ந்தது. அந்தப்போரில் இங்கிலண்ட் கலந்து கொள்ளாமல் நடுநிலைமை வகித்தது. ஆனால் ரஷ்ய அரசு 1856-ல் செய்துகொண்ட உடன்படிக்கையை மீறி, கரும் கடலில் யுத்தக்கப்பல்களை நிறுத்திவைத்தது. க்ளாட்ஸ்டன் துரைத்தனத்தார் போர்புரிய ஆயத்தமாயில்லாமையால் ரஷ்யாவின் செய்கையைக் கண்டிக்கக்கூடவில்லை. அந்தச் செய்கை நாட்டிற்கு அவமானகரமானதென்று எல்லோரும் முறையிட்டனர்.

1872-ல் இன்னொரு சம்பவத்தாலும் க்ளாட்ஸ்டனுக்கு செல்வாக்குக் குறைந்தது. அலபாமா (Alabama) என்ற இங்கிலீஷ் கப்பல் அமெரிக்க துரைத்தனத்திற்குப் பொருள் நஷ்டமேற்படுமாறு நடந்திருந்தது. அந்த விஷயத்தை ஒரு கமிட்டியாருடைய பரிசீலனைக்கு விட்டதில், ப்ரிட்டிஷ் துரைத்தனத்தார் அமெரிக்காவுக்கு முப்பதுலக்ஷம் பவுன் நஷ்டஈடு கொடுக்கவேண்டுமென்று ஷை கமிட்டியார் தீர்மானித்தனர். அந்தத்தொகை மிக அதிகமானதென்று பொது ஜனங்கள் கருதினர். அதனாலும், மந்திரிகளுக்கு செல்வாக்குக் குறைந்துபோயிற்று.

1868 முதல் ஆறு வருஷகாலம் லிபரல் கட்சியினர் அதிகாரம் வகித்து, அவசியமான சீர்திருத்தங்களைச் செய்தனர். அதன்பிறகு ஜனங்களுக்கு அதிக சீர்திருத்தம் செய்யவேண்டுமென்ற உற்சாகம் குறைந்துவிட்டதாகையால், லிபரல் கட்சியின்மீதும் அவர்களுக்குப் பற்றுதல் அற்றுப்போய்விட்டது. க்ளாட்ஸ்டனின் முக்கிய எதிரியான டிஸ்ரேலி, அழகாய்ப் பேசுவதிலும் சுருக்கென்று உறைக்கும்படி கண்டிப்பதிலும் சமர்த்தர். அவர் க்ளாட்ஸ்டன் முதலான மந்திரிகளைப் பார்த்து 'காலியாய்ப்போன எரிமலைகள்' என்று கூறி நகைத்தார். அது உண்மையே; நாளாக ஆக லிபரல் மந்திரிசபை கண்டனத்திற்கு இடங்கொடுத்தது. அன்னிய நாட்டு வியவகாரங்களில் அது திறமையின்றி நடந்ததுடன், சில மந்திரிகளின் உறுதியின்மையாலும் இராஜதந்திரமின்மை

யாலும் அபகீர்த்தியடைந்தது. 1874-ல் லிபரல்களுக்கு ஆதரவு குறைந்து போயிற்று. பார்லிமெண்டில் கன்ஸர்வேடிவ் கட்சிக்கே அதிக ஸ்தானங்கள் கிடைத்தன. க்ளாட்ஸ்டன் மந்திரிசபை அதோடு கலைந்துபோயிற்று.

(4) **பிரதம மந்திரி டிஸ்ரேலி : அன்னியநாட்டு சம்பந்தம் :** 1874-ல் கன்ஸர்வேடிவ் தலைவர் **டிஸ்ரேலி** பிரதம மந்திரியானார். அவர் முன்பு இரண்டு மூன்று தடவைகளில் டெர்பியுடன் சேர்ந்துகொண்டு நிர்வாகம் நடத்தியிருந்தார். ஆனால் அவர் எப்பொழுதும் பார்லிமெண்டில் சிறுபான்மையோருடைய ஆதரவையே பெற்றிருந்தமையால், பிரதம மந்திரியாகும் சந்தர்ப்பம் அவருக்கு அதுவரையில் வாய்க்கவில்லை. அதுகாறும், லிபரல்களிடமே பொது ஜனங்களிற் பலருக்கு அபிமானம் இருந்துவந்தது. டிஸ்ரேலியின் மேன்மையால் கன்ஸர்வேடிவ் கட்சிக்கும் நாட்டில் உறுதியான ஆதரவு ஏற்பட்டது. டிஸ்ரேலி ஆறுவருஷகாலம் அதிகாரம் செலுத்தினார், அவருக்கும் க்ளாட்ஸ்டனுக்கும் பல அம்சங்களில் வேறுபாடுகள் இருந்தன. லிபரல் தலைவர் உள்நாட்டு நிர்வாகத்தில் புகழ்ச்சியடைந்து, அன்னியநாட்டு நிர்வாகத்தில் இகழ்ச்சிக்காளானார். டிஸ்ரேலியோ அன்னிய வியவகாரங்களைத் திறமையுடன் நடத்தினாராலும் உள்நாட்டு நிர்வாகத்தில் அவ்வளவு மேன்மை யடையவில்லை. அவர் அடிப்படையான மாறுதல்களைச் செய்யாமல், மிகவும் அவசியமான அபிவிருத்திகளை மாத்திரம் படிப்படியாக நிறைவேற்றி, பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தின் பாதுகாப்பில் கண்ணாயிருந்தார். 1876-ல் அவர் பீகன்ஸ்பீல்ட் பிரபு (Beaconsfield) வானார். அவரது காலத்திலும் அயரிஷ் மக்களது உபத்திரவங்கள் நின்றபாடில்லை. பிரிட்டிஷ் ஆட்சியில் எவ்வித விசேஷ மகத்துவத்தையும் காணாத அயரிஷ்காரர்கள் சுயராஜ்ஜியம் (Home Rule) வேண்டுமென்று கேட்கவும் துணிந்தனர். அதற்காகக் கிளர்ச்சிசெய்ய ஒரு தேசீயக்கட்சியும் கிளம்பியது. பார்னெல் (Parnell) என்பவர் அதற்குத் தலைவரானார். பார்னெலும் அவரது சகாக்களும் தமது காரியத்தில் சித்திபெற ஒரு புதிய வழியைக் கண்டுபிடித்தனர். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அயரிஷ் பிரதிநிதிகள் இருந்தனரல்லவா? அவர்கள் சேர்ந்துகொண்டு பார்லி-

மென்டின் காரியம் நடக்காமல் தடுத்து வந்தனர். நீண்ட பிரசங்கங்கள், குறுக்குக்கேள்விகள், முதலான எதிர்ப்பு முறைகளால் பார்லிமென்டின் காரியம் ஒழுங்காகவும் துரிதமாகவும் நடவாமல் இடையூறு புரிந்து வந்தனர். மேலும் அயர்லன்டில் 'நிலச் சங்கம்' (Land League) ஒன்றை ஏற்படுத்தி, நிலசம்பந்தமான சீர்திருத்தங்களுக்காகவும் போராடினர். பொது ஜனங்களுக்கு உக்கிரமான பிரசங்கங்கள் புரிந்து அவர்களுடைய அதிருப்தியை அதிகப்படுத்தினர். ஆனால் முன்பே கூறியதுபோல, டிஸ்ரேலி மந்திரிசபையார் அடிப்படையான மாறுதல்களைச் செய்ய முயற்சிப்பவர்களாயிருக்கவில்லை.

அப்பொழுது கீழ்த்திசை வியவகாரம் மறுபடியும் பிரபலமடைந்தது. துருக்கிக்கு உள்பட்ட பிரதேசங்களில் பால்க்கன் த்வீபகற்பமும் ஒன்று. அதில் பலஜாதிக் கிரிஸ்தவர்கள் வசித்து வந்தனர். அவர்களுள் ஸ்லா/2வ் (Slav) இனத்தாரே அதிகமாயிருந்தனர். துருக்கியின் கொடுமைகள் பொறுக்க இயலாமல் போகவே, ஸ்லா/2வ் இனத்தார், தமக்கு உறவினரான ரஷ்யர்களுடைய உதவியை நாடினர். பால்க்கன் பிரஜைகளில் சிலர் கலகம் செய்ததற்காகத் துருக்கிய அரசாங்கத்தார் அளவு மீறிய கடுமை காட்டி அவர்களை தண்டித்தனர். உடனே துருக்கிக்கு விரோதமாக இன்னும் பலர் கிளம்பிவிட்டனர். ரஷ்யாவே எப்பொழுதும் துருக்கியை எதிர்ப்பதற்குத் தயாராகக்காத்திருந்தது. எனவே 1877-ல் ரஷ்யா படையெடுத்து வந்து, மறு வருஷத்தில் துருக்கியின் தலைமை நகரத்தையே கைப்பற்றிவிடும் போலிருந்தது. அந்த யுத்தம் "ரஷ்யா துருக்கி யுத்தம்" (Russo Turkish war) என்று குறிக்கப்படுகிறது.

முன்பு கீழ்த்திசை வியவகாரத்தை விவரித்தபொழுது ஒரு விசேஷத்தைக் குறிப்பிட்டிருந்தோம். அதாவது, துருக்கியின் சீர்கெட்ட ஆட்சியை எல்லா ஐரோப்பிய அரசுகளும் வெறுத்தனவானாலும், ரஷ்யாவின் பேராசையைக் கண்டு அஞ்சியே, அவர்கள் துருக்கிக்கு சாதகமாகப் போர் செய்யவேண்டியது அவசியமாயிற்று என்பதை விளக்கினோம். ரஷ்யா தெற்குத் திசையில் செல்வாக்கடைந்தால் முக்கியமாக இந்தியாவில் பிரிட்டிஷ்

ஆட்சிக்கு அபாயமேற்படலாம். ஆகவே நோயாளியான துருக்கிக்கு ஆதரவளித்தாவது, பலிஷ்டனை ரஷ்யாவை தூரத்தில் வைத்திருப்பது இங்கிலண்டின் கடமையாயிற்று. ரஷ்யாவுக்கு வெற்றி ஏற்படாதபடி தடுக்க வேண்டுமென்று எல்லோரும் கூக்குரலிட்டனர். பிரதம மந்திரி பீகன்ஸ்பீல்ட் (டிஸ்ரேலி) உடனே யுத்தத்திற்கு வேண்டிய முஸ்தீபுகளை ஆயத்தப்படுத்தினர். சிலர் துருக்கியினிடம் அகப்பட்டுத் தவித்த கிரிஸ்தவப்பிரஜைகளின் சுயாதீனத்திற்காகப் போராடுவதை விட்டு,கிரிஸ்தவரல்லாத துருக்கி அரசருடன் சேர்ந்து அவரைப் பலப்படுத்துவது தவறு என்றனர். ஆனால் ரஷ்யாவின் எண்ணம் பலித்தால், பின்னால்ஐரோப்பாவுக்கு நேரிடக்கூடிய இராஜீய அபாயங்களை முன்னிட்டு, பிரிட்டிஷ் அரைத்தனத்தார் முன்னுகவே எச்சரிக்கையாக நடப்பது அவசியமாயிற்று ஆனல் நற்காலமாக, யுத்தம் நேரிடும் முன் சமாதானத்திற்கு வழி உண்டாயிற்று. 1878-ல் பல அரசுகள் ஒன்றுகூடி பேர்லின் உடன்படிக்கையை (Treaty of Berlin) செய்துகொண்டன. அந்தக் கூட்டத்திற்கு பிரதம மந்திரி பீகன்ஸ் பீல்டும், அன்னியநாட்டு மந்திரியான ஸாலிஸ்பரியும் (salisbury) சென்றிருந்தனர். அந்த உடன்படிக்கையினால் கீழ்த்திசை வியவகாரம் ஒருவாறு சீர்திருத்தப் பெற்றது. பால்க்கன் பிரதேசத்தின் வடபாகத்திற்கு சுயாதீனம் அளித்தனர்; தென் பாகத்திற்கு சிறிதளவே சுயாதீனம் கிடைத்தது. துருக்கிக்கு உள்பட்ட வேறு சில சிறிய நாடுகளும் சுயாதீனமடைந்தன. ரஷ்யா, ஆஸ்ட்ரியா, இங்கிலண்ட்—முதலிய அரசுகளுக்கு சிற் சில இடங்கள் சன்மானமாகக் கிடைத்தன. எனவே, 'நோயாளி'யான துருக்கிய இராஜ்ஜியத்தின் நோயைத் தீர்க்க வந்த ஐரோப்பிய அரசுகளான ஒநாய்கள் அதைச் சின்னபின்னமாக்கி, அதில் பல பிரதேசங்களை தலைக்கு ஒரு பாகமாய்ப் பிரித்துக்கொண்டன. ஆகவே, பீகன்ஸ் பீல்டின் மீது குறைகூறி வந்தவர்களுக்குத் திருப்தியேற்பட்டது. துருக்கி சுல்தான் மீதிருந்த அன்புப் பெருக்கினால் தூண்டப்பட்டு அவர் துருக்கிக்கு சாதகமாகப் போர் தொடங்கவில்லையென்பது பேர்லின் உடன்படிக்கையிலிருந்து விளங்கியது. அந்தச் சம்பவத்தால் அவருக்கு நாட்டில் அதிக மேம்பாடு ஏற்பட்டது. போர் நடத்தாமலேயே அவர்

ரஷ்யாவின் பேராசை நிறைவேருதபடி தடுத்ததன்றி கிரிஸ்த வர்களுக்கும் சுயாதீனம் சம்பாதித்துக் கொடுத்தமையால், தாம் "கௌரவத்துடன் சமாதானம்.' பெற்று வந்ததாகக் கூறிக்கொண் டார். முன்னர் குறிக்கப்பட்டபடி அன்னியநாட்டு வியவகாரங் களில் அவர் க்ளாட்ஸ்டனைப் போலின்றி மேம்பாட்டை அடைந்தார்.

1879-ல் அவர் ஈஜிப்ட் தேசத்தின் வியவகாரத்திலும் தலை யிட்டுக் கொண்டார். அதை ஆண்டுவந்த அதிகாரி சீர்கெட்ட ஆட்சி நடத்தி வந்தமையால், இங்கிலண்ட், ப்ரான்ஸ் ஆகிய இரண்டு அரசுகளும் அதன் நிர்வாகத்தை மேல்பார்வை பார்க்கும் கடமையை வகித்தன. ஆனல் தமக்கு எவ்விதத்திலும் சம்பந்த மற்ற ஒரு நாட்டில் அவ்விரு அரசுகளும் அவ்வளவு அக்கறை கொண்டது மிகவும் விந்தையாகத் தோன்றலாம். ஆனல் இராஜீய முறைகளில் அத்தகைய காரியங்கள் நடப்பது சகஜமே. அழுகிற ஆட்டினிடம் இரக்கங்கொண்டு அதற்கு உதவிசெய்யச் செல்லும் புலியின் கபட எண்ணத்தையே அதற்கு உவமையாகக் கூறலாம். ஆனல் டிஸ்ரேலிக்கு அதனல் பெருமைப்பாடே யேற் பட்டது.

ஒரு மந்திரிசபை, ஜனங்களுடைய நீடித்த ஆதரவைப்பெற்று நிலைத்திருக்க வேண்டுமானல், அது துரைத்தன நிர்வாகத்தில் எல் லாத் துறைகளிலும் திருப்திகரமாக நடந்துகொள்ள வேண்டும். க்ளாட்ஸ்டன் அன்னியநாட்டு வியவகாரங்களில் தவறிய தனல் வீழ்ச்சியடைந்தார். டிஸ்ரேலியோ ரஷ்யாவின் பேராசை நிறைவேருதபடித் தடுத்ததிலும், "கௌரவத்துடன் சமாதானம்" பெற்றதிலும் வெற்றி யடைந்தாராலும் உள்நாட்டுக் குறைகளைத் தீர்க்க வழிதேடவில்லை. அயர்லண்டிலோ கிளர்ச்சி அதிகரித்துக் கொண்டு வந்தது. மேலும், அவருடைய அன்னியநாட்டு சம்பந் தத்தைக்கூட, க்ளாட்ஸ்டன் கண்டித்து வந்தார். க்ளாட் ஸ்டன் ஜாதி வெள்ளைக்காரராதலால், துருக்கியிடம் அவருக்கு அபாரமான வெறுப்பு இருந்து வந்தது. துருக்க அரசை அடி யோடு ஐரோப்பாவை விட்டுக் கிளப்பிவிட வேண்டுமென்பது அவரது உள்கருத்து. ஆனல் ரஷ்யப் பேய் அந்த இடத்தை

ஆக்கிரமித்துக் கொண்டால் அது அதிக அபாயகரமாய்விடும்; அருக்கியாவது ஸ்ரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திற்கு அதிகமான தீங்கை விளைவிளக்காமலிருந்தது.

ஆனாலும், 1880-ல் நடந்த பொதுத் தேர்தலில் லிபரல்கள் மறுபடி அதிக ஆதரவைப் பெற்றனர். லீகன்ஸ் பீல்ட் இராஜீநாமாச் செய்தார்; மறுவருஷம் இறந்தும் போனார். 19-வது நூற்றாண்டில் இருந்து பிரசித்திபெற்ற இராஜீயப் பிரமுகர்களில் முக்கியமானவர்களுள் டிஸ்ரேலி ஒருவர். அரசியின் அபிமானம் அவருக்குப் பூர்த்தியாக இருந்தது. க்ளாட்ஸ்டன், டிஸ்ரேலி ஆகிய இருவரும் மாறிமாறி ஜ்வலிக்கும் நட்சத்திரச் சுடர்கள் போல் விளங்கினர். டிஸ்ரேலி இங்கிலீஷ் மக்களுடைய உண்மை இயற்கையை யறியாது போனாரென்றும், க்ளாட்ஸ்டன் ஸ்ரிட்டிஷ் சாம்ராஜ்ஜியம் ஒன்று இருப்பதையே அடிக்கடி மறந்து விட்டார் என்றும் சரித்திராசிரியர்கள் குறிப்பதுண்டு. வரவு செலவு கணக்குகளைத் தயாரிப்பதிலும், பார்லிமெண்டில் தலைமை வகித்து நடத்துவதிலும் அவருக்குத் திறமையதிகம்; டிஸ்ரேலியோ அதிக படாடோபமின்றி, அமைதியாக உள்நாட்டு வியவகாரங்களை நடாத்தியதன்றி, அன்னியநாடுகளுடன் உறவாடுவதில் விசேஷப் பயிற்சி பெற்றிருந்தார். 1841-ல் பீல் எவ்வாறு கன்ஸர்வேடிவ் கட்சிக்குப் புதிய ஊக்கமளித்தாரோ அதுபோலவே டிஸ்ரேலியும் அக்கட்சிக்கு மேம்பாட்டை யுண்டாக்கினார். அவரிடம் ஏதோ ஒரு விசேஷச் சிறப்பு இருந்ததென்பதை எல்லோரும் உணர்ந்தனர். உயர்ந்த கற்பனா சக்தியும், தைரியமும், சூட்சுமமான பகுத்தறிவும், கம்பீரமும் உறுதியும் கலந்த போக்கும் அவரிடம் இருந்ததை அவருடைய பகைவர்களும் ஒப்புக்கொண்டனர். ஸ்ரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைப் பெருக்குவதில் அவர் ஆர்வமுடையவராயிருந்தார்.

**(5) க்ளாட்ஸ்டன் மீண்டும் மந்திரிசபையை யமைத்தல்: அயரிஷ் சுயராஜ்யம்:**—1880-ல் டோரிக் கட்சி பலஹீனமடைந்ததும், க்ளாட்ஸ்டன் லிபரல் மந்திரி சபையை அமைத்து, பொக்கிஷ மந்திரி வேலையையும் தாமே ஏற்றுக்கொண்டார். முதலிலேயே அவருடைய கவனம் அயர்லன்டின்மீது

சென்றது. அவர் முதல் தடவை பிரதம மந்திரியாக இருந்தபோது, நிலச் சட்டமொன்றை இயற்றி யிருந்தாரல்லவா? இப்பொழுது இன்னொரு சட்டம் நிறைவேற்றி, முதல் சட்டத்திலிருந்த குறை களையும் நிவர்த்திசெய்தார். அதனால் பண்ணையாட்களுக்குச் சிறிது அதிகமான சுதந்திரமும் சௌகரியங்களும் உண்டாயின. ஆனால் அதன்மூலம் அயர்லன்டில் அமைதி ஏற்படவில்லை. பார்னெல் முதலிய தலைவர்கள் தாங்கள் ஸ்தாபித்திருந்த நிலச் சங்கத்தின் மூலமாய் அமிதமான கிளர்ச்சி செய்துவந்தனர். கலகமும் குழப்ப மும் தினசரி சம்பவங்களாயின. பார்லிமென்ட் சபையிலும் பார் னெல் தமது எதிர்ப்பு முறைகளை அநுஷ்டித்துவந்தார். துரைத் தனத்தார் தம்மிடமிருந்த அதிகார பலத்தினால் அயரிஷ் தலைவர்க ளைச் சிறைப்படுத்தினர். மறுவருஷத்தில் தலைவர்களை வெளியில் விடுத்து, அவர்களுடைய வேண்டுகோட்களை அங்கீகரிக்க விருந்த பொழுது முக்கியமான சில துரைத்தன அதிகாரிகளை அயரிஷ் காரர் கொன்று வீழ்த்தினர். அதனால், அயர்லன்டை முன்னிலும் அதிக கடுமையாக அடக்கியாள இங்கிலீஷ் துரைத்தனத்தார் தீர் மானித்தனர்; பார்னெலின் தந்திரம் பலிக்காமற் செய்ய, பார்லி மென்டின் நடவடிக்கை முறையையும் மாற்றிக்கொண்டனர். அவற் றைக் கண்ட அயரிஷ்காரர் மேலும் அதிகமாய் அதிருப்தியடைந்து, தமது கிளர்ச்சியை முன்னிலும் அதிக உக்கிரமாக நடத்தினர்.

மிக சீக்கிரத்தில் அன்னிய நாட்டில் குழப்பம் உண்டானது க்ளாட்ஸ்டனுடைய துரதிஷ்டத்தினாலென்றே கூறவேண்டும். இந்தியா, ஆப்ரிக்கா முதலிய இடங்களில் ஏற்பட்ட இடர்களைத்தவிர, ஈஜிப்ட் தேசத்திலும் போருக்கு அறிகுறியான சம்பவங்கள் நிகழ்ந் தன. டிஸ்ரேலி மந்திரிபதவி வகித்திருந்தபொழுது ப்ரான்ஸுடன் சேர்ந்துகொண்டு ஈஜிப்ட் நாட்டைவசப்படுத்திக்கொண்டது தெரிந்த விஷயம். ஐரோப்பியர்களுடைய ஆட்சியை ஒழிக்கும் பொருட்டு அராபி பாஷா (Arabi Pasha) என்பவர் அங்கு கிளர்ச்சி செய் தார். அந்தக் கிளர்ச்சியை அடக்குவது இங்கிலீஷ், ப்ரெஞ்சு ஆகிய அரசுகளுடைய கடமையாயிற்று. ஆனால் ப்ரெஞ்சு துரைத் தனத்தார் அதில் தலையிட மறுத்தனர். அதனால் ஈஜிப்ட் தேசக் குழப்பத்தை அடக்குவது பிரிட்டிஷாருடைய பொறுப்பாயிற்று

நைல் நதிக்கரையிலுள்ள ஸூடான் (Sudan) பிரதேசம் ஈஜிப்ட்டுக்கு உட்பட்டிருந்தது. ஸூடான் தேசத்தவர்களும் அதே சமயத்தில் கிளர்ச்சி செய்தனர். 1882-ல் பிரிட்டிஷ் துருப்புகள் அரபி பாஷாவை தேலெல்கபீர் (Tel-el-kabir) என்ற இடத்தில் தோற்கடித்தன. அதனால் கிளர்ச்சிக்காரர்கள் அடங்கிப்போக, ஈஜிப்ட்டில் இங்கிலீஷ்காரருடைய ஆட்சி வலுத்துவிட்டது. கலகத்தை அடக்குவதில் ப்ரெஞ்சுக்காரர் ஒத்துழைக்க மறுத்தமையால், அவர்கள் ஈஜிப்ட்டில் எவ்வித அதிகாரமும் பெறமாட்டாமல் நஷ்டமடைந்தனர்.

ஈஜிப்ட்டில் கலகத்தை அடக்குவதற்குள் ஸூடான் பிரதேசத்துக் கிளர்ச்சி வலுத்துவிட்டது. அந்தப் பிரதேசம் முழுதும் மஹ்தி (Mahdi) என்ற கலகத் தலைவரது வசம் ஆயிற்று. ஏதோ சிற்சில விடங்களில் மாத்திரம் ஈஜிப்ட்டின் சேனைகள் மஹ்தியைத் தாக்கிவந்தன. 1884-ல் பிரிட்டிஷ் சேனைத்தலைவரான கார்டன் (Gordan) என்பவர் ஸூடான் பிரதேசத் தலைமைநகரமான கார்ட்டூம் (Khartum) நகரத்திற்கு அனுப்பப்பட்டார். கார்டன் சாமர்த்திய சாலியான சேனைத்தலைவர். அபாயகரமான வேளைகளிலும் திறமையாக நடந்துகொண்டு வெற்றிபெறும் திறமையுடையவர். ஆனால் எவ்வித உதவியுமின்றி அவர் கார்ட்டூம் நகரத்திற்குச் சென்றமையால், அங்கு, இருந்த ஈஜிப்ட்சேனையை மீட்க அவரால்முடியவில்லை. உடனே விரைவில் துருப்புகளை அனுப்பும்படியாவது அல்லது தமது இச்சைப்படி நடக்கும் சுதந்திரம் அளிக்கும்படியாவது அவர் தமதுதுரைத்தனத்தாருக்குச் செய்தியனுப்பினர். துரைத்தனத்தார் அவருடைய இடுக்கண்களை உணராமல், காலதாமதம் செய்தனர். அதற்குள், மஹ்தியின் சேனை கார்ட்டூம் நகரை முற்றுகையிட்டது. கார்டன் அதற்குள் அகப்பட்டுத் தவித்தார்; அதன்பிறகே துரைத்தனத்தாருக்கு விவேகம் உதிக்க, அவர்கள் உடனே ஒரு சேனையை அனுப்பினர். அதுபோய்ச் சேருவதற்குள், கார்ட்டூம் எதிரிகளது வசம் அகப்பட்டுக்கொண்டது. துரைத்தனத்தாரின் மதியீனத்தால், கார்டன் பகைவர்களால் 1885-ல் கொல்லப்பட்டார். அதனால் க்ளாட்ஸ்டன் மந்திரிசபைக்கு மிகுந்த அபவாதம் உண்டாயிற்று.

1885-ல் மூன்றாவது பார்லிமென்ட் சீர்திருத்தச் சட்டம் ஒன்று நிறைவேறியது. 1832, 1867-ம் வருஷங்களின் சட்டங்களால் மாறுதல் ஏற்பட்டபிறகும் பின்னும் சில குறைகள் இருந்தமையால், மூன்றாவது சட்டமொன்றை இயற்றுதல் அவசியமாயிற்று. அதனால், ஓட்டுரிமை இன்னும் அதிகமான ஜனங்களுக்கு அளிக்கப்பட்டது. 15000 பேர்களுக்குக் குறைவான ஜனத்தொகையுடைய ஜில்லாக்கள் பிரதிநிதித்துவத்தை இழந்தன; 50000 பேர்களுக்குக் குறைந்த ஜில்லாக்களுக்கு ஒரு பிரதிநிதியையனுப்பும் உரிமை மாத்திரம் கிடைத்தது. முக்கிய வியாபாரஸ்தலங்களும் பிரதிநிதித்துவம் பெற்றன. அதனால் இங்கிலண்டில் ஜனநாயக தத்துவம் இன்னும் ஆழ்ந்த அளவிற்கு அங்கீகரிக்கப்பட்டது. சாமானிய ஜனங்களும்கூட ஓட்டுரிமை பெற்று துரைத்தன வியவகாரங்களில் அக்கரை கொள்ளலாயினர்.

1885-ல் கிளாட்ஸ்டன்—ஐந்துவருஷகாலம் அதிகாரம் வகித்தபிறகு—பார்லிமென்டில் ஆதரவை யிழந்து இராஜீநாமாச் செய்துவிட்டார். அவர் அன்னியநாட்டு வியவகாரத்தில் யோசனைக்குறைவாக நடந்துகொண்டமையாலும், அயர்லண்டின் குறைகளைத் தீர்க்கமுடியாது போனதாலும், கன்ஸர்வேடிவ் கட்சியும் அயரிஷ் பிரதிநிதிகளும் சேர்ந்து அவரைத் தோற்கடித்தனர்.

1885 முதல் 1886 வரையில்—ஒரு வருஷகாலம், ஸாலிஸ்பரி பிரபு, கன்ஸர்வேடிவ் மந்திரிசபையை அமைத்திருந்தார். ஆனால் அவ்வருஷம் நடந்த பொதுத் தேர்தலில் அயரிஷ் பிரதிநிதிகள் லிபரல்களுடன் சேர்ந்துகொண்டமையால் லிபரல் கட்சிக்கு ஆதரவு அதிகரித்தது. 1886-ல் கிளாட்ஸ்டன் மூன்றாவது தடவை மந்திரி சபையை யமைத்தார்.

ஆனால் முதலிரண்டு மந்திரிசபைகளைப்போலவே, கிளாட்ஸ்டனுடைய மூன்றாவது மந்திரிசபையும் நீடித்து நிற்கவில்லை. ஏனெனில் லிபரல் கட்சியிலேயே பிளவுகள் உண்டாய்க்கொண்டிருந்தன. 1846-ல் பீல் தானியச் சட்டங்களை விலக்கியபொழுது கன்ஸர்வேடிவ் கட்சி இரண்டாகப் பிரிந்ததை கவனித்தோம். அதுபோலவே, ஒரு முக்கியமான விஷயத்தைபற்றி அபிப்பிராய பேதமேற்பட்டதாகையால், லிபரல் கட்சியும் இரண்டுபட்டது.

க்ளாட்ஸ்டன் அயர்லந்தின் விஷயத்தில் மிகுந்த அநுதாப முடையவர். அயரிஷ்காரர்களின் குறைகளை நீக்கும்பொருட்டு அவர் அவர்களுக்கு சுயராஜ்ஜியம் அளிக்க விரும்பங்கொண்டார். ஆனால் இது மற்ற லிபரல்களுக்கு சம்மதியா யிருக்கவில்லை. 1886-ல் க்ளாட்ஸ்டன் ஒரு மசோதாவைக் கொண்டுவந்து, அயர்லந்தில் தனிப் பார்லிமென்டும் தனித்துரைத்தனமும் அளிக்கவேண்டுமென்று பிரேரணை செய்தார். அதாவது, 1800-ல் அயரிஷ் ஐக்கியச் சட்டத்தின்படி அயர்லந்தின் பார்லிமென்டை அழித்து, அயரிஷ் பிரதிநிதிகளுக்கு பிரிட்டிஷ் பார்லிமென்டிலேயே ஸ்தானங்கள் அளித்திருந்தது. பார்னெல் முதலிய அயரிஷ் தலைவர்கள் அந்த ஐக்கியச் சட்டத்தை விலக்கி, அயர்லந்திற்கு சுயராஜ்யம் வேண்டுமெனப் போராடினர். இப்பொழுது க்ளாட்ஸ்டன் அவர்களது வேண்டுகோளுக்கு இணங்குகிறவராய்க் காணப்பட்டார். அதைக் கண்ட கன்ஸர்வேடிவ் கட்சியார் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திற்கே அபாயம் விளைந்துவிட்டதெனக் கூக்குரலிட்டனர். லிபரல் கட்சியிலும் 93 பேர்கள் லிபரல்—யூனியனிஸ்ட் (Liberal—Unionist)—அதாவது அயரிஷ் ஐக்கியத்தை ஆதரிக்கும் லிபரல்கள் என்ற பெயரை வகித்து, க்ளாட்ஸ்டனுடைய அயரிஷ் சுயராஜ்ய மசோதாவை எதிர்ப்பதில் கன்ஸர்வேடிவ்களுடன் சேர்ந்துகொண்டனர். அதனால் க்ளாட்ஸ்டனுடைய முயற்சி பலிக்கவில்லை. அவர் பிரேரணைசெய்த மசோதாவும் தோற்றுப்போயிற்று. அவ்வருஷத்திலேயே மறுபடியும் பொதுத் தேர்தல் நடந்ததில், யூனியனிஸ்ட், கன்ஸர்வேடிவ் கட்சியாருக்கே அதிக ஸ்தானங்கள் கிடைத்தன. க்ளாட்ஸ்டன் இராஜீநாமாச் செய்யவேண்டியதாயிற்று.

அம் முயற்சியால் இங்கிலந்தின் இராஜீயக் கட்சிகள் ஒருவாறு மாறுபட்டன. க்ளாட்ஸ்டன், பார்னெல் முதலியவர்களுக்கு 'ஹோம் ரூல்காரர்' (Home—Rulers)—அதாவது அயரிஷ் சுயராஜ்யத்தை ஆதரித்தவர்கள் என்றும், மற்றவர்களுக்கு யூனியனிஸ்ட் என்றும் பெயர்கள் கிடைத்தன. லிபரல்களும் கன்ஸர்வேடிவ்களும் தனியாக இருந்து, க்ளாட்ஸ்டன், டிஸ்ரேலி முதலிய பிரமுகர்களைக்கொண்டு மாறிமாறி அதிகாரம் நடத்தி வந்த

னர். லிபரல்கள் உள்நாட்டு நிர்வாகத்திலும், கன்ஸர்வேடிவ்கள் வெளிநாட்டு வியவகாரங்களிலும் விசேஷ வெற்றியடைந்தனர். 1886 முதல் அயரிஷ் வியவகார சம்பந்தமாக இங்கிலன்டின் இராஜ்யப் போக்கு புதிய வழியில் திரும்பியது. விக்டோரியாவின் ஆட்சியில் ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாயிற்று.

(6) அயரிஷ் சுயாராஜ்யப் போராட்டம்: மந்திரி சபைகள்: அன்னியநாட்டு வியவகாரங்கள்: கிளாட்ஸ்டனது மூன்றாவது மந்திரிசபை கலைந்தபிறகு, யூனியனிஸ்ட் கட்சியார் அதிகாரம் வகித்தனர். ஏற்கெனவே, சிறிதுகாலம் பிரதம மந்திரியாயிருந்த ஸாலிஸ்பரி பிரபுவே இப்பொழுதும் பிரதம மந்திரியானார். அன்னியநாட்டு வியவகாரங்களையும் அவரே கவனித்து வந்தார். கன்ஸர்வேடிவ் கட்சிப் பிரமுகர்களிற் பலர் அவருக்கு சகாக்களாயினர். அம்மந்திரி சபை ஆறுவருஷகாலம் அதிகாரம் வகித்து நிர்வாகம் நடத்தியது. அயரிஷ் சுயராஜ்ய மசோதா தோற்றுப்போனதாகையால் அயர்லன்டில் அதிருப்தி அதிகரித்தது. பொருளாதாரத்துறையிலும் அதிக சௌகரியங்கள் ஏற்படவில்லை. பார்னெலுடைய துணைவர்கள் "போர்த் திட்டம்" (Plan of Campaign) என்ற இயக்கத்தை ஆரம்பித்தனர்; அதன் பிறகு, பண்ணையாட்களுடைய நிபந்தனைகளுக்கு எஜமானர்கள் உட்படும்வரையில், பண்ணையாட்கள் குத்தகைப்பணம் செலுத்தாமல் இருந்து வந்தனர். எஜமானர்களோ தமது அதிகாரத்தை உபயோகித்து பண்ணையாட்களை நீக்கி வந்தனர். அதனால், சச்சரவும் அமைதியின்மையும் விளைந்தன. அப்பொழுது பால்போர் (Balfour) என்ற மந்திரி அயரிஷ் காரியதரிசியாக இருந்தார். அவரது சாமர்த்தியத்தால் அயர்லன்டில் சிறிதளவு சமாதானம் ஏற்பட்டது. ஆனால், அயர்லன்டில் கிளர்ச்சிகள் நடப்பது சர்வ சாதாரணமாக இருந்தது. எனவே, "போர்த் திட்ட" இயக்கம் அமைதியடைந்து அடங்கியவுடனே, வேறொரு சச்சரவு தோன்றியது.

இங்கிலன்டில் 'டைம்ஸ்' (Times) என்ற தினசரிப்பத்திரிகை ரொம்பவும் கியாதிபெற்றது. 1888-ல் அந்தப் பத்திரிகை முக்கியமான ஒரு விஷயத்தை வெளியிட்டது. அதாவது, அயர்லன்டில் நடந்த கொலை, கலகம் முதலிய கொடிய செய்கைகளிலெல்லாம்

அயரிஷ் தலைவரான பார்னெல் சம்பந்தப்பட்டிருந்ததாகக்கூறி, அவரது கையால் எழுதப்பட்ட ஒரு கடிதத்தையும் வெளியிட்டது. பார்னெல் தாம் அந்தக் கடிதத்தை எழுதவில்லை என்று பிரமாணம் செய்ய, அவ்விஷயத்தின் உண்மையை விசாரித்துக் கண்டுபிடிக்க, துரைத்தனத்தார் ஒரு கமிஷனை நியமித்தனர். அந்தக் கமிஷன் ஷை கடிதம் பொய்யாகத் தயாரிக்கப்பட்டதென்று நிச்சயித்ததானாலும், கொலை களவுகள் நடந்ததற்கு அவர் அநுகூலமாயிருந்தாரென்றும் தீர்மானம் செய்தது. டைம்ஸ் பத்திரிகை பார்னெலுக்கு 5000 பவுன் மானநஷ்ட ஈடு கொடுத்தது. பார்னெல்மீது டைம்ஸ் பத்திரிகை சுமத்திய குற்றம் பொய்த்துப்போனதானாலும், அவருடைய இரகசியச் செய்கைகளை எல்லோரும் கண்டித்தனர். பார்னெல் பரிசுத்தமான நடத்தை யுடையவரல்லரென்று சிலமாதகாலத்தில் வேறு சில வழக்குகளால் வெளிப்பட்டது எனவே, அயரிஷ் தலைவருடைய செல்வாக்கு அநேகமாய்க் குறைந்துபோயிற்று. 'ஹோம் ரூலர்கள்' கூட அவரை வெறுக்க ஆரம்பித்தனர். அயர்லண்டிலேயே அவருக்குப் பகைவர்கள் கிளம்பினர். ஆனால், கடைசி வரையில் பார்னெல் தமது பிடியைவிடாமல், கிளர்ச்சி செய்தபடி இருந்தே 1891-ல் மரணமடைந்தார். அயர்லன்டுக்கு சுயாதீனம் உண்டாக்கிக் கொடுத்த விஷயத்தில் போராடியவர்களுள் பார்னெல் நிரம்பவும் புகழ் பெற்றவர். அவருக்குப் பிறகு ரெட்மன்ட் (Redmond) என்பவர் அயரிஷ் கட்சித் தலைவரானார்.

ஸாலிஸ்பரி பிரபு பிரதம மந்திரியாக இருந்ததோடு அன்னியநாட்டு வியவகாரங்களையும் கவனித்து வந்தாரன்றோ. அப்பொழுது, ஐரோப்பாவில் ஜெர்மனி, ஆஸ்ட்ரியா, இத்தலி முதலிய அரசுகள் ஒன்றாகவும், ரஷ்யாவும் ப்ரான்ஸும் ஒன்றாகவும், சேர்ந்து கொண்டிருந்தன. இங்கிலண்டினுடைய இராஜ்ஜியப் பெருக்க முயற்சியில், அதற்கும் மற்ற அரசுகளுக்கும் போட்டி நேரிடாமற் காப்பது பிரதம மந்திரியின் பொறுப்பாயிற்று. கீழ்த்திசை வியவகாரம் ரஷ்யாவின் பேராசை, ஈஜிப்ட்டுத் தகாறுகள், இந்தியாவின் நிலைமை ஆகிய எல்லாம் கவலைக்கிடமாய் இருந்தன. ஸாலிஸ்பரியின் திறமையால் போர் நேரிடாமல் தடுக்கப்பட்டு வந்தது.

1887-ல் விக்டோரியா மகாராணி பட்டத்திற்கு வந்து ஐம்பது வருஷகாலம் ஆனதுபற்றி ஜூபிளிக் (Jubilee) கொண்டாட்டம் நடைபெற்றது.

ஸாலிஸ்பரியின் நிர்வாகத்தில் நாட்டின் நலத்தை விருத்தி செய்யும் பல சாதனங்களும் உண்டாக்கப்பட்டன.

1892-ல் ஸாலிஸ்பரி மந்திரிசபை கலைந்து போயிற்று. அதை க்ளாட்ஸ்டன் உக்கிரமாக எதிர்த்து வந்திருந்தார். அவருக்கு எண்பது வயது ஆயிருந்தது; வயதில் முதிர்ச்சியடைந்ததைப் போலவே அறிவிலும் அநுபவத்திலும் அவர் முதிர்ச்சியடைந்திருந்து எல்லோராலும் கௌரவிக்கப் பெற்றிருந்தார். 1892-ல் நடந்த தேர்தலில் அவருடைய கட்சி வலுத்தது. ஆகவே, நான்காவது முறை அவர் பிரதம மந்திரியானார். அந்த அரிய கௌரவம் வேறு எவருக்கும் கிடைத்ததில்லை. மூன்று வருஷ காலம் அவர் துரைத்தன நிர்வாகம் நடத்தினார். உடனே, அவர் அயரிஷ் சுயராஜ்ய மசோதா ஒன்றைச் சபாரித்து பார்லிமெண்டில் பிரேரணை செய்தார். முன்பு பிரேரணை செய்த மசோதாவிற்கும், இதற்கும் சில விஷயங்களில் வேற்றுமை இருந்தது. புதிய மசோதாவின்படி அயரிஷ் பார்லிமெண்டில் இரண்டு சபைகள் ஏற்படுத்தப்படவிருந்தன. மேலும் பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கும் அயரிஷ்காரர் பிரதிநிதிகளை அனுப்பலாம் என்ற ஏற்பாடும் செய்யப்பட்டிருந்தது. காமன்ஸ் சபையில் க்ளாட்ஸ்டனுக்கு ஏற்பட்டிருந்த ஆதரவினால், அந்த மசோதா நிறைவேறிப் போயிற்று. ஆனால் லார்ட்ஸ் சபையார் அதை நிராகரித்துவிட்டனர். அவ்வாறு, ஜனப் பிரதிநிதிகளடங்கிய சபையில் நிறைவேறிய ஒரு முக்கியமான தீர்மானத்தை, பிரபுக்கள் கூடிய லார்ட்ஸ் சபையார் நிராகரித்தது தகாத செய்கையென்று சிலர் கூக்குரலிட்டனர். அந்தக் கொள்கை, பொதுவாக நோக்குமிடத்து உண்மையானதேயானாலும், அயரிஷ் சுயராஜ்ய மசோதா விஷயத்தில் பொதுஜனங்களிற் பெரும்பாலோர் க்ளாட்ஸ்டனை ஆதரிக்கவில்லை. ஆகவே, லார்ட்ஸ் சபையார் செய்த காரியம் பலருக்குத் திருப்திகரமாயிருந்தது. தங்களுக்கு அடங்கியிருந்த நாடுகளுக்கு சுயாதீனமளிப்பதை, பிரிட்டிஷ்காரர்கள் சாத்தியமானவரையில் நிறுத்தி வைப்பார்கள் என்

பது எல்லோருக்கும் தெரிந்தவிஷயம். எனவே, க்ளாட்ஸ்டன் எல்லோராலும் போற்றப்பட்ட பிரமுகராயிருந்தும், அவர் மனப்பூர்வமாக அயர்லன்டுக்கு சுயாதீனமளிக்க முயற்சித்தது வீணாயிற்று.

1894-ல் க்ளாட்ஸ்டன் வயோதிகத் தளர்ச்சி காரணமாகவும், தமது மனதிற்குகந்த முயற்சி பலியாமற்போனதாலும், மந்திரி சபையைக் கலைத்துவிட்டு விலகி 1898-ல் இறந்து போனார். பார்லிமென்ட் அங்கத்தினர்களுக்குள், அவருக்கு நிகரான திறமைசாலி எவருமேயில்லை. லிபரல் கட்சிக்கு அவரே அறிவுச் சுடர்போல விளங்கினார். நான்கு தடவைகளில் அவர் பிரதமமந்திரியான தொன்றே அவருடைய அரிய மேம்பாட்டை விளக்கும்.

அவருக்குப் பிறகு ரோஸ்பரி பிரபு (Lord Rosebery) பிரதம மந்திரியானார். அவரும் லிபரல் கட்சியைச் சேர்ந்தவர். பண சம்பந்தமான சில சீர்திருத்தங்களை அவருடைய பொக்கிஷ மந்திரி செய்துவைத்தார். ஆனால் அவரது மந்திரிசபை ஒரு வருஷ காலமே நிலைத்திருந்தது.

1895-ல் ஸாலிஸ்பரி பிரபு மூன்றாவது தடவை பிரதம மந்திரியானார். கன்ஸர்வேடிவ், லிபரல் யூனியனிஸ்ட் ஆகிய இருகட்சிகளும் படிப்படியாக ஒன்றுபட்டுக்கொண்டு வந்தன. ஸாலிஸ்பரிக்கு பார்லிமென்டில் நல்ல பலமிருந்தது. மேலும், லிபரல் கட்சியில் அப்பொழுது ஒற்றுமை இல்லாதிருந்தது. ஆதலால் ஸாலிஸ்பரி ஏறக்குறைய ஆறுவருஷகாலம் பிரதம மந்திரியாயிருக்க முடிந்தது.

அப்பொழுதும் அன்னியநாட்டு வியவகாரங்களை கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கீழ்த்திசை வியவகாரம் மீண்டும் குழப்பமடைந்தது. துருக்கியர்கள் ஆர்மீனியா (Armenia) என்ற பிரதேசத்தில் மகா கொடிய அட்டூழியங்களைச் செய்து வந்தனர். படுகொலைகள் கணக்கு வழக்கின்றி நடந்தன. இங்கிலீஷ் மக்கள் துருக்கியுடன் போர்புரியும்படி ஷி துரைத்தனத்தாரைத் தூண்டினர். ஆனால், மற்ற அரசுகளுடைய உதவியின்றி பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் தனியாக எதையும் செய்யக்கூட

வில்லை. மேலும், அதே சமயத்தில் ரஷ்யர்கள் தமது பழைய கொள்கையை மாற்றித் துருக்கியுடன் அதிக நட்பாயிருந்தனர். அதே சமயத்தில் துருக்கிக்குட்பட்ட க்ரீட் (Crete) என்ற தீவில் இருந்த கிரேக்கர்கள், துருக்கி சுல்தானுக்கு விரோதமாகக் கிளம்பினர். கிரீஸ் துரைத்தனத்தார் அவர்களுக்கு உதவிசெய்யச் சென்றனர். 1897-ல் சுல்தான் கிரீஸ் சேனையைத் தோற்கடித் தார். ஆனால் ஐரோப்பிய அரசுகள் ஒன்றுசேர்ந்து துருக்கியை வற்புறுத்தி க்ரீட் தீவுக்கு சுயாதீனம் வழங்கும்படி செய்தனர்.

ஈஜிப்ட் தேசத்தை பிரிட்டிஷ்காரர் ஆக்கிரமித்துக் கொண் டது ப்ரெஞ்சுக்காரருக்கு சம்மதப்படவில்லை. ஈஜிப்ட்டில் இங்கி லீஷ்காரர் அமைதியை நிலை நிறுத்திய பின்னர் தெற்கேயிருந்த ஸூடான் பிரதேசத்தையும் ஜயிக்க நிச்சயித்தனர். லார்ட் கிச் சனர் (Lord Kitchener) என்ற சேனைத் தலைவர் ஓம்டர்மான் (Omdurman) என்ற இடத்தில் யுத்தம் நடாத்தி வெற்றியடைந்து ஸூடான் பிரதேசத்தைக் கைப்பற்றினர்.

ஸூடான் பிரதேசமும் பிரிட்டிஷாரது வசமானதைக் கண்ட ப்ரெஞ்சுக்காரருக்கு ஆத்திரம் அதிகமாயிற்று. அதனால் இரண்டு தேசங்களுக்கும் போர்விளைவதுகூட சாத்தியமென ஒரு சமயம் தோன்றியது. ஆனால் கடைசியில் நைல் நதிப் பிரதேசம் இங்கி லீஷ்காரருக்கே சொந்தமானதென ஒப்புக்கொள்ளப்பட்டது.

1894-95-ல் ஆசியாவில் சீனு, ஜப்பான் ஆகிய இரண்டு தேசங் களுக்குள்ளும் போர் நடந்துகொண்டிருந்தது. ஜப்பான் மேனுட்டு முறைகளை அநுஷ்டித்து, நாகரிக முதிர்ச்சியும் பலப்பெருக்கும் அடைந்திருந்தமையால், சுலபத்தில் வெற்றியடைந்து விட்டது. சீனதேசத்தைக் கொள்ளையிட ஐரோப்பிய அரசுகள் முயன்று, தங்களுக்கு சௌகரியமாக அங்கு பல வியாபார ஸ்தலங்களை ஏற் படுத்திக்கொண்டு நிரம்பவும் இலாபம் அடைந்தன.

1897-ல், விக்டோரியாவினது ஆட்சி தொடங்கி அறுபதாவது ஆண்டு பூர்த்தியானது பற்றி ஜூபிளிக்கொண்டாட்டம் நடை பெற்றது. 1901-ம் வருஷம் ஜனவரி மாதம் விக்டோரியா இறந்து போனுள். அவளுடைய ஆட்சியே இங்கிலண்டு தேச சரித்திரத்

தில் அதிகமாய் நீடித்திருந்தது. மேலும் இங்கிலண்டின் நிர்வாகத்திலும், அவளுடைய ஆட்சியில் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தின் பெருக்கிலும் முக்கியமான பல அபிவிருத்திகள் உண்டாயின. இங்கிலீஷ் மக்கள் விக்டோரியாவிடம் அளவற்ற பிரேமை கொண்டிருந்தனர். அவள் வயது சென்றே இறந்தாலும், அது எல்லோருக்கும் அதிக விசனத்தை உண்டாக்கியது.

(7) இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி நிலைப்பது:—16-வது நூற்றாண்டுமுதல் இங்கிலீஷ் வர்த்தகர்கள் இந்தியாவில் வியாபாரம் செய்யத் தொடங்கி, சிற்றரசர்களுடைய சண்டைகளில் கலந்துகொண்டு, முடிவில் தாங்களே நாட்டைக் கைப்பற்றிய விவரங்களை முன்பு சுருக்கமாகக் குறித்தோம். இந்தியாவில் தமக்குக் கிடைத்த ஆட்சியை செவ்வையாக நடத்தும்பொருட்டு பிட், இந்தியச் சட்டம் ஒன்றை நிறைவேற்றி நிர்வாக சபையொன்றை நியமித்ததையும் குறிப்பிட்டோம். 19-வது நூற்றாண்டில் இந்தியாவின் பெரும்பாகமும் இங்கிலண்டின் வசப்பட்டு விட்டமையால், அந்த விருத்தாந்தத்தை சுருக்கமாகக் கூறுவோம். 18-வது நூற்றாண்டில், அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் பிரிட்டிஷ் ஆட்சியை விட்டு மீறி சுயாதீனம் அடைந்தமையால், இங்கிலண்டுக்கு நேர்ந்த பெரிய நஷ்டம், கிழக்கே இந்தியா கிடைத்ததனால் ஈடுபட்டுப்போயிற்று. ப்ரான்ஸ் அமெரிக்காவில் தோற்று ஓடியதுபோலவே இந்தியாவிலும் தோற்று ஓடியது. இங்கிலண்டுக்குக் கடலின் ஆதிபத்யம் இருந்ததனாலே, நெப்போலியன்கூட இந்தியாவில் தமது அதிகாரத்தை நிலைநாட்டுதல் கூடாததாயிற்று. 19-வது நூற்றாண்டில் இங்கிலண்டில் பார்லிமெண்டின் சீர்திருத்தம் முதலான வியவகாரங்கள் ஜனங்களுடைய கவனத்தைக் கவர்ந்து கொண்டிருந்த சமயத்தில், தொலைதூரத்தில் உள்ள இந்தியாவிலும், மற்ற தேசங்களிலும் இங்கிலீஷ்காரர்கள் அரசியல் உரிமையை சம்பாதித்துக் கொண்டிருந்தனர்.

க்ளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ், வெல்லெஸ்லி முதலியோர்கள் இந்தியாவின் பெரும்பாகத்தை வென்று வசப்படுத்தினர். வங்காளம், பம்பாய் சென்னை இராஜதானிகளில் பிரிட்டிஷ்

ஆட்சி நிலைத்திருந்தது. சுதேச அரசர்களிற் பலர் பிரிட்டிஷாருடைய மேல்பார்வையில் இருந்து வந்தனர். லார்ட் வில்லியம் பெண்டிங் என்பவர் 1828-முதல் 1835-வரையில் கவர்னர் ஜெனரலாயிருந்து பொதுஜன நன்மைகள் பலவற்றைச் செய்தார். 1848-56-ல் டல்ஹௌஸி (Dalhousee) என்பவர் ஏறக்குறைய இந்தியா முழுதையும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்படுத்தினர். அவருக்குப் பிறகு லார்ட் கானிங் என்பவர் கவர்னர் ஜெனரலானர். அவரது காலத்தில் சிப்பாய்களது கலகம் என்று மேனாட்டுச் சரித்திராசிரியர்களால் குறிக்கப்படும் சுதந்திரப்போர் நடந்தது. பிரிட்டிஷ்காரர் இராஜ்ஜியத்தைப் பெருக்குவதில் கிரமத்தவறான காரியங்களைச் செய்து வந்தமையாலும், அவர்களால் தோற்கடிக்கப்பட்ட சிற்றரசர்களுடைய தூண்டுதலாலும், தம்முடைய சமயக்கொள்கைக்கும், ஆசாரத்திற்கும் பிரிட்டிஷ்காரர் தீங்கிழைப்பர் என்று ஹிந்து முஸ்லீம் குடிமக்கள் நம்பியிருந்ததாலும், சுதேச சிப்பாய்கள் கலகம்செய்து, கவர்னர் ஜெனரலைக் கலக்கிவிட்டனர். மீரட் நகரத்தில் கலகம் ஆரம்பித்து, அதிக சீக்கிரத்தில் வடஇந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் பரவிவிட்டது. டெல்லியில் மகம்மதியர்கள் மொகலாய ஆட்சியை மீண்டும் ஸ்தாபிக்க எண்ணங்கொண்டனர். ஹிந்துஸ்தானம் முழுதிலும் கலகம் காட்டுதீபோல பரவிவிட்டது. ஆனால் சென்னை, பம்பாய் ஆகிய இடங்களிலிருந்த சுதேசிகள் பிரிட்டிஷ் ஆட்சியை ஆதரிக்க முனைந்தனரேயன்றி கலகக்காரருடன் சேரவில்லை. சில சுதேச அரசர்களும் தமக்கிருந்த அற்ப அதிகாரத்தையேனும் காப்பாற்றிக் கொள்ளும் நோக்கத்துடன், பிரிட்டிஷாருக்கு விரோதமாகக் கிளர்ச்சிசெய்ய அச்சம்கொண்டுவாளா இருந்துவிட்டனர். சீக்கியர்களும் அவ்விதமே உதவிபுரிந்தனர். 1858-ல் கலகக்காரர்கள் தோல்வியடைய, அவர்கள் நிரம்பவும் குரூரமாக தண்டிக்கப்பட்டனர். பிரிட்டிஷ் ஆட்சி பலமாக அசைக்கப்பட்டுப்போய் மறுபடி தலையெடுத்தது.

1857-ல் நடந்த கலகத்துடன் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி முடிவடைந்தது. 1757-ல் ப்ளாஸி யுத்தத்தில் க்ளைவ் வெற்றி பெற்றதுமுதல், சரியாக ஒரு நூற்றாண்டுகாலம் கம்பெனியாரே ஆட்சிபுரிந்து வந்தனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அவர்

களுடைய செய்கைகளை மேல்பார்வை பார்த்து வந்தனர். ஆனால் ஷி கலகம் நடந்தபிறகு, இவ்வளவு பெரிய இராஜ்ஜியத்தை ஒரு கம்பெனியாரிடம் விட்டுவைப்பது அபாயகரமானதென்று கண்டு, 1858-ல் இந்தியாவின் அரசாட்சியை விக்டோரியா மகாராணியே ஏற்றுக் கொண்டாள். கிழக்கிந்தியக் கம்பெனியார் தமக்குக் கிடைத்துவந்த இலாபத்தை விட்டுவிட எளிதில் சம்மதிக்க வில்லை. ஆனாலும் அவர்களுடைய எண்ணம் நிறைவேறாமல் போயிற்று. கா/2பினட் மந்திரிசபையார் இந்திய நிர்வாகத்தை கவனிக்க ஒரு காரியதரிசியையும் அவருக்கு உதவியாக ஒரு சபையையும் நியமித்தனர். இந்தியாவில் வைஸ்ராய் என்ற இராஜப்பிரதிநிதி நிர்வாக அதிகாரியானார், 1877-ல் விக்டோரியா இராணி இந்தியாவின் சக்கரவர்த்தினி என்ற பட்டத்தையும் வகித்துக் கொண்டாள்.

(8) ஃபிரிட்டிஷ் ஏக சக்கராதியத்தியம்:—இந்தியாவில் ஃபிரிட்டிஷ் ஆட்சி நிலைத்ததைப் போலவே, உலகத்தின் வேறு பல பாகங்களிலும் இங்கிலீஷ்காரர் தமது ஆட்சியை ஸ்தாபித்தனர். உலகத்தின் எல்லா பாகங்களிலும் அவர்களுடைய ஆட்சிக்குட்பட்ட நாடுகள் இருப்பதுபற்றி ஃபிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தில் சூரியன் அஸ்தமிப்பதேயில்லை என்று பெருமையாகக் குறிக்கிறார்கள். 18-வது நூற்றாண்டில் அமெரிக்கர்கள் சுயாதீனத்தை ஸ்தாபித்துக்கொண்டபின், ஃபிரிட்டிஷாருக்குட்பட்ட குடியேற்ற நாடுகள் சொற்பமாகவே இருந்தன. மேற்கிந்தியத் தீவுகளும் (West Indies) கா/2னடா மாகாணமும் அதற்குட்பட்டிருந்தன. ஆனால் மேற்கிந்தியத் தீவுகள் அமிதமான உஷ்ணதேசமாதலால், இங்கிலீஷ்காரர்கள் வசிப்பதற்கு அவை தகுதியற்றவையாயிருந்தன. கா/2னடாவில் ப்2ரெஞ்சுக்காரர்களே அதிகமாயிருந்தனர். ஆனாலும் சிறுகச்சிறுக அவ்விரண்டு பிரதேசங்களும் ஜனத்தொகையிலும் தனப்பெருக்கிலும் முன்னேற்றமடைந்துவந்தன. வேறு சில தைரியசாலிகள் தெற்கேயுள்ள ஆஸ்ட்ரேலியா கண்டத்திற்குச் சென்று குடியேறினர். கா/2ப்டன் கூக் (Captain Cook) என்பவர் அந்தக் கண்டத்தைக் கண்டுபிடித்து அதில் பிரயாணமும் செய்திருந்தார்.

18-வது நூற்றாண்டின் கடைசியிலும் 19-வது நூற்றாண்டின் தொடக்கத்திலும் நடந்த யுத்தங்களுக்குப்பின் இங்கிலண்டுக்கு சில பிரதேசங்கள் கிடைத்தன. இலங்கைத் தீவு, ஆப்2ரிக்காவின் தெற்கு ஓரம், ஹயானா முதலிய இடங்கள் அதற்குச் சொந்தமாயின. ஆனால் உஷ்ணமான பிரதேசங்கள் இங்கிலீஷ் முதலாளிகள் சுகமாக வாழ்ந்து வியாபாரத்தைப் பெருக்கத்தக்கவையாக இல்லை. மேலும், அடிமை வியாபாரமும், அடிமைகொள்ளும் வழக்கமும் சட்டவிரோத மானவையென்று நிர்ணயிக்கப்பட்டது வெள்ளைக்காரர்களுக்குத் துன்பகரமாக முடிந்தது. எனவே, மேற்கிந்தியத் தீவுகளில் அடிமை களின் உதவியைக்கொண்டு வியவசாயம், வியாபாரம்முதலியவற்றை நடாத்திக் கொழுத்திருந்த வெள்ளைக்காரர்கள் தளர்ந்துபோயினர். ஆனால் மிதமான சீதோஷ்ணமண்டலத்தில் இருந்த நாடுகளில் வெள்ளைக்காரர்கள் குடியேறி அபிவிருத்தியடைந்தனர்.

ஸிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தில் உள்ள முக்கியமான குடி யேற்ற நாடுகள் கா/2னடா, தென்னாப்2ரிக்கா, ஆகிய மூன்றே.

கா/2னடா முதலில் ப்2ரெஞ்சுக்காரருக்குச் சொந்தமாயிருந்து, பிறகு இங்கிலீஷ்காரருடைய வசமானதென்பதை முன்பே குறித் தோம். ஆனால், அதில் குடியிருந்த இங்கிலீஷ்காரருக்கும் ப்2ரெஞ் சுக்காரருக்கும் நெடுங்காலம் வரையில் அன்னியோன்னிய உணர்ச்சி ஏற்படாமலேயே இருந்தது. ஆனால் நாளடைவில் கா/2னடாவுக்கு சுயாதீனம் அளிக்கப்பட்டது. முன்பு அமெரிக்கக் குடியேற்ற நாடு கள் தாய்நாட்டின் கொடுமையைப் பொறாது போர்புரிந்து சுயாதீன மடைந்தபின் ஸிரிட்டிஷ் துரைத்தனத்தாருக்கு விவேகம் உதய மாயிற்று. அதாவது, குடியேற்றநாடுகள் அபிவிருத்தியடைந்து தம்மைத்தாமே பாதுகாத்துக்கொள்ளும் திறமையடைந்த பின்னும், அவைகளின்மீது சுயேச்சாதிகாரம் வகிப்பது அபாயகரமென்பதும், அவைகளுக்கு சுயாதீனமளித்தால் மாத்திரம் அவைகளை ஸிரிட் டிஷ் சாம்ராஜ்ஜியத்தின் பாகங்களாக மதிக்கலாமென்பதும், இல்லை யாகில் அமெரிக்காவை இழந்ததுபோல, மற்ற பிரதேசங்களையும் இழக்கவேண்டியதாகுமென்பதும் அவர்களுக்கு விளங்கின. கா/2 னடா மாகாணத்தை இராஜப்பிரதிநிதியான ஒரு ஹவர்னர் ஜெனரல்

ஆண்டுவருவார். இங்கிலண்டில் உள்ள பார்லிமென்டைப்போலவே அங்கும் ஒரு சபை உண்டு. பார்லிமென்டுக்குப் பொறுப்புள்ள மந்திரிகள் நிர்வாகத்தை நடத்திவருகிறார்கள். அமெரிக்க ஐக்கிய அரசைப்போலவே, கானடாவும் ஓர் ஐக்கிய அரசு. 19-வது நூற்றாண்டில் கானடா பல துறைகளிலும் அபிவிருத்தியடைந்து, இப்பொழுது ஸிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திற் குட்பட்டிருந்த போதிலும், பூர்த்தியான சுயாதீனமடைந்த நாடுகளைப்போலவே இருந்து வருகிறது. கானடாவைப்போலவே ஆஸ்ட்ரேலியாவும் முக்கிய நிலைமை அடைந்திருக்கிறது. ஆனால் அந்த தேசம் கண்டு பிடிக்கப்பட்டு சில வருஷங்கள் வரையில்,—அது வெகு தூரத்தில் இருந்ததுபற்றி தண்டனையடைந்த குற்றவாளிகளையே அவ்விடத்திற்கு அனுப்பிவந்தனர். அந்தக் கண்டத்தில் விசாலமான மேய்ச்சல் தரைகள் இருந்ததாலும், தங்கச் சுரங்கங்கள் இருந்ததாலும், சீக்கிரத்தில் பலர் குடியேற, 1901-ல் ஆஸ்ட்ரேலியா முழுதும் ஐக்கியமடைந்து கானடாவைப்போலவே பார்லிமென்ட் முதலிய இராஜீய ஸ்தாபனங்களையும் பெற்றது.

தென்னாப்ரிக்காவின் நிலைமை சற்று மாறுபட்டிருந்தது. அங்கு டச்சுக்காரரும் இங்கிலீஷ்காரரும் அதிகமாய்க் குடியேறி இருந்தனராலும், சுதேசிகளும் ஏராளமாக இருந்தனர். அங்குகுடியேறிய டச்சுக்காரர்கள் வோயர்கள் (Boers) என்று குறிக்கப்படுகின்றனர். இங்கிலீஷ்காரருக்கும் வோயர்களுக்கும் அன்னியோன்னியத்தன்மை ஏற்படாமல், மனஸ்தாபமே அதிகமாயிருந்தது. நட்டால் (Natal) என்ற மாகாணத்தில் வோயர்கள் குடியேற, அங்கும் இங்கிலீஷ்காரர் சென்று வியாபித்தனர்.

ட்ரான்ஸ்வால் (Transval) என்ற மாகாணத்தில் தங்கச் சுரங்கங்கள் காணப்பட்டதுபற்றி, அங்கு பலர் சென்று குடியேறினர். அது, பழைய குடிகளான வோயர்களுக்குத் துன்பகரமாக விருந்தது. மேலும் தென்னாப்ரிக்காவில் பிரக்கியாதி பெற்ற ஸெஸில் ரோட்ஸ் (Cecil Rhodes) என்ற சீமான் பெரிய தனவந்தராகி ஆப்ரிக்காவின் தெற்கு ஓரத்திலுள்ள கேப் காலனி (Cape Colny) யின் பிரதம மந்திரியாயிருந்

தார். அவர் ட்ரான்ஸ்வால் பிரதேசத்திற்கு வடக்கே ரோடீஷியா (Rhodesia) என்ற தமது பெயர்கொண்ட ஒரு பிரதேசத்தில் இங்கிலீஷ்காரர்கள் குடியேறுமாறு செய்தார். அதிலிருந்து போயர்களுக்கு வெறுப்பு அதிகரித்தது. அதுவன்றி, 1895-ல் டாக்டர் ஜேம்ஸன் (Dr. Jameson) என்பவர் ட்ரான்ஸ்வால் பிரதேசத்தில் இராணுவ முஸ்தீபுடன் வந்து சேர்ந்தார். ஆனால், போயர்கள் அவரைத் தோற்கடித்துவிட்டனர். ஜேம்ஸன் செய்த காரியம் தென்னுப்பிரிக்காவில் இருந்த இங்கிலீஷ்காரருக்கே அனர்த்தமாக முடிந்தது. பால் க்ரூகர் என்ற போயர் தலைவர், ஜாதியாருடைய சுயாதீனத்திற்காகப் போராட முனைந்தார். மேலும், ஜேம்ஸன் காரணமின்றிப் படையெடுத்துச் சென்றதை எல்லா அரசுகளும் கண்டித்தன.

1895 முதல் 1899 வரையில் போயருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் ஏற்பட்டிருந்த பகைமை புகைந்துகொண்டே யிருந்தது. 1899-ல் போயர்கள் யுத்தத்திற்குத் தயாராயிருந்தனர். போயர் யுத்தம் ஏறக்குறைய மூன்று வருஷகாலம் நடைபெற்றது.

ஒவ்வொரு போயர் பிரஜையும் யுத்தத்திற்குப் பழக்கப் பெற்றிருந்தமையால், முதலில், அவர்களே வெற்றிபெற்றனர். இங்கிலீஷ் சேனைகள் அவர்களுடைய யுத்த மர்மங்களை அறியாமல் தோல்வியடைந்து வந்தனர். 1900-ல் லார்ட் ராபர்ட்ஸ், லார்ட் கிச்சனர் ஆகிய இரண்டு சேனைத்தலைவர்கள் பெரிய படைகளுடன் சென்று போயர்களது முக்கிய ஸ்தலங்களைப் பிடித்துக் கொண்டனர். ஆனாலும், இரண்டு வருஷ காலம் போயர்கள் அடங்காமல் சிறிய படைகளுடன் அங்குமிங்குமாகத் தோன்றி இடுக்கண் புரிந்துவந்தனர். விக்டோரியா இறந்த காலத்திலும் அந்த யுத்தம் முடியாமலேயே இருந்தது. ஏழாவது எட்வர்ட் அரசர் பட்டத்திற்கு வந்தபின் 1902-ல் போயர்கள் கீழ்ப்படிந்து போயினர். பிறகு தென்னுப்பிரிக்கா முழுதும் பிரிட்டிஷாரின் வசமாயிற்று.

நீடித்து நடந்த யுத்தத்தினால் தென்னுப்பிரிக்காவின் வளம் மிகவும் கெட்டுப் போயிருந்ததானாலும், சில வருஷ காலத்தில்

பழைய நிலைமை திரும்பியது. சமாதானம் ஏற்பட்டபிறகு, டச்சுக்காரரும் இங்கிலீஷ்காரரும் ஒன்றாக வாழ்ந்து அன்னியோன்னியத் தன்மையடைந்து ஒத்துப் போயினர். முதலில் ட்ரான்ஸ்வால் முதலிய மாகாணங்களுக்குத் தனித்தனியாக சுய ஆட்சி அளிக்கப்பட்டது. ஆனால் கா/2னடா, ஆஸ்ட்ரேலியா முதலிய நாடுகளில் பல மாகாணங்களை ஒன்றுபடுத்தி ஐக்கிய அரசாக்கியது போலவே நட்டால், ட்ரான்ஸ்வால், கேப் காலனி, ஆரஞ்சு நதிப் பிரதேசம் ஆகிய மாகாணங்களை ஒன்றுபடுத்தி 1909-ல் ஒரு சட்டத்தால் ஐக்கிய அரசாகச்செய்து, பார்லிமென்ட் முதலிய ஸ்தாபனங்களையும் உற்பத்தி செய்தனர்.

இவ்வாறு உலகத்திலுள்ள எல்லாக் கண்டங்களிலும் பிரிட்டனுக்கு நாடுகள் கிடைத்தது அபாரமான அதிர்ஷ்டத்தினாலேயே என்று கூறலாம். இதற்குமுன் உலகத்தில், இவ்வளவு பிரம்மாண்டமான ஏகசக்ராதிபத்தியம் இருந்ததே இல்லை. சுபாதீனம் பெற்ற பற்பல நாடுகள் ஓர் அரசருக்குட்பட்டிருப்பதனால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நீடித்திருக்கிறது. குடியேற்ற நாடுகளுக்கு அவர்களுடைய சொந்த வியவகாரங்களில் பூர்ணமான சுயாதீனம் அளித்திருப்பதனாலேயே, பிரிட்டனுடன் அவர்கள் சேர்ந்திருக்கின்றனர். ஆனால் இந்தியா மாத்திரம் அவ்வித அந்தஸ்தை இன்னும் அடையவில்லை.

**(9) 19-வது நூற்றண்டில் இங்கிலண்டின் பொதுநிலைமை:-** 19-வது நூற்றுண்டின பெரும்பாகமும் இங்கிலண்டில் அரசியாயிருந்த விக்டோரியாவின் ஆட்சியில் அந்த தேசம் பல துறைகளிலும் மாறுதலடைந்தது. நமது காலமான இந்த 20-ம் நூற்றுண்டில் அந்த நாடு அடைந்துள்ள நிலைமைக்குக் காரணமான விஷயங்கள் அப்பொழுதே நிறைவேறின. ஆதலால் அரசியல், சமூகம், பொருளாதாரம், கல்வி முதலான துறைகளில் 19-ம் நூற்றுண்டில் ஏற்பட்ட அபிவிருத்திகளைச் சுருக்கமாக வேனும் நாம் குறிப்பிடுவது அவசியம்.

முதன் முதலாக, துரைத்தனத்தாருடைய கடமைகள் அநேக மடங்கு பெருகிப்போயின. ஒரு குமாரன் தந்தையின் ஸ்தானத்தையடைந்து, குடும்ப நிர்வாகத்தை ஏற்கும்பொழுது, அவனுடைய

கடமைகள் பெருகுவதைப் போல, சமூகத்திற்கு துரைத்தனத் தார் பெற்றோரைப் போல ஆய்விட்டனர். மூன்றாவது ஜார்ஜின் காலத்திற்குப் பின் மந்திரிகளிடமே சகலமான அதிகாரமும் போய் அடங்கிவிட்டதென்பது முன்னரே கூறப்பட்ட விஷயம். பழைய காலங்களில் மந்திரிகள் அரசனுக்கு யோசனைகள் கூறி, அவனு டைய வேலைக்காரர் போலிருந்தது போக, மந்திரிகள் பொது ஜனங்களுக்கு உத்தரவாத முள்ளவராயினர். மேலும் பார்லிமென்ட் சீர்திருத்தச் சட்டங்களின் பயனாக, ஜனநாயக தத்துவம் அதிக மாய்ப் பரவிவிட்டது. ஜனப் பிரதிநிதிகளடங்கிய காமன்ஸ் சபையில் அங்கத்தினராயிருப்பவர்களில் பெரும்பாலோரது கட்சியி லிருந்தே மந்திரிகள் நியமிக்கப்பட்டனர். காமன்ஸ் சபையின் ஆதரவை இழந்தால் மந்திரிகள் விலகிக்கொள்ள வேண்டும். உடனே வேறு மந்திரிகள் நியமிக்கப்படுவார்கள். இவ்வாறு அடிக் கடி மந்திரிசபைகள் கலையவேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டதை விக்டோரியாவின் ஆட்சியில் கண்டோம். அவ்விதம் தோன்றி மறையும் மந்திரிகளிடம் துரைத்தன நிர்வாகத்தை ஒப்புவிப்பது அபாயகரமானதென்று சிலர் நினைத்தனர். ஏனெனில், துரைத்தன நிர்வாகம் நடத்துவதற்கு நெடுநாளைய அநுபவம் அவசியமானது. ஆனாலும் சரித்திரவாயிலாக நோக்குமிடத்து, பிரிட்டிஷ் மந்திரிகள் அடிக்கடி மாறிக்கொண்டிருந்தாலும், துரைத்தன நிர்வாகம் திறமை யாகவே நடந்து வந்திருக்கின்றதென்பது விளங்கும். அந்த அதிகாரம் அரசரிடத்திலிருந்து பார்லிமென்டினிடம் போய்ச் சேர்ந்ததனால், அது சீர்குலைந்து போய்விடவில்லை. மேலும், 19-ம் நூற்றாண்டில் துரைத்தனத்தார் பல சமூக வியவகாரங்களில் தலையிட்டுக்கொண்டு, சமூக நலத்தை எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தி செய்தனர். முன்பு முதலாளிகள் தொழிலாளரை வருத்தினால், அவ்விஷயத்தில் தாம் தலையிடுவது நியாயமல்லவென அரசாங்கத்தார் எண்ணி அசட் டையாயிருந்தனர். ஆனால் 19-ம் நூற்றாண்டில் அந்தக் கொள்கை மாறிப்போயிற்று. வியாபாரம், கைத்தொழில் முதலிய துறைகளில் சம்பந்தப்பட்டவர்கள், தம்தம் இச்சைப்படி நடந்து கொண்டமை யால் சுயநல நாட்டமே அதிகப்பட, பலருக்கு இடர் விளைந்தது. நாட்டின் க்ஷேமத்தைக் காப்பாற்றுவது அரசாங்கத்தாரது கடமை

யென்பது பிற்காலத்திலேதான் விளங்கியது. எனவே தொழிலாளருக்கு சுகவசதிகள், ஆரோக்கிய சாதனங்கள், அபாயத்தையகற்றும் பாதுகாப்புகள், ஜீவனத்திற்குப் போதிய ஊதியம் முதலியவைகளை அளிக்கவேண்டியது முதலாளியின் கடமையென்று துரைத்தனத்தார் வற்புறுத்தினர். அவ்விதமே, குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வி, சுகாதார வசதிகள், வாழ்க்கைக்கு இன்றியமையாத பல சாதனங்கள் முதலியவைகளிலும் அரசாங்கத்தார் அக்கறை காட்டினர். மேலே குறிக்கப்பட்டபடி துரைத்தன காரியம் அதிகமாய்ப் பெருகியவுடன், அதற்கேற்றபடி நிர்வாக இலாகாவும் அபிவிருத்தியடைய, புதிய இலாகாக்களும் உத்தியோகங்களும் உண்டாக்கப்பட்டன. குடியேற்ற நாடுகள், இந்தியா, உள்நாட்டுப் பரிபாலனம், அன்னிய நாட்டு சம்பந்தம், வர்த்தக இலாகா, ஸ்தல ஸ்தாபன இலாகா கல்வி இலாகா—ஆகிய ஒவ்வொன்றிற்கும் தனித்தனியான உத்தியோகசாலைகளும் உத்தியோகங்களும் அவசியமாயின. காபினெட் சபையில் ஏறக்குறைய இருபது மந்திரிகளுக்கு வேலை ஏற்பட்டது. ஆனால் புதிதாகப் பதவிக்கு வரும் மந்திரிகளால் இராஜ்ஜிய நிர்வாகத்தை நடத்த இயலாதாகையால், அவர்கள் மேல்போக்கான விஷயங்களை மாத்திரம் கவனித்து வரவும், தினசரி நிர்வாக காரியத்தை நடத்த நிரந்தரமான அதிகாரிகள், குமாஸ்தாக்கள் முதலியவர்களை நியமிப்பதற்கும் ஏற்பாடாயிற்று. பார்லிமெண்டிலும் நாட்டிலும் கீர்த்தியடைந்த பிரமுகர்கள் மந்திரிகள் ஆனாலும், நிரந்தரமான உத்தியோகஸ்தர்களின் உதவி இல்லாவிடில், அவர்களுக்கு உள் விவரங்கள் விளங்குவது கடினமாயிருக்கும். அதுபற்றி ஏற்படுத்தப்பட்ட நிரந்தரமான உத்தியோகஸ்தர்களுக்கு ஸிவில் ஸர்விஸ் (Civil service) வர்க்கத்தார் என்பது பெயர். எந்தக் கட்சியார் மந்திரி பதவிகளை வகித்தாலும் ஸிவில் ஸர்விஸ் அதிகாரிகளுடைய உதவியை நாடியேயாக வேண்டும். போட்டிப் பரீட்சைகள் வைத்து, அதிகத் திறமையுள்ள அபேட்சகர்களைப் பொறுக்கி, அவர்களுக்கே ஸிவில் ஸர்விஸ் உத்தியோகம் வழங்கப்படுகிறது.

மத்திய அரசாங்கத்தின் அபிவிருத்திக்கேற்ப, ஸ்தலஸ்தாபன இலாகாவும் பெருகிப் போயிற்று. பார்லிமெண்டின் சீர்திருத்தங்

கள் ஏற்பட்டுவந்தது போலவே, இங்கிலண்டில் முனிஸிபாலிடிகளும் கார்ப்பொரேஷன்களும் தோன்றின. அதாவது தேசம் மொத்தத்திற்கும்சம்பந்தப்பட்டவிஷயங்களைப் பார்லிமென்ட் சபையார் கவனித்து வந்ததைப் போலவே, ஒவ்வொரு பட்டணத்தின் நிர்வாகத்தை ஜனப் பிரதிநிதிகளடங்கிய நகர சபை கவனித்து வந்தது. நகர சுகாதாரம், தெருக்களுக்கு விளக்கு வைத்தல், தண்ணீர் வசதி, ரஸ்தாக்கள், போக்குவரத்து சௌகரியங்கள், கல்வி முதலான விஷயங்களை முனிஸிபாலிடிகளும் கார்ப்பொரேஷன்களும் நிர்வகித்து வந்தன.

18-வது நூற்றாண்டில் இங்கிலீஷ்காரர் பல யுத்தங்களில் வெற்றியடைந்தனராலும், இங்கிலீஷ் சேனை அதிகதிறமையானதென்று மதித்தல் கூடாது. வாட்டர்லூ யுத்தத்திற்குப் பிறகு சமாதானம் நிலைத்திருந்த காலததிலும் சேனையின் நிலைமையில் அதிகமான அபிவிருத்தி ஏற்படவில்லை. க்ரிமியின் யுத்தத்தில் இங்கிலீஷ் வீரர்கள் அடைந்த துன்பத்தினால், ஜனத்தாருக்கு அவ்விஷயத்தில் அக்கரை பிறந்தது. பிறகு பலவிதங்களில் சேனை சம்பந்தமான அபிவிருத்திகள் ஏற்பட்டன. அதுபோலவே கப்பற்படையிலும் நூதனமான பல மாறுபாடுகளைச் செய்து நாட்டின் யுத்தத் திறமையை அதிகரித்துக் கொண்டனர்.

நாட்டின் வளமும் விக்டோரியாவின் காலத்தில் அபரிமிதமாகப் பெருகியது. கைத்தொழில் அபிவிருத்தி ஏற்பட்டதனால், பண்டங்கள் விரைவாகவும், குறைந்த விலையிலும் உற்பத்திசெய்யப்பட்டன. அதனால் நாட்டின் வியாபாரம் பெருகிப் பரவியது. இதர நாடுகளை வசப்படுத்திக் கொள்வதில் இங்கிலீஷ்காரர்கள் உலகில் முதன்மையான நிலைமை அடைந்தது போலவே வியாபாரத்திலும் அடைந்து வரலாயினர். நீராவிக் கப்பல்கள், புகை வண்டிகள், தந்தி, தபால், டெலிபோன் வசதிகள், மோட்டார், ட்ராம் வண்டிகள், முதலிய புதிய சாதனங்களால் ஜனங்களுடைய வாழ்க்கையே மாறிப்போயிற்று.

கைத்தொழில் புரட்சியைப்பற்றி நாம் குறிப்பிட்ட காலத்தில், அதனால் தொழிலாளிகளுக்குண்டான இடுக்கண்களை விவரித்துக்

கூறினேம். முதலில் துரைத்தனத்தார் அவைகளை கவனிக்காமல் போகவே, முதலாளிகள் தம்மிடம் வேலைபார்த்த கூலியாட்களிடம் அதிக வேலை வாங்கிக்கொண்டு, குறைந்தகூலி கொடுத்து, அவர்களது தேகாரோக்கியத்தையோ ஆத்மார்த்தமான தேவைகளையோ கவனிக்கவேண்டுமென்ற யோசனையே இன்றி, அவர்களை அடிமைகளாகவே நடத்திவந்தனர். ஆனால், அந்தப் பரிதாபகரமான நிலைமையை ஒழுங்குப்படுத்த துரைத்தனத்தார் விரைவில் சட்டமியற்றுவது அவசியமாயிற்று. பல 'தொழிற்சாலைச் சட்டங்களை' (Factory Laws) இயற்றி, தொழிற்சாலைகளில் வேலை நடக்கவேண்டிய முறையை துரைத்தனத்தாரே நிர்ணயப்படுத்தினர். அதுவன்றி எளியவர்களையும் பிச்சைக்காரரையும் காப்பாற்றுவதும் துரைத்தனத்தாருடைய பொறுப்பாயிற்று. அதன்பொருட்டு பல சட்டங்கள் (Poor Laws) நிறைவேறின; தொழிலாளர் தங்களது பொதுவான நன்மையை அதிகப்படுத்திக் கொள்ளுவதற்கு அநுகூலமாக சங்கங்களை ஸ்தாபித்துக்கொள்ளும் உரிமையையும் பெற்றனர். ஒவ்வொரு வகைத் தொழிலாளிகளுக்குள்ளும் அத்தகைய சங்கங்கள் (Trade Unions) தோன்றின. அதனுல் தொழிலாளர் அதிக பலமடைந்து, சம்பள உயர்வு மற்ற வசதிகள் முதலியவைகள் சம்பந்தமாக முதலாளிகளுடன் போராடுவது சுலபமாயிற்று. பண்டங்களை உற்பத்தி செய்வதற்கு முதல் பணம் எவ்வளவு அவசியமானதோ அதுபோல, தொழிலாளியின் வேலையும் அவசியமாதலால், பண்டங்களை விற்பதனுல் ஏற்படும் ஆதாயத்தில், தொழிலாளிகளுக்கும் திருப்திகரமான ஒரு பாகம் சேரவேண்டுமென்ற நியதியை எல்லோரும் அங்கீகரித்தனர். தொழிலாளரது சங்கங்கள் முதலாளிகளுடன் போராடி எத்தனையோ நன்மைகளை அடைந்திருக்கின்றன. தமது கோரிக்கைகளை யடையும்பொருட்டு அவர்கள் வேலைநிறுத்தம் (Strike) நடத்துவதும் சாதாரணமாயிற்று. 20-வது நூற்ருண்டில் தொழிற்கட்சி (Labour Party) என்ற ஓர் இராஜீயக் கட்சியும் தலையெடுத்தது. 19-வது நூற்ருண்டில் மதசம்பந்தமான பல முன்னேற்ற இயக்கங்களும் நடைபெற்றன. முன்பு இருந்த மதத்துவேஷம் முற்றிலும் மறைய விசால நோக்கமும் தாராளமான மனதும் ஜனங்களிடம் காணப்பட்டன. தத்துவ சாஸ்திரிகள், கவிவாணர்கள், நூலாசிரியர்கள் பலர் 19-ம் நூற்ருண்டில் தோன்றி அதற்கு ஒரு பிரகாசத்தை உண்டாக்கினர். பத்திரிகைகள், புஸ்த

கங்கள் முதலியவை அபரிமிதமாகப் பெருகி நாகரிக வளர்ச்சியைத் தோற்றுவித்தன.

## ஹானோவர் வம்சத்து அரசர்கள்.




முதலாவது ஜார்ஜ்
1714—1727

இரண்டாவது ஜார்ஜ்
1727—1760

ஃப்ரெடரிக் (இளவரசர்)

மூன்றாவது ஜார்ஜ்
1760—1820



கென்ட் பிரபு | நான்காவது ஜார்ஜ் 1820—1830 | நான்காவது வில்லியம் 1830—1837

விக்டோரியா
1837—1901

ஏழாவது எட்வர்ட் 1901—1910 | ஆர்தர் (கன்னாட் பிரபு)

ஐந்தாவது ஜார்ஜ்
1910—



எட்வர்ட் (வேல்ஸ் இளவரசர்) | ஆல்பர்ட் (யார்க் பிரபு) | மேரி | ஹென்றி | ஜார்ஜ்

## விக்டோரியாவின் ஆட்சியில் ஏற்பட்ட மந்திரி சபைகள்.

| | | |
|---|---|---|
| 1835—1841 | மெல்போர்ன் | (விக்) |
| 1841—1846 | பீல் | (கன்ஸர்வேடிவ்) |
| 1846—1852 | ரஸ்ஸல் பிரபு | (விக்) |
| 1852 | டெர்பி - டிஸ்ரேலி | (கன்ஸர்வேடிவ்) |
| 1852—1855 | அபர்டீன் கூட்டுசபை | (பீலைட் விக்) |
| 1855—1858 | பால்மர்ஸ்டன் | (விக்) |
| 1858—1859 | டெர்பி - டிஸ்ரேலி (இரண்டாவது தடவை) | (கன்ஸர்வேடிவ்) |
| 1859—1865 | பால்மர்ஸ்டன் (இரண்டாவது தடவை) | (லிபரல்) |
| 1865—1866 | ரஸ்ஸல் பிரபு | (லிபரல்) |
| 1866—1868 | டெர்பி—டிஸ்ரேலி (மூன்றாவது தடவை) | (கன்ஸர்வேடிவ்) |
| 1868—1874 | க்ளாட்ஸ்டன் | (லிபரல்) |
| 1874—1880 | டிஸ்ரேலி (நான்காவது தடவை) | (கன்ஸர்வேடிவ்) |
| 1880—1885 | (க்ளாட்ஸ்டன் (இரண்டாவது தடவை) | (லிபரல்) |
| 1885—1886 | ஸாலிஸ்பரி | (கன்ஸர்வேடிவ்) |
| 1886— | க்ளாட்ஸ்டன் (மூன்றாவது தடவை) | (லிபரல்) |
| 1886—1892 | ஸாலிஸ்பரி (இரண்டாவது தடவை) | (யூனியனிஸ்ட் கன்ஸர்வேடிவ்) |
| 1892—1894 | க்ளாட்ஸ்டன் (நான்காவது தடவை) | (லிபரல்) |
| 1894—1895 | ரோஸ்பரி | (லிபரல்) |
| 1895—1902 | ஸாலிஸ்பரி (மூன்றாவது தடவை) | (யூனியனிஸ்ட்) |

———

# 43 - வது அதிகாரம்.

## ஏழாவது எட்வர்ட்

(1) எட்வர்ட் அரசர்: அன்னியநாட்டு சம்பந்தம்:—எட்வர்ட் அரசர் பட்டத்திற்கு வந்தபொழுது அவருக்கு அறுபது வயது ஆயிருந்தது. அவரது தாயான விக்டோரியாவே நீண்ட காலம் அரசுபுரிந்தமையால், அவர் இளவரசர் என்ற பதவியிலிருந்த படியே தமது தாய்க்கு உதவிபுரிந்து வந்தார். அவர் உலகத்தின் பல பாகங்களிலும் சலிப்பின்றிப் பிரயாணம் செய்தவர்; ஸ்ரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தின் மூலைமுடக்குகளையெல்லாம் அவர் நேரில் கண்டறிந்திருந்தார். எனவே அன்னியநாட்டுப் பிரயாணத்தால் ஏற்படும் அறிவு முதிர்ச்சியும் அநுபவமும் அவரிடம் அமைந்திருந்தன. அவர் அரசரானவுடன் ஊக்கத்துடன் தமது கடமைகளைச் செய்யத்தொடங்கி முக்கியமாக இதரநாட்டு அரசுகளுடன் அன்னியோன்னிய சம்பந்தம் வைத்துக்கொள்ளுவதில் தமது திறமையைக் காட்டினர். நாட்டிலிருந்து பல கட்சியாருடனும் அவர் அவருடைய சாமர்த்தியத்தினல் எவ்வித பிரயாசையுமின்றி வியவகாரங்களை நடத்திக்கொண்டு போனர்.

1902-ல் அதாவது எட்வர்ட் அரசரானதற்கு மறுவருஷம் தென்னுப்ரிக்காவில் நடந்துவந்த ஜேயர் யுத்தம் முடிவடைந்ததைப்பற்றியும், அதன்பிறகு அங்கு ஏற்பட்ட சம்பவங்களையும், முன் அதிகாரத்தில் குறிப்பிட்டோம்.

1895-ல், ஸாலிஸ்பரி பிரபு (யூனியனிஸ்ட்) மந்திரி சபையை யமைத்தாரல்லவா? அவர் 1902-ல் தேக அசௌக்கியம் காரணமாக இராஜீநாமாச் செய்துவிட்டார். அதன்பிறகு பால்போர் (Balfour) என்பவர் பிரதம மந்திரியாகி மூன்று வருஷ காலம் அதிகாரம் செலுத்தினர்.

1902-ல் கல்விச்சட்டம் (Education Act) ஒன்று பார்லிமென்டில் நிறைவேறியது. அதனல் நகரசபைகளும் ஸ்தல ஸ்தாபனங்களும் கல்வியைப் பரப்பும் விஷயத்தில் அதிகமான பொறுப்பை ஏற்றுக்கொண்டன.

1903-ல் 'அயரிஷ் நிலச்சட்டம்' (Irish Land Act) ஒன்று இயற்றப்பட்டது. அதன்மூலம் அயரிஷ் பண்ணையாட்களுக்கு நிலங்களை வாங்குவதற்கு துரைத்தனத்தார் பணம் கொடுத்து உதவி செய்யலாம் என்ற வசதி ஏற்படுத்தப்பட்டது. அதனால் துரைத்தனத்தாருக்கு செலவுக்கு வழி ஏற்பட்டாலும், அயரிஷ்மக்களது குறை ஓரளவு நிவர்த்தியாயிற்று.

விக்டோரியா மரணமடைந்தபொழுது, ஃபிரிட்டன் தேசம் பலவிதங்களில் மற்ற அரசுகளுடன் சேராமல் தனித்து நின்றது. ஜெர்மனியுடன் வெகுகாலமாக நட்பு இருந்து வந்ததானாலும், வியாபாரப் போட்டியினால் இரண்டு நாடுகளுக்கும் இருந்துவந்த நட்பு குறைந்திருந்தது. ரஷ்யாவின் உள் எண்ணத்தைப் பற்றி இங்கிலீஷ்காரருக்கு என்றுமே சந்தேகம் இருந்துவந்தது. போயர் யுத்தம் நடந்தபொழுது, ஐரோப்பாவில் பலர் போயர்களுக்கு அநுதாபம் காட்டினர். ஆகவே. எட்வர்ட் அரசரும், அன்னிய நாட்டு மந்திரியாயிருந்த லார்ட் லான்ஸ்டௌன் (Lord Lansdowne) என்பவரும் அன்னிய நாடுகளுடன் உறவாடுவதில் நிரம்பவும் ஜாக்கிரதையாக நடந்துகொள்வது அவசியமாயிற்று.

ஆனால் ஃபிரிட்டனுக்கு அதனால் பெருத்த அபாயம் நேர்ந்துவிடவில்லை. போயர்களது விஷயத்தில் அநுதாபம் காட்டிய அரசுகள் இங்கிலண்டுக்கு விரோதமாக அவர்களுக்கு உதவிபுரியத்துணியவில்லை. ஆகவே, மற்ற நாடுகள் இங்கிலண்டை ஆதரிக்கவில்லை என்பது தெரிந்தது; அதுவன்றி அதனுடன் நட்புக்கொள்ளவும் அவை தயாராக இருந்தன. 1902-ல் ஃபிரிட்டன் ஜப்பானுடன் ஒரு சிநேக உடன்படிக்கை செய்துகொண்டது. ஜெர்மனியுடனும் அம்மாதிரியே ஒரு சகோதரத்துவம் ஏற்பட்டது. 1903-ல் ஃபிரான்ஸுடன் ஓர் உடன்படிக்கை நடக்க, அதன்மூலம் பல தகராறுகள் தீர்ந்துபோயின. ஈஜிப்ட்டில் ஃபிரிட்டிஷ் ஆட்சி நடப்பதையும் ஃபிரான்ஸ் அங்கீகரித்தது. ஆனால் இங்கிலீஷ்-ஃபிரெஞ்சு உடன்படிக்கையைக் கண்டு ஜெர்மனி வெறுப்படைந்தது. அந்த அரசாங்கத்தார் அதிகாரணமாகத் தமது கப்பற்படையை அதிகப்படுத்தியதுடன், ரஷ்யாவுடன் சிநேகம் செய்து கொள்ளவும் ஆரம்பித்தனர். ஃபிரெஞ்சு துரைத்தனத்தின் அன்னிய நாட்டு

மந்திரி முன்யோசனையற்ற சில காரியங்களால் ஜெர்மனியின் கோபத்தை அதிகப்படுத்தினர். ஆனாலும், நற்காலமாக, அவ்விரு தேசங்களுக்கும் சச்சரவு உண்டாகவில்லை. இங்கிலண்டினிடத்தில் மாத்திரம் ஜெர்மனிக்கு சந்தேகம் அதிகரித்து வந்தது.

1904-ல் ரஷ்யாவுக்கும் ஜப்பானுக்கும் ஒரு போர் நிகழ்ந்தது. ஜப்பான் சமீபத்திலேயே நாகரிக மடைந்திருந்தது. மேனாட்டு யுத்தமுறைகளை அநுஷ்டிப்பதிலும் அது தேர்ச்சிபெற்றிருந்தது. ரஷ்யாவோ அவ்வளவு யுத்தப்பயிற்சி அடையவில்லை. பல இடங்களில் ரஷ்யப்படைகள் தோல்வி யடைந்தன. வடபஸிபிக் மகா சமுத்திரத்தில் இரண்டு நாட்டுச் சேனைகளுக்கும் ஒரு கடற்போர் நடந்தது. அப்பொழுது அந்தக் கடலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த சில குற்றமற்ற இங்கிலீஷ் செம்படவர்களையும் ரஷ்யப் படை தாக்கியது. அந்த அக்கிரமச் செய்கை இங்கிலீஷ் துரைத்தனத்தாருக்கு ஆத்திரத்தை விளைத்தது. 1905 ல், தோற்றுப்போன ரஷ்யா சமாதானத்திற்கு உட்பட்டது. மேலும், செம்படவர்களைக் கொன்றது அறியாமற்செய்த காரியமே என்று அது ஒப்புக்கொள்ள, 1907-ல் இங்கிலண்டும் ரஷ்யாவும் சமாதான மடைந்தன.

இவ்விதம் அன்னிய நாடுகளுடன் சமாதானமாக நடந்து, நட்பை நிலைநிறுத்துவதில் எட்வர்ட் அரசர் நிரம்பவும் அக்கறைகாட்டினர். அன்னிய நாடுகளுக்கு அவர் அடிக்கடி செல்வதிலும் அவ்வாறே அந்நாட்டு அரசர்கள், மந்திரிகள் முதலியவர்களை வரவேற்பதிலும், விவாகத்தின் மூலம் மற்ற நாடுகளுடன் பாந்தவ்வியம் உண்டாக்கிக் கொள்வதிலும் அவர் மிகுந்த ஊக்கமும் சந்தோஷமும் கொண்டார். அதனால் அவர் "சமாதானம் உண்டாக்கும் எட்வர்ட்" (Peace Maker) என்று புகழ்ச்சியாகக் குறிக்கப்படுகிறார்.

(2) பாதுகாப்பு முறை: லிபரல் மந்திரி சபைகள்:—பால்போர் மந்திரி சபையில் குடியேற்றநாட்டு மந்திரியாயிருந்த ஜோஸப் சேம்பர்லேயின் (Joseph Chamberlain) என்பவர் ஒருபுதிய முறையை அநுஷ்டித்தார். அதாவது பீல், க்ளாட்ஸ்டன் ஆகியோர் இங்கிலண்ட் மற்ற தேசங்களுடன் வியாபார

சம்பந்தம் வைத்துக்கொண்டு பண்டங்களை இறக்குமதி ஏற்றுமதி செய்வதற்கு தீர்வைகள் முதலான தடைகள் ஏற்படுமானால், வியாபாரம் கெட்டுவிடுமென்று எண்ணி, வியாபாரம் சுயேச்சையாக நடக்கும்படி அநுமதிப்பதே சிறந்ததென அபிப்பிராயப்பட்டனர். பிரிட்டன் தேசத்துக் கைத்தொழில்கள் குழந்தைப் பருவத்தில் இல்லாமல் அபிவிருத்தி யடைந்திருந்தனவாதலால், அவைகளுக்குத் தீர்வை முதலான செயற்கைப் பாதுகாப்புகள் தேவையில்லையென்பதும் அவர்களது கருத்து. ஆனால், ச்சேம்பர்லெயின் அம்முறையை விட்டு, பாதுகாப்பு அவசியமானதென்று கருதினர். ஏனெனில், பலநாடுகள் அவ்விதமான முறையையே அநுஷ்டித்து வந்தன. பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளும் அதை அநுசரித்தன. ச்சேம்பர்லெயின் வேறோர் ஆலோசனையையும் செய்தார். குடியேற்ற நாடுகள் பாதுகாப்பு முறையைப் பின்பற்றி இங்கிலண்டிலிருந்துவந்த பண்டங்களுக்குக்கூடத் தீர்வை விதித்துவந்தன. ச்சேம்பர்லெயின், பிரிட்டனுக்கும் குடியேற்ற நாடுகளுக்கும் அதிக பாந்தவ்யமும் ஒற்றுமையும் உண்டுபண்ண விருப்பம் கொண்டார். அதாவது குடியேற்ற நாடுகளுக்கும் பிரிட்டனுக்கும் நடக்கும் வியாபாரத்தில் அவர்கள் (மற்ற தேசங்களுக்கு அளிக்கப் படாத) விசேஷமான சில நன்மைகளை பரஸ்பரம் செய்து கொள்ளலாம். உதாரணமாக, ஜெர்மனியிலிருந்து இங்கிலண்டுக்கு இறக்குமதியாகும் பண்டங்களுக்குத் தீர்வை விதித்து, குடியேற்ற நாடுகளிலிருந்து வரும் பண்டங்களுக்குத் தீர்வை விதிக்காமலிருக்கவோ அல்லது சொற்பத்தீர்வை விதிக்கவோ, ஓர் ஏற்பாடு செய்து கொண்டால், பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திற்குள் வியாபாரம் பெருகும்என்பது ச்சேம்பர்லெயினினது ஆலோசனை. அதை லிபரல்கள் ஒப்புக்கொள்ளாமல், பாதுகாப்புமுறை அநாவசியமானதென்று கூறினர். 1903-ல் ச்சேம்பர்லெயின் இராஜீநாமாச்செய்தார். அதன் பிறகு அவரது பதவிக்கு அவருடைய புத்திரர் ஆஸ்டென் ச்சேம்பர்லெயின் என்பவர் வந்தார். பாதுகாப்பு முறையினால் பண்டங்களின் விலை அதிகரிக்கக்கூடுமாதலால் நாட்டில் பெரும்பாலோர் அதை வெறுத்தனர். எனவே, 1905-ல் பால்போர்2 மந்திரிசபை கலைந்துபோயிற்று.

அதன் பிறகு, லிபரல் தலைவர் ஸர் ஹென்றி காம்ப்பெல் பானர்மான் (Sir Henry Campbell Bannerman) என்பவர் மந்திரி சபையை யமைத்தார். அதில் ஸர் எட்வர்ட் க்ரே (Sir EdwardGrey) என்பவர் அன்னியநாட்டுமந்திரியாகவும், ஹால்டேன் (Haldane) என்பவர் யுத்தமந்திரியாகவும், ஜான் மார்லி (John Morley) இந்தியா மந்திரியாகவும், ஆஸ்க்வித் (Asquith) பொக்கிஷ மந்திரியாகவும் இருந்தனர். பின்னால் பிரதம மந்திரியான லாய்ட் ஜார்ஜ் (L'oyd George) என்பவரும் அதில் ஒரு மந்திரியாயிருந்தார். 1906-ல் நடந்த பார்லிமென்ட் தேர்தலில் லிபரல்களுக்குப் பெரிய வெற்றி கிடைத்தது. கன்ஸர்வேடிவ் கட்சி தோற்றுப் போயிற்று. அந்தப் பார்லிமென்டில் முதன் முதலாக தொழிற் கட்சி (Labour Party) யென்ற புதிய கட்சியைச் சேர்ந்த நாற்பது அங்கத்தினர்கள் இருந்தனர். எனவே அதுவரையில் லிபரல், கன்ஸர் வேடிவ் என்ற இரண்டு முக்கிய கட்சிகள் மாத்திரமே இருந்தன. இப்பொழுது மூன்றாவது கட்சி ஒன்று தோன்றியது. தொழிலாளரின் நன்மைக்கான ஒழுங்குகளைச் செய்வதே தொழிற் கட்சியாரது நோக்கம். 1906-ம் வருஷப் பார்லிமென்ட் தேர்தலில் லிபரல்களுக்குக் கிடைத்த பெரிய வெற்றி வேறு எந்த சமயத்திலும் கிடைத்ததில்லை. எனவே தேசத்தினர், ச்சேம்பர்லெயினினது பாதுகாப்புமுறையை ஆதரிக்கவில்லை என்பது விளங்கியது.

ஏழாவது எட்வர்ட் அரசர் காலம் முழுதும் லிபரல்களே ஆட்சி புரிந்தனர். காம்ப்பெல் பானர்மான் துரைத்தன நிர்வாக தந்திரியல்லராலும், கூடியவரையில் திறமையாகவே அரசியல் நடத்திவந்தார். ஆனால் தேக அசௌக்கியம் காரணமாக 1908-ல் அவர் தமது பதவியிலிருந்து விலகிக்கொண்டார். உடனே அதுவரையில் பொக்கிஷமந்திரியாயிருந்த ஆஸ்க்வித் (Asquith) பிரதம மந்திரியானார். பொக்கிஷ மந்திரியின் வேலை மிகவும் பொறுப்புள்ளது. எனவே ஒரு மந்திரிசபையில் பொக்கிஷ மந்திரியாயிருப்பவர் சீக்கிரத்தில் பிரதம மந்திரி ஸ்தானம் பெறுவது சாதாரணமான விஷயம். லாய்ட் ஜார்ஜ் பொக்கிஷ மந்திரியானார். வின்ஸ்டன் ச்சர்ச்சில் (Winston Church il ) என்பவரும் ஒரு மந்திரிஸ்தானம் பெற்றார்.

லிபரல்களின் ஆட்சியில் சில முக்கியமான சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. கல்வி, தொழிலாளரின் சுகவசதிகள், தொழிற்சாலைகளில் வேலை செய்யும் குழந்தைகளுக்குப் பாதுகாப்பு, சேனை, கப்பற்படை முதலியவை சம்பந்தமான சட்டங்கள் ஆகியவைகள் நிறைவேற்றப்பட்டன. ஆனால் மற்றவைகளைவிட முக்கியமான ஒரு சம்பவம் 1909-ல் நிகழ்ந்தது.

1909-ல் லாய்ட் ஜார்ஜின் வரவு செலவு கணக்கில் சில புதிய வரிகளும் புதிய முறைகளும் புகுத்தப்பட்டிருந்தமையால், அது சம்பந்தமாக உக்கிரமான விவாதம் ஏற்பட்டது. எனவே, லார்ட் சபையார் அதை அங்கீகரிக்க மறுத்து, புதிய தேர்தல் நடைபெறும் வழியைச் செய்தனர். புதிய தேர்தலில் லிபரல்களுக்கு முன்னிருந்த எல்லா ஸ்தானங்களும் கிடைக்கவில்லை. ஆனால் மந்திரிகளோ லார்ட் சபையின்மீது கோபங்கொண்டிருந்தனர். ஜனப் பிரதிநிதிகளடங்கிய காமன்ஸ் சபையில் நிறைவேறும் சட்டங்களை, கேவலம் பிரபுக்களடங்கிய லார்ட் சபை நிராகரிப்பது அதிக்கிரமமான செய்கையென்றும், லார்ட் சபையின் அதிகாரத்தைக் குறைக்கும் வழியைத் தேடவேண்டுமென்றும் மந்திரிகள் கருதினர். அப்பொழுது சட்டப்படி காமன்ஸ் சபைக்கும் லார்ட் சபைக்கும் சமமான அதிகாரமே இருந்தது. எனவே அரசியல் சட்டத்தை மாற்றி, லார்ட் சபையினர் பொதுஜனப் பிரதிநிதிகளுடைய விருப்பத்தை மீறாமலிருக்கும்படி செய்வது அவசியமாயிற்று. ஆனால் அந்த வியவகாரம் நிரம்பவும் சிக்கலாயிருந்தது. 1909-ம் வருஷ வரவு செலவு கணக்கும் நிறைவேறிவிட்டது. லார்ட் சபைச் சீர்திருத்த விஷயம் தீர்மானிக்கப்படாமல் இருக்கையில் எட்வர்ட் அரசர் 1910-ல் இறந்துபோனார்.

---

## 44-வது அதிகாரம்

### ஐந்தாவது ஜார்ஜ்—ஐரோப்பிய மகாயுத்தம்.

1910-ல் ஐந்தாவது ஜார்ஜ் அரசர் பட்டத்திற்கு வந்தார். எட்வர்ட் அரசருடைய மூத்தகுமாரர் இளவரசராகவே இறந்துபோனாராதலால், இரண்டாவது குமாரரான ஜார்ஜ் அரசரானார். அதற்குமுன் அவர் கப்பற்படையில் உத்தியோகம் வகித்து, பலநாடுகளிலும் பிரயாணம் செய்திருந்தார். அவர் மேரி இராணியை 1893-ல் மணந்து கொண்டார். ஏழாவது எட்வர்ட் அரசர் காலம் தொடங்கி அரசகுலத்தார் வின்ட்ஸர் குடும்பத்தார். (House of Windsor) என்று குறிக்கப்படுகின்றனர்.

எட்வர்டின் கடைசிக்காலத்தில், லார்ட் சபைச் சீர்திருத்த விஷயமாக உக்கிரமான விவாதம் நடந்ததல்லவா? 1910-ம் ஆண்டு டிஸம்பர் மாதத்தில் அந்த வியவகாரத்தை ஆதாரமாகக்கொண்டு பார்லிமெண்ட் தேர்தல் நடைபெற்றது. லிபரல் கட்சிக்கு அதிகமான வெற்றி கிடைத்துவிடவில்லை. ஆனாலும், ஆ/2ஸ்க்வித்தே அதன்பின்னும் பிரதம மந்திரியாயிருந்தார். கடைசியாக 1911-ல் பார்லிமெண்ட் சட்டம் ஒன்று நிறைவேற்றப்பட, அதன்மூலம் லார்ட் சபைக்கு இருந்த அதிகாரம் குறைக்கப்பட்டது. பணசம்பந்தமான மசோதாக்களை நிராகரிக்கவோ, திருத்தவோ லார்ட் சபைக்கு அதிகாரம் இல்லாது போயிற்று. பணசம்பந்தமற்ற இதர மசோதாக்களின் விஷயத்திலும், காமன்ஸ் சபை திருப்பித் திருப்பி மூன்று தடவைகளில் ஒரு மசோதாவை நிறைவேற்றிவிட்டால், லார்ட் சபையின் எதிர்ப்பு ஏற்பட்டாலும், அந்த மசோதா சட்டமாய்விடும். முன்பு ஒரு சட்டம் நிறைவேறுவதை அடியோடு தடுத்துவிடும் அதிகாரம் லார்ட் சபைக்கு இருந்ததுபோக, ஒரு மசோதா சட்டமாவதற்குள் இரண்டுவருஷ காலம் தாமதப்படுத்தி வைக்கும் உரிமை மாத்திரம் 1911-க்குப்பின், அவர்களுக்கு மிஞ்சி நின்றது. எனவே, காமன்ஸ் சபைக்கே எல்லா அதிகாரமும் வந்து சேர்ந்துவிட்டது. ஆலோசனை கூறவும்; விவாதம் புரியவுமே

லார்ட்ஸ் சபைக்கு அதிகாரம் மிஞ்சியது. அந்த மாறுதல் ஏற்பட்டது முற்றிலும் பொருத்தமானதே. ஏனெனில் ஜனப்பிரதிநிதிகளுடைய தீர்மானமே முடிவாக நிறைவேற வேண்டுமென்பதை எல்லோரும் இக்காலத்தில் அங்கீகரிக்கின்றனர். அந்தச் சட்டத்தை முதலில் லார்ட்ஸ் சபையார் எதிர்த்தனராலும் பயன் ஏற்படாததை யுணர்ந்து கடைசியில் அவர்கள் அதற்கு இணங்கிவிட்டனர்.

1911-ம் வருஷப் பார்லிமென்ட் சட்டத்தின்படி பார்லிமென்டு புதுப்பிக்கப்பட வேண்டிய காலம் 7 வருஷங்களிலிருந்து 5 வருஷங்களாகக் குறைக்கப்பட்டது. மேலும், பார்லிமென்டின் அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் வருஷம் ஒன்றுக்கு 400 பவுன் சம்பளம் கொடுக்கவேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. லாய்ட்ஸ் ஜார்ஜ் லார்ட்ஸ் சபையின் அதிகாரத்தைக் குறைத்து, வெற்றிக்கோலம் பூண்டவரானார்.

1913-ல் பார்லிமென்டில் ஸ்திரீகளுக்கும் ஓட்டுரிமை யளிக்க முயன்ற ஒரு மசோதா தோற்றுப்போய்விட்டது. பிரதம மந்திரியே அதை எதிர்த்தார். ஆனால், பின்னால் அந்த உரிமை ஸ்திரீகளுக்கும் அளிக்கப்பட்ட விவரம் கீழே விவரிக்கப்படும்.

1914 முதல் 1918 வரையில் நடந்த ஜெர்மன் மகாயுத்தம் உலகில் நடந்த யுத்தங்களுக்குள் மிகவும் பெரியது; அதிக சேதம் விளைவித்தது. ஜெர்மனி தனது இராஜ்ஜியத்தைப் பெருக்க வேண்டுமென்ற பேராசைகொண்டதே அதற்கு முக்கிய காரணம். பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியம் உலகம் முழுதும் பரவியிருந்ததுபோலவே ஜெர்மனியும் உலகம் முழுதும் ஆட்சி நடத்த ஆசைகொண்டது. ஆனால் பிரிட்டன் ஏதோ விசேஷ அதிருஷ்டத்தாலும், கடல் அதிகாரம் முதலிய வசதிகளாலும் அந்த விஷயத்தில் வெற்றியடைந்தது. ஜெர்மனியும் அம்மாதிரி பேராசை கொண்டதனால், இயற்கையாகவே ஏனைய அரசுகளுக்கும் அதற்கும் மனஸ்தாபமும் சச்சரவும் உண்டாயின. ஜெர்மன் சக்கரவர்த்தியான கெய்ஸர் வில்லியமும், அவரது இராணுவ அதிகாரிகளும், ப்ரெஞ்சு சக்கரவர்த்தியாயிருந்த நெப்போலியனைப்போல, சாத்தியமற்ற இலக்ஷியங்களை மனதிற்கொண்டிருந்தனர். ஜெர்மனியின் வியாபாரமும்

கைத்தொழிலும் அபிவிருத்தி யடைந்திருந்தன. ஆகவே, 20-வது நூற்றாண்டின் தொடக்கத்தில் உலகில் முதன்மை ஸ்தானம் அடைவதற்கு ஜெர்மன் அரசாங்கத்தார் அபாரமான முயற்சி செய்வார்கள் என்பது தெளிவாயிற்று. மேலும் அநேக வருஷகாலமே, ஐரோப்பாவில் எல்லா தேசங்களும் சேனையையும் கப்பற்படையையும் யுத்த ஆயுதங்களையும் பெருக்கிக்கொண்டே இருந்தன. கத்திபிடித்தவன் கை சும்மாயிராது என்பது பழமொழியாதலால், எப்பொழுது கடுமையான போர் நேருமோ என்று எல்லோரும் எதிர்பார்த்து அஞ்சியிருந்தனர். 20-வது நூற்றாண்டின் ஆரம்பத்தில், ஐரோப்பிய அரசுகளில் பொதுவாக, ஜெர்மனி, ஆஸ்ட்ரியா, இற்றாலி ஆகியவை ஒரு கட்சியாகவும், ரஷ்யாவும் ப்ரான்ஸும் இன்னொரு கட்சியாகவும் இருந்தன. இங்கிலண்டு தேசம் ஐரோப்பாவுடன் ஒட்டியும் ஒட்டாமலும் இருந்ததைப்போலவே, ஐரோப்பாவின் இராஜீயக் குழப்பத்தில் கலந்தும் கலவாமலும் இருந்தது. ப்ரான்ஸுடன் நட்பா யிருந்ததுபோலவே ஜெர்மனியுடனும் சிநேகப்பான்மையே காட்டி, அதற்கு அநுகூலமாக, யுத்தசாதனங்களைச் சேகரிக்க முயற்சி செய்யாமல் இருந்தது. ஜெர்மனியும் யுத்தம் இல்லாமையாலே தனது கருத்து நிறைவேறுவது நல்லதென்றே எண்ணி, அமைதியாகவே தனது ஆதிபத்யத்தை பலப்படுத்திக்கொண்டு வந்தது. அவசியமானபொழுது சிறிது மிரட்டியும், பயமுறுத்தியும் காரியத்தை சாதித்துவந்தது. ஆனால் அது அதிக காலம் நீடித்து நடக்கவில்லை. ஐரோப்பாவில் பரவியிருந்த அமைதி பொய்த் தோற்றமென்பதும், உள்ளுக்குள் கலகத்தீ புகைந்துக் கொண்டிருந்ததும் தெளிவாக விளங்கிப்போயின. அந்தத் தீ பற்றிக் கொள்ளும்படி செய்ய 1911 முதல் 1913-வரையில் சில சம்பவங்கள் நிகழ்ந்தன.

ஆப்ரிக்காவில் உள்ள மொராக்கோ என்னும் நாட்டில், ப்ரெஞ்சுக்காரருக்கும் மொராக்கோ அரசுக்கும் சச்சரவு நடந்து வந்தது. 1911-ல் ஜெர்மன் துரைத்தனத்தார் அகடிர் (Agadir) என்ற துறைமுகத்திற்கு பாந்தர் (Panther) என்ற யுத்தக்கப்பலை அனுப்பினர். அதிலிருந்து, ப்ரான்ஸ்—மொராக்கோ தகராறு விஷயத்தில் ஜெர்மனி தலையிடுவதாக அர்த்தமாயிற்று. மொராக்கோ

பிரதேசத்தில் ப்²ரெஞ்சு ஆதிபத்யத்தை ஸிரிட்டிஷ் அரசாங்கத் தார் அங்கீகரித்திருந்தனர். ஆகவே இப்பொழுது ஜெர்மனிச்கு எதிராக ப்²ரான்ஸுக்கு உதவுவதாக ஸிரிட்டிஷார் அறிவித்துக் கொண்டனர். உடனே ஜெர்மன் அரசர், யுத்தக்கப்பலைத் திருப்பி யழைத்து, மொராக்கோவில் ப்²ரெஞ்சு ஆதிபத்யத்தை அங்கீகரித் தார். ஆனல் அந்தச் சம்பவம் சமாதானமாக முடிந்ததானலும், உண் மையில் ஆழ்ந்த மனஸ்தாபத்திற்கு விதையூன்றியது போன்றதா யிற்று. அதிசீக்கிரத்தில் இன்னொரு துன்பமும் ஏற்பட்டது. கீழ்த் திசைவியவ்காரம் நீண்டகாலமாய் அடங்கியிருந்து மறுபடியும் முளைத் தெழுந்தது. 1909-ல் துருக்கியில் ஒரு புரட்சி ஏற்பட்டது. அது வரையில் ஆண்டுவந்த சுல்தான் அகற்றப்பட்டார்; புதிய துரைத் தனம் ஸ்தாபிக்கப்பட்டது 'யௌவனத் துருக்கியர்கள்' (Young Turks) என்ற கட்சியினர் பிரபலமாயிருந்தனர். அவர்கள் மேனாட்டு முறைகளைப் பின்பற்றி துரைத்தனம் நடத்த முனைந்து மேனாட்டு அரசியல் முறையையும் யுத்தப் பயிற்சியையு மடைய ஜெர் மனியின் உதவியை நாடினர். எனவே, துருக்கியில் ஜெர் மனி தலையிடுவதற்கு வழி ஏற்பட்டது. அதற்குள், துருக்கிக் குட்பட்ட சில கிரிஸ்தவப் பிரஜைகள் கிளர்ச்சி செய்தனர். 1911-12-ல் இற்றுலிக்கும் துருக்கிக்கும் யுத்தமேற்பட, துருக்கி ச்மாதானத்திற்கு உட்பட்டது. 1912-ல் ஸால்க்கன் பிரதேசத்தி னர் 'ஸால்க்கன் சங்கம்' (Balkan League) ஒன்றை அமைத்துக் கொண்டனர். ருமேனியா என்ற நாடுமாத்திரம் அதில் சேர்ந்து கொள்ளவில்லை. ஸால்க்கன் சங்கத்தார் துருக்கியரைத் தோற் கடித்தனர். இவ்வாறு துருக்கிக்குத் தோல்வி யேற்படுவது ஜெர் ம்னிக்கு வருத்தத்தை உண்டாக்கியது; ஏனெனில் அதனல் துருக்கியில் அதன் செல்வாக்கு நிலைப்பதற்குத் தடைஏற்பட்டது. துருக்கியில் செல்வாக்கடைந்து கீழ் நாடுகளில் நுழையலாமென்பது ஜெர்மனியின் கபட எண்ணம். ஸால்க்கன் சங்கத்திற்கும் ஆஸ்ட்ரியா வுக்கும்கூட எல்லைத்தகராறுகள் ஏற்பட்டன. பல குழப்பங்களுக் குப்பின் 1913-ல் ஸால்க்கன் நாட்டினர் சமாதானம் செய்துகொண் டனர். துருக்கி இராஜ்ஜியம் பரியாணத்தில் குறைவுபட்டது;

ஜெர்மனியின் நோக்கம் பலிக்கும் வழி காணப்படவில்லை. ஜெர்மனியில் ஒரு சாரார் யுத்தம் நடத்தவும், தமது நாட்டிற்கு வெற்றியும் இராஜ்ஜியப்பெருக்கும் சம்பாதித்துத் தருவதற்கும் துடித்துக் கொண்டிருந்தனர். ஓர் ஏற்ற சமயத்திற்காகவே அவர்கள் காத்திருந்தனர். 1914-ல் அந்த சமயம் வந்து வாய்த்தது. தன் முயற்சி பலிதமாக வேண்டுமானல் போர்புரிவது அவசியமானதென்று அறிந்ததும், காலதாமதம் செய்யாமல் போரில் இறங்குவதே உசிதமென ஷெ நாட்டினர் நினைத்தனர். ஏனெனில் அப்பொழுது ஜெர்மன் சேனைகளைப்போல மற்ற அரசுகளின் சேனைகள் உடனே யுத்தகளம் செல்ல ஆயத்தமாக இல்லை. மேலே குறிக்கப்பட்ட சம்பவங்களுடன் 1914-ல் இன்னுமொரு சம்பவமும் நேர்ந்து யுத்தத் தீயை மூட்டிவிட்டது. 1914-ல் ஜூன் மாதத்தில், ஸோாஜிவோ (Serajevo) என்ற நகரத்தில் ஆஸ்ட்ரியாவின் இளவரசர் சென்று கொண்டிருக்கையில் ஸேர்வியா (Serbia) தேசத்தான் ஒருவன் அவரைக் கொன்றுவிட்டான். உடனே ஆஸ்ட்ரியா துரைத்தனத்தார் ஸெர்வியாவின்மீது குற்றம் சுமத்தி நஷ்டஈடு வேண்டினர். ஸெர்வியா அதற்கு உட்பட்டது; ஆனாலும் ஆஸ்ட்ரியாவினிடம் அச்சமகொண்டு, ரஷ்யாவின் உதவியைக் கோரியது. ரஷ்யா அதற்கு இணங்கவே, ஆஸ்ட்ரியா, ஸெர்விபாவின்மீது போருக்கு ஆயத்தமாயிற்று. ஆஸ்ட்ரியாவுடன் சிநேகமாயிருந்த ஜெர்மனி உடனே ரஷ்யாவின் படையைக் கலைக்கும்படி ரஷ்ய அரசுக்கு எச்சரிக்கைசெய்தது. ரஷ்யா அதை உல்லங்கனம்செய்ய, ஜெர்மனியும் ஆஸ்ட்ரியாவும் ரஷ்யாவின்மீது போருக்குச்சென்றன. ட்ரான்ஸ் ரஷ்யாவுடன் சேர்ந்துகொண்டது. இவ்வாறு ஐரோப்பிய யுத்தம் ஆரம்பமாயிற்று. ஆஸ்ட்ரிய இளவரசரின் கொலை அதற்கு வெளிப்படையான காரணமாக ஏற்பட்டது. உள்ளார்ந்த காரணங்கள் முன்னரே விளக்கப்பட்டன.

அப்பொழுது பிரிட்டிஷ் துரைத்தனத்தார் தாம் என்ன செய்வதென்பதைப்பற்றி ஆலோசனை செய்தனர். ஆஸ்க்வித் மந்திரிசபையில் அன்னியநாட்டு மந்திரியாயிருந்த ஸர் எட்வர்ட் க்ரே, ஐரோப்பிய அரசுகளுக்குள் இருந்த தகராறுகளை ஒரு

பொதுசபை கூட்டி சமாதானமாகத் தீர்மானித்துவிடலாம் என்று கூறினர். ஆனல் ஜெர்மனி முதலிய அரசுகள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. யுத்தம் புரிவதற்கு பயந்தே ப்ரிட்டிஷ் துரைத்தனத்தார் சமாதானத்தை நாடுவதாக ஜெர்மனியார் நினைத்தனர். இங்கிலண்டின்மீதே ஜெர்மனிக்கு அதிகமான பகைமை ஏற்பட்டிருந்தது. ஏனெனில் ப்ரிட்டனின் கடல் ஆதிபத்யமே ஜெர்மனியின் ஆசை நிறைவேறுவதற்கு ஒரு பெரிய தடையாயிருந்தது. ஆகவே யுத்தத்தை விரைவில் நடத்தி வெற்றியடைய வேண்டுமென்று ஜெர்மன் சக்கரவர்த்தி துடிதுடித்து நின்றார். தமக்கு வெற்றி கிடைப்பது நிச்சயமெனவும் அவர் நம்பியிருந்தார்.

ப்2ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையிலுள்ள பெல்ஜியம் (Belgium) என்ற சிறிய நாடு எந்தக் கட்சியிலும் சேராமல் நடுநிலைமை வகித்திருந்தது. அதன் சுயாதீனத்தைக் காப்பதாக எல்லா அரசுகளும் ஏற்கெனவே ஒப்புக்கொண்டிருந்தன. ஆனல் ஜெர்மன் சக்கரவர்த்தி 1914 ல் பெல்ஜியத்தின் வழியாகத் தமது சேனைகளை நடத்திச்சென்று ப்2ரான்ஸைத் தாக்குவதற்கு வழி செய்து தரவேண்டுமென்று பெல்ஜியம் துரைத்தனத்தை வற்புறுத்தினர். ஆனல் ப்ரிட்டிஷ் துரைத்தனத்தாரோ பெல்ஜியத்தின் சுயாதீனத்தையும் நடுநிலைமையையும் காப்பாற்றக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்தனர். ஜெர்மன் அரசாங்கத்தார் முன்புசெய்து கொண்டிருந்த உடன்படிக்கைகளை குப்பையில் போடத்தகுந்த வெற்றுக் காகிதங்களாய் மதித்து யுத்த முழக்கம் செய்யலானர்கள். உடனே ப்ரிட்டிஷ் அரசாங்கமும் பேச்சிலிருந்து காரியத்தில் இறங்கவேண்டியதாயிற்று. ப்2ரான்ஸ், ரஷ்யா ஆகியவைகளுக்கு உதவவும், சிறிய நாடான பெல்ஜியத்தைப் பாதுகாக்கவும், பழைய உடன்படிக்கைகளின் கௌரவத்தைக் காப்பாற்றவும் ப்ரிட்டன், ஜெர்மனி,—ஆஸ்ட்ரியா ஆகியவைக்கு விரோதமாக, ரஷ்யா, — ப்2ரான்ஸுடன் சேர்ந்து கொண்டது. 1914-ம் ௵ ஆகஸ்ட் ௴ 4-ம் தேதியன்று இங்கிலண்ட் யுத்தத்திற்குத் தொடக்கம் செய்தது. போர் புரியவும் பண உதவி செய்யவும் பலர் முனைந்து நின்றனர். லார்ட் கிச்சனர் யுத்த மந்திரியாக

நியமிக்கப்பட்டார்; ஸர் ஜான் ப்2ரேஞ்ச் (Sir John French) என்பவருடைய தலைமையின் கீழ் 150,000 வீரர்களடங்கிய சேனை ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டது. ஜெல்லிகோ (Jellicoe) என்ற சேனைத் தலைவர் கப்பற்படைத் தலைமை வகித்து கடலில் ப்ரிட்டிஷாரது ஆதிபத்யத்தைப் பாதுகாக்கும் கடமையை ஏற்றுக்கொண்டார்.

இனி நாம் ப்ரிட்டன், ப்2ரான்ஸ், ரஷ்யா ஆகிய அரசுகளைக் கூட்டுக்கட்சியார் (Allies) என்றும், ஜெர்மனி, ஆஸ்ட்ரியா ஆகியவைகள் ஐரோப்பாவின் மத்திய பாகத்தில் இருப்பதனால் அவைகளை 'மத்திய அரசுகள்' (Central Powers) என்றும் குறிப்பிடுவோம்.

தொடக்கத்தில் ஜெர்மன் சேனையே வெற்றியடைந்தது. அவர்களுடைய எண்ணமும் பலித்தது. பெல்ஜியத்தின் சிறிய சேனையைத் தோற்கடித்துவிட்டு, ஒரு பெரும் ஜெர்மன்படை ப்2ரான்ஸ் தேசத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. அப்பொழுதே ப்ரிட்டிஷ் சேனை உதவிக்கு வந்து சேர்ந்தது. ஆனால் கூட்டுக் கட்சியாரது சேனை, ப்2ரான்ஸின் வடபுறத்தில் தோற்கடிக்கப்பட்டு, பின்வாங்கியது. ஜெர்மானியர் பா/2ரிஸ் நகரத்தின் மீது படையெடுத்து வரவும் ஆலோசனை செய்தனர். ப்2ரெஞ்சு துரைத்தனத்தார் வேறு நகரத்திற்கு ஓடிவிட்டனர். ஜெர்மன் சேனை தெற்கு நோக்கி வந்துகொண்டிருந்தது. உடனே இங்கிலீஷ் சேனைத்தலைவரான ஸர் ஜான் ப்2ரெஞ்ச், கூட்டுக் கட்சிச் சேனைகளை ஒன்று சேர்த்துக் கொண்டுபோய்ப் பகைவரைத் தாக்கினார். செப்டம்பர் மாதத்தில் நடந்த மார்னே நதிக்கரை யுத்தத்தினால் (Battle of the Marne) பா/2ரிஸ் நகரம் காப்பாற்றப்பட்டது. ஜெர்மானியர்கள் வடக்கே துரத்தப்பட்டு எயின் (Aisne) நதிக்கரையில் முகாம் செய்தனர். கூட்டுக்கட்சிச் சேனைகளும், அவர்களுக்கு எதிரே நின்று கொண்டன. இரண்டு வாரகாலம் எயின் நதிக்கரை யுத்தம் நடந்தது.

யுத்த மந்திரி கிச்சனர், முன்னெச்சரிக்கையாக, ஐரோப்பிய யுத்தம் குறைந்தது மூன்று வருஷகாலமாவது நடக்குமென்று கூறி ப்ரிட்டிஷ் படையை பலப்படுத்த முயற்சித்தார்.

பெல்ஜியத்தை ஜெர்மானியர்கள் தோற்கடித்ததாகக் கூறி னேமல்லவா? ஒரு பிரிட்டிஷ் சேனை அங்குள்ள ஆன்ட்வெர்ப் (Antwerp) என்னும் நகரத்தை மீட்க முயன்று தோல்வியுற்றது. உடனே ஒரு சிறிய பாகத்தைத் தவிர, பெல்ஜியம் முழுதும் ஜெர்மானியரது வசமாய்விட்டது. மிகுதியிருந்த சிறிய பாகத்தில் இப்ரீஸ் (Ypres) என்ற நகரம் இருந்தது. அதையாகிலும் பாதுகாக் கும்பொருட்டு பிரிட்டிஷ் சேனைத்தலைவர் சேனையை சாமர்த்திய மாக அங்கு அழைத்துச் சென்றார். அக்டோபர்—நவம்பர் மாதங் களில் இப்ரீஸ் யுத்தம் நடைபெற்றது. ஜெர்மானியர் எவ்வளவு உக்கிரமாகத் தாக்கியும் கூட்டுக்கட்சிச் சேனை திறமையுடன் எதிர்த்து நின்றது. அதற்குள் குளிர்காலம் வந்துவிட்டது. ப்ரான் ஸின் மேற்குபாகம் கூட்டுக் கட்சிச் சேனைகளது வசத்தி லிருந் தது. அடிக்கடி எதிரிகளுக்குள் சிறிய யுத்தங்கள் நடந்தன. ஆனால் அவைகளால் ஆள் சேதம் ஏற்பட்டதேயன்றி நிச்சயமான வெற்றி எவருக்கும் கிடைக்கவில்லை. ஜெர்மானியர்களோ கூட் டுக்கட்சிச் சேனை பலக் குறைவாயிருந்த இடங்களில் திடீரென்று தோன்றி தாக்கி, வழிசெய்ய முயற்சித்தனர். 1915-ல் ஏப்ரல்—மே மாதங்களில் இப்ரீஸ் என்ற இடத்தில் இரண்டாவது தடவையாக ஒரு யுத்தம் நேர்ந்தது. ஆனால் ஜெர்மானியர் எதிரிகளுக்குச் சேதம் விளைவித்தாலும், அந்த நகரத்தைப் பிடித்துக் கொள்ள அவர்களால் முடியவில்லை. 1916-ல் வெர்டன் (Verdun) என்றஇடத் தில் நிகழ்ந்த போரில் ஜெர்மன்சேனை முதலில் வெற்றி பெற்று, பிறகு ப்ரெஞ்சு சேனையால் தாக்கப்பட்டுப் பின்வாங்கியது. ஆனால் ஜெர்மானியர்களின் முயற்சி பலனற்றுப் போனதைப் போலவே; கூட்டுக் கட்சியாரது சேனைக்கும் பெரிய வெற்றிகள் கிடைக்க வில்லை. ஜெர்மானியரைத் துரத்தி ஓட்ட அவர்களால் இயலவில்லை. ப்ரெஞ்சு சேனைக்கு மிகுந்த ஆள் சேதமும், இங்கிலீஷ்காரருக் குப் பொருள் நஷ்டமும் ஏற்பட்டன. 1916-ல் ஜுலை மாதத்தில் ஸோம் நதி யுத்தம் (Battle of the Somne) தொடங்கி, அவ்வரு ஷம் முழுவதும் நடந்தது. 1917-ல் நாலைந்து மாதகாலம் ஆன்கர் நதிப்போர் (Battla of the Ancar) நடந்தது. ஆனால் எந்தக்கட் சிக்கும் நிச்சயமான ஜெயம் கிடைக்கவில்லை. இருதிறத்தாரது

சேனைகளும் ஒன்றிற்கொன்று ஏற்றத்தாழ்வின்றி சமமாகவே இருந்து வந்தன. இது ப்ரான்ஸில் நடந்த போரின் விவரம்.

இதுபோல ஐரோப்பாவின் கிழக்குப் பாகத்தில், ரஷ்யாவுக்கும் (கூட்டுக் கட்சிகளில் ஒன்று) மத்திய அரசுகளுக்கும் யுத்தம் தொடர்ச்சியாக நடந்து வந்தது. முதலில் ரஷ்யர்கள் ஜெர்மனியிலடங்கிய கிழக்குப் பிரஷ்யா தேசத்துச் சேனைகளை இரண்டு தடவைகள் எதிர்த்தனர். ஜெர்மன் சேனாதிபதியான **வான் ஹிண்டன் பர்க்** (Von Hindenburg) அவர்களைத் துரத்தி ஓட்டிவிட்டு, மேலும் முன் சென்று, போலண்டு (Poland) தேசத்தின் வழியாக **லித்துவானியா** (Lithuania) வைத் தாக்கினார். அவ்விதமே ஆஸ்ட்ரியா சேனைக்கும் ரஷ்யா சேனைக்கும் மாறிமாறி வெற்றி தோல்விகள் ஏற்பட்டன. ஆஸ்ட்ரியாவுக்குத் தெற்கிலுள்ள ஸெர்வியா என்னும் சிறிய நாட்டைக் கைப்பற்றுவது அந்த தேசச் சேனையால் கூடவில்லை. 1915-ல் ரஷ்ய சேனை ஹங்கேரி (Hungary) யைத் தாக்குவதாக இருந்தது. உடனே ஆஸ்ட்ரியாவிற்கு உதவ ஜெர்மன்படை அனுப்பப்பட்டது. **மாக்கென்ஸன்** (Mackensen) என்ற சேனைத் தலைவர் அடைந்த வெற்றியினால் ரஷ்யர்கள் பின்னுக்குச் செல்லவேண்டியதாயிற்று.

1916-ல் ரஷ்யச் சேனை மீண்டும் வெற்றிபெற்று, ஆஸ்ட்ரியாவுக்குச் சேதம் விளைவித்தது. அதன்பிறகு ஹிண்டன்பர்க் தமது முழுத்திறமையையும் காட்டி யுத்தம் நடக்குமாறு செய்யவே, பயிற்சியற்ற ரஷ்யச் சேனைகள் பறந்தோடின. அப்பொழுது **இரண்டாவது நிக்கோலஸ்** (Nicholas II) என்பவர் ரஷ்யச் சக்கரவர்த்தியாயிருந்தார். அவரால் விஷயங்களைச் சீர்திருத்த முடியவில்லை. அதன்பிறகு ரூமேனியா அரசு ரஷ்யாவின் உதவிற்கு வந்தது. அது சிறிதுகாலம் முன்னதாகவே வந்திருந்தால், அநுகூலம் ஏற்பட்டிருக்கலாம். இப்பொழுது காலதாமதமாய்விட்டது. அதற்குள் பல்கேரியா அரசாங்கத்தார் மத்திய அரசுகளுடன் சேர்ந்துகொண்டு, ஸெர்வியாவைக் கைப்பற்றுவதில் ஆஸ்ட்ரியாவுக்கு உதவி புரிந்து ரூமேனியாவின்மீதும் படையெடுத்துச் சென்றது. அதன் பின்னர் மாக்கென்ஸன் என்னும் சேனைத்தலைவர் ரூமேனியாவை

சமாதானத்திற் குட்படும்படி செய்தார். அச்சமயத்தில் ரஷ்யாவில் ஒரு பெரிய புரட்சி நடந்தது. 1917-ல் ரஷ்ய அரசர் சிம்மாதனத்திலிருந்து விலக்கப்பட்டார். போல்ஷிவிக்கர்களின் ஆட்சி நிலைபெற்றது. அவர்களே இன்னமும் ரஷ்யாவில் பரிபாலனம் செய்து வருகின்றனர். போல்ஷிவிக்கர்கள் ஐரோப்பிய யுத்தத்தில் கலந்துகொள்ள விரும்பவில்லையாதலால் அவர்கள் 1918, மார்ச் 3-ம் தேதியன்று ப்ரெஸ்ட்—லிடோவ்ஸ்க் (Brest—Litovsk) என்ற இடத்தில் ஜெர்மனியுடன தனியாக சமாதானம் செய்துகொண்டனர். அதனால் கூட்டுக் கட்சியாருக்கு பலக்குறைவு ஏற்பட்டது. மேலும் ஐரோப்பாவின் கிழ்ப்புறத்தில் ரஷ்யாவின் உபத்திரவம் இல்லாதுபோனது, ஜெர்மனிக்கு ப்ரான்ஸில் யுத்தம் நடத்த அதிக சௌகரியமாக இருந்தது.

சண்டை தொடங்கியபின் துருக்கியும் மத்திய அரசுகளுடன் சேர்ந்துகொண்டது. இங்கிலீஷ்காரர், தமக்கு ஜீவாதாரமான இந்திய தேசத்திற்கு வழியாயுள்ள ஸூயஸ் ஜலஸந்தி தம்மை விட்டுப் போய்விடுமோவென அஞ்சி ஈஜிப்ட்டில் ஒரு ப்ரிட்டிஷ் சேனையை வைத்திருந்தனர். ஈஜிப்ட்டின் அதிபதி துருக்கிக்கு ஆதரவு அளித்த காரணத்தைக்கொண்டு ப்ரிட்டிஷ் துரைத்தனத்தார் அவரை நீக்கிவிட்டு ஈஜிப்ட் தேசத்தைத் துருக்கியின் ஆதீனத்திலிருந்து மீட்டுத் தமது ஆதீனத்திற்கடங்கிய ஒருவரை அதிகாரியாக நியமித்தனர். மேலும் 1915-ல் டார்டனல்ஸ் (Dardanells) ஜலசந்திப் பிரதேசத்தைக் கைப்பற்றிக்கொண்டு அதன் மூலம் துருக்கிக்குப் பெரிய அபாயம் உண்டு பண்ணவும் யோசித்தனர். அந்த யோசனை நிரம்பவும் துணிகரமானதேயானாலும் அது பலிதமடையவில்லை. நிலக்கோட்டைகளைப் பிடிப்பதற்குக் கப்பல்களால் அதிக உதவி ஏற்படவில்லை. துருக்கியர்களும் தமது சேனையைப் பெருக்கிக்கொண்டனர். 1915-ல் ஏப்ரல் மாதத்தில் ப்ரிட்டிஷ் சேனை அந்தப் பிரதேசத்தில் வந்திறங்கியது. ஆறேழுமாதகாலம் அந்தச் சேனை மிகவும் பாடுபட்டுப் போர்புரிந்து வந்தது. அதன் பின்னர் ஜெர்மன் அரசர் துருக்கிக்கு உதவி அனுப்பினார். கிரேக்க அரசரும் ஜெர்மனிக்கு ஆதரவு அளித்தார். ஆகவே, இவ்

வித சந்தர்ப்பங்களில் டார்டனல்ஸுக்குச் சென்ற பிரிட்டிஷ் படையை ஜாக்கிரதையாகத் திருப்பி யழைத்துக் கொண்டனர்.

ஆனால் துருக்கிக்குப் பல இடங்களில் எதிர்ப்பு ஏற்பட்டது. ரஷ்யர்கள் அதன் வசத்திலிருந்த சில பிரதேசங்களைப் பிடித்துக் கொண்டனர். இந்தியச் சிப்பாயிகளடங்கிய சேனை ஒன்று பாரசீகக் குடா வழியாகச் சென்று மெஸொபொடேமியா (Mesopotamia) வில் உள்ள பஸ்ரா (Basra)வைப் பிடித்துக்கொண்டு பாக்தாத் (Baghdad) நகரத்தினருகில் சென்றது. ஆனால் அவ்வளவு பெரிய காரியத்தைச் செய்து முடிக்கத் தேவையான பலம் அந்தச்சேனைக்கு இல்லை. ஆகவே, இந்திய சேனையின் முற்பகுதி, குட் எல் அமாரா (Kut-el-Amara) என்ற இடத்தில் எதிரிகளின்வசமாயிற்று. 1916 ல் அவர்களில் பலர் துருக்கியினால் சிறைப்படுத்தப்பட்டனர். இவ்வாறு டார்டனல்ஸ், மெஸொபொடேமியா ஆகிய இரண்டு இடங்களிலும் தோல்வி ஏற்பட்டது பிரிட்டிஷ் சேனைக்கு அபகீர்த்தியை உண்டு பண்ணியது.

1916-ல் மே மாதத்தில் இற்றாலியும் சண்டையில் கலந்து, கூட்டுக் கட்சியோடு சேர்ந்துகொண்டது. ஆஸ்ட்ரியாவின் எல்லைப்புரங்களை இற்றாலியின் சேனை தாக்கி வந்தது.

பிரிட்டன் தேசத்துக் கடலதிகாரத்தை ஒழித்துவிட்டால், தனது முயற்சி பலித்துவிடுமென் றெண்ணிய ஜெர்மனி முதலில் கூட்டுக் கட்சியாரது கப்பல்களைத் தாக்கியும், இங்கிலண்டின் கடற்கரையில் சென்று துன்புறுத்தியும் வந்தது. ஆனால் பிரிட்டன் தேசத்தின் கடலதிகாரத்தை அழிக்க அதனால் இயலவில்லை. ஜெர்மனி நிரம்பவும் பாடுபட்டு உற்பத்தி செய்திருந்த கப்பற்படை, அந்த நாட்டின் வடபுறத்தில் இருந்தது. அதையும் 1916-ல் மே மாதம் 31-ல் பிரிட்டிஷ் கப்பற்படைத் தலைவரான ஜெல்லிகோ ஜட்லன்டுக்கு அருகில் தோற்கடித்தார்.

உலகின் இதர பாகங்களிலும் ஜெர்மனிக்குத் தோல்வியே ஏற்பட்டது. பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைச் சேர்ந்த குடியேற்ற நாடுகளும் இந்தியாவும் கூட்டுக் கட்சிக்கே உதவி செய்தன. சீனாவில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த பிரதேசங்களை ஜப்பான்

கைப்பற்றியது. ஆப்ரிக்காவிலிருந்து ஜெர்மானியர் துரத்தப்பட்டனர். குடியேற்ற நாடுகளும் இந்தியாவும் பிரிட்டனுக்கு ஏற்பட்ட அபாயத்தைக் கருதி, தங்களால் இயன்ற வரையில் உதவி புரிந்தன. நமது இந்தியாவிலிருந்து பொதுஜனங்களும் சிற்றரசர்களும் ஏராளமான ஆட்களையும் பணத்தையும் சேகரித்து அனுப்பிப் பேருதவி புரிந்தது எல்லோருக்கும் பிரத்தியக்ஷமாகத் தெரிந்த விஷயம்.

தனது முக்கிய எதிரியான பிரிட்டனைத் தோற்கடிக்க இயலாதுபோகவே, ஜெர்மனி புதிய புதிய தந்திரங்களை அநுஷ்டித்தது. கடலின் கீழ்ச் செல்லக்கூடிய கப்பல்களைக்கொண்டு ஜெர்மானியர் இங்கிலண்டின் கடல் அதிகாரத்தை அழித்துவிட முயன்றனர். யுத்தத்தில் சம்பந்தப்படாத வியாபாரக் கப்பல்களையும் கூட, ஷை நீர் மூழ்கிக் கப்பல்கள் மறைவாயிருந்தபடி தாக்கித் தகர்க்கெறியலாயின. பிரிட்டிஷ் தீவுகளுக்குச் சென்ற கப்பல்களெல்லாம் அவ்வித அபாயத்திற்கு உள்ளாயின. ஆகவே, கடலில் நீர்மட்டத்தின்மீது பிரிட்டன் சர்வாதிகாரமும் படைத்திருந்தாலும் அது உபயோகமற்றுப் போயிற்று. நீர் மூழ்கிக் கப்பல்களை எதிர்க்கும் வழியைக் கண்டுபிடிக்காவிடில் அதனால் மற்ற கப்பல்களுக்கு அபாயம் ஏற்படுவது திண்ணமாயிற்று. நீர் மூழ்கிக் கப்பல்களைக்கொண்டு பலருக்கு சேதம் விளைத்த ஜெர்மனியை எல்லோரும் தூற்றலாயினர். அதுவரையில் எந்தக் கட்சியிலும் சேராதிருந்த அமெரிக்க அரசாங்கத்தாரும் அதைக் கண்டித்தனர். ஏனெனில் இரண்டு அரசுகளுக்குள் மனஸ்தாபம் ஏற்பட, அதுபற்றி, சண்டை நடந்தாலும், கூடியவரையில், பொதுமக்களுக்கும் மற்ற தேசத்து வியாபாரிகளுக்கும் தீங்கு நேரிடாமல் பார்த்துக்கொள்வது மற்ற அரசுகளின் கடமையன்றோ. உதாரணமாக, 1915 மே மாதத்தில் ஆயிரம் பிரயாணிகள் அடங்கிய ஒரு கப்பலை ஜெர்மனியார் மூழ்கடித்து விட்டனர். ஷை பிரயாணிகளில் சிலர் அமெரிக்க தேசத்தாராயிருந்தனர். நீர்மூழ்கிக் கப்பல்களுக்கு இரையானவர்களுள் யுத்த மந்திரி கிச்சனரும் ஒருவரானர். அவர் ரஷ்யாவுக்குச் சென்றுகொண்டிருக்கையில் ஓரிரவில் அவருடைய கப்பல் எதிரிகளால்




(608-வது பக்கம்)

தாக்கப்பட்டு, அவர் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய் விட்டார். மிகுந்த சிறப்பு வாய்ந்த சேனாதிபதி அவ்வளவு பரிதாபகரமான முடிவையடைந்தது எல்லோருக்கும் அதிகமான விசனத்தை உண்டாக்கியது. ஆனால் ஜெர்மனியார் அதோடு நிற்கவில்லை. உலகம் முழுதும் அச்சமுற்று நடுங்கும்படி செய்து வெற்றியடைய எண்ணி அவர்கள் அதிக்கிரமமான செய்கைகளில் இறங்கினர். ஜர்மனியில் இருந்த பிரிட்டிஷ் பிரஜைகளைச் சிறைப்படுத்துவது, கைதிகளைப் பலவிதங்களில் வருத்துவது, ஆகாயக்கப்பல்களைக் கொண்டு பல நகரங்களின்மீது வெடிகுண்டுகளை எறியும்படி செய்வது முதலான அதர்மயுத்த முறைகளையும் அவர்கள் அநுஷ்டித்தனர். ஆனால், அதனால் பல மனிதர்களுக்குத் துன்பமும், சேதமும், உலகத்தின் வியாபாரத்திற்குப் பெரிய தடையும் ஏற்பட்டனவே யன்றி, யுத்தம் முடிவடைந்தபாடில்லை. நீர் மூழ்கிக் கப்பல்களால் மாத்திரம் பிரிட்டன் தேசத்துக் கப்பற்படைக்கு அதிக சேதம் உண்டாயிற்று. உணவுப் பொருள்களின் விலை உயர, பஞ்சமும் பசிப்பிணியும் பெருகிப் போயின.

மூன்று வருஷகாலம் போர் நீடித்து நடந்ததானாலும், எந்தக் கட்சிக்கும் நிச்சயமான வெற்றியோ தோல்வியோ ஏற்படாதது பற்றி, எல்லோரும் கவலை கொண்டு தவிக்கலாயினர். ஆஸ்க்வித் மந்திரிசபை யுத்தம் நடத்தப் போதிய திறமையைப் பெறவில்லையோவெனப் பலர் சந்தேகித்தனர். எனவே, 1915 ஜூன் மாதத்தில் மந்திரி சபை திருத்தமடைந்தது. அப்பொழுதும் ஆஸ்க்வித்தே பிரதம மந்திரியாக இருந்தார். ஆனால் லிபரல் கட்சியிலிருந்து மாத்திரமன்றி, மற்ற கட்சிகளிலிருந்தும் மந்திரிகள் பொறுக்கப்பட்டனர். போனர் லா, பால்போர் முதலான கன்ஸர்வேடிவ் பிரமுகர்களும் சில தொழிற்கட்சித் தலைவர்களும் மந்திரிகளாக வேலைசெய்தனர். மேலும் யுத்தத்திற்கு அவசியமான சாதனங்களைத் தயார்செய்யும் வேலையை லாய்ட் ஜார்ஜ் ஏற்றுக் கொண்டார். அந்த மந்திரி சபை 'தேசீய மந்திரி சபை' (National Ministry) என்று குறிக்கப்படுகிறது.

ஆனால், புதிய மந்திரிகளின் நிர்வாகத்திலும் விசேஷ வெற்றிக் குறிகள் காணப்படவில்லை. ஒற்றுமைக் குறைவும் சுறுசுறுப்

பின்மையும் அதன் வேலைக்குக் குந்தகம் விளைத்தன. யுத்தமோ, முடிவடையும் வகையின்றி, மெதுவாக நடந்துவந்தது. கிச்சனர் கப்பலில் இறந்துபோகும் வரையில் யுத்தமந்திரியாகவே இருந்தார். அவர் சேனையைப் பெருக்குவதில் மகத்தான சேவை செய்தாராஞலும், மந்திரியாக நிர்வாகம் நடத்துவதில் திறனற்றவராகவே இருந்தார்.

1916-ல் அயர்லன்டில் ஒரு குழப்பம் ஏற்பட்டது. சேனைக்கு ஆள் சேர்க்கும்பொருட்டு, யுத்தம் செய்யக்கூடியவர்கள் கட்டாயமாய் சேனையில் சேரவேண்டுமென்று அவ்வருஷம் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. ஆனுல் அயரிஷ் தலைவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்க, அந்தச் சட்டம் அயர்லன்டில் பிரயோகமாகாதவாறு செய்யப்பட்டது. பார்னெலுக்குப் பின் ரெட்மன்ட் என்பவர் அயரிஷ் தலைவரானுர் என்பதை முன்னரே குறிப்பிட்டோம். ஆனுல் அதன்பிறகு, ஸின் பீன் (Sinn Fein) என்ற அமிதவாதியொருவர் தோன்றி தமது நாட்டிற்குப் பூர்த்தியான சுயாதீனம் வேண்டுமென்று போராடினுர். ஜெர்மானியர் பிரிட்டனுக்குத் தீங்கிழைக்க எண்ணி, ஸின்பீன் கட்சிக்கு ஆதரவளித்தனர். 1916-ல் அயர்லண்டில் டப்ளின் நகரத்தில் ஒரு பெரிய கலகம் நடந்தது. பலர் இறந்தனர்; பலர் காயமடைந்தனர். அதனுல் ஸின்பீன் கட்சியார் அடக்கப்பட்டனர்.

கிச்சனர் மாயமாய் மறைந்துபோனபின், லாய்ட் ஜார்ஜ் யுத்தமந்திரியாயிருந்து, உலகப்பிரசித்தி பெற்றுர். நாட்டின் தலைவருக்குத் தேவையான குறிகள் யாவும் அவரிடம் பொருந்தியிருந்தன. இங்கிலீஷ்காரரும் அவரையே முற்றிலும் நம்பியிருந்தனர். ஆஸ்க்வித் மந்திரிசபை செய்துவந்த அறைகுறையான காரியங்களெல்லாம் அவருக்குத் திருப்திகரமாக இல்லையாதலால், 1916, டிஸம்பர் மாதம் யுத்தமுறையில் அவர் முக்கியமான சில மாறுதல்களைச்செய்ய முனைந்தார். தாம் அவருக்கு இடைஞ்சலாயிருப்பது கூடாதெனநினைத்து ஆஸ்க்வித் விலகிக்கொண்டார். பல லிபரல்களும் அவருடன் விலகிக்கொண்டனர்.

உடனே லாய்ட் ஜார்ஜ் பிரதம மந்திரியாயிருந்து ஒரு கூட்டு மந்திரிசபையை யமைத்து ஐந்தாறு வருஷகாலம் சுயேச்சாதிகாரம்

செலுத்தினர். யுத்தத்தை நடத்திச்செல்ல அவருடைய புத்தி கூர்மையும் நிர்வாகத் திறமையும் அவசியமாயிருந்தன. யுத்த நிர்வாகத்தை கவனிக்கும்பொருட்டு கா/2பினட் சபையாரில் ஐவர் ஒரு சிறிய குழுவாக அமைந்துகொண்டனர். அந்த சந்தர்ப்பத்தில் அவ்வாறு சிலரிடம் யுத்த நிர்வாககாரியத்தை ஒப்படைப்பதே யுக்தமானதாகத் தோன்றியது; மற்ற மந்திரிகள் தம் தமது கடமைகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். ஷெ சிறிய யுத்தசபை "வார் கவுன்ஸில்" என்று குறிக்கப்படுகிறது.

லாய்ட் ஜார்ஜின் நிர்வாகம் ஆரம்பித்ததும் யுத்தத்தின் போக்கு தெளிவாக மாறுதலடைந்தது. யுத்த தளவாடங்களைச் சேகரித்து, வேண்டியபொழுது உதவும்பொருட்டு அதிகப்படியான சில மந்திரிகளையும் அவர் நியமித்தார். மேலும் அதுவரையில் இராஜீயப் போராட்டத்தில் கலந்துகொள்ளாத சிலரையும் அவர் மந்திரிகளாக நியமித்துக் கொண்டார். உதாரணமாக, சேனைக்குத் தேவையான உணவுப் பொருள்களைச் சேகரிப்பதில் திறமை மிக்கவர் ஒருவர் இராஜீயப் போராட்டத்தில் கலக்காமல் தனித்து இருக்கலாம். ஆனால் அவருடைய உதவியைப் பெறுவது சுலபமாகும்பொருட்டு, அவரையும் மந்திரியாகச் செய்வது நன்மையையே பயக்கும்.

லாய்ட் ஜார்ஜ் ஏற்படுத்திய யுத்த சபையின் நிர்வாகத்தில் முதலில் அவசியமான சீர்திருத்தங்கள் நிறைவேறின. நீர்மூழ்கி கப்பல்களின் அபாயத்திலிருந்து தப்பவும், பஞ்சம்வராமல் பாதுகாக்கவும் வழிகள் செய்யப்பட்டன. எதிரிகளுடன் போராடும் துன்பம் ஒருபுறமிருக்க, யுத்தத்தினால் நாட்டில் ஏற்பட்ட துயர்களைத் தீர்ப்பதும் அவசியமாயிற்று. எனவே, லாய்ட் ஜார்ஜ் சற்று கடுமையாகவே நிர்வாகம் நடத்தினர். நாட்டிற்குப் பொதுவான அபாயம் நேர்ந்த சமயத்தில், பிரஜைகளுடைய சுதந்திரத்திற்குச் சிறிதளவு பங்கம் விளைந்தாலும் பாதகமில்லை என்ற கொள்கையை அப்பொழுது மந்திரி சபையார் ஆதரித்தனர். அதனால், துரைத்தனத்தார் சில தவறுகள் இழைத்தனராலும், சமூக நலத்தின் பொருட்டு, தனி மனிதருடைய பாத்தியதைகள் ஓரளவு தியாகம் செய்யப்படுவது அந்த அபாய சமயத்தில் அவசியமாயிருந்தது. யுத்த

சமயத்தில் ஜனநாயகதத்துவமெல்லாம் இங்கிலண்டில் சிறிதளவு மட்டுப்பட்டே இருந்தது. தேசபக்தியை உணர்ந்த எல்லா ஜனங்களும் எவ்விதமான தியாகத்திற்கும் துணிந்து நின்றனர். பிரிட்டனுக்கு அதுவரையில் நேரிடாத மகா பிரமாதமான அபாயம் நேரிட்டதானாலும், இழிவான சமாதானத்தில் இறங்க, எவரும் விரும்பவில்லை. தமது நாட்டின் சுயாதீனத்தையும் மேம்பாட்டையும் பாதுகாக்க எல்லோரும் முனைந்து நின்றனர்.

1917-ல் கூட்டுக்கட்சியார் தாம் ஜெயமடைவோமென்ற நம்பிக்கையுடன் யுத்தத்தை நடாத்தினர். முன்போலவே வெற்றி தோல்விகள் மாறிமாறி ஏற்பட்டன. 1916-ல் ஸாம்நதிக்கரை யுத்தத்தில் அதிக சேதத்திற் கிலக்காயிருந்த ஜெர்மன் சேனை சற்று பின் வாங்கி, காம்ப்ரே (Cambrai), ஸெயின்ட் க்வேன்டின் (St. Quentin) என்ற இடங்களுக்கு மத்தியில் தங்கியிருந்தது. அங்கு ஜெர்மன் சேனாதிபதி ஹின்டன்பர்க் எவராலும் எதிர்க்கமுடியாத கோட்டை கொத்தளங்களைக் கட்டியிருந்தார். கூட்டுக் கட்சியாருக்கு அங்குமிங்குமாக அற்பவெற்றிகள் கிடைத்தனவேயன்றி, நிச்சயமான வெற்றியொன்றும் கிடைக்கவில்லை. ப்ரெஞ்சுக்காரரது சேனைக்கு அதிக சேதம் ஏற்பட்டதனால், அவர்கள் முன்போல தைரியமாக எதிரிகளைத் தாக்கமாட்டாமல் தயங்கிநின்றனர். மேலும் கூட்டுக்கட்சிகளுள் ஒன்றான இற்றாலிக்கும் ஆஸ்ட்ரிய - ஜெர்மன் சேனைக்கும் காப்போரெட்டோ (Caporetto) என்ற இடத்தில் சந்திப்பு ஏற்பட, இற்றாலியின் சேனை எதிரிகளுக்கு வழி விட்டுவிட்டது. ஆனாலும் பிரிட்டிஷ்-ப்ரெஞ்சு சேனையின் உதவியைக்கொண்டு, எதிரிகள் அதற்கப்பாலும் தொடர்ந்துவருவது அசாத்தியமாக்கப்பட்டது.

1917-ல் ஐரோப்பாவின் மேற்கு பாகத்தில் கூட்டுக்கட்சிக்கு முதலில் வெற்றியும் பின்பு தோல்வியும் கிடைத்தன. கிழக்குப் பிரதேசத்தில், அதற்கு நேர்மாறாக, முதலில் தோல்வியும் பின்பு வெற்றியும் ஏற்பட்டன. ரஷ்யர்கள் யுத்தத்தினின்று விலகிக் கொண்டனர். ஆனால் அதுவரையில் மத்திய அரசுகளுக்கு உடந்தையாயிருந்த க்ரீக்க அரசர் ஜூன் மாதத்தில் நீக்கப்பட்டுப் போனதனால் அதன்பிறகு க்ரீக்க சேனை கூட்டுக்கட்சியாருக்கு

உதவலாயிற்று. அக்டோபர் மாதத்தில் சேனைத்தலைவர் அல்லென்பி (Allenby) துருக்கியர்களைத் தோற்கடித்தார். மெஸொபொடேமியாவில் ஸர் ஸ்டான்லி மாட் (Sir Stanley Maude) என்ற சேனைத்தலைவர் குட்-எல்-அமாராவைக்கைப்பற்றி பாக்தாத் நகரத்தை நோக்கிச்சென்றார்.

1917-ல் யுத்தத்தின் முடிவை பாதிக்கக்கூடிய வேறொரு விசேஷ சம்பவமும் நிகழ்ந்தது. அதாவது, அதுவரையில் இந்த யுத்தத்தில் நடுநிலைமை வகித்திருந்த அமெரிக்காவும் கூட்டுக்கட்சியாருடன் சேர்ந்துகொண்டது. ஜெர்மனியின் அதிக்கிரமமான செய்கைகளைக் கண்டே அமெரிக்கா அவ்விதம் செய்யவேண்டியதாயிற்று. கூட்டுக் கட்சியாருடன் வியாபாரம் செய்தவர்களுக்கு நீர்மூழ்கிக் கப்பல்களால் பெரிய அபாயம் நேர்ந்துவந்தது. பல உயிர்கள் சேதமாயின. அந்தச் செய்கை அமெரிக்காவுக்குச் சற்றும் சம்மதியாயிருக்கவில்லை. எத்தனையோ அமெரிக்கர்களும் நீர்மூழ்கிக் கப்பல்களுக்கு பலியாய்ப் போயிருந்தனர். எனவே, தொலை தூரத்தில் உள்ள ஐரோப்பாவின் தகராறுகளில் கலந்துகொள்ளாமல் இருக்க நிச்சயித்திருந்த அமெரிக்கா அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு, யுத்தத்தில் சேரவேண்டியதாயிற்று. அம்மாதிரி கூட்டுக் கட்சியாருக்கு ஒரு புதிய பலம் சேர்ந்ததற்கு ஜெர்மனியே உத்தரவாதியா யிருந்தது. அப்பொழுது அமெரிக்காவின் அதிபதி ஸ்தானத்தை உட்ரோ வில்ஸன் (Woodrow Wilson) என்பவர் வகித்து வந்தார். 1917, எப்ரல் 6-ம் தேதி அவர் யுத்தத்தில் கலந்துகொண்டதாக அறிக்கை வெளியிட்டார். நீர்மூழ்கிக்கப்பல்களின் உபத்திரவத்திற்குட்படாமல் பல அமெரிக்க சிப்பாயிகள் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டனர். எனவே, கூட்டுக்கட்சிகளில் ஒன்றான ரஷ்யா யுத்தத்திலிருந்து நீங்கிவிட்டாலும், அதைக் காட்டிலும் அதிக பலம் வாய்ந்ததான அமெரிக்காவின் உதவி அவர்களுக்குக் கிடைத்து விட்டது.

1918 மார்ச்-எப்ரல்-மே மாதங்களில் கூட்டுக்கட்சியாருக்குப் பெரிய அபாயம் நேரும்போலிருந்தது. ஜெர்மானியர்கள் ஒவ்வோர் இடமாகத் தாக்கிக்கொண்டு முன் வந்துகொண்டிருந்தனர். ப்ரான்ஸு, இங்கிலண்ட் ஆகிய இரண்டு தேசங்களின் சேனை

களுக்கும் சம்பந்தம் அற்றுப்போம்படி அவர்கள் செய்துவிடுவார்களோ வென அஞ்சத்தக்க நிலைமை ஏற்பட்டது. அதிர்ஷ்டவசமாக, அவர்களுடைய போக்கு தடைப்பட்டது.

அந்த சமயத்தில் கூட்டுக்கட்சியாரது அமைப்பில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவர்களது சேனுவீரர்கள் அனைவரும் தைரியமாகப் போர் புரிந்தனராலுைம், அதுவரையில் ஒவ்வொரு சேனையும் தனித்தனி ஒவ்வொரு சேனுதிபதிக்குக் கீழ்ப்பட்டு, வெவ்வேருன முறைகளையும் யோசனைகளையும் பின்பற்றி நடந்து வந்தமையால், பொதுவான பெரிய வெற்றி ஏற்படாமல் இருந்தது. கூட்டுக் கட்சிச் சேனைகள் யாவற்றையும் ஒருமித்து நடாத்தவும், யுத்த முறைகளை அந்தந்த சமயத்தில் விரைவாகவும் முன்யோசனையுடனும் நிச்சயிக்கவும், பூர்த்தியான அதிகாரம் ஒரே சேனுதிபதியிடம் இருப்பது நலமானதென உணர்ந்தனர். "திறமைபெற்ற இரண்டு சேனைத் தலைவர்களைவிட, பயிற்சியே பெருத ஒரு சேனைத்தலைவரே மேல்" என்றுநெப்போலியன் கூறினுராம். யுத்தகளத்தில் இரண்டுசேனைத் தலைவர்கள் ஒன்றுக்கொன்று எதிரிடையான உத்தரவுகளைப் பிறப்பித்தால், பகைவரது வேலை சுலபமாகி விடுமல்லவா. எனவே ஃபிரிட்டிஷ், ப்ரெஞ்சு முதலிய கூட்டுக் கட்சியாரது சேனைகள் எல்லாவற்றிற்கும் பொதுவான சேனுதிபதியை நியமிக்கவேண்டுமென்ற யுக்தி லாய்ட் ஜார்ஜுக்குப் புலப்பட்டது. தமது யுக்தியை சிலர் அங்கீகரிக்காததையும் பொருட்படுத்தாமல், அவர் விடா முயற்சியுடன் தமது திட்டத்தை நிறைவேற்றினுர். மார்ஷல் போஷ் (Marshal Foch) என்பவர் ஃபிரிட்டிஷ் — ப்ரெஞ்சு சேனைகள் யாவற்றிற்கும் பொதுவான சேனுதிபதியானுர். போரின் தொடக்கத்தில் இங்கிலீஷ் சேனைத் தலைவராயிருந்த ஸர் ஜான் ப்ரெஞ்ச் என்பவருக்குப்பின் ஸர் டகலஸ் ஹெய்க் (Sir Douglas Haig) என்பவர் அந்தப் பதவிக்கு வந்திருந்தார். அவரும் லாய்டு ஜார்ஜின் ஆலோசனையை அங்கீகரித்தார். அந்தப் புதிய ஏற்பாட்டிற்குப்பின் காரியங்கள் கூட்டுக் கட்சியாருக்கு அநுகூலமாகவே நடைபெறலாயின. அப்பொழுது அமெரிக்க சிப்பாய்களும் உதவிக்கு வந்துசேர்ந்தனர். சேனுதிபதி போஷ் 1918-ல் ஜுலை மாதத்தில் எதிரிகளைத் தாக்க ஆரம்பித்து, அடுத்தடுத்து பல வெற்றி

களை அடைந்தார். ஜெர்மனியாரும் உக்கிரமாகவே போர் புரிந்தன ராலும், அவர்களுக்கு துரதிருஷ்டகாலம் சமீபிப்பதாகத் தோன்றியது. மார்னே நதிக்கரையில் இரண்டாவது யுத்தம் ஒன்று நடைபெற்றது. ப்ரான்ஸ்தேசத்தில் எதிரிகளால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்த பிரதேசங்கள் விரைவில் மீட்கப்பட்டன. கிழக்குத் திசையிலும் எதிரிகள் பின்னடைந்து வந்தனர். மெஸொபொடேமியாவில் போர் நடத்திய மாட் என்ற சேனைத்தலைவர் இறந்தபின் மார்ஷல் (Marshall) என்பவர் அந்தப் பதவியை ஏற்றுக்கொண்டிருந்தார். அவர் மோஸூல் (Mosul) நகரம் வரையில் முன்னுக்குச் சென்றார். பாலஸ்டைன் தேசத்தில், சேனைத் தலைவர் அல்லென்பி, துருக்கிய சேனையைத் தாக்கிவந்தார். அவர் ஜெருஸலத்தைக் கைப்பற்றிக்கொண்டு டமஸ்கஸ் (Damascus) நகரை நோக்கிச்சென்று அக்டோபர் 26-ம் தேதியன்று அலெப்போ (Aleppo) பட்டணத்தைக் கைப்பற்றி, ஸிரியா (Syria) மாகாணத்தைத் தமது வசப்படுத்திக் கொண்டார். அதனால் துருக்கிக்கும் மெஸொபொடேமியாவுக்கும் இருந்த போக்குவரவு சம்பந்தம் அற்றுப் போய்விட்டது. அதே காலத்தில், ஸெப்டம்பர் 29-ம் தேதியன்று, பல்கேரியா தோல்வியடைந்து கூட்டுக் கட்சியாருக்கு அடங்கிப் போயிற்று. அதன்பிறகு ஏற்கெனவே ஸிரியாவையும், மெஸொபொடோமியாவையும் இழந்து, பலக்குறைவடைந்திருந்த துருக்கியும் நவம்பர்மாத ஆரம்பத்தில் பணிந்துபோயிற்று; எனவே, மத்திய அரசுகளுக்குக் கிழக்கு திசையில் கிடைத்துவந்த உதவி அது முதற்கொண்டு இல்லாது போயிற்று.

அப்பொழுது ஆஸ்ட்ரியா தேசமும் துன்பகரமான நிலைமையில் இருந்தது. நான்கு வருஷகாலம் நீடித்து நடந்த யுத்தத்தினுல் அதுவும் அபாரமான சேதத்திற்கு இலக்காயிருந்தது. ஸெர்வியா தேசம் அதனிடமிருந்து மீட்கப்பட்டது. இற்றலி தேசத்துச் சேனையொன்று ஆஸ்டிரியப் படையைத் தோற்கடித்துத் துரத்திவிட்டது. அந்த சந்தர்ப்பத்தில் ஆஸ்ட்ரிய அரசு, அமெரிக்க அதிபதியால் நிர்ணயம் செய்யப்பட்டபடி சமாதானம் செய்துகொள்ளத் தயாராயிருந்தது. நவம்பர் 3-ம் தேதியன்று சமாதானம் ஏற்பட, அது யுத்தத்திலிருந்து விலகிக் கொண்டது.

ஜெர்மனி மாத்திரம் தனித்து நின்றது. பல்கேரியா, துருக்கி, ஆஸ்ட்ரியா ஆகியவை பணிந்தபின், மேற்குத்திசையிலும் கூட்டுக் கட்சியாருக்கு ஆச்சரியகரமான வெற்றிகள் கிடைத்தன. ஜெர்மன் சேனை பின்னுக்குப் போகத் தொடங்கியது. பெல்ஜியத்தின் பிரஜைகளும் தமது நாட்டை மீட்க முயன்றனர். 1918-ம் ஸு அக்டோபர் மாதத்தில் ஜெர்மன் அரசர் சமாதானத்திற்குத் தயாரா யிருப்பதாக அமெரிக்கஅதிபதி வில்ஸனுக்குச் செய்தி யனுப்பினர். ஆனல் ஜெர்மன் சேனை ஜெயித்திருந்த இடங்களையெல்லாம் காலி செய்தாலன்றி, சமாதானப் பேச்சு நடவாதென்று வில்ஸன் மறு மொழிகூறிவிட்டார். அப்பொழுது ஜெர்மனியின் யுத்ததளவாடங்கள் அநேகமாய்த் தீர்ந்துபோய்விட்டன. ஜெர்மன் தேசத்து ஜனங்களும் அமைதியை நாட்டினர். அதற்குள் கூட்டுக் கட்சியாரின் சேனைக்கு வெற்றிக்கு மேல் வெற்றி கிடைத்து வந்தது. அதற்குமேல் தனது கை ஓங்காதென்பதைக் கண்ட ஜெர்மனி 1918-ம் ஸு நவம்பர் மாதத் தில் பணிந்து போயிற்று. அதற்குள் ஜெர்மன் சக்கரவர்த்தி நீக் கப்பட்டுப் போக, அந்த தேசத்தில் ஜனநாயக ஆட்சி ஸ்தாபிக்கப் பட்டது. நவம்பர் 11-ம் தேதியன்று ஜெர்மனி அவசரமான பூர் வாங்க சமாதானத்திற்கு உட்பட்டது. அதன்படி ஜெர்மன் துரைத் தனத்தார் தம்மிடமிருந்த யுத்த தளவாடங்களையும் இராணுவ சாத னங்களையும் கூட்டுக்கட்சியாரிடம் ஒப்படைத்துவிட்டனர்.

1919-ல், சமாதானத்தைப் பூர்த்தியாக நிறைவேற்ற, பாரிஸ் நகரத்தில் கூட்டுக்கட்சியாரது சபை கூடியது. அதில் முக்கியமாக பிரிட்டிஷ், ப்ரெஞ்சு, இற்றலி ஆகியவற்றின் பிரதம மந்திரிக ளான லாய்ட் ஜார்ஜ், க்ளேமேன்ஷியூ (Clemenceau) ஆர் லன்டோ (Orlando) ஆகியவர்களும் அமெரிக்க அதிபதி வில்ஸ னும் சேர்ந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தனர்.

இனியாவது உலகில் இத்தகைய மாபெரும் போர்கள் விளையா மல் செய்யும் நோக்கத்துடன் ஒரு சர்வதேச மகா சங்கத்தை (League of Nations) ஸ்தாபிக்க வேண்டுமென்று வில்ஸன் பிரஸ் தாபித்தார். மற்ற அரசுகளும் அதற்கிசைந்தன. அதற்கான விதி களையும் அவர்கள் தயாரித்தனர்; சங்கத்தின் இருப்பிடம் ஜினீவா (Geneva) நகரத்தில் ஏற்படுத்தப்பட்டது. பல நாடுகளுக்குள் வேற்


கானடா
பிரிட்டிஷ் தீவுகள்
கயானா
இந்தியா
ஆஸ்டிரேலியா
டாஸ்மேனியா
ந்யூஸிலண்ட்
பிரிட்டிஷ் ஸாமராஜ்ஜியம்
பிரிட்டிஷ் ஸாம்ராஜ்ஜிய நாடுகள்
பிரிட்டிஷாரால் ஆக்கிரமிக்கப் பட்டுள்ள தேசங்கள்

(616-வது பக்கம்)

றுமை ஏற்பட்டால், ஒருவரோடொருவர் போர் புரியாமல் சமாதானமாகவே அதைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்பதே அதன் நோக்கம். சமாதான நிபந்தனைகளைத் தீர்மானிப்பதில் கூட்டுக் கட்சியாருக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அநேகமாத காலம் கூடி யாலோசனை செய்தபிறகே, அவைகள் ஒரு முடிவிற்கு வந்தன. வர்ஸேயில்ஸ் உடன்படிக்கை (Treaty of Versailles) யினால் ஜெர்மனிக்கும் கூட்டுக்கட்சியாருக்கும் சமாதானம் நிறைவேறியது. அதன்மூலம் ஆல்ஸாஸ் (Alsace) லோரேயின் (Lorraine) என்ற பிரதேசங்கள் ப்ரான்ஸுக்குக் கொடுக்கப்பட்டன. மால்மேடி (Malmedy) என்ற இடம் பிரஷ்யாவின் வசத்திலிருந்து பெல்ஜியத்தின் கைக்கு மாறியது. லக்ஷம்பர்க் (Luxemburg) என்ற சிறிய நாடு ஜெர்மன் ஆதீனத்திலிருந்து விடுவிக்கப்பட்டது. ஷ்லெஸ்விக் (Schleswig) என்ற பிரதேசத்தின் வட பாகம் டென்மார்க்குடன் சேர்க்கப்பட்டது. சில அரசுகளுடைய வசமாயிருந்த போலண்டு (Poland) மீண்டும் சுயாதீனமடைந்து, போஸன் (Posen) என்ற இடத்தையும் சுற்றியுள்ள பிரதேசத்தையும் பெற்றது. இதர கண்டங்களில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த பிரதேசங்கள் அதனிடமிருந்து அபகரிக்கப்பட்டு, பிரிட்டன், பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள், ப்ரான்ஸ் ஆகியவைகளுக்குள் பங்கிடப்பட்டன. டான்ஸிக் (Danzig) என்னும் நகரம் சுயாதீனமடைந்தது. ஸாஆர் (Saar) பள்ளத்தாக்கு, சர்வதேச சங்கத்தினால் நியமிக்கப்பட்ட ஒரு கமிஷனுடைய மேல் பார்வையில் பதினைந்து வருஷ காலம் இருந்து, அதற்குப்பிறகு அதனுடைய பிரஜைகளின் அபிப்பிராயத்திற்கிணங்க இராஜ்ஜிய அமைப்பைப் பெற வேண்டுமென்று தீர்மானம் செய்யப்பட்டது. ஜெர்மனியில் இருந்த நிலக்கரி, கப்பல் முதலிய சாமான்களை ப்ரான்ஸுக்கும் பெல்ஜியத்திற்கும் அனுப்பியதுடன், யுத்தத்தில் கூட்டுக்கட்சியாருக்கு ஏற்பட்ட அபாரமான நஷ்டத்திற்கும் ஈடு செய்ய ஜெர்மனி ஒப்புக்கொண்டது. ஜெர்மனியின் சேனை, கப்பற்படை, ஆகாயப் படை முதலியவை குறைக்கப்பட்டன. ரைன் நதியின் தென் கரையில் ஜெர்மனி கோட்டைகளைக் கட்டக்கூடாதென்றும் ஏற்பாடாயிற்று. அதிக இலாபமடைய எண்ணி யுத்தம் தொடங்கிய

ஜெர்மனி, எல்லாவற்றையு மிழந்து தண்டனை யடைந்த கைதியின் நிலைமைக்கு வந்தது.

ஸேயின்ட் ஜேர்மேயின் (St. Germain) என்ற இடத்தில் நடந்த உடன்படிக்கையால் ஆஸ்ட்ரியாவுடன் சமாதானம் பூர்த்தியாக்கப்பட்டது. அதனால் ஆஸ்ட்ரியாவின் விஸ்தீர்ணம் குறைக்கப் பட்டது. இற்றாலிக்கு வடக்கே ட்ரேன்டினோ (Trentino) என்ற பிரதேசத்திலும் ட்ரீஸ்டி (Trieste) என்ற பிரதேசத்திலும் இற்றாலி பாஷை பேசிவந்த ஜனங்கள் குடியிருந்தனர். ஷ பிரதேசங்களும், டைரல் (Tyrol) பிரதேசத்தின் ஒரு பாகமும் இற்றாலிக்குக்கொடுக்கப்பட்டன. கா/2லீஷியா (Galicia) என்ற பிரதேசம் போலன்ட் இராஜ்ஜியத்தைச் சேர்ந்தது. போஹிமியா, (Bohemia) மோரேவியா (Moravia), ஹங்கேரியின் வடபாகங்கள் ஆகியவை அடங்கிய ஸே2க்கோ — ஸ்லோவேகியா (Czecho—Slovakia) இராஜ்ஜியம் சுயாதீனமடைந்தது. ஹங்கேரிக்குத் தெற்கே உள்ள க்ரோஷியா (Croatia), டால்மேஷியா (Dalmatia) போஸ்னியா (Bosnia), ஸேர்பியா, (Serbia) மாண்டிநிக்ரோ (Montenegro) ஆகிய மாகாணங்களை, ஸெர்பியாயின் அரசருக் குட்பட்ட'ஜுகோ—ஸ்லேவியா (Jugo—Slavia) இராஜ்ஜியமாகச் செய்தனர். ஆஸ்ட்ரியாவும், ஹங்கேரியும் முன்பு ஒரே இராஜ்ஜியமாக இருந்து, இப்பொழுது தனித்தனியாகப் பிரிந்துவிட்டன. ஆஸ்ட்ரியாவும் தன்னால் கூடிய அளவு யுத்த நஷ்டஈடு தருவதாக ஒப்புக்கொண்டது.(இற்றாலிக்குக் கிழக்கேயுள்ள) ஏட்ரியாடிக் (Adriatic Sea) கடலின் கிழக்கிலும் வடகிழக்கிலும் உள்ள, இற்றாலிபாஷை பேசும் ஜனங்கள் வசித்த பிரதேசங்களை யாருக்குக் கொடுப்பதென்பதைப் பற்றி விவாதம் நடந்தது. கடைசியாக இஸ்ட்ரியா (Istria) இற்றாலிக்கும், ஸா2ரா (Zara) நகரம் நீங்கலான டால்மேஷியா ஜுகோ - ஸ்லேவியாவுக்கும் சென்றன. ப்2யூம் (Fiume) நகரம் சுயாதீன மடைந்தது.

மூன்றாவதாக பல்கேரியாவுடன் உடன்படிக்கை ஏற்பட்டது. பல்கேரியாவுக்குச் சொந்தமாயிருந்த சில மாகாணங்கள் கிரீஸுக்கும் ஜுகோ - ஸ்லேவியாவுக்கும் அளிக்கப்பட்டன.

நான்காவதாக, ஹங்கேரியுடன் தனியான உடன்படிக்கை நடந்தது. அதற்குச் சொந்தமாயிருந்த ட்ரா/2ன்ஸில்வேனியா (Transylvania) மாகாணம் ரூமேனியாவுக்குச் சேர்ந்துவிட்டது. மேனுட்டரசுகளுடன் சமாதானம் முடிந்தபின், ரஷ்யா, துருக்கி ஆகிய அரசுகள் மிகுதியாயிருந்தன. ரஷ்ய இராஜ்ஜியத்துடன் ஒரு காலத்தில் சேர்ந்திருந்த பி2ன்லன்ட, (Finland) எஸ்தோனியா (Esthonia) லட்வியா (Latvia) லிதுவேனியா (Lithuania) ஆகிய மாகாணங்களின் சுயாதீனத்தையும் அங்கீகரித்தனர். அதற்கு மேலாக ரஷ்யாவுடன் வேறு உடன்படிக்கைகள் செய்தல்கூட வில்லை. 1920-ல் துருக்கியுடன் கூட்டுக்கட்சியார் ஸெவர்ஸ் உடன்படிக்கை (Treaty of Sevres) யைச் செய்தனர். அதனுல் ஐரோப்பாவிலும் ஸிரியா மாகாணத்திலும் துருக்கியின் ஆதீனம் நீக்கப்பட்டதுடன்,ஆசியா மைனரிலும் அதன் விஸ்தீர்ணம் குறைக்கப்பட்டது. இவ்விதம் மேலே குறிக்கப்பட்ட நாலைந்து உடன்படிக்கைகளால் கூட்டுக் கட்சியார் ஐரோப்பாவின் இராஜ்ய அமைப்பை முற்றிலும் சீர்திருத்திவிட்டனர்.ஐரோப்பாவின் படமே மாற்றி எழுதப்படவேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஏனெனில் பழைய இராஜ்ஜியங்களின் விஸ்தீரணம் சுருங்க, புதிய இராஜ்ஜியங்கள் பெருகின. ஆனுலும் ஷை உடன்படிக்கைகளால் உடனே அமைதி ஏற்பட்டுவிடவில்லை. அமெரிக்கா, சர்வதேச சங்கத்திலிருந்து|விலகிக்கொண்டது. ப்2ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் மனஸ்தாபம்இருந்துகொண்டே வந்தது. மேலும் ஸெவர்ஸ் உடன்படிக்கையின்படி துருக்கியிலும் அமைதி ஏர்படவில்லை. அங்கோரா (Angora) என்ற இடத்தில் ஒரு புதிய தேசீய (துருக்கி) அரசாங்கம் தோன்றி, ஷை உடன்படிக்கையைப் புறக்கணித்தது. கிரேக்கர்கள் சற்றும் முன் யோசனையின்றி அப்புதிய அரசாங்கத்தை எதிர்த்தனர். ஸ்மர்னு (Smyrna) வைப் பிடித்துக்கொண்டு, அவர்கள் அங்கோராவுடன் யுத்தத்திற்குச் சென்று தோல்வியடைந்தனர். அவர்களுள் கொல்லப்பட்டவர் போக, மீதியிருந்தவர்கள் பறந்தோடினர். அப்பொழுது ஐரோப்பிய அரசுகள் நடுநிலைமை வகித்து விலகி இருந்தன. அதற்குள் ப்2ரான்ஸ் அங்கோராவுடன் சமாதானம் செய்துகொண்டது. அதன் பயனுக 1923-ல் லாஸான்

உடன்படிக்கை (Treaty of Lausanne) யை ஐரோப்பிய அரசுகள் துருக்கியுடன் செய்து கொண்டன. ஸெவர்ஸ் உடன்படிக்கை தள்ளுபடி செய்யப்பட்டது. அங்கோரா அரசாங்கம் யாவராலும் அங்கீகரிக்கப்பட்டு, ஆசியா மைனரிலும் ஆதினம் பெற்றது. எனவே, துருக்கியரை ஐரோப்பாவின் எல்லைக்கு வெளியில் துரத்தி விட வேண்டுமென்று செய்த முயற்சி பலிக்கவில்லை. ஆனால் யுத்தத்தின் பயனாக, பாலஸ்டைன், மெஸோபொடேமியா ஆகியவை பிரிட்டனிடமும், ஸிரியா ப்ரான்ஸினிடமும் தங்கின.

சர்வதேச மகாசங்கம் படிப்படியாய் அதிகரித்த மதிப்பும் கௌரவமும் அடைந்துவந்தது. ஜெர்மனியும் பின்னால் அதில் சேர்ந்துகொண்டது. ஆனால் அமெரிக்காவும் ரஷ்யாவும் தனித்து நின்றன. பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளான கானடா, ஆஸ்ட்ரேலியா, தென்னாப்ரிக்கா, நியூஸிலண்டு ஆகியவைகளும் இந்தியாவும் ஷை சங்கத்தில் அங்கத்தினர்களாக இருந்து வருகின்றன.

இந்தியா ஷை யுத்தத்தில் பிரிட்டனுக்குச் செய்த உதவிக்குக் கைம்மாறாக, இந்தியாவில் ஓரளவு பொறுப்புள்ள ஆட்சி ஸ்தாபிக்கப்பட்டது. 1919-ல் இந்திய துரைத்தனச் சட்டத்தின்படி, இரட்டையாட்சி ஸ்தாபிக்கப்பட்டது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

1918-ல் பிரிட்டிஷ் பார்லிமெண்டின் சீர்திருத்தச் சட்டம் ஒன்று நிறைவேறியது. அதனால் இன்னும் அதிகமான பிரஜைகளுக்கு ஓட்டுரிமை கிடைத்தது. யுத்தசமயத்தில் இங்கிலீஷ் ஸ்திரீகள் செய்திருந்த உதவியை மெய்ச்சியும் அவர்களுடைய கிளர்ச்சிக்கு இணங்கியும் ஸ்திரீகளுக்கும் ஓட்டுரிமை அளிக்கப்பட்டது. புருஷ ஓட்டர்களுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ள நிபந்தனைகளைப் பூர்த்திசெய்வோர்களாகவோ, அல்லது, புருஷ ஓட்டர்களின் மனைவிகளாகவோ இருக்கும் முப்பது வயதிற்கு மேற்பட்ட ஸ்திரீகள் ஓட்டுக்கொடுக்க அருகரானார்கள். புருஷ ஓட்டர்களைக் காட்டிலும் ஸ்திரீ ஓட்டர்கள் தொகையில் அதிகரித்து விடுவார்களென்று அஞ்சியே, 30 வயது வரம்பை ஏற்படுத்தினர். ஆனால் 1928-ம் வரு

ஷத்தில் அந்த நிபந்தனையும் எடுபட்டுப்போயிற்று. புருஷரும் ஸ்திரீகளும் சமமான உரிமைகள் பெற்றனர்.

விக்டோரியாவின் ஆட்சியில் மூன்றுதடவை ஸ்டன் அயர்லன்டுக்கு சுயராஜ்யமளிக்க முயற்சித்துத் தவறிப்போனது தெரிந்த விஷயம். அதனால் அயரிஷ்காரர்கள் ஸிரிட்டனின்மீது குரோதம் பாராட்டிவந்தனர். ஆனால் அயர்லன்டில் அல்ஸ்டர் மாகாணத்தில் இருந்த ப்ராடஸ்டென்ட் பிரஜைகள் மாத்திரம் அந்த நாடு சுயராஜ்யமடையக்கூடாதென்று தடுத்தனர். அவர்களுக்கு விரோதமாக அயரிஷ் தேசிய வாதிகள், சுயராஜ்யம் பெறும்பொருட்டு, கிளர்ச்சி செய்து, தொண்டர் படை முதலிய சாதனங்களைத் தயாரித்து வந்தனர். எனவே அயர்லன்டில் ஷெ வியவகாரம் சம்பந்தமாக இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. அவைகளுக்குள்ளேயே போர் நடக்கும் நிலைமை ஏற்பட்டது. அல்ஸ்டர் பிரஜைகளின் கட்சிக்கு கார்ஸன் (Carson) என்பவர் தலைவராயிருந்தார். 1914-ல் லிபரல் மந்திரிசபையார் மீண்டும் அயரிஷ் சுயராஜ்ய மசோதாவை பார்லிமென்டில் புகுத்த முயன்றனர். ஆனால் (அல்ஸ்டர் ஜனங்களின் ஆதரவைப் பெறும்பொருட்டு,) அயர்லன்டில் ஏதாவது ஒரு மாகாணம், அந்த மாகாணப் பிரஜைகளுடைய சம்மதியின்பேரில், ஆறு வருஷகாலம் வரையில் அயரிஷ் சுயராஜ்யச் சட்டத்திற்கு உட்படாமல் தனியாக நீங்கியிருக்கலாம் என்று அதில் கண்டிருந்தது. அல்ஸ்டர் தலைவர் கார்ஸன், ஆறுவருஷத்திற்குப் பதிலாக, நிரந்தரமாக நீங்கியிருக்கும் உரிமை வேண்டுமென்றார். மந்திரிகள் அதற்கு இணங்காமல் போகவே, மீண்டும் குழப்பம் உண்டாயிற்று. ஸிரிட்டிஷ் துரைத்தனத்தார் அயர்லன்டுக்கு ஒரு சேனையையனுப்பி, அல்ஸ்டர் மாகாணம் ஷெ மசோதாவை ஏற்கும்படி வற்புறுத்தப்போவதாக ஒரு வதந்தி பரவியது. அதனால் ஸிரிட்டிஷ் சேனைத்தலைவரான ப்ரென்ச் என்பவரும் யுத்த மந்திரியும் தமது பதவிகளை இராஜீநாமாச் செய்துவிட்டனர். உடனே ஆஸ்க்வித் சுயராஜ்ய மசோதாவிலிருந்து அல்ஸ்டரை நீக்கிவிடும்பொருட்டு ஒரு புதியசட்டம் இயற்றுவதாக வாக்களித்தார். ஆனால் சுயராஜ்யச் சட்டத்திலேயே அதைப் புகுத்துமாறு லார்ட்ஸ் சபையார் வற்புறுத்தினர். அதற்குள் யுத்தம் நேர்ந்துவிட்டதாகையால், அது அவ்வள

வோடு நின்றிருந்தது. ஆஸ்க்வித் வாக்களித்த புதிய சட்டமின்றியே சுயராஜ்ய மசோதாவை லார்ட்ஸ் சபைக்கு அனுப்ப, அந்த சபையினர் அதை நிராகரித்துவிட்டனர்.

யுத்தம் முடிந்தபிறகு 1920-ல் ஒரு புதிய அயரிஷ் சுயராஜ்ய மசோதாவை, லாய்ட் ஜார்ஜ் மந்திரி சபையினர் கொண்டுவந்து பார்லிமெண்டில் பிரேரணை செய்தனர். அதன்படி அயர்லண்டின் பெரும் பாகத்திற்கு ஒரு பார்லிமெண்டும் மற்றொன்று தனியாக அல்ஸ்டருக்குமாக இரண்டு பார்லிமெண்டுகள் ஏற்படவிருந்தன. அவ்வாறு அயர்லண்டை இரண்டுபாகங்களாகப் பிரிப்பது நாட்டின் ஒற்றுமையைக் குலைக்குமென்று கருதியவர்களின் பொருட்டு அயரிஷ் கௌன்ஸில் ஒன்றும் (Council of Ireland) ஸ்தாபிக்கப்பட்டது. அந்த சபைக்கு ௸ இரண்டு பார்லிமெண்டுகளிலிருந்தும் சமதொகையினரான பிரதிநிதிகள் அனுப்பப்படவேண்டும். அதற்கு சில விசேஷ அதிகாரங்களும் உண்டு. பிரிட்டிஷ் பார்லிமெண்டிலும் அயர்லண்டுக்கு ஓரளவு பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. இவ்வாறு அமைக்கப்பட்ட அந்த மசோதாவை எல்லோரும் எதிர்த்தனர். அயர்லண்டை இரண்டு பாகங்களாய்ப் பிரிப்பது அபாயகரமென்று சிலர் கருதி அதைக் கண்டித்தனர். ஸின் பீன் கட்சியினர், அந்த மசோதா தமக்குப் பூர்த்தியான சுயாதீனமளிக்கவில்லையெனக் குறைகூறினர். ௸ மசோதா சட்டமாக நிறைவேறிப்போனதானாலும் அதைப்பிரயோகம் செய்வதில் மாத்திரமே அநர்த்தங்கள் விளைந்தன. 1919 லேயே ஸின் பீன் கட்சியார் தாமாகவே ஓர் அயரிஷ் பார்லிமெண்டை (அதற்கு டேயில் எய்ரீன்—Dail Eirean என்று பெயர்) அமைத்து டி வாலரா (De valera) என்ற தலைவரைக்கொண்டு பரிபாலனம் நடத்தத் தொடங்கினர். அதனால் உள்நாட்டுப் போர் தொடங்க, மிகுந்த சேதம் விளைந்தது. பிரிட்டிஷ் துரைத்தனத்தாரால் அந்த நிலைமையை சமாளிக்க இயலவில்லை. சிற்சில சமயங்களில் அவர்கள் கடுமையாக நடந்துகொண்டனரானாலும், கிளர்ச்சிக்காரருடன் சமாதானமாகவே வியவகாரம் நடத்தினர். ஆனாலும் குழப்பம் அதிகரிக்க அதிகரிக்க, கானடா பெற்றிருந்ததைப் போன்ற குடியேற்ற நாட்டு அந்தஸ்தையும் சுயாதீனத்தையும் அயர்லண்டுக்கும் அளிக்கவேண்டு

மென்பது தெளிவாயிற்று. பிரிட்டிஷ் மந்திரிகளும் ஸின் பீன் கட்சியினரும் கூடி ஆலோசனை செய்தனர். 1922-ல் அயர்லண்ட் சுயாதீன அரசாக்கப்பட்டது (Irish Free State). பிரிட்டிஷ் ஏகசக்ராதிபத்தியத்திற்கு உட்பட்டு, அது சுயாதீனம் பெற்றது. இருசபைகளைக் கொண்ட தனியான பார்லிமென்டும் அங்கு நியமிக்கப்பட்டது. ஆனால், 1920-ல் நிறைவேறிய சட்டத்தை யநுசரித்து, அல்ஸ்டர் மாகாணம் தனியான துரைத்தனமாகவே இருந்து வருகிறது. பூர்த்தியான சுயாதீனத்திற்காகப் பாடுபட்ட டீ வாலரா குடியேற்றநாட்டு அந்தஸ்துடன் திருப்தியடையவில்லை. ஆனால் நாளடைவில் அவருடைய கட்சியின் பலம் குன்றிப்போய் விட்டது. அயர்லண்ட் 1922-ல் கிடைத்த சுயாதீன அரசாட்சியில் பல துறைகளில் அபிவிருத்தியடைந்துவருகிறது. அந்த சுயாதீனத்தை அடைய அயர்லண்ட் தேசத்தார் அடைந்த துன்பங்களும் நடத்திய போராட்டங்களும் அற்பசொற்பமானவையல்ல.



# 45-வது அதிகாரம்.

---

## முடிவுரை: ஸ்ரீரிட்டிஷ் தீவுகளின் இயற்கைவசதிகளும், ஸ்ரீரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தின் தனி மேம்பாடும்.

முந்திய அதிகாரங்களில் நாம் ஸ்ரீரிட்டிஷ்காரரது சரித்திரத்தை ஸாராம்சமாகத் தெரிந்து கொண்டோம். இந்த உலகின் நாலாபக்கங்களிலும், கடல்களினிடையில் அமைந்துள்ள ஆறு கண்டங்களிலும் அவர்கள் நாடுகளைப் பிடித்து, வசப்படுத்தி, அவற்றில் தங்களது அரசாட்சியை நிலைநாட்டி மத்தியில் நடு நாயகம் போல மகா உன்னதமான நிலைமையில் ஒப்புயர்வற்று வீற்றிருந்து தங்களது மாத்திரைக்கோலால் இந்த உலகத்தையே இயக்குவதான கோலாகலத்தை நாம் என்னவென்று விவரிப்பது! உலகப்படத்தில் ஸ்ரீரிட்டிஷ் தீவுகள் எங்கே இருக்கின்றனவென்று கண்டு பிடிக்கவேண்டுமானால், நாம் விளக்கை வைத்தே தேடிப்பார்க்க வேண்டும். ஏனெனில் ஷை தீவுகள் வடிவத்தில் அவ்வளவு அற்பமானவையாய்த் தோன்றுகின்றன. ஆயினும் மூர்த்தி சிறிதாயிருந்தாலும், அதன் கீர்த்தி மகத்திலும் மகத்தானதாக இருக்கிறது. மனிதரது உடம்பின் நடுமத்தியில் உள்ள ஹிருதய கமலம் வடிவத்தில் சிறிதாயிருந்தாலும், அதுவே மற்ற பாகங்களுக்கு ஜீவதாரகத்தை அனுப்பும் உயிர்நிலையாக இருப்பதுபோல, ஸ்ரீரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் மகோன்னத நிலைமையடைந்து நிகரற்று விளங்குகிறது. விஸ்தீரணத்தில் ஷை தீவுகள், நம் இந்தியாவில் பதினைந்தில் ஒரு பங்குதானிருக்கிறது. நமது இந்தியாவின் ஒரு சிறிய பாகத்தில் ஓடும் சிந்து நதியின் நீளம் இங்கிலண்டு, ஸ்காட்லண்டு ஆகியவற்றின் சுற்றளவைவிட அதிகமாயிருக்கிறது. ஸ்ரீரிட்டிஷ் தீவுகளிலுள்ள எல்லா நதிகளின் நீளங்களையும் மொத்தமாக்கிப் பார்த்தாலும், நமது நாட்டிலுள்ள சிறிய நதிகளான மஹாநதி, நர்மதை அல்லது கங்கையின் உபநதிகள் முதலியனவைகளுள் கேவலம் ஒன்




பிரிட்டிஷ் தீவுகளின் முக்கிய பட்டணங்களும் போக்கு வரவு சாதனங்களும். அத்தீவுகளைச் சுற்றியுள்ள சமுத்திரத்தின் நீரோட்டமும்.

(624-வது பக்கம்)

றின் நீளத்திற்குக்கூட, ஷை மொத்த நீளம் ஈடாகாது. நமது கங்காநதி முடிவில் இரண்டு கிளைகளாய்ப் பிரிந்து கடலில் சங்கமமாகின்றது. ஷை கிளைகளுக்குள் அடங்கிய பிரதேசம் மாத்திரம் விஸ்தீரணத்தில் அயர்லண்டிற்கு சமமாக இருக்கிறது. பிரிட்டிஷ் தீவுகளின் ஜனத்தொகை நம் நாட்டின் ஜனத்தொகையில் எழில் ஒரு பங்கே யாகிறது. சுமார் 2000-ம் வருஷத்திற்குள்ளாகவே ஷை தீவுகள் நாகரிகத்திலும், மற்ற துறைகளிலும் பெருகி தற்கால நிலைமையை யடைந்தனவேயன்றி,அதற்கு முன்முற்றிலும் கேவல நிலைமையிலிருந்ததாகவே தெரிகிறது. அக்காலத்தில் நாகரிகத்திற்கு இருப்பிடமாயிருந்த ரோம்தேசத்தார், பிரிட்டிஷ் தீவுகளின் இருப்பை கி. மு. 44-ம் வருஷம் வரையில் தெரிந்து கொள்ளவில்லை. இப்பொழுதைக்கு சுமார் 400 வருஷகாலத்திற்கு முன்புகூட, பிரிட்டிஷ் தேசத்தாருக்குச் சொந்தமான அன்னியநாடு ஐரோப்பாக் கண்டத்திலுமில்லை, இதர பாகங்களிலுமில்லை. அந்தக் காலத்தில் ஐரோப்பாவில் மிகுந்த பராக்கிரமத்தோடு அரசாட்சி புரிந்ததான ஸ்பெயின் தேசத்தின் சக்கரவர்த்தி ஐந்தாவது ச்சார்லஸ் என்பவர் ஷை தீவுகளை அற்பமாக மதித்து, அவைகளை வென்று அடக்கிவிட எண்ணி ஆர்மடா என்ற கப்பல் படையைத் தயாரித்து அனுப்பியதாகக் கூறினேமல்லவா. அப்பொழுதுகூட பிரிட்டிஷ் தேசத்தார் தமது நாடு எதிரியின் வசமாய் விடுமோவென்று திகில்கொண்டு நடுங்கினர்கள். அவ்வாறு சர்வசாதாரணமான நிலைமையிலிருந்த பிரிட்டிஷ் தேசத்தார் திடீரென்று உலகெங்கும் பாவி வியாபித்துப்போயினர். 1841-ம் வருஷத்திற்குள் அவர்களுக்கு $8\frac{1}{2}$ கோடி சதுரமயில் பரப்புள்ள அன்னிய நாடுகள் சொந்தமாய்விட்டன. அது 1901-ல் 11 கோடியாய் 1921-ல் 13. 8 கோடிக்கு எட்டியது. இப்பொழுது பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்திற்கு உள்பட்ட நாடுகள் உலகத்தில் எல்லாக் கண்டங்களிலுமிருக்கின்றனவாதலால், இந்த ஸாம்ராஜ்யத்தில் சூரியன் அஸ்தமிக்கிறதே இல்லை என்பதன் கருத்து எளிதில் விளங்கும்.

பிரிட்டிஷ் தீவுகளைவிட மிகமிகப் பெரிய இராஜ்யங்களாயிருந்து விளங்கிய ஸ்பெயின், ரஷ்யா, ஜெர்மனி முதலிய தேசங்க

ளுக்கு ஏற்படாத தனிப்பேறு ஷை தீவுகளுக்கு மாத்திரம் வந்து வாய்த்ததன் காரணமென்ன வென்பதையே நாம் இப்பொழுது ஆராய்ந்து பார்க்கவேண்டும். இங்கிலிஷ்காரருள் பிரசித்திபெற்ற ஒருவரான மெக்காலே என்பவர் ஓர் இடத்தில் எழுதுகிறார்: "நாம் அநாகரிகர்களாய், உடுக்க உடையின்றி, காட்டிலிருந்த காய்கனிகளை யும் மிருகங்களையும் தின்று காட்டு விலங்குகள்போலத் திரிந்து கொண்டிருந்த காலத்தில், இந்தியாவிலிருந்த ஜனங்கள் அதிக நாகரிமடைந்து, பலகலைகளில் தேர்ச்சிபெற்று, மாடமாளிகையும் கூடகோபுரங்களையும் அமைத்து, எவ்விதமான குறையுமின்றி அற்புதமாகச்செங்கோல் நடாத்தி உலகத்தின் இதரபாகங்களிலிருந்த ஜனங்களைக் காட்டிலும் அதிக மேம்பாடடைந்து வாழ்ந்தனரே. அத்தகையநாட்டில் கோடிக்கணக்காயுள்ள ஜனங்களை நூற்றுக்கணக் காயுள்ள நம் இங்கிலீஷ்காரர்கள் வென்றது மகா ஆச்சரியகரமான விஷயமல்லவா" என்று அவர் எழுதி இருக்கிறார். அவர் தமது நாட் டின் தற்கால மகிமையை அபாரமாய்ப் புகழும் கருத்துடன், நமது நாட்டின் நிலைமையை உயர்த்திஇறக்கி இருக்கிறாராலும், அவ்வித மகோன்னத நிலைமையிலிருந்த நம் நாடு படிப்படியாய் மெலிந்து தளர்ந்து, 6000 மயில்தூரத்திற்கப்பாலுள்ள ஒரு சிறிய தீவுக்கு அடி மையாய், சொற்பத்தொகையினரான அதன் ஜனங்களால் ஆளப் படுவதான பரிதாபகரமான நிலைமைக்குவந்த வகையென்ன? கடை வைக்கும் ஜாதியார் என்று நிரம்பவும் இழிவாகக் குறிக்கப்படுவோ ரும், தற்காலம், நமது தெருக்களில் அழுக்கடைந்த ஆடைகளுட னும், பளுவான மூட்டைகளுடனும் வந்து "சைனு ஷிள்க்" என்று அங்காடி கூவி, பட்டுத் துணிகளை விற்றுநிரம்பவும் பரிதாபகரமாகத் திரியும்சீனதேசத்தாரைப்போல, சுமார் 300வருஷகாலத்திற்குமுன் நம்நாட்டில் தெருத்தெருவாயலைந்து வியாபாரம்செய்தவர்களுமான இங்கிலீஷ்காரர்கள் இப்பொழுது நம் நாட்டையும் இங்குள்ள 33 கோடி ஜனங்களையும் ஆக்கியழிக்கும் சர்வாதிகாரமும் பெற்ற அர சர்களானுர்கள் என்றல், இதைக் காட்டிலும் ஆச்சரியகரமான சம்ப வம் இந்த உலகத்தில் இதுவரையில் நிகழ்ந்திருக்குமோ என்பதே சந் தேகமென்று கூறவேண்டும். இது உண்மைதானே என்ற ஐயம் நமது ஜனங்களுக்கே தோன்றுவதும் நிச்சயம். இந்த ஢ிரிட்டிஷ்

ஸாம்ராஜ்யத்திலுள்ள ஜனங்களில் 100.க்கு 71 பங்கு ஜனங்கள் நமது இந்தியாவில் இருப்பதையும், 33 கோடி இந்தியரை 12 லக்ஷம் இங்கிலீஷ்காரர் அடக்கியாளுவதையும், அதாவது, 2520 இந்தியர்கள் ஒரு வெள்ளைக்காரனுக்கு அடங்கி யிருப்பதையும் நாம் எண்ணிப்பார்த்தால், நமக்கு உண்டாகும் வியப்பிற்கு அளவே இல்லை. அந்த அற்புத சம்பவத்தை நாம் உலகிலுள்ள எட்டாவது ஆச்சரியமென்றே கருதவேண்டும். இதற்குமுன் விஸ்தாரமாகப் பரவி இருந்த கிரீஸ், ரோம், கார்த்தேஜ், அஸிரியா, ரஷ்யா முதலிய இராஜ்யங்களைப் போல், நசித்துப் போகாமல், ப்ரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் பல்லாயிரம் மயில் தூரம் பரவி மேன்மேலும் வியாபித்துக்கொண்டே போவதற்குக் காரணமென்ன? 1914ம் வருஷத்தில் ஆரம்பமான ஐரோப்பிய மகாயுத்தம் நடந்த காலத்தில், ப்ரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்திற்கு உள்பட்ட நாடுகள், அதற்கு விரோதமாய் எதிர்க்கட்சியாருடன் சேர்ந்துகொள்வது எளிதல்லவா? அப்படி இருந்தும், தங்களுக்கும் ப்ரிட்டனுக்கும் உள்ள சச்சரவுகளையும் பொருட்படுத்தாமல், திரள்திரளான சைனியங்களையும், குவியல் குவியலான பொருள்களையும் அனுப்பி அந்த ஸாம்ராஜ்யத்தின் கௌரவத்தைக் காப்பாற்றினார்களே! அவ்விதமான அபாய காலத்தில் ப்ரிட்டனிடத்தில் குடிகள் உண்மையான இராஜ விசுவாசம் காண்பித்து உதவிபுரிந்தது போல, இதற்கு முன்னிருந்த இராஜ்யங்களுக்கு அபாய காலத்தில் குடிகளின் இராஜவிசுவாசமும், உதவியும் ஏற்படாமல் போனதற்குக் காரணமென்ன?

இவை யாவற்றிற்கும் அடிப்படையான முக்கிய காரணங்கள் ப்ரிட்டிஷ் தீவுகளுக்கு இயற்கையிலேயே அமைந்துள்ள ஜீவாதாரமான சில சாதனங்களிலேயே அடங்கி இருக்கின்றன. முக்கியமாக, ஷை தீவுகளின் இயற்கை அமைப்பு, வடிவம், சீதோஷ்ண நிலைமை, அங்கு அபரிமிதமாக அகப்படும் உலோகங்கள் முதலிய அம்சங்களை நாம் சிறிது ஆழ்ந்து கவனிப்போமானால், உண்மை உடனே விளங்கிப்போகும்.

இயற்கை யமைப்பு: — இரண்டு சிறிய தீவுகள் ஒன்று சேர்ந்து ஷிரிட்டிஷ் தீவுகள் என்று குறிக்கப்படுகின்றன. அவை ஐரோப்பாக் கண்டத்தின் வடமேற்கு திக்கில் அந்தக் கண்டத்தை விட்டுப் பிரிந்து நிரம்பவும் அருகில் இருக்கிறது. ஷெ தீவுகளின் தென்கிழக்கு பாகத்திலுள்ள டோவர் என்ற துறைமுகப் பட்டினம் ஐரோப்பாக் கண்டத்திலிருந்து 22 மயில் தூரத்திலிருக்கிறது.

அதனாலேயே அத்தீவுகளுக்குப் பல அநுகூலங்கள் ஏற்பட்டன. முதலாவது படகுகளில் போய்ப் பழகாதவர்கள் அந்த ஜலபாகத்தைக் கடந்து ஐரோப்பாக் கண்டத்திற்கு போவது சாத்தியமில்லையாதலால், அங்கிருந்தோர் கடலில் போய்ப் பழகுவது அத்தியாவசியமாயிற்று.

நிற்க, ஷெ தீவுகள் ஐரோப்பாக்கண்டத்திற்குச் சமீபத்திலிருப்பதனால், அக்கண்டத்திலுள்ள தைரியசாலிகளுக்கும், அங்கு பலிஷ்டர்களால் ஒறுக்கப்பட்டு இங்கிலண்டில் அடைக்கலம் புகுந்தோர்களுக்கும், ஷெ தீவுகள் அதிக சௌகரியமாய் இருந்தன. உதாரணமாக, பராக்கிரமசாலிகளான ஆங்கில்ஸ்களும், ஸாக்ஸன்களும், பிற்காலத்தில் டேன்களும், அதற்குப்பின் நார்மன்களும், ஜயவீரர் வில்லியமும், ஸைமன் டிமாண்ட்போர்ட் முதலிய இராஜ்ய தந்திர நிபுணர்களும் வந்து ஷிரிட்டன்களுக்குப் பலவிதத்திலும் நன்மை புரிந்ததையும் ஸ்பெயின், ஹாலண்டு, ப்ரான்ஸ், ஜெர்மனி முதலிய தேசங்கள் மதசம்பந்தமான பலவித இடர்களுக்குள்ளாகி, கடைசியில் இங்கிலண்டில் அடைக்கலம் புகுந்த கைத்தொழில் நிபுணர்களான, ஹியூஜ்நாட்ஸ் (Huge Nots) முதலியவர்களால் இங்கிலண்டின் கைத்தொழில் அபிவிருத்தி அடைந்ததைப் பற்றியும் நீங்கள் படித்திருப்பீர்கள்.

ஷிரிட்டிஷ் தீவுகளில் மேற்குப் பக்கத்தில் மலைகளும், கிழக்குப் பக்கத்தில் சமதரைகளும் இருக்கின்றன. ஆகவே, இத்தீவுகள் அட்லாண்டிக் சமுத்திரத்தின் பக்கம் முதுகைத் திருப்பி ஐரோப்பாவை நோக்கி நின்றுகொண்டு, அவ்விடத்திலுள்ள வியா

-பாரங்களையும், கைத்தொழில் நிபுணர்களையும் அழைப்பதுபோல் காணப்படுகின்றன.

அது மாத்திரமல்ல. ஐரோப்பாவில் அதிக வளமை, ஜனநெருக்கம், வியாபாரப்பெருக்கு முதலிய அம்சங்கள் நெருங்கிய ஸ்தலங்கள், தெற்கே பிரினீஸ், ஆல்ப்ஸ், கார்ப்பேதியன் மலைகளுக்கும், வடக்கே நார்வீஜியன் மலைகளுக்கும் இடையிலுள்ள பெரிய நதிகள் பாயப்பெற்ற செழிப்பான பிரதேசங்களுக்கு எதிரில் இருக்கின்றன. அப்பிரதேசங்களிலுள்ள நதிகளின் முகத்துவாரங்கள் ஸிரிட்டனைப்பார்த்தபடி இருக்கின்றன. ஆகையால் ஐரோப்பாவில் வடமேற்குப் பாகத்திலிருந்து புறப்பட்டுப்போகும் கப்பல்களில் பெரும்பாலானவை ஷெ தீவுகளின் வழியாகவே போகவேண்டும். தற்காலத்தில், புதிய உலகத்திற்கும் பழைய உலகத்திற்கும் நடக்கும் வியாபாரத்திற்கு ஸிரிட்டனே ஐரோப்பாவின் வாசற்படிபோல விருக்கிறது.

ஐரோப்பாவிற்கு அருகில் இருப்பதனால், ஸிரிட்டிஷ் தீவுகள் அடைந்த நன்மைகளை இதுகாறும் நாம் கவனித்தோம். அவைகள் ஷெ கண்டத்துடன் சேராமல் சிறிய கடல்பாகத்தால் பிரிந்து தனித்து நிற்பதானல் அடைந்த நன்மைகளையும் நாம் கவனிக்க வேண்டும். இங்கிலண்டின்மேல் படை எடுத்துச்சென்று, அரசு புரிந்தவர்களில் நார்மன்களே கடைசியானவர்கள். அவர்களுக்குப் பிறகு ஸிரிட்டிஷ் தீவுகளின்மீது எவரும் படை எடுத்துவந்து வெற்றி பெறவில்லை. இங்கிலண்டை ஆண்ட நார்மன் அரசர்கள் அன்னிய நாட்டினராலும், அவர்களும் நார்மன் பிரபுக்களும் இங்கிலண்டில் குடியேறிய பிறகு, அத்தேசத்து ஜனங்களுடன் பழகிப் பழகி நாளடைவில் அவர்களுடன் ஒன்றுபட்டுப் போய்விட்டனர். தங்களுக்கும் ப்ரான்ஸ் தேசத்திற்கு மிருந்த சம்பந்தத்தை காலக்கிரமத்தில் அவர்கள் மறந்து இங்கிலண்டையே தங்களது சொந்த பூமியாக மதித்து, ப்ரான்ஸ் தேசத்திலிருந்த இராஜாங்க முறைகளில் சிலாக்கியமானவற்றையும் இங்கிலண்டின் அரசாட்சி முறைகளில் சிலாக்கியமானவற்றையும் ஒன்ருக்கியது ஜனங்களுக்கு அநுகூலமாக முடிந்தது. அதை நீங்கள் முதலாவது

வில்லியம், முதலாவது ஹென்றி, இரண்டாவது ஹென்றி ஆகியோ ரது அரசாட்சிகளில் காணலாம். தவிர, ஷெ நார்மன் அரசர்களில் ஒருவரான ஜான் நீதிநெறி தவறி கொடுங்கோல் அரசு நடாத்திய காலத்தில் இங்கிலீஷ்காரரும் நார்மன்களும் ஒன்றுபட்டிருந்தது அவ்வரசனிடமிருந்து மாக்னா கார்ட்டா என்னும் சாஸனத்தை எழுதி வாங்குவதற்கு அநுகூலமாயிருந்தது. ஃபிரிட்டன் தனிப்பிர தேசமாயில்லாவிடில் நார்மன்கள் ஃபிரிட்டிஷாருடன் ஒன்று சேர்ந் திருக்கமாட்டார்கள். ஜானிடமிருந்து இங்கிலீஷ்காரர்கள் சுதந்த ரத்தை யளிக்கும் ஷெ சாஸனத்தைப் பெற்றிருக்கமாட்டார்கள்.

மேலும் ஃபிரிட்டன் தீவாயில்லாத பட்சத்தில், நார்மன் அர சர்கள், குடிகளுக்கு அநுகுணமானதும், ஐரோப்பாவில் இருந்த பழக்கத்திற்கு மாறுனதுமான ப்யூடல் ஸிஸ்டத்தை (Feudal System) இங்கிலண்டில் ஏற்படுத்தி இருக்கமுடியாது. இங்கி லண்டில் வில்லியத்தினுல் ஏற்படுத்தப்பட்டது போன்ற நிலஏற் பாடு (ப்யூடல் ஸிஸ்டம்) ஐரோப்பாவிலுள்ள தேசங்களில் இல் லாததனுல் தான். அத்தேசங்களில் ஜனங்களுக்கும் பிரபுக்களுக் கும் சண்டை சச்சரவுகள் உண்டாகி, அத்தேசங்களில் இருந்த ஜனங்கள் ஃபிரிட்டானியர்களைப்போல் ஒன்று சேர்ந்து பொது நன்மைக்காக உழைக்கவில்லை. குடிவளம் பெருகவே, அவர்களது பிரதிநிதியான அரசாது பெருமையும் வல்லமையும் பெருகின. ஷெ தீவுகளில் ஏற்படுத்தப்பட்டதுபோன்ற நில ஏற்பாடுகள் ஐரோப்பாவிலுள்ள ஏனைய தேசங்களில் இல்லாமையால், அத்தேசங் களில் எப்பொழுதும் உள்நாட்டுச் சண்டை (Civil war) களுக்கு இடம் ஏற்பட்டது. அத்தேசங்களில் எப்பொழுதும் ஒரு பிரபு தம் மைச் சார்ந்த ஜனங்களைச் சேர்த்துக்கொண்டு மற்றொரு பிரபு உட னுகிலும், அல்லது அத்தேசத்து அரசனுடனுகிலும் சண்டையிட் டதனுல், அத்தேசத்திலுள்ளவர்கள் தங்களுக்கும், தங்கள் நாட்டிற் கும் அவசியமான அபிவிருத்திகளைச் செய்துகொள்வது சாத்தியமற் றதாகி விட்டது. இங்கிலண்டிலோ பராக்கிரமசாலியான அர சன் பிரபுக்களை அடக்கி ஜனங்களெல்லாரும் தன்னைப் பிதாவென்று கருதும்படி நடந்துவந்தான். ஆகவே, அந்நாடு படிப்படியாக அபி விருத்தி அடைந்துவந்தது.

ஒரு கோட்டையைக் காத்துள்ள அகழிபோல பிரிட்டனைச் சுற்றிலும் சமுத்திரமிருந்து அதைப் பாதுகாக்கிறதாகையால், அத்தேசத்தின் எல்லைக்குள்பட்ட எப்பாகத்தையும் எவரும் எக்காரணத்தாலும் தமதென்று உரிமைகொண்டு போருக்கு வரவில்லை. உதாரணமாக, ப்2ரெஞ்சு தேசமும், ஜெர்மனி தேசமும், அவற்றின் நடுவிலுள்ள ஆ/2ல்ஸஸ் லோரேய்ன் என்ற பிரதேசத்திற்காக ஒன்றோடொன்று போர்புரிந்த விஷயத்தை நீங்கள் படித்திருக்கிறீர்கள். அம்மாதிரியான போரினால் இருதிறத்தாருக்கும் நஷ்டமும், துன்பமும் உண்டாயின. இங்கிலண்டிற்கு அவ்விதமான இடர் உண்டாகாதபடி இயற்கை எல்லையான சமுத்திரமே காப்பாற்றியதன்றி, பலவகைகளில் அதன் வளத்தைப் பெருக்கவும் உதவிபுரிந்தது. ஷே கடலானது பிரிட்டனுக்கு மற்றொரு விதத்திலும் நன்மைபுரிந்தது. எவ்வித பயமும் இன்றி கவலையற்று அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த பெல்ஜியத்தின் ஜனங்கள் திடும் பிரவேசமாய் அத்தேசத்திற்குள் வெடிகுண்டுகளின் முழக்கத்துடன் நுழைந்த ஜெர்மன் சிப்பாய்களினால் தட்டி எழுப்பப்பட்டார்கள். நிரபராதிகளான அவர்களது தேசமும் நாசமடைந்தது. அதற்குப் பக்கத்தில் உள்ள ப்2ரான்ஸ் தேசத்திற்கும் அதே கதி நேர்ந்தது. அதற்குமுன், ப்2ரான்ஸ் தேசத்தின் சக்கரவர்த்தியான நெப்போலியன் அரசாட்சி புரிந்தவரையில் ஐரோப்பா கண்டத்திலிருந்த எவரும் இரவில் தூங்கவில்லை என்று நாம் தெரிந்துகொள்ளுகிறோம். அதற்குமுன்பு வாண்டல்ஸ் (Goths) என்ற ஜாதியாகும் அம்மாதிரியே பலதேசங்களின்மீது திடீரெனப் படை எடுத்துச் சென்று, அத்தேசங்களுக்கு அநர்த்தம் விளைவித்தது எல்லோருக்கும் தெரிந்த வரலாறே. இங்கிலண்டில் அத்தகைய கொடிய சம்பவம் நிகழாதிருந்ததற்கு அதைச் சுற்றி இருக்கும் கடலரணே காரணமாம். அக்கடலரண் இல்லாவிடில், எத்தேசத்தவரும் சுலபமாய் பிரிட்டன்மீது படை எடுக்கலாம். நெப்போலியன் மிக சுலபத்தில் பிரிட்டன்களைத் தோற்கடித்து அந்த நாட்டைத் தமது நாட்டுடன் சேர்த்திருப்பார். கடலைக் கடப்பதற்குப் பிரயத்தனங்கள் செய்யவேண்டியதாயிற்று. அப்படி ஏற்பாடுசெய்து அங்கே போனாலும், சைன்யங்கள் அங்கே

இறங்குவதற்குள், பிரிட்டன்கள் தங்களைக் காப்பாற்றிக்கொண்டார்கள். "தன்னூர்யானை அயலூர் பூனை" என்ற முதுமொழி பொய்யாகுமா. இங்கிலண்டிற்குக் கரை மார்க்கமாக ஒருவழி இருந்தால், பராக்கிரமசாலியான ஸ்பெயின் சக்கரவர்த்தி பிலிப் அத்தேசம் தலை எடுக்காதபடி செய்து நாசமாக்கி இருப்பார். இடையில் கடல் இருந்ததனால் பெரிய கப்பல் கூட்டத்தைத் தயார்செய்து அவற்றின்மூலம் சைனியங்களை அழைத்துச் செல்லவேண்டியதாயிற்று. அக்கப்பற் சண்டையின் முடிவையும் நீங்கள் படித்துத் தெரிந்து கொண்டிருக்கிறீர்கள்.

தற்காலங்களில் பிரிட்டன்கள் ட்ராபால்கர், நைல், பால்டிக் முதலிய இடங்களில் கப்பல்போரில் எதிரிகளை ஜயித்து சமுத்திரத்தில் தங்களது பராக்கிரமத்தையும் அதிகாரத்தையும் நிலைநாட்டியதையும் நீங்கள் முன்னதிகாரங்களில் படித்திருப்பீர்கள்.

பிரிட்டிஷ் தீவுகள் கடலரணினால் பாதுகாக்கப்பட்டு ஐரோப்பாக் கண்டத்திற்குச் சமீபத்தில் இருப்பதுபற்றி, மேலே குறிக்கப்பட்ட நன்மைகளை அடைந்து பெருகின. ஆயினும் உலகத்தில் எத்தனையோ தீவுகள் இம்மாதிரி ஒரு பெரிய கண்டத்தின் அருகில் இருக்கின்றனவானாலும், அவைகளுக்கு இத்தகைய சிறப்பும் செல்வமும் ஏன் உண்டாகவில்லை என்ற கேள்வி பிறக்கலாம். அதற்குக் காரணம் பிரிட்டனுக்கு ஏற்பட்டிருக்கும் மற்ற இயற்கை வசதிகள் இதர தீவுகளுக்கு இல்லாமையே காரணமாகும்.

பிரிட்டிஷ் தீவுகளின் சீதோஷ்ண ஸ்திதி:—மேற்படி வசதிகளுள் முதன்மையானது பிரிட்டிஷ் தீவுகளின் ஆரோக்கியமான சீதோஷ்ண நிலைமையே. ஷை தீவுகள் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தின் உத்தர அக்ஷ ரேகை 50 டிகிரிக்கு வடக்கிலும், 60 டிகிரிக்குத் தெற்கிலும் இருக்கின்றன. ஆனாலும் இதே அக்ஷரேகைக்குள்ளிருக்கும் பிரதேசங்களைவிட இவ்விடத்தில் வெப்பம் அதிகம். அதிக குளிர்காலத்தில் 39 டிகிரிக்குக் குறையாமல் வெப்பமும், அதிக உஷ்ணகாலத்தில் 66 டிகிரிக்கு மேற்படாமல் வெப்பமும் இங்கே இருக்கிறது. ஷை தீவுகளைச் சுற்றி இருக்கும் கடல்கள்

## பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தை ஒன்று சேர்க்கும் சாதனங்கள்.

(632-வது பக்கம்)

வான்கூவர்

ஹானலூலு

பனாமா

பசிபிக் ஸமுத்திரம்

வால்பரைஸோ

மான்டிவிடியோ

ஹார்ன் முனை

கெய்ரோ

ஏடன்

ஸமர்கண்ட்

விளாடிவஸ்டக்

இந்து மஹா ஸமுத்திரம்

கேப் டவுன்

பெர்த்

மெல்போர்ன்

++++ இருப்புப் பாதைகள்

→— கம்பியில்லாத் தந்தி (wireless)

.... ஆகாயக் கப்பல் செல்லும் வழி.

═══ } கப்பல் போகும் மார்க்கம்

—— } அகலமாய்ப் போடப்பட்டிருப்பது வியாபாரம் அதிகம் நடப்பதைக் காண்பிக்கிறது

என்றும் உறைந்துபோவதில்லை. அதற்குக்காரணம் என்னவெனில், ஷெ தீவுகளைச்சுற்றி இருக்கும் கடல்கள் அதிக ஆழமில்லாதிருத்த லும், அக்கடல்களுக்குள் பிரவேசிக்கும் ருல்ப்2 ஸ்ட்ரீம் என்று குறிக் கப்படும் சூடான நீரோட்டமும், அத்தீவுகள்மீது வீசும் வெஸ்டர் லீஸ் (Westerlies) என்று குறிக்கப்படும் உஷ்ணமான மேல்காற்றும் அதிக குளிரினுல் மேற்படி கடல்கள் உறைந்துபோகாமல் தடுத்துக் கொண்டிருக்கின்றன. அமிதமான வெப்பமும் அமிதமான குளிரு மில்லாமல் ஷெ தீவுகள் மிதமான நிலைமையிலிருப்பது அதன் ஜனங் களுக்கு தேகாரோக்கியம், ஊக்கம், மனோதிடம், தேகபலம் முதலிய வற்றை உண்டாக்கிக் கொண்டிருப்பதனுல் அவர்கள் எத்தகைய அரிய செய்கைகளையும் எளிதில் செய்து முடிக்கிறுர்கள். அத்த கைய ஆரோக்கியமான சீதோஷ்ண நிலைமை இந்த உலகத்தில் வேறு எந்த இடத்திலும் அமையவில்லையென நாம் நிச்சயமாய்ச் சொல்லலாம்.

**ப்ரிட்டனைச் சுற்றியுள்ள கடற்கரையும் கடல்களும்:—** ப்ரிட்டனுக்கு அமைந்துள்ள மற்றொரு இயற்கை அநுகூலம், அதைச் சுற்றி இருக்கும் கடற்கரையின் வடிவம். அக்கடற்கரை நமது இந்தியாவைச் சுற்றி இருக்கும் கடற்கரையைப்போல் ஒரே ஒழுங்காக இராமல், நிலத்திற்கு இடையிடையே தாறுமாருய்ப்போய் வந்து வளைவாக இருக்கிறது. அதனுல் ஏற்பட்ட குடாக்கடல்கள் சில இடங்களில் நாட்டிற்குள் வெகுதூரம் ஊடுருவிச் செல்லுகின்றமை யால், சமுத்திரதீரத்திலிருந்து 80 மைலுக்கு மேற்பட்ட தூரமுள்ள இடம் ப்ரிட்டனில் இல்லவே இல்லை. இதனுல், இயற்கையாகவே ஏற்பட்ட துறைமுகங்கள் அங்கே ஏராளமாக இருக்கின்றன. அது மாத்திரமல்ல. ப்ரிட்டிஷ் தீவுகளைச் சுற்றி இருக்கும் கடல்கள் ஆழமில்லாதவையாயும், அநேக இடங்களில் குறுகலாயும் இருக் கின்றனவாதலால், அவற்றில், பலவிதமான மீன்கள் அபரிமித மாகக் கிடைக்கின்றன. ஆகவே, அவைகளில், அங்குள்ள ஜனங்க ளுக்கு விசேஷமான ஆகாரம் கிடைப்பதன்றி. மீன்பிடிக்கப்போவ தனுல் கடலில் செல்லும் பழக்கமும், கடலில் இருப்பதற்கு ஒரு விதக் கவர்ச்சியும் உண்டாகின்றன. கடல்கள் அதிக ஆழமில்லா

மல் இருக்கிற காரணத்தால் எப்பொழுதும் அவற்றைச் சார்ந்துள்ள நிலங்களுக்கு வெப்பம் ஏற்படுகிறது. மற்றொரு விதத்திலும் ஷெ கடல்கள் ஸிரிட்டனுக்கு நன்மை பயக்கின்றன. அவை குறுகியும் ஆழமில்லாமலும் இருக்கின்றனவாகையால் அவைகளில் நீர் உயரும்பொழுது, சுமார் 40 முதல் 60 அடிவரையில் உயரக்கிளம்பி பெரிய மதிள்சுவர்போல நதிகளின் முகத்துவாரத்தின் வழியாய், உள்நாட்டில் பிரவேசித்து கப்பல்கள் போய்வருவதற்கு அதிக உதவியாக இருக்கிறது.

**ஸிரிட்டனிலுள்ள நதிகள்:**—ஸிரிட்டிஷ் தீவுகளிலுள்ள நதிகள் இந்தியாவிலுள்ள நதிகளைப்போல் இராமல் பலவிதங்களிலும் உபயோகமுள்ளதாக இருக்கின்றன. அவைகள் சமவெளிகளின் வழியாய் ஓடுவதன்றி எக்காலத்திலும் வற்றுகிறதுமில்லை; உறைந்து போகிறதுமில்லை. அவைகளின் வழியாய்ப் பெரிய கப்பல்கள் உள்நாட்டிற்குச் செல்லும்படி அவ்வளவு அகலமாயிருப்பதனால் மான்செஸ்டர், லண்டன் முதலிய பெரிய துறைமுகப்பட்டணங்கள் உள் நாட்டிலேயே இருக்கின்றன. மேலே நாம் படித்தகடல்நீரின் ஏற்றத்தால் அந்நதிகளின் நீர் உயருவதுபற்றி, எவ்வளவு பெரிய கப்பலானாலும் எளிதில் உள்நாட்டிற்குச் செல்லுகின்றன.

**ஸிரிட்டிஷ் தீவுகளைச் சுற்றியுள்ள நீர் ஓட்டமும் சிறிய தீவுகளும்:**—இதுகாறும் இத்தீவுகளின் இயற்கை வசதிகளைக் கவனிக்கும்போது, நீரோட்டத்தின் சில அம்சங்களை மாத்திரம் கவனித்தோம். இப்பொழுது அந்நீரோட்டத்தின் ஏனைய அம்சங்களில் முக்கியமானதைத் தெரிந்துகொள்வோம். அந்நீரோட்டம் வட அமெரிக்காவிலிருந்து ஸிரிட்டனை நோக்கிவந்து அதற்குச் சமீபத்தில் மூன்று கிளைகளாகப் பிரிகின்றது. ஒன்று இங்கிலீஷ்ச் சானல் வழியாய்ப் போகிறது. இன்னொன்று ஸெயின்ட் ஜார்ஜ்ச்சானல் வழியாக அயரிஷ் சமுத்திரத்திற்குச் செல்லுகிறது. மூன்றாவது கிளை அயர்லண்டு, ஸ்காட்லண்டு ஆகியவற்றின் மேற்குக் கரைவழியாக ஸ்காட்லாண்டை சுற்றிக்கொண்டு தென்புறம் திரும்பி வட கடலுக்குள் பிரவேசிக்கிறது. வடக்கு முகமாகச் செல்லுகிற இந்த நீரோட்டத்தின் ஒருபாகம் வடக்குச் சானல்

வழியாய் ஒரு பிரிவை அயரிஷ் சமுத்திரத்திற்கு அனுப்புகிறது. அதே சமயத்தில் ஸெயின்ட் ஜார்ஜ் ச்சானல் வழியாய் வந்த நீர் ஓட்டமும் அதை சந்திக்கிறது. இம்மாதிரிப் பிரிந்த நீரோட்டங்கள் இரண்டும் சந்திக்கும் இடங்களிலுள்ள துறைமுகங்களுக்கு அதனால் அதிக அநுகூலம் ஏற்படுகிறது. ஸவுதாம்ப்டன் என்னும் துறைமுகத்திற்குத் தெற்கில் ஒரு தீவு இருக்கிறதாகையால் ஷெ அநுகூலம் அதற்கு உண்டாவதுபற்றி அது துறைமுகங்களுக்கெல்லாம் திலகமாய் விளங்குகிறது.

ஷெ இயற்கை அநுகூலங்கள் ஸிரிட்டினைப் போல் உலகத்தில் உள்ள நியூஸிலெண்டு (New Zealand) முதலிய அநேகம் தீவுகளுக்கு ஏற்பட்டிருந்தும், ஏன் அத்தீவுகள் ஸிரிட்டனைப் போல முன்னேற்றமடையவில்லை யென்றால், அவைகளிடம் இல்லாதவையும் ஸிரிட்டனில் மாத்திரம் உள்ளவையுமான இதர இயற்கை வசதிகளே அவற்றுள் முக்கியமானவை.

ஸிரிட்டனில் கிடைக்கும் நிலக்கரியும் இரும்பும்:—ஷெ வசதிகளுள் முக்கியமானவை ஸிரிட்டனில் அபரிமிதமாய்க் கிடைக்கும் கருமாணிக்கமான நிலக்கரியும் கரும் பொன்னை இரும்புமே. அவ்விரண்டும் ஒன்றுக் கொன்று பக்கத்திலும், ஷெ துறைமுகங்களுக்கு அருகிலும் கிடைக்கின்றனவாதலாலும், ஷெ தீவுகளின் இயற்கையமைப்பும் சீதோஷ்ண நிலைமையும் கைத்தொழிலுக்கு நிரம்பவும் உகந்ததாக இருக்கின்றமையாலும், ஸிரிட்டன் மகோன்னத தசையை யடைந்திருக்கிறது. ஸிரிட்டனில் செய்யப்படாத சாமான்கள் உலகத்தில் இல்லை. ஒரு சிறிய குண்டூசி முதல் சண்டைக்கப்பல் ஆகாயக்கப்பல் வரையிலுள்ள சகலமான சாமான்களையும் செய்வதற்கு அவ்விரண்டு உலோகங்களும் இன்றியமையாதவையா யிருக்கின்றன. க்ளாஸ்கோ, மாஞ்செஸ்டர் ஆகிய இரண்டு இடங்களிலும் நூற்கப்படும் பருத்தி நூலைப்போல் வேறு எங்கும் நூற்கப்படுவதில்லை. இதற்குக் காரணம் அவ்விடங்களின் மனோகரமான சீதோஷ்ண நிலைமையே; உள்நாட்டில் கப்பல் போகும்படியான பல பெரிய கால்வாய்களும் இரயில் மார்க்கங்களும் இருக்கின்றனவாகையால், உள்நாட்டிற்

செய்யப்படும் சாமான்கள் துறைமுகப் பட்டணங்களுக்குப் போவதற்கும், வெளிநாடுகளில் இருந்து இறக்குமதியாகும் சாமான்கள் கைத் தொழிற்சாலைக்குப் போவதற்கும் வசதிகள் பிரிட்டனில் அமைந்திருப்பது போல வேறு எந்த நாட்டிலும் அமையவில்லை. உலகத்தார் பிரிட்டனை உலகத்து வர்த்தகசாலையென்றும், கைத் தொழிற்சாலை யென்றும் புகழ்ச்சியாய்க் குறிக்கும்படி அவ்வளவு அதிகமான வியாபாரமும் கைத்தொழிலும் நிறைந்து பிரிட்டனை முன்னணிக்கு உயர்த்தி இருக்கின்றன.

ஷீவுகளின் இயற்கையமைப்பும் பிரிட்டிஷாரை எப்படி மாலுமிகளாக்கியது:—இது மாத்திரமல்ல. பிரிட்டனின் இயற்கையமைப்பு அத்தீவுகளிலுள்ள ஜனங்கள் கடலிற் செல்லவேண்டிய அவசியத்தை உண்டாக்கி, அதில் ஒருவித வேட்கையைப் பெருக்கி, அவர்களை கைதேர்ந்த மாலுமிகளாகச் செய்து, அவர்கள் தங்கள் தேசத்துக்கு வேண்டிய சாமான்களை வெளிநாடுகளிலிருந்து தாங்களே கொணர்ந்தும் கைத்தொழில் முடிந்த சாமான்களை வெளிநாடுகளுக்குக் கொண்டுபோயும், தங்கள் தேசத்தைக் கடலில் காத்துக்கொண்டும் அந்தத் துறையில் முதன்மையடையும்படி செய்தது. உலகத்தில் இருக்கும் கப்பல்களில் மூன்றில் ஒருபங்கு பிரிட்டானியர்களுக்குச் சொந்தமானவை. நமது சக்கரவர்த்தியான ஐந்தாவது ஜார்ஜ் அரசரே கப்பலோட்டுவதில் பால்யம் முதல் அதிக தேர்ச்சியடைந்தவர். பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல்களின் பெருமையும், சண்டைக் கப்பல்களின் திறமையும் அபாரமாகப் புகழத் தக்கவையாயிருக்கின்றன.

பிரிட்டன் பூகோளத்தின் நிலபாகத்திற்கு மத்தியில் இருக்கிறது:—இது நிற்க இன்னொரு இயற்கை வசதி பிரிட்டனுக்கு ஏற்பட்டிருப்பதும் அதன் முன்னேற்றத்திற்கு முக்கிய காரணமெனலாம். பூகோளத்தின் ஜலபாகம் முழுதையும் ஒருபடத்திலும், நிலபாகம் முழுதையும் மற்றொரு படத்திலும் நாம் பிரித்து வரைந்தால், பிரிட்டன் தீவுகள் நிலபாகத்திற்கு நடுநாயகம்போல் விளங்குவதை நாம் கண்கூடாகக் காணலாம். பிரிட்டனைச் சுற்றி ஐரோப்பாவும், ஆசியாவும், வட அமெரிக்காவும் இருப்பதைக் காண்கிறோம். அதனால் பிரிட்டனுக்கு உண்டாகும்

நன்மைகளை நாம் எளிதில் தெரிந்துகொள்ளலாம். மற்ற எந்தத் தேசத்தாரும் உலகின் எந்தப் பாகத்திற்கும் போய்ச் சேருவதற்குள் பிரிட்டன் தேசத்துக் கப்பல்கள் அங்கு போய்ச் சேர்ந்துவிடும். பிரிட்டினைச் சுற்றியுள்ள சமுத்திரமே உலகத்தின் மற்ற பாகங்களை ஒன்று சேர்க்கும் பாதையாகையால், அப்பாதை முழுதையும் அத்தீவிலுள்ளோர் உபயோகப்படுத்துகிறார்கள். பிரிட்டனைப் போலவே ஏறக்குறைய பூமத்தியிலுள்ள ப்/2ரெஞ்சுக்காரர்களும், டச்சுக்காரர்களும், ஸ்பெயின் தேசத்தாரும் புதிதாகக் கண்டு பிடித்த இடங்களாகிய அமெரிக்கா இந்தியா முதலிய இடங்களுடன் வியாபாரம் செய்யும் உரிமை தங்களுக்சே உரியதென்று பிரிட்டிஷ்காரர்கள் போர்புரிந்ததையும், அவர்கள் மற்றவர்களை கடல் போர்களில் தோற்கடித்து, தங்கள் வெற்றிக்கொடியை நாட்டி கடல்களில் செல்லும் உரிமை தங்களுக்கே உண்டென்று நிலைநாட்டியதையும், அம்மாதிரி நிலைநாட்டுவதற்கு பிரிட்டிஷ் தீவுகளின் இயற்கை வசதிகள் எவ்வாறு உதவியாயிருந்தனவென்பதையும் நீங்கள் இச்சரித்திரத்தில் தெரிந்துகொண்டீர்கள்.

இதுகாறும் பிரிட்டிஷ் தீவுகளின் இயற்கையமைப்பினால் அத்தீவுகளுக்கு உண்டான நன்மைகளை கவனித்தோம். அத்தீவுகளை ஜப்பான் தீவுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், அத்தீவுகளின் பெருமை நன்கு வெளியாகும். பிரிட்டிஷ் தீவுகள் ஐரோப்பாவின் வடமேற்குப் பாகத்தில் இருப்பதுபோல் ஜப்பான் தீவுகள் ஆசியாவின் வடகிழக்கு பாகத்தில் இருக்கின்றன. ஜப்பான் தீவுகள் பிரிட்டிஷ் தீவுகளைப்போல் ஒரு பெரிய கண்டத்திற்குச் சமீபத்தில் இருக்கின்றன. ஐரோப்பாவிற்கும் அமெரிக்காவிற்கும் உள்ள வியாபாரத்தில் பெரும்பாலானவை பிரிட்டிஷ் தீவுகளின் வழியாய்ப் போகிறதுபோல், ஆசியாவிற்கும் அமெரிக்காவிற்குமுள்ள வியாபாரம் ஜப்பான் வழியாகவே நடக்கிறது. வடிவத்திலும், சீதோஷ்ண நிலைமையிலும், பூமியின்கீழ் அகப்படும் உலோகங்களிலும், இந்த இரண்டு தீவுகளும் ஒன்றையொன்று ஒத்திருக்கின்றன. அப்படியிருக்க, பிரிட்டிஷ் தீவுகள் மாத்திரம் முன்னேற்றம் அடைவதற்கும் ஜப்பான் தீவுகள் அதற்கு சமதையான

முன்னேற்றம் அடையாததற்கும் காரணமென்ன ? ஆசியாவின் படத்தை நாம் உற்றுப் பார்த்தால், அது நன்கு விளங்கும். பிரிட்டிஷ் தீவுகள் ஐரோப்பாவின் ஸார க்ஷேத்திரமான இடங்களுக்கு எதிரில் இருப்பதுபோல், ஜப்பான் தீவுகள் ஆசியாவில் வளம் பொருந்திய இடங்களுக்கு எதிரில் இல்லை. ஜப்பானுக்கு எதிரில் இருக்கும் மஞ்சூரியா, கொரியா என்னும் பிரதேசங்கள் வளமுள்ளவையன்று. கடற்கரையோரமாயுள்ள மலைகள் உள்பிரதேசங்களுடன் வியாபாரம் நடப்பதற்குத் தடையாயிருக்கின்றன. அவைகளின் வழியாய் ஓடும் சிலநதிகளும் ஜப்பானை நோக்கி சமுத்திரத்தில் சங்கமமாகிறதில்லை. ஜப்பானில் உள்ள ஒரே துறைமுகம் பனியால் பலமாத காலம் உறைந்து போகிறது. தவிரவும் அங்குள்ள எரிமலை ஜனங்களுக்கு அடிக்கடி ஆபத்தை உண்டாக்குகிறது. இத்தகைய இதர காரணங்களால் ஜப்பான் பிரிட்டிஷ்தீவுகளின் மகோன்னத பதவியை யடையவில்லை.

பிரிட்டிஷ் இராஜ்யத்திற்கு வளத்தை உண்டாக்கிய அதன் இயற்கைச் சாதனங்களே அது உலகெங்கும் பரவி வியாபிப்பதற்கும் காரணமாயிருந்தன.

**பிரிட்டிஷ் இராஜ்யம் உலகெங்கும் பரவும்படி செய்த இயற்கைச் சாதனங்கள்:**—முன்காலங்களில் கடல் நீரைக் காய்ச்சி சுத்த ஜலம் தயாரித்துக்கொள்வது கப்பல் வியாபாரிகளுக்குத் தெரியாமல் இருந்தது. அவர்கள் தங்களுக்குத் தேவையான சுத்த ஜலத்தை எடுத்துக்கொண்டு போவதும், வழியில் சில குறிப்பிட்ட இடங்களில் தங்கி, மறுபடி ஜலம் நிரப்பிக்கொள்வதும் வழக்கமாக இருந்தன. அதன்பொருட்டே, அவர்கள் கடலோரத்தில் அநேக இடங்களைக் கைப்பற்றிக்கொண்டிருந்தனர். நீராவிக் கப்பல்கள் கண்டு பிடிக்கப்பட்ட பிறகு அவர்கள் கடல்நீரைக் காய்ச்சி சுத்தஜலம் தயாரித்துக்கொண்டார்களானாலும், நீராவிக் கப்பல்களுக்குத் தேவையான நிலக்கரியைச் சேகரித்துக்கொள்ளவும் கடற்கரையோரமாய் இடங்களைச் சம்பாதித்துக் கொண்டார்கள். அதற்குப்பிறகு கடலின் கீழ் போகும் தந்திக் கம்பிகள் நிற்பதற்கு சில இடங்களை ஏற்படுத்தினார்கள். அவைகளைக் காப்பாற்றுவதற்கு முக்கியமான இடங்களில்

கப்பற்படைகளை ஏற்படுத்தினார்கள். உதாரணமாக, மத்தியதரைக் கடலில் ஜிப்ரால்டரிலும், மால்ட்டா, ஸைப்ரஸ் தீவுகளிலும் ப்ரிட்டிஷ் படைகள் இருந்து மத்தியதரைக் கடலையும் ப்ரிட்டிஷ் பிரதேசங்களையும் ப்ரிட்டிஷ் வியாபாரத்தையும் பாதுகாக்கின்றன. ஸூயெஸ் கால்வாயையும் இந்தியாவையும் தங்களுடைய ஸ்வாதீனத்தில் வைத்துக்கொள்வதற்கு ஒரு பெரிய ப்ரிட்டிஷ் சேனை ஈஜிப்ட்டில் இருக்கிறது. இவ்வாறு மத்தியதரைக்கடல் ப்ரிட்டிஷ் பாதுகாப்பில் இருந்து வருகிறது.

இந்து மகா சமுத்திரமும் இவ்வாறே ப்ரிட்டிஷாரால் அடியில் வருமாறு பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஆப்ரிக்காவில் கேப்டவுனிலும், எலிஸபெத் துறைமுகத்திலும், நட்டால் துறைமுகத்திலும், மொரிஷஸிலும், ஸான்ஸிபாரிலும், செங்கடலுக்குள் நுழையும் மார்க்கத்திலுள்ள பெரும்கற்பாறையான பெரிம் என்ற தீவிலும், ஏடன்பட்டணத்திலும், டியாகோ கார்ஸியா பாயின்டிலும், கொழும்பிலும், போர்ட் ப்ளேர் துறைமுகத்திலும், பினங்கிலும், சிங்கப்பூரிலும், லுப்பான் தீவிலுள்ள விக்டோரியாவிலும், இந்து மகாசமுத்திரத்திற்கு மத்தியிலுள்ள டியேகோ கார்ஷியா என்ற தீவிலும், ஏடனிலிருந்து ஆஸ்திரேலியாவிற்குப்போகும் மார்க்கமும், நல்நம்பிக்கை முனையிலிருந்து கொழும்பிற்குப்போகும் கப்பல் மார்க்கமும் சந்திக்குமிடமான ச்சாகூ ஆர்ச்சிபிலகோ Chagoo archipilagoவிலும், பராக்கிரமத்திற் சிறந்த கப்பற்படைகள் இருந்து இந்துமகா சமுத்திரத்தைப் பாதுகாக்கின்றன.

ஆப்ரிக்காவின் மேற்குக்கரையிலுள்ள ப்ரீடவுன் (Freetown) எல்மீனா, வால்பிஷ்வே, (Walfish Bay) கேப்டவுன், அஸ்ஸென்ஷன், முதலியவற்றிலும் ஸெயின்ட் ஹெலினா தீவுகளிலும், தெற்கில் பாக்லன்ட் (Falkland) தீவிலும், காநடாவுக்கு மேற்கு இன்டீஸ் (West-Indies) தீவுகளுக்கும் மத்தியிலுள்ள பெர்முடாஸ் (Bermudas) தீவிலும் ப்ரிட்டிஷ் படைகள் இருந்து அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைப் பாதுகாக்கின்றன.

பாஸிபிக் சமுத்திரத்தில் சீனாதேசத்திற்குப்போகும் வழியிலுள்ள ஹாங்காங் தீவிலும் மற்றும் சில தீவுகளிலும் ப்ரிட்டிஷ் படைகள் தயாராக இருக்கின்றன.

"தற்கால நாகரிகத்தில் ஒரு முக்கிய அம்சமான நீராவிக்கப்பல்களும், ஆகாயக்கப்பல்களும், இரயில் வண்டிகளும். மோட்டார் வண்டிகளும் உலகத்திலுல் எல்லா இடங்களிலுள்ளவர்களும் எளிதில் ஒன்று சேரும்படி செய்கின்றன. மின்சாரத்தின் உதவியால் எற்பட்ட தந்தி, டெலிபோன் முதலியவைகள் உலகத்தில் எங்கும் நடக்கும் சமாசாரங்களை ஒரு விநாடியில் தெரிவிக்கின்றன. எங்கு பார்த்தாலும் முக்கியமான இடங்களில் ஸிரிட்டிஷ் சைன்யங்களும், போர்க்கப்பல்களும் ஆயத்தமாயிருக்கின்றன. அவைகளின் உதவியாலேயே ஸிரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் ஒனறுபட்டு நிலைத்து நிற்கிறது. இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது" என்றுசிலர் நினைத்தல் கூடும்.பயமுறுத்தி ஸ்தாபித்தஆட்சி நிலைத்து நிற்காது என்பது நமக்குத் தெரிந்த விஷயமே. மேற்குறித்தவைகளினுல் மாத்திரம் இந்த ஸாம்ராஜ்யம் ஒன்று சேர்க்கப்பட்டிருந்தால், 1914 வருஷத்தில் நடந்த பெரிய போரில் இது சிதைந்து போயிருக்கும். அச்சமயம் அப்படிப் போகாமல், முன்னிலும் அதிக ஐக்கியமாக ஒன்றுசேர்ந்து, ஸாம்ராஜ்யத்தின் பொது நன்மைக்காக ஒத்து உழைத்ததே, இதில் சேர்ந்துள்ள நாடுகளெல்லாம் ஸிரிட்டிஷாருடன அன்பு இராஜ விசுவாசம் என்னும் கயிறுகளால் கட்டுண்டிருப்பதற்குத் தகுந்த திருஷ்டாந்தமாகும். இவ்விதமான அன்பும் இராஜ விசுவாசமும் உண்டானதற்கு ஸிரிட்டிஷார் துரைத்தனம் நடத்தும் விதமேதான் காரணம். சுய ஆட்சியையும் சுய போஷணையையும், சுயப்பாதுகாப்பையும் இந்தப்பெரிய ஸாம்ராஜ்யத்தின் ஒவ்வொரு பாகத்திலும் எற்படுத்தி, அந்தந்த நாட்டை விருத்தி செய்யவேண்டுமென்பதே பிரிட்டிஷார் துரைத்தன நிர்வாகத்தில் கொண்டுள்ள முக்கிய நோக்கமாதும். கானடா, நியூஸிலண்டு (Newzealand) ஆஸ்ட்ரேலியா, தென் ஆப்ரிக்கா ஆகியவைகள் சுயஆட்சி பெற்ற தேசங்கள். அவைகள் தன்னைத்தானே கவனித்து ஸிரிட்டிஷ் ஆளுகையின் கீழ் அரசியல் நடாத்தி வருகின்றன. மற்றத் தேசங்களையும் அபிவிருத்தி செய்து அவைகளுக்கும் சுயஆட்சி வழங்குவதே ஸிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தின் சங்கல்பம். ஸிரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் முழுதிற்கும் சம்பந்தப்பட்ட விஷயங்களை கவனிக்கும்

பொருட்டு ஒவ்வொரு வருஷம் அகில லோக சங்கம் ஒன்று கூடுகின்றது. அதற்கு ஒவ்வொரு தேசத்திலிருந்தும் பிரதிநிதிகள் செல்லுகின்றனர். முக்கியமாக சமீபத்தில் நடந்த பெரிய ஐரோப்பிய யுத்தத்திற்குப் பிறகு ப்ரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தின் பலவேறு பாகங்களின் ஐக்கியத்தன்மையும் நேசமும் அதிகரிக்க, ஓர் உடம்பிலுள்ள பல அவயவங்களைப்போல் அவை ஒன்றுபட்டிருக்கின்றன. அவ்வாறு பரஸ்பர அன்பினாலும், நல்ல எண்ணத்தினாலும், சிநேக பாவத்தினாலும் ஒன்று சேர்க்கப்பட்ட ஸாம்ராஜ்யத்திற்கு அழிவு ஏற்படாதென்பது நிச்சயம். அதனால், எல்லா தேசங்களுக்கும் நன்மைகள் ஏற்படுவதென்பதும் உண்மையே.

ப்ரிட்டிஷ் தீவுகளுக்கு அபாரமான மேம்பாட்டை யளித்த இயற்கை வசதிகளான அத்தீவின் இயற்கை யமைப்பும், நதிகளும், மலைகளும், மழைவளமும், அதனைச் சுற்றியிருக்கும் ஆழமில்லாத கடலும், அக்கடலில் வரும் கல்ப்ஸ்ட்ரீம் (Gulf Stream) என்று குறிக்கப்பட்ட உஷ்ண நீரோட்டமும், நெடுந்தூரம் பூமிக்குள் ஊடுருவிச் சென்றிருக்கும் கடற்கரையும், நிலத்திற்குள்ளிருந்து இப்பொழுது ஏராளமாகக் கிடைக்கும் 'கருமாணிக்கம்' என்று உவமிக்கப்படும் நிலக்கரியும், 'கரும்பொன்' என்று கருதப்படும் இரும்பும், கைத்தொழிலுக்கு உகந்த சீதோஷ்ண ஸ்திதியும், நீடுழிகாலமாக ப்ரிட்டன் தீவுகளில் இருந்தும், அத்தீவுகள் 1600-ம் வருஷம் வரையில் முன்னேற்றமடையாமல், அதற்குப் பிறகே அடைந்ததற்குக் காரணமென்ன என்று இன்னொரு கேள்வி பிறக்கலாம்.

ஒரு மனிதனுடைய வாழ்க்கையானது, அவனைச் சுற்றியுள்ள சந்தர்ப்பங்களினாலும், அச் சந்தர்ப்பங்களை அவன் உபயோகப்படுத்திக் கொள்ளும் விதத்தினாலும் அநேகமாய் உருப்படுத்தப்படுகிறதுபோல, ஒரு நாட்டின் சரித்திரமும் அத்தேசத்தின் இயற்கையமைப்பினாலும், அந்த இயற்கையமைப்பிலுள்ள அநுகூலங்களைத் தங்களுடைய நாட்டின் அபிவிருத்திக்கு அதன் ஜனங்கள் உபயோகப்படுத்திக் கொள்ளும் விதத்தினாலும் பெரும்பாலும் தீர்மானிக்கப் படுகிறதென்பது ப்ரிட்டிஷ் தீவுகளின் சரித்திரத்திலிருந்து நாம் தெரிந்துகொண்ட நீதிகளில் ஒன்றாகும். இன்னும்

ஆராய்ச்சி செய்தால் இதன் உண்மை நன்குவிளங்கும். நாம் குழந்தைகளாய் இருந்தபொழுது, நம்மைச் சுற்றியிருக்கும் அநுகூலமான சந்தர்ப்பங்களை நம்முடைய அபிவிருத்திக்கு உபயோகப்படுத்திக் கொள்வதற்கும், பிரதிகூலமானவைகளை ஜெயித்து அவைகளையும் நம்முடைய நன்மைக்கே உபயோகப்படுத்திக் கொள்வதற்கும் நாம் திறனற்றவர்களாக இருந்தோம். அதுபோல ஒவ்வொரு தேசத்திலும் அத்தேசத்து ஜனங்களிற் பெரும்பான்மையோர் நாகரிகமும், கல்விப் பயிற்சியுமின்றி ஒரு காலத்தில் இருந்தனர். அக்காலங்களில் அவர்கள் அத்தேசத்தின் இயற்கையமைப்பினுல் பாதிக்கப்பட்டிருந்தாலும், பிரதிகூலமான இயற்கையமைப்பின் குணங்களை ஜெயிப்பதற்கும், சில சமயங்களில் இயற்கையமைப்பின் பயன்களைப் பெறுவதற்குங்கூடக் திறனற்றவர்களாய் இருந்தனர். இதுகாறும், நாம் படித்த ஸிரிட்டிஷ் தீவுகளின் சரித்திரமே இதற்கும் தகுந்த திருஷ்டாந்தமாகும். இப்பொழுது நாம் இதிலுள்ள முக்கிய அம்சங்களிற் சிலவற்றைக் கவனித்து இதன் உண்மையைத் தெரிந்து கொள்வோம்.

பழைய காலத்தில் ஸிரிட்டனின் இயற்கையமைப்பு அத்தீவிலுள்ளவர்களுக்கு மேன்மையைக் கொடுக்காமல் இருந்ததற்குக் காரணம்:—டீஸ் நதி முகத்துவாரத்திலிருந்து, சவரன்நதி முகத்துவாரத்திற்கு ஒரு கோடு கிழித்து, மேற்படி கோட்டின் கீழ்ப்புறமிருக்கும் நிலங்கள் அதிக நீர்வளம் நிலவளம் பொருந்திச் செழிப்புற்றவை என்று நாம் கருதவேண்டும். மேல்புறமோ கற்களும், பாறைகளும், மலைகளும் நிறைந்து ஜனங்களின் வாழ்க்கைக்கு அவ்வளவு தகுதியானதாக இல்லை. அக்காலத்தில் இங்கிலண்டு முழுதும், அதில் முக்கியமாய் இக்கோட்டின் கீழ்பாகத்திலும், அநேக காடுகளும் சதுப்பு நிலங்களும் இருந்து ஜனங்களுக்குப் பல விதங்களிலும் இடைஞ்சல் செய்தன. அக்காலங்களில் ஐரோப்பாவிற்கும், ஆப்பிரிக்காவிற்கும், ஆசியாவிற்கும் நடந்த வியாபாரம் மத்திய தரைக்கடலின் வழியாகவே நடந்தது. ஈஜிப்ட், அரேபியா, ஸிரியா, பெர்ஷியா, இந்தியா முதலிய தேசங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட வியாபாரச் சரக்குகள் வெனிஸ், ஜினேவா முதலிய

இடங்களில் இறக்கப்பட்டு ஐரோப்பாவிலுள்ள மற்ற இடங்களுக்கு அனுப்பப்பட்டன. தற்காலத்தில் அமெரிக்காவைக் கண்டுபிடித்து அதனுடன் வியாபாரம் தொடங்கிய ஸிரிட்டிஷ் தீவுகள் நில பாகத்திற்கு மத்தியிலிருப்பதால் உண்டாகும் நன்மைகளை அடைந்து மேன்மேலும் அபிவிருத்தியடைந்தன. இம்மாதிரி அமெரிக்காவுடன் வியாபாரம் நடப்பதற்கு முன்பு ஸிரிட்டிஷ் தீவுகள் ஐரோப்பாக் கண்டத்தின் வடமேற்குப் பாகத்தில் உள்ள தீவுகளாக மாத்திரம் இருந்தன. அக்காலங்களில் அதிக நாகரிகத்துடன் விளங்கிய க்ரீஸ் தேசத்தார் முதலியோர் இத்தீவுகளைக் கவனித்தவரல்லர். இத்தீவுகள் இருந்தனவென்பதே அவர்களுக்குத் தெரியாது. கடைசியாக, ரோமர்கள் இராஜ்யபாரம் புரிந்தபோதுகூட, அவர்களுக்கும் சிறிது காலம் அது தெரியாமலிருந்தது. கடைசியாக ரோம் சக்கரவர்த்தியான ஜூலியஸ் ஸீஸர் காால் தேசத்தவருடன் போர்புரிந்த போது ஸிரிட்டன்களைப் பற்றி தெரிந்துகொண்டதையும், அவர்களை வென்றதையும் நீங்கள் படித்தீர்கள். அதுவரையில் நாகரிகமற்றிருந்த ஸிரிட்டன்கள் ரோம் இராஜ்யத்தால் நாகரிகமடைந்தனர். ஸிரிட்டன் தேசமும் சீர்திருத்தமடைந்தது.

ஸிரிட்டன் ரோம் இராஜ்யத்தின் கோடியில் இருந்தமையால், சுமார் A. D. 410-ல் ரோமை வாண்டல்ஸ் முதலிய சில சத்துருக்கள் எதிர்த்தபோது, அந்நகரத்தை காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு, ரோமர்கள் தங்கள் இராஜ்ஜியத்தின் வட கோடியில் உள்ளதும், அப்பொழுது அவர்களுக்கு அவ்வளவு சிலாக்கியமான தாய்த் தோன்றாததுமான ஸிரிட்டினை விட்டுப் போய்விட்டார்கள். ரோம் ஆளுகையில் ரோமர்களால் பாதுகாக்கப்பட்டு வந்த ஸிரிட்டன்கள், போர்வீரர்களான ஷே ரோமர்கள் போனவுடன் தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும் திறனற்றவர்கள் ஆய்விட்டார்கள். ரோம் இராஜ்யத்தில் இங்கிலண்டு செழுமையடைந்து விட்டமையால், பக்கத்தில் மலைகளிற் குடியேறி இருந்தவர்களும், பலிஷ்டர்களும், தங்களைத் தாங்கள் பாதுகாத்துக்கொள்ளும் திறனையும் போர்புரியும் திறமையையும் இழக்காதிருந்த வெல்ஷ்காரர்களும், ஸ்காட்ஸும் ஸிரிட்டன்களின்மீது படையெடுத்து வந்து அவர்களை ஜெயித்து

வருத்தலாயினர். அக்காலத்தில், பிரிட்டனுக்குச் சமீபமாயுள்ள பல நாடுகள் வளங்குன்றிப் போனதுபற்றி, அவ்விடத்து ஜனங்களுக்கு உணவுப்பொருட்கள் கிடைக்காமல் போயின. அத்தகையாரில் ட்யூடன் ஜாதியரைச் சேர்ந்த ஆங்கில்ஸ், சாக்ஸன்ஸ், ஜூட்ஸ் முதலியவர்கள் மலைப்பிரதேசங்களிலிருந்தவர்கள். சமவெளியிலிருந்தவர்களான பிரிட்டன்களால், அவர்களுடன் எதிர்த்து போர்புரிய இயலவில்லை. அவ்வாறு புதிதாக பிரிட்டனில் குடியேறியவர்களும், பிரிட்டிஷ் தீவின் இயற்கை அமைப்பினுல் பாதிக்கப்பட்டார்கள். இங்கிலண்டில் குடியேறிய ட்யூடன் ஜாதியர் அவர்கள் வந்த வழியிலிருந்த கென்ட் பிரதேசத்தில் முதலில் குடியேறினுர்கள். அதற்குப் பின் வந்தவர்கள் கடற்கரையோரத்தில் அவர்களுக்குச் சமீபத்திலும், அதற்குப் பின் வந்தவர்கள் அவர்களுக்கு அருகாமையில் வளப்பமுள்ள உள்நாட்டிலும் குடியேறினுர்கள். இப்படி அவர்கள் வருவதற்கு இங்கிலண்டின் இயற்கையமைப்பே காரணமாகும். நார்போக்கிலும், ஸபோக்கிலும் குடியேறிய ஆங்கில்ஸ் இன்னும் மேற்கே செல்லமுடியாதபடி அக்காலத்தில் அங்கிருந்த சதுப்புநிலங்கள் தடுத்தன. அவர்கள் அங்கிருந்த பிரிட்டன்களை சவரன் நதிக்கு அப்பாலுள்ள வேல்ஸிலும் தென் மேற்கிலுள்ள மலைப் பிரதேசத்திலும் துரத்திவிட்டமையால், அவர்களுக்கும் பிரிட்டன்களுக்கும் அப்பொழுது போர் நடந்தது. கிழக்கு சமுத்திரக் கரையில், பினைன்ஸ் மலைக்கும் சமுத்திரத்திற்கும் மத்தியில் உள்ளதும், தெற்கே ஹம்பருக்கும் வடக்கே போர்த்துக்கும் (Forth) மத்தியிலுள்ளதுமான இடத்தை ஆங்கில்ஸ் மிக ஸுலமாய் ஜெயித்து அங்கே குடியேறினுர்கள்; கடைசியாக லின்கன்ஷயரில் இறங்கி, வாஷில் விழும் நதிகளின் வழியாயும், ஹம்பர்நதியின் வழியாயும் உள்நாட்டிற்குச் சென்று இங்கிலண்டின் மத்தியபாகத்தில் குடியேறினர். அக்காலத்தில் அங்கே இருந்த பெரிய காட்டினுல் அந்த இடத்தில் இராஜ்யம் ஏற்படுத்த காலதாமதமாயிற்று.

இங்கிலண்டின் படத்தில் சப்தராஜ்யத்தை (Heptarchy)ப் பார்த்தால், டீஸ்நதி முகத்துவாரத்திற்கும் சவரன் நதி முகத்வாரத்

திற்கும் கிழித்தகோட்டிற்கு அப்பால் அவர்கள் போகவில்லையென்பது தெரிகிறது. அவர்கள் தங்கியிருந்த பிரதேசத்திலிருந்து கெல்ட்ஸை ஓட்டிவிட்டனர்.

சுற்றிலும் உள்ள பிரதேசங்களில் அக்காலத்தில் அதிக குளிரினால் அத்தேசத்து ஜனங்களைக் காப்பாற்றுவதற்குத் தகுந்த உணவுப் பொருள்கள் இல்லாமையால், அத்தேசத்தவர்கள் வளம் பொருந்திய இங்கிலண்ட் முதலிய தேசங்களின்மேல் படையெடுத்துச் சென்று, கொள்ளையடித்து வந்தார்கள். இங்கிலண்டில் அக்காலத்தில் நல்ல பாதைகளும் போக்குவரவு சாதனங்களும் இல்லாமையால், ஜனங்கள் அக்காலத்தில் அத்தீவில் இருந்த சதுப்பு நிலங்களாலும் காடுகளாலும் பிரிபட்டு ஒருவரோடொருவர் சேராமல் வெவ்வேருய் இருந்தமையால் எல்லோரும் சேர்ந்து டேன்களைத் துரத்தியடித்தல் கூடாததாயிற்று. ஆகவே, விரைவில், டேன்கள் வந்து தங்கி உறுதிப்பட்டுப் போயினர். அதனாலேயே ஒரு சமயத்தில், பிரிட்டன் ரோம் ராஜ்யத்தின் ஒருபாகமாயிருந்தது போல, டேன் சக்கரவர்த்தியின் ஆளுகைக்குட்பட்டது.

முன்னர் குறித்தபடி, போக்கு வரவு சாதனங்கள் இக்காலத்திலிருப்பதுபோல் அப்பொழுது அதிகமாயில்லை. அதனாலேயே நார்மன்களது அரசரான வில்லியம் ஹேஸ்டிங்ஸ் யுத்தத்தி இங்கிலண்டை மிக எளிதில் ஜயிப்பது சாத்தியமாயிற்று. எப்படியெனில், வில்லியம் சேனைகளுடன் இங்கிலண்டின்மீது படை எடுத்துவந்த காலத்தில், இங்கிலண்டின் அரசர் ஹா$^2$ரால்ட் அந்த தேசத்தின் வடபாகத்தில் வந்து எதிர்த்த டேன் அரசருடன் போர் புரிந்துகொண்டிருந்தார். அப்பொழுது வில்லியம் இங்கிலண்டில் சுலபமாய் வந்து இறங்கிவிட்டார்; ஹா$^2$ரால்ட் அச் செய்தியைக் கேட்டு தெற்கில் வருவதற்கு முன் வில்லியம் தமக்குத் தேவையானவைகளைச் செய்துகொண்டுவிட்டார்.

ஜயவீரரான வில்லியம் நார்மன் பிரபுக்கள் ஸாக்ஸன்களை உபத்திரவப்படுத்தாமல் இருப்பதற்கு, அநேக ஏற்பாடுகளைச் செய்தார். ஆயினும், அவரது காலத்திற்குப் பின்பு பட்டத்திற்குவந்த ரூப$^2$ஸ், ஸ்டீப$^2$ன் முதலிய அரசர்களது காலங்களில் நார்மன் பிரபுக்கள்

ஸாக்ஸன்களைத் துன்புறுத்தினர். இரண்டாவது ஹென்றி அரசர் நாட்டிலுள்ளோர் ஐக்கியமாவதற்கு வேண்டிய சில சீர்திருத்தங்களைச் செய்தாராலும், அதற்குப் பிறகு பட்டத்திற்குவந்த ஜான் அரசரது காலத்தில் ஸாக்ஸன்களும் நார்மன்களும் ஒன்றுசேர்ந்து பிரிட்டிஷ் பிரஜைகளின் உரிமைகளுக்கான மாக்னு கார்ட்டா என்னும் சாஸனத்தை அரசரிடம் எழுதிவாங்கினார்கள். நிரம்பவும் பராக்கிரமசாலியான அரசர்களால் இங்கிலண்டு ஆளப்பட்டுவந்த காலத்தில், இராஜ்யம் செழிப்படைந்தது. அவ்வாறான அரசன் இல்லாத காலங்களில், நார்மன்களும் ஸாக்ஸன்களும் சச்சரவிட்டுக் கொண்டார்கள். சிற்சில சமயங்களில் இராஜ்யபாரம் வகிக்க, தனக்குத்தான் உரிமை உண்டு என்று இராஜவம்சத்தில் இருவர் ஒருவரோடொருவர் போர்புரிந்தனர். நார்மன் பிரபுக்களும் தங்களுக்கு வேண்டியவர்களுடன் சேர்ந்துகொண்டு ஒருவரோடொருவர் சண்டையிட்டனர். ஒருமாகாணம் மற்றொரு மாகாணத்துடன் போர்புரிந்தது. இவ்வாறு, பதினைந்தாம் நூற்றாண்டின் அந்தியத்தில் இங்கிலண்டின் நிலைமையானது, ஸ்டீபன் காலத்தில் இருந்த பரிதாபகரமான நிலைமையே நலமானதென்று சொல்லும்படியாயிற்று. ஜனங்கள் தங்களது உரிமைகளைக் காக்கும் சாஸனங்களைப் பெற்றிருந்தும், அவைகளைத் தங்களுக்கு நன்மை பயக்குமாறு உபயோகப்படுத்த மாட்டாமல் தவித்து நின்றனர்.

கி. பி. 1485-ல் பட்டத்திற்கு வந்தவரும், ட்யூடர் வம்சத்தைச் சேர்ந்தவரில் முதல் அரசருமான ஏழாவது ஹென்றியின் காலம் முதற்கொண்டே அவ்விதமான உள்நாட்டுக் கலகங்கள் ஒழிய, அந்நாட்டின் முன்னேற்றத்திற்கும் பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் வளருவதற்கும் அஸ்திவாரம் போடப்பட்டதென்று சொல்லலாம். ஷை வம்சத்து அரசர்கள் சுற்றிலுமுள்ள தேசங்களின் அரசவம்சத்தைச் சேர்ந்த இராஜகுமாரிகளை தாங்களே மணந்தும், அல்லது தங்கள் வம்சத்தைச் சேர்ந்தவர்களுக்கு மணம்புரிவித்தும் அந்நாடுகளுடன் சிநேகம் செய்துகொண்டு, கூடியமட்டில் சண்டைகளை நிறுத்தி, அத்தீவுகளில் நல்ல அரசாங்கமுறைகளை ஏற்படுத்தி, முன்னிருந்த ஒழுங்கீனங்களை அறவே ஒழித்து, பிரஜைகளைப் பலவிதத்திலும் சந்தோஷிப்பித்து, அவர்களது அபிவிருத்திக்காக வேண்

டிய ஏற்பாடுகள் அனைத்தையும் செய்து, ஒரு குடும்பத்திலுள்ள தகப்பன் குழந்தைகளை பயமுறுத்தல் கலந்த அன்புடன் நடத்துவது போல் பரிபாலனஞ் செய்தனர். அக்காலத்தில், அச்சியற்றும் முறைகளும் கண்டு பிடிக் கப்பட்டன. அதற்குமுன் புஸ்தகங்கள் கையினால் எழுதப்பட்டு வந்தமையால், அவை கிடைக்காமையால், பெரும்பாலோர் கல்லாத மூடராயிருந்தனர். அச்சியற்றும் முறை கண்டு பிடிக்கப்பட்டவுடன் ஏராளமான புஸ்தகங்கள் வெளியிடப்பட்டன. ஜனங்கள் ஆவலுடன் அவைகளைப் படித்தார்கள். 1492-ம் வருஷம் அமெரிக்காவும், 1497 ல் இந்தியாவிற்குக் கடல் வழியாய் வரும் மார்க்கமும் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டன. அதனால் அத்தீவுகளுக்கு அளவற்ற நன்மைகள் உண்டாயின. அதுகாறும் ஒரு மூலையில் எவராலும் கவனிக்கப்படாமல் இருந்த அத்தீவுகள் ஐரோப்பாவிற்கும் அமெரிக்காவிற்கும் நடக்கும் வியாபாரத்திற்கு வாசற்படி போல் ஆயின. அதுவரையில் ஐரோப்பாவின் வியாபாரத்திற்குக் கடைத்தெரு போல இருந்த வெனிஸ் பட்டணத்தின் செல்வாக்கும் மத்திய தரைக்கடலின் பெருமையும் குன்றிப்போக, அச் செல்வாக்கும்பெருமையும் பிரிட்டிஷ் தீவுகளுக்கே படிப்படியாய் வந்து சேர்ந்துவிட்டன.

அக்காலத்திலேதான் கவி ரத்னங்களான ஷேக்ஸ்பியர், மில்ட்டன், பேகன் முதலியோர் தோன்றி அநேக நூல்களை இயற்றி ஜனங்களுக்குக் கல்வியறிவூட்டினர். 1588-ம் வருஷத்தில் இங்கிலண்டின் மீது படையெடுத்து வந்த பெரிய ஆர்மடாவை கடற்சண்டையிற் தோற்கடித்து தங்களுக்குக் கடலில் இருந்த வல்லமையை இங்கிலீஷ்காரர்கள் அக்காலத்திலேதான் தங்களுக்குத் தாங்களே உணர்ந்து கொண்டனர்.

ஷ ட்யூடர்களது அரசாட்சிக்கு முன்பு இருந்த பிரிட்டிஷார் அவ்வளவு முன்னேற்ற மடையவில்லை யாதலால், தங்களுடைய வல்லமை எவ்வளவென்பதைத் தெரிந்து கொள்ளாமலும் தங்களுடைய தேசத்தின் இயற்கையமைப்பின் அநுகூலங்களை உபயோகிக்கும் வழிகளை யறிந்துகொள்ளாமலும் இருந்தனர். ட்யூடர்

அரசாட்சியில் முன்னேற்றம் அடைந்த இங்கிலீஷ்காரர் நன்ருகத் துயின்று களை தீர்த்துக்கொண்டு கர்ஜித்து எழும் சிங்கக் குட்டிபோல மிக தைரியத்துடனும் ஊக்கத்துடனும் கிளம்பி தங்கள் நாட்டிலுள்ள இயற்கையமைப்பின் பிரதிகூலங்களை ஜயித்து, அநுகூலங்களைப் பயன்படுத்தி, அவற்றின் உதவியால் உலகில் ஒப்புயர்வற்றபதவியை அடைந்து மகோன்னத நிலைமையிலிருந்து வருகின்றனர்.

முற்றிற்று.



**HINDU**, dated 26th June 1926, writes as follows :–

# THE TAMIL NOVEL TO-DAY

## A DESIRABLE DEPARTURE



The enthusiasm of a convert ever exceeds that of the believer whose faith has been of an even tenour. I might therefore give full vent to the feeling of admiration which a perusal of this novel * by Mr. K. Duraiswami Iyengar has evoked in me. As a voracious reader of fiction, I had previously tried to interest myself in the Tamil **genre** of the novel and had been uniformly repelled. Not even the plea of the unindigenousness of the art to Tamil literature can excuse the scandalous lack of originality in plot and form that characterise the present day Tamil school of novels.

Their plot-construction is uniformly modelled on English convention in fiction and ignores Indian life, manners and conditions. High sounding Sanskritised names that no Indian ever bore in every day life constitute the only indigenous element beside the language; ladies make love in a fashion that no Indian lady would ever dream of; and towns, people, and manners that never existed are passed off upon us as idealised pictures of society.

Before the advent of Mr. K. Duraiswami Iyengar in the field of letters, I recognise only very few original novels worth speaking of, of which Rajam Iyer's "Kamalambal

---

* MAYA VINODA PARADESI :—A Tamil Detective Novel: By Vaduvur K. Duraiswami Iyengar, B.A., K. Vijayam & Co, Triplicane Post, Madras :—2 Volumes. Price Rs. 5.

Charitram" is a type. For this novel no praise can be too high. Almost all the novelists make burlesques of their adaptations and translations; English gentlemen and ladies try hard to look comfortable in a "Panchakacham and Angavastram" and produce an effect as bizarre as the suits of the Salvationists in Madras; the conversation adheres so slavishly to the turn of idiom and phrase of the English as to produce an unnatural and wholly **outre** effect in their make up; there is no humour worth speaking of. The original English book loses all its essence like a violet analysed in a crucible, and as for humour of their own, we might as well ask an elephant to fly.

My disgust therefore with the run of Tamil novelists was too deep for words. All my favourite masters of plot in English and French, Dumas, Hugo, Le-Blanc, Doyle, and Scott had come to me onetime or other Tamilised and spoilt, and comparing so unfavourably with their originals that I gradually came to hold my nose when Tamil novels were mentioned. Let us say it now that I took up the novels of Mr. K. Duraiswami Iyengar with the prejudice that was composed of my embittered feelings against a hundred bad performers. But that feeling was soon dispelled as soon as I read a few pages.

I took up a novel and could not lay it down before I had read it through. Intense power, originality, and mastery were accompanied by intense ease of language and character development. Every page bore the impress of the hand of a master. Intricacy and depth in plot with a perfect control of action managing the characters and at the same time developing the plot in accordance with the trends of the characters form the chief feature of the novel.

The novel under review is entitled "Maya Vinoda Paradesi" It is a sequel to, or rather, further independent

expansion of some of the untouched features in his famous novel "Digambara Samiar" or "Kumbakonam Vakil" which I find very very interesting reading. That treats about the exploits of Digambara Samiar in rescuing the heroine Vadivambal from the clutches of the villanous Vakil Sattanada Pillai, to whom her supposed parents are subservient. The girl finally marries her own choice, Kannappan, and finds herself the daughter of wealthy and respectable parents.

The new novel takes up the history of Kannappa's brother Kandaswamy and of Manonmani Ammal, the daughter of one Pattabhirama Pillai, Collector of Madras, who formerly helped to bring Sattanada Pillai to book. The very name of the novel "Maya Vinoda Paradesi" or the "Amazing Ascetic" indicates the large part that is played throughout by Digambara Samiar whose hand, like that of Providence, is ever in evidence and ever unseen. This novel appeared in serial form last time in the Magazine "Manoranjani," in 12 monthly issues. I am given to understand thet this magazine has been appearing for the last 6 years, and a novel is completed every year. The books that have appeared till now in this form are Menaka, Poornachandrodayam, Madana-Kalyani, Tilottama and Vidyasagaram. The new year's novel describes the boyish exploits of Digambara Samiar.

The literary motives of the novel under review are beyond reproach. It is marked by deep earnestness and is essentially a novel with an impressive lesson to teach; but none need be afraid of being repelled by homilies. The story is the more interesting because of the moral and psychological question involved. In the character of Manonmani, the heroine, we first see the struggle between the cultures of the East and the West. Her slavish adherence to and admiration of the latter blinds her to the greatness of her own land and its institutions

